# பாரதி பாடல்கள்

## ஆய்வுப் பதிப்பு







தமிழ்ப் பல்கலைக் கழகம்
தஞ்சாவூர்

# பாரதி பாடல்கள்

## ஆய்வுப் பதிப்பு

பாரதி பாடல்களைத் தொகுத்து,
காலவரிசையாக்கி வழங்கியவர்

திரு சீனி. விசுவநாதன்



தமிழ்ப் பல்கலைக் கழகம்

தஞ்சாவூர்

## பதிப்புக் குழு

திரு சு. செல்லப்பன்

மாண்புமிகு ப. சிதம்பரம்

திரு சீனி. விசுவநாதன்

திரு டி.என். இராமச்சந்திரன்

திரு டி. வி. எஸ். மணி


தமிழ்நாட்டரசிற்காகத்

தமிழ்ப் பல்கலைக் கழக வெளியீடு: 77

திருவள்ளுவர் ஆண்டு 2018 சித்திரை ; ஏப்ரல் 1987

| | |
|---|---|
| நூல் | : பாரதி பாடல்கள்<br>ஆய்வுப் பதிப்பு |
| ஆசிரியர் | : சி. சுப்பிரமணிய பாரதி |
| பதிப்பு | : முதற்பதிப்பு 1987 |
| | : இரண்டாம் பதிப்பு 1989 |
| விலை | : உரு. 80 -00 |
| அச்சு | : தமிழ்ப் பல்கலைக் கழக<br>மறு தோன்றி அச்சகம்,<br>தஞ்சாவூர். |

தமிழ்நாட்டரசின் பாரதி நூற்றாண்டு விழாத் திட்ட உதவியில் வெளியாகும் புதிய பதிப்பு

எம். ஜி. இராமச்சந்திரன்
முதலமைச்சர்



# வாழ்த்துரை

மகாகவி பாரதியாரின் நூற்றாண்டு விழாவை என் தலைமையில் அமைந்துள்ள தமிழக அரசு உள்ளன்போடு கொண்டாடியது உலகறிந்த உண்மை. பாரதியார் பெயரால் பல்கலைக் கழகம் அமைந்ததும், டில்லி மாநகரில் மகாகவி பாரதியார் சிலையை இந்தியப் பிரதமர் மாண்புமிகு ராஜீவ் காந்தி அவர்களைக் கொண்டு திறக்கச் செய்ததும் தமிழக அரசின் முயற்சிகளில் குறிப்பிடத் தக்கவை. இவை போலவே மகாகவி பாரதியின் நூல்கள் முறையாக, பிழையின்றிப் பதிப்பிக்கப்பட வேண்டும் என நான் விருப்பம் தெரிவித்தேன். அதற்கிணங்கத் தமிழகப் பல்கலைக் கழகத் துணைவேந்தர்களின் குழு, இப்பணியைத் தமிழ்ப் பல்கலைக் கழகத்திடம் ஒப்படைத்தது. தமிழக அரசு பாரதி நூல் வெளியீட்டுக்காக உரூ. மூன்று இலட்சம் மானியமாகக் கொடுத்துள்ளது.

தற்போது தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் சார்பில் பாரதியாரின் கவிதைகள் அவை எழுதப்பட்ட ஆண்டுகளின் வரிசையில் அழகுறத் தொகுக்கப்பட்டு வெளியீடாக வந்துள்ளதைக் கண்டு பெரு மகிழ்ச்சி அடைந்தேன்.

இப்பதிப்பு அச்சு அமைப்பிலும், பொருட் செறிவிலும் சிறந்து விளங்குவதோடு ஆதார பூர்வமான செய்திக் குறிப்புகளுடன் அரிய ஆராய்ச்சிப் பதிப்பாக அமைந்திருப்பதற்கு நான் மிகுந்த பாராட்டுதல்களை இப்பணிக்குப் பொறுப்பேற்ற அனைவருக்கும் தெரிவித்துக்கொள்கிறேன்.

தமிழ் கூறும் நல்லுலகம் இப்பதிப்பை நன்கு வரவேற்றுப் பயனடையும் என்று நம்புகிறேன்.

(எம்.ஜி.இராமச்சந்திரன்)

தமிழ் நாட்டரசுக் கல்வி மற்றும் சட்டத்துறை அமைச்சர்

**மாண்புமிகு சி. பொன்னையன் அவர்கள்**

வழங்கிய

# அணிந்துரை

பாரதி பாடல்கள் நாட்டுப் பற்றுக்கு
நல்ல ஊட்டச்சத்து;
மொழி உணர்ச்சிக்கு வளம் வாய்ந்த நாற்றங்கால்;
செந்தமிழ் நாட்டைத் தேனாக்கிக் காட்டினார்;
'பாரதப் பழம்பெரும் நாட்டைப் பாடுவதால்
எமக்கில்லை ஈடு' என்று பெருமிதப்பட்டார்;
"விரைவில் தமிழின் ஒளி உலகில் பரவித்
திகழும்; இல்லையேல் என் பெயரை மாற்றி
அழையுங்கள்" – என்று சூளுரைத்தார்.

பாரதி தமிழ் மண்ணில் பிறந்தார்; தாய்த் தமிழில் எழுதினார். ஆயினும், அவர் கவிதைகள் இந்திய எல்லையையும் கடந்து உலகம் அளாவிய புகழுக்குரியவை. உலகம் அவ்வாறு உணர்ந்துள்ளதா?

"அழகொளிசேர் பாரதியின் கவிதை தன்னை
அறிந்திலதே புவிஎன்னில் புவிமேல் குற்றம்"

—என்று பாவேந்தர் பாரதிதாசனார் பாடினார். பாவேந்தர் புவி மேல் சாட்டிய குற்றம் சிறுகச்சிறுகக் குறைந்து வருகிறது.

சோவியத் நாட்டார் பாரதி நூற்றாண்டு விழாவைக் கொண்டாட ஓர் அறிஞர் குழுவை அமைத்துச் சிறப்புறக் கொண்டாடினர். உலகில் பல பல்கலைக் கழகங்களும், தனி அறிஞர்களும் பாரதியின் படைப்புகளில் படிந்து வருகின்றனர்; ஆய்வில் தோய்கின்றனர். திறனாய்வு நூல்கள் வெளிவந்து கொண்டிருக்கின்றன.

"நவ கவிதை; எந்நாளும் அழியாத மாகவிதை"

—என்று பிரான்சு நாட்டார் அவர் காலத்தில் புகழ்ந்ததை அவரே பாடினார். இவ்வரிகள் உண்மை, வைரம் பொதிந்தவை.

இவ்வாறு புவியின் குற்றம் குறைந்து வரும்போது நாம் ஆற்ற வேண்டிய பங்கு குறையக் கூடாது. உலகிற்கு வேண்டிய வகையில் பாரதி படைப்புகளை அள்ளி வழங்க வேண்டும்.

பாரதியார் படைப்புகள் பல பதிப்புகளாக உலவுகின்றன. ஆர்வலர்க்கும், ஆய்வாளர்க்கும் பயன்படும் பதிப்பொன்று வெளிவர வேண்டுமென்று தமிழ் நாட்டரசு கருதியது. தமிழ்நாட்டுப் பல்கலைக் கழகத் துணைவேந்தர்களைக் கொண்ட குழு ஒன்றமைத்து, பாரதி பாடல்கள் செம்மை சான்ற பதிப்பாக வேண்டும். சிறந்த பதிப்பாக

வேண்டும்; தெளிந்த பதிப்பாக வேண்டும்;காலமுறைப்படி அமைய வேண்டும்: ஓர் இலக்கியப் பதிப்பாக இலங்க வேண்டும்' எனக் கருதப்பட்டது.

இதனைச் செயற்படுத்தி நிறைவேற்றும் பொறுப்பு தமிழ்ப் பல்கலைக் கழகத்திடம் ஒப்படைக்கப்பட்டது. கவிதைகள், கட்டுரைகள், கதைகள் தனித்தனித் தொகுதியாக ஒவ்வொன்றும் ஆயிரம், ஆயிரம் பக்க அளவில் அமையத் திட்டமிடப்பட்டது. இப்பணிக்கெனத் தமிழ் நாட்டரசு மூன்று இலட்சம் உருவாக்களை வழங்க இசைந்து, முன் தொகையாக ஒன்றரை இலட்சம் உருவாக்களைத் தமிழ்ப் பல்கலைக் கழகத்திற்கு வழங்கியது.

இப்பொறுப்பை உளமுவந்து ஏற்றுக் கொண்ட தமிழ்ப் பல்கலைக் கழக முன்னாள் துணைவேந்தர் பேராசிரியர் வ. ஐ. சுப்பிரமணியம் இப்பணியைச் செம்மையாகச் செய்து, முதல் தொகுதியாகப் "பாரதி பாடல்கள்" என்னும் இப்பதிப்பிற்கு ஆவன செய்தார். அண்மையில் தமிழ்ப் பல்கலைக் கழகத் துணைவேந்தராகப் பொறுப்பேற்ற பேராசிரியர் ச. அகத்தியலிங்கம் தம் முதற் பணியாக இப்பதிப்பை வெளிக் கொணர்ந்துள்ளார். இரு துணை வேந்தர்களையும் என் சார்பிலும் தமிழ் நாட்டரசின் சார்பிலும் பாராட்டுகின்றேன்; நன்றி கூறுகின்றேன்.

"பாரதி பாடல்கள்" என்னும் தலைப்பிட்டு "ஆய்வுப் பதிப்பு" என்னும் குறிப்பையும் தந்துள்ளனர். காலமுறைப்படி கவிதைகள் வரிசைப் படுத்தப்பட்டுள்ளன.

வேண்டிய அடிக்குறிப்புகள் காட்டப்பட்டுள்ளன. பிற் குறிப்பாகக் குறிப்புரைகள் விளங்குகின்றன.

இப்பதிப்பு, ''உய்வகை காட்டும் உயர் தமிழுக்குப் புதுநெறி காட்டிய புலவன்'' - என்று பாரதிதாசனார் பாடியது போல் பாரதி ஒரு புலமைக் கவிஞர் என்பதை மெய்ப்பிக்கிறது. இப்பதிப்பைப் பாரதி கண்டிருந்தால் நெஞ்சம் பூரித்திருப்பார். 'வானமளந்த தனைத்தும் அளந்து வாழும் தமிழ் மொழியை' வளர்க்கும் தமிழ்ப் பல்கலைக் கழகம் வளர்க என வாழ்த்துவார். அவரை என் நெஞ்சிலிருத்தி, 'பாரதி பாடல்கள்' பதிப்பைத் தந்துள்ள தமிழ்ப் பல்கலைக்கழகத்தை வாழ்த்துகிறேன்.

சென்னை
31—12—86

சி. பொன்னையன்

தமிழ் வளர்ச்சித் தனிநபர் உயர்மட்டக் குழுத் தலைவர்

**சிலம்புச் செல்வர் ம. பொ. சிவஞானம் அவர்கள்**

வழங்கிய

# அணிந்துரை

மாண்புமிகு டாக்டர் எம். ஜி. இராமச்சந்திரன் அவர்களை முதல்வராகக் கொண்டுள்ள தமிழக அரசு, 1982 டிசம்பர் 11 தொடங்கி 1983 டிசம்பர் 11 வரை மகாகவி பாரதியாரின் நூற்றாண்டு விழாவினைப் பாரதமெங்கணும் கோலாகலமாகக் கொண்டாடியதைத் தமிழ் மக்கள் அறிவார்கள். 'தேசிய ஒருமைப்பாடு விழா' வாகவே அது கொண்டாடப்பட்டது.

பாரதியாரின் நூற்றாண்டு விழாவிற்கென வகுத்த வேலைத் திட்டத்திலே, அந்தத் தேசிய மகாகவியின் பாடல்களை வரலாற்றுக் குறிப்புகளோடு பிழையறப் பதிப்பித்து வெளியிடுவதும் இடம் பெற்றது. அந்தத் தமிழ்ப் பணியைத் தஞ்சை, தமிழ்ப் பல்கலைக் கழகத்திடம் அரசு ஒப்படைத்தது.

அப்பல்கலைக்கழகம் ஒரு பதிப்புக்குழுவை நியமித்தது. அக்குழு சுமார் இரண்டாண்டுக் காலம் அரும்பாடுபட்டு எண்ணற்ற கையெழுத்துப் பிரதிகளையும், பல்வேறு அமைப்புகள் இதுவரை வெளியிட்டுள்ள பதிப்புகளையும், 'இந்தியா', 'சக்கரவர்த்தினி', 'சுதேசமித்திரன்' ஆகிய பல பத்திரிகைகளையும், அரசு ஆவணங்களையும் துருவித் துருவி ஆராய்ந்து இந்தத் தூய பதிப்பை வெளியிடத் தமிழ்ப் பல்கலைக் கழகத்திற்கு உதவி புரிந்திருக்கிறது.

இப்பதிப்புக்கு அணிந்துரை தேவையென்று தமிழ்ப் பல்கலைக் கழகம் எனக்கு எழுதியது. அப்படி ஒரு அணிந் துரை கொடுப்பது எளிது என்றுதான் முதலில் நான் நினைத்தேன்.

பாரதியாரின் கவிதைகளைச் சுமார் அரை நூற் றாண்டுக் காலம் பயின்றவன். நான் பேசிய மேடை தோறும் என்னையறியாமல் பாரதி பாடல்கள் உவமைக்கு ஓடி வரும். நண்பர்களுடன் உரையாடும்போதும் பாரதி யின் கவிதைகள் சான்றுக்கு வந்து சதிராடும். பாரதியின் கவிதைகளை ஆய்ந்து ஆய்ந்து பார்த்து,பத்துக்கு மேற்பட்ட ஆராய்ச்சி நூல்களை வெளியிட்டிருக்கிறேன். பல முறை பல்வேறிடங்களில் பாரதியாரின் கவிதைகளையொட்டித் தொடர் சொற்பொழிவுகளையும் நிகழ்த்தியிருக்கிறேன்.

இவ்வளவிருந்தும், இந்தப் பதிப்பு முழுவதையும் மேலெழுந்தவாரியாகப் பார்வையிட்டபோது, இதன் சிறப்புகளையெல்லாம் விளக்கி அணிந்துரை தருவது கடின மென்றே கருதினேன். அப்படியே இதற்கு அணிந்

துரை எழுதுவதாயின், அந்த அணிந்துரையே ஒரு தனி நூலாகிவிடுமே என்றும் எண்ணினேன். ஆயினும், சிறிய அளவிலேனும் அணிந்துரை தருவது கடமை எனக் கருதி, இதனை எழுதிக் கொடுத்தேன்.

பாரதியாரின் கவிதை நூல்கள் 80 ஆண்டுகளாக வெளிவந்துகொண்டிருக்கின்றன. இந்த நீண்ட காலத்திலே பாரதியாரின் மேற்பார்வையில் ஓரிரு கவிதைத் தொகுப்புகள் அவர் காலத்திலேயே வெளியாகிவிட்டன. பின்னர் திருமதி செல்லம்மாள் பாரதியின் முயற்சியால் பாரதி பிரசுராலயத்தின் சார்பில் சில பதிப்புகள் வெளி வந்துள்ளன. பாரதி ஆசிரமப் பதிப்புகளும் வெளி வந்துள்ளன. இத்தனைக்கும் பின்னர், பாரதியின் கவிதை களை நாட்டுடைமையாக்கியபோது சென்னை மாகாண அரசும் பாரதியின் கவிதைகள் அனைத்தும் கொண்ட திருந்திய பதிப்பு ஒன்றை வெளியிட்டிருக்கிறது.

திரு பரலி சு. நெல்லையப்பர், பேராசிரியர் டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை, வாகீச கலாநிதி கி.வா. ஜகந் நாதன், டாக்டர் மு. வரதராசனார் ஆகிய பெரும் புலவர்கள், பாரதியார் காலத்திலும் அவருக்குப் பிற்காலத் திலும் வெளியான பதிப்புகளில் இருந்த இலக்கணப் பிழைகளையெல்லாம் களைந்து சுத்தப் பதிப்பு வெளிவர அரசுக்கு உதவிபுரிந்தனர்.

இதுவரை வெளிவந்த பதிப்புகள் அனைத்திலிருந்தும் வேறுபட்டதாக அமைந்துள்ளது, தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் சார்பில் வெளிவந்துள்ள இந்தப் பதிப்பு.

பாரதியாரின் கவிதைகளை அவை புனையப்பட்ட காலத்தையொட்டி வரிசைப்படுத்தி, கவிதை ஒவ்வொன்றுக்கும் தனித்தனி வரிசை எண் கொடுத்து, சிலவற்றின் தலைப்பை மாற்றி, தேவைப்பட்டவிடத்துப் புதிய தலைப்புகள் தந்து, இந்தப் புதியபதிப்புத் தயாரிக்கப்பட்டுள்ளது.

267 கவிதைகள் இந்தப் பதிப்பில் தரப்பட்டுள்ளன. ஒவ்வொரு கவிதையும் பல்வேறு செய்யுட்களைக் கொண்டிருத்தலால், அந்தச் செய்யுட்களிலே ஒவ்வொன்றுக்கும் தனித்தனியே எண் கொடுத்து, மொத்தம், 2576 செய்யுட்களாகப் பதிப்பாசிரியர் பிரித்துக் காட்டியிருக்கிறார். முன்னர் வெளியான பதிப்புகளில் பாரதியாரும், அவருக்குப் பிந்திய காலத்துப் பதிப்புகளை வெளியிட்ட பதிப்பாசிரியர்களும் எழுதிய முன்னுரைகளும் இந்நூலில் இணைக்கப்பட்டுள்ளன.

பாரதியாரின் கவிதைகளோடு தொடர்புடைய வரலாற்றுச் செய்திகளையும் வேறு பல்வகைப்பட்ட சுவையான தகவல்களையும் 'பின் இணைப்பு' என்னும் தலைப்பில் பதிப்பின் இறுதியில் பதிப்பாசிரியர் தனியாகத் தந்துள்ளார். இந்தப் பின் இணைப்பு மட்டும் 259 பக்கங்களைக் கொண்டதாக இருக்கிறது.

பாரதியார் உரைநடையில் தந்துள்ள கருத்தோவியங்கள் 'காட்சி' என்னும்தலைப்பின்கீழ்த் தனியாகத் தரப்பட்டுள்ளன. அதுபற்றித் தம்முடைய கருத்தைப் பதிப்பாசிரியர் சுவையாகக் 'காட்சி முதலியன' என்னும் தலைப்பில் எழுதியுள்ளார்.

பாரதியார் மேற்பார்வையில் வெளியான பதிப்பு களிலோ, அவருக்குப் பின் பாரதி பிரசுராலயமும், பாரதி ஆசிரமும், வெளியிட்டுள்ள பதிப்புகளிலோ, 'வசன கவிதை' என்னும் தலைப்பு இடம் பெறவில்லை. புலவர் குழு தயாரித்த அரசாங்கப் பதிப்பில்தான் புகுத்தப் பட்டுள்ளது அதற்குப் பின் மற்ற அமைப்புகள். தமிழ்ப் பல்கலைக் கழகத்தாரின் இந்தப் புதிய பதிப்பில் பதிப் பாசிரியர் டாக்டர் ம. ரா. போ. குருசாமி அவர்கள் 'வசன கவிதை' என்பதைப் பாரதியாரின் எழுத்தோவியங் களிலிருந்தே சான்று காட்டித் துணிவாக மறுத்திருக் கிறார். அதனை நான் மனநிறைவுடன் ஆதரிக்கிறேன். அதுபற்றிப் பதிப்பாசிரியர் கருத்து வருமாறு:

"'காட்சி' என்ற தலைப்பில் இங்கே வெளியாகும் பகுதி கவிதை அன்று. பின்வந்தோர் தாம் எழுதிய ஒரு புதுவகை எழுத்தோவியத்துக்கு 'வசன கவிதை' என்று பெயரிட்டுக்கொண்டு, அந்த வகையான இலக்கிய வடிவத்துக்கு முன்னோடி பாரதியாரே என்று சாதிக் கலாயினர். கவிதை கவிதைதான். வசனம் வசனம் தான். 'ஒட்டு' வேலை செய்வது சரி எனக் கூற இயல வில்லை.

"கற்பனை நயம் மிகுந்திருந்தாலும், உரைநடை கவிதையாகிவிடாது. எதுகை-மோனைகளை அடுக்கிக் கொடுத்துவிட்டாலும் உரைநடை கவிதையாகி விடாது. கவிதைக்குக் கற்பனை முதலான பண்புகள் போலவே தளையும் சந்தமும் இன்றியமையாதவை யாகும்.

"மாலைக் கால வருணனையை உரைநடையில் எழுதிய பாரதியார், அதே காட்சியைப் பாஞ்சாலி சபதத்தில் கவிதையாக்கித் தந்திருப்பதைக் கருதிப் பார்த்தல் வேண்டும்." (பக்கம் 865-66)

பாரதியார் கவிதைகளின் தொகுப்பாக இதுவரை வெளிவந்துள்ள பதிப்புகளில் பல்வேறிடங்களில் காணப் படும் கருத்து முரண்பாடுகளை அகற்றி, இலக்கணப் பிழைகளை நீக்கி, இந்நாள் வரை வெளியான பதிப்புகளில் நிலைத்துப் போயிருந்த அச்சுப் பிழைகளையும் களைந்து பிழையற்ற பதிப்பை உருவாக்கிய பதிப்புக்குழுவினரும் பதிப்பாசிரியரும் தமிழ் மக்களின் பாராட்டுக்குரியவரா வர்.

'இந்தியா', 'சக்கரவர்த்தினி', 'சுதேசமித்திரன்,' 'விவேகபானு' போன்ற பல்வேறு பத்திரிகைகளில் பாரதி யார் எழுதிய கட்டுரைகளில் இடையிடையே சிற்சில வரிகள் அளவில் புகுந்துள்ள கவிதைகளையும் சேகரித்து இந்நூலில் தந்திருப்பது புதிய வரலாறாகும்.

மகாகவி பாரதியாரின் வாழ்க்கை வரலாறு இது வரையில் அரைகுறையாகத்தான் நூல் வடிவம் பெற் றுள்ளது. தமிழ்ப் பல்கலைக்கழகம் வெளியிட்டுள்ள இந்தப் பதிப்பானது, பாரதியாரின் கவிதைகளைப் பற்றிய தனி வரலாறு என்று சொல்லலாம். அநேகமாக ஒவ்வொரு கவிதைக்கும் வரலாற்றுக் குறிப்புகள் உண்டு என்பதனை இந்தப் பதிப்பின் மூலம் நாம் அறிந்து கொள்ள முடிகிறது.

பாடல்களின் காலவாரி அமைப்பு, யாப்பு அமைப்பு, பாரதியார் கருத்தை மின்னலிடும் குறிப்புகள், பாடவேறு பாடுகள், இன்றியமையாத பின்னிணைப்புகள் ஆகியவை செம்மையாக இப்பதிப்பில் அமைந்துள்ளன. எனவே, இது 'ஆய்வுப்பதிப்பு' என்னும் தகுதிப்பாடு உடையது; ஆர ஆய்வோர்க்கும் நெறித்துணையாகும்.

இப்பதிப்பு உருவாவதற்கு உதவியோர் பாராட்டுக் குரியோர், பதிப்புக்குழுவினர் பணி நம் பாராட்டிற்கு உரியது. இன்றைய மைய அரசில் அமைச்சராகத் திகழும் மாண்புமிகு ப. சிதம்பரம் அவர்கள் தொடக்க முயற்சி களில் கைகொடுத்து உதவியுள்ளார். அந்நாள் பதிப்புத் துறை இயக்குநர் திரு சு. செல்லப்பன், திரு சீனி. விசுவ நாதன், வானவில் பதிப்பக டி. வி. எஸ். மணி, தஞ்சை வழக்கறிஞர் டி. என். இராமச்சந்திரன் ஆகியோர் முனைந் தும் முயன்றும் பாடல்களைத் தொகுத்து வழங்கினார் கள். சிறப்பாக, சீனி. விசுவநாதன் பாரதியாரின் தொடர் புடைய இடங்களுக்குச் சென்று பலரை அணுகி, பாரதி படைப்புகளைத் தொகுத்து, கால வரிசைப்படுத்தி வேண் டிய குறிப்புகளையும் வழங்கியவர்.

இப்பதிப்புக் குழுவினர்க்குத் தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் சார்பில் நன்றி கூறுகின்றேன்.

இப்பதிப்பிற்குப் பதிப்பாசிரியராக அமைந்த பேரா சிரியர் ம. ரா. போ. குருசாமி அவர்கள் தம் புலமைத் திறத் தால் பாடல்களை யாப்பிற்கேற்பச் சீர்ச்செம்மை செய்து இப்பதிப்பை ஆய்வுப்பதிப்பாக்கி இருக்கிறார். அன்னா ருக்கு என் இதயங்கலந்த நன்றி.

இதைத்தொடர்ந்து கதை, கட்டுரைத் தொகுப்புகள் ஒவ்வொன்றும் ஆயிரம் ஆயிரம் பக்கங்களில் வெளிவர உள்ளன. இவ்வாறு பாரதியின் படைப்புகள் செப்பமாக வெளிவருதற்கு முனைந்து தூண்டிப் பொருள் பங்களிப்பும் தந்த தமிழ்நாட்டரசைப் பாராட்டி நன்றி கூறுகிறேன்.

இதற்குப் பெருந்தகவுடன் வாழ்த்துரை வழங்கிய தமிழக முதலமைச்சர் மாண்புமிகு எம்.ஜி. இராமச்சந்திரன் அவர்களுக்கு என் நன்றியைக் காணிக்கையாக்குகின்றேன்.

இப்பதிப்பு கல்வியமைச்சர் மாண்புமிகு சி. பொன்னையன் அவர்களது அணிந்துரையாலும், சிலம்புச் செல்வர் ம. பொ. சிவஞானம் அவர்களது அணிந்துரையாலும் சிறப்புறுகின்றது. அன்னார்க்கு என் இதயங் கலந்த நன்றி.

தமிழ்ப் பெருமக்கள் கருவூலப் பதிப்பாகிய இதனால் பெரும் பயனடைவார்கள் என்பது திண்ணம். இத்தகைய பதிப்பைத் தமிழ்ப் பல்கலைக் கழகம் வழங்கும் பேறு பெற்றதற்கு மகிழ்கிறேன்.

தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர்.
13—1—1987.

ச. அகத்தியலிங்கம்

## இப்பதிப்பின்
## தனிச்சிறப்புகள் சில

* ஆராய்ச்சிப் பதிப்பு என்று சொல்லத்தக்கதாக இப் பதிப்பு வெளிவருகிறது. பாடல் தலைப்பு மாற்றம், பாட வேறுபாடு, காலக் குறிப்பு, பின்னிணைப்பு முதலியவற்றைக் கொண்டிருப்பதால் விரிவான ஆய்வுகள் மேற்கொள்ள இப்பதிப்பு உதவும்.

* யாப்பிலக்கண அடிப்படையில் பாரதி பாடல்களை வரையறை செய்து, அவ்வரையறைப்படி சீர் பிரித்து, பா, பாவின வகைபற்றித் தெளிவுபடுத்தியுள்ள ஒரே பதிப்பு இதுதான்.

* இதுகாறும் வந்த பதிப்புகளில் காணாத வண்ணம் பாடல்களின் எண்ணிக்கை இப்பதிப்பில் வேறுபடுகிறது. முந்தைய பதிப்புகளில் ஒரே பாடலாகக் கொண்டவை பல பாடல்களாகவும் பல பாடல்களாகக் கொண்டவை ஒரே பாடலாகவும் கண்டறியப்பட்டமையே இதற்குக் காரணம்.

* பாடல்கள் வெளிவந்த வரிசையில் இயன்ற அளவு கால நிரல்படுத்தி இப்பதிப்பு ஒழுங்கு செய்யப்பட்டுள்ளது. பாரதியாரே பதிப்பித்த நூற்படிகள், அவர் காலத்திலும் பிற்காலத்திலும் பிறர் வெளியிட்ட பதிப்புகள் யாவும் இப் பதிப்புக்குத் துணையாயின. பாரதி பாடல்கள் வெளிவந்த இதழ்களும் பயன்படுத்தப்பட்டன. அச்சில் வெளிவந்த முதல் வடிவமே இப்பதிப்பில் முதல் இடம் பெறுகிறது; பின்னர்ப் பாரதியாரே திருத்தியிருந்தாலும் அந்தத் திருத் தங்கள் அடிக்குறிப்பில்தான் இடம் பெறுகின்றன. பாட வேறுபாடுகளை ஒப்பிட்டு நோக்கிச் சிறந்த பாடத்தை வரையறை செய்வதற்கு இந்த ஆராய்ச்சிப் பதிப்பு உதவு மென்பது திண்ணம்.

* அச்சுப் படிகளேயன்றிப் பாரதியாரின் கையெழுத் துப் படிகளும் பல கிடைத்துள்ளன. அவற்றையும் ஒப் பிட்டு நோக்கியே இப்பதிப்பு வெளியாகிறது.

## பதிப்பாசிரியர்

# முன்னுரை

**புலமைப் பதிப்பு:**

மகாகவி பாரதியாரின் எழுத்தோவியங்களை ஆராய்ந்து முனைவர் பட்டம் வாங்கிய டாக்டர் விஜய் பாரதி, 1972இல் எழுதிய ஒரு நூலில் தெரிவித்துள்ள கருத்து மனங்கொள்ளத் தக்கது. "பாரதியார் இன்று ஒரு தேசியக் கவி என்று பெரு நிலைக்கு உயர்த்தப்பட்டிருக்கிறார்; பாரத தேசிய இலக்கியம் என அவருடைய எழுத்துக்கு மதிப்பு ஏற்பட்டிருக்கிறது. 'மக்கள் கவி' என்று ஒரு கவிஞன் ஏற்கப்படும்போது அவனுடைய கவிதை கவர்ச்சியாற்றலை ஓரளவு இழந்துவிடுகிறது; அவரவர் மனம்போல் விளக்கப்படுவதால் கருத்துகள் தவறாகப் பொருள் படவும் வாய்ப்பு இருக்கிறது. இலக்கியம் பொதுமக்களின் சொத்தாக ஆகும்போது அதனுடைய சீர்மைகளெல்லாம் தகு நிலையில் எல்லாச் சமயங்களிலும் பேணப்படுவதாகச் சொல்ல முடியாது.... இலக்கிய இன்பத்தை ஜனநாயக அடிப்படையிலே அடைந்துவிட்ட பாமரன், தெருவெல்லாம் பாரதியின் சிறந்த பாடல்கள் சிலவற்றைப் பாடி உலா வந்தான், அந்தப் பாமரனுக்குப் பாரதி பாடல்களின் இலக்கியத் தரத்தைப் பேண வேண்டுமே என்ற எண்ணம் சிறிதும் இல்லை. பாரதியின்

எழுத்தோவியங்களுக்கு இந்த நாள்வரையிலே ஒரு புலமைப் பதிப்போ அல்லது முறையான திறனாய்வோ தோன்றாமைக்கு இந்த நிலை ஒருவேளை காரணமாகலாம்"[1]

பாமரனுக்கும் இலக்கியம் உரிமைச் செல்வமானதுதான். பாரதி இலக்கியத்துக்குப் புலமைப் பதிப்பு வாராமைக்கு இந்த உரிமை காரணம் என்ற கருத்திலே அறிஞரிடையே கருத்தொற்றுமை நிலவுமா என்பது ஐயமே; ஆயினும், புலமைப் பதிப்பு என்ற முழுநிலை மதிப்புக்குரிய பதிப்பு இதுவரையில் தோன்றவில்லை என்பது ஏற்றுக்கொள்ளக்கூடிய உண்மைதான். ஆயிரமாயிரம் படிகள் அச்சிட்டு எத்தனைஎத்தனையோ வெளியீட்டாளர்கள் பாரதியின் எழுத்தோவியங்களை வெளியிட்டுள்ளனர். பாரதியார் காலத்திலும் அவர் மறைவுக்குப் பின்னும் பல பதிப்புகள் வெளிவந்துள்ளன. யாப்பு நெறிக்கு இயைந்த வகையில் சீர்கள் முழுமையாகப் பிரிக்கப்பட்ட நிலையில் ஒரு பதிப்பும் இதுகாறும் வெளிவரவில்லை; பாரதி பாடல்களை யாப்பியல் நெறியிலே இனங் கண்டு பிரித்துக் காட்டிய பதிப்பு வெளிவந்ததில்லை. தமிழ்நாடு அரசு 1954இல் வெளியிட்ட பதிப்பில் ஓரளவு சீர் பிரிப்பதில் இந்த நாட்டம் காணப்படுகிறது; அதிலும் முழுமை இல்லை; யாப்பியல் வகைமைப்பாடு அந்தப் பதிப்பிலும் இல்லை. எனவே, புலமைப் பதிப்பு எனத்தக்க வகையில் ஒரு பதிப்பும் 'இந்த நாள்வரையில்கூட' வெளிவரவில்லை என டாக்டர் விஜய பாரதி 1972இல் குறிப்பிடுவது பொருத்தமே யாகும்.

தமிழ்ப் பல்கலைக் கழகம் வெளியிடும் இந்தப் ப்திப்பு அந்தக் குறையினை நீக்குதற்கு மேற்கொள்ளும் முதல் முயற்சியாகும்.

**பாரதியின் தோற்றம்:**

தமிழகத்தில் பாவாணர்களிடையே பாரதியின் தோற்றத்துக்கு ஒரு தனித்தன்மை உண்டு. ஜனநாயக/சமுதாய உணர்வுகள் முந்தைய புலவர்களிடையே நிலவியதைவிடப் பாரதியா

---

1. Vijaya Bharati, S.–'C. Subramania Bharati', Preface vii.

ரின் ஆளுமையிலே இமாலயச் செல்வாக்குப் பெற்றன என்பது மிகையாகாது. தமிழ்க் கவிதைக் கலை ஒரு வகையில் சிறைப் பட்டுக் கிடந்தது என்று கூறவேண்டும். பெரும் புலவர்களெல் லாம் சமய அரங்கிலே உலாவி வந்தனர்; பெருநிலக்கிழார்களை யும் செல்வர்களையும் ஏறத்தாழ அடைக்கலம் புகுந்த நிலையும் நிலவியது. சமுதாய மக்களைப் பற்றிப் புலவர்கள் அடியோடு எண்ணவில்லை என்று சொல்வது ஒருகால் மிகைபடக் கூறலாக இருக்கலாம். எனினும், சமுதாய உணர்வின் வெளிப்பாடாக — மக்கள் முன்னேற்றத்தை — உலகியல் வாழ்வின் முற்போக்கைக் கவிதைக் கலை நுவல்பொருளாகக் கொண்டிராத ஒரு சூழல் நிலவியது. 'மானுடம் பாடுவது' என்பதைப் புலவருலகு வள்ளல் கள் அளவில் நிறுத்திவைத்திருந்தது. சற்றுக் கடுமையாகச் சொல்லவேண்டுமாயின், செல்வர்களின் தாதியாகக் கவிதைப் பெண்ணைப் புலவருலகு அடகு வைத்திருந்தது என்று குறிப்பிட வேண்டும். ஆன்மிக அரங்கோடு நின்றுவிட்ட புலவர்களை விட்டுவிட்டால், தமிழ்ப் புலவர்கள் சமைத்திருந்த கவிதையரங்கு இதுதான். சமய அரங்கிலும் 'நாம் ஆர்க்கும் குடியல்லோம்' என்று வீறுகுரல் கொடுத்த புலமைத் துணிவு தொய்வு கொண்டு தளர்ந்துவிட்டது. உலகியல் அரங்கிலோ புலமையாளர்கள் நொய்ம்மையாளராய் அத்தாணி மண்டபத்து நாயகர்களை அந்தப்புர நாயகர்களாக்கி வீறிழந்து கிடந்தனர். பாரதியார் தோன்றிய காலத்துக் கவிதைக் கலைச்சூழலை மேற்கண்டவாறு சுருக்கமாகக் கூறலாம்.

தமிழ்ச் சமுதாயம் – பாரத சமுதாயம் அவர் தோன்றிய காலத்தில் எப்படி இருந்தது? எங்கணும் சாதிப் பூசல், சமயத் தெளிவின்மை, அரசியல் அடிமைத்தனம். சாதி ஏற்றத் தாழ்வு களுக்குப் பெரிதும் இடம் கொடுத்து, மனிதர்களை மனிதர் களாகப் பாரர்மல், 'இவர் ஐயர், இவர் நாயக்கர்' என்று சாதி ஒட்டுகளைக் கொண்டே பார்த்துவந்த காலம். செத்த பிறகு சிவலோகம் வைகுந்தம் என்று தெளிவில்லாமலே கற்பித்துக் கொண்டு - தத்துவம் மறந்து - சடங்குகளையே சமயமாக நம்பி யிருந்த காலம். சீமையனும் சிப்பாயுமே கடவுளுக்கும் மேலென நம்பி, மக்கள் அஞ்சியஞ்சிச் செத்துக்கொண் டிருந்த காலம். ...

இந்தச் சூழலில் 'நெஞ்சு பொறுக்குதில்லையே' என ஆத்திரக் குரல் கொடுத்துத் தோன்றியது ஓர் அவதாரம் எழுச்சி யிடையே-எக்களிப்புக் கிடையே கவிதைத் தாய் திளைப்ப துண்டு. அந்தத் திளைப்பைக் கம்பன் போன்ற கவிஞர்களின் படைப்பிலே காணலாம். ஏழ்மைக்கும் எளிவந்த இளிவரலுக் கும் ஏளனத்துக்கும் இலக்காகி அவலக் களஞ்சியமாய் அல்லற் படும் தீக் கொடுமையிலும் கவிதைத் தாய் கொற்றவையாய்க் குரல் கொடுக்க அவதாரம் செய்வாள். அந்தக் கொற்றக் குரலையே பாரதி படைப்புகளிலே கேட்கிறோம்.

காலத்தின் தேவையை உணர்ந்து, கவிதைத்தேவி கொண்ட கோலமே 'சக்திதாச' னாகிய பாரதியின் கோலம்.

**பாரதியின் ஆளுமை :**

ஜனநாயக, சமுதாய உணர்வுகளால் தூண்டப்பட்ட பாரதி யாரின் புறக்கண்ணில் நிலை கெட்ட மனிதர்கள் அஞ்சியஞ்சிச் சாகும் அவலம் தெளிவாகத் தெரிந்தது; சமயப் போலிகள் சாத்திரத்தின் பெயரால் ஆன்மிக மேன்மையை இழிவுபடுத்து வது தெரிந்தது; அயலவர் ஆட்சியால் அடிமைத்தனம் 'கொலு' விருப்பது தெரிந்தது. புறக்காட்சி எழுப்பிய உணர்வுகள் பாரதியின் அகமனத்திலே தீயை மூட்டின. அந்தத் தீ, வெறும் வேக்காட்டிலே 'வெந்து தணிந்தது காடு' என வேதனை தரும் தியாகிவிடாமல் காத்தது ஒரு பெண்மைச் சக்தி. சுவாமி விவேகாநந்தரின் ஆன்மிக மகள் சகோதரி நிவேதிதையாரின் கடைக்கண் நோக்கினால் பாரதியாரின் ஆத்திரத் தீ வேள்வித் தீயாயிற்று என்று சொல்வது மிகையாகாது. உலகியலை அவமதிக்காத ஆன்மிகம், ஆன்மிகத்தை மறவாத உலகியல் - என்ற போக்குத்தான் பாரத நாட்டின் புத்தெழுச்சிக்குப் பயன் படக் கூடிய ஆளுமையாக இருக்க முடியும். நாட்டுப் பற்றினை நல்ல ஆன்மிக அடிப்படையில் பாரதியின் கலை நெஞ்சிலே உரமாக ஊன்றவைத்தவர் சகோதரி நிவேதிதையா ராவார்.

பாரதத்தின் பழமை யுரிமைச் செல்வமான ஆன்மிகம், பாரதத்தின் தற்கால உரிமை நாட்டப் போரினை அவாவி நின்ற லௌகிகம் : இதுவே பாரதியாரில் இணைந்து பிணைந்த ஆளுமை யாகும்.

நமக்குத் தொழில்கவிதை நாட்டிற் குழைத்தல்
இமைப்பொழுதும் சோரா திருத்தல் - உமைக்கினிய
மைந்தன் கணநாதன் நம்குடியை வாழ்விப்பான்[2]

என்ற வாக்கிலே பாரதியாரின் ஆளுமை விளக்கத்தினைக் காணலாம். தம்முடைய கவிதையாற்றல்வழி - எழுத்தாற்றல்வழி, நாட்டுப் பணி புரிவதைத் தம் குறிக்கோளாகக் கொண்டவர், பாரதியார். 'தன் கடன் அடியேனையும் தாங்குதல், என் கடன் பணி செய்து கிடப்பதே' என்ற அப்பர் மொழியின் வழியே பாரதியார் குறிக்கோளும் அமைந்தது. நாட்டுப் பணி தன் கடன், அவரைக் காப்பது இறைவன் கடன் - இப்படி உரம் பெற்றது பாரதியின் ஆளுமை.

பாரதியின் ஆளுமை வளம் பெறுவதற்குக் காலத்தின் சூழல் பெரிதும் உதவியாக இருந்திருக்கிறது. தந்தையார் சின்னசாமி அய்யரின் மறைவுக்குப் பின் காசி சென்று தங்க நேர்ந்தது; ஒரு வகையில் பரந்த காட்சியையும் அதன் வழியான அனுபவக் கனிவையும் பாரதியார் பெறுவதற்கு இந்த நிகழ்ச்சி உதவி யிருக்கிறது. ஏற்கனவே அறிந்திருந்த வடமொழியில் தேர்ச்சி பெறவும் வங்க மொழி, இந்தி மொழி ஆகியவற்றைப் பயிலவும் முடிந்தது. மேலும், மறுமலர்ச்சி இயக்கங்களான ஆரிய சமாஜம் பிரம்ம சமாஜம், இராமகிருஷ்ண இயக்கம் ஆகியவற்றின் கருத் தோட்டத்திலே தோய்வதற்கு அரிய வாய்ப்பினைப் பெற்றார், பாரதியார். அன்றைய சுதந்திரக் கிளர்ச்சியின் மையக் களமான வங்கம் அவருடைய தேசிய ஆளுமைக்குத் திறம் ஊட்டியது.

தமிழ்க் கவிஞர்கள் 'வேங்கடத்து உம்பர் மொழி பெயர் தேஎம்' என்று எல்லை வரையறுத்துக்கொள்வதோடு நிற்பது அவர்களுக்கு நேர்ந்த புலமை விபத்து என்று சொல்லலாம். பாரதியாருக்கு அந்த விபத்து நிகழவில்லை. விழிப்புற்ற இதயம் ஆதலின், சுற்றுச் சூழலின் நினைப்புகளையும் நிகழ்வுகளையும் பதிவுசெய்து பக்குவப்படுவதற்குப் பாரதியார்க்கு முடிந்தது.

---

2 பாரதியார், விநாயகர் நான்மணி மாலை 25 (இந்நூல் பக். 505)

விழிப்புணர்வினால் விரிவடைந்த பாரதியின் ஆளுமை இமயத்தைக்கூடத் தன் எல்லையாக நிறுத்திக்கொள்ள வில்லை. தமிழ் நாட்டளவில் பதிந்த அவர் மனம் பாரதத்தை அளாவிப் பரந்ததுபோலவே ஃபிஜித் தீவுகளில் பாரத மகளிர் படும் அல் லல்களை நினைந்து பரிபவப்பட்டது; தம் நாட்டவர்'கண்ணற்ற தீவினில்'[3] படும் அல்லலுக்காக இரங்கியதோடும் அவர் கவிதை மனம் ஒடுங்கிவிட வில்லை.

பரந்த உலகப் பார்வை, விடுதலைப் போராட்ட உணர்வு, ஒடுக்கப்பட்ட மக்களிடம் கலைநெஞ்சம் கொண்ட பரிவு ஆகிய பண்புகளைக் கொண்டது பாரதியின் ஆளுமை. ஆதலால்தான் ''மாஜினி என்ற இத்தாலி தேசத்துத் தேசாபிமானி தம்மால் ஸ்தாபிக்கபட்ட 'யௌவன இத்தாலி' என்ற சங்கத்திலே செய்து கொண்ட பிரதிக்கினை'யைத் தமிழிலே வடிக்கிறார்![4] அன்னியன் வலியனாகிய நிலையிலும் முறத்தினால் புலியை ஓட்டும் மொய்வரைக் குறப்பெண் போலே அஞ்சாமல் எதிர்த்து அறப் போரில் வீழ்ந்துவிட்ட பெல்ஜியத்துக்கு வாழ்த்துக் கூறுகிறார்.[5] ரஷ்யப் புரட்சி பெற்ற வெற்றிக்கு வரவேற்புக் கூறி வாழ்த்துகிறார்.[6] ''பாரதியார் காலம்வரை தமிழ்மொழிக் கவிஞர்களிலே எவரும் உலக நிகழ்ச்சிகள்பற்றிப் பாடவில்லை. சங்க கால, இடைக்காலப் புலவர்களுக்கு அதற்கான சந்தர்ப்பமே இல்லை... பாரதியார் வாழ்ந்த 20ஆம் நூற்றாண்டிலே செய்திப் பத்திரிகைகள் தோன்றியிருந்தன, அவற்றிலே உலக நாடுகளின் நிகழ்ச்சிக ளெல்லாம் பிரசுரிக்கப்பட்டு வந்தன. தந்தி-தபால் போக்குவரத்துக்களும் அதிகப்பட் டிருந்தன. இவ்வளவிருந்தும் அக்காலத் தமிழ்ப் புலவர்களிலே எவரும் வெளியுலகத்தின்மீது தங்கள் பார்வையைச் செலுத்தவில்லை. அந்தப் பார்வையைப்

---

3 பாரதியார் - பிஜித் தீவிலே ஹிந்து ஸ்திரீகள் - பா 3 (இந்நூல் பக். 748)

4 ௸ மாஜினியின் பிரதிக்கினை முன்னுரைக் குறிப்பு (இந்நூல் பக். 957).

5 ௸ - பெல்ஜியம் நாட்டிற்கு வாழ்த்து (இந்நூல் பக். 717)

6 ௸ – புதிய ருஷியா (இந்நூல் பக். 490)

பெற்றிருந்த முதற் கவிஞர் பாரதியார்தான். இது அவருக்குள்ள தனிச்சிறப்புக்களில் ஒன்றாகும்."[7]

புறப் பயணங்களாலும் அகப் பயணங்களாலும் விரிந் திருந்த பாரதியாரின் ஆளுமை, அயல்மொழிக் கவிதைகளிலும் ஈடுபட்டது. இந்த ஈடுபாட்டிலும் குறிக்கோளின் செல்வாக் கினைக் காணுகின்றோம்.

போராட்டக் கவிஞராய் விடுதலைக் கிளர்ச்சிக் களத்திலே கவிதைச் சுடர்வாள் ஏந்தி நின்ற பாரதிக்குப் பைரன் கவிதை யிலே மனம் பதிந்தது; தம் குறிக்கோளுக்கு இயைந்த பைரனின் கவிதையைத் தமிழில் தருகிறார். அதற்கு அவர் தந்த குறிப்பு: "ஓர் ஜாதியார் ஸ்வதந்திரத்தின் பொருட்டுத் தலைமுறை தலைமுறையாகக் கஷ்டமடைவது இறுதிவரையில் வெற்றி கொண்டே முடியுமென்ற கருத்தை 'பைரன்' என்ற ஆங்கிலேய மகாகவி அழகிய மொழிகளிலே புனைந்திருக்கிறார். அவரது மொழிகளை ஒருவாறு தமிழில் பெயர்த்துத் தருகின் றோம்".[8]

அரசியலில் ஈடுபாடு கொண்டவர்கள் வரலாற்றுப் பின்னணியை மறவாமல் இருப்பதோடு அன்றன்று நிகழும் நிகழ்ச்சிகளையும் அறிந்துகொண்டிருக்க வேண்டும். இங்கி லாந்தின் அரசிறை மந்திரியாக இருந்த லாய்டு ஜார்ஜ் அளித்த வரவு செலவுத் திட்டத்தை எள்ளித் திருமதி ஸ்டீல் என்பவர் எடுத்துக் காட்டிய புராணச் செய்திகூடப் பாரதியின் ஆளுமை வலையிலிருந்து தப்பவில்லை.[9]

இவ்வகையில் மரபுவழிப் புலவர்களின் நெறியிலிருந்து பாரதியின் ஆளுமை தனித்தன்மையுடன் வீறு பெறுகிறது.

---

7 சிவஞானம். ம. பொ., டாக்டர் - பாரதியார் பற்றி ம. பொ. சி. பேருரை- பக். 26-27

8 பாரதியார் - சுதந்திரம் - முன்னுரைக் குறிப்பு (இந்நூல் பக். 962)

9 ஷெ-கலியுக முடிவு (இந்நூல் பக். 140, 970)

பரந்த உலகம் என்ற கருத்தோட்டம் உடைமையால் தன் இயல் நிலத்திலே வேர் பதியாமல் பாரதியாரின் ஆளுமை அந்தரத்தில் பறக்கவில்லை. 'சாத்திரங் கண்டாய் சாதியின் உயிர்த்தலம்'[10] என்று அவரே சொல்லியபடி இந்த நாட்டின் சாத்திரங்களிலே வேர் பாய்ச்சி இருந்தது அவர் ஆளுமை, பாரத மாதா திருப்பள்ளியெழுச்சி, பாரதமாதா திருத்தசாங்கம் போன்ற கவிதைகளிலும் சமயச் சார்பான கவிதைகளிலும் இந்த ஆளுமைக் கூறை நாம் இனங் காணமுடியும். பாரதியார் பொய்ம்மைச் சாத்திரங்களையும் அறிவை மழுக்கிவிடும் புராணங்களையும் சாடுவார்; எனினும், புராணங்களையும் படிக்காமல் விட்டதில்லை. சைவ எல்லப்ப நாவலர் எழுதிய செவ்வந்திப் புராணம் புலமைக்கு நல்விருந்து; எனினும், புலவர்களிலேகூட மிகப் பெரும்பாலோர் அதனைப் பார்த்திருக்க மாட்டார்கள். அந்தப் புராணத்தையும் பாரதியார் படித்திருக்கிறார்; அதன் பாடல்கள் மனத்திலே தங்குமளவுக்கு அதிலே தோய்ந்திருக்கிறார். தாம் எழுதிய ஒரு கதையிலே செவ்வந்திப் புராணப் பாடல் ஒன்றினை எடுத்தெழுதியுள்ளார்.[11] புலமையரங்கினரால் போற்றப்பட்ட சீரிலக்கியங்களை மட்டுமன்றிப் பாமர மக்களிடையே செல்வாக்குப் பெற்றிருந்த மக்கள் இலக்கியங்களையும் (ஃபோக் லிட்டரேச்சர்) பாரதி விரும்பிப் பயின்றிருக்கிறார். அந்தச் செல்வாக்கினால்தான் 'சிந்து இலக்கியத்தின் தந்தை' எனப் போற்றப்படுமளவுக்குச் சிந்துவகைப் பாடல்களை நிறையப் பாடியுள்ளார்.

> ஏற்றநீர்ப் பாட்டின் இசையினிலும் நெல்லிடிக்கும்
> கோற்றொடியார் குக்குவெனக் கொஞ்சு
> மொழியினிலும்
> சுண்ணமிடிப் பார்தம் சுவைமிகுந்த பண்களிலும்
> பண்ணை மடவார் பழகுபல பாட்டினிலும்

---

10 பாரதியார்-இருதலைக் கொள்ளியினிடையே-வரி 55 (இந்நூல் பக். 811)

11 ஷை செய்கை, (கதை)

வட்டமிட்டுப் பெண்கள் வளைக்கரங்கள்
தாமொலிக்கக்
கொட்டி யிசைத்திடுமோர் கூட்டமுதப் பாட்டினிலும்-
நாட்டினிலும் காட்டினிலும் நாளெல்லாம்
நன்றொலிக்கும்
பாட்டினிலும் நெஞ்சைப் பறிகொடுத்தேன்
பாவியேன்[12]

என்ற குயிலின் வாக்கு, பாரதியாரின் வாக்குமூலமே யாகும்.

'அறத்தான் வருவதே இன்பம்'[13] என்ற வள்ளுவர் வாக்கிலே தோய்ந்து,

'அறமொன் றேதரு மெய்யின்ப மென்றநல்
லறிஞர் தம்மை யனுதினம் போற்றுவேன்'[14]

என்று பாடும் பாரதியே,

'குடுகுடு குடுகுடு குடுகுடு குடுகுடு
சொல்லடீ சொல்லடீ மலையாள பகவதி
அந்தரி வீரி சண்டிகை சூலி
குடுகுடு குடுகுடு'[15]

என்று கோணங்கி யாகவும் குரல் கொடுக்க முடிகிறது. தத்துவ இமய மாகிய சங்கரரிடம் பறந்து சென்று பரவுகின்ற பாரதி யின் ஆளுமை — பகவத் கீதையில் ஆழங்காற்பட்டுத் திளைக்கும் பாரதியின் ஆளுமை-பட்டினத்தார், தாயுமானவர், வள்ளலார் ஆகிய ஞானிகளை நாடிப் போற்றும் பாரதியின் ஆளுமை குடுகுடுப்பாண்டியையும் கரும்புத் தோட்டத்தில் உயிரைப் பணயம் வைத்துழலும் தொழிலாளியையும் மறப்பதில்லை.

---

12 பாரதியார் – குயில் (இந்நூல் பக். 372)

13 திருவள்ளுவர் - திருக்குறள் 39

14 பாரதியார் - கனவு 44 (இந்நூல் பக். 188)

15 ஷை - புதிய கோணங்கி (இந்நூல் பக். 816)

இயற்றமிழ்ப் பெருந்தகை டாக்டர் சாமிநாத ஐயரவர்களை - இசைமேதை சுப்புராம தீட்சிதரை-ஓவியர் மணி ரவிவர்மாவைப் பாடிய பாரதி, இரும்பைக் காய்ச்சி உருக்கி இயந்திரங்கள் வகுக்கும் கொல்லுத் தொழிலாளரை - கடலில் மூழ்கி முத் தெடுக்கும் பணியாளரை - மண்ணெடுத்துக் குடம் செய்யும் குலாலரை ... மற்றும் பல பல தொழிலாளரைப் 'பிரம தேவன் கலை' என்று புகழ்ந்து,

விண்ணி னின்றெமை வானவர் காப்பார்
மேவிப் பார்மிசைக் காப்பவர் நீரே[16]

என்று போற்றுவதைக் காணுகின்றோம். உடலுழைப்புச் செய் வோரை ஒருவகைப் புறக்கணிப்பும் ஏளனமும் கொண்டு பார்க்கும் பார்வை பாரதியின் ஆளுமைக்கு ஒவ்வாத நிலை. உடலுழைப்புத் தொழில்களைப் பாடிப் போற்றும் அதே பாடலில்,

பாட்டுஞ் செய்யுளும் கோத்திடு வீரே
பரத நாட்டியக் கூத்திடு வீரே
காட்டும் வையப் பொருள்களின் உண்மை
கண்டு சாத்திரம் சேர்த்திடு வீரே[17]

எனக் கவிஞர்களை - நாட்டியம் வல்லாரை - விஞ்ஞானிகளைத் தொழிலாளராகவே காட்டுவது நுனித்து உணரத்தக்கது.

வையகச் சார்புடைக் கவிஞராக மட்டு மன்றி விழுப்பக் கவி (pure poetry) வாணராகவும் பாரதி திகழ்ந்திருக்கிறார்.

நிலாவையும் வானத்து மீனையும் காற்றையும்
நேர்பட வைத்தாங்கே
குலாவு மமுதக் குழம்பைக் குடித்தொரு
கோல வெறிபடைத்தோம்

---

16 பாரதியார் - தொழில் 2 (இந்நூல் பக். 532)

17 ஷை ஷை (இந்நூல் பக். 532)

உலாவு மனச்சிறு புள்ளினை எங்கணும்
ஓட்டி மகிழ்ந்திடுவோம்
பலாவின் கனிச்சுளை வண்டியி லோர்வண்டு
பாடு வதும்வியப்போ[18]

என்பது முதலான பாடல்களில் வையத்தை விழுங்கி, வானி லும் உயரத் தாவி, அண்டம் அளாவிடும் ஆளுமையைக் காண முடிகிறது. எந்தக் கலையிலும் இப்படி ஒரு விழுப்பப் பெரு நிலை உண்டு. பாரதியார்க்குத் தாசன் என்பதிலே பெருமை கொண்ட புரட்சிக் கவிஞரிடத்திலும் இந்த விழுப்பப் பெரு நிலையைக் காணலாம். புரட்சிக் கவிஞர் ஒரு கவிஞனைப் படைக்கிறார்; உதாரன் என்ற அந்தக் கவிஞன் நிலாக்காட்சி யிலே தன்னைக் கரைத்துக்கொண்ட நிலையில் மூன்று பாடல் கள் பாடுகிறான். 'நீலவான் ஆடைக்குள் உடல் மறைத்து நிலா வென்று காட்டுகின்றாய் ஒளிமுகத்தை' என்று தொடங்கிப் பொழியும் கவிதை மழையின் இறுதியிலே கிடைக்கும் அமுத தாரை —

உன்னைஎன திருவிழியாற் காணு கின்றேன்
ஒளிபெறுகின் றேனிருளை ஒதுக்கு கின்றேன்
இன்னலெலாம் தவிர்கின்றேன் களிகொள் கின்றேன்
எரிவில்லை குளிர்கின்றேன் புறமும் உள்ளும்
அன்புள்ளம் பூணுகின்றேன் அதுவும் முற்றி
ஆகாயம் அளாவுமொரு காதல் கொண்டேன்
இன்பமெனும் பால்நுரையே குளிர்வி ளக்கே
எனைஇழந்தேன் உனதெழிலிற் கலந்த தாலே[19]

அற்புதமான பாட்டு! விழுப்பக் கவிபொழியும் நிலை வரும் போது போட்டி பூசல் பொறாமைகள் மோதுகின்ற வையகம் கண்ணுக்கும் கருத்துக்கும் எட்டாமலே போகிறது. ஆன்மிகம் பாடுவோ னாயினும் உலகியல் பாடுவோ னாயினும் அந்தக்

---

18 பாரதியார் — நிலாவும் வான்மீனும் காற்றும் 1 (இந்நூல் பக். 588)

19 பாரதிதாசன் — புரட்சிக்கவி

கவிஞனின் ஆளுமை அடையும் இமாலயச் சாதனை விழுப்பக் கலை நிலையினை எட்டுவதுதான்.

பாரதி உலகிடை உலாவினார்; உலகிலே தோய்ந்தார்; சிறுமை கண்டு பொங்கினார்; பொய்ம்மை நூல்கள் எற்றினார்; பாதகம் செய்பவரைக் கண்டால் பயங்கொள்ளாதிருந்தார்; அவர் முகத்தில் உமிழ்ந்துவிடும் திண்மையும் பெற்றிருந்தார்; அடிமை வாழ்வு அகன்று இந்நாட்டார் விடுதலை ஆர்ந்து செல்வம், குடிமையில் உயர்வு, கல்வி, ஞானமும் கூடி ஓங்கப் பாடினார். பக்தியினாலே இந்தப் பாரினில் எய்திடும் மேன்மைகளை எடுத்துரைத்துப் பாடினார். முருகனை — சிவனை — கண்ணனை — சக்தியை — யேசுவை — அல்லாவைப் பாடினார். எங்கெங்குக் காணினும் சக்தி என்று உணர்ந்தார். தீக்குள் விரலை வைத்தால் நந்தலாலாவைத் தீண்டும் இன்பம் அது என உணர்ந்தார்.

காக்கை குருவியெங்கள் சாதி — நீள்
கடலு மலையு மெங்கள் கூட்டம்
நோக்குந் திசையெலாம் நாமன்றி வேறிலை
நோக்க நோக்கக் களியாட்டம்.[20]

என்று அத்துவிதப் பெருநிலை உற்றுக் களிக் கூத்தாடினார்.

இது பாரதி ஆளுமையின் திறம் — அவர் கவிதைகளிலே காணுமாறு.

உலகியலைப் பாடி அதன் தொடர்புடையராய் அதற்கு விழிப்பூட்டும், விடுதலைக் கவிஞராய் — போர்க்களப் புலவராய்ப் பொலிந்தார். அதே சமயம் 'விட்டு விடுதலை யாகி நிற்பாய் சிட்டுக் குருவியைப் போலே'[21] என்ற நிலையில் ஆன்மிகக் கவிஞராயும பொலிந்தார். உலகியலாயினும் ஆன்மிக

---

20 பாரதியார்-ஜயபேரிகை 3 (இந்நூல் பக். 659)

21 வெ-விடுதலை: சிட்டுக் குருவி. (இந்நூல் பக். 730)

மாயினும் விடுதலை நாடும் ஆளுமையாகவே பாரதியின் ஆளுமை திகழ்ந்தது.

**பாரதியின் கவிதைப் பணி.**

"எளிய பதங்கள், எளிய நடை, எளிதில் அறிந்துகொள்ளக் கூடிய சந்தம். பொதுஜனங்கள் விரும்பும் மெட்டு; இவற்றினை யுடைய காவியமொன்று தற்காலத்திலே செய்துதருவோன் நமது தாய்மொழிக்குப் புதிய உயிர் தருவோன் ஆகின்றான்" — இது பாரதியார் கூற்று. 'பாஞ்சாலி சபத'த்தின் முதற்பாகம் 1912இல் வெளிவந்தபோது அந்த நூலின் முகவுரையில் பாரதி இவ்வாறு குறித்திருக்கிறார். பாரதியின் கவிதைக் கொள்கை இதுவே என்பதை மிகத் தெளிவாகப் புலப்படுத்தும் விளக்கவுரை இது எனலாம்.

எளிமை வேண்டும், பொதுமக்களை எளிதில் எட்டுவதாக இருக்கவேண்டும் என்ற வகையில் கருத்துத் தெரிவிப்பதால் பாரதியாருக்குப் பழமைவழிப்பட்ட புலமையோ இலக்கணத் திறமையோ இருந்ததில்லை என்று சொல்லிவிட முடியாது. அவருடைய நூல்களை நன்கு பயின்றவர்கள் இந்தக் கருத்தினை ஏற்பார்கள். மரபு வழியிலே தோய்ந்து, காலத்துக்கேற்ற மாறுதல்களைத் தயக்கமின்றி ஏற்றுச் செயல்படுத்தியவர் பாரதி. சுப்பையா என்ற தனிமனித வாழ்வுக்கும், பாரதி என்ற கவி வாணர் வாழ்வுக்கும் இந்த விதி பொருந்தும்.

திருத்தணிகை மலைமேலே குமார தேவன்
திருக்கொலுவீற் றிருக்குமதன் பொருளைக் கேளீர்
திருத்தணிகை யென்பதிங்குப் பொறுமை யின்பேர்
செந்தமிழ்கண் டீர்பகுதி 'தணி'யெ னுஞ்சொல்[22]

தணிகை என்ற சொல்லின் பகுதி இஃதென இலக்கண நெறியிற் காட்டிப் பொருள் விளக்கம் தருகிறார் பாரதி. 'அழகுத் தெய்வம்' என்ற கவிதையின் மூன்றாம் பாடல்

---

22 பாரதியார் — பாரதி அறுபத்தாறு 11 (இந்நூல் பக். 783)

'முகத்திலருள் காட்டினாள் மோகமது தீர்ந்தேன்'[23]

என முடிகிறது. எளிமையான சொல்லாட்சிதான். ஆனால் 'மோகமது' என்ற இடத்தில் 'நானாகிய சாத்தன்' என்பது போல் ஆட்சி அமைந்துவிடுகிறது. 'மோகந் தீர்ந்தேன்' என்றால் யாப்பியல் சிதையும்; ஓர் அசை குறைவுபடும். ஆதலால், 'மோகமது' என்று எளிமையாக எழுதியுள்ளார். ஆனால், பயனற்ற, சுவையற்ற சொல்லடுக்காக அவருக்கே தோன்றி யிருக்கிறது. ஆகவே, அவரே (சாரைப் பாம்பு எனச் சிறப்பும் பொதுவுமான சொற்களின் இணைப்பை மனங் கொண்டு) 'மோக விடாய்' எனத் திருத்தியிருக்கிறார். 'விடாய்' (தாகம்) என்பது சற்று அரிய ஆட்சிதான். ஆனால், எளிமை என்ற பெயரால் இலக்கியத் தரம் சிதைவதை அவர் விரும்பியவ ரல்லர்.

புலமை வல்லாளர்க்கே விளங்குவதாய்—அவர்கள் தமக்குள் ளேயே பரிமாறிக்கொள்ளும் குழூஉக் குறிபோலச் சொல் லாட்சி அமைவதையும் அவர் ஏற்பவர் அல்லர். 'கடல்' என்ற பாட்டுக்கு ஒரு முன்னுரை எழுதியிருக்கிறார், பாரதியார். அதில், "...ஸகல ஜனங்களுக்கும் தெளிவாகும்படி மிக எளிய நடையிலே அமைக்க வேண்டுமென்று சிரமப்பட்டிருக்கிறேன். என்னையறியாமல் அகராதிப் பண்டிதர்களுடைய சில 'கற கற' மொழிகள் விழுந்திருக்கின்றன. செய்யுளமைதி நாடி அம்மொழிகளுக்கு எளிய பிரதிபதங்கள் போடாம லிருந்து விட்டேன். இதன் பொருட்டும் படிப்போர்கள் க்ஷமிக்குமாறு பிரார்த்தனை செய்கிறேன்."[24]

பாரதியாரின் சொல்லாட்சிக் கொள்கை இதில் தெளி வாகிறது. எளிய நடைக்கு உதவும் வகையில் எளிய சொற் களே கையாளப்பட வேண்டும்; கவிஞன் இதில் எச்சரிக்கை யோடு செயல்பட வேண்டும். அதற்காகச் செய்யுளமைதியைச் சிதைத்துவிடவும் கூடாது. 'மோகமது தீர்ந்தேன்' என்பதை

---

23 பாரதியார்-அழகுத்தெய்வம் 3 (இந்நூல் பக். 595)

24 ஷை - கடல்' முன்னுரை (இந்நூல் பக். 971)

மோகவிடாய் தீர்ந்தேன்' என்று அவரே திருத்தினார் என்று முன்னே கண்டோம்.

'பாண்டவர் செல்வம் விழைகின்றான் — புவிப்
பாரத்தை வேண்டிக் குழைகின்றான் — நனி'[25]

இங்கே 'நனி' என்பது சிந்துப் பாவில் வரும் தனிச் சொல். 'சால உறுதவ நனிகூர் கழி மிகல்' என்பது நன்னூல் நூற்பா. 'நனி' என்பது உரிச்சொல்; அஃதாவது அரிய சொல். 'நனி' என முதலில் எழுதிய பாரதியாரே 'மிக' எனத் திருத்தியிருக்கிறார். முன்னே 'மோகவிடாய்' எனத் திருத்தி இலக்கிய நயம் பேணினார்; 'நனி' என்பதை 'மிக' என மாற்றி எளிமை பேணினார். எளிமைக்காகச் செய்யுள் நயத்தைப் பலி கொடுப்பது பாரதிக்கு இசைவன்று; அப்படியே புலமையாளரின் கடுநடைச் சித்தாட்டத்துக்கும் இடம் தாரார்.

எளிய பதங்கள் கையாள வேண்டும் என்பதால் கலைக் கவர்ச்சி யற்ற வெற்றுச் சொற்களை அடுக்கிக் கவிதையின் உயிர்நாடிக்கு உலை வைப்பது என்று எண்ணுகின்றவர் அல்லர், பாரதியார். 'வந்தது பூனை செத்தது எலி' என்றால், சொல் எளிமைதான்; ஆனால், என்னதான் பகீரதப் பிரயத்தனம் பண்ணினாலும் இதைக் கவிதையாக்கிவிட முடியாது. பழகு தமிழ்ச் சொல்லாகவும் பாட்டுக்கு உயிரூட்டும் பண்புடையதாகவும் இருக்கவேண்டும்.

பால ருந்து மதலையர் தம்மையே
பாத கக்கொடும் பாதகப் பாதகர்
மூலத் தோடுகு லங்கெடல் நாடிய
மூட மூடநிர் மூடப் புலையர்தாம்
கோல மாக மணத்திடைக் கூட்டுமிக்
கொலையெ னுஞ்செய லொன்றினை யுள்ளவும்
சால வின்னுமோ ராயிரம் ஆண்டிவர்
தாத ராகி அழிகெனத் தோன்றுமே[26]

---

25 பாரதியார் – பாஞ்சாலி சபதம் I 68 (இந்நூல் பக். 216)

26 ௸ – கனவு 34 (இந்நூல் பக். 410-11)

பாதகர், மூடர் என்ற எளிய சொற்கள் ஆளப்படும் முறையிலே பெறுகின்ற வேகச் சுழிப்பு அற்புதமானது.

கருக் கொண்டு உருவாக்கும் உருக்காட்சிகளால் (இமேஜரி) சில எளிய சொற்கள் அற்புதமான வேகத்தைப் படைத்து விடமுடியும். 'நிலாவையும் வானத்து மீனையும்' என்ற பாடலிலே[27] 'கோல வெறி' என்ற சொற்றொடரைக் கருதிப் பாருங்கள். 'வெறி' என்பது எக்காலும் எவராலும் ஏற்கப்படும் தகுதி உடையதாகாது. ஆனால், பாரதி அதனைக் 'கோல வெறி' என அடைமொழி கொடுத்துச் சிறப்பிக்கிறார். வெறியை 'அழகிய வெறி' என்று ஏன் சிறப்பிக்கிறார்? இந்த வெறி மது அருந்தியதால் விளைந்தது அன்று, 'அமுதக் குழம்பைக் குடித்து ஒரு கோல வெறி படைத்தோம்' என்கிறார். குடித்தது அமுதக் குழம்பு; விளைந்தது கோல வெறி. 'மனச்சிறுபுள்'[28], 'மின்னல் விளக்கு'[29], 'மின்னற்சுவை,[30], 'நெருப்புச் சுவைக் குரல்'[31] போன்ற சொற்கள் நெஞ்சத் திரையில் எழுப்புகின்ற உருக்காட்சிகள் கவிதைத் தேவி அணிந்துள்ள சுடர்மணி அணிகளாகும்.

மரபு வழியினை உரிய வகையிலே மதித்துப் போற்றியது, பாரதியின் கவிதைப் பணி. நான்மணி மாலை, தசாங்கம், திருப்பள்ளியெழுச்சி போன்ற பிரபந்தங்கள் மரபு வழியில் உருவாகியவை. அவ்வாறு பழைய பிரபந்த நெறிகளைப் பின்பற்றிய போதே நுவல் பொருளால் புதுமைக்கு வழி வகுத்தவர் பாரதி. இவ்வாறு மரபைப் புதுமைக் கோலம் புனையச் செய்தார்.

---

27 பாரதியார் - நிலாவும் வான்மீனும் காற்றும் இப்பாடல் இம்முன்னுரையிலேயே முன்னர் எடுத்துக் காட்டப்பட்டுள்ளது.

28 ஷெ

29 ஷெ (இந்நூல் பக். 589) ஒப்பிடுக: இன்பக் கொடுநெருப்பாய் அனற் சுவையமுதாய் (கண்ணன்-என் தாய்-இந்நூல் பக். 424)

30 ஷெ குயில் 9 (இந்நூல் பக். 368)

31 ஷெ ஷெ 108 (இந்நூல் பக். 378)

பாடுவது விநாயகரைத் தலைவராகக்' கொண்ட நான்மணி மாலை; ஆனால், அதிலே சமய சமரசம் கொலுவிருக்கும்

> விநாயக தேவனாய், வேலுடைக் குமரனாய்,
> நாரா யணனாய், நதிச்சடை முடியனாய்.
> பிறநாட் டிருப்போர் பெயர்பல கூறி
> அல்லா யெஹோவா எனத்தொழு தன்புறும்
> தேவருந் தானாய், திருமகள், பாரதி,
> உமையெனுந் தேவிய ருகந்தவான் பொருளாய்
> உலகெலாங் காக்கும் ஒருவன்[32]

என விநாயகரைப் பல சமயப் பெயர்களுக்கும் உரியவராகப் பாடுகிறார், பாரதி. ஏசுநாதரைப் பாடிய பாட்டின் இறுதியில் ஓம் என்ற பிரணவ எழுத்தை எழுதியுள்ளார்.[33]

ஆசிரியப் பாக்கள் ஆ, ஏ., ஓ முதலான நெட்டுயிர்களிலே முடிய வேண்டும் என்பது மரபு. அதனைப் பேணிய பாரதி யாரே பல அகவற் பாக்களிலே புறக்கணித்தும் இருக்கிறார். விநாயகர் நான்மணிமாலையில் வரும் அகவற்பாக்களை நோக் கினால் இது தெளிவாகும்.[34] இந்தக் கட்டுப்பாடு தேவை அற்றது என்பது அவர் கருத்தெனக் கொள்ளலாம்.

கட்டளைக் கலித்துறை, கட்டளைக் கலிப்பா ஆகிய யாப்பு வடிவங்களும் பாரதியார் பாடல்களிலே காணப்படுகின்றன. 'கட்டளை' என்றாலே யாப்பிலக்கணப்படி வரிக்கு இத்தனை எழுத்துகள்தாம் இருத்தல் வேண்டும் என்பது தெளிவு. கட்டளைக் கலிப்பா என்பது அடிதோறும் எட்டுச் சீர்கள்

---

32 பாரதியார் - விநாயகர் நான்மணி மாலை 8 (இந்நூல் பக். 497)

33 இதுகாறும் அச்சிட்ட பதிப்புகளிலெல்லாம் பிரணவம் விடப்பட் டுள்ளது. பாரதியார் பாடலை முடித்துப் பிரணவ எழுத்தையும் பொறித்தார்- (இந்நூல் பக். 716)

34 28 ஆம் பாடல் 'போற்றி' என முடிகிறது; பிற அகவல்கள் நெட்டுயிரிலே முடிகின்றன. பாரதியார் பாடிய மிகப் பல அகவற்பாக்கள் நெட்டுயிரில் முடிவதில்லை.

கொண்டதாய், எழுத்தெண்ணும்போது அரையடிக்கு இத் தனை எழுத்துகள் என்ற வரையறை கொண்டதாகும். நேரசையில் தொடங்கினால் ஒற்று நீக்கிப் பதினோரெழுத்தும் நிரையசையில் தொடங்கினால் ஒற்று நீக்கிப் பன்னிரண்டு எழுத்தும் இருக்கவேண்டும் என்பது மரபு. 'விளக்கி லேதிரி நன்கு சமைந்தது' என்று தொடங்குவது முதலான நான்கு பாடல்களும்[35] இத்தகைய கட்டளைக் கலிப்பாக்கள் ஆகும். நேரில் தொடங்கும் அரையடிக்குப் பதினொரு எழுத்தும் நிரையில் தொடங்கும் அரையடிக்குப் பன்னிரண்டு எழுத்தும் இருப்பதைக் காணலாம். இந்தக் கட்டளைக் கலிப்பாவில் ஒரு புதுவகையும் பாரதியார் பாடல்களில் காணப்படுகிறது.

துன்ப மிலாத நிலையே சக்தி
தூக்க மிலாக்கண் விழிப்பே சக்தி[36]

என்று தொடங்கும் மூன்று பாடல்கள் இந்தப் புதுவகைக் கட்டளைக் கலிப்பாக்கள் ஆகும். அரையடிக்குப் பத்து எழுத்துகள் என்ற வரையறையில் அமைந்துள்ளன இந்தப் பாடல்கள்.

உருவால்மட்டு மன்றி நுவல்பொருளாலும் இருமை நெறி பாரதி பாடல்களில் காணப்படுகின்றன. பாரத நாட்டு மரபிலே ஊறிய பாரதி ருஷ்யாவைப் பாடினாலும் அங்கே புரட்சி வெடித்தது மாகாளி பராசக்தியின் கடைக்கண் நோக்கில்தான் என்று பாடுவார்.[37] பரம்பொருளை நாயகனாகக் கொண்டு அடியவர் நாயகியாக அமைந்து எழுந்த தமிழ்ப் பாடல்கள் ஆயிரக் கணக்கில் உள்ளன; பிற மொழிகளிலும் - பிற நாடு களிலும் கூட-நாயக - நாயகி பாவத்தின் பொது மரபு இதுவே. பரம்பொருளை நாயகியாக மாற்றிய மரபும் நம் இலக்கியத்தில் உண்டு. கண்ணன் பாட்டிலே பக்தி இயக்கத்தின் இந்த

---

35 பாரதியார் – நாட்டுக் கல்வி (இந்நூல் பக். 743)

36 ஷை – சக்தி 1 – 3 (இந்நூல் பக். 766)

37 ஷை – புதிய ருஷ்யா (இந்நூல் பக். 490)

உத்தியைப் பாரதியின் கவிதை கையாண்டுள்ளதைக் காணலாம். சுந்தரர் பொருட்டுச் சிவபெருமான் தூது சென்று பணிபுரிந்த துண்டு; ஆயினும் சிவனைப் பணியாளனாகச் சுந்தரர் மனம் கருதிடத் துணிந்த தில்லை. கணிகண்ணன் பொருட்டு அடியாரின் பின்சென்றான் பச்சைப் பசுங்கொண்ட லாகிய திருமால்; ஆனால், எந்தப் பாகவதனும் பகவானைப் பணியாளனாகக் கருதிப் பார்க்கத் துணிந்ததில்லை. பாரதி கவிதையோ கண்ண பெருமானைச் சேவகனாக்கிக் காட்டுகிறது. எல்லாமே பரம்பொருள் தான் என்றால் இறைவனை ஏவலாளனாக ஏன் கருதக்கூடாது என்று தமக்குள் கவிஞர் நெஞ்சம் வினா எழுப்பி, 'ஓ அதில் தடை இல்லையே' என விடை கண்டிருக்கும்போலும். 'கண்ணன் — என் சேவகன்'[38] — புதிய பார்வை. கீதாசாரியனாகிய கண்ணனைச் சற்குருவாகக்[39] கண்ட பாரதி, 'கண்ணன் — என் சீடன்'[40] என்று புதிய பார்வையில் பார்க்கிறார். சேவகனாகவும் சீடனாகவும் கொண்டது புதுநெறி என்றால் 'கண்ணன் — என் காந்தன்'[41] என்ற கவிதையிலே ஒரு மரபுப் புரட்சியே நடக்கிறது. அடியவர் தம்மைப் பரத்தையாகக் கற்பித்துத் தம்மை நாடிவரும் 'கள்ள'க் காதலனாகப் பரம்பொருளைப் பார்க்கும் பார்வை, மரபு நெறி பேணுவோருக்குத் தாங்க இயலாத அதிர்ச்சியாக இருக்கலாம். 'யாதுமாகி நின்றாய் காளி எங்கும் நீ நிறைந்தாய்' என்று பாடிய பாரதிக்கு இப்பார்வை முற்றிலும் இயல்பானதாகவே இருந்தாலும், பிறர்க்கு இது பெரும் புரட்சியே ஆகும்.

பழ மரபில் ஊறி அதன் சாரமெல்லாம் ஏற்றுப் போற்றிய பாரதி, ஒரு மாபெரும் புரட்சியாளர் என்பதையே அவருடைய கவிதைப் பணி தெளிவாக்குகிறது. எட்டயபுரம் அரசருக்கு அவர் எழுதிய சீட்டுக் கவியில் தம் கவிதைப் பணி இத்தகையது எனப் பாரதியார் விளக்கியிருக்கிறார்.

---

38 இந்நூல் பக். 430-33

39 ஷை பக். 443-47

40 ஷை பக். 437-442

41 ஷை பக். 466-67

சுவைபுதிது பொருள்புதிது வளம்புதிது
சொற்புதிது சோதிமிக்க
நவகவிதை எந்நாளும் அழியாத
மகாகவிதை....[42]

இந்தத் தன்மதிப்பீடு முற்றிலும் பொருந்துவதே என்பது ஒருவாறு இம் முன்னுரையுள் விளக்கப்பட்டது.

**இப்பதிப்பின் தனிக் கூறுகள்:**

புலமைப் பதிப்பு இதுகாறும் இல்லை என்ற குறையினை இப்பதிப்பு நீக்கும் என்பது எமது நம்பிக்கை. பாடல்கள் எல்லாவற்றையும் யாப்பியல் நெறியிலே பாகுபாடு செய்து, அதற்கேற்பச் சீர்பிரித்து அச்சாகியுள்ளது இந்தப் பதிப்பு. இவ்வகையில் இப்பதிப்பு முதன்மைச் சிறப்புடையது.

மற்றொரு தனித்தன்மை: - இயன்றவரையில் பாடல்கள் எழுந்த / வெளியாகிய கால நிரலை யொட்டி வரிசைப்படுத்தப் பட்டுள்ளன.

இதுகாறும் வெளிவந்துள்ள பதிப்புகள், பாரதி கவிதைகள் வெளிவந்த இதழ்கள், அவருடைய கையெழுத்துப் படிகள் ஆகியவற்றைச் சேகரித்து, ஒப்பிட்டு நோக்கிப் பாட பேதங்கள் பிரதி பேதங்கள் தரப்பட்டுள்ளன. ஆங்காங்கே அடிக்குறிப்புகளில் இவற்றைக் காணலாம்.

இஃது ஆராய்ச்சி நூலன்று; எனினும் ஆராய்ச்சிக்கு வழிவகுக்கும் பதிப்பாக - ஆய்வாளர்க்கு விருந்தாகும் பதிப்பாக இலகவேண்டும் என்பதால் ஓரளவு ஆய்வுக் குறிப்புகளும் தரப்பட்டுள்ளன.

மிகவும் விரிவான பின்னிணைப்புகள் தரப்பட்டுள்ளன.

மற்றப் பதிப்புகளில் இதுகாறும் இடம் பெறாத சில பாடல்கள் முதன்முதலாக இத்தொகுப்பில் வெளிவருகின்றன

---

42 . பாரதியார்-எட்டயபுரம் அரசருக்கு ஓலைத்தூக்கு (இந்நூல் பக். 517)

ஏனைய பதிப்புகளை வெளியிட்டவர்கள் கணிப்பிலே ஒரே பாடலாக அமைந்தவை சில, இந்தப் பதிப்பிலே பல பாடல்களாக அமைக்கப்பட்டுள்ளன; அப்படியே ஏனைய பதிப்புகளிலே பல பாடல்களாகக் குறிக்கப்பட்ட வரிகள் இப் பதிப்பிலே ஒரே பாடலாகக் கணிக்கப்பட் டுள்ளன. இவ்வாறு கொள்ளுதற்கான விளக்கங்கள் ஆங்காங்கே தரப்பட் டுள்ளன.

சுருங்கச் சொன்னால், இது புலமைப் பதிப்பாகமட்டு மன்றி ஆய்வாளர்க்கு உதவும் பதிப்பாகவும் உருப் பெற்றிருக்கிறது.

நன்றி:

இப்பதிப்பு இத்துணைச் சிறப்பாக அமைவதற்கு உதவியவர்கள் பலர். கவிதைகளை நிரல்படுத்திப் பாட பேத, பிரதி பேதங்களைக் குறித்ததுடன் பின்னிணைப்புகள் சிலவும் உருவாக்கி முதற்படி தயாரித்துக் கொடுத்தவர் வானவில் திரு. சீனி. விசுவநாதன் அவர்க ளாவார். மேலும், உரிய கருத்துரைகளை நல்கிப் பதிப்புக் குழுவினர் உதவினர். சேக்கிழார் அடிப்பொடி திரு. இராமச்சந்திரன், கல்விக்கடல் திரு. எஸ். கே. இராமராசன், சந்தக்கவி இராமசாமி ஆகியோர் உதவிகள் மிகவும் குறிப்பிடத்தக்கவை. இவர்கள் யாவருக்கும் நன்றி தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

பாரதியார் பாடல்களின் இந்தப் பதிப்பு எவருடைய கண்ணையும் கருத்தையும் கவரும்வகையில் அமைந்திருப்பதற்குமுழுக் காரணர் சிவகாமி அச்சகத்தினரே என்று சொல்வது மிகையாகாது. அச்சக உரிமையாளர் முனைவர் கோ. இராஜசுந்தரம் அவர்கள் காட்டிய ஆர்வத்துக்கும் மேற்கொண்ட முயற்சிக்கும் எத்துணை நன்றி சொல்லினும் நிறைவாகாது. அவரைப் போலவே அச்சக ஊழியர்களும் தளரா உழைப்பினர். மெய்ப்புத் திருத்திய புலவர் கணபதி அவர்களும் அரும்பணி யாற்றினார். பதிப்புத்துறைத் துணை இயக்குநர் திரு கோவை. இளஞ்சேரன், அவர்கள் அலுவற்பொறுப்பாக மட்டும் கருதிவிடாமல் இப்பதிப்பிலே பேரார்வம் காட்டினார். யாவருக்கும் நன்றி.

இதனைப் பதிப்பிக்கும் வாய்ப்பினை நல்கியதுடன், உரிய காலங்களில் தக்க அறிவுரைகள் கூறி, ஊக்கமூட்டி வழி நடத்திய

முன்னாள் துணைவேந்தர் முதுமுனைவர் வ. அய். சுப்பிர மணியம் அவர்களுக்கு நன்றி தெரிவிக்கும் கடமையுடையேன்.

தாம் பொறுப்பேற்றவுடன் முதற்பணியாக இப்பதிப்பினை வெளியிடும் துணைவேந்தர் முனைவர் ச. அகத்தியலிங்கம் அவர்களுக்கு மிக்க நன்றி.

நூற்றாண்டு விழாவினை ஓராண்டுக் காலம் நடத்தி மகிழ்ந் ததோடு, தமிழக அரசு இப்பதிப்பு வெளிவருவதற்குப் பெருநிதி வழங்கியது. மிக மிக நன்றி.

தமிழகக் கல்வியமைச்சர் மாண்புமிகு பொன்னையன் அவர்கள் இப்பதிப்பிற்கு அணிந்துரை நல்கியுள்ளார்கள். பாரதி நூற்றாண்டு விழாக்குழுவின் தலைவராகப் பணியாற்றிய பெருந் தகை ம.பொ. சிவஞானம் இதற்கோர் ஆய்வுரை அருளியிருக் கிறார்கள். இச் சான்றோர்கள் எம் போற்றுதல் சான்ற நன்றிக்கு உரியவர்கள்.

*1986 திசம்பர் 11*
*(பாரதியார் பிறந்த நாள்)*

ம. ரா. போ. குருசாமி

காலம் கவிஞனைத் தின்றது — அவன்
காவியம் காலத்தை வென்றது.

— கவிஞர் கு. மா. பாலசுப்பிரமணியம்

# பதிப்பு வரலாற்றுரை

கவிஞன் தன் வேணவாவை விதிப்பு ஆக்கியும் பாடுவான். ஆனால், விதிப்புக்கு விலக்கு ஆகாமல் இலக்கியமாகும் கவிஞனே மாகவிஞன் ஆகிறான்.

"இறவாத புகழுடைய புதுநூல்கள்
தமிழ்மொழியில் இயற்றல் வேண்டும்"

-என்று பாரதி தன் வேணவாவை 'இயற்றல் வேண்டும்' என்று விதிப்பும் ஆக்கினான். அவன் படைப்புகள் இறவாத புகழுடையன ஆகி, பாரதியைத் தன் விதிப்புக்கு இலக்கியமாகவே ஆக்கியுள்ளன.

இத்தகைய இறவாத புகழுடைய பாரதியின் பாடல்கள் இன்று தமிழ்ப் பல்கலைக் கழகத்தால் பதிப்பிக்கப் பட்டுள்ளன.

தமிழ்ப் பல்கலைக் கழகம், ஆய்வுப் பணிப் பல்கலைக் கழகம். பல்கலைக் கழக ஆய்வாளர்கள் உருவாக்கிய நூல்களும், பல திட்டங்களில் உருவாகிய நூல்களுமாகத் தமிழிலும், ஆங்கிலத்திலும் இதுவரை 78 வெளியீடுகளைத் தமிழ் உலகின் முன் வைத்துள்ளது. "பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள் தமிழ் மொழியில் பெயர்த்தல் வேண்டும்" என்ற பாரதியின் கூற்றிற்கு ஏற்ப மருந்தியல், சட்ட இயல், நாடக இயல், நிருவாக இயல், சமூக இயல், பொறியியல் முதலிய பல்துறை நூல்கள் நூலாக்கமாகவும்

தமிழாக்கமாகவும் வெளியிடப்பட்டுள்ளன. மற்றும் இலக்கியம், திறனாய்வு, ஆன்மவியல் முதலிய பல்துறை நூல்களோடு அறிவியல், வாழ்வியற் களஞ்சியங்களும் குறிப்பிடத்தக்க பதிப்புகளாக வெளிவந்துள்ளன. இப்பணித்தொடரில் பாரதி பாடல்களை ஆய்வுப் பதிப்பாக வெளியிடும் வாய்ப்பைப் பெற்றதற்குத் தமிழ்ப் பல்கலைக் கழகம் பெருமை அடைகிறது. இப்பணித் தொடரை ஒரு 'பதிப்பு வரலாறு' என்றே குறிப்பிடலாம். இவ்வரலாற்றுக்கு முன், பாரதி படைப்புப் பதிப்புகளாகத் தமிழகத்தில் நேர்ந்த பதிப்பின் வரலாற்றை இங்கு நினைவுகூர்தல் பொருந்தும்.

பாரதி ஓர் உணர்ச்சிக் கவிஞன். ஏழாவது அகவையில் அவன் கவிஞனாக மின்னலிட்டான். 1903-இல் 'விவேகபானு' என்னும் இதழில் 'தனிமை இரக்கம்' என்னும் பாடல் வெளிவந்தது. பாரதி தன் பாடலை அச்சில் பார்த்து மகிழவைத்த முதற்பாடல் இது. தன் படைப்புகள் பொன்னேட்டில் வைர எழுத்துகளால் வரவேண்டும் என்றும் விரும்பினான். "மண்ணெண்ணெய், தீப்பெட்டியிலும் சாதாரணமாகப் பரவவேண்டும்" என்றும் எழுதினான்.

"பாட்டினில் அன்பு செய்" என்ற அவன் ஆத்திசூடிப் படி அவன் அன்பு செய்த தேசியப் பாட்டு 1907-இல் 'சுதேச கீதங்கள்' என்னும் தொகுப்பாக வெளிவந்தது. அது நான்கு பக்க வெளியீடு. பாரதியிடம் மாறுபட்ட கருத்துக்கொண்ட திரு வி. கிருட்டிணசாமி ஐயர் என்பவர் அதனை இலவய வெளியீடாக வெளியிட்டார். அதனை அவனது பாடலின் முதல் பதிப்பு என்று குறிக்கலாம்.

பாரதி தானே 1908-இல் 'சுதேச கீதம்' என்ற சிறு தொகுப்பையும், 1909-இல் 'ஜன்ம பூமி' என்ற சிறு தொகுப்பையும் வெளியிட்டு மகிழ்ந்தான். அவன் வாழ் நாளில் மற்றைய அன்பர்களால் நான்கு தொகுப்புகள் வெளியிடப்பட்டன. பாரதி புகழுடம்பு எய்தியதற்கு அவன் மனைவியார் திருமதி செல்லம்மா அவர்கள் 'பாரதி ஆசிரமம்' என்ற ஒரு பதிப்பகத்தை அமைத்து, இரண்டு தொகுப்புகளை வெளியிட்டார். பாரதியின் இளவல் திரு சி. விசுவநாத ஐயர் பாரதி பிரசுராலயத்தை நிறுவி, ஏழு தொகுப்புகளை வெளியிட்டார். இது தொடக்கமாக 1908-முதல் பாரதியின் படைப்புகள் தனித் தனி நூல்களாக 15 பதிப்புகள் வெளியாயின. இவை யெல்லாம் மாணிக்கச் சிதறல்கள். இச்சிதறலில் ஒரு மாணிக்கம் 1914-இல் 'மாதா மணிவாசகம்' என்ற தலைப் பில் வெளிவந்தது. இது தென்னாப்பிரிக்காவில் வெளி யிடப்பட்டது என்பது ஒரு சிறப்புக்குரியது. இம்மாணிக் கச் சிதறல்களை ஒரு மாணிக்கப் பேழையாக ஆக்கிய நற்பணி 1953-இல் நிகழ்ந்தது. தமிழ் நாட்டரசு பாரதி பாடல்களை நாட்டுடைமையாக்கியது. பாடற் படைப்பு கள் அனைத்தையும் தொகுத்து முழுமைப் பதிப்பாக அரசே வெளியிட்டது. இதுதான் முதல் முழுமைப் பதிப்பு நாட்டுடைமையான பிறகு தனியார் பலரும் பல்வகைப் பதிப்புகளை வெளியிட்டுள்ளனர். 1957 - திரு வை. கோவிந்தன் அவர்கள் சக்தி வெளியீடாக 'மகாகவி பாரதி யார் கவிதைகள்' என்னும் தலைப்பில் மலிவுப் பதிப்பாக வெளியிட்டார். விலை உரு. 1-50. இது குறிப்பிடத்தக்க பதிப்பாகும். பாரதி நண்பர் பரலி சு. நெல்லையப்பரும்

திரு பெ. தூரன் அவர்களும் பாரதி அன்பர் திரு ரா. அ. பத்மநாபன் அவர்களும் தமிழர்களுக்குத் தந்த பதிப்புகள் குறிப்பிடத் தக்கவை. பாரதி அன்பர் திரு டி.வி.எசு. மணி யும் பாரதி பாடல்கள் தொகுப்பதையே தம் வாழ்நாள் பணியாகக் கொண்ட திரு சீனி. விசுவநாதனும் வானவில் பதிப்பகத்தின் வழியாகத் தந்த பதிப்பு குறிப்பிடத் தக்கது. தமிழ்ப் பல்கலைக் கழகப் பதிப்பாகும் இது. கால வாரியாகக் கவிதைகள் அமைக்கப்பட்ட பதிப்பு.

ஒரு கவிஞனோ அறிஞனோ தனது வாழ்வு வளர்ச்சி யில் பெரும் பட்டறிவுகளுக்கு ஏற்பவும், அடையும் தாக் கங்களுக்கு ஏற்பவும் கருத்து வளர்ச்சி பெறுகிறான். காலப்போக்கில் கவிஞன் தன் முன் உணர்வுக்கு வேறு பட்ட உணர்வுகளையும் மாறுபட்ட உணர்வுகளையும் கொள்கிறான். அவ்வவ் வுணர்வுகளுக்கு ஏற்பத் தன் படைப்புகளை வடிக்கிறான். இந்த வளர்ச்சி மாற்றத்தை அவன் காலவாரிக் கருத்து அடுக்கில்தான் காண முடியும். அவ்வாறு காண்பது ஆய்வாளர்க்கு ஒரு நெறி காட்டியாக வும் அறிஞர்க்கு ஒரு கொண்டுகாட்டியாகவும் பொதுமக் கட்கு ஓர் உணர்வு ஊட்டியாகவும் ஆகும். பாரதியின் பாடல்களைக் கால வரிசையில் காணும்போது அவன் புதுப்புதுப் பொலிவோடு தோற்றம் அளிக்கிறான். நாட்டு உணர்வில் முகிழ்த்தவன் ஆன்மீக உணர்வில் விரிந்து மொழியுணர்வில் மலர்ந்து சமுதாய உணர்வில் மணம் வீசுகிறான்.

பாரதி தனது ஆத்திசூடியின்படி 'புதியன விரும்பிக்' கால ஓட்டத்தில் தன்மான இயக்கக் கருத்துகளிலும் மின்ன லிடுகின்றான். 'நூலினைப் பகுத்துணர்' என்றதன்படி

பகுத்தறிவுப் பாதையிலும் பளிச்சிடுகின்றான். தொன்மைக்கு அஞ்சேல்' என்றதன்படி மறுமலர்ச்சியில் முத்திரையிடுகின்றான். "சாத்திரம் கண்டாய் சாதியின் உயிர்த்தலம்" -என்றதன்படி சமுதாயச் சீர்திருத்தத்தில்-சாத்திரம், வேதங்கள் பற்றிய புதுமைப் பார்வையில் வைரச் செங்கோலனாகின்றான். இவற்றையெல்லாம் நோக்கிய பாவேந்தர் பாரதிதாசனார்—,

"படரும் சாதிப் படைமருந்து
மண்டும் மதங்கள் அண்டா நெருப்பவன்" - என்றும்
"எழுத்தில் சிங்க ஏற்றின் குரலைப்
பாய்ச்சு கின்றான் பாரதிக் கவிஞன்"

-என்றும் பாடி புதிய அறம்பாட வந்த அறிஞனாக் கண்டார். இவ்வாறான கருத்து வளர்ச்சியில் பாரதியை ஆய்வதற்குக் காலவரிசைதான் பயன்படுகிறது. எனவே, காலவரிசைப்படி அமைந்த இப்பதிப்பு நூற்றுக்கு நூறு ஆய்வுப் பதிப்பாகிறது.

இவற்றிற்கெல்லாம் மணிமுடியாகத் தமிழ்ப் பல்கலைக் கழகப் பதிப்பு ஒளிபரப்பி வெளிவருகிறது. இப்பதிப்பின் வரலாறு பாரதி நூற்றாண்டு விழாவில் முதலமைச்சர் மாண்புமிகு எம். ஜி. இராமச்சந்திரன் அவர்கள் பாரதி நூல்களைத் தமிழக அரசு பதிப்பித்து வெளியிடும் என்ற அறிவிப்பில் பிறந்தது. தமிழ்நாட்டுப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் குழு அமைக்கப்பட்டது. இக்குழு பாரதி படைப்புகளை வெளியிடும் நற்பொறுப்பைத் தமிழ்ப் பல்கலைக் கழகத்திடம் வழங்கியது. அந்நாள் துணைவேந்தர் இப்பொறுப்பை ஏற்று, பாரதி அறிஞர்களை அழைத்துப் பேசியும், எழுதி உசாவியும் அடித்தளம்

அமைத்து, பதிப்புக்குழு ஒன்றை அமைத்தார்கள். அதனை நினைவுகூர்ந்து அன்னார்க்கு நன்றி கூறுகின்றேன். அந்நாள் பதிப்புத்துறை இயக்குநர் சிலம்பொலி சு. செல்லப்பன் பதிப்பு நிருவாக இயக்குநர் அவர்கள் செயற்படத் தொடங்கினார்கள்.

இந்நாள் மைய அரசின் உள்துறை இணை அமைச்சர் மாண்புமிகு ப. சிதம்பரம் அவர்கள் குழு உறுப்பினராக அமைந்து, சுதேசமித்திரன் நாளிதழின் நுண்படச் சுருளைப் பெறுவதற்காக முயன்றார்கள். திரு சீனி. விசுவநாதன் பாரதி தொடர்புடைய பல இடங்களுக்குச் சென்று பலரை அணுகித் தொகுப்புப் பணியாற்றினார். பதிப்புக்குழு உறுப்பினர்களாகிய திரு டி.வி.எசு. நாதன் அவர்களும் தஞ்சை பாரதி அன்பர் திரு டி. என். இராமச்சந்திரன் அவர்களும் கருத்துரைகளை நல்கியும் தொகுப்பிற்கு அவ்வப்போது தம் பங்கை அளித்தும் இயல்வன செய்தார்கள்.

தொகுப்பிற்கு வேண்டிய கருத்துகளையும் மூலப்படிகளையும் சார்புப் படிகளையும் பாரதியின் இளவல் மானாமதுரை திரு சி. விசுவநாத ஐயர், குளித்தலை இளமுருகுபொற்செல்வி, புதுக்கோட்டை வி. கிருட்டிணமூர்த்தி, கோட்டையூர் ரோஜா முத்தையா, பெங்களூர் பி. எசு. பாலசுப்பிரமணியம், சென்னை கே. ஆர். சச்சிதானந்தம் முதலிய அன்பர்களும் சென்னை ஆவணக் காப்பகம், அருங்காட்சியகம், தொல்பொருள் துறை, கல்கத்தா தேசிய நூலகம், புதுதில்லி தேசிய ஆவணக் காப்பகம், புதுதில்லி நேரு நினைவு நூலகம் முதலிய நிறுவனங்களும் வழங்கி உதவியமை கருதி நன்றி கூறுகின்றேன்.

தொகுக்கப்பட்டவற்றைக் காலவரிசைக்குச் செம்மைப் படுத்தி, சீர்ச் செம்மைகள் செய்து, குறிப்புரை, பின்னி ணைப்பு அமைப்புகள் முதலிய பதிப்பு அமைப்புகளைப் பேரா. ம. ரா. போ. குருசாமி அவர்கள் பதிப்பாசிரியராக இந்நூலை உருவாக்கினார். அவரது பதிப்பாசிரியர் முன்னுரையில் உள்ள விரிவான விளக்கங்கள் இஃது ஓர் ஆய்வுப் பதிப்பு என்பதை நிலைநாட்டும்.

இப்பதிப்புப் பணிகளையெல்லாம் முடுக்கிவிட்டுத் தமிழ்ப் புத்தாண்டு நாளில் வெளியிடப்படுவதற்கு அனைவகை ஊக்கத்தையும் வழங்கி, கருத்தார்ந்த முன்னு ரையும் வழங்கியுள்ள துணைவேந்தர் முனைவர் ச. அகத் தியலிங்கம் அவர்கள் பெருநன்றிக்குரியவர்கள் ஆவார்கள்.

முதலமைச்சர் மாண்புமிகு எம். ஜி. இராமச்சந்திரன் அவர்கள் 'பாரதி நூல்களை அரசு வெளியிடும்' என்று அறிவித்து இப்பணிக்கு வித்தூன்றியமைக்கும் பெருந்தக வுடன் வாழ்த்துரை வழங்கிச் சிறப்பித்தமைக்கும் தமிழ்ப் பல்கலைக்கழகம் பணிவார்ந்த நன்றியைப் படைக்கின்றது.

அணிந்துரைகள் வழங்கிச் சிறப்பித்த கல்வியமைச்சர் மாண்புமிகு சி. பொன்னையன் அவர்களுக்கும், சிலம்புச் செல்வர் ம. பொ. சி. அவர்களுக்கும் உளமார்ந்த நன்றி.

இந்நூலின் அட்டை ஓவியத்தை அழகுற அமைத்துத் தந்த ஓவியர் திரு தே. நெடுஞ்செழியன் அவர்களுக்கும் இந்நூலைக் குறுகிய காலத்தில் மிகச் செம்மையாக அச் சேற்றித் தந்த அண்ணாமலைநகர் சிவகாமி அச்சக உரிமையாளர் டாக்டர் கோ. இராஜசுந்தரம் அவர்களுக் கும் அச்சகப் பணியாளர்களுக்கும் என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இப்பதிப்பு அரசின் உதவிப் பத்திப்பாகத் தமிழ்ப் பல்கலைக் கழகத்தால் வெளியிடப்படுகிறது. பாரதி படைப்பு முழுவதையும் மூன்று தொகுதிகளாகப் பதிப்பிக்க உருவா மூன்று இலட்சம் வழங்க ஒப்புகை அளித்து உரு ஒன்றரை இலட்சத்தைத் தமிழ் நாட்டரசு முதல் தவணையாக வழங்கியுள்ளது. தமிழ் நாட்டரசிற்காகத் தமிழ்ப் பல்கலைக் கழகம் இப்பதிப்புப் பணியை ஒரு பாரதி தொண்டாக ஏற்று முதற் பகுதியை நிறைவேற்றியுள்ளது. தொடர்ந்து பாரதியின் கட்டுரைகள், பாரதியின் கதைகள் காலமுறைப்படி தொகுக்கப்பட்டுப் பதிப்பாக உள்ளன.

பாவேந்தர் பாரதிதாசனார்

"கூனர்களும் குவலயத்தை அளாவும் வண்ணம்
கொட்டிவைத்த கவிதை திசைஎட்டும் காணோம்!"

என்றபடி திசையெட்டும் நிகர் காணமுடியாது கொட்டி வைத்த கவிதைகளை ஓர் அழகு வடிப்பாக, ஆய்வுப் பதிப்பாகத் தமிழ் உலவும் நல்லுலகிற்குத் தமிழ்ப் பல்கலைக் கழகம் வழங்கி மகிழ்கின்றது. உலகளாவிய தமிழ் ஆய்வாளர்களும் அறிஞர்களும் பெருமக்களும் இப்பதிப்பை ஏற்றுப் பயன்கொள்ள வேண்டுகிறேன்.

தஞ்சாவூர்
தி.ஆ. 2018 - சித்திரை 1
14—4—1987

கோவை. இளஞ்சேரன்
துணை இயக்குநர், பதிப்புத் துறை
தமிழ்ப் பல்கலைக் கழகம்.

# பொருளடக்கம்



## பாரதி படைப்புகள்

**கண்ணன் பாட்டு**

## மேலும் சில



### இவையும்...

## பின்னிணைப்புகள்

# பொருள் அமைப்பு நிரல்

குறிப்பு: இப்பதிப்பில் பாடல்கள் இயன்றவரை கால நிரலில் அமைக்கப்பட்டுள்ளன. நுவல்பொருள் அடிப்படையில் பாடலைக் காண விரும்புவார்க்குக் கீழே தொடரும் பொருளமைப்பு நிரல் பயன்படும்.

எண்: பாடல் தலைப்பு வரிசை எண்.

I அரசியல்

(தேசியம், விடுதலை இயக்கம், அயல்நாட்டரசியல் போன்றவை)

## VI தமிழ், தமிழ்நாடு, தமிழ்இனம்

## VII தெய்வப் பாடல்கள்

## 2) வாழ்த்து முதலியன



## 3) காட்சியும் கருத்தும்

பின்குறிப்பு: இந்த வகைப்பாட்டின் அடிப்படையில் ஒரு பிரிவில் சுட்டப்பட்டுள்ள பாடல் பிறிதொரு பிரிவில் அடங்காது என்பதில்லை. எ-டு: பாரதமாதா திருப்பள்ளியெழுச்சி, மகாத்மா காந்தி பஞ்சகம் - இவை 'பிரபந்தம்' என்ற வகையிலும் அடங்கக்கூடியனவே.

இப்பதிப்பில் ஆளப்பட்டுள்ள சுருக்கக் குறியீட்டு விளக்கம்:

பா. ஆ. — பாரதி ஆச்ரமப் பதிப்பு

பா. பி. — பாரதி பிரசுராலயப் பதிப்பு

அர. — அரசாங்கப் பதிப்பு

# பாரதியார் வாழ்வியல் குறிப்புகள்

| | |
|---|---|
| *11—12—1882* | பிறப்பு. பிறப்பிடம்: எட்டயபுரம்<br>தந்தை: சின்னசாமி ஐயர்;<br>தாய்: இலட்சுமிஅம்மாள்.<br>பிள்ளைப் பெயர் — சுப்பிரமணியன்<br>செல்லப் பெயர் — சுப்பையா |
| *1887* | தாயார் இயற்கை எய்தினார். |
| *1889* | அகவை 7-இல் கவிதைப் பொழிவு. |
| *1893* | பாரதி பட்டம் பெறல். |
| *1894—1897* | திருநெல்வேலி இந்துக் கல்லூரியில் உயர் நிலைக் கல்வி — படிவம் 5 வரை. |
| *1897*—சூன் | 7 அகவையுள்ள செல்லம்மாவைத் திருமணம் கொள்ளல். |
| *1898*—சூன் | தந்தை இயற்கை எய்தினார். |
| *1898—1902* | வரை காசி வாழ்வு—அத்தை குப்பம்மாளிடம்.<br>அலகாபாத் பல்கலைக் கழகத்தில்<br>சமற்கிருதப் புகுமுகத்தேர்வு — வெற்றி. |
| *1902—1904* | எட்டயபுரம் வாழ்வு. |
| *1904* ஆகட்டு<br>நவம்பர் | மதுரை சேதுபதி உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியர் பணி. |
| *1904*—நவம்பர் | 'சுதேசமித்திரன்' நாளிதழ் உதவி ஆசிரியர்.<br>'சக்கரவர்த்தினி' திங்கள் இதழின்<br>பொறுப்பு ஆசிரியர். |
| *1906*—ஏப்ரல் | 'இந்தியா' கிழமை இதழ் தோற்றம்.<br>'பால பாரதா' ஆங்கில வார இதழின் பொறுப்பு ஆசிரியர். |

| | |
|---|---|
| 1907—திசம்பர் | சூரத் காங்கிரசில் பங்குபெறல். |
| 1908 | ஆங்கில அரசு கைது ஆணை; புதுச்சேரியில் அடைக்கலம். |
| 1910 | 'இந்தியா' நாளிதழ் புதுச்சேரிக்கு வெளியே வராதபடி தடை ஆணை. |
| 1918 | புதுவையை விட்டு வெளியேறல். நவம்பர் 20—இல் கடலூர்ப் பக்கம் கைது; உடன் விடுதலை. மனைவியின் ஊராகிய கடையம் செல்லல். |
| 1918 – 1920 | கடையம் வாழ்வு. |
| 1919—மார்ச்சு | சென்னைக்கு வருகை; சக்கரவர்த்தி இராசகோபாலாச்சாரியார் இல்லத்தில் அண்ணல் காந்தி அடிகளைக் காணல். |
| 1920—திசம்பர் | சென்னை சுதேசமித்திரன் நாளிதழில்மீண்டும் உதவி ஆசிரியர் பணி. |
| 1921—சூலை | சென்னை திருவல்லிக்கேணி கோயில் யானையால் தாக்கப்படுதல். |
| 1921—செப்தம்பர் | கடுமையான வயிற்றுக் கடுப்பு நோய். |
| 1921—செப்தம்பர் | (11 ஆம் நாள் இரவு)—12ஆம் நாள் யாமம்—1 – 30 மணி அளவில் புகழுடம்பு எய்துதல் அகவை 39. |

# 1. எட்டயபுர மன்னருக்கு விண்ணப்பம்

1. திருவளர் மருமத் தொருவனு மயனு
மும்பரு முலக முணரொணாப் பெருமையோ
னம்பனெட் டீச னளிர்பூம் பாதத்
தாமரைப் போதினைத் தன்னக நிறீஇக்
காமனா ருயர்த்த கவின்பெறு வெண்குடை 5
நேர்தரூஉம் பூந்த ணித்திலக் கவிகை
யார்வுறூஉம் பொன்னுல களாவிட நிறீஇ
யெண்ணெழு நாயிறு மெழுகடற் றீவினும்
பண்ணவ ருலகினும் பாதலப் புவியினு
மணிநெடுஞ் சக்கரத் தாணை நிறீஇச் 10
செஞ்சொற் பாவலர் சீர்மா றனென
வஞ்சிய மாற்றல ரடுங்கூற் றென்ன
வஞ்சியெ னல்லார் மாமத னென்ன
விரவலர் கன்னனே யென்றிட மற்றைப்
புரவலர் தன்மனிற் புண்ணிய னென்றிடப் 15
பார்மிசைத் தானே பேரிசை நிறீஇக்
காரொடு மயிலினங் கலந்திட நீண்மரஞ்
சீரொடு வளர்ந்த செழும்பொழி லிளசையி
னேரொடு பொலிந்த வெழின்மா ளிகையிற்
றெவ்வர் பணிந்திடச் சீரியர் வாழ்த்திட 20

---

*1897*

வெவ்வெத் தேயத் திறைஞருஞ் சூழ்தர
வரியணை மிசைத்தா னமரர்கோ னெனவிருந்
திருநலம் புரக்கு மெழிலோய்! பெருவரை
விறற்றோண் மகிப வெங்கடேசு ரெட்ட
மன்னர்த மன்னநீ மகிழ்வொடு காண்க 25
வின்னண மெளியே னெழுதிய விணப்பம்:
"வார்கடல் சூழ்ந்தவிப் பார்மிசை மொழிபல
அவையிற்றுட்,
பெருஞ்சிறப் பேற்றுப் பிறைச்சடைக் கடவுளு
மருந்திரு நூலொன் றருளப் பெறீஇ 30
யின்னமு தினுஞ்சுவை யெய்வுறீஇ யமைந்த
செந்தமிழ்த் திருமொழி சிறிதுமா தரிப்பவர்
இன்மையி னிங்கா ளினிதுகற் பவர்க்கு
நன்மை பயவாது நலிந்திட மற்றைப்
புன்மொழி பலவும் பொலிவுற லாயின, 35
உகதன் மத்தா னுலகினைப் பற்பல
வகையினர் புலைஞர் மாண்பினொ டாளலின்.
ஆதலின்,
ஐயநின் னருளே யருங்கதி யென்ன
வுய்ய விவண்வந் துற்றவென் றந்தையார் 40
என்னையும் புறமொழி கற்கவென் றியம்புவர்.
என்னையான் செய்குவ தின்றமிழ் கற்பினோ
பின்னை யொருவரும் பேணா ராதலிற்
கன்னயா னம்மொழி கற்கத் துணிந்தன்ன்.
எனினும், 45
கைப்பொரு ளற்றான் கற்ப தெவ்வகை?
பொருளா னன்றிக் கல்வியும் வரவில;
கல்வியா னன்றிப் பொருளும் வரவில.

முதற்கட் கல்வியே பயிறல் முறைமையா
மதற்குப் பொருளிலை யாதலி னடியேன் 50
வருந்தியே நின்பால் வந்த டைந்தனன்
பெருந்திரு வுடையைநின் பேரரு ளுடைமையான்
மாந்தர்ப் புரத்தல் வேந்தர்தந் திருவருட்
கிலக்கிய மாதலி னெளியேற் கிந்நா
ளரும்பொரு ளுதவிநீ யனைத்து மருள்வையால். 55
நின்னைக் கவியா னிகழ்த்துநன் னாபிற
மன்னர்பாற் சென்றே யிரக்க வருந்திடும்.
அன்னாய் நீயே யருங்கதி யெனவுரைத்
துன்னைவந் தடைந்தவ ருழல்வரோ துயர்க்கடல்?
என்னையிச் சிறுவ னியம்புவ திதனின்? 60
மன்னநின் னருளா னடியனை வாழ்வித்
துன்னரு ளானே யுய்ந்தோ னெனப்பிறர்
என்னைச் சாற்றலா விரும்புக ழிணையெற்
கீந்தரு ளுதிநீ யினிது வாழ்கவே!*

24-1-97

இங்ஙனம் ஊழியன்,
இளசைச் சுப்பிரமணியன்,
எட்டயபுரம்.

---

*கிடைத்தவற்றுள் இதுவே முதற்பாடல் என்று கொள்ளத்தகும். இப்பாடலை இன்றளவும் குடும்பச் செல்வமாகக் காத்துவருகிறவர், பாரதியாரின் இளவல் திரு. சி. விசுவநாத ஐயர். இதனைக் 'கலைமகள்' 1974 ஆகஸ்டு மாத இதழில் முதன்முதலாக வெளியிடுவித்தார் அவர். மிகவும் சிதைந்த நிலையிலிருந்த மூலப் பிரதியிலிருந்து படியெடுக்கப்பட்டது. மூலப் பிரதியில் தலைப்பு இல்லை.

'க்க', 'க்கு', 'த்த' - ஆகியவற்றைக் கூட்டு எழுத்தாக எழுதியிருக்கிறார் பாரதியார்.

— பதிப்பாசிரியர்

# 2. காந்திமதிநாத பிள்ளை

2. ஆண்டில் இளையவனென் றந்தோ, அகந்தையினால்
ஈண்டிங் கிகழ்ந்தென்னை ஏளனஞ்செய் – மாண்பற்ற
காரிருள்போ லுள்ளத்தான் காந்திமதி நாதனைப்
பாரதி சின்னப் பயல். 1

3. ஆண்டி லிளையவனென் றைய, அருமையினால்
ஈண்டின்றென் றன்னைநீ யேந்தினையால் – மாண்புற்ற
காரதுபோ லுள்ளத்தான் காந்திமதி நாதற்குப்
பாரதி சின்னப் பயல்.

---

*1895 – 98க்குள்*

*நீண்டகாலமாகப் பலர் முதற் பாடலின் ஈற்றடியை மட்டுமே அறிவர். பாரதியின் தம்பி பல்காலும் முயன்று பாடலின் முழு வடிவத்தையும் மட்டுமேயல்லாது, முதற்பாட்டை மாற்றியமைத்த பாடலையும் வெளியிட்டுள்ளார். 1981 டிசம்பர் 'கலைமகள்' இதழில் ''அகந்தைக்குப் பரிசு'' என்ற கட்டுரையில் காந்திமதிநாதபிள்ளை அவர்கள் பேரில் பாடிய பாடல்களைச் சுட்டிக் காட்டியுள்ளார். பாடல்கள் எழுந்த சூழலையும் அப்பெரியவர் தமது கட்டுரையில் சுருங்கச் சொல்லியுள்ளார். (பின்னிணைப்பில் காண்க.)*

*– பதிப்பாசிரியர்*

# 3. இளசை ஒருபாவொருப∴து

காப்பு

4. நித்தரெனும் தென்னிளசை நின்மலனார் தாம்பயந்த
அத்திமுகத் தெங்கோ னடியிணையே — சித்திதரும்
என்றமிழி லேது மிழுக்கிலா மேய∴து
நன்றாக வென்றருளு நன்கு. 1

நூல்

5. தேனிருந்த சோலைசூழ் தென்னிளசை நன்னகரின்
மானிருந்த கையன் மலரடியே — வானிற்
சுரர்தம னியன்மா றொழுங்காற் கிரீடத்
தரதனங்கள் சிந்து மகம். 2

6. அகலிடத்திற் கோர்திலக மாமென் னிளசைப்
பகவனெட் டீசன் பதமே — திகிரி
பொருந்துகரத் தானன்றோர் போத்திரியாய்த் தேடி
வருந்தியுமே காணாச்செல் வம். 3

7. செல்வ மிரண்டும் செழித்தோங்குந் தென்னிளசை
யில்வளரு மீச னெழிற்பதமே — வெல்வயிர

.......... ........................

*1898*
*பின்னிணைப்பில் இப்பாடல்களின் தலைக் கோளாறு பற்றிய குறிப்பு உள்ளது.*
*— பதிப்பாசிரியர்*

மேந்துகரத் தான்கரிய னெண்கணன்ற முள்ளத்துப்
போந்துவளர் கின்ற பொருள். 4

8. பொருளான ரீய வேற்போ ரிளசை
யருளான ரீச ரடியே — தெருள்சேர்
தமனா மறையவன்மேற் றன்பாச மிட்ட
சமனாவி வாங்கும்பா தம். 5

9. சங்கந் தவழ்கழனித் தண்ணிளசை நன்னகரி
லெங்கள் சிவனா ரெழிற்பதமே — துங்கமிகும்
வேத முடியின் மிசையே விளங்குறுநற்
சோதியென நெஞ்சே துணி. 6

10. துணிநிலவார் செஞ்சடையன் றொல்லிளசை யூரன்
மணிகண்டன் பாத மலரே — பிணிநரகில்
வீழச்செய் யாது விரும்பியவீங் தேயடியர்
வாழச்செய் கின்ற மருந்து. 7

11. மருளறக்கற் றோர்கண் மருவிளசை யூரில்
வருமிறைவன் பாத மலரே — திருவன்
விரைமலரா லிட்ட விழியாம் வியன்றா
மரைபூத்த செந்தா மரை. 8

12. தாமரையின் முத்தெங்குந் தான்சிதறுந் தண்ணிளசைக்
கோமானெட் டீசன்மலர் கொள்பதமே — நாமவேல்
வல்லரக்கன் கைலை வரையெடுத்த காலவனை
யல்லற் படவடர்த்த தாள். 9

13. ஆல விழியா ரவர்முலைநேர் தண்வரைசூழ்
கோல மணியிளசைக் கோன்பதமே — சீல

முனிவர் விடுத்த முயலகன்மீ தேறித்
தனிநடனஞ் செய்ததுவே தான். 10

14. தானே பரம்பொருளாந் தண்ணிளசை யெட்டீசன்
றேனேய் கமலமலர்ச் சீறடியே — யானேமுன்
செய்தவினை தீர்த்துச் சிவாநந்தம் பொங்கியரு
ளெய்திடவுஞ் செய்யு மெனை. 11

தனி

15. கன்னனெனு மெங்கள் கருணைவெங்க டேசுரெட்ட
மன்னவன் போற்றுசிவன் மாணடியே — யன்னவனு
மிந்நூலுந் தென்னா ரிளசையெனு நன்னகரு
மெந்நாளும் வாழவைக்கு மே. 12

## 4. தனிமை யிரக்கம்

16. குயிலனாய்! நின்னொடு குலவியின் கலவி
பயில்வதிற் கழித்த பன்னாள் நினைந்துபின்
இன்றெனக் கிடையே எண்ணில்யோ சனைப்படும்
குன்றமும் வனமும் கொழிதிரைப் புனலும்
மேவிடப் புரிந்த விதியையும் நினைந்தால் 5
பாவியேன் நெஞ்சம் பகீரெனல் அரிதோ?
[1]கலங்கரை விளக்கொரு காவதம் [2]கோடியா
மலங்குமோர் சிறிய மரக்கலம் போன்றேன்
[3]முடம்படு தினங்காள்! முன்னர்யான் அவளுடன்
உடம்பொடும் உயிரென உற்றுவாழ் நாட்களில் 10
[4]வளியெனப் பறந்தீர் மற்றியான் எனாது

---

*மதுரை "விவேகபாநு": ஜூலை 1904*

*சேற்றூர்க் கவிராயர் என்று சொல்லப்படும் திரு. மு. ரா. கந்தசாமிக் கவிராயர் அவர்களை ஆசிரியராகக் கொண்ட 'விவேகபாநு' இதழில்தான் இப்பாடல் இடம் பெற்றுள்ளது. அச்சில் வெளியான முதற்பாடல் என்ற சிறப்பும் இதற்குண்டு. ஆங்கிலக் கவிதை வடிவமான "ஸானெட்" வகையை இப்பாடல் சார்ந்தது என்பர்.* — பதிப்பாசிரியர்

*(பொருட்குறிப்பு):* 1 *கப்பல்கட்கு வெளிச்சங் காட்டுங் கடற்கரை விளக்கு. இதனை* Light-house *என்பர்.*

2 *கோடியாக*

3 *காலக்கழிவின் அருமையைக் குறிப்பித்தது.*

4 *காற்று.*

கிளியினைப் பிரிந்துழிக் கிரியெனக் கிடக்கும்
செயலையென் இயம்புவல் சிவனே
மயலையிற் றென்றெவர் வகுப்பரங் கவட்கே. 14

முற்றும்.

இங்ஙனம் எட்டயபுரம்
ஸி. சுப்பிரமணிய பாரதி

## 5. சாற்றுக்கவிகள்

17. செந்தண்மை பூண்டொழுகுந் திறத்தானே
யறவோர்தஞ் சிறப்பு வாய்ந்த
அந்தணரப் பிரமநிலை யறிகுநரே
பிராமணரென் றளவி னூற்கள்
சந்ததமுங் கூறியதைத் தேராமே
பிறப்பொன்றாற் றருக்கி நாமே,
எந்தநெறி யுடையர்பிற ரெனினுமவர்
சூத்திரரென் றிகழ்கின் றேமால். 1

18. மேழிகொடு நிலமுழுது வாழ்வதுவே
முதல்வாழ்க்கை; வேத மோதல்
வாழியதி னுஞ்சிறப்பாம். மற்றவிவை
யிரண்டனுக்கும் வல்லார் தம்மைப்
பாழிலிவர் கடைக்குலத்தா ரென்பதுபே
தைமையன்றோ? பார்க்குங் காலைக்

.........................................

*1904-5*

*இப்பாடல் மிகப் பிற்காலத்தில்தான் ஒருசில கவிதைத் தொகுப்பில் சேர்க்கப்பட்டது. பாடலின் தலைப்பையும் பல்வேறு விதமாகவும் குறித்துள்ளனர்.*

*பாரதியார் தம் பாடல்களுக்குச் சூட்டிய தலைப்புகளைக் கருத்தில் கொண்டு இப்பாடலுக்கும், 'வருண சிந்தாமணி' நூலுக்குப் பாடியளித்த 'சாற்றுக்கவிகள்' எனத் தலைப்பிடலாம்.*

*— பதிப்பாசிரியர்*

கூழிவரே பிறர்க்களிப்பர் நிலமுடைவை
சியரென்றே கொள்வா மன்னோ. 2

19. பன்னாளா வேளாளர் சூத்திரரென்
றெண்ணிவரும் பழம்பொய் தன்னை
ஒன்னார்பற் பலர்நாண "வருணசிந்தா
மணி" யென்னு முண்மை வாளாற்
சின்னாபின் னம்புரிந்து புவியினரைக்
கடப்படுத்தான் சென்னை வாழு
நன்னாவ லோர்பெருமான் கனகசபைப்
பிள்ளையெனு நாமத் தானே. 3

# 6. தாதாபாய் நவுரோஜி

## (கவிகள்)

20. முன்னாளி லிராமபிரான் கோதமனா
    தியபுதல்வர் முறையி னீன்று
பன்னாடு முடிவணங்கத் தலைமைநிறுத்
    தியவெமது பரத கண்ட
மின்னாளிங் கிந்நாளின் முதியோளாய்ப்
    பிறரெள்ள வீழ்ந்த காலை
யன்னாளைத் துயர்தவிர்ப்பான் முயல்வர்சில
    மக்களவ ரடிகள் சூழ்வாம். *1*

21. அவ்வறிஞ ரனைவோர்க்கு முதல்வனா
    மைந்தன்ற னன்னை கண்ணீ
ரெவ்வகையி னுந்துடைப்பே னின்றேலென்
    னுயிர்துடைப்பே னென்னப் போந்தி[1]
யெளவனநாள் முதற்கொடுதா னென்பதின்மேல்
    வயதுற்ற வின்று காறும்

.......................................

*சக்கரவர்த்தினி: செப்டம்பர் 1905.*

*நவுரோஜியின் எண்பதாவது நிறைவைப் பாராட்டி இப்பாடல் பாடப் பட்டதாகும்.*

*- பதிப்பாசிரியர்*

*''ஸ்வதேச கீதங்கள்'' என்ற தொகுதியில் இப்பாடல் காணப்படுகிறது.*

*(பா-டு): 1 உயிர்துடைப்பேன் என்னப் போந்து' - (அர.)*

செவ்வியுறத் தனதுடலம் பொருளாவி
யானுழைப்புத் தீர்த லில்லான்.

22. கல்வியைப்போ லறிவுமறி வினைப்போலக்
கருணையுமக் கருணை போலப்
பல்விதவூக் கங்கள்செயுந் திறனுமொரு
நிகரின்றிப் படைத்த வீரன்
வில்விறலாற் போர்செய்தல் பயனிலதா
மெனவதனை வெறுத்தே யுண்மைச்
சொல்விறலாற் போர்செய்வோன் பிறர்க்கன்றித்
தனக்குழையாத் துறவி யாவோன். 3

23. மாதாவாய் விட்டலற வதைச்சிறிது
மதியாதே வாணாள் போக்குந்
தீதாவார் வரினுமவர்க் கினியசொலி
நன்குணர்த்துஞ் செவ்வி யாளன்
வேதாவா யினுமவனுக் கஞ்சாமே
யுண்மைநெறி விரிப்போ னெங்கள்
தாதாவாய் விளங்குறுநற்[1] றாதாபாய்
நவுரோஜி சரணம் வாழ்க! 4

24. எண்பஃதாண் டிருந்தவவ னினிப்பல்லாண்
டிருந்தெம்மை யினிது காக்க!
பண்பல்ல நமக்கிழைப்போ ரறிவுதிருந்
துக!வெமது பரத நாட்டுப்[2]
பெண்பல்லார் வயிற்றினுமந் நவுரோஜி
போற்புதல்வர் பிறந்து வாழ்க!
விண்புல்லு மீன்களென வவனன்னா
ரெவ்வயினு மிகுக மன்னோ. 5

---

(பா-டு): 1 'தாதாவாய் விளங்குநல்' - (அர.)
2 'துக! எமது பாரத நாட்டுப்' - (அர.)

## 7. வங்கமே வாழிய

### (வங்க வாழ்த்துக் கவிகள்)

**25.** அங்க மேதளர் வெய்திய காலையும்
அங்கோர் புன்னரி தந்திடு மூனுணாச்
சிங்க மேயென வாழ்தல் சிறப்பெனாச்
செம்மை கூறிநந் தாய்ப்பெருந் தேயத்தைப்
பங்க மேபெறு மிந்நிலை நின்றுயர்
பண்டை மாண்பிடைக் கொண்டினி துய்த்திடும்
[1]வங்க மேயென வந்தனை வாழிநீ!
வங்க மேநனி வாழிய வாழிய! 1

**26.** கற்ப கத்தருப் போலெது கேட்பினும்
கடிது நல்கிடும் பாரத நாட்டினிற்
பொற்பு றப்பிறந் தேம்,நமக் கோர்விதப்
பொருளு மன்னிய ரீதல்பொ றுக்கிலேம்.
அற்பர் போலப் பிறர்கர நோக்கியா
மவனி வாழ்தலா காதென நன்கிதை

---

*"நேற்று மாலை நடந்த கடற்கரைப் பெருங் கூட்டத்தில் மிஸ்டர் சி. சுப்பிரமணிய பாரதியார் சொல்லியவை" என்ற முன் 'குறிப்புடன் சுதேச மித்திரன்: 15-9-1905 இதழில் வெளிவந்தது. 14-9-1905இல் சென்னைக் கடற்கரைப் பொதுக்கூட்டத்தில் பாடியது.*

*1. வங்கம் - கப்பல்*

வற்பு றுத்திடத் தோன்றிய தெய்வமே!
வங்க மேநனி வாழிய வாழிய! 2

27. கண்ணி னீர்துடைப் பாய்புன் னகைகொள்வாய்
கவினு றும்பர தப்பெருந் தேவியே
உண்ணி கழ்ந்திடுந் துன்பங் களைதியால்
உன்றன் மைந்தர்கள் மேனெறி யுற்றனர்
பெண்ணி னெஞ்சிற் கிதமென லாவது
பெற்ற பிள்ளைகள் பீடுறவே யன்றோ?
மண்ணி னீபுகழ் மேவிட வாழ்த்திய
வங்க மேநனி வாழிய வாழிய! 3

## வந்தே மாதரம்

### ஜாதீய கீதம்

*(பங்கிம் சந்திர சட்டோபாத்தியாயர் வங்காளியில் இயற்றியது)*

ஸுஜலாம், ஸுபலாம், மலயஜ சீதளாம்
ஸஸ்ய ஸ்யாமளாம் மாதரம் (வந்தே)

சுப்ர ஜ்யோத்ஸ்நா புளகித யாமினீம்
புல்ல குஸுமித த்ரும தள சோபினீம்
ஸுஹாஸினீம், ஸுமதுர பாஷிணீம்
ஸுகதாம், வரதாம், மாதரம் (வந்தே)

த்ரிம்சத் கோடி[1] கண்ட கலகல நிநாத கராலே
த்வித்ரிம்சத் கோடி[2] புஜைர் த்ருத கரகர வாலே
கேபலே, மாதுமி அபலே
பஹுபல தாரிணீம், நமாமி தாரிணீம்
ரிபுதல வாரிணீம், மாதரம் (வந்தே)

---

*இதன் மொழிபெயர்ப்புப் பாடலை "ஜன்மபூமி" நூலில் வெளியிட்டபோது, "ஜாதீயத் திருப்பாடல் - வங்கபாஷையில் பங்கிம்சந்திரர் எழுதிய மூலம்" - என்று தலைப்பிட்டுள்ளார், பாரதியார்.*

*— பதிப்பாசிரியர்*

*(பா-டு): 1 ஸப்தகோடி (பா.பி., அர.)*
*2 த்விஸப்தகோடி (பா.பி., அர.)*

துமி வித்யா துமி தர்ம,
துமி ஹ்ருதி துமி மர்ம
த்வம்ஹி ப்ராணா: சரீரே
பாஹுதே துமிமா சக்தி
ஹ்ருதயே துமிமா பக்தி
தொமா ரேயி ப்ரதிமா கடி மந்திரே மந்திரே (வந்தே) 3

த்வம்ஹி துர்க்கா தசப்ரஹரண தாரிணீ
கமலா கமலதள விஹாரிணீ
வாணீ வித்யா தாயினீ, நமாமித்வாம். (வந்தே) 4

நமாமி, கமலாம், அமலாம் அதுலாம்
ஸுஜலாம், ஸுபலாம் மாதரம்
ச்யாமளாம், ஸரளாம், ஸுஸ்மிதாம் பூஷிதாம்
பரணீம், தரணீம், மாதரம். (வந்தே) 5

## 8. வந்தே மாதரம்[1]

## ஜாதீய கீதம்

*(பங்கிம் சந்திர சட்டோபாத்தியாயர் எழுதிய ஜகத் பிரசித்தி கொண்ட 'வந்தே மாதரம்' கீதத்தின் மொழிபெயர்ப்பு)*

**28.** இனியநீர்ப் பெருக்கினை, இன்கனி வளத்தினை,
தனிநறு மலயத் தண்காற் சிறப்பினை,
பைங்நிறப் பழனம் பரவிய வடிவினை. (வந்தே)

வெண்ணிலாக் கதிர்மகிழ் விரித்திடு மிரவினை!
மலர்மணிப் பூந்திகழ் மரன்பல செறிந்தனை! 5
குறுநகை யின்சொலார் குலவிய மாண்பினை!
நல்குவை யின்பம், வரம்பல நல்குவை! (வந்தே)

முப்பது கோடிவாய்[2] (நின்னிசை) முழங்கவும்
அறுபது கோடிதோ ளுயர்ந்துனக் காற்றவும்
"திறனிலாள்" என்றுனை யாவனே செப்புவன்! 10

---

1. 'வந்தே மாதரம்' பாடலின் முதல் மொழிபெயர்ப்பு இது. 'சக்கர வர்த்தினி' இதழில் 1905 நவம்பரில் வெளிவந்தது. மீண்டும் இரண்டாம் தடவை பாரதியார் மொழிபெயர்த்து 13-3-1909இல் தம் 'இந்தியா' இதழில் வெளியிட்டார்.

2. வங்க மொழியிலுள்ள மூலப் பாடலில் ஏழு கோடி என்றே உள்ளது; அன்றைய வங்காளத்தின் மக்கள் தொகை அது. பாரதியார் வங்கப்பாடலை மொழிபெயர்த்து 'ஜாதீய கீத' மாகப் பாடியபோது பாரதநாட்டின் ஜனந் தொகை முப்பது கோடி.

-பதிப்பாசிரியர்

அருந்திற லுடையாய், அருளினை போற்றி
பொருந்தலர் படைபுறத் தொழித்திடும் பொற்பினை
(வந்தே)

நீயே வித்தை, நீயே தருமம்,
நீயே யிதயம், நீயே மருமம்,
உடலகத் திருக்கு முயிருமன் னீயே! (வந்தே)

தடந்தோ ளகலாச் சத்திநீ யம்மே!
சித்தநீங் காதுறு பத்தியு நீயே.
ஆலயந் தோறு மணிபெற விளங்கும்
தெய்விக வடிவமுந் தேவியிங் குனதே! (வந்தே)

ஒருபது படைகொளு முமையவ ளீயே! 20
கமலமெல் லிதழ்களிற் களித்திடுங் கமலைநீ!
வித்தைநன் கருளும் வெண்மலர்த் தேவிநீ! (வந்தே)

போற்றி!வான் செல்வீ, புரையிலை நிகரிலை.
இனியநீர்ப் பெருக்கினை, இன்கனி வளத்தினை.
சாமள நிறத்தினை, சரளமாந் தகையினை. 25
இனியபுன் முறுவலாய்! இலங்குநல் லணியினை,
தரித்தெமைக் காப்பாய் தாயே, போற்றி! (வந்தே)

## 9. மேலோர் புகழ்

29. *மேலோர் புகழை விரிக்குஞ் சரிதையெலாம்
ஏனோர்க்கோ ருண்மை யுணர்த்துமஃ தென்னையேல்,
(ஊக்கத்தால்) யாமுமெம் வாழ்க்கை யுயர்வுடைய
தாக்கிட வல்லே மெனல்.

---

*சக்கரவர்த்தினி : டிசம்பர் 1905*

அமெரிக்கப் புலவர் பெருமானாம் லாங்ஃபெலோ என்பவர் எழுதிய பாடல் வரிகளைப் பாரதியார் மொழிபெயர்த்து, பொருத்தம் நோக்கிக் "கோபாலகிருஷ்ண கோகலே" கட்டுரையில் தந்துள்ளார்.

— பதிப்பாசிரியர்

* The lives of great men all remind us;.
We can make our lives sublime.

-Longfellow.

## 10. வேல்ஸ் இளவரசருக்குப் பரத கண்டத் தாய் நல்வரவு கூறுதல்[1]

(பாரத மாது தானே பணித்தன்று)

ஆசிரியப்பா

30. வருக செல்வ! வாழ்கமன் னீயே!
வடமேற் றிசைக்கண் மாப்பெருந் தொலையினோர்
பொற்சிறு தீவகப் புரவலன் பயந்த
நற்றவப் புதல்வ! நல்வர வுனதே.
மேதக நீயுநின் காதலங் கிளியும் 5
என்றனைக் காணுமா றித்தனை காதம்
வந்தனிர் வாழ்திரென் மனமகிழ்ந் ததுவே.
செல்வ, கேள்! என்னருஞ் சேய்களை நின்னுடை
முன்னோ ராட்சி தொடங்குறூஉ முன்னர்
நெஞ்செலாம் புண்ணாய் நின்றனன் யாஅன். 10
ஆயிர வருட மன்பிலா வந்நியர்
ஆட்சியின் விளைந்த அல்லல்க ளெண்ணில.
போனதை யெண்ணிப் புலம்பியிங் கென்பயன்?
மற்றுன் நாட்டினோர் வந்ததன் பின்னர்
அகத்தினிற் சிலபுண் ஆறுத லெய்தின. 15
போர்த்தொகை யடங்கியென் னேழைப் புத்திரர்

.......................................

சுதேசமித்திரன்: 29-1-1906

1 'வேல்ஸ் இளவரசருக்கு நல்வரவு' - (அர.)

அமைதிபெற் றுய்வ ராயினர். எனவே
பாரதி தேவி பழமைபோற் றிருவருள்
பொழிதர லுற்றனள். பொருள்செயற் குரிய
தொழிற்கணம் பலப்பல தோன்றின. பின்னும் 20
கொடுமதப் பாவிகள் குறும்பெலா மகன்றன.
யாற்றினிற் பெண்களை யெறிவதூஉம், இரதத்
துருளையிற் பாலரை உயிருடன் மாய்த்தலும்,
பெண்டிரைக் கணவர்தம் பிணத்துட னெரித்தலும்
எனப்பல தீமைக ளிறந்துபட் டனவால். 25
மேற்றிசை யிருளினை வெருட்டிய ஞான
ஒண்பெருங் கதிரின் ஓரிரு கிரணமென்
பாலரின் மீது படுதலுற் றனவே.
ஆயினு மென்னை? ஆயிரங் கோடி
தொல்லைகள் இன்னும் தொலைந்தன வில்லை. 30
நல்குர வாதி நவமாந் தொல்லைகள்
ஆயிர மெனைவந் தடைந்துள நுமரால்.
எனினுமிங் கிவையெலா மிறையவ னருளால்
நீங்குவ வன்றி நிலைப்பன வல்ல.
நோயெலாந் தவிர்ப்பான் நுமரே யெனக்கு 35
மருத்துவ ராக வந்தன ரென்பதூஉம்
பொய்யிலை. ஆதலிற் புகழ்பெறும் ஆங்கில
நாட்டின ரென்றும் நலமுற வாழ்கவே!
என்னருஞ் சேய்களு மிவருநட் பெய்தி
இருபான் மையர்க்கு மின்னலொன் றின்றி 40
ஒருவரை யொருவர் ஒறுத்திட லிலாது
செவ்விதின் வாழ்க! அச் சீர்மிகு சாதியின்
இறைவனா முந்தை இன்பொடு வாழ்க!
வாழ்கநீ! வாழ்கநின் மனமெனு மினிய
வேரிமென் மலர்வாழ் மேரிநல் லன்னம்! 45
மற்றென் சேய்கள் வாழிய! வாழிய!

## 11. மஹா மஹோபாத்தியாய சாமிநாதய்யர்

31. செம்பரிதி யொளிபெற்றான், பைந்நறவு
சுவைபெற்றுத் திகழ்ந்த தாங்கண்
உம்பரெலாம் இறவாமை பெற்றனரென்
றெவரேகொல் உவத்தல் செய்வார்?
கும்பமுனி யெனத்தோன்றும் சாமிநா
தப்புலவன் குறைவில் சீர்த்தி
பம்பலுறப் பெற்றனனேல் இதற்கென்கொல்
பேருவகை படைக்கின் றீரே? 1

32. அன்னியர்கள், தமிழ்ச்செவ்வி யறியாதார்
இன்றெம்மை ஆள்வோ ரேனும்
பன்னியசீர் மஹாமஹோ பாத்தியா[1]
யப்பதவி பரிவி னீந்து
பொன்னிலவு குடந்தைநகர்ச் சாமிநா
தன்றனக்குப் புகழ்செய் வாரேல்,

.........................................

*சக்கரவர்த்தினி: பிப்ரவரி - 1906*

*'மகாமகோபாத்தியாய வாழ்த்து' (பா. பி.)*
*'மகாமகோபாத்தியாயர்' – (அர.)*
*பாடல்கள் 'அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்' என்றும் குறிக்கப்பட்டுள.*

*- பதிப்பாசிரியர்*

*(பா-டு) : 1 'பன்னியசீர் மகாமகோ பாத்தியா' - (பா. பி., அர.)*

முன்னிவனப் பாண்டியர்நா ளிருந்திருப்பி
னிவன்பெருமை மொழிய லாமோ? 2

33. நிதியறியோம், இவ்வுலகத் தொருகோடி
யின்பவகை நித்தந் துய்க்கும்
கதியறியோம் என்றுமனம் வருந்தற்க
குடந்தைநகர்க் கலைஞர் கோவே!
பொதியமலைப் பிறந்தமொழி வாழ்வறியும்
காலமெலாம் புலவோர் வாயிற்
றுதியறிவாய் அவர்நெஞ்சின் வாழ்த்தறிவாய்
இறப்பின்றித் துலங்கு வாயே. 3

## 12. வந்தே மாதரம்

**34.** ஆரிய மென்ற பெரும்பெயர் கொண்டவெ
மன்னையின் மீதுதிகழ்
அன்பெனு மென்கொடி வாடிய காலை
யதற்குயிர் தந்திடுவான்
மாரியெ னும்படி வந்து சிறந்தது
வந்தே மாதரமே.
மானுயர் பாரத தேவியின் மந்திரம்
வந்தே மாதரமே.
வீரிய ஞான மரும்புகழ் மங்கிட
மேவிந லாரியரை
மிஞ்சி வளைந்திடு புன்மையி ருட்கணம்
வீவுற வங்கமகா
வாரிதி மீதி லெழுந்த இளங்கதிர்
வந்தே மாதரமே.
வாழிந லாரிய தேவியின் மந்திரம்
வந்தே மாதரமே.

**35.** காரடர் பொன்முடி வானி மயந்தரு
கங்கை வரம்பினிலும்

........................................

*சக்கரவர்த்தினி: பிப்ரவரி - 1906.*

*இதே பாடல் 24-2-1906 'சுதேசமித்திரன்' இதழிலும் வெளிவந்துள்ளது.*

கன்னியை[1] வந்தொரு தென்றிசை யார்கலி
காதல்செ யாயிடையும்
வீரர்கள் மிஞ்சி விளங்கு புனாமுதல்
வேறுள வூர்களிலும்
விஞ்சை யெனும்படி யன்புடன் யாரும்
வியந்திடு மந்திரமும்,
பாரத தேச விரோதிகள் நெஞ்சு
பதைத்திடு மந்திரமும்,
பாதக ரோதினு மேதக வுற்றிடு
பண்புயர் மந்திரமும்,
வார முறுஞ்சுவை யின்னற வுண்கனி
வான மருந்தெனவே
மாணுயர் பாரத தேவி விரும்பிடும்
வந்தே மாதரமே. 2

1. கன்னி - கன்னியாகுமரி

# 13. என்னே கொடுமை!

*பூர்வ காலத்தில் அர்ஜுனாதிகள் செய்ததாகப் புராணங் களிலே கூறப்படும் அம்புத் தொழில் முறைகளைப் பின்பற்றி இரண்டு ரஜபுத்திரர்கள் செய்த அற்புதமான துப்பாக்கி வித்தை களை நோக்கும்போது உள்ளத்திலெழுந்த சில எண்ணங்கள்.*

**36.** மல்லார் திண்டோட் பாஞ்சாலன்
மகள்பொற் கரத்தின் மாலுற்ற
வில்லால் விஜயன் அன்றிழைத்த
விந்தைத் தொழிலை மறந்திலிரால்[1]
பொல்லா விதியால் நீவிரவன்
போர்முன் னிழைத்த பெருந்தொழில்கள்
எல்லா மறந்தீ ரெம்மவர்காள்
என்னே கொடுமை யீங்கிதுவே!

**37.** வீமன் திறலு மவற்கிளைய
விஜயன் திறலும் விளங்கிநின்ற
சேம மணிப்பூந் தடநாட்டில்
சிறிய புழுக்கள் தோன்றிவெறுங்
காம நுகர்தல் இரந்துண்டல்
கடையாம் வாழ்க்கை வாழ்ந்துபினர்
ஈமம் புகுத லிவைபுரிவார்
என்னே கொடுமை யீங்கிதுவே 2

---

*சுதேசமித்திரன்: 4-4-1906*

1 *'மறந்தவராய்ப்' என்றிருத்தல் கூடுமோ?*

*- பதிப்பாசிரியர்*

# 14. எனது தாய்நாட்டின் முன்னாட் பெருமையும் இந்நாட் சிறுமையும்

**கண்ணிகள்**

38. புன்னகையு மின்னிசையு மெங்கொளித்துப் போயினவோ
இன்னலொடு கண்ணீ ரிருப்பாகி விட்டனவே! 1

39. ஆணெலாம் பெண்ணாய் அரிவையரெ லாம்விலங்காய்
மாணெலாம் பாழாகி மங்கிவிட்ட திந்நாடே! 2

40. ஆரியர்கள் வாழ்ந்துவரும் அற்புதநா டென்பதுபோய்ப்
பூரியர்கள் வாழும் புலைத்தேச மாயினதே! 3

41. வீமாதி வீரர் விளிந்தெங்கு[1] போயினரோ!
ஏமாறி நிற்கு மிழிஞர்களிங் குள்ளாரே! 4

42. வேத வுபநிடத மெய்ந்நூல்க ளெல்லாம்போய்ப்
பேதைக் கதைகள் பிதற்றுவரிந் நாட்டினிலே! 5

43. ஆதி மறைக்கீதம் அரிவையர்கள் சொன்னதுபோய்
வீதி பெருக்கும் விலையடிமை யாயினரே! 6

---

*சுதேசமித்திரன்: 11-4-1906.*

*1 'விளிந்தெங்குப்' என்றிருத்தல் வேண்டும்*

*- பதிப்பாசிரியர்*

44. செந்தேனும் பாலும் தெவிட்டிநின்ற நாட்டினிலே
வந்தேதீப் பஞ்ச மரபாகி விட்டதுவே! 7

45. மாமுனிவர் தோன்றி மணமுயர்ந்த நாட்டினிலே
காமுகரும் பொய்யடிமைக் கள்வர்களும் சூழ்ந்தனரே! 8

46. பொன்னு மணியுமிகப் பொங்கிநின்ற விந்நாட்டில்
அன்னமின்றி நாளு மழிவார்க ளெத்தனைபேர்?[1] 9

---

1 'இன்னும் வரும்' என்ற குறிப்புடன் வெளியாகியுள்ளது. ஆனால், தொடரவில்லை.

# 15. அபேதாநந்த ஸ்வாமிகளின் மீது ஸ்தோத்திரக் கவிகள்

47. சுருதியு மரிய உபநிட தத்தின்
தொகுதியும் பழுதற வுணர்ந்தோன்
கருதிடற் கரிய பிரமநன் னிலையைக்
கண்டுபே ரொளியிடைக் களித்தோன்
அரிதினிற் காணு மியல்பொடு புவியி
னப்புறத் திருந்துநண் பகலிற்
பரிதியி னொளியும் சென்றிடா நாட்டில்[1]
மெய்யொளி பரப்பிடச் சென்றோன். 1

வேறு

48. ஒன்றேமெய்ப் பொருளாகு முயிர்களெலா
மதன்வடிவா மோருங் காலை

---

*இந்தியா: 4-8-1906*

*1. அமெரிக்காக் கண்டம். நமது கண்டத்தில் பகலா யிருக்கும்போது அங்கே இரவாக இருக்கும் தன்மையுடையது. (பாரதியார் குறிப்பு)*

*இப்பாடலைப் பாரதியார் 'ஓர் வேதாந்தி' என்ற புனைபெயரைச் சூடிக் கொண்டு எழுதியுள்ளார். இப் பாடல் 'ஜன்மபூமி' நூலுள் இடம் பெற்றுள்ளது.*

*சுவாமி அபேதாநந்தரைப் பற்றிப் பாரதியார் 21-7-1906 ஆம் தேதி யிட்ட "இந்தியா" இதழில் கட்டுரையொன்றும் எழுதியுள்ளார்.*

*அரசாங்க வெளியீட்டில் இப்பாடலின் தலைப்பு 'அபேதாநந்தா' என்று மாற்றம் செய்யப்பெற் றுள்ளது.*

*— பதிப்பாசிரியர்*

என்றேவ னுன்றேவ னென்றுலகர்
பகைப்பதெலா மிழிவா மென்று
நன்றேயிங் கறிவுறுத்தும் பரமகுரு
ஞானமெனும் பயிரை நச்சித்
தின்றேபா ழாக்கிடுமைம் புலன்களெனும்
விலங்கினத்தைச் செகுத்த வீரன். 2

வேறு

49. வானந் தம்புகழ் மேவி விளங்கிய
மாசி லாதி குரவனச் சங்கரன்
ஞானந் தங்குமிந் நாட்டினைப் பின்னரு
நண்ணி னானெனத் தேசுறு மவ்விவே
கானந் தப்பெருஞ் சோதி மறைந்தபின்
அவனி ழைத்த பெருந்தொழி லாற்றியே
ஊனந் தங்கிய மானிடர் தீதெலா
மொழிக்கு மாறு பிறந்த பெருந்தவன். 3

வேறு

50. தூயஅபே தாநந்த னெனும்பெயர்கொண்
டொளிர்தருமிச் சுத்த ஞானி
நேயமுட னிங்ஙகரிற் றிருப்பாதஞ்
சார்த்தியரு ணெஞ்சிற்[1] கொண்டு
மாயமெலா நீங்கியினி தெம்மவர்நன்
னெறிசாரும் வண்ணம் ஞானந்
தோயநனி பொழிந்திடுமோர் முகில்போன்றான்
இவன்பதங்கள் துதிக்கின் றாமே.[2] 4

---

(பா-டு): 1. 'சாத்தியருள் நெஞ்சிற்' - (பா.பி., அர.)
2. 'இவன் பதங்கள் துதிக்கின்றோமே'. - (பா.பி., அர.)

## 16. யான்

அருளா லெவையும் பார்என்றான் – அதை
அறியாதே சுட்டியென் அறிவாலே பார்த்தேன்
இருளான பொருள்கண்ட தல்லால் – கண்ட
என்னையுங் கண்டிலே னென்னடி தோழி!

– தாயுமானவர்

51. ஆயிரங் கோடி அறிஞர்கள் பற்பல
ஆயிர யுகங்க ளாராய்ந் தறிகிலா
'யான்'உடை யியற்கை யானோ அறிவன்!
மீனுணர்ந் திடுங்கொல் வியன்கடற் பெருமை?
அருள்வழிக் காண்கென் றருளினர் பெரியோர்; 5
மருள்வழி யல்லான் மற்றொன் றுணர்கிலேன்!
அகிலமும் 'யான்'என ஆன்றோ ரிசைப்பர்.
மகிதலத் திருளின் மண்டிய மனத்தேன்
யானதை யொரோவழிக் கண்டுளேன்; எனினும்
மானத ஒளியது மங்குமோர் கணத்தே. 10
யானெனும் பொருள்தான் என்னைகொல்? அதனையிவ்
வூனெனக் கொள்வ ருயிரிலார் சிலரே.
பிரமமே[1] யானெனப் பேசுவர் பேசுக!
பிரமமே[2] யானெனப் பேசினர் பெரியோர்.

---

*சுதேசமித்திரன்: 17-9-1906*

1 ப்ரம்மம் அல்லது ப்ரமை. 'தானெ'ன்னும் உணர்ச்சியே தப்புணர்ச்சி.
2 ப்ரம்மம் அல்லது முதற்பொருள்.

## 17. சந்திரிகை

52. யாணர்க்[1] குறையுளா மிந்துநா டதனிற்
காணற் கினிய காட்சிகள் பலவினு
மாணப் பெரிய வனப்பமைந் தின்கவி
வாணர்க் கமுதா வயங்கிடும் பொருளிதென்
றூணப் புலவோ[2] னுரைத்துளன் முன்னாள் 5
அஃதுதான்:
கருமையிற் படர்ந்த வானமாங் கடலிடை
ஒருமையிற் றிகழு மொண்மதித் தீவினின்
றெல்லாத் திசையினு மெழில்பெற வூற்றுஞ்
சொல்லா வினிமைகொள் சோதியென் றோதினன். 10
ஓர்முறை:
கடற்புற மணன்மிசைத் தனியே கண்ணயர்ந்
திடைப்படு மிரவி லினிதுகண் விழித்துயான்
வானக நோக்கினேன் மற்றதன் மாண்பினை
யூனமா நாவினி லுரைத்தலும் படுமோ 15
நினைவருந் தெய்விகக் கனவிடைக் குளித்தேன் வாழிமதி

---

*சுதேசமித்திரன்: 25-9-1906*

1 யாணர் - அழகு.

2 ஊணப்புலவன் ஆங்கிலப் புலவன்.

# 18. ரவிவர்மாமீது செய்யுள்[1]

53. சந்திர னொளியை யீசன்
        சமைத்தது பருக வென்றே
    வந்திடு சாத கப்புள்
        வகுத்தனன்; அமுதுண் டாக்கிப்
    பந்தியிற் பருக வென்றே
        படைத்தன னமரர் தம்மை;
    இந்திரன் மாண்புக் கென்ன
        இயற்றினன் வெளிய யானை. 1

54. மலரினில் நீல வானில்
        மாதரார் முகத்தில் எல்லாம்
    இலகிய அழகை யீசன்
        இயற்றினான், சீர்த்தி யிந்த
    வுலகினி லெங்கும் வீசி
        யோங்கிய இரவி வர்மன்
    அலகிலா அறிவுக் கண்ணா
        லனைத்தையு நுகரு மாறே 2

.......................................

*இந்தியா: 6-10-1906*

*இப்பாடல் 'ஜன்மபூமி' நூலில் இடம் பெற்றுள்ளது. நூலுக்காகத் தரப் பெற்ற தலைப்பு "(ஓவியர் மணி) - ஸ்ரீ ரவிவர்மா" என்பதாகும்.*

*- பதிப்பாசிரியர்*

*1 "ஓவியர்மணி இரவிவர்மா" - (அர.)*

55. மன்னர்மா ளிகையி லேழை
மக்களின் குடிலி லெல்லாம்
உன்னருந் தேசு வீசி
யுளத்தினைக் களிக்கச் செய்வான்
நன்னரோ வியங்கள் தீட்டி
நல்கிய பெருமான் இந்நாட்
பொன்னணி யுலகு சென்றான்
புவிப்புகழ் போது மென்பான். 3

56. அரம்பையூர் வசிபோ லுள்ள
அமரமெல் லியலார் செவ்வி
திரம்பட[1] வகுத்த வெம்மான்!
செய்தொழி லொப்பு நோக்க
விரும்பியே கொல்லா மின்று
விண்ணுல கடைந்து விட்டாய்?
அரம்பையர் நின்கைச் செய்கைக்
கழிதலங் கறிவை திண்ணம். 4

57. காலவான் போக்கி லென்றுங்
கழிகிலாப் பெருமை கொண்ட
கோலவான் றொழில்கள் செய்து
குலவிய பெரியோர் தாமும்
சீலவாழ் வகற்றி யோர்நாட்
செத்திட லுறுதி யாயின்
ஞாலவாழ் வினது மாய
நவின்றிடற் கரிய தன்றோ? 5

---

(பா-டு): 1 'திறம்பட' – (அர.)

## 19. சிவாஜி தனது சைநியத்தாருக்குக் கூறியது

58. ஜயஜய பவானி! ஜயஜய பாரதம்!
ஜயஜய மாதா! ஜயஜய துர்க்கா!
வந்தே மாதரம், வந்தே மாதரம்!
சேனைத் தலைவர்காள்! சிறந்தமந் திரிகாள்!
யானைத் தலைவரு மருந்திறல் வீரர்காள்! 5
அதிரத மன்னர்காள்! துரகதத் ததிபர்காள்![1]
எதிரிகள் துணுக்குற இடித்திடு பதாதிகாள்!
வேலெறி படைகாள்! சூலெறி மறவர்காள்!
காலன துருக்கொளுங்[2] கணைதுரந் திடுவீர்!
மற்றுமா யிரவிதம் பற்றலர் தம்மைச் 10
செற்றிடுந் திறனுடைத் தீரரத் தினங்காள்![3]
யாவிரும் வாழிய, யாவிரும் வாழிய!
தேவிநுந் தமக்கெலாந் திருவருள் புரிக!
மாற்றலர் தம்புலை நாற்றமே யறியா
[illegible]றல்கொண் டிருந்ததிவ் வரும்புகழ் நாடு. 15
வேதநூல் பழிக்கும் வெளித்திசை மிலேச்சர்
பாதமும் பொறுப்பளோ பாரத தேவி?
வீரரு மவரிசை விரித்திடு புலவரும்

---

*இந்தியா: 17–11–1906; 25–11–1906; 1–12–1906; 8–12–1906*
*(பா-டு): 1 அதிரத மன்னர்காள்! துரகத் ததிபர்கள் (பா.பி., அர.)*
*2 கால னுருக்கொளும் – (பா. பி., அர.)*
*3 செற்றிடுந் திறனுடைத் தீரரத் தினங்கள்காள்! – (பா.பி.)*

பாரெலாம் பெரும்புகழ் பரப்பிய நாடு.
தர்மமே யுருவமாத் தழைத்தபே ரரசரும் 20
நிர்மல முனிவரு நிறைந்தநன் னாடு.
வீரரைப் பெறாத மேன்மைதீர் மங்கையை
யூரவர் மலடியென் றுரைத்திடு நாடு.
பாரத பூமி[1] பழம்பெரும் பூமி.
நீரதன் புதல்வரிந் நினைவகற் றாதிர்![2] 25
*பாரத நாடு பார்க்கெலாந் திலகம்;
*நீரதன் புதல்வரிந் நினைவகற் றாதிர்!
பாரத நாடு பார்க்கெலாந் தெய்வமாம்;
நீரதன் புதல்வரிந் நினைவகற் றாதிர்.
வானக முட்டு மிமயமால் வரையும் 30
ஏனைய திசைகளி லிருந்திரைக் கடலுங்
காத்திடு நாடு கங்கையுஞ் சிந்துவும்
தூத்திரை யமுனையுஞ் சுனைகளும் புனல்களும்
இன்னறும் பொழில்களும்[3] இணையிலா வளங்களும்
உன்னத மலைகளு மொளிர்தரு நாடு. 35
பைந்நிறப் பழனம் பசியிலா தளிக்க
மைந்நிற முகில்கள் வழங்குபொன் னாடு.
தேவர்கள் வாழ்விடந் திறலுயர் முனிவர்
ஆவலோ டடையு[4] மரும்புகழ் நாடு.
ஊனமொன் றறியா ஞான பூமி[5] 40
வானவர் விழையு மாட்சியார் தேயம்.
பாரத நாட்டிசை பகரயான் வல்லனோ?

......................................

(பா-டு): 1 'பாரதப்பூமி' - (பா.பி)
2 'நீரதன் புதல்வரிந் நினைவகற் றாதீர்' - (பா.பி., அர.)
3 'இன்னறும் பொழில்களும்' - (பா.பி., அர.)
4 'ஆவலோ டடையும்' - (பா.பி., அர.)
5 'ஊனமொன் றறியா ஞானமெய்ப் பூமி' - (பா. பி., அர.)

*இக்குறியிட்ட வரிகள் சில பதிப்புகளில் விடுபட்டுள்ளன.

நீரதன் புதல்வரிந் நினைவகற் றாதீர்.[1]
தாய்த்திரு நாட்டைத் தறுகண் மிலேச்சர்,
பேய்த்தகை கொண்டோர், பெருமையும் வண்மையும்[2] 45
ஞானமு மறியா நவைபடு துருக்கர்,[3]
வானக மடக்க* வந்திடு மரக்கர்போ
லிந்நாட் படைகொணர்ந் தின்னல்செய் கின்றார்.
ஆலய மழித்தலு மருமறை பழித்தலும்
[4]பாலரை விருத்தரைப் பசுக்களை யொழித்தலும் 50
மாதர்கற் பழித்தலும் மறையவர் வேள்விக்
கேதமே சூழ்வது மியற்றிநிற் கின்றார்.
சாத்திரத் தொகுதியைத் தழல்படுக் கின்றார்.[5]
கோத்திர மங்கையர் குலங்கெடுக் கின்றார்.
எண்ணில, துணைவர்காள் எமக்கிவர் செயுந்துயர். 55
கண்ணிய மறுத்தனர், ஆண்மையுங் கடிந்தனர்.
பொருளினைச் சிதைத்தனர், மருளினை விதைத்தனர்,
திண்மையை யழித்துப் பெண்மையிங் களித்தனர்.
பாரதப் பெரும்பெயர் பழிப்பெய ராக்கினர்.
சூரர்தம் மக்களைத் தொழும்பராப் புரிந்தனர்.[6] 60
வீரிய மழிந்து மேன்மையு மொழிந்துநம்
ஆரியர் புலையர்க் கடிமைக ளாயினர்.
மற்றிதைப் பொறுத்து வாழ்வதோ வாழ்க்கை?

---

*'வானக மடங்க' என்றிருத்தல் சிறப்பு. வானகம் அடங்க என்பது ஆகாயம் முழுவதும் என்னும் பொருளது

- பதிப்பாசிரியர்

(பா-டு): 1 'நீரதன் புதல்வரிந் நினைவகற் றாதீர்' - (பா.பி., அர.)
2 'பேய்த்தகை கொண்டோர், பெருமையும் வன்மையும்' - (பா.பி.)
3 'ஞானமு மறியா நவைபுரி பகைவர்' (பா.பி., அர.)
4 இவ்வரி பாரதி பிரசுராலயப் பதிப்பில் விடுபட்டுள்ளது.
5 சாத்திரத் தொகுதியைத் தாழ்த்திவைக் கின்றார் - (பா.பி)
சாத்திரத் தொகுதியைத் தாழ்த்துவைக் கின்றார் (அர.)
6 சூரர்தம் மக்களைத் தொழும்பராய்ப் - (பா.பி., அர.)

வெற்றிகொள் புலையர்தாள் வீழ்ந்துகொல் வாழ்வீர்?
மொக்குள்தான் தோன்றி முடிவது போல 65
மக்களாய்[1] பிறந்தோர் மடிவது திண்ணம்.
தாய்த்திரு நாட்டைத் தகர்த்திடு மிலேச்சரை
மாய்த்திட விரும்பான்[2] வாழ்வுமோர் வாழ்வுகொல்?
மானமொன் றிலாது மாற்றலர் தொழும்பரா
யீனமுற் றிருக்க எவன்கொலோ விரும்புவன்? 70
தாய்பிறன் கைப்படச் சகிப்பவ னாகி
நாயென வாழ்வோ னமரிலிங் குளனோ?
பிச்சைவாழ் வுகந்து பிறருடை யாட்சியி
லச்சமுற் றிருப்போ னாரிய னல்லன்.
புன்புலால் யாக்கையைப் போற்றியே தாய்நாட் 75
டன்பிலா திருப்போ னாரிய னல்லன்.
மாட்சிதீர் மிலேச்சர் மனப்படி யாளும்
ஆட்சியி லடங்குவோ னாரிய னல்லன்.*
ஆரியத் தன்மை யற்றிடுஞ் சிறியர்
யாரிவ ருளரவர் யாண்டெனு மொழிக[3]. 80
படைமுகத் திறந்து பதம்பெற விரும்பாக்
கடைபடு மாக்களென் கண்முனில் லாதிர்.[4]
சோதரர் தம்மைத் துருக்கராண் டழிப்ப[5]
மாதரார் நலத்தின் மகிழ்பவன் மகிழ்க!
நாடெலாம் பிறர்வச நண்ணுத லினையான், 85
வீடுசென் றொளிக்க விரும்புவோன் விரும்புக!
தேசமே நலிவொடு தேய்ந்திட, மக்களின்*

..........................................

*இவ்வரிகள் பாரதி பிரசுராலயப் பதிப்பில் விடுபட்டுள்ளன.

பா-டு): 1 'மக்களாய்ப்' - (பா.பி., அர.)
2 'மாய்த்திட விரும்பார்' (பா.பி.)
3 'யாரிவ ணுளரவர் யாண்டேனு மொழிக' - (பா.பி., அர.)
4 'கடைபடு மாக்களென் கண்முனில் லாதீர்' - (பா.பி., அர.)
5 'சோதரர் தம்மைத் துரோகிக ளழிப்ப' - (பா.பி., அர.)

பாசமே பெரிதாப்[1] பார்ப்பவன் செல்க!
நாட்டுளார் பசியினா லலிந்திடத் தன்வயி
றூட்டுதல் பெரிதென உள்ளுவோன்[2] செல்க! 90
ஆணுருக் கொண்ட பெண்களு மலிகளும்
வீணிலிங் கிருந்தெனை வெறுத்திடல் விரும்பேன்.
ஆரிய ரிருமின்! ஆண்களிங் கிருமின்!
வீரிய மிகுந்த மேன்மையோ ரிருமின்!
மானமே பெரிதென மதிப்பவ ரிருமின்! 95
ஈனமே பொறாத வியல்பின ரிருமின்!
தாய்நாட் டன்பறாத் தனயரிங்[3] கிருமின்!
மாய்நாட் பெருமையின் மாய்பவ ரிருமின்!
புலையர்தந் தொழும்பைப் பொறுக்கிலா ரிருமின்!
கலையறு மிலேச்சரைக் கடிபவ ரிருமின்! 100
ஊரவர் துயரினெஞ் சுருகுவோ ரிருமின்![4]
சோரநெஞ் சில்லாத்[5] தூயவ ரிருமின்!
தேவிதாள் பணியுந் தீரரிங் கிருமின்!
பாவியர் குருதியைப் பருகுவா ரிருமின்!
உடலினைப் போற்றா உத்தம ருதவுமின்[6] 105
கடல்மடுப் பினுமனங் கலங்கல ருதவுமின்!
வம்மினோ துணைவீர், மருட்சிகொள் ளாதிர்![7]
நம்மினோ ராற்றலை நாழிகைப் பொழுதெனும்
புல்லிய மாற்றலர் பொறுக்கவல் லார்கொல்?
மெல்லிய திருவடி வீறுடைத் தேவியின் 110

---

(பா—டு): 1 'பாசமே பெரிதெனப்' - (பா.பி., அர.)
2 'றூட்டுதல் பெரிதென உன்னுவோன்' - (பா.பி., அர.)
3 'தாய்நாட் டன்புறு தனையரிங்' - (பா.பி., அர.)
4 'ஊரவர் துயரில்நெஞ் சுருகுவீ ரிருமின்' - (பா.பி., அர.)
5 'சோரநெஞ் சிலாத' - (பா.பி., அர.)
6 'உடலினைப் போற்றா உத்தம ரிருமின்' - (பா.பி., அர.)
7 'வம்மினோ துணைவீர்! மருட்சிகொள் ளாதீர்!' - (பா.பி., அர.)

இன்னரு ணமக்கோ ரிருந்துணை யாகும்.
பன்னரும் புகழுடைப் பார்த்தனுங் கன்னனும்[1]
வீமனுந் துரோணனும் வீட்டுமன் றானுமி
ராமனும் வேறுள இருந்திறல் வீரரும்
நற்றுணை புரிவர்; வானக நாடரும்[2] 115
பற்றறு முனிவரும் ஆசிகள் பகர்வர்.*
வெற்றியை[3] யன்றி வேறெதும் பெறுகிலேம்.
செற்றினி மிலேச்சரைத் தீர்த்திட வம்மின்.
ஈட்டியாற் சிரங்களை வீட்டிட எழுமின்! #
நீட்டிய வேல்களி னேரலர்த் தெறுமின்![4] 120
வாளுடை முனையிலும்[5] வயன்றிகழ் சூலினும்
ஆளுடைக் கால்க ளடியினும் தேர்களின்
உருளையி னிடையினு மாற்றவர் தலைக[6]
ளுருளையிற் கண்டுநெஞ் சுவப்புற வம்மின்!
நமரிதம் பெறாவணம் நலிந்திட[7] விரும்புஞ்
சுமடரை[8] வேரறத் தொலைத்தபின் னன்றோ

---

*இவ்வரி பாரதி பிரசுராலயப் பதிப்பில் விடுபட்டுள்ளது.

(பா-டு): 1 'பன்னரும் புகழுடைப் பார்த்தனும் கண்ணனும் - (பா. பி., அர.)
2 'நற்றுணை புரிவர்; வானக நாடுறும்' - (பா. பி., அர.)
3 'வெற்றியே' - (பா. பி., அர.) அரசாங்க வெளியீட்டில் வரிகள் முன்பின்னாக மாறி, பின்வருமாறு அமைந்துள்ளன:
''நற்றுணை புரிவர்; வானக நாடுறும் (நாடரும்)
வெற்றியே யன்றி வேறெதும் பெறுகிலேம்.
பற்றறு முனிவரும் ஆசிகள் பகர்வர்''
4 நீட்டிய வேல்களை நேரிருந்து எறிமின்! — (அர.)
5 'வாளுடை முனையினும் - (பா. பி., அர.)
6 'உருளையி னிடையினும், மாற்றலர் தலைகள்' - (பா. பி., அர.)
7. 'நம்மிதம் பெருவளம் நலிந்திட' (பா.பி.,அர) - எதுகை நயம் நோக்கின் இப்பாட வேறுபாடுகள் பொருந்தா.
8 (வன்மியை) - (பா.பி., அர.)

# 'ஈட்டியாற்' எனத் தொடங்கும் இவ்வரி பாரதி பிரசுராலயப் பதிப்பில் விடுபட்டுள்ளது.

ஆணெனப் பெறுவேம்?[1] அன்றிநா மிறப்பினு
மாணுறுந் தேவர்[2] மணியுல கடைவோம்.
வாழ்வமேற் பாரத வான்புகழ்த் தேவியைத்
தாழ்வினின் றுயர்த்திய தடம்புகழ் பெறுவேம்.[3] 130
போரெனி லிதுபோற்[4] புண்ணியத் திருப்போர்
பாரினி லொன்று[5] பார்த்திடற் கெளிதோ?
ஆட்டினைக் கொன்று வேள்விக ளாற்றி[6]
வீட்டினைப் பெறுவான் விரும்புவர் சிலரே[7].
நெஞ்சகக்[8] குருதியை நிலத்திடை வடித்து 135
வஞ்சக மழிக்கும் மாமகம்[9] புரிவம்யாம்.
வேள்வியி லிதுபோல் வேள்வியொன் றில்லை.
தவத்தினி லிதுபோற் றவம்பிறி தில்லை.
முன்னையோர் பார்த்தன் முனைத்திசை நின்று
தன்னெதிர் நின்ற தளத்தினை நோக்கிட 140
மாதுலர், சோதரர், மைத்துனர், தாதையர்
காதலி னண்பர், கலைதருங் குரவரென்[10]
றின்னவ ரிருத்தல்கண் டிதயநொந் தோனாய்த்
தன்னருந் தெய்விகச் சாரதி முன்னர்,
“ஐயனே! இவர்மீ தம்பையோ தொடுப்பேன்? 145
வையகத் தரசும் வானக வாட்சியும்

---

(பா-டு) 1 ஆணெனப் பெறுவோம் - (பா. பி., அர.)
2 ‘வானுறு தேவர்’ - (பா.பி., அர.)
3 ‘தாழ்வினின் றுயர்த்திய தடம்புகழ் பெறுவோம்’ - (பா.பி., அர.)
4 ‘பேரரெனி லிதுபோர்!’ - (அர.)
5 பாரினி லிதுபோற் - (அர.)
6 ‘ஆட்டினைக் கொன்று வேள்விக ளியற்றி’ - (பா.பி. அர.)
7 ‘வீட்டினைப் பெறுவதை விரும்புவார் சிலரே’- (பா. பி.)
‘வீட்டினைப் பெறுவான் விரும்புவார் சிலரே’- (அர.)
8 ‘நெஞ்சக்’- (பா. பி., அர.)
9 ‘வஞ்சக மழிக்கும் மாதவம்’ (அர.)
10 ‘காதலின் நண்பர் கலைதரு குரவரென்று’ - (பா.பி., அர.)

போயினு மிவர்தமைப் போரினில் வீழ்த்தேன்.
தாயினு மினியரைச் சமரிலா கொல்வேன்?*
மெய்யினில் நடுக்க மேவுகின் றதுவால்;
கையினில் வில்லுங் கழன்றுவீழ் கின்றது; 150
வாயுலர் கின்றது; மனம்பதைக் கின்றது;
ஓயுறுங் கால்கள்;[1] உலைந்தது சிரமும்;
வெற்றியை விரும்பேன், மேன்மையும் விரும்பேன்;[2]
சுற்றமிங் கறுத்துச் சுகம்பெறல் விரும்பேன்.
எனையிவர் கொல்லினு மிவரையான் தீண்டேன். 155
சினையறுத் திட்டபின் செய்வதோ ஆட்சி?"
எனப்பல கூறியவ் விந்திரன் புதல்வன்
கனப்படை வில்லைக் களத்தினி லெறிந்து
சோர்வொடு வீழ்ந்தனன். சுருதியின் முடிவாய்த்
தேர்வயி னின்றநந் தெய்விகப் பெருமான் 160
வில்லெறிந் திருந்த வீரனை நோக்கி[3]
"புல்லிய வறிவொடு புலம்புகின் றனையால்.
அறத்தினைப் பிரிந்த சுயோதனா தியரைச்
செறுத்தினி மாய்ப்பது தீமையென் கின்றாய்.
உண்மையை யறியாய், உறவையே கருதிப் 165
பெண்மைகொண் டேதோ பிதற்றிநிற் கின்றாய்.
வஞ்சகர், தீயர், மனிதரை வருத்துவோர்,
நெஞ்சகத் தருக்குடை நீசர்கள்; இன்னோர்
தம்மொடு பிறந்த சகோதர ராயினும்
வெம்மையோ டொறுத்தல் வீரர்தஞ் செயலாம். 170
ஆரிய நீதி யறிகிலை[4] போலும்.

..........................................

*இவ்வரி பிற பதிப்புகளில் விடுபட்டுள்ளது.

(பா-டு): 1 'ஓய்வுறுங் கால்கள்' - (பா., பி. அர.)
2 'வெற்றியை விரும்பேன்; மேன்மையை விரும்பேன். (பா. பி., அர.)
3 'வில்லெறிந் திருந்த வீரனை நோக்கி', - (பா.பி., அர.)
4 'ஆரிய நீதிநீ அறிகிலை' (பா.பி., அர.)

பூரியர் போல்மனம் புழுங்குற லாயினை!
அரும்புகழ் தேய்ப்பதும், அநாரியத் தகைத்தும்[1]
பெரும்பதத் தடையுமாம் பெண்மையெங் கெய்தினை?
பேடிமை யகற்றுநின் பெருமையை மறந்திடேல், 175
ஈடிலாப் புகழினாய், எழுகவோ, எழுக!''
என்றுமெய்ஞ் ஞானநம் மிறையவன் கூறக்[2]
குன்றெனும் வயிரக் கொற்றவான் புயத்தோன்,
அறமே பெரிதென லறிந்திடு[3] மனத்தனாய்,
மறமே யுருவுடை மாற்றலர் தம்மைச் 180
சுற்றமு நோக்கான், தோழமை மதியான்[4]
பற்றலர் தமையெலாம் பார்க்கிரை[5] யாக்கினன்.
விசயனன் றிருந்த வியன்புகழ் நாட்டில்
இசையுநற் றவத்தா லின்றுவாழ்ந் திருக்கும்
ஆரிய வீரர்காள்! அவனுடை மாற்றலர்[6] 185
தேரிலிந் நாட்டினர்; செறிவுடை யுறவினர்.
நம்மையின் றெதிர்க்கு நயனிலாப் புல்லரோ[7]
செம்மைதீர் மிலேச்சர்; தேசமும் பிறிதாம்;
பிறப்பினி லன்னியர்; பேச்சினி லன்னியர்;
சிறப்புடை யாரியச் சீர்மையே[8] யறியார். 190

(இன்னும் வரும்)

---

(பா-டு): 1 'அரும்புகழ் தேய்ப்பதும் அனாரியத் தகைத்தும்' – (பா. பி., அர.)
2 'என்றுமெய் ஞானம்நம் மிறையவர் கூறக்' – (பா. பி.)
'என்றுமெய்ஞ் ஞானம்நம் இறையவர் கூறக்' – (அர.)
3 'அறமே பெரிதென அறிந்திடு' – (பா.பி., அர.)
4 'சுற்றமு நோக்கான் தோழமை மதியான் – (பா. பி., அர.)
5 'பற்றலர் தமையெலாம் பார்க்கிடை' – (பா. பி.)
6 'ஆரிய வீரர்காள்! அவருடை யாற்றலர்' – (பா. பி.)
'ஆரிய வீரர்காள்! அவருடை மாற்றலர்' – (அர.)
7 'நம்மையின் றெதிர்க்கும் நயனிலாப் புல்லோர் – (பா. பி., அர.)
8 'சிறப்புடை யாரியச் சீர்மையை' – (பா.பி., அர.)

## 20. ஸ்ரீ சுப்பராம தீக்ஷிதர் [காலஞ்சென்றதைப் பற்றிய] இரங்கற் பாக்கள்.*

அகவல்

59. கவிதையு மருஞ்சுவைக் கான நூலும்
புவியினர் வியக்கு மோவியப் பொற்பும்
மற்றுள பெருந்தொழில் வகைகளிற் பலவும்
வெற்றிகொண் டிலங்கிய மேன்மையார் பரத
நாட்டினி லிந்நாள் அன்னியர் நலிப்ப[1] 5
ஈட்டிய செல்வ மிறந்தமை யானும்
ஆண்டகை யொடுபுக ழழிந்தமை யானும்
மாண்டன பழம்பெரு மாட்சியார் தொழிலெலாம்.
தேவர்கள் வாழ்ந்த சீர்வளர் பூமியில்
மேவிய குரக்கர் விளங்குதல் போல 10
நேரிலாப் பெரியோர் நிலவிய நாட்டிற்
சீரிலாப் புல்லர் செறிந்துநிற் கின்றார்.
இவரிடை,

---

*இந்தியா: 1-12-1906*

*இதே பாடல் "சுதேசமித்திரன்" இதழிலும் (26-11-1906) வெளியான தாகச் செய்தி. ஆனால் "சுதேசமித்திரன்" இதழ் எம் பார்வைக்குக் கிட்டாத தால், "இந்தியா" இதழில் பாடல் வெளிவந்தபடி இங்கே தரப்பெற்றுள்ளது.*
*— பதிப்பாசிரியர்*

*"சுப்பராம தீட்சிதர்" (அர.)

(பா-டு): 1 நாட்டினி லிந்நாள் அந்நியர் நலிப்ப - (பா. பி.)

சுரத்திடை யின்னீர்ச் சுனையது போன்றும்
அரக்கர்தங் குலத்திடை வீடண னாகவும் 15
சேற்றிடைத் தாமரைச் செம்மலர் போன்றும்
போற்றுதற் குரிய புனிதவான் குலத்தில்
நாரத முனிவ னமர்மிசை யருளாற்
பாரத நாட்டிற் பழமாண் புறுகென
மீட்டுமோர் முறையிவண்[1] மேவின னென்ன 20
நாட்டுநற் சீர்த்தி நலனுயர் பெருமான்
தோமறு சுப்ப ராமனற் பெயரோன்
நாமகள் புளகுற நம்மிடை வாழ்ந்தான்.
இன்னோன்[2] றானு மெமையகன் றேகினன்.
என்னோ[3] நம்மவ ரியற்றிய பாவம்! 25
இனியிவ னனையரை யெந்தநாட் காண்போம்?
கனியறு மரமெனக் கடைநிலை யுற்றேம்.[4]
அந்தோ மறலிநம் மமுதினைக் கவர்ந்தான்!
நொந்தோ பயனிலை; நுவலயா துளதே? (1)

விருத்தம்

60. கன்னனொடு கொடைபோயிற் றுயர்கம்ப
நாடனுடன் கவிதை போயிற்
றுன்னரிய புகழ்ப்பார்த்த னொடுவீர
மகன்றதென வுரைப்ப ரான்றோர்;
என்னகநின் றகலாதோன் அருட்சுப்ப
ராமனெனு மிணையி லாவிற்

---

(பா-டு): 1 மீட்டு மோர் முறையிவண் (பா. பி.)
2 இன்னான் (பா. பி., அர.)
3 என்னே (அர.)
4 கனியறு மரமெனக் கடைநிலை யுற்றோம். (பா.பி., அர.)

பன்னனொடு சுவைமிகுந்த பண்வளனு
மகன்றதெனப் பகர லாமே. 2

61. கலைவிளக்கே யிளைசை[1]யெனுஞ் சிற்றூரிற்
பெருஞ்சோதி கதிக்கத் தோன்று
மலைவிளக்கே யெம்மனையர் மனவிருளை
மாற்றுதற்கு வந்த ஞான
நிலைவிளக்கே நினைப்பிரிந்த இசைத்தேவி
நெய்யகல நின்ற தட்டி
னுலைவிளக்கே யெனத்தளரு மந்தோ! நீ
யகன்றதுய ருரைக்கற் பாற்றோ! 3

62. மன்னரையும் பொய்ஞ்ஞான மதக்குரவர்
தங்களையும் வணங்கி லாதேன்[2]
தன்னனைய புகழுடையாய் நினைக்கண்ட
பொழுதுதலை தாழ்த்து வந்தேன்[3]
உன்னருமைச் சொற்களையே தெய்விகமா
மெனக்கருதி யுவந்தே னந்தோ![4]
இன்னமொரு காலிளைசைக்[5] கேகிடினிவ்
வெளியன்மன மென்ப டாதோ? 4

---

(பா-டு): 1 கலைவிளக்கே யிளசை (பா. பி., அர.)
2 தங்களையும் வணங்க லாதேன் (பா. பி., அர.)
3 பொழுதுதலை தாழ்ந்து வந்தேன் - (பா. பி., அர.)
4 எனக்கருதி வந்தேன்; அந்தோ! - (பா. பி., அர.)
5 இன்னமொரு காலிளசைக் - (பா. பி., அர.)

## 21. வந்தே மாதரம்

இராகம்: ஹிந்துஸ்தானி பியாக் சாப்பு தாளம்

பல்லவி

63. வந்தே மாதரம் ஜய 1

அனுபல்லவி

64. வந்தே மாதரம் வந்தே மாதரம்
வந்தே மாதரம் வந்தே மாதரம் வந்தே மாதரம் 2

சரணங்கள்

65. ஆரிய பூமியில்
நாரிய ரும்நர
சூரிய ருஞ்சொலும்
வீரிய வாசகம் வந்தே மாதரம் 3

66. நொந்தே போயினும்
வெந்தே மாயினும்
நந்தே சத்தர் – உ
வந்தே சொல்வது வந்தே மாதரம் 4

67. ஒன்றாய் நின்றினி
வென்றா யினுமுயிர்

---

*இந்தியா: 19-1-1907*

சென்றா யினும்வலி
குன்றா தோதுவம் வந்தே மாதரம் 5

68. சோதரர் காள்நிறை
மாதரிர்! யாவரும்
ஆதர வொடுபல
தீதற வோதுவம் வந்தே மாதரம் 6

69. தாயே, பாரத
நீயே வாழிய!
நீயே சரணினி
நீயே யெமதுயிர் வந்தே மாதரம் 7

70. ஜயஜய பாரத
ஜயஜய பாரத
ஜயஜய பாரத
ஜயஜய ஜயஜய வந்தே மாதரம் 8

---

*பாரதியார் பதிப்பித்து வெளியிட்ட "ஸ்வதேச கீதங்கள்" (முதற்பாகம் — 1908) நூலில் 'இந்தியா' இதழில் வெளியானபடி ஆறு சரணங்களையும் வெளியிடாமல் 4,5 ஆகிய இரு சரணங்களை நீக்கியே பிரசுரம் செய்துள்ளார்.*

*நூலில் வெளியிட்டபோது பல்லவியில்,*

*"வந்தே — மாதரம் — ஜய*
*வந்தேமாதரம்"*

*எனும் சிறு திருத்தம் செய்திருந்ததுடன், ஆறாம் சரணத்தை முதற் சரணமாகவும் மாற்றியிருக்கிறார். மற்றும், 14—8—1909ஆம் தேதியிட்ட 'இந்தியா' இதழில் வெளிவந்துள்ள "பிரபுத்த பாரதா" என்னும் நாடகப் பகுதியிலும் 1, 2, 3, 6-ஆகிய நான்கு சரணங்களே நூல் வெளியீட்டில் உள்ள படியே இடம் பெற்றுள்ளன.*

*'நாட்டுப்பாட்டு'த் தொகுதியிலும் இப்பாடல் இடம் பெற்றுள்ளது.*

*நூலில் வெளியிட்டவாறே அனைத்துப் பதிப்புக்களிலும் பாடல் பதிப்பிக்கப்பெற்றுள்ளது.*

*— பதிப்பாசிரியர்*

## 22. புது வருஷம்*

71. வாழிய செந்தமிழ், வாழ்கநற் றமிழர்,
வாழிய பாரத மணித்திரு நாடு,
இன்றெமை வருத்தும் இன்னல்கள் மாய்க.
நன்மைவந் தெய்துக, தீதெலாம் நலிக,
அறம்வளர்ந் திடுக, மறமடி வுறுக, 5
ஆரிய நாட்டினர் ஆண்மையொ டியற்றும்[1]
சீரிய முயற்சிகள் சிறந்துமிக் கோங்குக!
நந்தே யத்தினர் நாடொறும் உயர்க.
வந்தே மாதரம் வந்தே மாதரம்.

........................................

*இந்தியா: 20–4–1907*

* *'வாழிய செந்தமிழ்' - (அர.)*

*(பா-டு): 1 ஆரிய நாட்டினர் ஆண்மையொ டியற்றுஞ்*
*(ஸ்வதேசகீதங்கள் - 1908 - புதுவை இந்தியா - 1909)*
*ஆரிய நாட்டினர் ஆண்மை யோடியற்றும்*
*(நாட்டுப் பாட்டு 1919)*

## 23. வந்தே மாதரம்

(தாயுமானவர் ஆனந்தக் களிப்பு வர்ணமெட்டு)

72. வந்தே மாதர மென்போம் – எங்கள்
மாநிலத் தாயைவ ணங்குது மென்போம். (வந்தே) 1

73. ஜாதி மதங்களைப் பாரோம் - உயர்
ஜன்மமித் தேசத்தி லெய்தின ராயின்,
வேதிய ராயினு மொன்றே. – அன்றி
வேறுகு லத்தின ராயினு மொன்றே. (வந்தே) 2

74. ஈனப் பறையர்க ளேனும் – அவர்
எம்முடன் வாழ்ந்திங் கிருப்பவ ரன்றோ?
சீனத்த ராய்விடு வாரோ? – பிற
தேசத்தர் போற்பல தீங்கிழைப் பாரோ? (வந்தே) 3

75. ஆயிர முண்டிங்கு ஜாதி – எனில்
அன்னியர் வந்து புகலென்ன நீதி? – ஓர்
தாயின் வயிற்றிற் பிறந்தோர் – தம்முட்
சண்டைசெய் தாலும் சகோதர ரன்றோ? (வந்தே) 4

இந்தியா: 18-5-1907

76. ஒன்றுபட் டாலுண்டு வாழ்வே – நம்மில்
ஒற்றுமை நீங்கி லனைவர்க்கும் தாழ்வே
நன்றிது தேர்ந்திடல் வேண்டும் – இந்த
ஞானம்வந் தாற்பின் னமக்கெது வேண்டும்? (வந்தே) 5

77. எப்பதம் வாய்த்திடு மேனும் – நம்மில்
யாவர்க்கு மந்த நிலைபொது வாகும்
முப்பது கோடியும் வாழ்வோம்[1] – வீழில்
முப்பது கோடி முழுமையும் வீழ்வோம்[2] (வந்தே) 6

78. புல்லடி மைத்தொழில் பேணி – பண்டு
போயின நாட்களுக் கினிமனம் நாணித்
தொல்லையி கழ்ச்சிகள் தீர – இந்தத்
தொண்டுநி லைமையைத் தூவென்று தள்ளி (வந்தே) 7

---

(பா-டு): 1 முப்பது கோடியும் வாழ்வேம் (ஸ்வதேச கீதங்கள் - 1907)
2 முப்பது கோடி முழுமையும் வீழ்வேம் (ஸ்வதேச கீதங்கள் - 1907)

பாரதி ஆச்ரமம், பாரதி பிரசுராலயம், அரசாங்க வெளியீடு - இவை போன்ற பிற பதிப்பகங்களும் ''ஸ்வதேச கீதங்கள்'' (முதற் பாகம் - 1908) நூலையே பின்பற்றின.

– பதிப்பாசிரியர்

# 24. நடிப்புச் சுதேசிகள்

## (பழித்தறி வுறுத்தல்)

### கிளிக் கண்ணிகள்

79. நெஞ்சிலு ரமுமின்றி
நேர்மைத்தி றமுமின்றி
வஞ்சனை சொல்வாரடி – கிளியே
வாய்ச்சொல்லில் வீரரடி. 1

80. கூட்டத்திற் கூடிநின்று
கூவிப்பி தற்றலன்றி
நாட்டத்திற் கொள்ளாரடி – கிளியே
நாளில்ம றப்பாரடி. 2

81. சொந்தஅ ரசும்புவிச்
சுகங்களு மாண்புகளும்
அந்தகர்க் குண்டாகுமோ? – கிளியே
அலிகளுக் கின்பமுண்டோ? 3

82. கண்களி ரண்டிருந்தும்
காணுந் திறமையற்ற
பெண்களின் கூட்டமடி – கிளியே
பேசிப் பயனென்னடி. 4

---

இந்தியா: 1, 15-6-1907

83. யந்திர சாலையென்பர்
எங்கள்து ணிகளென்பர்
மந்திரத் தாலேயெங்கும் – கிளியே
மாங்கனி வீழ்வதுண்டோ? 5

84. உப்பென்றும் சீனியென்றும்
உள்நாட்டுச் சேலையென்றும்
செப்பித் திரிவாரடீ – கிளியே
செய்வ தறியாரடீ. 6

85. தேவியர் மானமென்றும்
தெய்வத்தின் பத்தியென்றும்[1]
நாவினாற் சொல்வதல்லால் – கிளியே
நம்புத லற்றாரடீ. 7

86. மாதரைக் கற்பழித்து
வன்கண்மை பிறர்செய்யப்
பேதைகள் போலுயிரைக் – கிளியே
பேணி யிருந்தாரடீ. 8

87. தேவிகோ யிலிற்சென்று
தீமைபி றர்கள்செய்ய
ஆவிபெ ரிதென்றெண்ணிக் – கிளியே
அஞ்சிக் கிடந்தாரடீ. 9

88. அச்சமும் பேடிமையும்
அடிமைச் சிறுமதியும்
உச்சத்திற் கொண்டாரடீ – கிளியே
ஊமைச் சனங்களடீ. 10

---

(பா-டு): 1 தெய்வத்தின் பக்தியென்றும் - (பா.பி., அர.)

89. ஊக்கமும் உள்வலியும்[1]
உண்மையிற் பற்றுமில்லா
மாக்களுக் கோர்கணமும் - கிளியே
வாழத் தகுதியுண்டோ? 11

90. மானஞ்சி றிதென்றெண்ணி
வாழ்வுபெ ரிதென்றெண்ணும்
ஈனர்க்கு லகந்தனில் - கிளியே
இருக்கநி லைமையுண்டோ? 12

91. சிந்தையிற் கள்விரும்பி
சிவசிவ வென்பதுபோல்
வந்தேமா தரமென்பார் - கிளியே
மனதில தனைக்கொள்ளார். 13

92. பழமைப ழமையென்று
பாவனை பேசலன்றிப்
பழமையி ருந்தநிலை - கிளியே
பாமர ரேதறிவார்? 14

93. நாட்டி லவமதிப்பும்
நாணின்றி யிழிசெல்வத்
தேட்டில்வி ருப்பும்கொண்டே - கிளியே
சிறுமைய டைவாரடீ. 15

94. சொந்தச்ச கோதரர்கள்
துன்பத்திற் சாதல்கண்டும்
சிந்தையி ரங்காரடீ - கிளியே
செம்மைம றந்தாரடீ. 16

........................................

(பா-டு): 1 'ஊக்கமும் உளவலியும்' (அர.)

**95.** பஞ்சத்தும் நோய்களிலும்
பாரதர் புழுக்கள்போல்
துஞ்சத்தம் கண்ணாற்கண்டும் – கிளியே
சோம்பிக்கி டப்பாரடி. *17*

**96.** தாயைக்கொல் லும்பஞ்சத்தை[1]
தடுக்க முயற்சி செய்யார்[2]
வாயைத்தி றந்துசும்மா – கிளியே
வந்தே மாதர மென்பார், *18*

*(இன்னும் வரும்)**

---

*(பா-டு): 1 தாயைக் கொல்லும் பஞ்சத்தைத்*
*(ஸ்வதேச கீதங்கள் - முதற்பாகம் 1908)*

*2 தடுக்க முயற்சி யுறார்*
*(ஸ்வதேச கீதங்கள் - முதற்பாகம் 1908)*

*"ஸ்வதேச கீதங்கள்" நூலில் கொண்ட பாடங்கள் அனைத்துப் பதிப்புகளிலும் காண்கின்றன.*

**இதன்மேல் வரவில்லை.*

## 25. நாட்டு வணக்கம்

### ஸ்வதேச வந்தனம்[1]

காம்போதி ராகம் – ஆதி தாளம்

97. எந்தையுந் தாயு மகிழ்ந்து குலாவி
யிருந்தது மிந்நாடே – அதன்
முந்தைய ராயிர மாண்டுகள் வாழ்ந்து
முடிந்தது மிந்நாடே – அவர்
சிந்தையி லாயிர மெண்ணம் வளர்ந்து
சிறந்தது மிந்நாடே – இதை
வந்தனை கூறி மனதி லிருத்தி[2]யென்
வாயுற வாழ்த்தேனோ? – இதை
(பல்லவி) வந்தே மாதரம் – வந்தே மாதரம்
என்று வணங்கேனோ?

---

*1908 (ஸ்வதேச கீதங்கள்)*

*இப்பாடல் மீளவும் 1908, 1919ஆம் வருடப் பதிப்புக்களிலும் இடம் பெற்றுள்ளது. அரசாங்க வெளியீட்டில் ''ஸ்வதேச வந்தனம்'' என்பதற்குப் பதிலாக ''வந்தே மாதரம்'' என்ற சொல் நகவளைவுக்குள் தரப்பட்டுள்ளது. ராக, தாளக் குறிப்புக்கள் பாரதி ஆச்ரமப் பதிப்பில் தெளிவாக, 'ராகம் - காம்போதி; தாளம் - ஆதி'' என்று குறிக்கப்பெற்றுள்ளது.*

— பதிப்பாசிரியர்

1 சுதேச வந்தனம் (நாட்டுப்பாட்டு - பாரதி ஆச்ரமம் - பாரதி பிரசுராலயம்)

(பா-டு): 2 'வந்தனை கூறி மனத்தில் இருத்தி' - (அர.)

98. இன்னுயிர் தந்தெமை யீன்றுவ ளர்த்தரு.
வீந்தது மிந்நாடே – எங்கள்
அன்னையர் தோன்றி மழலைகள் கூறி
யறிந்தது மிந்நாடே – அவர்
கன்னிய ராகி நிலவினி லாடிக்
களித்தது மிந்நாடே – தங்கள்
பொன்னுட லின்புற நீர்விளை யாடியில்
போந்தது மிந்நாடே – இதை
(பல்லவி)* வந்தே மாதரம், வந்தே மாதரம்
என்று வணங்கேனோ? 2

99. மங்கைய ராயவர் இல்லற நன்கு
வளர்த்தது மிந்நாடே – அவர்
தங்க மதலைக ளீன்றமு தூட்டித்
தழுவிய திந்நாடே – மக்கள்
துங்க முயர்ந்து வளர்கெனக் கோயில்கள்
சூழ்ந்தது மிந்நாடே – பின்னர்
அங்கவர் மாய அவருடற் பூந்துகள்
ஆர்ந்தது மிந்நாடே – இதை
(பல்லவி) வந்தே மாதரம் வந்தே மாதரம்
என்று வணங்கேனோ? 3

* ஒவ்வொரு பாடலிலும் காணப்படும் 'பல்லவி' என்ற சொல் அரசாங்க வெளியீட்டில் இடம்பெறவில்லை.

# 26. எங்கள் நாடு

பூபாள ராகம்

100. மன்னு மிமயமலை யெங்கள் மலையே.
மாநில மீதது[1] போற்பிறி திலையே.
இன்னறு நீர்க்கங்கை யாறெங்கள் யாறே
இங்கிதன் மாண்பிற் கெதிரெது வேறே?
பன்னரு முபநிட நூலெங்கள் நூலே;
பார்மிசை யேதொரு நூலிது போலே?
பொன்னொளிர் பாரத நாடெங்கள் நாடே.
போற்றுவ மிஃதை யெமக்கிலை[2] யீடே. 1

101. மாரத வீரர் மலிந்தநன் னாடு,
மாமுனி வோர்பலர் வாழ்ந்தபொன் னாடு,
நாரத கான நலந்திகழ் நாடு
நல்லன யாவையு நாடுறு நாடு

---

*1908 (ஸ்வதேச கீதங்கள்)*

*இப்பாடல் மீளவும் 1908, 1919ஆம் வருடப் பதிப்புகளிலும் இடம் பெற்றுள்ளது. மற்றும், இதே பாடல் 'இந்தியா' 14-8-1909ஆம் தேதிய இதழில் "பிரபுத்த பாரதா" என்ற நாடகப் பகுதியிலும் இடம்பெற்றுள்ளது.*

*- பதிப்பாசிரியர்*

*(பா-டு): 1 'மாநில மீதிது' - (அர.)*
*2 போற்றுவ மிஃதை யெமக்கில்லை (பாரதியார்)*

பூரண ஞானம் பொலிந்தநன் னாடு[1].
புத்தர்பி ரானருள் பொங்கிய நாடு.
பாரத நாடு பழம்பெரு நாடே.
பாடுவ மி∴தை யெமக்கிலை[2] யீடே. 2

102. இன்னல்வந் துற்றிடும் போததற் கஞ்சோம்.
ஏழைய ராகி யினிமண்ணிற் றுஞ்சோம்.
தன்னலம் பேணி யிழிதொழில் புரியோம்.
தாய்த்திரு நாடெனி லினிக்கையை விரியோம்.
கன்னலுந் தேனும் கனியுமின் பாலும்
கதலியும் செந்நெலு நல்குமெக் காலும்.
உன்னத ஆரிய[3] நாடெங்கள் நாடே.
ஓதுவ மி∴தை யெமக்கிலை[4] யீடே. 3

..........................................

(பா-டு): 1 பூரண ஞானம் பொருந்த நன்னாடு (நாட்டுப் பாட்டு)
'பூரண ஞானம் பொருந்துநன் னாடு' - (பா.பி., அர.)
2 பாடுவ மிஃதை யெமக்கில்லை (பாரதியார் திருத்தம்)
3 உன்னத பாரத (நாட்டுப் பாட்டு, பா.பி., அர.)
4 'ஓதுவ மிஃதை யெமக்கில்லை' (பாரதியார் திருத்தம்)

## 27. லாஜபத்ராய் துதி[1]

விருத்தம்

103. விண்ணகத்தே யிரவிதனை வைத்தாலும்
அதன்கதிர்கள் விரைந்து வந்து
கண்ணகத்தே யொளிதருதல் காண்கிலமோ?
நின்னையவர் கனன்றிந் நாட்டு
மண்ணகத்தே வாழாது புறஞ்செய்தும்
யாங்களெலா மறக்கொ ணாதெம்
எண்ணகத்தே, லாஜபதி, யிடையின்றி
நீ வளர்தற் கென்செய் வாரே? 1

104. ஒருமனிதன் றனைப்பற்றிப் பலநாடு
கடத்தியவற் கூறு செய்தல்
அருமையிலை, எளிதினவர் புரிந்திட்டா
ரென்றிடினும் அந்த மேலோன்
பெருமையைநன் கறிந்தவனைத் தெய்வமென
நெஞ்சினுளே பெட்பிற் பேணி
வருமனித ரெண்ணற்றார் இவரையெலாம்
ஓட்டியெவர் வாழ்வ திங்கே? 2

---

*1908 (ஸ்வதேச கீதங்கள்)*

*1 "லாஜபதி" - (அர.)*

105. பேரன்பு செய்தாரில் யாவரே
பெருந்துயரம் பிழைத்து நின்றார்?
ஆரன்பு நாரணன்பா லிரணியன்சேய்
செய்ததினா லவனுக் குற்ற
கோரங்கள் சொலத்தகுமோ? பாரதநாட்
டிற்பத்தி[1] குலவி வாழும்
வீரங்கொள் மனமுடையார் கொடுந்துயரம்
பலவடைதல் வியத்தற் கொன்றோ? 3

---

(பா-டு): 1 'டிற் பக்தி' (அர.)

# 28. பூபேந்திர விஜயம்*

விருத்தம்

106. பாபேந்தி ரியஞ்செறுத்த எங்கள்விவே காநந்தப்[1]
பரமன் ஞான
ரூபேந்தி ரன்றனக்குப் பின்வந்தோன் விண்ணவர்த
முலகை யாள்பர
தாபேந்தி ரன்கோப முறினுமதற் கஞ்சியறந்
தவிர்கி லாதான்
பூபேந்தி ரப்பெயரோன் பாரதநாட் டிற்கடிமை
பூண்டு வாழ்வோன் 1

107. வீழ்த்தல்பெறத் தருமமெலாம், மறமனைத்துங்
கிளைத்துவர
மேலோர் தம்மை[2]
தாழ்த்ததமர் முன்னோங்க நிலைபுரண்டு பாதகமே
ததும்பி நிற்கும்
பாழ்த்தகலி யுகஞ்சென்று மற்றொருகம் அருகில்வரும்
பான்மை தோன்றக்

1908 (ஸ்வதேச கீதங்கள்)

* ''பூபேந்திரர் விஜயம்'' – (அர.)

(பா-டு): 1 'பாபேந்திரியஞ் செறுத்த எங்கள் விவேகானந்தப்' – (பா.பி., அர.)
2 கிளைத்துவர, மேலார் தம்மைத் (அர.)

காழ்த்தமன வீரமுடன் யுகாந்தரத்தி னிலையினிது
காட்டி நின்றான் 2

108. மன்னாளு மன்னரவன் றனைச்சிறைசெய் திட்டாலு
மாந்த ரெல்லாங்
கண்ணாகக் கருதியவன் புகழோதி வாழ்த்திமனங்
களிக்கின் றாரால்
எண்ணாது நற்பொருளைத் தீதென்பார் சிலருலகி
லிருப்ப ரன்றே?
விண்ணாரும் பரிதியொளி வெறுத்தொருபுள் இருணனிது[1]
விரும்பல் போன்றே. 3

109. இன்னாத பிறர்க்கெண்ணான் பாரதநாட் டிற்கிரங்கி
யிதய நைவான்
ஒன்னாரென் றெவருமிலான்* உலகனைத்து மோருயிரென்
றுணர்ந்த ஞானி
அன்னானைச் சிறைப்படுத்தார் மேலோர்தம் பெருமையெது
மறிகி லாதார்;
முன்னாளிற் றுன்பின்றி யின்பம்வரா தெனப்பெரியார்[2]
மொழிந்தா ரன்றே? 4

---

*'ஒன்னாரென் றெவருமிலான்' என்றிருக்கவேண்டியது, அச்சுப் பிழையாக 'ஒன்னாறென் றெருவமிலான்' என்று உள்ளது.

— பதிப்பாசிரியர்

(பா-டு): 1 'இருளினிது' - (பா.பி., அர.)

2 'முன்னாளில் துன்பின்றி இன்பம்வரா தெனப்பெரியோர்' - (அர.)

# 29. லாஜ்பத்ராய் பிரலாபம்*

கண்ணிகள்

110. நாடிழந்து மக்களையு நல்லாளை யும்பிரிந்து
வீடிழந் திங்குற்றேன் விதியினையென் சொல்கேனே *1*

111. வேதமுனி போன்றார் விருத்தரா மெந்தையிரு
பாதமலர் கண்டு பரவப் பெறுவேனோ? *2*

112. ஆசைக் குமர னருச்சுனனைப் போல்வான்றன்
மாசற்ற சோதி வதனமினிக் காண்பேனோ? *3*

113. அன்றிலைப்போன் றென்னை யரைக்கணமே னும்பிரிந்தால்
குன்றிமனஞ் சோர்வாளிக் கோலம் பொறுப்பாளோ? *4*

114. வீடு முறவும் வெறுத்தாலு மென்னருமை
நாடு பிரிந்த நலிவினுக்கென் செய்கேனே? 5

115. ஆதிமறை தோன்றியநல் லாரியநா டெந்நாளு
நீதிமறை வின்றி நிலைத்த திருநாடு; *6*

116. சிந்துவெனுந் தெய்வத் திருநதியு மற்றதிற்சேர்
ஐந்துமணி யாறும் அளிக்கும் புன்னாடு[1] *7*

---

*1908 (ஸ்வதேச கீதங்கள்)*

* *"லாஜபதியின் பிரலாபம்" (அர.)*

*1 'புனனாடு' (புனல் + நாடு) என்று இருக்கவேண்டியது அச்சுப்பிழையாகப் 'புன்னாடு' என உள்ளது.*

*— பதிப்பாசிரியர்.*

117. ஐம்புலனை வென்ற அறவோர்க்கு மாற்றலர்தம்
வெம்புலனை வென்றஎண்ணில் வீரருக்குந் தாய்நாடு 8

118. நல்லறத்தை நாட்டுதற்கு நம்பெருமான் கௌரவராம்
புல்லரைச்செற் றாழ்த்த புனிதப் பெருநாடு; 9

119. கன்னாணுந் திண்டோட் களவீரன் பார்த்தனொரு
வின்னா ணொலிகேட்ட மேன்மைத் திருநாடு 10

120. கன்ன னிருந்த கருணைநிலம் தர்மனெனு
மன்ன னறங்கள் வளர்த்த புகழ்நாடு 11

121. ஆரியர்தந் தர்மநிலை யாதரிப்பான் வீட்டுமனார்
நாரியர்தங் காதல் துறந்திருந்த நன்னாடு. 12

122. வீமன் வளர்ந்த விறனாடு வில்லசுவத்
தாம னிருந்து சமர்புரிந்த வீரநிலம் 13

123. சீக்கரெனு மெங்கள்விறற் சிங்கங்கள் வாழ்தருநல்
லாக்கமுயர் குன்ற மடர்ந்திருக்கும் பொன்னாடு. 14

124. ஆரியர்பா ழாகா தருமறையின் உண்மைதந்த
சீரியர்மெய்ஞ் ஞானதயா நந்தர் திருநாடு. 15

125. என்னருமைப் பாஞ்சால மென்றேனும் காண்பேனோ?
பன்னரிய துன்பம் படர்ந்திங்கே மாய்வேனோ? 16

126. ஏதெல்லாம் பாரதத்தே இந்நாள் நடப்பனவோ?
ஏதெல்லாம் யானறியா தென்மனிதர் பட்டனரோ? 17

127. என்னை நினைந்து மிரங்குவரோ? அல்லாது
பின்னைத் துயர்களிலென் பேருமறந் திட்டாரோ? *18*

128. தொண்டுபட்டு வாடுமென்றன் தூய பெருநாட்டிற்
கொண்டுவிட்டங் கென்னையுடன் கொன்றாலு மின்புறு
வேன். *19*

129. எத்தனைஜன் மங்கள் இருட்சிறையி லிட்டாலும்
தத்துபுனற் பாஞ்சாலந் தன்னில்[1]வைத்தால் வாடுகிலேன்
*20*

.........................................

*(பா-டு): 1 தத்துபுனற் பாஞ்சாலந் தனில் - (அர.)*

## 30. ஸ்வராஜ்யம் வேண்டுமென்ற பாரதவாஸிக்கு ஆங்கிலேய உத்தியோகஸ்தன் கூறுவது

*(நந்தனார் சரித்திரத்திலுள்ள "மாடு தின்னும் புலையா - உனக்கு மார்கழித் திருநாளா?" என்ற பாட்டின் வர்ணமெட்டு).*

**130.** தொண்டு செய்யு மடிமை – உனக்குச்
சுதந்திர நினைவோடா
பண்டு கண்ட துண்டோ – அதற்குப்
பாத்திர மாவாயோ? (தொண்டு) 1

**131.** ஜாதிச் சண்டை போச்சோ? – உங்கள்
சமயச்சண்டை போச்சோ?
நீதி சொல்ல வந்தாய் – கண்முன்
நிற்கொணாது போடா (தொண்டு) 2

**132.** அச்ச நீங்கி னாயோ? – அடிமை!
ஆண்மை தாங்கினாயோ?
பிச்சை வாங்கிப் பிழைக்கும் – ஆசை
பேணுத லொழித்தாயோ? (தொண்டு) 3

---

*1908 (ஸ்வதேச கீதங்கள்)*

*பாரதி ஆச்ரமப் பதிப்பில் இப்பாடலின் தலைப்பு "தொண்டு செய்யும் அடிமை" என்று மாற்றப்பட பிற்காலப் பதிப்புக்களில் மாற்றப்பட்ட தலைப்பே வழங்கப்படலாயிற்று. பாரதியார் இட்ட தலைப்பு உட்தலைப்பாக அமையலாயிற்று.*

*– பதிப்பாசிரியர்*

133. கப்ப லேறு வாயோ? அடிமை!
கடலைத் தாண்டுவாயோ?
குப்பை விரும்பும் நாய்க்கே – அடிமை!
கொற்றத் தவிசுமுண்டோ? (தொண்டு) 4

134. ஒற்று மைபயின் றாயோ? – அடிமை!
உடம்பில் வலிமையுண்டோ?
வெற்று ரைபே சாதே - அடிமை!
வீரிய மறிவாயோ? (தொண்டு) 5

135. சேர்ந்து வாழு வீரோ? – உங்கள்
சிறுமைக்குணங்கள் போச்சோ?
சோர்ந்து வீழ்தல் போச்சோ? – உங்கள்
சோம்பரைத் துடைத்தீரோ? (தொண்டு) 6

136. வெள்ளை நிறத்தைக் கண்டால் – பதறி
வெருவலை யொழித்தாயோ?
உள்ளது சொல்வேன் கேள் – சுதந்திரம்
உனக்கில்லை மறந்திடடா. (தொண்டு) 7

137. நாடு காப்ப தற்கே – உனக்கு
ஞானஞ்சிறிது முண்டோ?
வீடு காக்கப் போடா – அடிமை
வேலைசெய்யப் போடா (தொண்டு) 8

138. சேனை நடத்து வாயோ? – தொழும்புகள்
செய்திட விரும்பாயோ?
ஈன மான தொழிலே – உங்களுக்
கிசைவதாகும் போடா. (தொண்டு) 9

## 31. மாயையைப் பழித்தல்

காம்போதி ராகம் – ஆதிதாளம்

139. உண்மை யறிந்தவ ருன்னைக் கணிப்பாரோ
மாயையே: – மனத்
திண்மை யுள்ளாரைநீ செய்வது மொன்றுண்டோ –
மாயையே 1

140. எத்தனை கோடி படைகொண்டு வந்தாலும்
மாயையே – நீ
சித்தத் தெளிவெனுந் தீயின்முன் னிற்பாயோ
மாயையே 2

141. என்னைக் கெடுப்பதற் கெண்ணமுற் றாய்கெட்ட
மாயையே – நான்
உன்னைக் கெடுப்ப துறுதியென் றேயுணர்
மாயையே. 3

142. சாகத் துணியிற் சமுத்திர மெம்மட்டு
மாயையே – இந்தத்

........................................

*1908 (ஸ்வதேச கீதங்கள்)*

*ராக, தாளக் குறிப்புக்கள் தெளிவுபெற பிற்காலப் பதிப்புக்களில் ராகம் - காம்போதி; தாளம் - ஆதி என்று பதிப்பிக்கப்பெற்றுள்ளது.*

*– பதிப்பாசிரியர்*

தேகம்பொய் யென்றுணர் தீரரை யென்செய்வாய்
மாயையே. 4

143. இருமை யழிந்தபின் எங்கிருப் பாயற்ப
மாயையே – தெளிந்
தொருமை கண்டார்முன்ன மோடாது நிற்பையோ –
மாயையே. 5

144. நீதரு மின்பத்தை நேரென்று கொள்வனோ
மாயையே – சிங்கம்
நாய்தரக் கொள்ளுமோ நல்லர சாட்சியை
மாயையே. 6

145. என்னிச்சை கொண்டுனை யெற்றி விடவல்லேன்
மாயையே – இனி
உன்னிச்சை கொண்டெனக் கொன்றும் வராதுகாண்
மாயையே. 7

146. யார்க்கும் குடியல்லேன் யானென்ப தோர்ந்தனன்
மாயையே – உன்றன்
போர்க்கஞ்சு வேனோ பொடியாக்குவே னுன்னை
மாயையே. 8

## 32. ஆரியதரிசனம் - ஓர் கனவு

ஸ்ரீராகம் – ஆதிதாளம்

147. கனவென்ன கனவே – என்றன்
கண்துயி லாது நனவினிலே யுற்ற (கன) 1

148. கானகங் கண்டேன் – அடர்[1]
கானகங் கண்டேன் – உச்சி
வானகத்தே வட்ட மதியொளி கண்டேன் (கன) 2

149. பொற்றிருக்குன்றம் - அங்கொர்
பொற்றிருக்குன்றம் - அதைச்
சுற்றி யிருக்கும் சுனைகளும் பொய்கையும் (கன) 3

புத்த தரிசனம்

150. குன்றத்தின் மீதே - அந்தக்
குன்றத்தின் மீதே - தனி
நின்றதொ ரால[2] நெடுமரங் கண்டேன் (கன) 4

---

*1908 (ஸ்வதேச கீதங்கள்)*

*(பா-டு): 1 கானகங் கண்டேன் – அடா – (பா. பி)*
*2 நின்றதோர் ஆல – (அர.)*

151. பொன்மரத்தின் கீழ் - அங்கப்[1]
பொன்மரத்தின் கீழ் - வெறுஞ்
சின்மய மானதோர்[2] தேவ னிருந்தனன். (கன) 5

152. புத்த பகவன் - எங்கள்
புத்த பகவன் - அவன்
சுத்தமெய்ஞ் ஞானச் சுடர்முகங் கண்டேன். (கன) 6

153. காந்தியைப் பார்த்தேன் - அவன்
காந்தியைப் பார்த்தேன் - உப
சாந்தியில் மூழ்கித் ததும்பிக் குளித்தனன். (கன) 7

154. ஈதுநல் விந்தை! - என்னை!
ஈதுநல் விந்தை - புத்தன்
சோதி மறைத்திருள் துன்னிடக் கண்டனன். (கன) 8

155. பாய்ந்ததங் கொளியே - பின்னும்
பாய்ந்ததங் கொளியே - இருள்[3]
தேய்ந்த தென்மேனி சிலிர்த்திடக் கண்டேன். (கன) 9

கிருஷ்ணார்ஜுன தரிசனம்

156. குன்றத்தின் மீதே - அந்தக்
குன்றத்தின் மீதே - தனி
நின்றபொற் றேரும் பரிகளும் கண்டேன். (கன) 10

157. தேரின்முன் பாகன் - மணித்
தேரின்முன் பாகன் - அவன்
சீரினைக் கண்டு திகைத்துநின் றேனிந்தக். (கன) 11

.........................................

*(பா-டு):* 1 *பொன்மரத்தின் கீழ் - அந்தப் - (பா. பி., அர.)*
2 *சின்மய மானதோர் - (பா.பி., அர.)*
3 *பாய்ந்ததங் கொளியே - அருள் - (பா.பி ,அர.)*

158. ஓமென்ற மொழியும் – அவன்
ஓமென்ற மொழியும் – நீலக்
காமன்ற னுருவுமவ் வீமன்றன் திறலும் (கன) *12*

159. அருள்பொங்கும் விழியும் – தெய்வ
அருள்பொங்கும் விழியும் – காணில்
இருள்பொங்கு நெஞ்சினர் வெருள்பொங்குந் திகிரியும்
(கன) *13*

160. கண்ணனைக் கண்டேன் – எங்கள்
கண்ணனைக் கண்டேன் – மணி
வண்ணனை ஞான மலையினைக் கண்டேன். (கன) *14*

161. சேனைகள் தோன்றும் – வெள்ளச்
சேனைகள் தோன்றும் – பரி
யானையுந் தேரும் அளவில தோன்றும் – (கன) *15*

162. கண்ணனற் றேரில் – நீலக்
கண்ணனற் றேரில் – மிக
எண்ணயர்ந் தானொ ரிளைஞனைக் கண்டேன்– (கன) *16*

163. விசையன்கொ லிவனே – விறல்
விசையன்கொ லிவனே – நனி
இசையுநன் கிசையுமிங் கிவனுக்கந் நாமம்[1]. (விசை) *17*

164. வீரிய வடிவம்! – என்ன
வீரிய வடிவம்! –இந்த
ஆரிய னெஞ்ச மயர்ந்ததென் விந்தை! (விசை) *18*

---

*(பா–டு): 1 'இசையும் நன்கிசையும் இங்கிவனுக் கிந்நாமம்' - (பா.பி., அர.)*

165. பெற்றதென்பேறே – செவி
பெற்றதென். பேறே[1] – அந்தக்
கொற்றவன் சொற்கள் செவியுறக் கொண்டேன் (கன) 19

166. "வெற்றியை வேண்டேன் – ஐய
வெற்றியை வேண்டேன் – உயிர்
அற்றிடு மேனு மவர்தமைத் தீண்டேன் – (வெற்றி) 20

167. சுற்றங் கொல்வேனோ – என்றன்
சுற்றங் கொல்வேனோ? – கிளை
அற்றபின் செய்யு மரசுமொ ரரசோ"?[2] – (வெற்றி) 21

168. மிஞ்சிய அருளால் – மித
மிஞ்சிய அருளால் – அந்த
வெஞ்சிலை வீரன் பலசொல் விரித்தான். (கன) 22

169. இம்மொழி கேட்டான் – கண்ணன்
இம்மொழி கேட்டான் – ஐயன்
செம்மலர் வதனத்திற் சிறுநகை பூத்தான் – (கன) 23

170. "வில்லினை யெடடா – கையில்
வில்லினை யெடடா – அந்தப்
புல்லியர் கூட்டத்தைப் பூழ்திசெய் திடடா – (வில்) 24

171. "வாடி நில்லாதே – மனம்
வாடி நில்லாதே – வெறும்
பேடியர் ஞானப் பிதற்றல் சொல்லாதே - (வில்லினை) 25

---

(பா-டு): 1 பெற்றதன் பேறே (அர.)
2 அற்றபின் செய்யும் அரசுமோர் அரசோ? (அர.)

172. "ஒன்றுள துண்மை - என்றும்
ஒன்றுள துண்மை - அதைக்
கொன்றி டொணாது குறைத்த லொண்ணாது -
(வில்லினை) 26

173. "துன்பமு மில்லை - கொடுந்
துன்பமு மில்லை - அதில்
இன்பமு மில்லை பிறப்பிறப் பில்லை (வில்லினை) 27

174. "படைகளுந் தீண்டா - அதைப்
படைகளுந் தீண்டா - அனல்
சுடவுமொண் ணாது புனல்நனை யாது (வில்லினை) 28

175. "செய்தலுன் கடனே - அறஞ்
செய்தலுன்[1] கடனே – அதில்
எய்துறும் விளைவினி லெண்ணம் வைக்காதே"-
(வில்லினை) 29

(கிருஷ்ணார்ஜுன தரிசனம் முற்றிற்று.)

1 'செய்தலுன்' என்பது 'செல்தலுன்' என்று மூலப்பிரதியில் பிழையாக அச்சாகியுள்ளது.

## 33. சுதந்திரப் பெருமை

*('தில்லை வெளியிலே கலந்து விட்டாலவர் திரும்பியும் வருவாரோ?' என்னும் வர்ணமெட்டு)*

176. வீர சுதந்திரம் வேண்டிநின் றார்பின்னர்
வேறொன்று கொள்வாரோ? - என்றும்
ஆரமு துண்ணுதற் காசைகொண் டார்கள்ளில்
அறிவைச் செலுத்துவாரோ? (வீரசுதந்திரம்) 1

177. புகழுநல் லறமுமே யன்றியெல் லாம்வெறும்
பொய்யென்று கண்டாரேல் - அவர்
இகழுறு மீனத்தொண் டியற்றியும் வாழ்வதற்
கிச்சையுற் றிருப்பாரோ? (வீரசுதந்திரம்) 2

178. பிறந்தவர் யாவரு மிறப்ப துறுதியெனும்
பெற்றியை யறிந்தாரேல் - மானம்
துறந்தற மறந்தும்பின் னுயிர்கொண்டு வாழ்வது
சுகமென்று மதிப்பாரோ? (வீரசுதந்திரம்) 3

.........................................

*1908 (ஸ்வதேச கீதங்கள்)*

*1 'நந்தனார் சரித்திரக் கீர்த்தனை'ப் பதிப்பில் (லாங்மன்ஸ், கிரீன் கம்பெனி - 1915) கீர்த்தனைகளின் பட்டியலிலே இந்த இசைப்பாடல் இடம் பெற்றுள்ளது. அப்பதிப்பின்படி இதன் ராகம் யமுனாகல்யாணி, தாளம் ஆதி. (பக். 53)*

*— பதிப்பாசிரியர்*

179. மானுட ஜன்மம் பெறுவதற் கரிதெனும்
வாய்மையை யுணர்ந்தாரேல் - அவர்
ஊனுடல் தீயினு முண்மை நிலைதவற
உடன்படு மாறுளதோ? (வீரசுதந்திரம்) 4

180. விண்ணி லிரவிதனை விற்றுவிட் டெவரும்போய்
மின்மினி கொள்வாரோ?
கண்ணிலு மினிய[1] சுதந்திரம் போனபின்
கைகட்டிப் பிழைப்பாரோ? (வீரசுதந்திரம்) 5

181. மண்ணிலின் பங்களை விரும்பிச் சுதந்திரத்தின்
மாண்பினை யிழப்பாரோ?
கண்ணிரண்டும் விற்றுச் சித்திரம் வாங்கினாற்
கைகொட்டிச் சிரியாரோ? (வீரசுதந்திரம்) 6

182. வந்தே மாதர மென்று வணங்கியபின்
மாயத்தை வணங்குவரோ?[2]
வந்தே மாதர மொன்றே தாரக
மென்பதை மறப்பாரோ? (வீரசுதந்திரம்) 7

---

(பா-டு): 1 கண்ணினும் இனிய (அர.)
2 மாயத்தை வணங்குவாரோ? (அர.)

## 34. மேத்தா திலகருக்குச் சொல்வது[1]

(புதியகட்சித் தலைவரை நோக்கி நிதானக் கட்சியார் சொல்லுதல்)

சிதம்பர பதவியாகிய முக்தியிலே நந்தனார் அடங்காத தாகம் கொண்டிருந்தார். அது அவரை அடிமை கொண்டிருந்த "ஆண்டை"க்கு மனமில்லை. அவன் நந்தனாரைப் பலவித இமிசைகளுக்கு உட்படுத்தினான். அதுவுமன்றிச் சேரியிலிருந்த நிதானப்பறையர்கள் பலர் நந்தனார் சிதம்பரத்தைப் பற்றி நினைக்கலாகா தென்று போதனை செய்தார்கள். அந்த நிதானஸ்தர்களிலே ஒருவன் பாடிய பாட்டின் கருத்தையும் வர்ண மெட்டையும் தழுவிப் பின்வரும் பாடல் செய்யப்பட்டிருக்கின்றது.

"ஓய், நந்தனாரே நம்ம ஜாதிக்கடுக்குமோ?
நியாயந் தானோ நீர் சொல்லும்"[2]

என்ற வர்ணமெட்டு.

பல்லவி

183. ஓய், திலகரே நம்ம ஜாதிக்கடுக்குமோ?
செய்வது சரியோ, சொல்லும். 1

---

1908 (ஸ்வதேச கீதங்கள்)

1 "நம்ம ஜாதிக்கடுக்குமோ" – (அர.)

2 கோபாலகிருஷ்ண பாரதியாரின் 'நந்தனார் சரித்திரக் கீர்த்தனை'யில் 'ஓய் நந்தனாரே...' எனக் கீர்த்தனை தொடங்கவில்லை'
ஞாயந்தானோ நீர் சொல்லும் - ஓய் - நந்தனாரே
நம்ம சாதிக்கடுக்குமோ
என்றுதான் பல்லவி அமைந்துள்ளது: லாங்மன்ஸ், கிரீன் கம்பெனியாரின் அந்த வெளியீட்டின்படி இதன் ராகம் பியாக், தாளம் தேசாதி

– பதிப்பாசிரியர்

## கண்ணிகள்

184. முன்னறியாப் புது வழக்கம் – நீர்
மூட்டி விட்ட திந்தப் பழக்கம் – இப்போ
தெந்நகரிலு மிது[1] முழக்கம் – மிக
இடும்பை செய்யுமிந்த ஒழுக்கம் (ஓய், திலகரே) 2

185. சுதந்திர மென்கிற பேச்சு – எங்கள்
தொழும்புக ளெல்லாம் வீணாய்ப் போச்சு – இது
மதம்பிடித் ததுபோ லாச்சு – எங்கள்
மனிதர்க்கெல்லாம் வந்த தேச்சு[1] (ஓய், திலகரே) 3

186. வெள்ளை நிறத்தவர்க்கே ராஜ்யம் – அன்றி
வேறெவ ருக்குமது தியாஜ்யம் – சிறு
பிள்ளைக ளுக்கே யுபதேசம் – நீர்
பேசி வைத்ததெல்லா மோசம். (ஓய், திலகரே) 4

---

(பா-டு): 1 'என்னகரிலு மிது' (அர.)

## 35. மாஜினி என்ற இத்தாலி தேசத்துத் தேசாபிமானி தம்மால் ஸ்தாபிக்கப்பட்ட "யௌவன இத்தாலி" என்ற சங்கத்திலே செய்துகொண்ட பிரதிக்கினை[1]

187. பேரருட் கடவுள் திருவடி யாணை,
பிறப்பளித் தெமையெலாம் புரக்கும்
தாரணி விளக்காம் என்னரு நாட்டின்
தவப்பெய ரதன்மிசை யாணை,
பாரவெந் துயர்கள் தாய்த்திரு நாட்டின்
பணிக்கெனப் பல்விதத் துழன்ற
வீரர்,நங் நாடு வாழ்கென வீழ்ந்த
விழுமியோர் திருப்பெய ராணை.

188. ஈசனிங் கெனக்கு மென்னுடன் பிறந்தோர்
யாவர்க்கு மியற்கையி னளித்த
தேசமின் புறுவான் எனக்கவன் பணித்த
சீருய ரறங்களி னாணை,

---

*1908 (ஸ்வதேச கீதங்கள்)*

*1 'மாஜினி' - (பா.ஆ.)*
*'மாஜினியின் பிரதிக்கினை' - (பா.பி.)*
*'மாஜினியின் சபதம்! - (அர.)*

*(பாரதியார் தந்த தலைப்பினை நகவளைவில் அமைத்துள்ளனர்.)*

மாசறு மென்னற் றாயினைப் பயந்தென்
வழிக்கெலாம் உறையுளாம் நாட்டின்
ஆசையிங் கெவர்க்கு மியற்கையா மன்றோ?
அத்தகை யன்பின்மீ தாணை. 2

189. தீயன புரிதல், முறைதவி ருடைமை,
செம்மைதீர் அரசியல், அநீதி
ஆயவற் றென்னெஞ் சியற்கையி னெய்தும்
அரும்பகை யதன்மிசை யாணை,
தேயமொன் றற்றேன், நற்குடிக் குரிய
வுரிமைகள் சிறிதெனு மில்லேன்,
தூயசீ ருடைத்தாம் சுதந்திரத் துவசம்
துளங்கிலா நாட்டிடைப் பிறந்தேன். 3

190. மற்றைநாட் டவர்முன் னின்றிடும் போழ்து
மண்டுமென் வெட்கத்தி னாணை.
முற்றிய வீடு பெறற்கெனப் படைப்புற்
றச்செயல் முடித்திட வலிமை
அற்றதா மறுகும் எனனுயிர்க் கதனி
லார்ந்தபே ராவலி னாணை,
நற்றவம் புரியப் பிறந்ததா யினுமிங்
நலனறு மடிமையின் குணத்தால் 4

191. வலியிழந் திருக்கு மென்னுயிர்க் கதன்கண்
வளர்ந்திடும் ஆசைமீ தாணை!
மலிவுறு சிறப்பின் எம்முடை முன்னோர்
மாண்பதன் நினைவின்மீ தாணை!
மெலிவுட னிந்நாள் யாங்கள்வீழ்ந் திருக்கும்
வீழ்ச்சியி னுணர்ச்சிமீ தாணை.

பொலிவுறு புதல்வர் தூக்கினி லிறந்தும்
புன்சிறைக் களத்திடை யழிந்தும், 5

192. வேற்றுநா டுகளில் அவர்துரத் துண்டு![1]
மெய்குலைந் திறந்துமே படுதல்
ஆற்றகி லாராய் எம்மரு நாட்டின்
அன்னைமா ரழுங்கணீ ராணை,
மாற்றல ரெங்கள் கோடியர்க் கிழைக்கும்
வகுக்கொணாத் துயர்களி னாணை,
ஏற்றிவ் வாணை யனைத்துமேற் கொண்டே
யான்செயுஞ் சபதங்கள் இவையே! 6

193. கடவுளின் நாட்டிற் கீந்ததோர் புனிதக்
கட்டளை தன்னினும், அதனைத்
திட்டுற நிறுவ முயலுதல் மற்றித்
தேசத்தே பிறந்தவர்க் கெல்லாம்
உடனுறு கடமை யாகுமென் பதினும்
ஊன்றிய நம்புதல் கொண்டும்,
தடநில மிசையோர் சாதியை இறைவன்
சமைகெனப்[2] பணிப்பனேல் அதுதான் 7

194. சமைதலுக் குரிய திறமையும் அதற்குத்
தந்துள னென்பதை யறிந்தும்,
அமையுமத் திறமை ஜனங்களைச் சாரும்,
அன்னவர் தமக்கெனத் தாமே
தமையல தெவர்கள் துணையுமில் லாது
தம்மருக் திறமையைச் செலுத்தல்
சுமையெனப் பொறுப்பின் செயத்தினுக் கதுவே
சூழ்ச்சியா மென்பதை யறிந்தும், 8

(பா-டு): 1 வேற்று நாடுகளில் அவர் துரத்துண்டும் - (பா.பி., அர.)
2 சமைக்கெனப் (அர.)

195. கருமமுஞ் சொந்த நலத்தினைச் சிறிதும்
கருதிடா தளித்தலுந் தானே
தருமமா மென்றும், ஒற்றுமை யோடு
தளர்விலாச் சிந்தனை கொளலே
பெருமைகொள் வலியா மென்றுமே மனத்திற்
பெயர்ந்திடா உறுதிமேற் கொண்டும்,
அருமைசால் சபத மிவைபுரி கின்றேன்,
ஆணைக ளனைத்து முற்கொண்டே. 9

196. என்னுட னொத்த தருமத்தை யேற்றோர்
இயைந்தஇவ் "வாலிபர் சபை"க்கே
தன்னுடல், பொருளும், ஆவியு மெல்லாம்
தத்தமா வழங்கினேன். எங்கள்
பொன்னுயர் நாட்டை யொற்றுமை யுடைத்தாய்ச்
சுதந்திரம் பூண்டது வாகி,
இன்னுமொர்[1] நாட்டின் சார்வில தாகிக்
குடியர சியன்றதா யிலக. 10

197. இவருடன் யானு மிணங்கியே யென்று
மிதுவலாற் பிறதொழி லிலனாய்த்
தவறறு முயற்சி[2] செய்திடக் கடவேன்.
சந்ததஞ் சொல்லினால், எழுத்தால்,
அவமறு செய்கை யதனினால், இயலும்
அளவெலாம், எம்மவ ரிந்த
நவமுறு சபையி னொருபெருங் கருத்தை
நன்கிதின் அறிந்திடப் புரிவேன்.

(பா-டு): 1 இன்னுமோர் (அர.)
2 தவமுறு முயற்சி (அர.)

198. உயருமிந் நோக்க நிறைவுற "இணக்கம்"
ஒன்றுதான் மார்க்கமென் பதுவும்,
செயம்நிலை யாகச் செய்திடற் கறமே
சிறந்ததோர் மார்க்கமென் பதுவும்,
பெயர்வற எங்கள் நாட்டினர் மனதிற்[1]
பேணுமா றியற்றிடக் கடவேன்.
அயலொரு சபையி லின்றுதோ றென்றும்
அமைந்திடா திருந்திடக் கடவேன். 12

199. எங்கள்நாட் டொருமை யென்னொடுங் குறிக்கும்
இச்சபைத் தலைவரா யிருப்போர்
தங்களாக் கினைக ளனைத்தையும் பணிந்து
தலைக்கொளற் கென்றுமே கடவேன்.
இங்கென தாவி மாய்ந்திடு மேனு
மிவர்பணி வெளியிடா திருப்பேன்.
துங்கமார் செயலாற் போதனை யாலும்
இயன்றிடுந் துணையிவர்க் களிப்பேன். 13

200. இன்று மெந்நாளு மிவைசெயத் தவறேன்
மெய்யிது. மெய்யிது. இவற்றை
என்றுமே தவறி யிழைப்பனே லென்னை
ஈசனார் நாசமே புரிக,
அன்றியும் மக்கள் வெறுத்தெனை யிகழ்க,
அசத்தியப் பாதகஞ் சூழ்க,
நின்றதீ யெழுவாய் நரகத்தின் விழ்ந்து[3]
நித்தம்யா னுழலுக மன்னோ! 14

---

(பா-டு): 1 பெயர்வற எங்கள் நாட்டினர் மனத்திற் - (அர.)
2 எங்கள் நாட்டொருமை என்னொடுங் குறிக்கும் - (அர.)
3 நின்ற தீ யெழுவாய் நரகத்தின் வீழ்ந்து - (பா. பி., அர.)

201. பேசி நின்ற பெரும்பிர திக்கினை
மாசி லாது நிறைவுறும் வண்ணமே,
ஆசி கூறி யருளுக, ஏழையேற்
கீச னென்று மிதயத் திலகியே. 15

## 36. கலெக்டர் விஞ்ச்

### ஸ்ரீ சிதம்பரம் பிள்ளைக்குச் சொல்லுதல்

"நந்தன் சரித்திர"த்திலே ஆண்டை நந்தனுடைய சிதம்பர வாஞ்சையை மற்றப் பறையர்கள் வந்து சொல்லக் கேட்டு மஹா கோபங் கொண்டு நந்தனை நோக்கி "சேரி முற்றுஞ் சிவ பக்தி பண்ணும்படி விட்டையாம் அடி யிட்டையாம்" என்பது முதலான வார்த்தைகள் கூறிப் பயமுறுத்துகிறான். அதன் குறிப்பைத் தழுவித் திருநெல்வேலி ஜில்லா கலெக்டரா கிய விஞ்ச், ஸ்ரீ சிதம்பரம் பிள்ளைக்குக் கூறியதாகப் பின்வரும் கண்ணிகள் எழுதப்பட் டுள்ளன.

தண்டகம் – ஆதிதாளம்*
சேரி முற்றும் சிவபக்தி பண்ணும்படி
விட்டையாம் - அடி - யிட்டையாம்

என்ற வர்ணமெட்டு.

**202.** நாட்டி லெங்கும் சுதந்திர வாஞ்சையை[1]
நாட்டினாய் - கனல் – மூட்டினாய்

.......................................

1909-இல் வெளிவந்த 'ஜன்ம பூமி' என்ற தொகுப்பில் வெளிவந்த மூலம் இதற்கு ஆதாரம். ஆனால், இந்தப் பாடலும் அடுத்த பாடலும் 4-4-1908 'இந்தியா' இதழில் வெளிவந்திருப்பதற்கான சான்றுகள் உள்ளன. பின்னிணைப்பில் விவரம் காண்க.

* 'நந்தனார் சரித்திரக் கீர்த்தனைப் பதிப்பில் ராகம் - சங்கராபரணம்; தாளம் - மிச்ரஏகம் எனப் பகுக்கப்பட்டுள்ளது.

(பா-டு): 1 நாட்டி லெங்கும் ஸ்வதந்திர வாஞ்சையை (பா.பி , அர.)

வாட்டி யுன்னை மடக்கிச் சிறைக்குள்ளே
மாட்டுவேன் – வலி – காட்டுவேன். (நாட்டி) 1

203. கூட்டங் கூடிவந் தேமா தரமென்று
கோஷித்தாய் – எமைத் – தூஷித்தாய்
ஓட்ட நாங்க ளெடுக்கவென் றேகப்பல்
ஓட்டினாய் – பொருள் – ஈட்டினாய். (நாட்டி) 2

204. கோழைப் பட்ட ஜனங்களுக் குண்மைகள்
கூறினாய் – சட்ட – மீறினாய்
ஏழைப் பட்டிங் கிறத்த லிழிவென்றே
யேசினாய் – வீரம் – பேசினாய். (நாட்டி) 3

205. அடிமைப் பேடிகள் தம்மை மனிதர்கள்
ஆக்கினாய் – புன்மை – போக்கினாய்
மிடிமை போதும் நமக்கென் றிருந்தோரை
மீட்டினாய் – ஆசை – யூட்டினாய். (நாட்டி) 4

206 தொண்டொன் றேதொழி லாக்கொண் டிருந்தோரைத்
தூண்டினாய் – புகழ் – வேண்டினாய்.
கண்டகண் டதொழில் கற்கமார்க் கங்கள்
காட்டினாய் – சோர்வை – யோட்டினாய். (நாட்டி) 5

207. எங்குமிந் தஸ்வ ராஜ்ய விருப்பத்தை[1]
ஏவினாய் – விதை – தூவினாய்

---

பாரதி ஆச்ரமப் பதிப்பில் இப் பாடலின் தலைப்பு "ஆங்கிலேயன் ஒரு தேச பக்தனுக்குக் கூறுவது" என்று மாற்றப்பட, பாரதி பிரசுராலயமும் மாற்றப்பட்ட தலைப்பையே தந்தது. ஆனால், அரசாங்க வெளியீட்டில் "வெள்ளைக்கார விஞ்ச் துரை கூற்று" என்று காணப்படுகிறது. மற்றும், ராகம் – தண்டகம், தாளம் – ஆதி என்றும் தெளிவுபடவும், ராக தாளக் குறிப்பு இடம்பெற்றுள்ளது.

*(பா-டு): 1. 'எங்கு மிந்த சுயராஜ்ய விருப்பத்தை' - (அர.)*

சிங்கம் செய்யுந் தொழிலைச் சிறுமுயல்
செய்யவோ – நீங்கள் – உய்யவோ? (நாட்டி) 6

208. சுட்டு வீழ்த்தி யேபுத்தி வருத்திடச்
சொல்லுவேன் – குத்திக் – கொல்லுவேன்
தட்டிப் பேசுவோ ருண்டோ? சிறைக்குள்ளே
தள்ளுவேன் – பழி – கொள்ளுவேன். (நாட்டி) 7

## 37. கலெக்டர் வின்சுக்கு

ஸ்ரீ சிதம்பரம் பிள்ளை சொல்லிய மறுமொழி*

209. சொந்த நாட்டிற் பரர்க்கடி மைசெய்தே
துஞ்சிடோம் – இனி – யஞ்சிடோம்
எந்த நாட்டினு மிந்த[1]அ நீதிகள்
ஏற்குமோ? – தெய்வம் – பார்க்குமோ? *1*

210. வந்தே மாதர மென்றுயிர் போம்வரை
வாழ்த்துவோம் – முடி – தாழ்த்துவோம்
எந்த மாருயி ரன்னையைப் போற்றுதல்
ஈனமோ? – அவ – மானமோ? *2*

211. பொழுதெல்லா மெங்கள் செல்வங் கொள்ளைகொண்டு
போகவோ? – நாங்கள் – சாகவோ?
அழுது கொண்டிருப் போமோ?ஆண் பிள்ளைகள்
அல்லமோ? – உயிர் – வெல்லமோ? *3*

........................................

*1909 (ஜன்மபூமி)*

*தேசபக்தன் ஆங்கிலேயனுக்குக் கூறும் மறுமொழி (பாரதி ஆச்ரம, பாரதி பிரசுராலயப் பதிப்புகள்)*

*''தேசபக்தர் சிதம்பரம் பிள்ளை மறுமொழி'' (அர.)*

*(பா-டு): 1 எந்த நாட்டிலு மிந்த (அர.)*

212. நாங்கள் முப்பது கோடி ஜனங்களும்
நாய்களோ? – பன்றிச் – சேய்களோ?
நீங்கள் மட்டு மனிதர்க ளோவிது
நீதமோ? – பிடி – வாதமோ? 4

213. பார தத்திடை யன்புசெ லுத்துதல்
பாபமோ? – மனஸ் – தாபமோ?
கூறு மெங்கள் மிடிமையைத் தீர்ப்பது
குற்றமோ? – இதிற் – செற்றமோ? 5

214. ஒற்று மைவழி யொன்றே வழியென்ப
தோர்ந்திட்டோம் – நன்கு – தேர்ந்திட்டோம்
மற்று நீங்கள் செயுங்கொடு மைக்கெலா
மலைவுறோம் – சித்தம் – கலைவுறோம். 6

215. சதையைத் துண்டுதுண் டாக்கினு முன்னெண்ணம்
சாயுமோ? – ஜீவன் – ஓயுமோ?
இதையத் துள்ளே யிலங்கு மஹாபக்தி
யேகுமோ? – நெஞ்சம் – வேகுமோ? 7

# 38. ஸ்ரீ கிருஷ்ண ஸ்தோத்திரம்*

## கவிகள்

### ராகம் கமாஸ், ஆதி தாளம்

216. என்று தணியுமிந்த சுதந்திர தாகம்?[1]
என்று மடியுமெங்கள் அடிமையில் மோகம்?[2]
என்றெம தன்னைகை விலங்குகள் போகும்?
என்றெம தின்னல்கள் தீர்ந்துபொய் யாகும்?
அன்றொரு பாரத மாக்கவந் தோனே
ஆரியர் வாழ்வினை யாதரிப் போனே
வென்றி தருந்துணை நின்னரு ளன்றோ
மெய்யடியோ மின்னும் வாடுதல் நன்றோ? 1

217. பஞ்சமு நோயுநின் மெய்யடி யார்க்கோ?
பாரினில் மேன்மைகள் வேறினி யார்க்கோ?
தஞ்சம 'டைந்தபின்[3] கைவிட லாமோ?
தாயுந்தன் குழந்தையைத் தள்ளிடப் போமே?

........................................

*1908*

"சுதந்திர தாகம்" (அரசாங்க வெளியீடு)

*1909இல் வெளிவந்த 'ஜன்ம பூமி' என்ற தொகுதியிலுள்ளபடி இங்கே வெளியிடப்பட்டுள்ளது. ஆனால், இந்தப் பாடல் 1908 மார்ச்சுத் திங்களிலேயே எழுதப்பட்டிருக்க வேண்டும். பின்னிணைப்பில் விவரம் காண்க.

(பா—டு): 1 என்று தணியும் இந்தச் சுதந்திர தாகம்? (அர.)
2 என்று மடியும் எங்கள் அடிமையின் மோகம்? - (கவிமணி)
3 தஞ்சமென்றடைந்தபின் - (கவிமணி)

அஞ்சலென் றருள்செயுங் கடமையில் லாயோ?
ஆரிய நீயுநின் அறமறந் தாயோ?
வெஞ்செய லரக்கரை வீட்டிடு வோனே
வீர சிகாமணி, ஆரியர் கோனே.

## 39. குணம் பல

218. "ஆரியர் கட்கிங் கமைகுணம் பலவே.
அவையே,
முன்னோர் பயின்ற முறைமையி னன்மையைப்
பின்னோர் தமவெனப் பேணுத லொன்றே;
தான் பிறந்திட்ட தகைபெறு நாட்டிற் 5
பின்னிடா வன்பைப் பெற்றிட லொன்றே;
அவர்பெறும் பேரினை யருமகற் கிட்டு
வாய்மணந் திடவே வழங்குத லொன்றே;
இற்புற மாகா வகைசெய லொன்றே." 9

---

*இந்தியா: 2-5-1908*

*சான்று: பாரதி புதையல் II - பக்:*

*"ராணி லக்ஷ்மீபாய்" பற்றிய வரலாற்றுக் கட்டுரையின் இறுதியில் தலைப்பு எதுவுமின்றி இப்பாடல் அமைந்துள்ளது. 'குணம் பல' என்ற தலைப்பு இப் பதிப்பாசிரியரால் தரப்பெற்றது.*

## 40. பாரததேவியின் திருத்தசாங்கம்

### நேரிசை வெண்பா

### நாமம்

**காம்போதி***

**219.** பச்சை மணிக்கிளியே பாவியெனக் கேயோகப்
பிச்சை யருளியதாய் பேருரையாய் - இச்சகத்திற்
பூரணமா ஞானப் புகழ்விளக்கை நாட்டுவித்த
பாரதமா தேவியெனப் பாடு. 1

### நாடு

வஸந்தா

**220.** தேனார் மொழிக்கிள்ளாய் தேவியெனக் கானந்த
மானாள்பொன் னாட்டை யறிவிப்பாய் - வானாடு
பேரிமய வெற்புமுதற் பெண்குமரி யீறாகும்
ஆரியநா டென்றே யறி. 2

.......................................

*இந்தியா: 10-10-1908*

*ஜன்ம பூமி (1909), நாட்டுப் பாட்டு (1919) என்ற பெயர்களில் வெளிவந்த பாரதியார் கவிதைத் தொகுப்பு நூல்களில் இத் தசாங்கம் பின்னர் இடம் பெற்றிருக்கிறது. பாரதியார் மறைவுக்குப் பின் இ1922-இல் திருமதி செல்லம்மா பாரதியின் முயற்சியால் 'பாரத ஆச்ரமம்' என்ற வெளியீட்டகத்தின் வாயிலாக வந்த தொகுப்பில் ஒவ்வொரு வெண்பாவையும் பாடுதற்குரிய இராகத்தின் பெயர் தரப்பட்டுள்ளது.*

## நகர்

மணிரங்கு

221. இன்மழலைப் பைங்கிளியே யெங்க ளுயிரானாள்
நன்மையுற வாழு நகரெதுகொல் - சின்மயமே
நானென் றறிந்த நனிபெரியோர்க் கின்னமுது
தானென்ற காசித் தலம். 3

## ஆறு

சுருட்டி

222. வண்ணக் கிளிவந்தே மாதரமென் றோதுவரை[1]
யின்னலறக் காப்பாளி யாறுரையாய் - நன்னர்செயத்
தான்போம் வழியெலாந் தன்மமொடு பொன்விளைக்கும்
வான்போந்த கங்கையென வாழ்த்து. 4

## மலை

கானடா

223. சோலைப் பசுங்கிளியே தொன்மறைக ணான்குடையாள்
வாலை வளரு மலைகூறாய் - ஞாலத்துள்
வெற்பொன்று மீடிலதாய் விண்ணில் முடிதாக்கும்
பொற்பொன்று வெள்ளைப் பொருப்பு. 5

## ஊர்தி

தன்யாசி

224. சீருஞ் சிறப்புமுயர் செல்வமுமோ ரெண்ணற்றாள்
ஊரும் புரவி யுரைதத்தாய் தேசிற்

---

(பா-டு): 1 வண்ணக்கிளியே! வந்தேமாதரமென் றோதினரை - கவிமணி

பரிமிசையூர் வாளல்லள் பாரனைத்து மஞ்சும்
அரிமிசையே யூர்வா ளவள். 6

## படை

முகாரி

225. கருணை யுருவானாள் காய்ந்தெழுங்காற் கிள்ளாய்
செருநரைவீழ்த் தும்படையென் செப்பாய் - பொருபவர்மேற்
றண்ணளியான் வீழாது,[1] வீழிற் றகைப்பரிதாந்
திண்ணமுறு வான்குலிசம் தேறு[2]. 7

## முரசு

செஞ்சுருட்டி

226. ஆசை மரகதமே யன்னைதிரு முன்றிலிடை
யோசை வளர்முரச மோதுவாய் - பேசுகவோ
சத்தியமே, செய்க தருமமே யென்றொலிசெய்
முத்திதரும் வேத முரசு. 8

## தார்

பிலகரி

227. வாரா யிளஞ்சுகமே வந்திப்பார்க் கென்றுமிடர்
தாராள் புனையுமணித் தார்கூறாய் – சேராரை
முற்றாக் குறுநகையான் முற்றுவித்துத்[3] தானொளிர்வாள்
பொற்றா மரைத்தார் புனைந்து. 9

---

(பா-டு): 1 தண்ணளியால் விழாது - (அர.)
2 திண்ணமுறு வான்குலிசம்; தேரு. - (பா. பி., அர.)
3 முற்றாக் குறுநகையால் முற்றுவித்துத் - (நாட்டுப் பாட்டு)

## கொடி

### கேதாரம்

228. கொடிப்பவன வாய்க்கிள்ளாய் குத்திரமுந் தீங்கு
மடிப்பவளின் வெல்கொடிதான் மற்றென்? – அடிப்பணிவார்
நன்றாரத் தீயார் நலிவுறவே வீசுமொளி
குன்றா வயிரக் கொடி. 10

## 41. எங்கள் தாய்

*(அண்ணாமலைரெட்டி காவடிச் சிந்திலுள்ள "ஆறுமுகவடி வேலவனே" என்ற பாட்டின் வர்ணமெட்டு)**

**229.** தொன்று நிகழ்ந்த தனைத்து முணர்ந்திடு
சூழ்கலை வாணர்களும் – இவள்
என்று பிறந்தவ ளென்றுண ராத
இயல்பினளா மெங்கள் தாய். 1

**230.** யாரும் வகுத்தற் கரியபி ராயத்த
ளாயினு மேயெங்கள் தாய் – இந்தப்
பாருளிந் நாளுமோர்[1] கன்னிகை யென்னப்
பயின்றிடு வாளெங்கள் தாய். 2

**231.** முப்பது கோடி முகமுடை யாளுயிர்
மொய்ம்புற வொன்றுடை யாள் – இவள்

.......................................

இந்தியா: *7-11-1908*

* 'இந்தியா'வில் வெளிவந்தபின் இப்பாடல் ஜன்மபூமி (1909), நாட்டுப் பாட்டு (1919) ஆகிய இரு தொகுதிகளிலும் இடம் பெற்றுள்ளது. நூல்களில் வெளியிட்டபோது பாரதியார் சில பாட வேறுபாடுகள் செய்திருக்கிறார். நாட்டுப்பாட்டுத் தொகுதியுள் சந்தி, சீர் பிரித்தல் போன்றனவும் மாறுபடுகின்றன. மற்றும் 'அண்ணாமலைரெட்டி' என்பதும் விடுபட்டிருக்கிறது. 'ஜன்ம பூமி' யையே அனைத்துப் பதிப்புகளும் பின்பற்றியுள்ளன.

(பா-டு): 1 பாருளிந் நாளுமோர் (ஜன்மபூமி)
பாருளெந் நாளுமோர் (நாட்டுப் பாட்டு)

செப்பு மொழிபதி னெட்டுடையாள், எனிற்
சிந்தனை யொன்றுடை யாள். 3

232. நாவினில் வேத முடையவள் கையில்
நலந்திகழ் வாளுடை யாள் – தனை
மேவினர்க் கின்னருள் செய்பவள் தீயரை
வீட்டிடு தோளுடை யாள். 4

233. அறுபது கோடி தடக்கைக ளாலும்
அறங்கள் நடத்துவள் தாய் – தனைச்
செறுவது நாடி வருபவ ரைத்துகள்
செய்து கிடத்துவள் தாய். 5

234. பூமியி னும்பொறை மிக்குடை யாளுருப்[1]
புண்ணிய மாமெங்கள் தாய் – எனில்[2]
தோமிழைப் பார்முன[3] நின்றிடுங் காற்கொடுந்
துர்க்கையு மாமெங்கள் தாய்.[4] 6

235. கற்றைச் சடைமதி வைத்த துறவியைக்
கைதொழு வாளெங்கள் தாய் – கையி
லொற்றைத் திகிரிகொண் டேழுல காளு
மொருவனை யுந்தொழு வாள். 7

236. யோகத்தி லேநிக ரற்றவ ளுண்மையு
மொன்றென நன்றறிவாள் – உயர்
போகத்தி லேயு நிறைந்தவ ளெண்ணரும்
பொற்குவை தானுடையாள். 8

---

(பா-டு): 1 பூமியி னும்பொறை மிக்குடை யாள்பெரும் - (ஜன்மபூமி 1909)
2 புண்ணிய நெஞ்சினள் தாய் – எனில் (ஜன்மபூமி 1909)
3 தோமிழைப் பார்முன் – (அர.)
4 துர்க்கை யனையவள் (ஜன்மபூமி 1909)

**237.** நல்லற நாடிய மன்னரை வாழ்த்தி
நயம்புரி வாளெங்கள் தாய் – அவர்
அல்லவ ராயி னவரை விழுங்கிப்பின்
ஆனந்தக் கூத்திடு வாள். 9

**238.** வெண்மை வளரிம யாசலன் றந்த
விறன்மக ளாமெங்கள் தாய் – அவன்
திண்மை மறையினுந் தான்மறை யாணித்தஞ்
சீருறு வாளெங்கள் தாய். 10

## 42. சுதந்திரம்*

239. தாதையர் குருதியிற் சாய்ந்துதாம் மடியினும்
பின்வழி மக்கள் பேணுமா றளிக்கும்
சுதந்திரப் பெரும்போர் ஓர்காற் றொடங்குமேற்
பன்முறை தோற்கும் பான்மைத் தாயினும்
இறுதியின் வெற்றியொ டிலகுதல் திண்ணம். 5

*இதன் உரையாதெனில்:-*

*''பரம்பரையாகத் தந்தைமார் தாம் இரத்தத்தில் வீழ்ந்து மாய்வாரேனும், தமது சந்ததியார் நடத்திச் செல்லுமாறு தந்துவிட்டுப் போகின்ற சுதந்திர யுத்தமானது பலமுறை தோற்றுப் போயினும் கடைசிவரை ஜயங் கொண்டே முடிவதாகும்''.*

---

*இந்தியா: 21-11-1908*

* ''முதற் பிரயத்தனம்'' என்ற கட்டுரையினிடையே இப்பாடல் காணப்படுகிறது

# 43. ஜய பாரத!

240. சிறந்து நின்ற சிந்தை யோடு
தேய நூறு வென்றிவள்
மறந்த விர்ந்தந் நாடர் வந்து
வாழி சொன்ன போழ்தினும்,
இரந்து மாண்பு[1] தீர மிக்க
ஏழ்மை கொண்ட போழ்தினும்,
அறந்த விர்கி லாது[2] நிற்கும்
அன்னை வெற்றி கொள்கவே!

241. நூ்று கோடி நூல்கள் செய்து
நூறு தேய வாணர்கள்
தேறு நுண்மை[3] கொள்ள விங்கு
தேடி வந்த நாளினும்,
மாறு கொண்டு கல்வி தேய
வண்மை தீர்ந்த நாளினும்,

---

*இந்தியா: 5-12-1908*

*இப்பாடல் ஜன்மபூமி (1909), நாட்டுப் பாட்டு (1919) (ஆகிய நூல் தொகுதிகளிலும் இடம் பெற்றுள்ளது.*

*'நாட்டுப்பாட்டு'த் தொகுதியுள்*
*"தேவருண்ணுநன்மருந்து" என்ற பாடல் இடம் பெறவில்லை.*

*(பா·டு): 1 இறந்து மாண்பு (ஜன்மபூமி)*
*2 அறந்தவிர்க்கி லாது (ஜன்மபூமி)*
*3 தேறு முண்மை (நாட்டுப் பாட்டு)*

ஈறு நிற்கு முண்மை யொன்றி
றைஞ்சி நிற்பள் வாழ்கவே!

242. வில்லர் வாழ்வு குன்றி யோய
வீர வாளு மாயவே
வெல்லு ஞானம் விஞ்சி யோர்செய்
மெய்ம்மை நூல்கள் தேயவும்
சொல்லு மிவ்வ னைத்தும் வேறு
சூழு நன்மை யுந்தர
*வல்ல நூல்கெ டாதுகாப்பள்
வாழி யன்னை வாழியே

243. தேவ ருண்ணு நன்ம ருந்து
சேர்ந்த கும்ப மென்னவே[1]
மேவு வார்க டற்க ணுள்ள
வெள்ள நீரை யொப்பவும்
பாவ நெஞ்சி னோர்நி தம்ப
றித்தல் செய்வ ராயினும்
ஒவி லாத செல்வ மின்னும்
ஓங்கு மன்னை வாழ்கவே!

244. இதந்த ருந்தொ ழில்கள்செய்
திரும்பு விக்கு நல்கினள்
பரந்த ரற்கு ரியவாய
பன்ம தங்கள் காட்டினள்[2]

---

* உபநிஷத்து அல்லது கீதை

(பா-டு): 1 சேர்ந்த கும்ப மென்னவும் (ஜன்மபூமி)
2 பன்ம தங்கள் நாட்டினள் – (அர.)

விதம்பெ றும்ப னாட்டி னர்க்கு
வேறொ ருண்மை தோற்றவே
சுதந்தி ரத்தி லாசை யின்று
தோற்றி னாள்மன் வாழ்கவே! 5

# 44. ஸ்வதந்திர தாகம்*

## கண்ணிகள்

245. தண்ணீர்விட் டோவளர்த்தோம்? சர்வேசா, இப்பயிரைக்
கண்ணீராற் காத்தோம்; கருகத் திருவுளமோ? 1

246. எண்ணமெலா நெய்யாக, எம்முயிரி னுள்வளர்ந்த
வண்ணவிளக் கி.்து மடியத் திருவுளமோ? 2

247. ஓரா யிரவருட மோய்ந்து கிடந்தபினர்[1]
வாராது போலவந்த[2] மாமணியைத் தோற்போமா? 3

248. தர்மமே வெல்லுமெனுஞ் சான்றோர்சொற் பொய்யாமோ?
கர்ம விளைவுகள்யாங் கண்டதெல்லாம் போதாதோ?[3] 4

---

*இந்தியா: 19–12–1908*

*இப்பாடல் 'ஜன்மபூமி' (1909), 'நாட்டுப் பாட்டு' (1919) ஆகிய தொகுதிகளிலும் இடம்பெற் றுள்ளது. 'நாட்டுப் பாட்டு'த் தொகுதியுள் இப்பாடலின் தலைப்பு "சுதந்திர தாகம்" எனத் திருத்தம் பெற்றுள்ளது. தவிர, 5, 7, 9 ஆகிய மூன்று கண்ணிகளும் விடுபட் டுள்ளன. சில பாடல்களில் சந்தி, சீர் ஆகியன பிரிக்கப்பட் டுள்ளன.*

*"சுதந்திரப் பயிர்" - (அர.)

(பா-டு): 1 ஒய்ந்து கிடந்த பின்னர் (அர.)

2 வாராது போல் வந்த (அர.)

3 கண்டதெலாம் போதாதோ? (நாட்டுப் பாட்டு)

249. மேலோர்கள் வெஞ்சிறையில் வீழ்ந்து கிடப்பதுவும்
நூலோர்கள் செக்கடியில் நோவதுவுங் காண்கிலையோ? 5

250. எண்ணற்ற நல்லோ ரிதயம் புழுங்கியிரு
கண்ணற்ற சேய்போற் கலங்குவது காண்கிலையோ?[1] 6

251. மாதரையு மக்களையும் வன்கண்மை யாற்பிரிந்து
காத லிளைஞர் கருத்தழிதல் காணாயோ? 7

252. எந்தாய்நீ தந்த இயற்பொருளெ லாமிழந்து
நொந்தார்க்கு நீயன்றி நோவழிப்பார் யாருளரோ?[2] 8

253. இன்பச் சுதந்திரநி னின்னருளாற் பெற்றதன்றோ?
அன்பற்ற மாக்க ளதைப்பறித்தாற் காவாயோ? 9

254. வானமழை யில்லையென்றால் வாழ்வுண்டோ? எந்தைசுயா
தீனமெமக் கில்லையென்றால் தீனரெது செய்வோமே? 10

255. நெஞ்சகத்தே பொய்யின்றி நேர்ந்ததெலா நீதருவாய்
வஞ்சகமோ எங்கள் மனத்தூய்மை காணாயோ? 11

256. பொய்க்கோ வுடலும் பொருளுயிரும் வாட்டுகிறோம்?
பொய்க்கோ தீராது புலம்பித் துடிப்பதுமே? 12

257. நின்பொருட்டு நின்னருளால் நின்னுரிமை யாம்கேட்டால்,
என்பொருட்டு நீதான் இரங்கா திருப்பதுவே? 13

258. இன்றுபுதி தாயிரக்கின் றோமா? முன்னோர்
அன்றுகொடு வாழ்ந்த அருமையெலா மோராயோ? 14

259. நீயும் அறமு நிலைத்திருத்தல் மெய்யானால்
ஓயுமுன ரெங்களுக்கிவ் வோர்வரநீ நல்குதியே. 15

---

(பா-டு): 1 கலங்குவதுங் காண்கிலையோ? – (ஜன்மபூமி)
2 நோவழிப்பார் யாருளரே? – (அர.)

## 45. பால கங்காதர திலகர்

260. நாம கட்குப் பெருந்தொண் டியற்றிப்பன்
னாட்டி னோர்தங் கலையினு மவ்வவர்
தாம கத்து வியப்பப் பயின்றொரு
சாத்தி ரக்கட லென்ன விளங்குவோன்;
மாம கட்குப் பிறப்பிட மாகமுன்
வாழ்ந்திந் நாளில் வறண்டயர் பாரதப்
பூம கட்கு மனந்துடித் தேயிவள்
புன்மை போக்குவ லென்ற விரதமே 1

261. நெஞ்ச கத்தொர்[1] கணத்திலு நீங்கிலான்
நீத மேயொ[2] ருருவெனத் தோன்றினோன்
வஞ்ச கத்தைப் பகையெனக் கொண்டதை
மாய்க்கு மாறு மனதிற் கொதிக்கின்றோன்;

---

*1908:*

*திரு எம். வி. ஈசுவர ஐயர் என்பார் 1908 இல் வெளியிட்ட "பால கங்காதர திலகர் ஜீவிய சரிதம்" என்ற நூலில் 'நமது நண்பர் ஸ்ரீமான் ஸி. சுப்பிரமணிய பாரதியார் சொல்லியவை' என்ற குறிப்புடன் இப்பாடல் காணப்படுகிறது.*

*பாரதி ஆச்ரம, பாரதி பிரசுராலயப் பதிப்புகளில் இப்பாடலின் தலைப்பு 'லோகமான்ய பால கங்காதர திலகர்' எனவும், அரசாங்க வெளியீட்டில் 'திலகர் முனிவர் கோன்' எனவும் காணப்படுகிறது.*

*(பா—டு): 1 நெஞ்சகத்தோர் – (அர)*
*2 நீதமேயோர் - (அர)*

துஞ்ச மட்டுமிப் பாரத நாட்டிற்கே
தொண்டி ழைக்கத் துணிந்தவர் யாவரும்
அஞ்செ ழுத்தினைச் சைவர் மொழிதல்போல்
அன்பொ டோதும் பெயருடை யாரியன் 2

262. வீர மிக்க மராட்டியர் ஆதர
மேவிப் பாரத தேவி திருநுதல்
ஆர வைத்த திலக மெனத்திகழ்
ஐய னல்லிசைப் பாலகங் காதரன்
சேர லர்க்கு நினைக்கவுந் தீயென
நின்ற வெங்கள் திலக முனிவர்கோன்
சீர டிக்கம லத்தினை வாழ்த்துவேன்
சிந்தை தூய்மை பெறுகெனச் சிந்தித்தே. 3

## 46. கோகலே[1] சாமியார் பாடல்*

**263.** களக்கமுறு மார்லிநடம்
　　　கண்டுகொண்ட தருணம்
கடைச்சிறியேன் உளம்பூத்துக்
　　　காய்த்ததொரு காய்தான்[2]
விளக்கமுறப் பழுத்திடுமோ?
　　　வெம்பியுதிர்ந் திடுமோ?[3]
வெம்பாது விழினுமென்றன்
　　　கரத்திலகப் படுமோ?
வளர்த்தபழங் கர்சனென்ற[4]
　　　குரங்குகவர்ந் திடுமோ?
மற்றிங்ஙன் ஆட்சிசெயும்
　　　அணில்கடித்து விடுமோ?

---

*இந்தியா : 2-1-1909*

*(பா-டு).* 1 கோக்கலே (பா.பி., அர.)
2 காய்த்த தொடு கனிதான் (பா. பி.)
3 வெம்பி விழுந்திடுமோ? (பா.பி., அர.)
4 வளர்த்த பழம் கர்சானென்ற (பா.பி., அர.)

* 'ஸ்ரீ வடலூர் இராமலிங்க ஸ்வாமிகள் பாடிய 'களக்கமறப் பொது நடனங் கண்டுகொண்ட தருணம்' என்ற உலகறிந்த பாடலைச் சிறிது மாற்றி மார்லி சீர்திருத்தத்துக்கு இணங்கும்படி பின்வருமாறு வேடிக்கையாகப் புனைகிறோம் - பாரதியாரின் 'இந்தியா'வில் மார்லி சீர்திருத்தம் பற்றிய துணைத் தலையங்கத்தில் 'இப்பாடல்' காணப்படுகிறது.

துளக்கமற யான்பெற்றிங்
குண்ணுவனோ வல்லால்
தொண்டைவிக்கு மோ,ஏதும்
சொல்லலரி தாமே?[1]

---

1. சொல்லரிய தாமோ? (பா.பி., அர.)

## 47. கவிதா தேவி*

### அருள் வேண்டல்

264. வாராய் கவிதையாம் மணிப்பெயர்க் காதலி!
பன்னாள் பன்மதி யாண்டுபல கழிந்தன
நின்னருள் வதனநா னேருறக் கண்டே.
அந்தநாள் நீயெனை யடிமையாக் கொளயாம்
மானிடர் குழாத்தின் மறைவுறத் தனியிருந் 5
தெண்ணிலா வின்பத் திருங்கட றிளைத்தேம்.[1]
கலந்தியாம் பொழிலிடைக் களித்தவந் நாட்களிற்[2]
பூம்பொழிற் குயில்களி னின்குரல் போன்ற
தீங்குர லுடைத்தோர் புள்ளினைத் தெரிந்திலேன்.
மலரினத் துன்றன் வாள்விழி யொப்ப 10
நிலவிய தொன்றனை[3] நேர்ந்திலேன், குளிர்புனற்
சுனைகளி லுன்மணிச் சொற்கள்போற் றண்ணிய
நீருடைத் தறிகிலேன், நின்னொடு தமியனாய்
நீயே யுயிரெனத் தெய்வமு நீயென
நின்னையே பேணி நெடுநாள் போக்கினன்[4]. 15

..........................................

*இந்தியா: 16,23-1-1909.*

* *'கவிதைக் காதலி'– (அர.)*

*(பா-டு):* 1 *'தெண்ணிலா வின்பத் திருங்கடற் றிளைத்தோம்' - (பா.பி.அர.)*
2 *'கலந்து யாம் பொழிலிடைக் களித்த வன்னாட்களிற்' - (பா.பி.)*
3 *நிலவிய தொன்றினை – (பா.பி., அர.)*
4 *'நின்னையே பேணி நெடுநாள் போக்கினேன்' - (பா.பி., அர.)*

வானகத் தமுத மடுத்திடும் போழ்து
மற்றதி னிடையோர் வஞ்சகக் கொடுமுள்[1]
வீழ்ந்திடைத்[2] தொண்டையில் வேதனை செய்தென
நின்னொடு களித்து நினைவிழந் திருந்த
எனைத்துயர்ப் படுத்தவந் தெய்திய துலகிற் 20
கொடியன யாவுளுங் கொடியதா மிடிமை.
அடிநா முள்ளினை யயல்சிறி தேகிக்
களைந்துபின் வந்து காண்பொழு தையகோ!
மறைந்தது தெய்வ மருந்துடைப் பொற்குடம்.
மிடிமைநோய் தீர்ப்பான் விணர்தம் முலகப்[3] 25
புன்றொழி லொன்று போற்றுது மென்பான்
தென்றிசைக் கண்ணொரு சிற்றூர்க் கிறைவனாந்
*திமிங்கில வுடலுமோர் சிறியநா யறிவும்
பொருந்திய[4] வொருவனைத் துணையெனப் புகுந்தவன்
பணிசெய விசைந்தேன். பாதகி[5] நீ யென்னைப் 30
பிரிந்துமற் றகன்றனை. பேசொணா நின்னரு
ளின்ப மத்தனையு மிழந்துநா னுழன்றேன்.
சின்னாள் கழிந்தபின் - யாதெனச் செப்புகேன்!
நின்னொடு வாழ்ந்த நினைப்புமே தேய்ந்தது.
கதையிலோர் முனிவன் கடியதாஞ் சாப 35

(பா-டு): 1 'மற்றதனிடையோர் வஞ்சகந் தொடுமுள்' (பா.பி., அர.)
2 வீழ்த்திடைத் (பா. பி., அர.)
3 மிடிமைநோய் தீர்ப்பான் வினர்தம் முலகப்' — (அர.)
4 திருந்திய (பா.பி., அர.)
5 பணிசெய இசைந்தேன், பதகி நீ - (பா.பி., அர.)
('பாதகி நீயெனைப்' என்றல் சிறப்பு.)

*இக்குறியிட்ட வரி அனைத்துப் பதிப்புக்களிலும், விடுபட்டுள்ளது.

வினைவினாற் பன்றியா வீழ்ந்திடு முன்னர்த்
தன்மக விடை"யென் றயைநீ யான்புலைப்
பன்றியாம் போது பார்த்து நில்லாதை[1]!
விரைவிலோர் வாள்கொடு வெறுப்புடை யவ்வுடல்
துணித்தெனக் கொன்று தொலைத்தலுன் கடனாம். 40
பாவமிங் கில்லையென் பணிப்பிஃ தாகலின்.".
தாதைசொற் கிளைஞன் தளர்வொடு மிணங்கினன்[2]
முனிவனும் பன்றியா முடிந்தபின் மைந்தன்
முன்னவன் கூறிய மொழியினை நினைந்தும்
இரும்புகழ் முனிவனுக் கிழியதா மிவ்வுட 45
லமைந்தது கண்டுநெஞ் சழன்றிடல் கொண்டும்
வாள்கொடு பன்றியை மாய்த்திட லுற்றனன்.
ஆயிடை மற்றவ் வருந்தவப் பன்றி
யினையது கூறும் "ஏடா! நிற்க!
நிற்க! நிற்க! முன்னர்யா நினைந்தவா 50
றத்தனை[3] துன்புடைத் தன்றிவ் வாழ்க்கை!.
காற்றும் புனலுங் கடிப்புற் கிழங்கும்
இனையபல் லின்ப மிதன்கணே யுளவாம்.
ஆறேழ் திங்க ளகன்றபின் வருதியேற்
பின்னெனைக் கோறலாம்" பீழையொ டிவ்வுரை[4] 55
செவியுறீஇ முடிசாய்த் திளையவன்[5] சென்றனன்.
திங்கள்பல போயபின் முனிமகன் சென்று
தாதைப் பன்றியோர் தடத்திடைப் பெடையொடும்

.......................................

(பா-டு): 1 பன்றியாம் போது பார்த்துநில் லாதே! - (அர.)
2 தாதை சொற்கு இளைஞன் தளர்வொடும் இணங்கினான் - (பா.பி., அர.)
3 றத்துணை - (பா.பி.), அத்துணைத் - (அர.)
4 பின்னெனைக் கோறலாம்." பீழையோ டிவ்வுரை - (பா.பி., அர.)
5 செவியுறீஇ முடிசாய்த் திளையவன் - (பா.பி.)

போத்தினம் பலவொடு மன்பினிற் பொருந்தி·
யாடல்கண் டயிர்த்தனன். ஆற்றொணா தருகுசென் 60
"றெந்தாய்! எந்தாய்! யாதரோ மற்றிது!
வேதநூ லறிந்த மேதகு முனிவரர்
போற்றிட வாழ்ந்தநின் புகழ்க்கிது சாலுமோ?"
எனப்பல கூறி யிரங்கினன். பின்னர்
வாள்கொடு பன்றியை மாய்த்திடல் விழைந்தான். 65
ஆயிடை முனிவ னகம்பதைத் துரைக்கும்:
"செல்லடா, செல்க தீக்குணத் திழிஞ![1]
எனக்கிவ் வாழ்க்கை யின்புடைத் தேயாம்.
நினக்கிதிற் றுன்ப நிகழுமேற் சென்றவ்
வாளினின் னெஞ்சை வகுத்துநீ மடிக" 70
என்றிது கூறி யிருந்தவப் பன்றிதன்
இனத்தொடு மோடி யின்னுயிர் காத்தது.
இன்னது கண்ட இளையவன் கருதும்:-
ஆவா! மானிடர் அருமையின் வீழ்ந்து
புன்னிலை யெய்திய போழ்ததி னெடுங்காற் 75
றெருமரு கின்றிலர். சில்பகல் கழிந்தபின்,[2]
புதியதா நீசப் பொய்ம்மைகொள் வாழ்வில்
விருப்புடை யவராய், வேறுதா மென்றும்
அறிந்தி லரேபோன் றதிற்களிக் கின்றார்.
என்சொல்கேன் மாயையி னெண்ணரும் வஞ்சம்! 80
திமிங்கில வுடலுஞ் சிறியநா யறிவும்[3]
ஓரேழ் பெண்டிரு முடையதோ ரலிமகன்[4]

.........................................

(பா-டு): 1 'செல்லடா! செல்கத் தீக்குணத் திழிஞ! - (அர.)
2 றெருமரு கின்றிலர். சிலபகல் கழிந்தபின் - (அர.)
3 திமிங்கில வுடலும் சிறிய ...... (பா. பி.)
திமிங்கில வுடலும் சிறியபுன் மதியும் (அர.)
4 ஓரேழ் பெண்டிரு முடையதோர் ... (பா. பி.)
ஓரேழ் பெண்டிரும் உடையதோர் வேந்தன் (அர.)

தன்பணிக் கிசைந்தென் றருக்கெலா மழிந்து
வாழ்ந்தனென், கதையின் முனிபோல் வாழ்க்கை![1]
கவிதைத் தேவி,நின் காதலை மறந்தேன். 85
ஆங்கதன் பினரிவ் வவனிமீ தளியேன்
சில்லாண் டுள்ளே, பன்னா டேகிப்
பலரொடு வைகிப் பலபல புரிந்து
பலபல கண்டு பலபல வருந்தி
வாணாள், கழித்தேன், வார்கட லதனிடை 90
மீகா னிழந்த வெறுங்கலன் போன்று
காலக் கடலிடைக் கடுந்துயர்த் திரைகளி
னெண்ணிலா வகைநா னெற்றுணாத் திகைத்தனன்.
உலகிடை யின்பமுந் துன்பமு முணர்ந்தேன்.
உயர்வுந் தாழ்வு மொண்மையு மிருளும் 95
நலமுந் தீதும், நாட்டினர் மதிப்பும்
பழிப்புட னட்பும் பகைமையுந் தேர்ந்தேன்.
இத்தனை காலமு மேந்திழைக் கவிதாய்!
புன்னகை யொளிருநின் பொலன்முக மதனைக்
கனவிலும் வந்தருள் செய்திடக் கண்டிலேன். 100
ஒளிதீர் வாள்போ லுவகைதீர் முகம்போற்
சுதந்திர மிழந்த தொண்டர்வாழ் நாடுபோல்
சத்திய மறந்தோர் சாத்திரக் குப்பைபோல்
இடையறா இருட்சிகொண் டிழிந்ததென் வாழ்க்கை.
காலப் போக்கிலென் கருத்தினி லித்தகை 105
வாழ்விடை வெறுப்பு மண்டலா யிற்றால்.
துறவிடை நாட்டந் தோய்ந்திட விரும்பினேன்.
இன்பந் துன்ப மிரண்டையு மொன்றாக்

1 வாழ்ந்தனன் கதையின் முனிபோல் வாழ்க்கை! (பாபி., அர).

காண்பா ரன்றே துறவினைக் கண்டார்.
நாச்சுவை கெட்டோ னல்லூண் வெறுத்திடில் 110
துறவியென் றவனை யாவரே சொல்லுவர்?
உயிர்நய மிழந்தோ னுலகினைக் கைத்திடில்
துறவஃ தாங்கொலோ? சுழற்றலிற் பயனென்?
ஆறேழ் மதிய மாயபி னெனக்குந்
துறவுமா ணிலைக்குந் தொலைமிக வுளதெனல் 115
உளத்தே தேர்ந்தேன். உலகிடை யிதன்பின்யான்
செய்வதென் னுளதே? திண்மையோர் நாடுந்
துறவினுக் கடுத்த தூய்மையும் பெற்றிலேன்;
எண்ணிலா மாக்க ளினிதெனப் போற்றும்
பொறிவழி நலங்களாம் புன்மையும் விழைமயேன்; 120
தன்னுயிர் தானழித் திவ்விழி சடத்தை
மாற்றலுந் தகவென மதித்திடு கில்லேன்;
மானிடர் காணு மின்பமாம் வகைகளில்
விலங்கியல் தவிர்ந்ததா மேவிய தொன்று
கிட்டுமே லதற்கெனக் கிளர்ச்சிகொண் டூக்கம் 125
இழைத்த னன்றாமென எண்ணினன் மனத்தே.
அக்கணத் தன்றே யருளியல் வாய்ந்த
கவிதைத் தேவி,நின் காதலை நினைந்தேன்.
பன்னூறாண்டு படியின்மேற் கல்லாய்த்
தீயதோர் சாபச் செய்கையாற் கிடந்தோன் 130
மற்றையக் கல்லுரு மாறிடப் பின்னு
மானிடன் றானென மனத்திடை யறிபோழ்
தெத்தனை யின்பமுற் றெந்நிலை நிற்பன்?
அத்தகை நிலையினை யளியனேன் எய்தினன்.
வெம்போர் விழையும் வீரனிங் கொருவன் 135
சிறையிடை நெடுநாட் சிறுமைபெற் றிருந்தபின்

வெளியுறப் பெற்றவ் வேளையே தனக்கோர்
அறப்போர் கிடைப்பி னவனெது படுவன்?
அஃதியான் பட்டனன். அணியியற் குயிலே,
நின்முக நகையும் நின்விழி யாழ்மையும் 140
நின்னுதற் றெளிவும் நின்சொல் லினிமையும்
நின்பரி சத்தே நிகழ்ந்திடு புளகமும்
ஈதெலாம் பின்னரு மெண்ணிடைத் தோன்றப்
பின்னுமோர் முறையான் பெருமையோய் நின்னைச்
சரணென அடைந்தேன், தமியெனைக் காத்தி. 145
நின்னரு ளிலையேல், நிலமிசை வேறோர்
பற்று மில்லாதிப் பாவியேன் மடிவனே,
மற்றிது கருதி மனமிரங் குதியால்.
சாகுந் தலமெனத் தலம்புகழ் நாடகம்
வடசொலின் வகுத்த மாண்புடைக் கவிஞனும், 150
தென்றமிழ் மொழியிற் சிலம்பினோர் காதையும்,
வான்றிற லிராமன் வாழ்க்கையு முரைத்த
பெரியோர் தாமுமிங் கிவர்போற் பிறருந்
தையலுன் னெஞ்ச முழுதுநீ தந்திடப்
பெற்றினி திருந்தனர். பேதையேற் கத்தனை 155
உயர்நிலை யளித்திட லொவ்வா தென்றியேல்
வேண்டில னஃதியான், மேம்படு நின்னுள
நாயக மெய்திடு நலமெனக் கடுக்குமோ?
வேண்டில னஃதியான். மெல்லிய லுன்கனிச்
சொல்லொன் றருள்வையேற் றொழுகுவல், போதும்! 160
தண்மலர் விரலினாற் றமியனேன் சிரத்தைத்
தைவரி னதனிற் றருக்கியான் வாழ்வேன்.
முந்தைநா ளென்னை முழுப்பே ரன்பொடு
கலந்தவந் நலத்தைக் கருதவுந் துணியேன்.
அன்றெனக் கிருந்த இளமையு மகத்திடைத் 165

தெளிவுமிந் நாட்களிற் செத்தன வன்றோ?
இளமையின் மானுட ரெனைவருந் தேவரே.
நாட்பட நாட்பட நரர்நலங் கெடுவர்.
வாட்படு விழியாய், மற்றுனக் கெளியேன்
ஆட்படப் பின்னு மகங்குழை வுற்றேன். 170
வாராய் கவிதையா மணிப்பெயர்க் காதலி!
வந்தெனக் கருளுதல் வாழிநின் கடனே.

## 48. குரு கோவிந்த ஸிம்ஹ விஜயம்*

265. ஆயிரத் தெழுநூற் றைம்பத் தாறு
விக்ரம ளாண்டு, வீரருக் கமுதாம்
ஆநந்த புரத்தி[1] லார்ந்தினி திருந்தனன்
பாஞ்சா லத்துப் படர்தரு சிங்கக்
குலத்தினை வகுத்த குருமணி யாவான். 5
ஞானப் பெருங்கடல், நல்லிசைக் கவிஞன்,
வானம்வீழ்ந் துதிரினும் வாள்கொடு தடுக்கும்
வீரர் நாயகன், மேதினி காத்த
குருகோ விந்த சிங்கமாங் கோமகன்.
அவன்றிருக் கட்டளை யறிந்துபல திசையினும் 10
பாஞ்சா லத்துறு படைவலோர் நாடொறும்
நாடொறும் வந்து நண்ணுகின் றாரால்.
ஆனந்த புரத்தி லாயிர மாயிரம்
வீரர்கள் குருவின் விருப்பினைத் தெரிவான்
கூடிவந் தெய்தினர். கொழும்பொழி லினங்களும் 15

.......................................

*இந்தியா:* 30-1-1909, 6, 13, 20-2-1909

*பாரதியார் இந்தப் பாடலுக்கு எழுதிய மொழிப்புரை முதன்முதலாக இப்பதிப்பில்தான் வெளியிடப்படுகின்றது. (பின்னிணைப்பிற் காண்க.)*

* "குருகோவிந்தர்" - (அர.)

(பா-டு): 1 ஆனந்த புரத்தி (பா. பி., அர.)

புன்னகை புனைந்த புதுமலர்த் தொகுதியும்
பைந்நிறம் விரிந்த பழனக் காட்சியும்
"நல்வர வாகுக நம்மனோர் வரவு"என்
றாசிகள் கூறி யார்ப்பன போன்ற
புண்ணிய நாவிற் புகழ்வளர் குரவன்
திருமொழி கேட்கச் செறிந்தனர் சீடர்கள்.
"யாதவன் கூறும்? என்னெமக் கருளும்?
எப்பணி விதித்தெம தேழேழ் பிறவியும்
இன்புடைத் தாக்கும்?" எனப்பல கருதி
மாலோன் றிருமுனர் வந்துகண் ணுயர்த்தே 25
ஆக்கினை தெரிவா னாவலொடு துடிக்கும்
தேவரை யொத்தனர். திடுக்கெனப் பீடத்
தேறிநின் றதுகாண்! இளமையுந் திறலும்
ஆதிபத் தகைமையு மமைந்ததோ ருருவம்
விழிகளிற் றெய்வப் பெருங்கனல் வீசிடத் 30
திருமுடி சூழ்ந்தோர் தேசுகாத் திருப்பத்
தூக்கிய கரத்திற் சுடருமிழ்ந் திருந்தது.
கூறநா நடுங்குமோர் கொற்றக் கூர்வாள்.
எண்ணிலா வீரர் இவ்வுரு நோக்கி
வானின் றிறங்கிய மாந்திரி கன்முனர்ச் 35
சிங்கக் கூட்டந் திகைத்திருந் தாங்கு
மோனமுற் றடங்கி முடிவணங் கினரால்.
வாள்நுனி காட்டி மாட்சியார் குரவன்
திருவுள நோக்கஞ் செப்புவன். தெய்வச்
சேயித ழசைவுறச் சினந்ததோர் எரிமலைக்[1] 40
குமுறுதல் போல்வெளிக் கொண்டன திருமொழி:-
"வாளிதை மனிதர் மார்பிடைக் குளிப்ப

(பா-டு): 1 சேயித ழசைவுறச் சினந்தோர் எரிமலைக் - (பா.பி.)
சேயித ழசைவுறச் சினந்தோர் எரிமலை - (அர.)

விரும்புகின் றேன்யான். தீர்கிலா விடாய்கொள்
தருமத் தெய்வதந்[1] தான்பல குருதிப்
பலிவிழை கின்றதால். பத்தர்காள்[2] நும்மிடை 45
நெஞ்சினைக் கிழித்து நிலமிசை யுதிரம்
வீழ்த்தியித் தேவியின்[3] விடாயினைத் தவிர்ப்ப
யார்வரு கின்றீர்?" என்னலுஞ் சீடர்கள்
நடுங்கியோர் கணம்வரை நாவெழா திருந்தனர்.
கம்மென ஓர்சிறு கணங்கழி வுற்றது. 50
ஆங்கிருந் தார்பல் லாயிர ருள்ளொரு
வீரன்முன் வந்து விளம்புவ னிஃதே:-
"குருமணி, நின்னொரு கொற்றவாள் கிழிப்ப,
விடாயறாத் தரும மேம்படு தெய்வதத்
திரையென மாய்வ னேற்றருள் புரிகவே". 55
புன்னகை மலர்ந்தது புனிதநல் வதனம்.
கோயிலு ளவனைக் குரவர்கோன் கொடுசெல
மற்றத னின்றோர் மடுவின்வந் தாலெனக்
குருதிநீர் பாயக் குழாத்தினர் கண்டனர்.
பார்மின்! சற்குரு பனீரெனக் கோயிலின் 60
வெளிப்போந் தாங்கு மேவினோர் முன்னம்
முதற்பலி முடித்து முகமலர்ந் தோனாய்
மின்னெனப் பாய்ந்து மீண்டுவந் துற்றனன்.
மீண்டுமவ் வுதிரவாள் விண்வழி தூக்கிப்
பின்வரு மொழிகள் பேசுவன் குரவர்கோன்:- 65
"மானுடர் நெஞ்சிலிவ் வாளினைப் பதிக்கச்
சித்தநான் கொண்டேன், தேவிதான் பின்னுமோர்
பலிகேட் கின்றாள் பக்தர்காள்! நும்முளே

......................................

(பா-டு): 1 தருமத் தெய்வந் – (பா.பி., அர.)
2 பலி விழைக்கின்றதால் பத்தர்காள்! – (பா.பி., அர.)
3 'வீழ்த்தித் தேவியின் – (பா.பி., அர.)

இன்னுமிங் கொருவன் இரத்தமே தந்திக்
காளியைத் தாகங் கழித்திடத் துணிவோன்[1] 70
எவனுளன்?'' எனலும் இன்னுமோர் துணிவுடை
வீரன்முன் னின்று விருப்பினை யுணர்த்தினன்.
இவனையுங் கோயிலு ளினிதழைத் தேகி
இரண்டாம் பலிமுடித் தீண்டினன் குரவன்.
குருதியைக் கண்டு குழாத்தினர் நடுங்கினர். 75
இங்ஙன மீண்டு மீண்டுமே யியற்றிப்[2]
பலியோ ரைந்து பரமனங் களித்தனன்.
அறத்தினைத் தமதோ ரறிவினாற் கொண்ட
மட்டிலே மானிடர் மாண்பெற லாகா.[3]
அறமது தழைப்ப நெஞ்சகம் காட்டி 80
வாட்குத் தேற்று[4] மாய்பவர் பெரியோர்;
அவரே மெய்ம்மையர்.[5] முத்தரு மவரே.
தோன்றுநூ றாயிரம் தொண்டர்தம் முள்ளே[6]
அத்தகை நல்லரை யறிகுதல் வேண்டியே
தண்ணருட் கடலாந் தகவுயர் குரவன் 85
கொடுமைசேர் சோதனை புரிந்திடல் குறித்தனன்
அன்பின் மிகையா லாருயிர் நல்குவோர்
ஐவரைக் கண்டபின் அவ்விய லுடையார்
எண்ணில ருளரெனத் துணிந்தின் பெய்தினன்.
வெய்யசெங் குருதியின் வீழ்ந்துதா மிறந்து 90

---

(பா-டு): 1 காளியைத் தாகங் கழிக்கத் துணிவோன் - (அர.)
2 இங்ஙன மீண்டுமே யியற்றிப் - (பா. பி., அர.)
3 மட்டிலே மானிடர் மாண்பெற லாகார்: — கவிமணி
4 வாட்டுத் தேற்று - (பா.பி.)
5 அவரே மெய்ம்மையோர் - (பா.பி., அர.)
6 தோன்று நூறாயிரம் தொண்டர் தம்முளே - (அர.)

சொர்க்கமுற் றாரெனத் தொண்டர்கொண் டிருக்கும்
ஐந்துநன் மணியெனு மைந்துமுத் தரையும்
கோயிலு ளிருந்துபே ரவைமுனர்க் கொணர்ந்தான்!
ஆர்த்தனர் தொண்டர்! அருவியப் பெய்தினர்!
விழிகளைத் துடைத்து மீளவு நோக்கினர்![1]
"ஜயஜய குருமணி ஜயகுரு சிங்கம்" 95
எனப்பல வாழிக ளிசைத்தனர், ஆடினர்.
அப்போழ் தின்னரு ளவதரித் தனையான்,
நற்சுடர்ப் பரிதி நகைபுரிந் தாங்குக்
குறுநகை புரிந்து குறையறு முத்தர்
ஐவர்கள் தம்மையு மகமுறத் தழுவி 100
யாசிகள் கூறி யவையினை நோக்கிக்
கடல்முழக் கென்ன முழங்குவன்:– "காணீர்!
காளியு நமது கனக நன்னாட்டுத்
தேவியு மொன்றெனத் தேர்ந்தநல் லன்பர்காள்
நடுக்கநீ ரெய்த நானைம் முறையும் 105
பலியிடச் சென்றது, பாவனை மன்ற.
என்கரத் தாற்கொலோ நும்முயி ரெடுப்பன்?
ஐம்முறை தானு மன்பரை மறைத்துநும்
நெஞ்சகச் சோதனை நிகழ்த்தினன் யானே.
தாய்மணி நாட்டின் உண்மைத் தனயர்நீர் 110
என்பது தெளிந்தேன். என்கர வாளால்
அறுத்ததிங் கின்றைந் தாடுகள் காண்டிர்![2]
சோதனை வழியினுந் துணிவினைக் கண்டேன்,

.........................................

(பா-டு): 1 விழிகளைத் துளைத்து மீளவும் நோக்கினர்! - (அர.)

2 அறுத்ததிங் கின்றைந் தாடுகள் காண்மடீர் - (பா.பி.)
அறுத்ததிங் கின்றைந் தாடுகள் காண்பீர் - கவிமணி

களித்ததென் னெஞ்சம், கழிந்தன கவலைகள்"
குருகோ விந்தன் கொண்டதோர் தருமம், 115
'சீடர்தம் மார்க்கம்' எனப்புகழ் சிறந்தது.
இன்றுமம் மார்க்கத் திருப்பவர் தம்பெயர்
'காலசா' என்ப. 'காலசா' எனமொழி
முத்தர்தம் சங்க முறையெனும் பொருளது.
முத்தர்தஞ் சபைக்கு மூலர்க ளாகமற் 120
றைவரன் னோர்தமை யருளின னாரியன்.
சமைந்தது 'காலசா' எனும்பெயர்ச் சங்கம்.
பாரத மென்ற பழம்பெரு நாட்டினர்
ஆவிதேய்ந் தழிந்திலர், ஆண்மையிற் குறைந்திலர்
வீரமுஞ் சிரத்தையும் வீந்தில ரென்று 125
புவியினோ ரறியப் புரிந்தனன் முனிவன்.
அந்நாள் முகுந்த னவதரித் தாங்கோர்
தெய்விகத் தலைவன் சீருறத் தோன்றி
மண்மா சகன்ற வான்படு சொற்களால்
எழுப்பிடுங் காலை, இறந்துதான் கிடக்கிலள், 130
இளமையுந் துணிவு மிசைந்துநம் மன்னை
சாதியின் மானந் தாங்கமுற் படுவளென்
றுலகினோ ரறிவிடை யுறுத்தினன் முனிவன்.
ஐம்பெரும் பூதத் தகிலமே சமைத்த
முன்னவ னொப்ப, முனிவனு மைந்து 135
சீடர்கள் மூலமாத் தேசுறு பாரதச்
சாதியை வகுத்தனன். தழைத்தது தருமம்.
கொடுங்கோல் பற்றிய புன்கைக் குரிசிலர்
நடுங்குவ ராயினர். நகைத்தனள் சுதந்திரை.
ஆயிரத் தெழுநூற் றைம்பத் தாறு 140
விக்கிர மார்க்க னாண்டினில், வியன்புகழ்க்

குருகோ விந்தன் கொற்றமார் சீடரைக்
கூட்டியே தெய்வக் கொலுவொன் றமைத்தனன்.
காண்டற் கரிய காட்சி! கவின்திகழ்
அரியா தனத்தி லமர்ந்தனன் முனிவர்கோ.[1] 145
சூழ்ந்திருந் தனருயிர்த் தொண்டர்தா மைவரும்.
தன்றிருக் கரத்தா லாடைகள் சார்த்தி
மாலைகள் சூட்டி மதிப்புற விருத்திக்
கண்மணி போன்றா ரைவர்மேற் கனிந்து
குழைவுற வாழ்த்திக் குழாத்தினை நோக்கி, 150
"காண்டிரோ! முதலாங் 'காலசா' என்றனன்.
நாடுந் தருமமு நன்கிதிற் காப்பான்
அமைந்ததிச் சங்க மறிமினீ ரென்றான்.
அருகினி லோடிய ஆற்றினின் றையன்
இருப்புச் சிறுகலத் தின்னீர் கொணர்ந்து 155
வாள்முனை கொண்டு மற்றதைக் கலக்கி
மந்திர மோதினன். மனத்தினை யடக்கிச்
சித்தமே முழுதுஞ் சிவத்திடை யாக்கிச்
ஜபமுரைத் திட்டான், ஜயப்பெருந் திருவக்[2]
கொலுமுனர் வந்து குதித்துநின் றிட்டாள். 160
ஆற்றுநீர் தனையோ அடித்ததத் திருவாள்?
அயர்ந்துபோய் நின்ற அரும்புகழ்ப் பாரதச்
சாதியின் திறல்கள் தம்மையே யியக்கி
நல்லுயிர் நல்கினன். நாடெலா மியங்கின.
தவமுடை யைவரைத் தன்முனர் நிறுத்தி 165
மந்திர நீரை மாசறத் தெளித்து
அருள்மய மாகி பவர்விழி தீண்டினன்.

................................

(பா-டு): 1 அரியா தனத்தில் அமர்ந்தனன் முனிவர்கோன் - (அர.)
2 சபமுரைத் திட்டான், சயப்பெருந் திருவக் - (பா.பி., அர.)

பார்மினோ உலகீர்! பரமனங் கரத்தால்
அவர்விழி தீண்டிய அக்கணத் தன்றே
நாடனைத் திற்கு நல்விழி திறந்தது![1] 170
சீடர்க ளனைவருந் தீட்சையிஃ தடைந்தனர்.
ஐயன் சொல்வன் "அன்பர்காள்! நீவிர்
செய்திடப் பெற்ற தீட்சை யினாமம்
'அமிர்த' மென் றறிமின்! அரும்பே றாமிது
பெற்றார் யாவரும் பேரருள் பெற்றார். 175
நுமக்கினித் தரும நுவன்றிடக் கேண்மின்.
ஒன்றாம் கடவுள். உலகிடைத் தோன்றிய
மானிட ரெல்லாஞ் சோதரர். மானுடர்[2]
சமத்துவ முடையார், சுதந்திரஞ் சார்ந்தவர்.
சீடர்காள்! குலத்தினும் செயலினு மனைத்தினு 180
மிக்கணந் தொட்டுநீர் யாவிரு மொன்றே.
பிரிவுகள் துடைப்பீர்! பிரிதலே சாதல்.
ஆரியச் சாதியுள்[3] ஆயிரஞ் சாதி
வகுப்பவர் வகுத்து மாய்க,நீ ரனைவிருந்
தருமம், கடவுள், சத்தியம், சுதந்திரம் 185
என்பவை போற்ற எழுந்திடும் வீரச்
சாதியொன் றனையே சார்ந்தோ ராவிர்.
அநீதியும், கொடுமையும் அழித்திடுஞ் சாதி;
மழித்திட லறியா வன்முகச் சாதி;
இரும்பு முத்திரையு மிறுகிய கச்சையும் 190
கையினில் வாளுங் கழன்றிடாச் சாதி;
சோதர நட்புத் தொடர்ந்திடு சாதி;

---

(பா-டு): 1 நாடனைத் திற்கு நல்வழி திறந்தது - (பா.பி., அர.)
2 மானிட ரெல்லாஞ் சோதரர்; மானிடர் - (அர.)
3 ஆரியர் சாதியுள் – (பா.பி., அர.)

அரசனில் லாது தெய்வமே யரசா
மானுடர் துணைவரா,[1] மறமே பகையாக்
குடியர சியற்றுங் கொள்கையார் சாதி. 195
அறத்தினை யொறுக்கிலிர், மறத்தினைப் பொறுக்கிலிர்[2].
தாய்த்திரு நாட்டைச் சந்ததம் போற்றிப்
புகழொடு வாழ்மின்! புகழொடு வாழ்மின்"
என்றுரைத் தைய னின்புற வாழ்த்தினன்.
அவனடி போற்றி யார்த்தனர் சீடர்கள். 200
குருகோ விந்தக் கோமக னாட்டிய
கொடியுயர்ந் தசையக் குவலயம் புகழ்ந்தது.
அடியற மாய்ந்த[3] தரங்கசீப் ஆட்சி.

---

(பா-டு): 1 மானிடர் துணைவரா – (அர.)
2 அறத்தினை யொறுக்கலீர், மறத்தினைப் பொறுக்கலீர் – (பா.பி.)
அறத்தினை வெறுக்கலீர்! மறத்தினைப் பொறுக்கலீர் – (அர.)
3 ஆடிய மாய்ந்த – (பா.பி., அர.)
இத்திருத்தம் பொருந்துவ தன்று

– பதிப்பாசிரியர்.

## 49. வெய்ய இடி

266. இடியேறு சார்பிலுற உடல்வெந்தோன்
ஒன்றுரையா திருப்ப, ஆலி
முடியேறி மோதியதென் றருள்முகிலைக்
கடுஞ்சொற்கள் மொழிவான் போலக்
கடியேறு மலர்ப்பந்து மோதியதென்
றினியாளைக் காய்கின் றானால்
வடியேறு வேலெனவெவ் விழியேறி
யென்னாவி வருந்தல் காணான்.

*இந்தியா: 27-2-1909*

**பாரதியாரே இதற்குப் பொருள் எழுதியிருக்கிறார். பின்னிணைப்பில் காண்க.*

*'ஞானரதம்' என்னும் கதையில் 'கந்தர்வ லோகம்' என்ற இயலில் இப் பாடல் காணப்படுகிறது. தலைப்பு இப்போது தரப்பட்டது.*

*— பதிப்பாசிரியர்*

# 50. ஜாதீய கீதம்

பங்கிம் சந்திர சட்டோபாத்தியாயர் எழுதிய ஜகத் பிரசித்தி கொண்ட 'வந்தேமாதரம்' கீதத்தின் புதிய தமிழ் மொழிபெயர்ப்பு

*(முன்னொரு முறை முழுதும் அகவலாக ஓர் மொழி பெயர்ப்பு எழுதியிருந்தேன். ஆனால், அது பாடுவதற்கு நயப் படாதாகையால் இப்போது பல சந்தங்கள் தழுவி மொழி பெயர்ப்பெழுதப்பட்டிருக்கின்றது. ஆசிரியன்)*

**267.** நளிர்மணி நீரும், நயம்படு கனிகளும்
குளிர்பூந் தென்றலும், கொழும்பொழிற் பசுமையும்
வாய்ந்துநன் கிலகுவை, வாழிய அன்னை. (வந்தே) 1

**268.** தெண்ணில வதனிற் சிலிர்த்திடு மிரவும்,
தண்ணியல் விரிமலர் தாங்கிய தருக்களும்,
புன்னகை யொளியும், தேமொழிப் பொலிவும்,
வாய்ந்தனை யின்பமும் வரங்களு நல்குவை. (வந்தே) 2

.......................................

*இந்தியா: 13-3-1909*

*இப்பாடல் மீண்டும் 1910 பிப்ரவரி மாத 'கர்மயோகி' இதழிலும் வெளி யாகியுள்ளது. மாதாமணி வாசகம் (1914), நாட்டுப் பாட்டு (1919) ஆகிய கவிதைத்தொகுதிகளில் இப்பாடல் இடம்பெற்றுள்ளது.*

269. கோடி கோடி குரல்க ளொலிக்கவும்
கோடி கோடி புயத்துணை கொற்றமார்
நீடு பல்படை தாங்கிமுன் னிற்கவும்
கூடு திண்மை குறைந்தனை யென்பதென்?

270. ஆற்றலின் மிகுந்தனை, அரும்பதங் கூட்டுவை
மாற்றலர் கொணர்ந்த வன்படை யோட்டுவை[1] (வந்தே) 3

271. அறிவுநீ, தருமநீ, உள்ளநீ, அதனிடை
மருமநீ உடற்கண் வாழ்ந்திடு முயிர்நீ
தோளிடை வன்புநீ, நெஞ்சகத் தன்புநீ
ஆலயந் தோறும் அணிபெற விளங்கும்
தெய்வச் சிலையெலாந் தேவியிங் குனதே. (வந்தே) 4

272. பத்துப் படைகொளும் பார்வதி தேவியும்
கமலத் திதழ்களிற் களித்திடுங் கமலையும்
அறிவினை யருளும் வாணியும், அன்னைநீ. (வந்தே) 5

273. திருநி றைந்தனை, தன்னிக ரொன்றிலை
தீது தீர்ந்தனை நீர்வளஞ் சார்ந்தனை
மருவு செய்களின் நற்பயன் மல்குவை
வளனின் வந்ததொர்[2] பைந்நிறம் வாய்ந்தனை
பெருகு மின்ப முடையை, குறுநகை
பெற்றொ ளிர்ந்தனை, பல்பணி பூண்டனை
இருநிலத் தின்வந்[3] தெம்முயிர் தாங்குவை
எங்கள் தாய்நின் பதங்க ளிறைஞ்சுவாம். (வந்தே) 6

.....................................

*(பா–டு): 1 மாற்றலர் தமது வன்படை யோட்டுவை (நாட்டுப் பாட்டு)*
*2 வளனின் வந்ததோர் – (பா.பி., அர.)*
*3 இருநிலத்துவந் – (பா.ஆ., பா.பி., அர.)*

## 51. துடிக்கின்ற நெஞ்சம்

### (பாரத ஜனங்களின் தற்கால நிலை)

[நொண்டிச் சிந்து]

274. நெஞ்சு பொறுக்குதில்லையே[1] இந்த
நிலைகெட்ட மனிதரை நினைத்துவிட்டால்,[2] (நெ)
அஞ்சி யஞ்சிச் சாவார் – இவர்
அஞ்சாத பொருளில்லை யவனியிலே,
வஞ்சனைப் பேய்க ளென்பார் – இந்த
மரத்திலென்பா ரந்தக் குளத்திலென்பார்
துஞ்சுது முகட்டிலென்பார் – மிகத்
துயர்ப்படு வாரெண்ணிப் பயப்படுவார். (நெ) 1

275. மந்திர வாதியென்பார் – சொன்ன
மாத்திரத்தி லேமனக் கெலிபிடிப்பார்[3]
யந்திரஞ் சூனியங்கள்[4] – இன்னும்
எத்தனை யாயிர மிவர்துயர்கள்!

---

*இந்தியா: 13–3–1909*

*(பா-டு): 1 'நெஞ்சு பொறுக்குதிலையே' - (பா.ஆ., பா.பி., அர.)*
*2 நிலைகெட்ட மனிதரை நினைந்துவிட்டால் - (பா.ஆ., பா.பி., அர.)*
*3 மாத்திரத்திலே மனக்கிலி பிடிப்பார் – (பா.ஆ., பா.பி., அர.)*
*4 யந்திர சூனியங்கள் – (பா.ஆ., பா.பி., அர.)*

தந்த பொருளைக்கொண்டே – ஜனந்
தாங்குவ ருலகத்தி லரசரெல்லாம்,
அந்த அரசியலை – இவர்
அஞ்சுதரு பேயென்றெண்ணி நெஞ்சமயர்வார் (நெ) 2

276. சிப்பாயைக் கண்டஞ்சுவார் - ஊர்ச்
சேவகன் வருதல்கண்டு மனம்பதைப்பார்
துப்பாக்கி கொண்டொருவன் - வெகு
தூரத்தில் வரக்கண்டு வீட்டி லொளிப்பார்.
அப்பா லெவனோ செல்வான் – அவன்
ஆடையைக் கண்டுபயந் தெழுந்து நிற்பார்
எப்போதுங் கைகட்டுவார் – இவர்
யாரிடத்தும் பூனைகள்போ லேங்கி நடப்பார். (நெ) 3

277. நெஞ்சு பொறுக்குதில்லையே[1] - இந்த
நிலைகெட்ட மனிதரை நினைத்துவிட்டால்.[2]
கொஞ்சமோ பிரிவினைகள்! – ஒரு
கோடியென் றாலது பெரிதாமோ?
அஞ்சுதலைப்[3] பாம்பென்பான் - அப்பன்,
ஆறுதலை யென்றுமகன் சொல்லிவிட்டால்
நெஞ்சு பிரிந்து விடுவார்[4] - பின்பு
நெடுநா ளிருவரும் பகைத்திருப்பார். (நெ) 4

278. சாத்திரங்க ளொன்றும்காணார் - பொய்ச்
சாத்திரிப் பேய்கள்சொலும்[5] வார்த்தைநம்பியே

---

(பா-டு): 1 நெஞ்சு பொறுக்குதிலையே - (பா.ஆ., பா.பி., அர.)
2 நிலைகெட்ட மனிதரை நினைந்துவிட்டால் - (பா.ஆ.,பா.பி.,அர.)
3 ஐந்துதலைப் - (பா.ஆ., பா.பி., அர.)
4 நெஞ்சு பிரிந்திடுவார் (பா.ஆ., பா.பி., அர.)
5 சாத்திரப் பேய்கள் சொல்லும் (பா.பி.,பா.பி.,அர.)

கோத்திரமொன் றாயிருந்தாலும் - ஒரு
கொள்கையிற் பிரிந்தவனைக் குலைத்திகழ்வார்
தோத்திரங்கள் சொல்லியிவர்தாம்[1] – தமைச்
சூதுசெயு நீசர்களைப் பணிந்திடுவார்[2] - (ஆனால்)
ஆத்திரங்கொண் டேயிவன்சைவன் - இவன்
அரிபக்த னென்றுபெருஞ் சண்டையிடுவார். (நெ) 5

279. நெஞ்சு பொறுக்குதில்லையே[3] – இதை
நினைந்து நினைந்தினும் வெறுக்குதில்லையே[4]
கஞ்சி குடிப்பதற்கில்லார்[5] – அதன்
காரணங்க ளிவையெனு மறிவுமிலார்[6]
பஞ்சமோ பஞ்சமென்றே – நிதம்
பரதவித் தேயுயிர் துடிதுடித்துத்[7]
துஞ்சி மடிகின்றாரே – இவர்
துயர்களைத் தீர்க்கவொர் வழியில்லையே[8] (நெ) 6

280. எண்ணிலா நோயுடையார் – இவர்
எழுந்து நடப்பதற்கும் வலிமையிலார்
கண்ணிலாக் குழந்தைகள்போல் – பிறர்
காட்டிய வழியிற்சென்று மாட்டிக்கொள்வார்

---

(பா-டு): 1 தோத்திரங்கள் சொல்லியவர்தாம் - (பா.ஆ., பா.பி., அர.)
2 சூதுசெய்யும் நீசர்களைப் பணிந்திடுவார் - (பா.ஆ., பா.பி., அர.)
3 நெஞ்சு பொறுக்குதிலையே – (பா.ஆ., பா.பி., அர.)
நினைந்து நினைந்தினும் வெறுக்குதிலையே – (பா.ஆ., அர.)
4 நினைந்து நினைந்திடினும் வெறுக்குதிலையே – (பா.பி.)
5 கஞ்சி குடிப்பதற் கிலார் – (பா.ஆ., பா.பி.,அர.)
6 காரணங்கள் இவையென்னும் அறிவுமிலார் - (பா.ஆ., பா.பி., அர.)
7 பரதவித்தே யுயிர் துடிதுடித்து – (பா,ஆ.)
பரிதவித்தேயுயிர் துடிதுடித்து – (பா.பி., அர.)
8 துயர்களைத் தீர்க்கவோர் வழியிலையே – (பா.ஆ., பா.பி., அர.)

நண்ணிய பெருங்கலைகள் – பத்து
நாலா யிரங்கோடி நயந்துநின்ற
புண்ணிய நாட்டினிலே – இவர்
பொறியற்ற விலங்குகள் போலவாழ்வார். (நெ) 7

## 52. திசை

281. ஒருநொடிப் பொழுதி லோர்பத்
தொன்பதா யிரமாங் காதம்
வருதிற லுடைத்தாஞ் சோதிக்
கதிரென வகுப்ப ரான்றோர்
கருதவு மரிய தம்ம!
கதிருடை விரைவு மஃது
பருதியி னின்றோ ரெட்டு
விநாடியிற் பரவு மீங்கே. 1

282. உண்டொரு வான்மீ னஃதை
யூணர்கள் ஸிரிய ஸென்ப
கண்டவம் மீனின் முன்னை
விரைவொடு கதிர்தா னிந்த
மண்டலத் தெய்த மூவாண்
டாமென மதிப்ப ராயின்
எண்டரற் கெளிதோ அம்மீன்
எத்தனை தொலைய தென்றே. 2

283. கேட்டிரோ நரர்காள், வானிற்
கிடக்குமெண் ணரிய மீனிற்

---

*இந்தியா: 3-4-1909*

*இதுவரை கவிதைத் தொகுதி எதிலும் வெளிவராத பாடல் இது; முதன் முதலாக இப்பதிப்பில் இடம் பெறுகிறது.*

*- பதிப்பாசிரியர்*

காட்டிய வதுதான் பூமிக்
கடுகினுக் கணித்தா மென்பர்
மீட்டுமோ ராண்டு மூவா
யிரத்தினில் விரைந்தோர் மீனின்
ஒட்டிய கதிர்தா னிங்ஙன்
உற்றிடுந் தகைத்து முண்டே! 3

284. மானுடக் கிருமி கோடி
வருத்தத்தாற் பயின்று கண்ட
ஊனுறு கருவி யாலிஃ
துணர்ந்ததென் றுணரு வீரால்.
தானுமிக் கருவி காணத்
தகாப்பெருந் தொலைய வாகு
மீனுள கோடி கோடி
மேற்பல கோடி யென்பர். 4

285. அறிவெனும் புள்ளு மெய்த்தங்
கயர்வொடு மீளுங் கண்டீர்
செறியுமித் திசைதா னெல்லை
யிலதெனச் செப்பு மாற்றம்
பொறிதவிர்ந் துரைத்த லன்றிப்
பொருளிதென் றுளத்தி னுள்ளே
குறிதரக் கொள்ள லாமோ?
கொஞ்சமோ திசையின் வெள்ளம். 5

## 53. உனைக் கூறப் பிழை இல்லை

286. அன்னாயிங் குனைக்கூறப் பிழையில்லை,
யாமேநின் அருள்பெற் றோங்க
என்னானுந் தகுதியிலேம் மிகப்பொல்லேம்
பழியுடையேம் இழிவு சான்றேம்
பொன்னான வழியகற்றிப் புலைவழியே
செல்லுமியல் பொருந்தி யுள்ளேம்
தன்னால்வந் திடுநலத்தைத் தவிர்த்துப்போய்த்
தீமையினைத் தழுவு கின்றேம்.

287. எல்லையிலாக் கருணையுறுந் தெய்வதநீ
யெவர்க்குமன மிரங்கி நிற்பாய்
தொல்லையெலாந் தவிர்த்தெங்கள் கண்காண
நொடிப்பொழுதில் துருக்கி மாந்தர்
நல்லபெரும் பதங்காணப் புரிந்திட்டாய்
பலகால நவைகொண் டன்னார்
சொல்லரிய பிழைசெய்த தத்தனையு
மறந்தவரைத் தொழும்புகொண்டாய். 2

---

*இந்தியா: 8-5-1909*

'இன்னும் வரும்' என்று குறிப்பிட்டிருந்தாலும், பாடல் மேற்கொண்டு வரவில்லை, "இலக்கியப் பகுதி"யில் இப்பாடல் தலைப்பின்றியே வெளியிடப் பெற்றுள்ளது. பாடல் தலைப்பு இப்போது தரப்பட்டது.

— பதிப்பாசிரியர்

288. அரைக்கணமா யினுமுன்னைத் திரிகரணத்
தூய்மையுடன் "அன்னாய் ஞானத்
திரைக்கடலே அருட்கடலே சீரனைத்து
முதவுபெருந் தேவே யிந்தத்
தரைக்கணிய பெரும்பொருளே காவாயே?
என்றலறித் தாயுன் னாமம்
உரைக்கமன மெமக்கின்றி யாமழிந்தாற்
பிழைசிறிதும் உளதாங் கொல்லோ? 3

289. வேண்டுமென விளக்கில்விழுஞ் சிறுபூச்சி
தனையாவர் விலக்க வல்லார்?
தூண்டுமரு ளால்யாமோர் விளக்கையவித்
தாலதுதான் சுற்றிச் சுற்றி
மீண்டுமொரு விளக்கிற்போய் மாண்டுவிழும்
அஃதொப்ப விருப்போ டேகித்
தீண்டரிய புன்மையினில் யாம்வீழ்ந்தா
லன்னாய்நீ செய்வ தென்னே? 4

290. அந்தநா ளருள்செயநீ முற்பட்ட
பொழுதெலாம் அறிவி லாதேம்
வந்தமா தேவிநினை நல்வரவு
கூறியடி வணங்கி டாமற்
சொந்தமா மனிதருளே போரிட்டும்
பாழாகித் துகளாய் வீழ்ந்தேம்
இந்தநா ளச்சத்தால் நீவருங்கால்
முகந்திரும்பி யிருக்கின் றோமால். 5

(இன்னும் வரும்)

## 54. கலியுக முடிவு

291. மிகப்பொரன் னுடையோன், மிகஅதைச் சிதறுவோன்
அவனே வலியனாய் ஆணைதான் செலுத்துவன்.
பாத்திரந் தவறிப் பைம்பொன் வழங்கலே
தவமென முடியும். தையலார் நாணிலா(து)
ஆட்சியை விரும்புவர். அவனியை யாள்வோர் 5
குடிகளி னுடைமையைக் கொள்ளையிட் டழிப்பர்.
பொய்யுரை கூறி வணிகர்தம் பொருளைக்
கவர்வர், இவ்வுலகத் திறுதியின் கண்ணே
மக்களின் அறனெலா மயங்கிநின் றிடுமால்,
பொருட்காப் பென்பது போய்ப்பெருங் கேடுறும். 10

---

*இந்தியா: 5-6-1909*

*இப்பாடல் பற்றிய விளக்கக் குறிப்பினைப் பின்னிணைப்பில் காண்க.*
*- பதிப்பாசிரியர்.*

# 55. கடல்

**கண்ணிகள்**

292. வெள்ளைத் திரையாய், வெருவுதரு தோற்றத்தாய்,
கொள்ளை யொலிக்கடலே நல்லறநீ கூறுதிகாண். 1

293. விரிந்த பெரும்புறங்கள் மேலெறிந்துன் பேயலைகள்
பொருந்து மிடையே புதைந்த பிளவுகள்தாம். 2

294. பாதலம்போ லாழ்ந்திருப்பப் பார்க்கவரி தாயவற்றின்
மீதலம்பி நிற்குமொரு வெள்ளைச் சிறுதோணி. 3

(கடல் போதனை முழங்குதல்)

295. "ஏனடா நீகரையி லேக்குற்று நிற்கின்றாய்,
வானனா வென்றிரைகள் வாளாதான் காண்பானாய்? 4

296. புன்படகு காணாய், புடைக்கு மென்றன் வார்திரைமேல்
துன்பமிலா தேமிதந்து துள்ளிவினை யாடுவதே. 5

297. அல்லா திதுவீழ்ந் தழிந்தாலும், என்னேகாண்?
பல்லாயிர மிதுபோற் பார்மிசைவே றுள்ளனவே. 6

---

* *அரவிந்தர் 'மாடர்ன் ரெவ்யூ'வில் வெளியிட்ட ஆங்கிலப் பாடலின் தமிழாக்கம். இதுபற்றிப் பாரதியார் தரும் குறிப்பும் விளக்கமும் பின்னிணைப்பில் தரப்பட்டுள்ளன.*

298. சூழு மெனததிர்ச்சிக் கஞ்சேல், துணிகநீ!
ஏழைக் கரையி லிருப்ப தெளிமையடா.

299. வாராய், இடுக்கணினு, மாறியதை யெற்றலினும்,
பாராய்,ந லின்பப் பரவசமுண் டென்பதையே.'' 8

(மனிதன் மறுமொழி)

300. என்று முழங்கி யழைக்கும் இருங்கடலே
நன்றுநீ சொல்லினைகாண், நான்வருவே னிக்கணமே. 9

301. நின்னில் வலியேன், நினதுதிரை வென்றிடுவேன்.
முன்னி யவற்றின் முடியேறி மேலெழுங்கால். 10

302. வானகத்தோ டாடல்செய வாய்க்குங்காண் மூழ்குறினும்
யானகத்தே பேரொலிக்கீ ழுள்ள தறிகுவனால். 11

(அபாயங்கள் ஈசனால் நன்மையின் பொருட்டுத் தரப்பட்டவை)

303. அபாயமிலா திக்கரையி லார்ந்திருப்போ ரீசன்
உபாய மறியாத வூமரன்றோ ஓர்ந்திடுங்கால்? 12

304. ஆழவுயிர் மானிடனுக் கையன் அருளிப்பின்
வாழிசிவத் தன்மை யதற்கிலக்கா வைத்தனனே. 13

305. ஆதலாற் கோடி யபாயமிடை யூறெல்லாம்
மோது கடல்களைப்போல் முன்னரிட்டா னவ்வுயிர்க்கே 14

306. துன்ப மருள்செய்தான் தோல்வி தனையளித்தான்
மன்பதையின் கால்சூழ வைத்தான் மலைத்திரளே. 15

307. நெற்றிமேல் மேகத்து மின்னிடிகள் நேர்வித்தான்
எற்றியெமை வீழ்த்தப் பெருங்காற் றியற்றினனே. 16

308. இங்கு மனிதன்வரும் இன்னலெலா மாற்றியெதிர்
பொங்கு மிடுக்கணெலாம் போர்ழ்ந்துவெற்றி கொள்
கெனவே. 17

309. விதிதா னெதிர்த்துவர வெல்லொணாத் தன்னுயிரை
மதியா ததிற்றாக்கி மைந்தன்விஜ யம்பெறவே. 18

முடிவுரை

310. ஏற்றிடுவா யென்னை யிருங்கடலே நின்மீது
தோற்றிடா தேறிப்போய் வானுலகு துய்ப்பேன்யான். 19

311. வாரிதியாங் கோளரியே வந்துன் பிடர்பிடித்துப்
பாருன்னை யெள்ளி வசப்படுத்தும் பண்பினையே 20

312. அல்லாது னுப்பார் அகழ்ப்பா தலங்களினும்
பொல்லாக் குகையினும்யான் போய்வீழ்ந்து விட்டாலும், 21

313. அங்கிருந்துன் பார மனைத்தும் பொறுத்துவிதி
மங்கி யழியும் வகைதேட வல்லேன்காண். 22

314. தளையறியா வார்கடலே நின்னோடு சாடி
அளவறிவே னென்றன் பெரியவுயி ராற்றலுக்கே. 23

# 56. வெறி கொண்ட தாய்

ஆபோஹி ராகம் - தாளம் ரூபகம்

315. பேயவள் காணெங்க ளன்னை – பெரும்
பித்துடையா ளெங்க ளன்னை;[1]
காயழ லேந்திய பித்தன் - தனைக்
காதலிப் பாளெங்க ளன்னை (பேயவள்) *1*

316. இன்னிசை யாமின்பக் கடலில் எழுநீ
தெற்றும் அலைத்திரள் வெள்ளத்
தன்னிடை[2] மூழ்கித் திளைப்பாள் – அங்கு
தாவிக் குதிப்பளெம் மன்னை[3] (பேயவள்) *2*

317. தீஞ்சொற் கவிதையஞ் சோலை – தனில்
தெய்விக நன்மணம்[4] வீசும்
தேஞ்சொரி மாமலர் சூடி – மதுத்
தேக்கி நடிப்பளெம் மன்னை[5] (பேயவள்) *3*

---

*(இந்தியா): 4-9-1907*

*(பா-டு): 1 பித்துடைய ளெங்க ளன்னை (பா.பி.)*

*2 தன்னிடை மூழ்கித் திளைப்பாள் - அங்குத் (பா.பி.)*

இத்திருத்தம் பொருத்தம்

*தன்னிடம் மூழ்கித் திளைப்பாள் - அங்குத் (அர.)*

*3 தாவிக் குதிப்பாளெம் மன்னை (பா.ஆ., பா.பி., அர.)*

*4 தெய்விக நன்மணம் (பா.ஆ., பா.பி.,)*

*5 தேக்கி நடிப்பாளெம் மன்னை – கவிமணி.*

**318.** வேதங்கள் பாடுவள் காணீர் – உண்மை
வேர்கையிற் பற்றிக் குதிப்பாள்[1]
ஓதருஞ் சாத்திரங் கோடி – உணர்ந்
தோதி யுலகெங்கும் விதைப்பாள். (பேயவள்) 4

**319.** பாரதப் போரெனி லெளிதோ – விறற்
பார்த்தன்கை வில்லிடை யொளிர்வாள்
மாரதர் கோடிவந் தாலும் – கண
மாய்த்துக் குருதியிற் றிளைப்பாள் (பேயவள்) 5

---

(பா-டு): 1 வேல்கையிற் (பா.ஆ., பா.பி., அர.)

## 57. வந்திலரேல்

320. விந்தைத் திலகரர விந்தரொடு பாலர்பதி
சிந்தைச் சிதம்பரமாஞ் செம்மலுமே – வந்திலரேல்
ஆதரமா மன்னை வளநாடெங் கேவந்தே
மாதரமா மந்திரமெங் கே.

---

*இந்தியா: 11-9-1909*

* *தலைப்பு இப்போது தரப்பட்டது.*

*"வி. ஓ. சிதம்பரமும் கோயமுத்தூர் ஜெயிலும்" என்ற கட்டுரையின் துவக்கத்தில் தலைப்பின்றி இப்பாடல் காணப்படுகின்றது.*

## 58. சுதந்திர தேவியின் துதி

321. இதந்தரு மனையி னீங்கி
இடர்மிகு சிறைப்பட் டாலும்
பதந்திரு விரண்டு மாறிப்
பழிமிகுத் திழிவுற் றாலும்
விதந்தரு கோடி யின்னல்
விளைந்தெனை யழித்திட் டாலும்
சுதந்திரத் தேவி![1] நின்னைத்
தொழுதிடல் மறக்கி லேனே. 1

322. நின்னருள் பெற்றி லாதார்
நிகரிலாச் செல்வ ரேனும்
பன்னருங் கல்வி கேள்வி
படைத்துயர்ந் திட்டா ரேனும்
பின்னரு மெண்ணி லாத
பெருமையிற் சிறந்தா ரேனும்
அன்னவர் வாழ்க்கை பாழாம்
அணிகள்வேய் பிணத்தோ டொப்பார். 2

---

*1909 (ஜன்மபூமி)*

*1919ஆம் வருடத்திய "நாட்டுப் பாட்டுத்" தொகுதியில் இப்பாடலின் முதல் நான்கு விருத்தங்களே இடம்பெற்றுள்ளன.*

*- பதிப்பாசிரியர்*

*(பா—டு): 1 சுதந்திர தேவி - (பா.பி., அர.)*

323. தேவிநின் னொளிபெ றாத
தேயமோர் தேய மாமோ?
ஆவியங் குண்டோ செம்மை
யறிவுண்டோ ஆக்க முண்டோ?
காவிய நூல்கள் ஞானக்
கலைகள்வே தங்க ளுண்டோ?
பாவிய ரன்றோ நின்றன்
பாலனம் படைத்தி லாதார்? 3

324. ஒழிவறு நோயிற் சாவார்
ஊக்கமொன் றறிய மாட்டார்,
கழிவுறு மாக்க ளெல்லா
மிகழ்ந்திடக் கடையி னிற்பார்,
இழிவுறு வாழ்க்கை தேரார்
கனவினு மின்பங் காணார்,
அழிவுறு பெருமை நல்கு
மன்னை!நின் னருள்பெ றாதார். 4

வேறு

325. தேவி நின்னருள் தேடி யுளந்தவித்
தாவி யும்தம தன்பு மளிப்பவர்
மேவி நிற்பது வெஞ்சிறை யாயினுந்
தாவில் வானுல கென்னத் தகுவதே. 5

326. அம்மை யுன்ற னருமை யறிகிலார்
செம்மை யென்றிழி தொண்டினைச் சிந்திப்பார்,
இம்மை யின்பங்க ளெய்துபொன் மாடத்தை
வெம்மை யார்புன் சிறையெனல் வேண்டுமே. 6

**327.** மேற்றி சைப்பல நாட்டினர் வீரத்தாற்
போற்றி நின்னைப் புதுநிலை யெய்தினர்,
கூற்றி னுக்குயிர் கோடிகொ டுத்தும்நின்
பேற்றி னைப்பெறு வேமெனல் பேணினர். 7

**328.** அன்ன தன்மைகொள் நின்னை யடியனேன்
என்ன கூறி யிசைத்திட வல்லனே?
பின்ன முற்றுப் பெருமை யிழந்துநின்
சின்ன மற்றழி தேயத்திற் றோன்றினேன்! 8

**329.** பேர றத்தினைப் பேணுநல் வேலியே!
சோர வாழ்க்கை, துயர், மிடி, யாதிய
கார றுக்கக் கதித்திடு சோதியே!
வீர ருக்கமு தே!நினை வேண்டுவேன். 9

## 59. மாதாவின் துவஜம்*

### பாரத நாட்டுக் கொடியினைப் புகழ்தல்

தாயுமான சுவாமிகள்
ஆனந்தக்களிப்பு வர்ணமெட்டு

330. தாயின் மணிக்கொடி பாரீர் - அதைத்
தாழ்ந்து பணிந்து புகழ்ந்திட - வாரீர் 1

331. ஓங்கி வளர்ந்ததோர் கம்பம் - அதன்
உச்சியின்[1] மேல்வந்தே மாதர மென்றே
பாங்கி னெழுதித் திகழும் - செய்ய
பட்டொளி வீசிப் பரந்தது பாரீர்[2] (தா) 2

332. பட்டுத் துகிலென லாமோ? - அதிற்
பாய்ந்து சுழற்றும் பெரும்புயற் காற்று
மட்டு மிகுந்தடித் தாலும் - அதை
மதியாதவ் வுறுதிகொள் மாணிக்கப் படலம் (தா) 3

---

*1909 (ஜன்ம பூமி) 1919 (நாட்டுப் பாட்டு)*

*1919ஆம் வருடத்திய "நாட்டுப்பாட்டு"த் தொகுதியிலும் இப்பாடல் இடம் பெற்றுள்ளது.*

– பதிப்பாசிரியர்

* "தாயின் மணிக்கொடி" (அர.)

(பா-டு): 1 உச்சியில் (நாட்டுப் பாட்டு)
2 பட்டொளிவீசிப் பறந்தது பாரீர் (அர.)

333. இந்திரன் வச்சிர மோர்பால் - அதில்
எங்கள் துருக்க ரிளம்பிறை யோர்பால் - தாய்[1]
மந்திர நடுவுறத் தோன்றும் - அதன்
மாண்பை வகுத்திட வல்லவன் யானோ? (தா) 4

334. கம்பத்தின் கீழ்நிற்றல் காணீர் - எங்கும்
காணரும் வீரர் பெருந்திருக் கூட்டம்
நம்பற் குரியரவ் வீரர் – தங்கள்
நல்லுயி ரீந்துங் கொடியினைக் காப்பார் (தா) 5

335. அணியணி யாயவர் நிற்கும் - இந்த
ஆரியக் காட்சியோ ராநந்த மன்றோ?[2]
பணிகள் பொருந்திய மார்பும் – விறற்
பைந்திரு வோங்கும் வடிவமும் காணீர் (தா) 6

336. செந்தமிழ் நாட்டுப் பொருநர் - கொடுந்
தீக்கண் மறவர்கள் சேரன்றன் வீரர்
சிந்தை துணிந்த தெலுங்கர் - தாயின்
சேவடிக் கேபணி செய்திடு துளுவர் (தா) 7

337. கன்னட ரொட்டியரோடு – போரிற்
காலனு மஞ்சக் கலக்கு மராட்டர்
பொன்னகர்த் தேவர்க ளொப்ப – நிற்கும்
பொற்புடை யாரிந்து ஸ்தானத்து மல்லர் (தா) 8

338. பூதலமுற்றிடும் வரையும் - அறப்
போர்விறல் யாவு மறப்புறும் வரையும்

---

(பா-டு): 1 எங்கள் துருக்கர் இளம்பிறை ஒர்பால், (தாய்.) - (அர.)
2 ஆரியக் காட்சியோ ரானந்த மன்றோ? (நாட்டுப் பாட்டு - பா.ஆ., பா.பி., அர.)

மாதர்கள் கற்புள்ள வரையும் – பாரில்
மறைவரும் கீர்த்திகொள் ரஜபுத்ர வீரர் (தா) 9

339. பஞ்ச நதத்துப் பிறந்தோர் – முன்னைப்
பார்த்தன் முதற்பலர் வாழ்ந்தநன் னாட்டார்
துஞ்சும் பொழுதினுந் தாயின் - பதத்
தொண்டு நினைந்திடும் வங்கத்தி னோரும் (தா) 10

340. சேர்ந்ததைக் காப்பது காணீர் - அவர்
சிந்தையின் வீர நிரந்தரம் வாழ்க
தேர்ந்தவர் போற்றும் பரத – நிலத்
தேவி துவஜம் சிறப்புற வாழ்க. (தா) 11

# 60. நிதானக்கட்சியார் கூட்டம்

## சுதேசியத்தைப் பழித்தல்

(நந்தனார் சரித்திரத்திலேயே சேரிப் பறையர்க ளெல்லோரும் ஒன்றுசேர்ந்து நந்தனாரையும் அவரது கட்சியாரையும் பழிக்கின்றார்கள். சேரியிலே மாட்டிறைச்சி யுண்டு புலைவாழ்வு வாழ்ந்துகொண்டு ஆண்டைப் பார்ப்பானுக்கு அடிமை செய்வதே சொர்க்கமென் றறியாமல், சிதம்பரப் பயித்தியங் கொண்டு அலையும் நந்தனாராலும், அவருடைய சீடர்களாலும் பெரிய கேடுகள் விளையக்கூடு மென்று வருத்தங் கொண்டு அப் பறையர்கள் "நாம், என்ன செய்வோம், புலையரே. இந்தப் பூமியில்லாத புதுமையைக் கண்டோம்" என்று யோசிக்கிறார்கள். அந்தப் பாட்டின் கருத்தையும் வர்ணமெட்டையுந் தழுவிப் பின்வரும் பாடல் எழுதப்பட் டிருக்கின்றது. இந்தப் பாட்டிலே மேத்தா, கோகலே முதலிய நிதானஸ்தர்கள் நமது தேசவிமோசன மென்னுஞ் சிதம்பரத்தை எண்ணி ஆசை கொண்டு பரவச நிலையி லிருக்குந் திலக முனிவராலும், அவரது கட்சியாராலும் நாட்டிற்குக் கெடுதி விளையு மென்று பேசும் விஷயங்கள் அமைக்கப்பட் டிருக்கின்றன.)

........................................

*1909 (ஜன்ம பூமி)*

இராகம் புன்னாக வராளி - தாளம் ரூபகம்*

341. நாமென்ன செய்வோம், துணைவரே— இந்த[1]
பூமியி லில்லாத புதுமையைக் கண்டோம் (நா) 1

342. திலக னொருவனாலே யிப்படி யாச்சு
செம்மையும் தீமையுமில் லாமலே போச்சு
பலதிசை யுந்துஷ்டர் கூட்டங்க ளாச்சு
பையல்கள் நெஞ்சில் பயமென்பதே போச்சு (நா) 2

343. தேசத்தி லெண்ணற்ற பேர்களுங் கெட்டார்
செய்யுந் தொழில்முறை யாவையும் விட்டார்
பேசவோர் வார்த்தை[2] தாதாசொல்லி விட்டார்
பின்வர வறியாமல் சுதந்திரம் தொட்டார். (நா) 3

344. பட்டம்பெற் றோர்க்குமதிப் பென்பது மில்லை
பரதேசப் பேச்சில் மயங்குபவ ரில்லை
சட்ட மறந்தோர்க்குப் பூஜைகுறை வில்லை
#சர்க்காரிடஞ் சொல்லிப் பார்த்தும்பய னில்லை. (நா) 4

---

* "நிதான கட்சியார் - சுதேசியத்தைப் பழித்தல்" - (பா.ஆ.)
"நிதானக் கட்சியார் சுதேசியத்தைப் பழித்தல்" - (பா.பி.)
"நாம் என்ன செய்வோம்" - (அர.)

பல்லவி — சரணங்கள் என்பவை பாரதி ஆச்ரமப் பதிப்பில் இடம்பெறப் பிற்காலப் பதிப்புக்களும் அம்முறையைப் பின்பற்றின.

நந்தனார் சரித்திரக் கீர்த்தனைப் (லாங்மன்ஸ்) பதிப்பில் தாளம் - சாபு என வகுக்கப்பட்டுள்ளது.

(பா-டு): 1 நாம் என்ன செய்வோம்! துணைவரே — இந்தப் — (அர.)
2 'பேசுவோர் வார்த்தை' (அர.)

# பழைய கக்ஷியார் புதுக் கக்ஷியாரைப் பற்றி ஸர்க்காரிடங் கோள் மூட்டியும் பயனில்லை என்றாய்விட்டது. (பா.கு.)

345. சீமைத் துணியென்றா லுள்ளங் கொதிக்கிறார்
சீரில்லை யென்றாலோ எட்டி மிதிக்கிறார்
தாமெத்தை யோ"வந்தே" யென்று துதிக்கிறார்
தரமற்ற வார்த்தைகள் பேசிக் குதிக்கிறார். (நா) 5

# 61. பாரத தேவியின் அடிமை

*(நந்தன் சரித்திரத்திலுள்ள "ஆண்டைக் கடிமைக் கார னல்லவே"* என்ற பாட்டின் வர்ண மெட்டையுங் கருத்தையும் பின்பற்றி எழுதப்பட்டது.)*

பல்லவி

**346.** அங்கியர்தமக் கடிமை யல்லவே - நான்
அங்கியர்தமக் கடிமை யல்லவே.[1] *1*

சரணங்கள்

**347.** மன்னியபுகழ்ப் பாரத தேவி
தன்னிருதாளிணைக் கடிமைக்காரன். (அங்) *2*

**348.** இலகுபெருங்குணம் யாவைக்கு மெல்லையாம்
திலக முனிக்கொத்த அடிமைக் காரன். (அங்) *3*

**349.** வெய்யசிறைக்குள்ளே புன்னகை யோடுபோம்
ஐயன்பூபேந்த்ரனுக் கடிமைக் காரன். (அங்) *4*

---

*1909 (ஜன்மபூமி)*

* *'நந்தனார் சரித்திரக் கீர்த்தனை'யில் இதற்குரிய மூலப் பாடல் ராகம் - ஜெஞ்ஜுடி; தாளம் - ரூபகம்*

*(பா-டு): 1 அன்னியர்தமக் கடிமை யல்லவே — நான்*
*அன்னியர் தமக் கடிமை யல்லவே. — (பா.பி., அர.)*

350. காலர்முன்னிற்பினும் மெய்தவறாவெங்கள்
பாலர்தமக்கொத்த அடிமைக் காரன். (அங்) 5

351. காந்தனலிட்டாலும தர்மம்விடாப்ரம்ம
பாந்தவன்றாளிணைக் கடிமைக் காரன் (அங்) 6

## 62. ஸ்வதந்திரப் பள்ளு*

### (பள்ளர் களியாட்டம்)

இராகம் வராளி, ஆதி தாளம்

பல்லவி

352. ஆடுவோமே - பள்ளுப் - பாடுவோமே
ஆனந்த ஸ்வதந்திரம்[1] அடைந்து விட்டோமென்றாடு 1

சரணங்கள்

353. பார்ப்பானை ஐயரென்ற
காலமும் போச்சே – வெள்ளைப்
பரங்கியைத் துரையென்ற
காலமும் போச்சே - பிச்சை
ஏற்பாரைப் பணிகின்ற
காலமும் போச்சே – நம்மை
ஏய்ப்போருக் கேவல்செய்யும்
காலமும் போச்சே. (ஆடுவோமே) 2

354. எங்குஞ் சுதந்திரம்
என்பதே பேச்சு – நாம்

1909 (ஜன்மபூமி)

* 'சுதந்திரப் பள்ளு' (பா.ஆ., பா.பி., அர.)

(பா-டு): 1 'ஆனந்த சுதந்திரம்' (அர.)

எல்லோருஞ் சமமென்ப
துறுதி யாச்சு
சங்குகொண் டேவெற்றி
யூது வோமே – இதைத்
தரணிக்கெல் லாமெடுத்
தோது வோமே. (ஆடுவோமே) 3

355. எல்லோரு மொன்றென்னும்
காலம் வந்ததே – பொய்யும்
ஏமாற்றுந் தொலைகின்ற
காலம் வந்ததே – இனி
நல்லோர் பெரியரென்னும்
காலம் வந்ததே – கெட்ட
நயவஞ்சக் காரருக்கு
நாசம் வந்ததே. (ஆடுவோமே) 4

356. உழவுக்குந் தொழிலுக்கும்
வந்தனை செய்வோம் – வீணில்
உண்டுகளித் திருப்போரை
நிந்தனை செய்வோம்
விழலுக்கு நீர்பாய்ச்சி
மாய மாட்டோம் - வெறும்
வீணருக் குழைத்துடலம்
ஓய மாட்டோம். (ஆடுவோமே) 5

357. நாமிருக்கு நாடுநம
தென்ப தறிந்தோம் – இது
நமக்கே யுரிமையா
மென்ப தறிந்தோம் - இந்தப்

பூமியி லெவர்க்குமினி
அடிமை செய்யோம் – பரி
பூரணனுக் கேயடிமை
செய்து வாழ்வோம். (ஆடுவோமே) 6

## 63. மஹாசக்திக்கு விண்ணப்பம்*

358. எண்ணிய முடிதல் வேண்டும்
நல்லவே யெண்ணல் வேண்டும்
திண்ணிய நெஞ்சம் வேண்டும்
தெளிந்தநல் லறிவு வேண்டும்
பண்ணிய பாவ மெல்லாம்
பரிதிமுன் பனியே போல
நண்ணிய நின்மு னிங்கு
நசித்திடல் வேண்டு மன்னாய்.

பிப்ரவரி 1910 (கர்மயோகி)
* 'அன்னையை வேண்டுதல்' (அர.)

# 64. மஹாசக்தி

கமாஸ் ராகம், சாப்பு – தாளம்

359. சந்திரி கையில் அவளைக் கண்டேன்[1]
சரண மென்று புகுந்து கொண்டேன்
இந்திரி யங்களை வென்று விட்டேன்
எனதெ னாசையைக் கொன்று விட்டேன். (சந்) 1

360. மீன்கள் செய்யும் ஒளியைச் செய்தாள்
வீசி நிற்கும் வளியைச் செய்தாள்
வான்க ணுள்ள வெளியைச் செய்தாள்
வாழி நெஞ்சிற் களியைச் செய்தாள். (சந்) 2

361. பயனெண் ணாமல் உழைக்கச் சொன்னாள்
பக்தி செய்து பிழைக்கச் சொன்னாள்
துயரி லாதெனைச் செய்து விட்டாள்
துன்ப மென்பதைக்[2] கொய்து விட்டாள். (சந்) 3

---

*பிப்ரவரி 1910 (கர்மயோகி)*

*பாரதி ஆச்ரமப் பதிப்பில் 2,3 ஆகிய இரு பாடல்கள் முன்பின்னாக மாற்றி அச்சிடப்பெற, பிற்காலப் பதிப்புகளில் இம்மாற்றமே தொடர்ந்து இடம் பெற லாயிற்று. ராக, தாளக் குறிப்புகளும் விடப்பட்டுள்ளன.*

*(பா–டு): 1 சந்திர னொளியி லவளைக் கண்டேன் – (பா.ஆ., பா.பி., அர.)*
*2 துன்ப மென்பதைக் (பா.ஆ., பா.பி., அர.)*

## 65. மஹாசக்திக்கு விண்ணப்பம்

362. மோகத்தைக் கொன்றுவிடு – அல்லாலென்றன்
மூச்சை நிறுத்திவிடு
தேகத்தைச் சாய்த்துவிடு – அல்லாலதில்
சிந்தனை மாய்த்துவிடு
யோகத் திருத்திவிடு – அல்லாலென்றன்[1]
ஊனைச் சிதைத்துவிடு
ஏகத் திருந்துலகம் – இங்குள்ளன
யாவையும் செய்தவனே![2] 1

363. பந்தத்தை நீக்கிவிடு – அல்லாலுயிர்ப்
பாரத்தைப் போக்கிவிடு
சிந்தை தெளிவாக்கு - அல்லாலிதைச்
செத்த உடலாக்கு
இந்தப் பதர்களையே - நெல்லா மென[3]
எண்ணி இருப்பேனோ

---

*பிப்ரவரி 1910 (கர்மயோகி)*

மூன்றாவது பாடலின் முதலிரண்டடிகள் பின்வந்த பதிப்புகளிலும் முன் பின்னாக இடம் மாறியுள்ளன.

(பா-டு): 1 யோகத் திருத்திவிடு - அல்லாலெந்தன் - (பா.ஆ.)
2 யாவையும் செய்பவனே - (பா.ஆ., பா.பி., அர.)
3 இந்தப் பதர்களையே – எல்லாமென - (பா.ஆ.)

எந்தப் பொருளினுமே[1] – உள்ளொளி
நியங்கி இருப்பவனே. 2

364. கள்ள முருகாதோ? – அம்மாபக்திக்[2]
கண்ணீர் பெருகாதோ?
உள்ளந் தெளியாதோ?[3] – பொய்யாணவ
ஊனை மொழியாதோ?
வெள்ளக் கருணையிலே – இந்நாய்சிறு
வேட்கை தவிராதோ?
விள்ளற் கரியவனே – அனைத்திலு
மேவி நிறைந்தவனே.[4] 3

......................................................

(பா-டு): 1 எந்தப் பொருளிலுமே – (பா.ஆ., பா.பி., அர.)
2 கள்ள முருகாதோ, அம்மா பத்திக் (பா.ஆ.)
3 உள்ளம் குளிராதோ (பா.ஆ., பா.பி., அர.)
4 மேவி யிருப்பவனே – (பா.ஆ., பா.பி., அர.)

## 66. பாரதமாதா

### திருப்பள்ளி எழுச்சி

365. பொழுது புலர்ந்தது, யாஞ்செய்த தவத்தால்;
புன்மை யிருட்கணம் போயின யாவும்;
எழுபசும் பொற்சுடர் எங்கணும் பரவி
யெழுந்து விளங்கிய தறிவெனும் இரவி;
தொழுதுனை வாழ்த்தி வணங்குதற் கிங்குன்
தொண்டர்பல் லாயிரர் சூழ்ந்து நிற்கின்றோம்.
விழிதுயில் கின்றனை யின்னுமெந் தாயே,
வியப்பிது காண்!பள்ளி யெழுந்தரு ளாயே. 1

366. புள்ளினம் ஆர்த்தன, ஆர்த்தன முரசம்;
பொங்கின தெங்குஞ் சுதந்திர நாதம்[1];
வெள்ளிய சங்க முழங்கின கேளாய்;
வீதியெ லாமணி குற்றனர்[2] மாதர்!
தெள்ளிய அந்தணர் வேதமும் நின்றன்
சீர்த்திரு நாமமும் ஓதிநிற் கின்றார்.
அள்ளிய தெள்ளமு தன்னையெ மன்னை
ஆருயி ரேபள்ளி யெழுந்தரு ளாயே 2

---

*பிப்ரவரி, 1910 (கர்மயோகி)*

*இப்பாடல் மாதாமணிவாசகம் (1914), நாட்டுப்பாட்டு (1919) ஆகிய நூல் தொகுதிகளிலும் இடம் பெற்றுள்ளது.*

*(பா-டு) 1 பொங்கிய தெங்குஞ் சுதந்தரநாதம் – (நாட்டுப்பாட்டு)*

*2 வீதியெ லாமணு குற்றனர் – (நாட்டுப்பாட்டு)*

367. பருதியின் பேரொளி[1] வானிடைக் கண்டோம்;
பார்மிசை நின்னொளி காணுதற் கலந்தோம்;
கருதிநின் சேவடி யணிவதற் கென்றே
கனிவுறு நெஞ்சக மலர்கொடு வந்தோம்;
சுருதிகள் பயந்தனை! சாத்திரங் கோடி
சொல்லரு மாண்பின! ஈன்றனை யம்மே!
நிருதர்கள் நடுக்குறச் சூல்கரத் தேற்றாய்,
நிர்மலை யேபள்ளி யெழுந்தரு ளாயே!

368. நின்னெழில் விழியருள் காண்பதற் கெங்கள்
நெஞ்சகத் தாவலை நீயறி யாயோ?
பொன்னனை யாய்வெண் பனிமுடி, யிமையப்[2]
பொருப்பின னீந்த பெருந்தவப் பொருளே!
என்னத வங்கள்செய் தெத்தனை காலம்
ஏங்குவம் நின்னருட் கேழையம் யாமே?
இன்னமும் துயிலுதி யேலிது நன்றோ?
இன்னுயி ரேப்பள்ளி[3] யெழுந்தரு ளாயே! 4

369. மதலைய ரெழுப்பவுந் தாய்துயில் வாயோ?
மாநிலம் பெற்றவ ளிஃதுண ராயோ?
குதலிலை மொழிக்கிரங்[4] காதொரு தாயோ?
கோமக ளேபெரும் பாரதர்க் கரசே!

---

(பா-டு): 1 பரிதியின் பேரொளி - (பா. ஆ.)

2 பொன்னனை யாய்! வெண் பனிமுடி யிமயப் - (அர.)

3 இன்னுயி ரேபள்ளி யெழுந்தரு ளாயே
(மாதாமணிவாசகம் — நாட்டுப்பாட்டு)
(இன்னுயி ரேப்பள்ளி — சந்திப்பிழை)

4 குதலை மொழிக்கிரங் (மாதாமணிவாசகம் — நாட்டுப்பாட்டு)

விதமுறு நின்மொழி பதினெட்டுங் கூறி
  வேண்டிய வாறுனைப் பாடுதுங் காணாய்.
இதமுற வந்தெமை யாண்டருள் செய்வாய்,
  ஈன்றவ ளேப்பள்ளி யெழுந்தருள்வாயே.[1] 5

---

(பா-டு): 1 ஈன்றவ ளேபள்ளி யெழுந்தரு ளாயே (மாதர் மணிவாசகம் — நாட்டுப் பாட்டு)

('ஈன்றவ ளேப்பள்ளி' சந்திப் பிழை)

## 67. தெளிவு

370. எல்லா மாகிக் கலந்துநி றைந்தபின்
ஏழைமை யுண்டோடா? – மனமே!
பொல்லாப் புழுவுனைக் கொல்ல நினைந்தபின்[1]
புத்தி மயக்கமுண்டோ? 1

371. உள்ள தெலாமோ ருயிரென்று கண்டபின்[2]
உள்ளங் குலைவதுண்டோ? – மனமே!
வெள்ள மெனப்பொழி தண்ணரு ளாழ்ந்தபின்
வேதனை யுண்டோடா? 2

372. சித்தி னியல்பு மதன்பெருஞ் சத்தியின்[3]
செய்கையுந் தேர்ந்துவிட்டால் – மனமே!
எத்தனை கோடி யிடர்வந்து சூழினும்
எண்ணஞ் சிறிதுமுண்டோ? 3

373. செய்க செயல்கள் சிவத்திடை நின்றெனத்
தேவ னுரைத்தனனே – மனமே

---

*பிப்ரவரி 1910 (கர்மயோகி)*

*(பா-டு): 1 பொல்லாப் புழுவினைக் கொல்ல நினைத்தபின் - (பா.பி., அர.)*
*2 உள்ள தெலாமோ ருயிரென்று தேர்ந்தபின் - (பா.ஆ., பா.பி., அர.)*
*3 சித்தி னியல்பு மதன்பெருஞ் சக்தியின் – (அர.)*

பொய் கருதாம லதன்வழி நிற்பவர்
 பூதல மஞ்சுவரோ? 4

374. ஆன்ம வொளிக்கடல் மூழ்கித் திளைப்பவர்க்
 கச்சமு முண்டோடா[1] – மனமே
தேன்மடை யிங்கு திறந்தது கண்டது[2]
 தேக்கித் திரிவோமடா[3] 5

(பா–டு): 1 கச்ச முண்டோடா? – (அர.)
2 தேன் மடை யிங்கு திறந்தது கண்டு – (பா.ஆ., பா.பி., அர.)
3 தேக்கித் திரிவமடா! – (பா.ஆ., பா.பி., அர.)

## 68. மஹாசக்திக்கு விண்ணப்பம்

375. அறிவிலே தெளிவு, நெஞ்சிலே யுறுதி,
யகத்திலே யன்பினோர் வெள்ளம்,
பொறிகளின் மீது தனியர சாணை,
பொழுதெலா நினதுபே ரருளின்
நெறியிலே நாட்டம், கருமயோ கத்தி
னிலைத்திடல், என்றிவை யருளாய்,
குறிகுண மேது மில்லதா யனைத்தாய்க்
குலவிடு தனிப்பரம் பொருளே.

.........................................

*மார்ச் 1910 (கர்மயோகி)*

*இப்பாடல் "கனவு" நூற்பகுதியில் இறுதிப் பாடலாகக் காணப்படுகிறது.*

## 69. சாதாரண வருஷத்துத் தூமகேது*

376. திளையின் மீது பனைநின் றாங்கு
மணிச்சிறு மீன்மிசை வளர்வா லொளிதரக்
கீழ்த்திசை வெள்ளியைக் கேண்மைகொண் டிலகுந்
தூம கேதுச் சுடரே வாராய்.
எண்ணில்பல[1] கோடி யோசனை யெல்லை 5
எண்ணிலா மென்மை யியன்றதோர் வாயுவாற்
புனைந்தநின் னெடுவால்[2] போவதென் கின்றார்.
மண்ணகத் தினையும் வால்கொடு தீண்டி
ஏழையர்க் கேது மிடர்செயா தேநீ
போதியென் கின்றார். புதுமைக ளாயிரம் 10
நினைக்குறித் தறிஞர் நிகழ்த்துகின் றனரால்.
பாரத நாட்டிற் பரவிய எம்மனோர்
நூற்கண மறந்துபன் னூறாண் டாயின!
உனதியல் அன்னிய ருரைத்திடக் கேட்டே
தெரிந்தனம். எம்முளே தெளிந்தவ ரீங்கிலை[3] 15

---

*மார்ச் 1910 (கர்மயோகி)*

* *சாதாரண வருஷத்துத் தூமகேது – (பா.பி., அர.)*

*(பா-டு):* 1 *எண்ணில்பல் – (பா.பி.)*
2 *புனைந்த நின்னொடுவால் – (அர.)*
3 *தெரிந்தனம்; எம்முளே தெளிந்தவர் ஈங்கில்லை – (பா.பி.)*

வாராய் சுடரே வார்த்தைசில கேட்பேன்
தீயார்க் கெல்லாங்[1] தீமைகள் விளைத்துத்
தொல்புவி யதனைத் துயர்க்கட லாழ்த்துநீ[2]
போவையென் கின்றார்; பொய்யோ, மெய்யோ?
ஆதித் தலைவி யாணையின் படிநீ 20
சலித்திடுந் தன்மையால், தண்டநீ செய்வது
புவியினைப் புனிதமாப் புரிதற் கேயென[3]
விளம்புகின் றனரது மெய்யோ, பொய்யோ?
ஆண்டோ ரெழுபத் தைந்தினி லொருமுறை
மண்ணைநீ யணுகும் வழக்கினை யாயினும்; 25
இம்முறை வரவினால் எண்ணிலாப் புதுமைகள்
விளையுமென் கின்றார்; மெய்யோ, பொய்யோ?
சித்திகள் பலவுஞ் சிறந்திடு ஞானமும்
மீட்டுமெம் மிடைநின் வரவினால் விளைவதாப்
புகலுகின் றனரது பொய்யோ, மெய்யோ? 30

---

(பா-டு): 1 தீயர்க் கெல்லாம் - (பா.பி., அர.)
2 தொல் புவியதனைத் துயர்க்கட லாழ்த்தி நீ - (பா.பி., அர.)
3 புவியினைப் புனிதமாப் புனைதற் கேயென - (பா.பி., அர.)

## 70. கனவு

"பொய்யாய்ப் பழங்கதையாய்க் கனவாய்
மெல்லப் போனதுவே". - பட்டினத்துப்பிள்ளை.

377. வாழ்வு முற்றுங் கனவெனக் கூறிய
மறைவ லோர்த முரைபிழை யன்றுகாண்
தாழ்வு பெற்ற புவித்தலக் கோலங்கள்
சரத மன்றெனல் யானு மறிகுவேன்
பாழ்க டந்த பரநிலை யென்றவர்
பகரு மந்நிலை பார்த்திலன் பார்மிசை
ஊழ்க டந்து வருவது மொன்றுண்டோ?
உண்மை தன்னிலோர்[1] பாதி யுணர்ந்திட்டேன்.

378. மாயை பொய்யெனல் முற்றிலும் கண்டனன்
மற்று மீந்த பிரமத் தியல்பினை
ஆய நல்லருள் பெற்றிலன் தன்னுடை
அறிவி னுக்குப்[2] புலப்பட லின்றியே

---

*1910*

**பின்னே, பாரதி பிரசுராலயத்தின் (1937) பதிப்பிலே இது 'ஸ்வசரிதை' என்ற தலைப்பில் காணப்படுகிறது. அப்பதிப்பில் முதல் நான்கு பாடல்களுக்கு 'முன்னுரை' என்று உள்தலைப்புத் தரப்பெற்றுள்ளது. அரசாங்க வெளியீடும் பாரதி பிரசுராலயப் பதிப்பினையே பின்பற்றுகிறது.*

*இப்பாடல் பற்றிய வரலாற்று விளக்கத்தினைப் பின்னிணைப்பில் காண்க*
*— பதிப்பாசிரியர்*

*(பா-டு): 1 உண்மை தன்னிலொர் - (பா.பி.)*
*2 அறிவினுக்கும் (பா.பி.)*

தேய மீதெவ ரோசொலுஞ் சொல்லினைச்
செம்மை யென்று மனத்திடைக் கொள்வதாம்
தீய பக்தி யியற்கையும் வாய்ந்திலேன்
சிறிதுகாலம் பொறுத்தினுங் காண்பமே. 2

379. உலகெ லாமொர் பெருங்கன வஃதுளே
உண்டு றங்கி யிடர்செய்து செத்திடும்
கலக மானிடப் பூச்சிகள் வாழ்க்கையோர்
கனவி னுங்கன வாகு மிதனிடை
சிலதி னங்க ளுயிர்க்கமு தாகியே
செப்பு தற்கரி தாகம யக்குமால்
திலத வாணுத லார்தரு மையலாந்
தெய்வி கக்கன வன்னது வாழ்கவே! 3

380. ஆண்டொர்[1] பத்தினி லாடியு மோடியும்
ஆறு குட்டையி னீச்சினும் பேச்சினும்
ஈண்டு பன்மரத் தேறியி றங்கியும்
என்னொ டொத்த சிறியரி ருப்பரால்
வேண்டு தந்தை விதிப்பினுக் கஞ்சியான்
வீதி யாட்டங்க ளேதினுங் கூடிலேன்
தூண்டு நூற்கணத் தோடுத னியனாய்த்
தோழ மைபிறி தின்றிவ ருந்தினேன் 4

காதல்[2]

381. அன்ன போழ்தினி லுற்ற கனவினை
அந்த மிழ்ச்சொலி லெவ்வணஞ் சொல்லுகேன்
சொன்ன தீங்கன வங்கு துயிலிடைத்

(பா—டு): 1 ஆண்டோர் (பா.பி., அர.)
2 பிள்ளைக்காதல் – (பா.பி., அர.)

தோய்ந்த தன்று நனவிடைத் தோய்ந்ததால்.
மென்ன டைக்கனி யின்சொற் கருவிழி
மேனி யெங்கு நறுமலர் வீசிய
கன்னி யென்றுறு தெய்வத மொன்றனைக்
கண்டு காதல் வெறியிற்க லந்தனன். 5

382. ஒன்ப தாய பிராயத்த ளென்விழிக்
கோது காதைச் சகுந்தலை யொத்தனள்.
என்ப தார்க்கும் வியப்பிலை நல்குமால்
என்செய் கேன்பழி யென்மிசை யுண்டுகொல்?
அன்பெ னும்பெரு வெள்ள மிழுக்குமேல்
அதனை யாவர் பிழைத்திட வல்லரே?
முன்பு மாமுனி வோர்தமை வென்றவில்
முன்ன ரேழைக் குழந்தையென் செய்வனே. 6

383. வயது முற்றிய பின்னுறு காதலே
மாசு டைத்தது தெய்விக மன்றுகாண்.
இயலு புன்மை யுடலினுக் கின்பெனும்
எண்ண முஞ்சிறி தேன்றதக்[1] காதலாம்
நயமி குந்தனி மானத[2] மாமணம்
நண்ணு பாலர் தமக்குரித் தாமன்றோ?
கயல்வி ழிச்சிறு மானினைக் காணநான்
காம னம்புக ளென்னுயிர் கண்டவே. 7

384. கனகன் மைந்தன் குமர குருபரன்
கனியு ஞானசம் பந்தன் துருவன்மற்

---

(பா-டு): 1 என்ன முஞ்சிறி தேற்றதக் (அர.)
2 நயமி குந்தனி மாதை – (பா. ப. அர.)

றனையர்[1] பாலர் கடவுளர் மீதுதாம்
எண்ணில் பக்திகொண் டின்னுயிர் வாட்டினோர்
மனதி லேபிறந் தோன்மன முண்ணுவோன்
மதன தேவனுக் கென்னுயிர் நல்கினன்
முனமு ரைத்தவர் வான்புகழ் பெற்றனர்
மூட னேன்பெற்ற தோதுவன் பின்னரே. 8

385. நீரெ டுத்து வருதற் கவள்மணி
நித்தி லப்புன் னகைசுடர் வீசிடப்
போரெ டுத்து வருமதன் முன்செலப்
போகும் வேலை யதற்குத் தினந்தோறும்[2]
வேரெ டுத்துச் சுதந்திர நற்பயிர்
வீந்தி டச்செய்தல் வேண்டிய மன்னர்தம்
சீரெ டுத்த புலையிற்[3] சாரர்கள்
தேச பக்தர் வரவினைக் காத்தல்போல் 9

386. காத்தி ருந்தவன் போம்வழி முற்றிலும்
கண்கள் பின்னழ கார்ந்து களித்திட
யாத்த தேருரு ளைப்படு மேழைதான்
யாண்டு தேர்செலு மாங்கிழுப் புற்றெனக்
கோத்த சிந்தையொ டேகி[4] யதில்மகிழ்
கொண்டு நாட்கள் பலகழித் திட்டனென்.
பூத்த ஜோதி வதனந் திரும்புமேற்
புலன ழிந்தொரு புத்துயி ரெய்துவேன். 10

387. புலங்க ளோடு கரணமு மாவியும்
போந்து நின்ற விருப்புடன் மானிடன்

(பா-டு): 1 றனையர் – (அர.)
2 போகும் வேளை யதற்குத் தினந்தொறும் - (அர.)
3 சீரெ டுத்த புலையுயிர்ச் – (அர.)
சீரெ டுத்த புலையுயிற் (பா.பி).
4 கோத்த சிந்தையோ டேகி - (பா.பி., அர.)

நலங்க ளேது விரும்புவ னங்கவை
நண்ணு றப்பெறல் திண்ணம தாமென
இலங்கு நூலுணர் ஞானியர் கூறுவர்
யானு மற்றது மெய்யெனத் தேர்ந்துளேன்.
விலங்கி யற்கை யிலையெனில் யாமெலாம்
விரும்பு மட்டினில் விண்ணுற லாகுமே. 11

388. சூழு மாய வுலகினிற் காணுறுந்
தோற்றம் யாவையு மானத மாகுமால்,
ஆழு நெஞ்சகத் தாசையின் றுள்ளதேல்
அதனு டைப்பொருள் நாளை விளைந்திடும்.
தாழு முள்ளத்தர், சோர்வினர், ஆடுபோல்
தாவித் தாவிப் பலபொருள் நாடுவோர்
வீழு மோரிடை யூற்றினுக் கஞ்சுவோர்
விரும்பும் யாவும் பெறாரிவர் தாமன்றே? 12

389. விதியை நோவர்தம் நண்பரைத் தூற்றுவர்
வெகுளி பொங்கிப் பகைவரை நிந்திப்பர்
சதிகள் செய்வர்பொய்ச் சாத்திரம் பேசுவர்
சாத கங்கள் புரட்டுவர் பொய்மைசேர்
மதியி னிற்புலை நாத்திகங் கூறுவர்
மாய்ந்தி டாத நிறைந்த விருப்பமே
கதிகள் யாவும் தருமென லோர்ந்திடார்
கண்ணி லாதவர் போலத் திகைப்பர்காண். 13

390. கன்னி மீதுறு காதலி னேழையேன்
கவலை யுற்றன[1] கோடியென் சொல்லுகேன்?

---

(பா-டு): 1 கவலை யுற்றனன் (அர.)

பன்னி யாயிரங் கூறினும் பக்தியின்
பான்மை நன்கு பகர்ந்திட லாகுமோ?
முன்னி வான்கொம்பிற் றேனுக் குழன்றதோர்
முடவன் கால்கள் முழுமைகொண் டாலென
என்னி யன்றுமற் றெங்ஙனம் வாய்ந்ததோ
என்னி டத்தவ ளிங்கிதம் பூண்டதே. 14

391. காத லென்பது மோர்வயி னிற்குமேற்
கடலின் வந்த கடுவினை யொக்குமால்.
ஏத மின்றி யிருபுடைத் தாமெனில்
இன்ன மிர்து மிணைசொல லாகுமோ?
ஓதொ ணாத பெருந்தவம் கூடினோர்
உம்பர் வாழ்வினை யெள்ளிடும் வாழ்வினோர்
மாத ரார்மிசைத்[1] தாமுறுங் காதலை
மற்ற வர்தரப் பெற்றிடு மாந்தரே. 15

392. மொய்க்கு மேகத்தின் வாடிய மாமதி,
மூடு வெம்பனிக் கீழுறு மென்மலர்,
கைக்கும் வேம்பு கலந்திடு செய்யபால்,
காட்சி யற்ற கவினுறு நீள்விழி,
பொய்க்கி னைத்து வருந்திய மெய்யரோ,
பொன்ன னாரருள் பூண்டில ராமெனிற்
கைக்கிளைப் பெயர் கொண்ட பெருந்துயர்க்
காத லஃது கருதவுந் தீயதால். 16

393. தேவர் மன்னன் மிடிமையைப் பாடல்போல்
தீய கைக்கிளை யானெவன் பாடுதல்?
ஆவல் கொண்ட அரும்பெறற் கன்னிதான்

---

*(பா-டு): 1 மாத ரார்மிசை (பா. பி., அர.)*
*தகரம் மிகாம லிருப்பது பிழை*

*— பதிப்பாசிரியர்*

அன்பெ னக்கங் களித்திட லாயினள்,
பாவந் தீமை பழியெலுந் தேர்ந்திடோம்
பண்டைத் தேவ யுகத்து மனிதர்போற்
காவல், கட்டு, விதிவழக் கென்றிடுங்
கயவர் செய்திக ளேது மறிந்திலேம்.?[1] 17

394. கான கத்தி லிரண்டு பறவைகள்
காத லுற்றது போலவு மாங்ஙனே
வான கத்தி லியக்க ரியக்கியர்
மையல் கொண்டு மயங்குதல் போலவும்
ஊன கத்த துவட்டுறு மன்புதா
னொன்று மின்றி யுயிர்களி லொன்றியே
தேன கத்த மணிமொழி யாளொடு
தெய்வ நாட்கள் சிலகழித் தேனரோ. 18

395. ஆதி ரைத்திரு நாளொன்றிற் சங்கரன்
ஆல யத்தொரு மண்டபந் தன்னில்யான்
சோதி மானொடு தன்னந் தனியனாய்ச்
சொற்க ளாடி யிருப்பமற் றங்கவள்
பாதி பேசி மறைந்துபின் தோன்றித்தன்
பங்க யக்கையில் மைகொணர்ந் தே'ஒரு
சேதி. நெத்தியில்[2] பொட்டுவைப் பே'ன்என்றாள்.
திலதமிட்டனள். செய்கை யழிந்தனன். 19

396. என்னை யீன்றெனக் கைந்து பிராயத்தில்
ஏங்க விட்டுவிண் ணெய்திய தாய்தனை
முன்னை யீன்றவன் செந்தமிழ்ச் செய்யுளால்
மூன்று போழ்துஞ் சிவனடி யேத்துவோன்

---

(பா-டு): 1 கடவர் செய்திக ளேது மறிந்திலோம் – (பா. பி., அர.)
2 சேதி நெற்றியில் (அர.)

அன்ன வன்தவப் பூசனை தீர்ந்தபின்
அருச்ச னைப்படு தேமலர் கொண்டுயான்
பொன்னை யென்னுயிர் தன்னை யணுகலும்
பூவை புன்னகை நன்மலர் பூப்பள்காண். 20

## ஆங்கிலப் பயிற்சி

397. நெல்லை யூர்சென்றவ் வூணர் கலைத்திறன்
நேரு மாறெனை எந்தை பணித்தனன்
புல்லை யுண்கென வாளரிச் சேயினைப்
போக்கல் போல்வும், ஊன்விலை வாணிகம்
நல்ல தென்றொரு பார்ப்பனப் பிள்ளையை
நாடு விப்பது போலவும் எந்தைதான்
அல்லல் மிக்கதொர்[1] மண்படு கல்வியை
ஆரி யர்க்கிங் கருவருப் பாவதை 21

398. நரியு யிர்ச்சிறு சேவகர் தாதர்கள்
நாயெ னத்திரி யொற்றர் உணவினைப்
பெரி தெனக்கொடு தம்முயிர் விற்றிடும்
பேடி யர்பிறர்க் கிச்சகம் பேசுவோர்
கருது மிவ்வகை மாக்கள் பயின்றிடுங்
கலைப யில்கென வென்னை விடுத்தனன்.
அருமை மிக்க மயிலைப் பிரிந்துமிவ்
வற்பர் கல்வியி னெஞ்சு பொருந்துமோ? 22

399. கணிதம் பன்னிரண் டாண்டு பயில்வர்பின்
கார்கொள் வானிலொர்[2] மீனிலை தேர்ந்திலார்,

.........................................

(பா-டு): 1 அல்லல் மிக்கதோர் - (பா.பி., அர.)
2 கார்கொள் வானிலோர் - (பா.பி., அர.)

அணிசெய் காவிய மாயிரங் கற்கினும்
ஆழ்ந்தி ருக்கும் கவியுளம் காண்கிலார்,
வணிக மும்பொருள் நூலும் பிதற்றுவர்[1]
வாழு நாட்டிற் பொருள்கெடல் கேட்டிலார்,
துணியு மாயிரஞ் சாத்திர நாமங்கள்
சொல்லு வாரெட் டுணைபயன் கண்டிலார் 23

400. கம்ப னென்றொரு மானிடன் வாழ்ந்ததும்
காளி தாசன் கவிதை புனைந்ததும்
உம்பர் வானத்துக் கோளையு மீனையு
மோர்ந்த ளந்ததொர் பாற்கரன்[2] மாட்சியும்
நம்!! ருந்திற லோடொரு பாணினி
ஞால மீதி லிலக்கணம் கண்டதும்
இம்பர் வாழ்வின் இறுதிகண் டுண்மையின்
இயல் புணர்த்திய சங்கர னேற்றமும், 24

401. சேரன் றம்பி சிலம்பை யிசைத்ததும்
தெய்வ வள்ளுவர்[3] வான்மறை செய்ததும்
பார நல்லிசைப்[4] பாண்டிய சோழர்கள்
பார ளித்ததுந் தர்மம்[5] வளர்த்ததும்
பேர ருட்சுடர் வாள்கொண் டசோகனார்
பிழைப டாது புவித்தலங் காத்ததும்
வீரர் வாழ்த்த மிலேச்சர்தந் தீயகோல்
வீழ்த்தி வென்ற சிவாஜியின் வெற்றியும், 25

---

(பா-டு): 1 வணிக மும்பொருள் நூலும் பிதற்றுவார் - (பா.பி., அர.)
2 ஓர்ந்த ளந்ததோர் பாஸ்கரன் - (அர.)
3 தெய்வ வள்ளுவன் - (பா.பி., அர.)
4 பாரில் நல்லிசைப் - (பா.பி., அர.)
5 பார ளித்துத் தர்மம் - (பா.பி.)

402. அன்ன யாவு மறிந்திலர் பாரதத்
தாங்கி லம்பயில் பள்ளியுட் போகுநர்.
முன்ன நாடு திகழ்ந்த பெருமையும்
மூண்டி ருக்குமிந் நாளி னிகழ்ச்சியும்
பின்னர் நாடுறு பெற்றியுந் தேர்கிலார்
பேடிக் கல்வி பயின்றுழல் பித்தர்கள்.
என்ன கூறிமற் றெங்ங னுணர்த்துவேன்[1]
இங்கிவர்க் கென துள்ள மெரிவதே. 26

403. சூதி லாத வுளத்தின னெந்தைதான்
சூழ்ந்தெ னக்கு நலஞ்செய னாடியே
ஏதி லார்[2]தருங் கல்விப் படுகுழி
ஏறி யுய்தற் கரிய கொடும்பிலம்
தீதி யன்ற மயக்கமும் ஐயமும்
சைய்கை* யாவினு மேய சிரத்தையும்
வாதும் பொய்மையு மென்ற விலங்கினம்
வாழும் வெங்குகைக் கென்னை வழங்கினன். 27

404. அய்ய ரென்றும்[3] துரையென்று மன்றெனக்
காங்கி லக்கலை யென்றொன் றுணர்த்திய
பொய்ய ருக்கிது கூறுவன் கேட்பிரால்.[4]
பொழுதெ லாமுங்கள் பாடத்திற் போக்கிநான்
மெய் யயர்ந்து விழிகுழி வெய்திட
வீறி ழந்தென துள்ளநொய் தாகிட

........................................

(பா-டு): 1 என்ன கூறிமற் றெங்கனுணர்த்துவேன் – (பா.பி.)
2 ஏதிலர் – (பா.பி., அர.)
3 ஐயரென்றும் - (பா.பி., அர.)
4 பொய்ய ருக்கிது கூறுவன், கேட்பிரேல் – (அர.)
பொய்ய ருக்கிது கூறுவன், – (பா.பி.)

*'சைய்கை' - அச்சுப்பிழை (செய்கை என்றிருத்தல் வேண்டும்)
– பதிப்பாசிரியர்

ஐயம் விஞ்சிச் சுதந்திர நீங்கியென்
அறிவு வாரித் துரும்பென் றலைந்ததால். 28

405. செலவு தந்தைக்கொ ராயிரஞ்[1] சென்றது
தீதெ னக்குப்பல் லாயிரஞ் சேர்ந்தன
நலமொ ரெட்டுணை யுங்கண்டி லேனிதை
நாற்ப தாயிரங் கோயிலிற் சொல்லுவேன்
சிலமுன் செய்தன நல்வினை யானுநங்[2]
தேவி பாரதத் தன்னை யருளினும்
அலைவு றுத்துநும் பேரிருள் வீழ்ந்துநான்
அழிந்தி டாதொரு வாறு பிழைத்ததே. 29

மணம்

406. நினைக்க நெஞ்ச முருகும் பிறர்க்கிதை
நிகழ்த்த நாநனி கூசும தன்றியே
எனைத்திங் கெண்ணி வருந்தியு மிவ்விடர்
யாங்ஙன் மாற்றுவ தென்பது மோர்ந்திலம் .
அனைத்தொர் செய்திமற் றேதெனிற் கூறுவன்[3]
அம்ம மாக்கள் மணமெனுஞ் செய்தியே
வினைத்தொ டர்களில் மானுட வாழ்க்கையுள்
மேவு மிம்மணம் போற்பிறி தின்றரோ. 30

407. வீடு றாவணம் யாப்பதை வீடென்பார்
மிகவி ழிந்த பொருளைப் பொருளென்பார்
நாடுங் காலொர் மணமற்ற செய்கையை
நல்ல தோர்மண மாமென நாட்டுவார்.

.........................................

(பா—டு): 1 செலவு தந்தைக்கோ ராயிரஞ் - (பா.பி., அர.)
2 சிலமுன் செய்நல் வினைப்பய னாலும்நந் (அர.)
3 அனைத்தொர் செய்திமற் றேதெனிற் கூறுவேன் (பா பி., அர.)

கூடு மாயிற் பிரம சரியங்கொள்.
கூடு கின்றில தென்னிற் பிழைகள்செய்
தீட ழிந்து நரக வழிசெல்வாய்,[1]
யாது செய்யினு மிம்மணஞ் செய்யல்காண். 31

408. வசிட்ட னுக்கு மிராமற்கும்[2] பின்னொரு
வள்ளு வர்க்குமுன் வாய்த்திட்ட மாதர்போல்
பசித்தொ ராயிர மாண்டுதவஞ் செய்து
பார்க்கி னும்பெறல் சால வரிதுகாண்,
புசிப்ப தும்பரி னல்லமு தென்றெணிப்
புலையர் விற்றிடுங் கள்ளுண லாகுமோ
அசுத்தர் சொல்வது கேட்கலிர், காளையீர்!
ஆண்மை வேண்டின் மணஞ்செய்த லோம்புமின். 32

409. வேறு தேயத் தெவரது[3] செய்யினும்
வீழ்ச்சி பெற்றவிப் பாரத நாட்டினில்
ஊற ழிந்து பிணமென வாழுமிவ்
வூன நீக்க விரும்பு மிளையர்தாம்
கூறு மெந்தத் துயர்கள் விளையினும்
கோடி மக்கள் பழிவந்து சூழினும்
நீறு பட்டவிப் பாழ்ஞ்செயல் மட்டினும்
நெஞ்சத் தானு நினைப்ப தொழிகவே. 33

410. பால ருந்து மதலையர் தம்மையே
பாத கக்கொடும் பாதகப் பாதகர்
மூலத் தோடு குலங்கெடல் நாடிய
மூட மூடநிர் மூடப் புலையர்தாம்

(பா.டு): 1 ஈடழிந்து நரகவழிச் செல்வாய் (பா.பி., அர.)
2 வசிட்டனுக்கும் இராமர்க்கும் - (அர.)
3 வேறு தேயத்தெவரேது - (பா. பி., அர.)

கோல மாக மணத்திடைக் கூட்டுமிக்
கொலையெ னுஞ்செய லொன்றினை யுள்ளவும்
சால வின்னுமோ ராயிர மாண்டிவர்,
தாத ராகி யழிகெனத் தோன்றுமே. 34

411. ஆங்கோர் கன்னியைப் பத்துப் பிராயத்தில்
ஆழ நெஞ்சிடை யூன்றி வணங்கினன்;
ஈங்கொர் கன்னியைப் பன்னிரண் டாண்டனுள்
எந்தை வந்து மணம்புரி வித்தனன்.
தீங்கு மற்றிதி லுண்டென் றறிந்தவன்
செய லெதிர்க்குந் திறனில னாயினேன்.
ஓங்கு காதற் றழலெவ் வளவென்றன்
உளமெ ரித்துள தென்பதுங் கண்டிலேன். 35

412. மற்றோர் பெண்ணை மணஞ்செய்த போழ்துமுன்
மாத ராளிடைக் கொண்டதொர் காதல்தான்
நிற்றல் வேண்டு மெனவுளத் தெண்ணிலேன்
நினைவை யேயிம் மணத்திற் செலுத்தினேன்.[1]
முற்றொ டர்பினி லுண்மை யிருந்ததால்
மூண்ட பின்னதொர் கேளியென் றெண்ணினேன்
கற்றுங் கேட்டு மறிவு முதிருமுன்
காத லொன்று கடமையொன் றாயின. 36

413. மதனன் செய்யு மயக்க மொருவயின்,
மாக்கள் செய்யும் பிணிப்புமற் றோர்வயின்.
இதனிற் பன்னிரண் டாட்டை யிளைஃஞனுக்
கென்னை வேண்டு மிடர்க்குறு சூழ்ச்சிதான்?
எதனி லேனுங் கடமை விளையுமேல்

..........

(பா-டு) 1 நினைவை யேயிம் மணத்திற் செலுத்திலேன் — (பா.பி.அர.)

எத்து யர்க ளுழன்றுமற் றென்செய்தும்
அதனி லுண்மையொ டார்ந்திடல்[1] சாலுமென்
றறம்வி திப்பது மப்பொழு தோர்ந்திலன்[2]. 37

414. சாத்தி ரங்கள், கிரியைகள், பூசைகள்,
சகுன மந்திரத் தாலி மணி யெலாம்
யாத்தெ னைக்கொலை செய்தன ரல்லது
யாது தர்ம முறையெனல் காட்டிலர்.
தீத்தி ரன்[3]கொள றிவற்ற பொய்ச்செயல்
செய்து மற்றவை ஞான நெறியென்பர்
மூத்த வர்வெறும் வேடத்தி னிற்குங்கால்
மூடப் பிள்ளை யறமெவ னோர்வதே? 38

தந்தை வறுமை யெய்திடல்

415. ஈங்கி தற்கிடை யெந்தை பெருந்துயர்
எய்தி நின்றனன் தீய வறுமையான்,
ஓங்கி நின்ற பெருஞ்செல்வம் யாவையும்
ஊணர் செய்த சதியி லிழந்தனன்.
பாங்கி னின்று புகழ்ச்சிகள் பேசிய
பண்டை நண்பர்கள் கைநெகிழ்த் தேகினர்.
வாங்கி யுய்ந்த கிளைஞருந் தாதரும்
வாழ்வு தேய்ந்தபின் யாது மதிப்பரோ? 39

416. பார்ப்பனக் குலங் கெட்டழி வெய்திய
பாழ டைந்த கலியுக மாதலால்
வேர்ப்ப வேர்ப்பப் பொருள்செய்வ தொன்றையே

---

(பா – டு): 1 அதனி லுண்மையோ டார்ந்திடல் – (பா. பி., அர.)
2 அறம் விதிப்பதும் அப்பொழு தோர்ந்திலேன் – (பா. பி.,அர.)
3 தீத்திறன் – (அர.)

மேன்மை கொண்ட தொழிலெனக் கொண்டன்[1]
ஆர்ப்பு மிஞ்சப் பலபல வாணிகம்
ஆற்றி மிக்க பொருள்செய்து வாழ்ந்தனன்.
நீர்ப்ப டுஞ்சிறு புற்புத மாமது
நீங்க வேயுளங் குன்றித் தளர்ந்தனன். 40

417. தீய மாய வுலகிடை யொன்றினில்
சிந்தை செய்து விடாயுறுங் காலதை
வாய டங்கமென் மேலும் பருகினும்
மாயத் தாகந் தவிர்வது கண்டிலம்.
நேய முற்றது வந்து மிகமிக
நித்த லும்மதற் காசை வளருமால்
காய முள்ள வரையுங் கிடைப்பினும்
கயவர் மாய்வது காய்ந்த வுளங்கொண்டே. 41

418. "ஆசைக் கோரள வில்லை" விடயத்துள்
ஆழ்ந்த பின்னங் கமைதியுண் டாமென
மோசம் போகலிர் என்றிடித் தோதிய
மோனி தாளிணை முப்பொழு தேத்துவாம்.
தேசத் தார்புகழ் நுண்ணறி வோடுதான்
திண்மை விஞ்சிய நெஞ்சின னாயினும்
நாசக் காசினி லாசையை நாட்டினன்
நல்ல னெந்தை துயர்க்கடல் வீழ்ந்தனன். 42

419. பொருளி லார்க்கிலை யிவ்வுல கென்றநம்
புலவர் தம்மொழி பொய்ம்மொழி யன்றுகாண்.
பொருளி லார்க்கின மில்லை துணையிலை,

(பா – டு): 1 மேன்மைகொண்ட தொழிலெனக் கொண்டனன் – (பா.பி., அர.)

பொழுதெ லாமிடர் வெள்ளம்வந் தெற்றுமால்.
பொருளி லார்பொருள் செய்தல் முதற்கடன்
போற்றிக் காசினுக் கேங்கி யுயிர்விடும்
மருளர் தம்மிசை யேபழி கூறுவன்,
மாமகட் கிங்கொ ரூன முரைத்திலன். 43

420. அறமொன் றேதரு மெய்யின்ப மென்றநல்
லறிஞர்* தம்மை யனுதினம் போற்றுவேன்
பிற விரும்பி யுலகினில் யான்பட்ட
பீழை யெத்தனை கோடி! நினைக்கவும்
திற னழிந்தென் மனமுடை வெய்துமால்
தேசத் துள்ள இளைஞ ரறிமினோ!
அறமொன் றேதரு மெய்யின்ப மாதலால்
அறனை யேதுணை யென்றுகொண் டுய்திரால். 44

421. வெய்ய கர்மப் பயன்களி னொந்துதான்
மெய்யு ணர்ந்திட லாகுமென் றாக்கிய
தெய்வ மேயிது நீதி யெனினுநின்
திருவ ருட்குப் பொருந்திய தாகுமோ?
ஐய கோ!சிறி துண்மை விளங்குமுன்
ஆவி நையத் துயருறல் வேண்டுமே!
பையப் பையவொ ராமை[1]குன் றேறல்போற்
பாருளோ ருண்மை கண்டிவ ணுய்வரால். 45

422. தந்தை போயினன், பாழ்மிடி சூழ்ந்தது.
தரணி மீதினி லஞ்சலென் பாரிலர்.

.................................

43ஆல் பாடலின் துவக்கத்தில் "பொருட்பெருமை" என்ற உட்தலைப்புப் பாரதி பிரசுராலய, அரசாங்கப் பதிப்புக்களில் காணப்படுகிறது.

- பதிப்பாசிரியர்

*வள்ளுவர் (பாரதியார் குறிப்பு). இந்தக்குறிப்புப் பின்வந்த பதிப்புகளில் இல்லை.
(பா-டு): 1 பையப் பையவோர் ஆமை - (பா.பி., அர.)

சிந்தை யிற்றெளி வில்லை, உடலினில்
திறனு மில்லை, யுரனுளத் தில்லையால்.
மந்தர் பாற்பொருள் போக்கிப் பயின்றதா
மடமைக் கல்வியில் மண்ணும் பயனிலை.
எந்த மார்க்கமுந் தோற்றில தென்செய்கேன்
ஏன்பி றந்தன னித்துயர் நாட்டிலே? 46

முடிவுரை

423. உலகெ லாமொர் பெருங்கன வஃதுளே
யுண்டு றங்கி யிடர்செய்து செத்திடும்
கலக மானிடப் பூச்சிகள் வாழ்க்கையோர்
கனவி னுங்கன வாகு மிதற்குநான்
பலநி னைந்து வருந்தியிங் கென்பயன்?
பண்டு போனதை யெண்ணியென் னாவது?
சிலதி னங்க ளிருந்து மறைவதிற்
சிந்தை செய்தெவன் செத்திடு வானடா! 47

424. ஞான முந்துற வும்பெற்றி லாதவர்,
நானி லத்துத் துயரன்றிக் காண்கிலர்
போனதற்கு வருந்திலன், மெய்த்தவப்
புலமை யோனது வானத் தொளிருமோர்
மீனை நாடி வளைத்திடத் தூண்டிலை
வீச லொக்கு மெனிலை மறக்கிலேன்[1]
ஆன தாவ தனைத்தையுஞ் செய்ததோர்
அன்னை யேயினி யேனு மருள்வையால், 48

---

(பா-டு): 1 வீச லொக்கு மெனலை மறக்கிலேன் - (பா.பி., அர.)

வேறு

425. அறிவிலே தெளிவு நெஞ்சிலே யுறுதி
யகத்திலே யன்பினோர் வெள்ளம்
பொறிகளின் மீது தனியர சாணை
பொழுதெலா நினதுபே ரருளின்
நெறியிலே நாட்டம் கரும யோகத்தி
னிலைத்திட லென்றிவை யருளாய்
குறிகுண மேது மில்லதா யனைத்தாய்க்
குலவிடு தனிப்பரம் பொருளே.* 49

* இப்பாடல் "கர்மயோகி" 1910 மார்ச் இதழின் முதற்பக்கத்தில் "மஹா சக்திக்கு விண்ணப்பம்" என்ற தலைப்பில் வெளியாகியுள்ளது.

ஓம்

# 71. பாஞ்சாலி சபதம்*

## பிரமஸ்துதி

### நொண்டிச் சிந்து

426. ஓமெனப் பெரியோர்கள் – என்றும்
ஓதுவ தாய்வினை மோதுவ தாய்த்
தீமைகள் மாய்ப்பதுவாய்ப் – பவங்[1]
தேய்ப்பது வாய்நலம் வாய்ப்பது வாய்

---

*****முதற் பாகம் 1912-ல் அச்சில் பாரதியார் வாழ்ந்த காலத்திலேயே வெளி வந்தது. 1924-இல் முதற் பாகத்தோடு, அதுவரை அச்சேறாமலிருந்த இரண்டாம் பாகத்தையும் இணைத்துப் பாரதி பிரசுராலயம் வெளியிட்டது.

1919 நவம்பர் 5ஆம் நாள் கானாடுகாத்தான் திரு. வயி. சு. சண்முகம் செட்டியாருக்குப் பாரதியார் எழுதிய கடிதத்திலிருந்து, பாஞ்சாலி சபதத்தின் இரண்டாம் பாகம் 1919 இலேயே கையெழுத்துப் படியாக முடிவுற்றிருந்தது என அறியமுடிகிறது. இயைபு கருதி இங்கே இரண்டு பாகங்களும் இணைத்து வெளியிடப்படுகின்றன.

இரண்டாம் பதிப்பு வெளியிடுவதற்கு ஏற்றவாறு முதற்பதிப்பின் அச்சுப் படியில் பாரதியார் கைப்படப் பல திருத்தங்கள் செய்திருக்கிறார். "முதற்பாகம் - முதலாவது அழைப்புச் சருக்கம்" என்ற கிளைத்தலைப்பு என்று அச்சுப் பிரதியில் புதிதாகச் சேர்த்துள்ளார், பாரதியார்.

(பா-டு) 1 தீமைகள் மாய்ப்பதுவாய் - துயர்-(பாரதி திருத்தம்)

பாரதி பிரசுராலயப் பதிப்பில் துவக்கத்தில் பாரதி எழுதிய அழைப்புச் சருக்கமும், நொண்டிச் சிந்தும் இடம்பெறவில்லை. அரசாங்க வெளியீட்டில் "முதலாவது துரியோதனன் சூழ்ச்சிச்சருக்கம் (அழைப்பு)" என்ற உட்தலைப்பு காணப்படுகின்றது.

நாமமு முருவுமற்றே – மனம்
நாடரி தாய்ப்புந்தி தேடரி தாய்
ஆமெனும் பொருளனைத்தாய் – வெறும்
அறிவுட னாநந்த வியல்புடைத் தாய். 1

427. நின்றிடும் பிரமமென்பார்–அந்த
நிர்மலப் பொருளினை நினைத்திடு வேன்
நன்றுசெய் தவம்,யோகம் – சிவ
ஞானமும் பக்தியு நணுகிட வே,
வென்றிகொள் சிவசக்தி - எனை
மேவுற வேயிருள் சாவுற வே,
இன்றமிழ் நூலிதுதான் - புகழ்
ஏய்ந்தினி தாயென்று மிலகிட வே. 2

ஸரஸ்வதி வணக்கம்

428. வெள்ளைக் கமலத்திலே – அவள்
வீற்றிருப் பாள்புக ழேற்றிருப் பாள்,
கொள்ளைக் கனியிசைதான் – நனி[1]
கொட்டுநல் யாழினைக் கொண்டிருப் பாள்
கள்ளைக் கடலமுதை – நிகர்
கண்டதோர் பூந்தமிழ்க் கவிசொல வே
பிள்ளைப் பருவத்திலே – எனைப்
பேணவந் தாளருள் பூணவந் தாள். 3

429. வேதத் திருவிழியாள் – அதில்
மிக்கபல் லுரையெனுங் கருமையிட் டாள்
சீதக் கதிர்மதியா– நுதல்[2]

---

(பா–டு): 1 *கொள்ளைக் கனியிசைதான் - நன்கு (பாரதி திருத்தம்)*
2 *சீதக்கதிர்மதியே - நுதல்–(பா.பி.)*

சேர்ந்த தோருகவண் குழலுடை யாள்[1]
வாதத் தருக்கமெனுஞ் – செவி
வாய்ந்தநற் றுணிவெனுந் தோடணிந் தாள்
போதமென் னாசியினாள் - நலம்
பொங்குபல் சாத்திர வாயுடை யாள். 4

430. கற்பனைத் தேனிதழாள் - சுவைக்
காவிய மெனுமணிக் கொங்கையி னாள்
சிற்ப முதற்கலைகள்– பல
தேமலர்க் கரமெனத் திகழ்ந்திருப் பாள்
சொற்படு நயமறிவார் – இசை
தோய்ந்திடத் தொகுப்பதின் சுவையறி வார்
விற்பனத் தமிழ்ப்புலவோர் – அந்த
மேலவர் நாவெனு மலர்ப்பதத் தாள். 5

431. வாணியைச் சரண்புகுந்தேன் – அருள்
வாக்குத வுவளெனத்[2] திடமிகுந் தேன்.
பேணிய பெருந்தவத்தாள் – நிலம்
பெயரன வும்பெயர் பெயரா தாள்
பூணியல் மார்பகத்தாள் – ஐவர்
பூவை திரௌபதி புகழ்க்கதை யை
மாணியல் தமிழ்ப்பாட்டால் – நான்
வகுத்திடக் கலைமகள் வாழ்த்துக வே. 6

## நூல்*

432. அத்தின புரமுண்டாம்– இவ்
வவனியி லேயதற் கிணையிலை யாம்

---

*(பா–டு): 1 சிந்தனையே குழலென்றுடையாள் (பாரதி திருத்தம்)*
*2 வாக்களிப்பாளெனத் - (பாரதி திருத்தம்)*

**பாரதி பிரசுராலயப் பதிப்பில் நூல் என்பதற்குப் பதிலாக "ஹஸ்தினாபுரம்" என்பது உளது.*

பத்தியில் வீதிகளாம் – வெள்ளைப்
பனிவரை போற்பல மாளிகை யாம்
முத்தொளிர் மாடங்களாம் – எங்கு
மொய்த்தளி சூழ்மலர்ச் சோலைக ளாம்
நத்தியல் வாவிகளாம் – அங்கு
நாடுமி ரதிநிகர் தேவிக ளாம். 7

433. அந்தணர் வீதிகளாம் – மறை
யாதிக ளாங்[1] கலைச் சோதிக ளாம்
செந்தழல் வேள்விகளாம் – மிகச்
சீர்பெறுஞ் சாத்திரக் கேள்விக ளாம்
மந்திர கீதங்களாம் – தர்க்க
வாதங்க ளாம்தவ நீதங்க ளாம்
சிந்தையி லறமுண்டாம்[2] – எனிற்
சேர்ந்திடுங் கலிசெயு மறமுமுண் டாம்[3]. 8

434. மெய்த்தவர் பலருண்டாம் – வெறும்
வேடங்கள் பூண்டவர் பலருமுண் டாம்
உய்த்திடு சிவஞானங் – கனிந்
தோர்ந்திடு மேலவர் பலருண் டாம்
பொய்த்தவிந் திரசாலம் – நிகர்
பூசையுங் கிரியையும் புலைநடை யும்
கைத்திடு பொய்ம்மொழியும் – கொண்டு
கண்மயக் காற்பிழைப் போர்பல ராம். 9

435. மாலைகள் புரண்டசையும் – பெரு
வரையெனத் திரண்டவன் றோளுடை யார்

---

(பா-டு): 1 யாதி முதற் (பாரதி திருத்தம்)
2 சிந்தையிலறமு முண்டாம் (பா. பி)
3 கலிசேர்வதைக் காட்ட வன்மறமு முண்டாம் (பாரதி திருத்தம்)

வேலையும் வாளினையும் - நெடு
வில்லையுந் தண்டையும் விரும்பிடு வார்
காலையு மாலையிலும் – பகை
காய்ந்திடு தொழில்பல பழகிவெம் போர்
நூலையுந் தேர்ச்சிகொள்வோர்[1] – கரி
நூறினைத் தனிநின்று நொறுக்கவல் லோர்.[2] 10

436. ஆரிய வேன்மறவர் – புவி
யாளுமொர் கடுந்தொழி லினிதுணர்ந் தோர்
சீரியல் மதி முகத்தார் - மணித்
தேனித ழமுதென நுகர்ந்திடு வார்,
வேரியங் கள்ளருந்தி - எங்கும்
வெம்மத யானைக ளெனத்திரி வோர்,[3]
பாரினி லிந்திரர் போல் - வளர்
பார்த்திவர் வீதிகள் பாடுவ மே. 11

437. நல்லிசை முழக்கங்களாம் – பல
நாட்டிய மாதர்தம் பழக்கங்க ளாம்
தொல்லிசைக் காவியங்கள் – அருந்
தொழிலுணர் சிற்பர்செ யோவியங் கள்
கொல்லிசை வாரணங்கள் – கடுங்
குதிரைக ளொடுபெருந் தேர்களுண் டாம்
மல்லிசை போர்களுண்டாம் – திரள்
வாய்ந்திவை பார்த்திடு வோர்களுண் டாம். 12

438. எண்ணரு மணிவகையும்[4] – இவை
இலகிநல் லொளிதரும் பணிவகை யும்,

---

(பா-டு): 1 நூலையுந் தேர்ச்சி கொள்வார்–(பாரதி திருத்தம்)
2 நூறினைத் தனிநின்று நொறுக்க வல்லார் – (பாரதி திருத்தம்)
3 வெம்மத யானைக ளெனத்திரிவார் (பா.பி.)
4 எண்ணரு கனிவகையும் - (பா. பி., அர.)

தண்ணறுஞ் சாந்தங்களும் – மலர்த்
தார்களு மலர்விழிக் காந்தங்க ளும்
சுண்ணமு நறும்புகையும் – சுரர்
துய்ப்பதற் குரியபல் பண்டங்க ளும்
உண்ணநற் கனிவகையும் – களி
யுவகையுங் கேளியு மோங்கின வே. 13

439. சிவனுடை நண்பனென்பார் – வட
திசைக்கதி பதியள கேசனென் பார்,
அவனுடைப் பெருஞ்செல்வம் - இவர்
ஆவணந் தொறும்புகுந் திருப்பது வாந்[1]
தவனுடை வணிகர்களும் – பல
தரனுடைத் தொழில்செயு மாசன மும்
எவனுடைப் பயமுமிலா – தினி
திருந்திடுந் தன்மைய தெழினக ரே. 14

440. * கன்னங் கரியதுவாய் - அகல்
காட்சிய தாய்மிகு மாட்சிய தாய்
துன்னற் கினியதுவாய் - நல்ல
சுவைதரு நீருடை யமுனையெ னும்
வன்னத் திருநதியின் – பொன்
மருங்கிடைத் திகழ்ந்தவம் மணிநக ரில்
மன்னவர் தங்கோமான் – புகழ்
வானர வக்கொடி யுயர்த்துநின் றான். 15

---

1 'வாந்' என்ற சொல்லைப் பாரதி அடித்துத் திருத்திய சொல் இன்ன தென்று தெரியவில்லை.

*15ஆம் பாட்டின் தொடக்கத்தில் "துரியோதனன் சபை" என்பது நிலைத் தலைப்பு (பா.பி.,)

441. துரியோ தனப்பெயரான் - நெஞ்சத்
துணிவுடை யான்முடி பணிவறி யான்
கரியோ ராயிரத்தின் – வலி
காட்டிடு வோனென்றக் கவிஞர்பி ரான்
பெரியோன் வேதமுனி - அன்று
பேசிடும் படிதிகழ் தோள்வலி யோன்
உரியோர் தாமெனினும் – பகைக்
குரியோர் தமக்குவெந் தீயனை யான். 16

442. தந்தைசொல் நெறிப்படியே – இந்தத்
தடந்தோள் மன்னவ னரசிருந் தான்
மந்திர முணர்பெரியோர் – பலர்
வாய்த்திருந் தாரவன்[1] சபைதனி லே
அந்தமில் புகழுடையான் – அந்த
ஆரிய வீட்டுமன் அறமறிந் தோன்
வந்தனை பெறுங்குரவோர் – பழ
மறைக்குல மறவர்க ளிருவரொ டே, 17

443. மெய்ந்நெறி யுணர்விதுரன் - இனி
வேறுபல் லமைச்சரும் விளங்கிநின் றார்
பொய்ந்நெறித் தம்பியரும் – அந்தப்
புலைநடைச் சகுனியும் புறமிருந் தார்
மைந்நெறி வான்கொடையான் – உயர்
மானமும் வீரமு மதியுமு ளோன்
உய்ந்நெறி யறியாதான் – இறைக்
குயிர்நிகர் கன்னனு முடனிருந் தான். 18

---

(பா – டு): 1 வாய்ந்திருந் தாரவன் (அர.)

வேறு

444. * எண்ணி லாத பொருளின் குவையும்
யாங்க ணுஞ்செலுஞ் சக்கர மாண்பும்
மண்ணி லார்க்கும் பெறலரி தாமோர்
வார்க டற்பெருஞ் சேனையு மாங்கே
விண்ணி லிந்திரன் துய்ப்பன போன்று
வேண்டு மின்பமும் பெற்றவ னேனும்
கண்ணி லாத்திரி தாட்டிரன்[1] மைந்தன்
காய்ந்த நெஞ்சுட னெண்ணுவ கேளீர். 19

வேறு

445. பாண்டவர் முடியுயர்த்தே – இந்தப்
பார்மிசை யுலவிடு நாள்வரை நான்
ஆண்டதொ ரரசாமோ – என
தாண்மையும் புகழுமோர் பொருளா மோ –
காண்டகு வில்லுடையோன் – ஒரு[2]
காளை யருச்சுனன் கண்களி லும்
மாண்டகு திறல்வீமன் – தட
மார்பிலு மெனதிகழ் வரைந்துள தே. 20

446. பாரத நாட்டிலுள்ள – முடிப்
பார்த்திவர் யார்க்குமோர் பதியென் றே
நாரதன் முதன்முனிவோர் – வந்து
நாட்டிடத் தருமனவ் வேள்விசெய் தான்
சோரனவ்[3] வெதுகுலத்தான் – சொலுஞ்
சூழ்ச்சியுந் தம்பியர் தோள்வலி யும்

---

*19-ஆம் பாடல் தொடக்கத்தில் கிளைத் தலைப்பு:
"துரியோதனன் பொறாமை" (பா. பி., அர.)

(பா - டு): 1 கண்ணிலாத் திரிதராட்டிரன் (அர.)
2 காண்டகு வில்லுடையோன் – அந்தக்-(பாரதி திருத்தம்)
3 "சோரனவ்" என்ற சொல்லைப் பாரதியார் மாற்றியிருக்கிறார், ஆனால், புரியவில்லை.

வீரமி லாத்தருமன் – தனை
வேந்தர்தம் முதலென மிலைந்தன வே.[1] 21

447. ஆயிர முடிவேந்தர் – பதி
னாயிர மாயிரங் குறுநிலத் தார்
மாயிருந் திறை கொணர்ந்தே – அங்கு
வைத்ததொர் வரிசையை மறந்திட வோ
தூயிழை யாடைகளும் – மணித்
தொடையலும் பொன்னுமொர் தொகைப்படு மோ
சேயிழை மடவாரும் – பரித்
தேர்களுங் கொடுத்தவர் சிறுதொகை யோ? 22

448. ஆணிப் பொற் கலசங்களும் – ரவி
யன்னநல் வயிரத்தின் மகுடங்க ளும்
மாணிக்கக் குவியல்களும் – பச்சை
மரகதத் திரளுநன் முத்துக்களும்
பூணிட்ட திருமணிதாம் – பல
புதுப்புது வகைகளிற் பொலிவன வும்
காணிக்கை யாக்கொணர்ந்தார் – அந்தக்
காட்சியை மறப்பது மெளிதா மோ? 23

449. நால்வகைப் பசும்பொன் னும் – ஒரு
நாலா யிரவகைப் பணக்குவை யும்
வேல்வகை வில்வகையும் – அம்பு
விதங்களுந் தூணியும் வாள்வகை யும்
சூல்வகை தடிவகையும் – பல
தொனிசெயும் பறைகளுங் கொணர்ந்துவைத் தே
பால்வகை மன்னவர்தாம்[2] – அங்கு
பணிந்ததை யென்னுள மறந்திடு மோ? 24

(பா–டு): 1 வேந்தர்தம் முதலென விதித்தனவே. (பாரதி திருத்தம்)
2 பால்வளர் மன்னவர்தாம் – (பாரதி திருத்தம்.)

450. கிழவியர் தபசியர்போல் - பழங்
கிளிக்கதை படிப்பவன் பொறுமை,யென்றும்
பழவினை முடிவென்றும் – சொலிப்
பதுங்கிநிற் போன்மறத் தன்மையி லான்
வழவழத் தருமனுக்கோ – இந்த
மாநில மன்னவர் தலைமை தந்தார்
முழவினைக் கொடிகொண்டான் – புவி
முழுதையுந் தனியே குடிகொண் டான். 25

451. தம்பியர் தோள்வலியால் - இவன்
சக்கர வர்த்தியென் றுயர்ந்தது வும்
வெம்பிடு மதகரியான் - புகழ்
வேள்விசெய் தப்பத[1] முழக்கிய தும்
அம்புவி மன்னரெலாம் - இவன்
ஆணைதஞ் சிரத்தினி லணிந்தவ ராய்
நம்பரும் பெருஞ்செல்வம் - இவ
னலங்கிளர் சபையினிற் பொழிந்தது வும். 26

452. எப்படிப் பொறுத்திடுவேன்? - இவன்
இளமையின் வளமைக ளறியே னோ?
குப்பைகொ லோமுத்தும் – அந்தக்
குரைகட லிலத்தவர் கொணர்ந்துபெய் தார்
சிப்பியும் பவளங்களும் – ஒளி
திரண்டவெண் சங்கத்தின் குவியல்க ளும்
ஒப்பில்வை டூரியமும் - கொடுத்
தொதுங்கநின் றாரிவ னொருவனுக் கே. 27

453. மலைநா டுடையமன்னர் - பல
மான்கொணர்ந் தார்புதுத் தேன்கொணர்ந் தார்

---

(பா-டு): 1 வேள்வி செய் தந்நிலை (பாரதி திருத்தம்)

கொலைநால் வாய்கொணர்ந்தார் - மலைக்
குதிரையும் பன்றியுங் கொணர்ந்துதந் தார்
கலைமான் கொம்புகளும் - பெருங்
களிறுடைத் தந்தமுங் கவரிக ளும்
விலையார் தோல்வகையும் – கொண்டு
மேலும்பொன் வைத்தங்கு வணங்கிநின் றார். 28

454. செந்நிறத் தோல்கருந்தோல் - அந்தத்
திருவளர் கதலியின் தோலுட னே
வெந்நிறப் புலித்தோல்கள் - பல
வேழங்க ளாடுக ளிவற்றுடைத் தோல்
பன்னிற மயிருடைகள் – விலை
பகரரும் பறவைகள் விலங்கினங் கள்
பொன்னிறப் பாஞ்சாலி - மகிழ்
பூத்திடுஞ் சந்தன மகில்வகை கள். 29

455. ஏலங் கருப்பூரம் – நறும்
இலவங்கம் பாக்குநற் சாதிவ கை
கோலம் பெறக்கொணர்ந்தே - அவர்
கொட்டிநின் றார்கரங் கட்டிநின் றார்
மேலுந்த லத்திலுளார்[1] - பல
வேந்தரப் பாண்டவர் விழைந்திட வே
ஓலந்த ரக்கொணர்ந்தே – வைத்த
தொவ்வொன்று மென்மனத் துறைந்தது வே. 30

456. மாலைகள் பொன்னுமுத்தும் - மணி
வகைகளிற் புனைந்தவுங் கொணர்ந்துபெய் தார்
சேலைகள் நூறுவன்னம் - பல

---

(பா-டு): 1 மேலுந் தலத்தி லுள - (பா.பி.)

சித்திரத் தொழில்வகை சேர்ந்தன வாய்
சாலவும் பொன்னிழைத்தே - தெய்வத்
தையலர் விழைவன பலர்கொணர்ந் தார்
கோலநற் பட்டுக்களின் - வகை
கூறுவதோ? எண்ணி லேறுவ தோ? 31

457. கழல்களுங் கடகங்களும் - மணிக்
கவசமு மகுடமுங் கணக்கில வாம்
நிழனிறப் பரிபலவும் - செந்
நிறத்தன பலவும்வெண் ணிறம்பல வும்
தழனிற மேகநிறம் - விண்ணிற்
சாருமிந் திரவில்லை நேருநி றம்
அழகிய கிளிவயிற்றின் - வண்ண
மார்ந்தன வாய்ப்பணி சேர்ந்தன வாய், 32

458. காற்றெனச் செல்வனவாய் - இவை
கடிதுகைத் திடுந்திறன் மறவரோ டே,[1]
போற்றிய கையினராய்ப் - பல
புரவலர் கொணர்ந்தவன் சபைபுகுந் தார்.
சீற்றவன் போர்யானை - மன்னர்
சேர்த்தவை பலபல மந்தையுண்டாம்
ஆற்றன்மி லேச்சமன்னர் - தொலை
யரபிய ரொட்டைகள் கொணர்ந்துதந் தார். 33

459. தென்றிசைச் சாவகமாம் - பெருந்
தீவுதொட் டேவட திசையத னில்
நின்றிடும் புகழ்ச்சீனம் - வரை

..........................................

(பா-டு): 1 கடிதுகைத் திடுந்திறன் மறவ ரொடே (பா.பி.)
கடிதுகைத் திடுந்திறல் மறவ ரொடே (அர.)

நேர்ந்திடும் பலபல நாட்டின ரும்
வென்றிகொள் தருமனுக்கே – அவன்
வேள்வியிற் பெரும்புகழ் விளையும்வண் ணம்
நன்றுபல் பொருள்கொணர்ந்தார் – புவி
நாயகன் யுதிட்டிர னெனவுணர்ந் தார். 34

460. ஆடுகள் சிலர்கொணர்ந்தார் - பலர்
ஆயிர மாயிரம் பசுக்கொணர்ந் தார்
மாடுகள் பூட்டினவாய்ப் - பல
வகைப்படு தானியஞ் சுமந்தன வாய்
ஈடுறு வண்டிகொண்டே – பலர்
எய்தினர் கரும்புகள் பலர்கொணர்ந் தார்
நாடுறு தயிலவகை - நறு
நானத்தின் பொருள் பலர் கொணர்ந்துதந் தார். 35

461. நெய்க்குடங் கொண்டுவந்தார் - மறை
நியமங்கொள் பார்ப்பனர் மகத்தினுக் கே
மொய்க்குமின் கள்வகைகள் - கொண்டு
மோதின ரரசின மகிழ்வுற வே
தைக்குநற் குப்பாயம் – செம்பொற்
சால்வைகள் போர்வைகள் கம்பளங் கள்
கைக்குமட் டினுந்தானோ – அவை
காண்பவர் விழிகட்கும் அடங்குப வோ? 36

462. தந்தத்திற் கட்டில்களும் – நல்ல
தந்தத்திற் பல்லக்கும் வாகன மும்
தந்தத்தின் பிடிவாளும் - அந்தத்
தந்தத்தி லேசிற்பத் தொழில் வகை யும்
தந்தத்தி லாதனமும் - பின்னுந்
தமனிய மணிகளி லிவையனைத் தும்

தந்தத்தைக் கணக்கிடவோ – முழுத்
தரணியின் திருவுமித் தருமனுக் கோ? 37

வேறு

463. என்றிவ் வாறு பலபல வெண்ணி
யேழை யாகி யிரங்குத லுற்றான்
வன்றி றத்தொரு கல்லெனு நெஞ்சன்
வான்ம் வீழினு மஞ்சுத லில்லான்
குன்ற மொன்று குழைவுற் றிளகிக்
குழம்பு பட்டழி வெய்திடும் வண்ணம்
கன்று பூதலத் துள்ளுறை வெம்மை
காய்ந்தெ ழுந்து வெளிப்படல் போல 38

464. நெஞ்சத் துள்ளொர்[1] பொறாமை யெனுந்தீ
நீள்வ தாலுள்ள நெக்குரு கிப்போய்
மஞ்ச னாண்மை மறந்திண்மை மானம்
வன்மை யாவு மறந்தன னாகிப்
பஞ்சை யாமொரு பெண்மகள் போலும்
பாலர் போலும் பரிதவிப் பானாய்க்
கொஞ்ச நேரத்திற் பாதகத் தோடு
கூடி யேயுற வெய்திநின் றானால். 39

465. யாது நேரினு மெவ்வகை யானும்
யாது போயினும் பாண்டவர் வாழ்வைத்
தீது செய்து மடித்திட வெண்ணிச்
செய்கை யொன்றறி யான்திகைப் பெய்திச்
சூதும் பொய்யு முருவெனக் கொண்ட
துட்ட மாமனைத் தான்சர ணெய்தி
ஏது செய்வ மெனச்சொலி நைந்தான்
எண்ணத் துள்ளன யாவு முரைத்தே. 40

(பா.டு) 1 நெஞ்சத்துள்ளோர் (பா.பி., அர).

466. மன்னர் மன்னன் யுதிட்டிரன் செய்த
மாம கத்தினில் வந்து பொழிந்த
சொன்னம் பூண்மணி முத்திவை கண்டுந்
தோற்றங் கண்டு மதிப்பினைக் கண்டும்
என்ன பட்டது தன்னுள மென்றே
யீன மாம னறிந்திடும் வண்ணம்
முன்னந் தானெஞ்சிற் கூறிய வெல்லாம்
மூடன் பின்னு மெடுத்து மொழிந்தான். 41

வேறு

467. * உலகு தொடங்கிய நாள் முதலாகநஞ் சாதியில் - புகழ்
ஓங்கிநின் றாரித் தருமனைப் போலெவர் - மாமனே
இலகு புகழ்மனுவாதி முதுவர்க்கு மாமனே – பொரு
ளேற்றமு மாட்சியு மிப்படி யுண்டுகொல் மாமனே
கலைக ளுணர்ந்தநல் வேதியப் பாவலர் செய்தவாம் – பழங்
கற்பனைக் காவியம் பற்பல கற்றனை மாமனே
பலகட லாட்டையு மிப்படி வென்றதை யெங்கணும் -
சொல்லப்
பார்த்ததுண் டோகதை கேட்டதுண் டோபுகல் மாமனே. 42

468. எதனை யுலகில் மறப்பினும் யானினி மாமனே - இவர்
யாகத்தை யென்று மறந்திட லென்பதொன் றேதுகாண்?
விதமுறச் சொன்ன பொருட்குவை யும்பெரி தில்லை
காண் – அந்த
வேள்வியி லென்னை வெதுப்பின வேறு பலவுண்டே
இதனை யெலாமவ் விழியற்ற தந்தையின் பாற்சென்றே –
சொல்லி

* 42ஆம் பாடல் தொடக்கத்தில் கிளைத் தலைப்பு:
''துரியோதனன் சகுனியிடம் சொல்வது'' என்பது - (பா. பி., அர)'

யிளையவர்[1] மீதவ னும்பகை யெய்திடச் செய்தியால்[2]
மிதமிகு மன்பவர் மீதுகொண் டானவன் கேட்கவே - அந்த
வேள்விகண் டென்னுயிர் புண்படுஞ் செய்திவி ளம்புவாய். 43

469. கண்ணைப் பறிக்கு மழகுடை யாரின மங்கையர் – பல
காமரு பொன்மணிப் பூண்க ளணிந்தவர் தம்மையே
மண்ணைப் புரக்கும் புரவலர் தாமந்த வேள்வியில் –
கொண்டு
வாழ்த்தி யளித்தனர் பாண்டவர்க் கேயெங்கள் மாமனே
எண்ணைப் பழிக்குந் தொகையுடை யாரின மஞ்சரைப் –
பலர்
ஈந்தனர் மன்ன ரிவர்தமக் குத்தொண் டியற்றவே
விண்ணைப் பிளக்குந் தொனியுடைச் சங்குக ளூதினார் -
தெய்வ
வேதியர் மந்திரத் தோடுபல் வாழ்த்துக்க ளோதினார். 44

470. நாரதன் றானுமவ் வேதவி யாசனு மாங்ஙனே - பலர்
நானிங் குரைத்தற் கரிய பெருமை முனிவரும்
மாரத வீரரப் பாண்டவர் வேள்விக்கு வந்ததும் - வந்து
மாமறை யாசிகள் கூறிப் பெரும்புகழ் தந்ததும்
வீரர்தம் போரி னரியநற் சாத்திர வாதங்கள் - பல
விப்பிரர் தம்முள் விளைத்திடத் தத்துவம்[3] வீசவே
சாரம றிந்த யுதிட்டிரன் கேட்டு வியந்ததும் – நல்ல
தங்கம ழைபொழிந் தாங்கவர்க் கேமகிழ் தந்ததும் 45

---

பாரதி திருத்தம்:

1 இங்கிவர்

2 யெய்திடச் செய்குவாய்

3 விப்பிரர் தம்முள் விளைத்திட உண்மை

471. விப்பிர ராதிய நால்வரு ணத்தவர் துய்ப்பவே – நல்
விருந்து செயலி லளவற்ற பொன்செல விட்டதும்
இப்பிற விக்கு ளிவையொத்த வேள்வி விருந்துகள் - புவி
யெங்கணு நாங்கண்ட தில்லை யெனத்தொனி பட்டதும்
தப்பின்றி யேநல் விருந்தினர் யார்க்குந் தகுதிகள் – கண்டு
தக்கசம் மானம ளித்து[1] வரிசைக ளிட்டதும்
செப்புக நீயவ் விழியற்ற தந்தைக்கு, நின்மகன் – இந்தச்
செல்வம் பெறாவிடிற் செத்திடுவா னென்றுஞ் செப்புவாய்
46

472. அண்ணன் மைந்த னவனிக்கு ரியவன் யானன்றோ?
- அவர்
அடிய ராகி யெமைப்பற்றி[2] நிற்றல் விதியன்றோ?
பண்ணும் வேள்வியில் யார்க்கு முதன்மை யவர்தந்தார்
– அந்தப்
பாண்ட வர்நமைப் புல்லென வெண்ணுதல் பார்த்தையோ?
கண்ண னுக்கு முதலுப சாரங்கள் காட்டினார் – சென்று
கண்ணி லாத்தந்தைக் கிச்செய லின்பொருள் காட்டுவாய்
மண்ணில் வேந்தருட் கண்ணனெவ் வாறு முதற்பட்டான்
– என்றன்
மாம னேயவ னம்மி லுயர்ந்த வகைசொல்வாய். 47

473. சந்தி ரன்குலத் தேபிறந் தோர்தந் தலைவன்யான் - என்று
சகமெ லாஞ்சொலும் வார்த்தைமெய் யோவெறுஞ் சாலமோ?
தந்தி ரத்தொழி லொன்றுண ருஞ்சிறு வேந்தனை – இவர்
தரணி மன்னருள் முற்பட வைத்திடல் சாலுமோ?
மந்தி ரத்திலச் சேதியர் மன்னனை மாய்த்திட்டார்–ஐய!
மாம கத்தி லதிதியைக் கொல்ல மரபுண்டோ

..........................................

(பா - டு): 1 தக்க சன்மான மளித்து (பா. பி., அர.)
2 அடியவ ராகி யெமைப்பற்றி (பா.பி., அர.)

இந்தி ரத்துவம் பெற்றிவர் வாழு நெறிநன்றே! - இதை
எண்ணி யெண்ணியென் னெஞ்சு கொதிக்குது மாமனே. 48

474. சதிசெய் தார்க்குச் சதி செயல் வேண்டுமென் மாமனே இவர்
தாமெ னன்பன் சராசந்த னுக்குமு னெவ்வகை
விதிசெய் தாரதை யென்றுமெ னுள்ள மறக்குமோ-இந்த
மேதினி யோர்கள் மறந்து விட்டா ரிஃதோர் விந்தையே
நிதிசெய் தாரைப் பணிகுவர் மானிடர் மாமனே - எந்த[1]
நெறியி னாலது செய்யினு நாயென நீள்புவி
துதிசெய் தேயடி நக்குதல் கண்டனை மாமனே - வெறுஞ்
சொல்லுக் கேயற நூல்க ளுரைக்குந் துணிவெலாம். 49

475. பொற்றடந் தேரொன்று வாலிகன் கொண்டு விடுத்ததும் - அதிற்
பொற்கொடி சேதியர் கோமகன் வந்துதொ டுத்ததும்
உற்றதோர் தம்பிக்குத் தென்னவன் மார்பணி தந்ததும்-ஒளி
யோங்கிய மாலையம் மாகதன் றான்கொண்டு வந்ததும்
பற்றல ரஞ்சும் பெரும்புக ழேக வலியனே[2] - செம்பொற்
பாதுகை கொண்டு யுதிட்டிரன் தாளினி லார்த்ததும்
முற்றிடு மஞ்சனத் திற்குப் பலபல தீர்த்தங்கள் - மிகு
மொய்ம்புடை யானவ் வவந்தியர் மன்னவன் சேர்ந்ததும் 50

476. மஞ்சன நீர்தவ வேதவி யாசன் பொழிந்ததும் - பல
வைதிகர் கூடிநன் மந்திர வாழ்த்து மொழிந்ததும்
குஞ்சரச் சாத்தகி வெண்குடை தாங்கிட வீமனும் – இளங்

........................................

49ஆம் பாடலையடுத்து 50ம் பாடலின் தொடக்கத்தில் ''வேறு'' என்ற சொல் பாரதியாரின் திருத்தச் சேர்க்கை.

(பா-டு): 1 நிதி செய் தாரைப் பணிகுவர் மானிடர் மாமனே-எந் - (பா.பி.)
(பாரதி திருத்தம்:) 2 பற்றல ரஞ்சும் பெரும் புகழேக லவியனே

கொற்றவ னும்பொற் சிவிறிகள் வீச இரட்டையர்
அஞ்சுவர் போலங்கு நின்று கவரி யிரட்டவே – கடல்
ஆளு மொருவன் கொடுத்ததொர் தெய்விகச் சங்கினில்
வஞ்சகன் கண்ணன் புனித முறுங்கங்கை நீர்கொண்டு-திரு
மஞ்சன மாட்டுமப் போதி லெவரு மகிழ்ந்ததும் 51

477. மூச்சையடைத்தத டா!சபை தன்னில் விழுந்துநான் - அங்கு
மூர்ச்சை யடைந்தது கண்டனையே யென்றன் மாமனே
ஏச்சையு மங்கவர் கொண்ட நகைப்பையு மெண்ணுவாய்
– அந்த
ஏந்திழை யாளு மெனைச்சிரித் தாளிதை யெண்ணுவாய்
பேச்சை வளர்த்துப் பயனொன்று மில்லையென் மாமனே
– அவர்
பேற்றை யழிக்க வுபாயஞ்சொல் வாயென்றன் மாமனே
தீச்செய னற்செய லேதெனி னும்மொன்று செய்துநாம்
- அவர்
செல்வங் கவர்ந்தவ ரைவிட வேண்டுந் தெருவிலே. 52

வேறு

478. *என்று சுயோதனன் கூறியே - நெஞ்சம்
ஈர்ந்திடக் கண்ட சகுனிதான் - அட!
இன்று தருகுவன் வெற்றியே - இதற்
கித்தனை வீண்சொல் வளர்ப்பதேன்? - இனி
ஒன்றுரைப் பேனல் லுபாயந்தான் - அதை
யூன்றிக் கருத்தொடு கேட்பையால் – ஒரு
மன்று புனைந்திடச் செய்திநீ - தெய்வ
மண்டப மொத்த நலங்கொண்டே. 53

* 53ஆம் பாடலின் தொடக்கத்தில் கிளைத் தலைப்பு: "சகுனியின் சதி" என்பது, (பா. பி., அர).

479. மண்டபங் காண வருவிரென் - றந்த
மன்னவர் தம்மை வரவழைத் - தங்கு
கொண்ட கருத்தை முடிப்பவே - மெல்லக்
கூட்டிவன் சூது பொரச்செய்வோம் - அந்த
வண்டரை நாழிகை யொன்றிலே - தங்கள்
வான்பொருள் யாவையுந் தோற்றுனைப் - பணி
தொண்ட ரெனச்செய் திடுவன்யான் - என்றன்
சூதின் வலிமை யறிவைநீ. 54

480. வெஞ்சமர் செய்திடு வோமெனில் - அதில்
வெற்றியும் தோல்வியும் யார்கண்டார்? - அந்தப்
பஞ்சவர் வீரம் பெரிதுகாண் - ஒரு
பார்த்தன்கை வில்லுக் கெதிருண்டோ - உன்றன்
நெஞ்சத்திற் சூதை யிகழ்ச்சியாக் - கொள்ள
நீதமில் லைமுன்னைப் பார்த்திவர் - தொகை
கொஞ்சமி லைப்பெருஞ் சூதினால் - வெற்றி
கொண்டு பகையை யழித்துளோர். 55

481. நாடுங் குடிகளுஞ் செல்வமும் - எண்ணி
நானிலத் தோர்கொடும் போர்செய்வார் - அன்றி
ஓடுங் குருதியைத் தேக்கவோ - தமர்
ஊன்குவை கண்டுக ளிக்கவோ - அந்த
நாடுங் குடிகளுஞ் செல்வமும் - ஒரு
நாழிகைப் போதினிற் சூதினால் - வெல்லக்
கூடுமெ னிற்பிறி தெண்ணலேன்? - என்றன்
கொள்கை யிதுவெனக் கூறினான். 56

482. இங்கிது கேட்ட சுயோதனன் - மிக
இங்கிதஞ் சொல்லினை மாமனே - என்று
சங்கிலிப் பொன்னின் மணியிட்ட - ஒளித்

தாமஞ் சகுனிக்குச் சூட்டினான் - பின்னர்
எங்கும் புவிமிசை யுன்னைப்போல் - எனக்
கில்லை யினியது சொல்லுவோர் - என்று
பொங்கு முவகையின் மார்புறக் – கட்டிப்
பூரித்து விம்மித் தழுவினான். 57

**483.** *மற்றதன் பின்ன ரிருவரும் - அரு
மந்திரக் கேள்வி யுடையவன் - பெருங்
கொற்றவர் கோன்திரி தாட்டிரன்[1] – சபை
கூடி வணங்கி யிருந்தனர் - அருள்
அற்ற சகுனியுஞ் சொல்லுவான் – ஐய,
ஆண்டகை நின்மகன் செய்திகேள் - உடல்
வற்றித் துரும்பொத் திருக்கின்றான் - உயிர்
வாழ்வை முழுதும் வெறுக்கின்றான். 58

**484.** உண்ப சுவையின்றி யுண்கின்றான் - பின்
உடுப்ப திகழ வுடுக்கின்றான் - பழ
நண்பர்க ளோடுற வெய்திடான் இள
நாரிய ரைச்சிந்தை செய்திடான் - பிள்ளை
கண்பச லைகொண்டு போயினான் – இதன்
காரணம் யாதென்று கேட்பையால் - உயர்
திண்பரு மத்தடந் தோளினாய் – என்று
தீய சகுனியுஞ் செப்பினான். 59

**485.** தந்தையு மிவ்வுரை கேட்டதால் – உளஞ்
சாலவும் குன்றி வருந்தியே – என்றன்
மைந்த நினக்கு வருத்தமேன் – இவன்

---

*58ஆம் பாடலின் தொடக்கத்தில் கிளைத் தலைப்பு: "சகுனி திரிதராட்டி னிடம் சொல்லுதல்" என்பது (பா.பி., அர.)

(பா-டு): 1 கொற்றவர் கோன் திரிதராட்டிரன் – (அர.)

வார்த்தையி லேதும் பொருளுண்டோ? - நினக்
கெந்த விதத்துங் குறையுண்டோ? - நினை
யாரு மெதிர்த்திடு வாருண்டோ? - நின்றன்
சிந்தையி லெண்ணும் பொருளெலாங் - கணந்
தேடிக் கொடுப்பவ ரில்லையோ? 60

**486.** இன்னமு தொத்த வுணவுகள் - அந்த
இந்திரன் வெஃகுறு மாடைகள் - பலர்
சொன்ன பணிசெயு மன்னவர் - வருந்
துன்பந் தவிர்க்கு மமைச்சர்கள் - மிக
நன்னலங் கொண்ட குடிவகை* - இந்த
நானில மெங்கும் பெரும்புகழ் - மிஞ்சி
மன்னுமப் பாண்டவச் சோதரர் - இவை
வாய்ந்து முனக்குத் துயருண்டோ? 61

**487.** தந்தை வசனஞ் செவியுற்றே - கொடி
சர்ப்பத்தை கொண்டதொர் கோமகன் - சுடு[1]
வெந்தழல் போலச் சினங்கொண்டே - தன்னை
மீறிப் பலசொல் விளம்பினான் - இவன்
மந்த மதிகொண்டு சொல்வதை - அந்த
மாமன் மறித்துரை செய்குவான் - ஐய
சிந்தை வெதுப்பத்தி னாலிவன் - சொலும்
சீற்ற மொழிகள் பொறுப்பையால். 62

**488.** தன்னுளத் துள்ள குறையெலாம் - நின்றன்
சந்நிதி யிற்சென்று சொல்லிட - முதல்

---

* நன்னலங் கொண்ட குடிபடை (பாரதி திருத்தம்).

1 சர்ப்பத்தைக் கொண்டதொர்கோமகன்-சுடு - (பா.பி., அர.)
'இப்பாடமே சரி மூல வெளியீட்டில் 'சர்ப்பத்தை கொண்டதோர்' என்பது அச்சுப் பிழை

- பதிப்பாசிரியர்

என்னைப் பணித்தனன்; யானிவன் - றனை
யிங்கு வலியக் கொணர்ந்திட்டேன் - பிள்ளை
நன்னய மேசிந்தை செய்கின்றான் – எனில்
நன்கு மொழிவ தறிந்திலன் - நெஞ்சைத்
தின்னுங் கொடுந்தழல் கொண்டவர் - சொல்லுஞ்
செய்தி தெளிய வுரைப்பரோ? - 63

489. நீபெற்ற புத்திர னல்லவோ? * - மன்னர்
நீதி யியல்பி லறிகின்றான் – ஒரு
தீபத்திற் சென்று கொளுத்திய – பந்தத்
தேசு குறைய வெரியுமோ? - செல்வத்
தாபத்தை நெஞ்சில் வளர்த்திடல் - மன்னர்
சாத்திரத் தேமுதற் சூத்திரம் – பின்னும்
ஆபத் தரசர்க்கு வேறுண்டோ - தம்மில்
அன்னியர் செல்வ மிகுதல்போல்? 64

490. வேள்வியி லன்றந்தப் பாண்டவர் - நமை
வேண்டு மட்டுங்குறை செய்தனர் - ஒரு
கேள்வியி லாதுன் மகன்றனைப் – பலர்
கேலிசெய் தேநகைத் தார்கண்டாய் - புவி
ஆள்வினை முன்னவர்க் கின்றியே – புகழ்
ஆர்ந்தினை யோரது கொள்வதைப் - பற்றி
வாள்விழி மாதரு நம்மையே – கய
மக்களென் றெண்ணி நகைத்திட்டார். 65

491. ஆயிரம் யானை வலிகொண்டான் – உன்றன்
ஆண்டகை மைந்த னிவன்கண்டாய் - இந்த

---

பாரதி திருத்தம்: * நீ பெற்ற புத்திரனே யன்றோ?

மாயிரு ஞாலத் துயர்ந்ததா - மதி
வான்குலத் திற்கு முதல்வனாம் - ஒளி
ஞாயிறு நிற்பவு மின்மினி - தன்னை
நாடித் தொழுதிடுந் தன்மைபோல் – அவர்
வேயிருந் தூதுமோர் கண்ணனை - அந்த
வேள்வியிற் சால உயர்த்தினார். 66

492. ஐயநின் மைந்தனுக் கில்லைகாண் - அவர்
அர்க்கிய முற்படத் தந்ததே – இந்த
வையகத் தார்வியப் பெய்தவே - புவி
மன்னவர் சேர்ந்த சபைதனில் - மிக
நொய்யதோர் கண்ணனுக் காற்றினார் - மன்னர்
நொந்து மனங்குன்றிப் போயினர் - பணி
செய்யவுங் கேலிகள் கேட்கவும் – உன்றன்
சேயினை வைத்தனர் பாண்டவர். 67

493. பாண்டவர் செல்வம் விழைகின்றான் – புவிப்
பாரத்தை வேண்டிக் குழைகின்றான் - நனி*
நீண்ட மகிதல முற்றிலும் – உங்கள்
நேமி செலும்புகழ் கேட்கின்றான் - குலம்
பூண்ட பெருமை கெடாதவா - றெண்ணிப்
பொங்கு கின்றானலம் வேட்கின்றான் - மைந்தன்
ஆண்டகைக் கிஃது தகுமன்றோ? - இல்லை
யாமெனில் வைய நகுமன்றோ? 68

494. நித்தங் கடலினிற் கொண்டு போய் - நல்ல
நீரை யளவின்றிக் கொட்டுமாம் - உயர்
வித்தகர் போற்றிடுங் கங்கையா - றது

---

* பாரதி திருத்தம்: பாரத்தை வேண்டிக் குழைகின்றான் -மிக

வீணிற் பொருளை யழிப்பதே![1] - ஒரு
சத்த மிலாநடுக் காட்டினில்[2] - புனல்
தங்கி நிற்குங்குள மொன்றுண்டாம் - அது
வைத்த தன்னீரைப் பிறர்கொளா - வகை
வாரடைப் பாசியில் மூடியே 69

**495.** சூரியன் வெப்பம் படாமலே[3] - மரஞ்
சூழ்ந்த மலையடிக் கீழ்ப்பட்டே - முடை
நீரினை நித்தலுங் காக்குமாம் - இந்த
நீள்சுனை போல்வர் பலருண்டே - எனில்
ஆரியர் செல்வம் வளர்தற்கே - நெறி[4]
ஆயிர நித்தம் புதியன - கண்டு
வாரிப் பழம்பொரு ளெற்றுவார் - இந்த
வண்மையு நீயறி யாததோ? 70

**496.** *கள்ளச் சகுனியு மிங்ஙனே - பல
கற்பனை சொல்லித்த னுள்ளத்தின் - பொருள்
கொள்ளப் பகட்டுதல் கேட்டபின் - பெருங்
கோபத் தொடேதிரி தாட்டிரான் - அட
பிள்ளையை நாசம் புரியவே - ஒரு
பேயென நீவந்து தோன்றினாய் - பெரு
வெள்ளத்தைப் புல்லொன் றெதிர்க்குமோ - இள
வேந்தரை நாம்வெல்ல லாகுமோ? 71

**497.** சோதரர் தம்முட் பகையுண்டோ - ஒரு
சுற்றத்தி லேபெருஞ் செற்றமோ - நம்மில்

---

(பா-டு): 1 வீணிற் பொருளை யழிப்பதோ - (பா.பி., அர.)
2 சத்தமிலா நெடுங்காட்டினில் - (அர.)
3 சூரிய வெப்பம் படாமலே - (பா.பி., அர.)
4 ஆரியர் செல்வம் வளர்தற்கே - தொழில் - (அர.)

* பா.பி., அர. பதிப்புகளில் இப்பாடலின் தொடக்கத்தில் 'திரிதராட்டிரன் பதிற் கூறுதல்' என்ற கிளைத்தலைப்பு உளது.

ஆதரங் கொண்டவ ரல்லவோ?[1] - முன்னர்
ஆயிரஞ் சூழ்ச்சி யிவன்செய்தும் - அந்தச்
சீதரன் றண்ணரு ளாலுமோர் - பெருஞ்
சீலத்தி னாலும் புயவலி - கொண்டும்
யாதொரு தீங்கு மிலாமலே - பிழைத்
தெண்ணருங் கீர்த்திபெற் றாரன்றோ? 72

498. பிள்ளைப் பருவந் தொடங்கியே - இந்தப்
பிச்ச னவர்க்குப் பெரும்பகை - செய்து
கொள்ளப் படாத பெரும்பழி - யன்றிக்
கொண்டதோர் நன்மை சிறிதுண்டோ - நெஞ்சில்
எள்ளத் தகுந்த பகைமையோ? - அவர்
யார்க்கு மினைத்த வகையுண்டோ - வெறும்
நொள்ளைக் கதைகள் கதைக்கிறாய் - பழ
நூலின் பொருளைச் சிதைக்கிறாய். 73

499. மன்னவர் நீதி சொலவந்தாய் - பகை
மாம லையைச்சிறு மட்குடம் - கொள்ளச்
சொன்னதோர் நூல்சற்றுக் காட்டுவாய் - விண்ணிற்
சூரியன் போனிக ரின்றியே - புகழ்
துன்னப் புவிச்சக்க ராதிபம் - உடற்
சோதரர் தாங்கொண் டிருப்பவும் - தந்தை
யென்னக் கருதி யவரெனைப் - பணிந்
தென்சொற் கடங்கி நடப்பவும் 74

500. முன்னை யிவன்செய்த தீதெலா -மவர்
முற்று மறந்தவ ராகியே - தன்னைத்

1 (பாரதி திருத்தம்): ஆதரங் கொண்டவ ரல்லரோ?

தின்ன வருமோர் தவளையைக் – கண்டு
சிங்கஞ் சிரித்தருள் செய்தல்போல் - துணை
யென்ன விவனை மதிப்பவும் - அவ
ரேற்றத்தைக் கண்டுமஞ் சாமலே - (நின்றன்
சின்ன மதியினை யென்சொல்வேன்!)* – பகை
செய்திட வெண்ணிப் பிதற்றினாய். 75

**501.** ஒப்பில் வலிமை யுடையதாங் - துணை
யோடு பகைத்த லுறுதியோ? - நமைத்[1]
தப்பிழைத் தாரந்த வேள்வியில் - என்று
சால மெவரிடஞ் செய்கிறாய்? - மயல்
அப்பி விழிதடு மாறியே இவன்
அங்குமிங் கும்விழுந் தாடல்கண் - டந்தத்
துப்பிதழ் மைத்துனி தான்சிரித் - திடில்
தோஷ மிதில்மிக வந்ததோ? 76

**502.** தவறி விழுபவர் தம்மையே – பெற்ற
தாயுஞ் சிரித்தல் மரபன்றோ? - எனில்
இவனைத் துணைவர் சிரித்ததோர் - செயல்
எண்ணரும் பாதக மாகுமோ? - மனக்
கவலை வளர்த்திடல் வேண்டுவோர் – ஒரு
காரணங் காணுதல் கஷ்டமோ? - வெறும்
அவல மொழிக ளளப்பதேன் - தொழி
லாயிர முண்டவை செய்குவீர். 77

**503.** சின்னஞ் சிறிய வயதிலே - இவன்
தீமை யவர்க்குத் தொடங்கினான் – அவர்

.........................................

*நகவளைவு ஏன் என்பது தெரியவில்லை - பதிப்பாசிரியர்
(பா–டு): 1 பகைத்த லுறுதியோ நம்மைத் - (பாபி., அர.)

என்னரும் புத்திர னென்றெண்ணித் - தங்கள்
யாகத் திவனைத் தலைக்கொண்டு - பசும்
பொன்னை நிறைத்ததொர் பையினை - மனம்
போலச் செலவிடு வாயென்றே - தந்து
மன்னவர் காண விவனுக்கே - தம்முள்
மாண்பு கொடுத்தன ரல்லவோ?[1] 78

504. கண்ணனுக் கேமுத லர்க்கியம் – அவர்
காட்டின ரென்று பழித்தனை - எனில்
நண்ணும் விருந்தினர்க் கன்றியே – நம்முள்
நாமுப சாரங்கள் செய்வதோ? - உற
வண்ணனுந் தம்பியு மாதலால் – அவ
ரன்னிய மானமைக் கொண்டிலர் - முகில்
வண்ண னதிதியர் தம்முளே - முதல்
மாண்புடை யானெனக் கொண்டனர். 79

505. கண்ணனுக் கேயது சாலுமென் – றுயர்
கங்கை மகன்சொலச் செய்தனர் - இதைப்
பண்ணரும் பாவமென் றெண்ணினால் - அதன்
பார மவர்தமைச் சாருமோ? - பின்னுங்
கண்ணனை யேதெனக் கொண்டனை? - அவன்
காலிற் சிறுதுக ளொப்பவர் - நிலத்
தெண்ணரு மன்னவர் தம்முளே - பிறர்
யாரு மிலையெனல் காணுவாய். 80

506. ஆதிப் பரம்பொருள் நாரணன் – தெளி
வாகிய பாற்கடல் மீதிலே – நல்ல
சோதிப் பணாமுடி யாயிரம் - கொண்ட

..................................

(பா-டு): 1 மாண்பு கொடுத்தன ரல்லரோ? - (பா.பி., அர.)

தொல்லறி வென்னுமோர் பாம்பின்மேல் - ஒரு
போதத் துயில்கொளு நாயகன் - கலை
போந்து புவிமிசைத் தோன்றினான் – இந்தச்
சீதக் குவளை விழியினான் - என்று
செப்புவ ருண்மை தெளிந்தவர். 81

507. நானெனு மாணவந் தள்ளலும் - இந்த
ஞாலத்தைத் தானெனக் கொள்ளலும் - பர
மோன நிலையி னடத்தலும் - ஒரு
மூவகைக் காலங் கடத்தலும் - நடு
வான கருமங்கள் செய்தலும் - உயிர்
யாவிற்கு நல்லருள் பெய்தலும் - பிறர்
ஊனைச் சிதைத்திடும் போதினும் - தன
துள்ள மருளி னெகுதலும் 82

508. ஆயிரங் கால முயற்சியாற் – பெற
லாவரிப் பேறுகள் ஞானியர் – இவை
தாயின் வயிற்றிற் பிறந்தன்றே – தமைச்
சார்ந்து விளங்கப் பெறுவரேல் - இந்த
மாயிரு ஞால மவர்தமைத் - தெய்வ
மாண்புடை யாரென்று போற்றுங்காண் - ஒரு
பேயினை வேத முணர்த்தல்போற் – கண்ணன்
பெற்றி யுனக்கெவர் பேசுவார்? 83

வேறு

509. *வெற்றி வேற்கைப் பரதர்தங் கோமான்
மேன்மை கொண்ட விழியகத் துள்ளோன்

* 84ஆம் பாடல் தொடக்கத்தில் "துரியோதனன் சினங்கொள்ளுதல்". என்ற கிளைத் தலைப்புத் தந்தன (பா. பி., அர.)

பெற்றி மிக்க விதுர னறிவைப்
பின்னு மற்றொரு கண்ணெனக் கொண்டோன்
முற்று ணர்திரி தாட்டிர னென்போன
மூடப் பிள்ளைக்கு மாமன்சொல் வார்த்தை
ஏற்றி நல்ல வழக்குரை செய்தே
ஏன்ற வாறு நலங்கள்[1] புகட்ட 84

510. கொல்லு நோய்க்கு மருந்துசெய் போழ்திற்
கூடும் வெம்மைய தாய்ப்பிணக் குற்றே,
தொல்லு ணர்வின் மருத்துவன் றன்னைச்
சோர்வு றுத்துதல் போலொரு தந்தை
சொல்லும் வார்த்தையி லேதெரு வாதான்,
தோமி ழைப்பதி லோர்மதி யுள்ளான்
கல்லு மொப்பிடத் தந்தை விளக்குங்
கட்டு ரைக்குங் கடுஞ்சின முற்றான். 85

வேறு

511. *பாம்பைக் கொடியென் றுயர்த்தவன் – அந்தப்
பாம்பெனச் சீறி மொழிகுவான் – அட!
தாம்பெற்ற மைந்தர்க்குத் தீதுசெய் – திடுந்
தந்தையர் பார்மிசை யுண்டுகொல்! - கெட்ட
வேம்பு நிகரி வனுக்குநான் - சுவை
மிக்க சருக்கரை பாண்டவர் - அவர்
தீம்புசெய் தாலும் புகழ்கின்றான் – திருத்
தேடினு மென்னை யிகழ்கின்றான். 86

---

1 பாரதி திருத்தம்: ஏன்ற வாறு நயங்கள்.

*86-ஆம் பாடல் தொடக்கத்தில் "துரியோதனன் தீமொழி" என்ற கிளைத் தலைப்பு தந்தன – (பா. பி., அர.)

512. மன்னர்க்கு நீதி யொருவகை – பிற
மாந்தர்க்கு நீதிமற் றோர்வகை - என்று
சொன்ன வியாழ முனிவனை - இவன்
சுத்த மடையனென் றெண்ணியே - மற்றும்
என்னென்ன வோகதை சொல்கிறான் - உற
வென்றுநட் பென்றுங் கதைக்கிறான் – அவர்
சின்ன முறச்செய வேதிறங் – கெட்ட
செத்தையென் றென்னை நினைக்கிறான். 87

513. இந்திர போகங்க ளென்கிறான் - உண
வின்பமு மாதரி னின்பமும் - இவன்
மந்திர மும்படை மாட்சியும் - கொண்டு
வாழ்வதை விட்டிங்கு வீணிலே - பிறர்
செந்திரு வைக்கண்டு வெம்பியே - உளத்
தேம்புதல் பேதமை யென்கிறான் - மன்னர்
தந்திரந் தேர்ந்தவர் தம்மிலே - எங்கள்
தந்தையை யொப்பவ ரில்லைகாண். 88

514. மாதர்த மின்ப மெனக்கென்றான் – புவி
மண்டலத் தாட்சி யவர்க்கென்றான் - நல்ல
சாதமு நெய்யு மெனக்கென்றான் – எங்கும்
சாற்றிடுங் கீர்த்தி யவர்க்கென்றான் – அட!
ஆதர விங்ஙனம் பிள்ளைமேல் - வைக்கும்
அப்ப னுலகினில் வேறுண்டோ! - உயிர்ச்
சோதரர் பாண்டவர், தந்தைநீ - குறை
சொல்ல வினியிட மேதையா! 89

515. சொல்லி னயங்க ளறிந்திலேன் - உனைச்
சொல்லினில் வெல்ல விரும்பிலேன் – கருங்

கல்லிடை நாருரிப் பாருண்டோ? - நினைக்
காரணங் காட்டுத லாகுமோ? - எனைக்[1]
கொல்லினும் வேறெது செய்யினும் - நெஞ்சிற்
கொண்ட கருத்தை விடுகிலேன் - அந்தப்
புல்லிய பாண்டவர் மேம்படக் – கண்டு
போற்றி யுயிர் கொண்டு வாழ்கிலேன். 90

516. வாதுநின் னோடு தொடுக்கிலேன் - ஒரு
வார்த்தைமட் டுஞ்சொலக் கேட்பையால் - ஒரு
தீது நமக்கு வராமலே – வெற்றி
சேர்வதற் கோர்வழி யுண்டுகாண் - களிச்
சூதுக் கவரை யழைத்தெல்லாம் - அதில்
தோற்றிடு மாறு புரியலாம் – இதற்
கேதுந் தடைகள்சொல் லாமலே - என
தெண்ணத்தை நீகொளல் வேண்டுமால். 91

வேறு

517. *திரிதாட் டிரன்செவியில்[2] - இந்தத்
தீமொழி புகுதலுந் திகைத்து விட்டான்
பெரிதாத் துயர்கொணர்ந்தாய் - கொடும்
பேயெனப் பிள்ளைகள் பெற்று விட்டேன்
அரிதாக் குதல்போலே - அமர்
ஆங்கவ ரொடுபொர லவல மென்றேன்
நரிதாக் குதல்போலாம் - இந்த
நாணமில் செயலினை நாடுவ னோ? 92

.................................

*(பா–டு): 1 காரணங் காட்டுத லாகுமோ? – என்னைக் - (பா.பி., அர.)*
*92-ஆம் பாடலின் தொடக்கத்தில் கிளைத் தலைப்பு "திரிதராட்டிரன் பதில்" பா. பி , அர.)
*(பா-டு): 2 திரிதராட்டிரன் செவியில் - (பா. பி.,)*

*518. ஆரியர் செய்வாரோ? - இந்த
ஆண்மையி லாச்செய லெண்ணுவ ரோ?
பாரினிற் பிறருடைமை - வெஃகும்
பதரினைப் போலொரு பதருண் டோ?
பேரியற் செல்வங்களும் - இசைப்
பெருமையு மெய்திட விரும்புதி யேல்
காரிய மிதுவாமோ - என்றன்
காளையன் றோ?இது கருத லடா! 93

519. வீரனுக் கேயிசைவார் – திரு,
மேதினி யெனுமிரு மனைவியர் தாம்
ஆரமர் தமரல்லார் - மிசை
யாற்றிநல் வெற்றியி லோங்குதி யேல்,
பாரத நாட்டினிலே – அந்தப்
பாண்டவ ரெனப்புகழ் படைத் திடுவாய்,
சோரர்தம் மகனோநீ? - உயர்
சோமன்ற னொருகுலத் தோன்ற லன்றோ? 94

520. தம்மொரு கருமத்திலே - நித்தந்
தளர்வறு முயற்சிமற் றோர்பொரு ளை
இம்மியுங் கருதாமை - சார்ந்
திருப்பவர் தமைநன்கு காத்திடு தல்
இம்மையி லிவற்றினையே - செல்வத்
திலக்கண மென்றனர் மூதறி ஞர்
அம்மவிங் கிதனையெலாம் - நீ
அறிந்திலை யோபிழை யாற்றல்நன் றோ? 95

521. நின்னுடைத் தோளனையார் – இள
நிருபரைச் சிதைத்திட நினைப்பா யோ?

என்னுடை யுயிரன்றோ? - எனை
யெண்ணியிக் கொள்கையை நீக்குதி யால்.
பொன்னுடை மார்பகத்தார் - இளம்
பொற்கொடி மாதரைக் களிப்பதி னும்
இன்னும்ப லின்பத்தினும் - உளம்
இசையவிட் டேயிதை மறந்திட டா. 96

வேறு

522. *தந்தை யிஃது மொழிந்திடல் கேட்டே
தாரி சைந்த நெடுவரைத் தோளான்
எந்தை நின்னொடு வாதிடல் வேண்டேன்
என்று பன்முறை கூறியுங் கேளாய்
வந்த காரியங் கேட்டிமற் றாங்குன்
வார்த்தை யின்றியப் பாண்டவர் வாரார்,
இந்த வார்த்தை யுரைத்து விடாயேல்
இங்கு நின்முனென் னாவி யிறுப்பேன். 97

523. மதித மக்கென் றிலாதவர் கோடி
வண்மைச் சாத்திரக் கேள்விகள் கேட்டும்
பதியுஞ் சாத்திரத் துள்ளுறை காணார்,
பானைத் தேனி லகப்பையைப் போல்வார்.
துதிகள் சொல்லும் விதுரன் மொழியைச்
சுருதி யாமெனக் கொண்டனை நீதான்.
அதிக மோக மவனுளங் கொண்டான்
ஐவர் மீதிலிங் கெம்மை வெறுப்பான். 98

---

*97ஆம் பாடலின் தொடக்கத்தில் கிளைத்தலைப்பு: ''துரியோதனன் பதில்'' - என்பது. (பா.பி., அர.)

524. தலைவ னாங்கு பிறர்கையிற் பொம்மை;
சார்ந்து நிற்பவ ருய்ந்நெறி யுண்டோ?[1]
உலைவ லால், திரி தாட்டிர வர்க்கத்
துள்ள வர்க்கு நலமென்ப தில்லை
நிலையி லாதன செல்வமு மாண்பும்
நித்தந் தேடி வருந்த லிலாமே
விலையி லாநிதி கொண்டன மென்றே
மெய்கு ழைந்து துயில்பவர் மூடர். 99

525. பழைய வானிதி போதுமென் றெண்ணிப்
பாங்கு காத்திடு மன்னவர் வாழ்வை
விழையு மன்னிய ரோர்கணத் துற்றே
வென்ற ழிக்கும் விதியறி யாயோ?
குழைத லென்பது மன்னவர்க் கில்லை;
கூடக்கூ டப்பின் கூட்டுதல் வேண்டும்
பிழையொன் றேயர சர்க்குண்டு கண்டாய்
பிறரைத் தாழ்த்து வதிற்சலிப் பெய்தல். 100

வேறு

526. வெல்வதெங் குலத்தொழிலாம் - எந்த
விதத்தினி லிசையினுந் தவறிலைக்காண்[2]
நல்வழி தீயவழி - என
நாமதிற் சோதனை செயத்தகுமோ?
செல்வழி யாவினுமே - பகை
தீர்த்திடல் சாலுமென் றனர்பெரியோர்

......................................

(பா-டு): 1 சார்ந்து நிற்பவர்க் குய்ந்நெறி உண்டோ? (பா. பி., அர.)
2 விதத்தினி லிசையினுந் தவறிலைகாண் -(பா. பி., அர.)
'தவறிலைக்காண்' என்பது சந்தி/அச்சுப் பிழை-பதிப்பாசிரியர்

கொல்வது தான்படையோ? - பகை
குமைப்பன யாவுநற் படையலவோ? 101

வேறு

527. சுற்றத் தாரிவ ரென்றனை யையா!
தோற்றத் தாலும் பிறவியி னாலும்,
பற்ற லாரென்று நண்பர்க ளென்றும்
பார்ப்ப தில்லை யுலகினில் யாரும்.
மற்றெத் தாலும் பகையுற லில்லை-
வடிவி னில்லை பயவினி லில்லை-
உற்ற துன்பத்தி னாற்பகை யுண்டாம்
ஓர்தொ ழில்பயில் வார்தமக் குள்ளே. 102

528. பூமித் தெய்வம் விழுங்கிடுங் கண்டாய்
புரவ லர்பகை காய்கிலர் தம்மை.
காமிப் பூதலத் தேகுறை வெய்த
நாளும் பாண்டவ ரேறுகின் றாரால்.
நேமி மன்னர் பகைசிறி தென்றே
நினைவ யர்ந்திருப் பாரெனில் நோய்போல்
சாமி யந்தப் பகைமிக லுற்றே
சடிதி மாய்த்திடு மென்பதுங் காணாய். 103

529. போர்செய் வோமெனில் நீதடுக் கின்றாய்
புவியி னோரும் பழிபல சொல்வார்.
தார்செய் தோளினம் பாண்டவர் தம்மைச்
சமரில் வெல்வது மாங்கெளி தன்றாம்
யார்செய் புண்ணியத் தோநமக் குற்றான்
எங்க ளாருயிர் போன்றவிம் மாமன்.

நேர்செய் சூதினில் வென்று தருவான்
நீதித் தர்மனுஞ் சூதிலன் புள்ளோன். 104

530. பகைவர் வாழ்வினி லின்புறு வாயோ
பார தர்க்கு முடிமணி யன்னாய்?
புகையு மென்ற னுளத்தினை வீறில்
புன்சொற் கூறி யவித்திட லாமோ?
நகைசெய் தார்தமை நாளை நகைப்போம்.
நமரிப் பாண்டவ ரென்னி லி஀தாலே
மிகையு றுந்துன்ப மேது?நம் மோடு
வேறறா தெமைச் சார்ந்துநன் குய்வார். 105

531. ஐய சூதிற் கவரை யழைத்தால்
ஆடி யுய்குது ம஀தியற் றாயேல்
(பொய்யன் றென்னுரை - என்னியல் போர்வாய் -
பொய்ம்மை வீறென்றுஞ் சொல்லிய துண்டோ?)[1]
நைய நின்முன ரென்சிரங் கொய்தே
நானிங் காவி யிறுத்திடு வேனால்.
செய்ய லாவது செய்குதி யென்றான்;
திரித ராட்டிர னெஞ்சமு டைந்தான். 106

வேறு

532. *விதிசெயும் விளைவினுக்கே – இங்கு
வேறுசெய் வார்புவி மீதுளரோ?
மதிசெறி விதுரனன்றே - இது
வருந்திற னறிந்துமுன் னெனக்குரைத்தான்

---

1 நகவளைவு ஏன் என்பது தெரியவில்லை

- பதிப்பாசிரியர்

* 107ஆம் பாடலின் தொடக்கத்தில் கிளைத் தலைப்பு; "திரிதராட்டிரன் ஸம்மதித்தல்" என்பது (பா.பி., அர.)

அதிசயக் கொடுங்கோலம் - விளைந்
தரசர்தங் குலத்தினை யழிக்குமென்றான்
சதிசெயத் தொடங்கிவிட்டாய் - நின்றன்
சதியினிற் றானது விளையுமென்றான். 107

533. விதி!விதி! விதி!மகனே - இனி
வேறெது சொல்லுவ னடமகனே!
கதியுறுங் காலனன்றோ - இந்தக்
கயமக னெனநினைச் சார்ந்துவிட்டான்?
கொதியுறு முளம்வேண்டா - நின்றன்
கொள்கையின் படியவர் தமையழைப்பேன்
வதியுறு மனைசெல்வாய் - என்று
வழியுங்கண் ணீரொடு விடைகொடுத்தான். 108

வேறு

534. * மஞ்சனு மாமனும் போயின பின்னர்
மன்னன் வினைஞர் பலரை யழைத்தே
பஞ்சவர் வேள்வியிற் கண்டது போலப்
பாங்கி னுயர்ந்ததொர் மண்டபஞ் செய்வீர்
மிஞ்சு பொருளதற் காற்றுவ னென்றான்
மிக்க வுவகையொ டாங்கவர் சென்றே
கஞ்ச மலரிற் கடவுள் வியப்பக்
கட்டி நிறுத்தினர் பொற்சபை யொன்றே. 109

535. வல்லவ னாக்கிய சித்திரம் போலும்
வண்மைக் கவிஞர் கனவினைப் போலும்

---

*109-ஆம் பாடலின் தொடக்கத்தில் கிளைத் தலைப்பு: "சபா நிர்மாணம்" (பா. பி., அர.)

நல்ல தொழிலுணர்ந் தார்செய லென்றே
நாடு முழுதும் புகழ்ச்சிகள் கூறக்
கல்லையு மண்ணையும், பொன்னையுங் கொண்டு
காமர் மணிகள் சிலசில சேர்த்துச்
சொல்லையி சைத்துப் பிறர்செயு மாறே
சுந்தர மாமொரு காப்பியஞ் செய்தார். 110

536. *தம்பி விதுரனை மன்ன னழைத்தான்
''தக்க பரிசுகள் கொண்டினி தேகி
யெம்பியின் மக்க ளிருந்தர சாளும்
இந்திர மாநகர் சார்ந்தவர் தம்பால்
கொம்பினை யொத்த மடப்பிடி யோடும்
கூடியிங் கெய்தி விருந்து களிக்க
நம்பி யழைத்தனன் கௌரவர் கோமான்
நல்லதொர் நுந்தை யெனவுரை செய்வாய். 111

537. நாடு முழுதும் புகழ்ச்சிகள் கூறும்
நன்மணி மண்டபஞ் செய்ததுஞ் சொல்வாய்.
நீடு புகழ்ப்பெரு வேள்வியி லந்நாள்
நேயமொ டேகித் திரும்பிய பின்னர்[1]
பீடுறு மக்களை யோர்முறை யிங்கே
பேணி யழைத்து விருந்துக ளாற்றக்
கூடும் வயதிற் கிழவன் விரும்பிக்
கூறின னிஃதெனச் சொல்லுவை கண்டாய். 112

538. ''பேச்சி னிடையிற் சகுனிசொற் கேட்டே
பேயெனும் பிள்ளை கருத்தினிற் கொண்ட

---

*111-ஆம் பாடலின் தொடக்கத்தில் கிளைத் தலைப்பு: ''விதுரனைத் தூது விடல்'' என்பது. (பா. பி., அர.)

1 பின்னர்ப் என்றிருத்தல் வேண்டும்

— பதிப்பாசிரியர்

தீச்செய லி:தென் றதையுங் குறிப்பாற்
செப்பிடு வாயென "மன்னவன் கூறப்
"போச்சுது! போச்சுது பாரத நாடு!
போச்சுது நல்லறம்! போச்சுது வேதம்
ஆச்சரி யக்கொடுங் கோலங்கள் காண்போம்
ஐய விதனைத் தடுத்த லரிதோ?" 113

539. என்று விதுரன் பெருந்துயர் கொண்டே
ஏங்கிப் பலசொ லியம்பிய பின்னர்[1]
"சென்று வருகுதி தம்பி, யினிமேல்
சிந்தனை யேது மிதிற்செய மாட்டேன்.
வென்று படுத்தனன் வெவ்விதி யென்னை
மேலை விளைவுகள் நீயறி யாயோ?
அன்று விதித்ததை யின்று தடுத்தல்
யார்க்கெளி" தென்றுமெய் சோர்ந்து விழுந்தான். 114

வேறு

540. *அண்ணனிடம் விடைபெற்று விதுரன் சென்றான்.
அடவிமலை யாறெல்லாம் கடந்து போகித்
திண்ணமுறு தடந்தோளும் உளமுங் கொண்டு
திருமலியப் பாண்டவர்தா மரசு செய்யும்
வண்ணமுயர் மணிநகரின் மருங்கு செல்வான்,
வழியிடையே நாட்டினுறு வளங்க ணோக்கி
எண்ணமுற லாகித்த னிதயத் துள்ளே
யினையபல மொழிகூறி யிரங்கு வானால். 115

........................................

1 பின்னர்ச் என்றிருத்தல் வேண்டும், - பதிப்பாசிரியர்

*115ம் பாடலின் தொடக்கத்தில் கிளைத்தலைப்பு: "விதுரன் தூது செல்லுதல்" என்பது (பா.பி., அர.)

**541.** "நீலமுடி தரித்தபல மலைசேர் நாடு
நீரமுத மெனப்பாய்ந்து நிரம்பு நாடு
கோலமுறு பயன்மரங்கள் செறிந்து வாழுங்
குளிர்காவுஞ் சோலைகளுங் குலவு நாடு
ஞாலமெலாம் பசியின்றிக் காத்தல் வல்ல
நன்செய்யும் புன்செய்யும் நலமிக் கோங்கப்
பாலடையு நறுநெய்யுந் தேனு முண்டு
பண்ணவர்போல் மக்களெலாம் பயிலு நாடு. *116*

**542.** அன்னங்கள் பொற்கமலத் தடத்தி னூர
அளிமுரலக் கிளிமழலை யரற்றக் கேட்போர்
கன்னங்க ளமுதூறக் குயில்கள் பாடும்
காவினத்து நறுமலரின் கமழைத் தென்றல்
பொன்னங்க மணிமடவார் மாடமீது
புலவிசெயும் போழ்தினிலே போந்து வீச
வன்னங்கொள் வரைத்தோளார் மகிழ மாதர்
மையல்விழி தோற்றுவிக்கும் வண்மை நாடு. *117*

**543.** பேரறமும் பெருந்தொழிலும் பிறங்கு நாடு
பெண்களெலாம்* அரம்பையர்போ லொளிரு நாடு
வீரமொடு மெய்ஞ்ஞானந் தவங்கள் கல்வி
வேள்வியெனு மிவையெல்லாம் விளங்கு நாடு
சோரமுதற் புன்மையெதுந் தோன்றா நாடு
தொல்லுலகின் முடிமணிபோல் தோன்று நாடு
பாரதர்தந் நாட்டினிலே நாச மெய்தப்
பாவியேன் துணைபுரியும் பான்மை யென்னே!" *118*

........................

(பா-டு): *பெண்களெல்லாம் – (பா.பி., அர.)

வேறு

544. *விதுரன் வருஞ்செய்தி தாஞ்செவி யுற்றே
வீறுடை யைவ ருளமகிழ் பூத்துச்
சதுரங்க சேனை யுடன்பல் பரிசும்[1]
தாளமு மேளமுந் தாங்கொண்டு சென்றே
எதிர்கொண் டழைத்து மணிமுடி தாழ்த்தி
யேந்தல் விதுரன் பதமலர் போற்றி
மதுர மொழியிற் குசலங்கள் பேசி
மன்ன னொடுந்திரு மாளிகை சேர்ந்தார். *119*

545. குந்தி யெனும்பெயர்த் தெய்வதந் தன்னைக்
கோமகன் கண்டுவ ணங்கிய பின்னர்
வெந்திறல் கொண்ட துருபதன் செல்வம்
வெள்கித் தலைகுனிந் தாங்குவந் தெய்தி
அந்தி மயங்க விசும்பிடைத் தோன்றும்
ஆசைக் கதிர்மதி யன்ன முகத்தை
மந்திரந் தேர்ந்ததொர் மாம னடிக்கண்
வைத்து வணங்கி வனப்புற நின்றாள். *120*

546. தங்கப் பதுமை யெனவந்து நின்ற
தையலுக் கையனல் லாசிகள் கூறி
அங்கங் குளிர்ந்திட வாழ்த்திய பின்னர்
ஆங்குவந் துற்ற வுறவினர் நண்பர்
சிங்க மெனத்திகழ் வீரர் புலவர்
சேவகர் யாரொடுஞ் செய்திகள் பேசிப்

.....................................

*119ஆம் பாடலின் தொடக்கத்தில் கிளைத்தலைப்பு: "விதுரனை வரவேற்றல்" என்பது (பா.பி., அர.)
(பா-டு): 1 சதுரங்க சேனையுடன் பல பரிசும் (பா.பி., அர.)

பொங்கு திருவி னகர்வலம் வந்து
போழ்து கழிந்திர வாகிய பின்னர் *121*

547. *ஐவர் தமையுந் தனிக்கொண்டு போகி
யாங்கொரு செம்பொன் னரங்கி லிருந்தே
"மைவரைத் தோளன் பெரும்புக ழாளன்
மாமகள் பூமகட் கோர்மண வாளன்
மெய்வரு கேள்வி மிகுந்த புலவன்
வேந்தர் பிரான்திரி தாட்டிரக் கோமான்[1]
தெய்வ நலங்கள் சிறந்திட நும்மைச்[2]
சீரொடு நித்தலும் வாழ்கென வாழ்த்தி, *122*

548. "உங்களுக் கென்னிடஞ் சொல்லி விடுத்தான்
ஓர்செய்தி மற்றஃ துரைத்திடக் கேளீர்,
மங்கலம் வாய்ந்தந லத்தி புரத்தே
வையக மீதி லிணையற்ற தாகத்
தங்கு மெழிற்பெரு மண்டப மொன்று
தம்பியர் சூழ்ந்து சமைத்தனர் கண்டீர்
அங்கதன் விந்தை யழகினைக் காண
அன்பொடு நும்மை யழைத்தனன் வேந்தன். *123*

549. "வேள்விக்கு நாங்க ளனைவரும் வந்து
மீண்டு பலதின மாயின வேனும்
வாள்வைக்கு நல்வழி[3] மங்கையொ டேநீர்

---

**122*ஆம் பாடலின் தொடக்கத்தில் கிளைத்தலைப்பு: "விதுரன் அழைத்தல்" என்பது. (பா.பி., அர.)*

*(பா.டு):* *1* *வேந்தர்பிரான், திரித ராட்டிரக் கோமான் (அர.)*
*2* *தெய்வநலங்கள் சிறந்திட உம்மைச் (பா.பி.)*
*3* *(பாரதி திருத்தம்) வாள்வைக்கு நல்விழி; 'நல்வழி' என்ற பழைய பாடம் அச்சுப் பிழையாயிருத்தல் வேண்டும்*

*- பதிப்பாசிரியர்*

வந்தெங்க ளூரில் மறுவிருந் தாட
நாள்வைக்குஞ் சோதிட ராலிது மட்டும்
நாயக னும்மை யழைத்திட வில்லை,
கேள்விக் கொருமிதி லாதிப னொத்தோன்
கேடற்ற மாத மிதுவெனக் கண்டே 124

550. "வந்துவி ருந்து களித்திட நும்மை
வாழ்த்தி யழைத்தன னென்னரு மக்காள்!
சந்து கண்டேயச் சகுனிசொற் கேட்டுத்
தன்மை யிழந்த சுயோதன மூடன்
விந்தை பொருந்திய மண்டபத் தும்மை
வெய்யபுன் சூது களித்திடச் செய்யும்
மந்திர மொன்று மனத்திடைக் கொண்டான்
வன்மமிதுவு நுமக் கறி வித்தேன்." 125

551. *என்று விதுர னியம்பத் தருமன்
எண்ணங் கலங்கிச் சிலசொ லுரைப்பான்:
"மன்று புனைந்தது கேட்டுமிச் சூதின்
வார்த்தையைக் கேட்டுமிங் கென்றன் மனத்தே
சென்று வருத்தம் உளைகின்ற தையா,
சிந்தையி லையம் விளைகின்ற தையா,
நன்று நமக்கு நினைப்பவ னல்லன்
நம்ப லரிது சுயோதனன் றன்னை. 126

552. "கொல்லக் கருதிச் சுயோதனன் முன்பு
குத்திர மான சதிபல செய்தான்.

---

*126ஆம் பாடல் தொடக்கத்தில் கிளைத் தலைப்பு: "தருமபுத்திரன் பதில்". (பா.பி., அ.-)

சொல்லப் படாதவ னாலெமக் கான
துன்ப மனைத்தையு நீயறி யாயோ?
வெல்லக் கடவ ரெவரென்ற போதும்
வேந்தர்கள் சூதை விரும்பிட லாமோ?
தொல்லைப் படுமென் மனந்தெளி வெய்தச்
சொல்லுதி நீயொரு சூழ்ச்சியிங்" கென்றான். 127

வேறு

553. *விதுரனுஞ் சொல்லுகிறான் – "இதை
விடமெனச் சான்றவர் வெகுளுவர் காண்
சதுரெனக் கொள்ளுவரோ? – இதன்
தாழ்மையெ லாமவர்க் குரைத்து விட்டேன்
இதுமிகத் தீதென்றே - அண்ணன்
எத்தனை சொல்லியு மிளவரசன்
மதுமிகுத் துண்டவன்போல் - ஒரு
வார்த்தையை யேபற்றிப் பிதற்றுகி றான். 128

554. "கல்லெனி லிணங்கிவிடும் – அண்ணன்
காட்டிய நீதிகள் கணக்கில வாம்.
புல்லனிங் கவற்றையெலாம் – உளம்
புகுதவொட் டாதுதன் மடமையி னால்
சல்லியச் சூதினிலே - மனந்
தளர்வற நின்றிடுந் தகைமைசொன் னேன்
சொல்லிய குறிப்பறிந்தே - நலந்
தோன்றிப வழியினைத் தொடர்க"வென் றான். 129

*128ஆம் பாடலின் தொடக்கத்தில் கிளைத் தலைப்பு: "விதுரன் பதில்" (பா. பி., அர.)

555. தருமனு மிவ்வளவில் – உளத்
தளர்ச்சியை நீக்கியொ ருறுதிகொண் டே
பருமங்கொள் குரலினனாய் – மொழி
பதைத்திட லின்றியிங் கிவையுரைப் பான்
"மருமங்க ளெவைசெயினும் - மதி
மருண்டவர் விருந்தறஞ் சிதைத்திடி னும்
கருமமொன் றேயுளதாம் – நங்கள்
கடனதை நெறிப்படி புரிந்திடு வோம். 130

556. "தந்தையும் வரப்பணித்தான்[1] – சிறு
தந்தையுந் தூதுவந் ததையுரைத் தான்
சிந்தையொன் றினியில்லை – எது
சேரினு நலமெனத் தெளிந்துவிட் டேன்.
முந்தையச் சிலைராமன் – செய்த
முடிவினை நம்மவர் மறப்பது வோ?
நொந்தது செயமாட்டோம் - பழ
நூலினுக் கிணங்கிய நெறிசெலு வோம். 131

557. "ஐம்பெருங் குரவோர்தாம் - தரும்
ஆணையைக் கடப்பது மறநெறி யோ?
வெம்பெரு மதயானை – பரி
வியன்றேர் ஆளுட னிருதினத் தில்
பைம்பொழி லத்திநகர் – செலும்
பயணத்திற் குரியன புரிந்திடு வாய்
மொய்ம்புடை விறல்வீமா" – என
மொழிந்தன னறநெறி முழுதுணர்ந் தான். 132

*130ஆம் பாடலின் தொடக்கத்தில் கிளைத்தலைப்பு; "தருமபுத்திரன் தீர் மானம்" என்பது. (பா.பி., அர).
(பா-டு): 1 தந்தையும் வரப் பணிந்தான் (பா.பி.)

558. *வீமனுந் திகைத்து விட்டான் - இள
விசயனை நோக்கியிங் கிதுசொலு வான்.
''மாமனு மருகனுமா - நமை
மழித்திடக்[1] கருதியிவ் வழிதொடர்ந் தார்
தாமதஞ் செய்வோமோ? – செலத்
தகுந்தகு'' மெனவிடி யுறநகைத் தான்.
கோமக னுரைப்படியே - படை
கொண்டுசெல் வோமொரு தடையிலை காண். *133*

559. "நெடுநாட் பகைகண்டாய் – இந்த
நினைவினில் யான்கழித் தனபல நாள்
கெடுநாள் வருமளவும் - ஒரு
கிருமியை யழிப்பவ ருலகிலுண் டோ?
படுநாட் குறியன்றோ? - இந்தப்
பாதக நினைப்பவர் நினைத்தது தான்
விடுநாண் கோத்திடடா – தம்பி
வில்லினுக் கிரைமிக விளையுத டா. *134*

560. "போரிடச் செல்வமடா – மகன்
புலைமையுந் தந்தையின் புலமைக ளும்
யாரிட மவிழ்க்கின்றார்? - இதை
எத்தனை நாள்வரை பொறுத்திருப் போம்?
பாரிடத் திவரொடுநாம் – எனப்
பகுதியிவ் விரண்டிற்குங் காலமொன் றில்
நேரிட வாழ்வுண்டோ? - இரு
நெருப்பினுக் கிடையினி லொருவிற கோ?" *135*

---

* குறிப்பு:– 133ஆம் பாடலின் தொடக்கத்தில் கிளைத்தலைப்பு: ''வீமனுடைய வீரப்பேச்சு'' (பா. பி., அர.)
(பா-டு): 1 அழித்திடக் (பா.பி)

வேறு

561. *வீம னுரைத்தது போலவே - உளம்
வெம்பி நெடுவில் விசயனும் – அங்கு
காமனுஞ் சாமனு மொப்பவே – நின்ற
காளை யிளைஞ ரிருவரும் – செய்ய
தாமரைக் கண்ணன் யுதிட்டிரன் - சொல்லைத்
தட்டிப் பணிவொடு பேசினார் - தவ
நேமந் தவறலு முண்டுகொண் – நரர்
நெஞ்சங் கொதித்திடு போழ்திலே. 136

562. அன்பும் பணிவு முருக்கொண்டோர் - அனு
வாயினுந் தன்சொல வழாதவர் - அங்கு
வன்பு மொழிசொலக் கேட்டனன் – அற
மன்னவன் புன்னகை பூத்தனன்:– "அட
முன்பு சுயோதனன் செய்தலும் - இன்று
மூண்டிருக் குங்கொடுங் கோலமும் – இதன்
பின்பு விளைவதுந் தேர்ந்துளேன் - எனைப்[1]
பித்தனென் றெண்ணி யுரைத்திட்டீர். 137

563. "கைப்பிடி கொண்டு சுழற்றுவோன் - றன்
கணக்கிற் சுழன்றிடுஞ் சக்கரம் - அது
தப்பி மிகையுங் குறையுமாச் - சுற்றும்
தன்மை யதற்குள தாகுமோ? - இதை
ஒப்பிட லாகும் புவியின்மேல் - என்றும்
உள்ள வுயிர்களின் வாழ்விற்கே - ஒரு
செப்பிடு வித்தையைப் போலவே - புவிச்
செய்திகள் தோன்றிடு மாயினும் 138

---

* 136-ஆம் பாடல் தொடக்கத்தில் கிளைத்தலைப்பு: "தருமபுத்திரன் முடிவுரை" என்பது. (பா. பி., அர.)

(பா-டு): 1 பின்பு விளைவதுந் தேர்ந்துளேன் - என்னைப் (பா. பி., அர).

564. "இங்கிவை யாவுந் தவறிலா - விதி
யேற்று நடக்குஞ் செயல்களாம் - முடி
வெங்கிலு மின்றி* யெவற்றினும் - என்றும்
ஏறி யிடையின்றிச் செல்வதாம். - ஒரு
சங்கிலி யொக்கும் விதிகண்டீர். - வெறுஞ்
சாத்திர மன்றிது சத்தியம். - நின்று
மங்கியோர் நாளி லழிவதா - நங்கள்
வாழ்க்கை யிதனைக் கடந்ததோ? 139

565. "தோன்றி யழிவது வாழ்க்கைதான் - இங்கு[1]
துன்பத்தொ டின்பம் வெறுமையாம். - இவை
மூன்றி லெதுவரு மாயினும் - களி
மூழ்கி நடத்தல் முறைகண்டீர். - நெஞ்சில்
ஊன்றிய கொள்கை பிழைப்பரோ[2] துன்பம்
உற்றிடு மென்பதோ ரச்சத்தால்? - விதி
போன்று நடக்கு முலகென்றே - கடன்
போற்றி யொழுகுவர் சான்றவர். 140

566. "சேற்றி லுழலும் புழுவிற்கும் - புவிச்
செல்வ முடைய வரசர்க்கும் - பிச்சை
ஏற்றுடல் காத்திடு மேழைக்கும் - உயிர்
எத்தனை யுண்டவை யாவிற்கும் - நித்தம்
ஆற்றுதற் குள்ள கடமைதான் - முன்வந்
தவ்வக் கணந்தொறு நிற்குமால் - அது
தோற்றும் பொழுதிற் புரிகுவார் - பல
சூழ்ந்து கடமை யழிப்பரோ? 141

---

(பா-டு): * வெங்கணு மின்றி (பா. பி., அர.)
1 'இங்குத்' என்றிருத்தல் வேண்டும்.
2 ஊன்றிய கொள்கை தழைப்பரோ? (பா. பி., அர.)

567. "யாவருக்கும் பொது வாயினும் - சிறப்
பென்ப ரரசர் குலத்திற்கே. - உயர்
தேவரை யொப்பமுன் னோர்தமைத் - தங்கள்
சிந்தையிற் கொண்டு பணிகுதல் - தந்தை
ஏவலை மைந்தர் புரிதற்கே - வில்
லிராமன் கதையையுங் காட்டினேன். - புவிக்
காவலர் தம்மிற் சிறந்தநீர் - இன்று
கர்மம் பிழைத்திடு வீர் கொலோ?" 142

வேறு

568. *என்றினைய நீதிபல தரும ராசன்
எடுத்துரைப்ப இளைஞர்களுந் தங்கை கூப்பிக்
குன்றினிலே யேற்றிவைத்த விளக்கைப் போலக்
குவலயத்திற் கறங்காட்டத் தோன்றி னாய்நீ
வென்றிபெறுந் திருவடியாய், நினது சொல்லை
மீறியொரு செயலுண்டோ? ஆண்டா னாணை
யன்றியடி யார்தமக்குக் கடன்வே றுண்டோ?
ஐயனே பாண்டவர்த மாவி நீயே. 143

569. "துன்பமுறு மெமக் கென்றே யெண்ணி நின்வாய்ச்
சொல்லைமறுத் துரைத்தோமோ? நின்பா லுள்ள
அன்புமிகை யாலன்றோ திருவு ளத்தின்
ஆக்கினையை யெதிர்த்துரைத்தோ மறிவில் லாமல்!
மன்பதையி னுளச் செயல்கள் தெளியக் காணும்
மன்னவனே மற்றிதுநீ யறியா தொன்றோ?
வன்புமொழி பொறுத்தருள்வாய் வாழி நின்சொல்
வழிச்செல்வோ" மெனக் கூறி வணங்கிச் சென்றார் 144

---

*143ஆம் பாடல் தொடக்கத்தில் கிளைத் தலைப்பு: "நால்வரும் ஸ(ச)ம் மதித்தல்" (பா.பி.,அர.)

**570.** *ஆங்கதன்பின் மூன்றாநா ளிளைஞ ரோடும்
அணியிழையப் பாஞ்சாலர் விளக்கி னோடும்
பாங்கினுறு பரிசனங்கள் பலவி னோடும்
படையினொடும் இசையினொடும் பயண மாகித்
தீங்கதனைக் கருதாத தருமக் கோமான்
திருநகர்விட் டகல்கின்றான் தீயோ ரூர்க்கே!
நீங்கியகன் றிடலாகுந் தன்மை யுண்டோ
நெடுங்கரத்து விதிகாட்டு நெறியி னின்றே! 145

**571.** நரிவகுத்த வலையினிலே தெரிந்து சிங்கம்
நழுவிவிழுஞ் சிற்றெறும்பால் யானை சாகும்.
வரிவகுத்த வுடற்புலியைப் புழுவுங் கொல்லும்.
வருங்கால முணர்வோரு மயங்கி நிற்பார்.
கிரிவகுத்த வோடையிலே மிதந்து செல்லும்
கீழ்மேலா மேல்கீழாங் கிழக்கு மேற்காம்.
புரிவகுத்த முந்நூலார் புலையர் தம்மைப்
போற்றிடுவர் விதிவகுத்த போழ்தி னன்றே. 146

**572.** [1]மாலைப்போ தாதலுமே மன்னன் சேனை
வழியிடையோர் பூம்பொழிலி னமர்ந்த காலை
சேலைப்போல் விழியாளைப் பார்த்தன் கொண்டு
சென்றாங்கோர் தனியிடத்தே பசும்புல் மேட்டில்
மேலைப்போம் பரிதியினைத் தொழுது கண்டான்.
மெல்லியலு மவன்றொடைமேல் மெல்லச் சாய்ந்து
பாலைப்போல் மொழிபிதற்ற வவளை நோக்கிப்
பார்த்தனும்அப் பரிதியெழில் விளக்கு கின்றான். 147

*145ஆம் பாடல் தொடக்கத்தில் கிளைத் தலைப்பு: ''பாண்டவர் பயணமாதல்'' - (பா.பி., அர.)

1 147ஆம் பாடலின் தொடக்கத்தில் கிளைத்தலைப்பு: ''மாலை வருணனை'' (பா.பி., அர.)

573. "பாரடியோ வானத்திற் புதுமை யெல்லாம்.
பண்மொழீ! கணந்தோறு மாறி மாறி
ஓரடிமற் றோரடியோ டொத்த லின்றி
உவகையுற நவநவமாத் தோன்றுங் காட்சி.
யாரடியிங் கிவைபோலப் புவியின் மீதே
யெண்ணரிய பொருள் கொடுத்து மியற்றவல்லார்?
சீரடியாற் பழவேத முனிவர் போற்றுஞ்
செழுஞ்சோதி வனப்பையெலாஞ் சேரக் காண்பாய். 148

574. "கணந்தோறும் வியப்புக்கள் புதிய தோன்றும்!
கணந்தோறும் வெவ்வேறு கனவு தோன்றும்!
கணந்தோறு நவநவமாங் களிப்புத் தோன்றும்!
கருதிடவுஞ் சொல்லிடவு மெளிதோ? ஆங்கே
கணந்தோறு மொருபுதிய வண்ணங் காட்டி[1]
காளிபரா சத்தியவள் களிக்குங் கோலம்,
கணந்தோறு மவள் பிறப்பா ளென்று மேலோர்
கருதுவதன் விளக்கத்தை யிங்கு[2] காண்பாய்* 149

575. "அடிவானத் தேயங்கு பரிதிக் கோளம்
அளப்பரிய விரைவினொடு சுழலக் காண்பாய்
இடிவானத் தொளிமின்னல் பத்துக் கோடி
யெடுத்தவற்றை யொன்றுபட வுருக்கி வார்த்து
முடிவான வட்டத்தைக் காளி யாங்கே
மொய்குழலாய் சுழற்றுவதன் மொய்ம்பு காணாய்,
வடிவான தொன்றாகத் தகடி ரண்டு
வட்டமுறச் சுழலுவதை வளைந்து காண்பாய். 150

.........................................

1 'காட்டிக்' என்றிருத்தல் வேண்டும்
2 'யிங்குக் காண்பாய்' என்றிருத்தல் வேண்டும்
- பதிப்பாசிரியர்

(பா-டு): * கருதுவதன் விளக்கத்தை யிங்குக் காண்பாய் (பா.பி., அர.)

576. "அமைதியொடு பார்த்திடுவாய் மின்னே, பின்னே
அசைவுறுமோர் மின்செய்த வட்டு; முன்னே
சமையுமொரு பச்சைநிற வட்டங் காண்பாய்.
தரணியிலிங் கிதுபோலோர் பசுமை யுண்டோ?
இமைகுவிய மின்வட்டின் வயிரக் கால்கள்
எண்ணில்லா திடையிடையே யெழுதல் காண்பாய்.
உமைகவிதை செய்கின்றாள், எழுந்து நின்றே
யுரைத்திடுவோம் பல்லாண்டு வாழ்க வென்றே. 151

577. "பார்!சுடர்ப் பரிதியைச் சூழவே படர்முகில்
எத்தனை தீப்பட் டெரிவன! ஓகோ!
என்னடீ யிந்த வன்னத் தியல்புகள்!
எத்தனை வடிவம்! எத்தனை கலவை!
தீயின் குழம்புகள்! – செழும்பொன் காய்ச்சி
விட்ட வோடைகள்! வெம்மைதோன் றாமே
எரிந்திடுந் தங்கத் தீவுகள்! - பாரடீ,
நீலப் பொய்கைகள்! – அடடா நீல

578. வன்ன மொன்றி லெத்தனை வகையடீ!
எத்தனை செம்மை! பசுமையுங் கருமையு
மெத்தனை! - கரிய பெரும்பெரும் பூதம்!
நீலப் பொய்கையின் மிதந்திடுந் தங்கத்
தோணிகள், சுடரொளிப் பொற்கரை யிட்ட
கருஞ்சிக ரங்கள்! – காணடி யாங்கு[1]
தங்கத் திமிங்கிலந் தாம்பல மிதக்கும்
இருட்கடல்! - ஆஹா! எங்குநோக் கிடினும்
ஒளித்திரள்! ஒளித்திரள்! வன்னக் களஞ்சியம்!" 152

1. 'யாங்குத்' என்றிருத்தல் வேண்டும்.

– பதிப்பாசிரியர்

579. "செங்கதிர்த் தேவன் சிறந்த வொளியினைத் தேர்கின்
றோம் - அவன்
எங்க ளறிவு விளக்க முறச்செய் திடுகவே – என*
மங்களம் வாய்ந்தநல் வேத மொழிகொண்டு[1] வாழ்த்தியே
– இவர்
தங்களி னங்களி ருந்த பொழிலிடைச் சார்ந்தனர் - பின்னர்
அங்கவ் விரவு கழிந்திட வைகறை யாதலும் – மன்னர்
பொங்கு கடலொத்த சேனைக ளோடு புறப்பட்டே - வழி
எங்குந் திகழு மியற்கையின் காட்சியி லின்புற்றே - கதிர்
மங்கிடு முன்னொளி மங்கு நகரிடை வந்துற்றார். *153*[2]

முதலாவது துரியோதனன் சூழ்ச்சிச் சருக்கம் முற்றிற்று.

## இரண்டாவது சூதாட்டச் சருக்கம்

580. [3]தெளிவுறவே யறிந்திடுதல், தெளிவுதர மொழிந்திடுதல்
சிந்திப் பார்க்கே
களிவளர வுள்ளத்தி லாநந்தக் கனவுபல காட்டல் கண்ணீர்த்
துளிவரவுள் ளுருக்குதலிங் கிவையெல்லா நீயருளுந்
தொழில்க ளன்றோ?
ஒளிவளருந் தமிழ்வாணீ யடியனேற் கிவையனைத்து முதவு
வாயே. *154*

---

பாரதி திருத்தம்:– * எங்க ளறிவினைத் தூண்டி நடத்துக" என்பதோர் - நல்ல

1 மங்களம் வாய்ந்த சுருதி மொழிகொண்டு

2 152,153 ஆகிய இரு பாடல்களின் ஆரம்பத்தில் "வேறு" என்ற சொல் பாரதி பிரசுராலய – அரசாங்கப் பதிப்புக்களில் இடம் பெற்றுள்ளது. 152ஆம் பாடல் ஆசிரியப் பா; 153ஆம் பாடல் நாலடிப் பன்னிரு சீர்ச் சிந்து.
- பதிப்பாசிரியர்

3 154-ஆம் பாடலின் ஆரம்பத்தில் கிளைத்தலைப்பு 'வாணியை வேண்டுதல்' (பா.பி. பி., அர.)

நூல்

581. அத்தின மாநக ரத்தினில் வந்தனர்
ஆரியப் பாண்டவ ரென்றது கேட்டலும்,
தத்தி யெழுந்தன எண்ணருங் கூட்டங்கள்;
சந்திகள், வீதிகள், சாலைகள், சோலைகள்,
எத்திசை நோக்கினு மாந்தர் நிறைந்தனர்.
இத்தனை மக்களு மெங்க ணிருந்தனர்
இத்தின மட்டு மெனவியப் பெய்துற
எள்ளும் விழற்கிட[1] மின்றி யிருந்தார். 155

582. மந்திர கீத முழக்கினர் பார்ப்பனர்;
வன்றடந் தோள்கொட்டி யார்த்தனர் மன்னவர்;
வெந்திறல் யானையுந் தேருங் குதிரையும்
வீதிகள் தோறு மொலிமிகச் செய்தன;
வந்தியர் பாடினர்; வேசைய ராடினர்;
வாத்தியங் கோடி வகையி னொலித்தன.
செந்திரு வாழு நகரினி லத்தினஞ்
சேர்ந்த வொலியைச் சிறிதென லாமோ? 156

583. வாலிகன் றந்ததொர் தேர்மிசை யேறியம்
மன்னன் யுதிட்டிரன் தம்பியர் மாதர்கள்
நாலிய லாம்படை யோடு நகரிடை
நல்ல பவனி யெழுந்த பொழுதினில்
சேலியல் கண்ணியர் பொன்விளக் கேந்திடச்
சீரிய பார்ப்பனர் கும்பங்க ளேந்திடக்
கோலிய பூமழை பெய்திடத் தோரணங்
கொஞ்ச நகரெழில் கூடிய தன்றே. 157

(பா-டு): 1 எள்ளு விழற்கிட (பா.பி.)

வேறு

584. மன்னவன் கோயிலிலே - இவர்
வந்து புகுந்தனர் வரிசையொ டே
பொன்னரங் கினிலிருந்தான் – கண்ணில்
புலவனைப் போய்நின்று போற்றிய பின்
அன்னவ னாசி கொண்டே – உயர்
ஆரிய வீட்டும னடிவணங் கி
வின்னய முணர்கிருபன் - புகழ்
வீரத் துரோணனங் கவன்புதல் வன். 158

585. மற்றுள பெரியோர்கள் – தமை
வாழ்த்தியுள் ளன்பொடு வணங்கிநின் றார்
கொற்றமிக் குயர்கன்னன் – பணிக்
கொடியொ* னிளையவர் சகுனியொ டும்[1]
பொற்றடந் தோள்சருவப் – பெரும்
புகழினர் தழுவினர் மகிழ்ச்சி கொண் டார்
நற்றவக் காந்தாரி - முதல்
நாரியர் தமைமுறைப் படிதொழு தார். 159

586. குந்தியு மிளங்கொடியும் – வந்து
கூடிய மாதர்தம் மொடுகுல வி
முந்திய கதைகள்சொல்லி - அன்பு
மூண்டுரை யாடிப்பின் பிரிந்து விட் டார்
அந்தியும் புகுந்ததுவால் - பின்னர்
ஐவரு முடல்வலித் தொழில் முடித் தே
சந்தியுஞ் சபங்களுஞ்செய் - தங்கு
சாருமின் னுணவமு துண்டதன் பின் 160

---

(பாரதியார் திருத்தம்) * கொடியோ
(பா·டு):1 கொடியோனிளையவர் சகுனியோடும் - (பா. பி.)

**587.** சந்தன மலர்புனைந்தே – இளந்
தையலர் வீணைகொண் டுயிருருக் கி
விந்தைகொள் பாட்டிசைப்ப - அதை
விழைவொடு கேட்டனர் துயில்புரிந் தார்.
வந்ததொர் துன்பத்தினை – அங்கு
மடித்திட லன்றிப்பின் வருந்துயர்க் கே
சிந்தனை யுழல்வாரோ? – உளச்
சிதைவின்மை யாரியர் சிறப்பன் றோ? *161*

**588.** *பாணர்கள் துதிகூற - இளம்
பகலவ னெழுமுனர்த் துயிலெழுந் தார்
தோணலத் திணையில்லார் – தெய்வந்
துதித்தனர் செய்யபொற் பட்டணிந் து
பூணணிந் தாயுதங்கள் – பல
பூண்டுபொற் சபையிடைப் போந்தன ரால்.
நாணமில் கவுரவருந் – தங்கள்
நாயக னொடுமங்கு வீற்றிருந் தார். *162*

**589.** வீட்டுமன் றானிருந்தான் - அற
விதுரனும் பார்ப்பனக் குரவர்க ளும்
நாட்டுமந் திரிவகையும்[1] – பிற
நாட்டினர் பலபல மன்னர்க ளும்
கேட்டினுக் கிரையாவான் - மதி
கெடுந்துரி யோதனன் கிளையின ரும்
மாட்டுறு நண்பர்களும் – அந்த
வான்பெருஞ் சபையிடை வயங்கினின் றார் *163*

---

* *162- ஆம் பாடலின் தொடக்கத்தில் கிளைத்தலைப்பு:- "பாண்டவர் சபைக்கு வருதல்" என்பது (பா.பி., அர.)*
*(பாரதி திருத்தம்)* 1 நாட்டு மந்திரிமாரும்

**590.** *புன்றொழிற் கவறதனில் - இந்தப்
புவிமிசை யிணையிலை யெனும்புக ழான்,
நன்றறி யாச்சகுனி[1] - சபை
நடுவினி லேறெனக் களித்திருந் தான்.
வென்றி கொள் பெருஞ்சூதர் – அந்த
விவிஞ்சதி சித்திர சேனனு டன்
குன்றுசத் தியவிரதன் - இகழ்[2]
கூர்புரு மித்திரன் சயனென் பார் *164*

**591.** சாலவு மஞ்சுதரும் - கெட்ட
சதிக்குணத் தார்பல மாயம்வல் லோர்
சோலநற் சபைதனிலே - வந்து
கொக்கரித் தார்ப்பரித் திருந்தன ரால்.
மேலவர் தமைவணங்கி – அந்த
வெந்திறற் பாண்டவ ரிளைஞர்த மை
ஆலமுற் றிடத்தழுவி - செம்பொன்
னாதனத் தமர்ந்தவப் பொழுதினி லே *165*

**592.** சொல்லுகின் றான்சகுனி – ''அறத்
தோன்றலுன் வரவினைக் காத்துளர் காண்
மல்லுறு தடந்தோளார் – இந்த
மன்னவ ரனைவரு நெடும்பொழு தா
வில்லுறு போர்த்தொழிலாற் – புவி
வென்றுநங் குலத்தினை மேம்படுத் தீர்.
வல்லுறு சூதெனும்போர் – தனில்
வலிமைகள் பார்க்குதும் வருதி''யென் றான் *166*

---

* *164ஆம் பாடலின் தொடக்கத்தில் கிளைத் தலைப்பு: ''சூதுக்கழைத்தல்'' (பா.பி., அர.)*

*(பா–டு): 1 ஒப்பிடுக: நன்றறி வாரிற் கயவர் திருவுடையர்*
*நெஞ்சத் தவல மிலர்* - திருக்குறள்

*2 குன்று சத்தியவிரதன் - இகழ் - (பா. பி., அர.)*

593. தருமனங் கிவைசொல்வான் - "ஐய
சதியுறு சூதினுக் கெனையழைத் தாய்,
பெருமையிங் கிதிலுண்டோ? -. அறப்
பெற்றியுண்டோ? மறப் பீடுள தோ?
வருமநின் மனத்துடையாய்! - எங்கள்
வாழ்வினை யுகந்திலை யெனலறி வேன்.
இருமையுங் கொடுப்பதுவாம் - இந்த
இழிதொழி லாலெமை யழித்தலுற் றாய். 167

594. கலகல வெனச்சிரித்தான் - பழிக்
கவற்றையொர் சாத்திர மெனப்பயின் றோன்.
"பலபல மொழிகுவதேன் - உனைப்
பார்த்திவ னென்றெணி யழைத்துவிட் டேன்.
நிலமுழு தாட்கொண்டாய் - தனி
நீயெனப் பலர்சொலக் கேட்டத னால்
சிலபொருள் விளையாட்டிற் - செலுஞ்
செலவினுக் கழிகலை யெனநினைந் தேன்.[1] 168

595. *"பாரத மண்டிலத்தார் - தங்கள்
பதியொரு பிசுனனென் றறிவே னோ?
சோரமிங் கிதிலுண்டோ - தொழில்
சூதெனி லாடுந் ரரசரன் றோ?
மாரத வீரர் முன்னே - நடு
மண்டபத் தேபட்டப் பகலினி லே
சூர சிகாமணியே - நின்றன்
சொத்தினைத் திருடுவ மெனுங்கருத் தோ? 169

(பா-டு): 1 செலவினுக் கழிவலை யென நினைத்தேன் (அ. வெ.)
(பாரதி திருத்தம்): * பாரத மண்டலத்தார்
167,168 ஆகிய எண்கள் கொண்ட பாடல்களின் கிளைத் தலைப்புகள் 'தருமன் மறுத்தல்', "சகுனியின் ஏச்சு' - (பா.பி., அர.)

596. "அச்சமிங் கிதில்வேண்டா – விரைந்
தாடுவ நெடும்பொழு தாயின தால்.
கச்சையொர் நாழிகையா - நல்ல
காயுடன் விரித்திங்கு கிடந்திடல் காண்,
நிச்சய நீவெல்வாய் – வெற்றி
நினக்கியல் பாயின தறியா யோ?
நிச்சய நீவெல்வாய் – பல
நினைகுவ தேன்களி தொடங்குகென்" றான். 170

597. தோல் விலைக்குப் பசுவினைக்கொல்லும்
துட்ட னிவ்வுரை கூறுதல் கேட்டே
நூல்வி லக்கிய செய்கைக ளஞ்சும்
நோன்பி னோனுன நொந்திவை கூறும்:-
"தேவலப் பெயர் மாமுனி வோனும்
செய்ய கேள்வி யசிதனு முன்னர்[1]
காவ லர்க்கு விதித்த தந்நூலிற்
கவறை[2] நஞ்செனக் கூறினர் கண்டாய். 171

598. "வஞ்ச கத்தினில் வெற்றியை வேண்டார்,
மாயச் சூதைப் பழியெனக் கொள்வார்
அஞ்ச லின்றிச் சமர்க்களத் தேறி
யாக்கும் வெற்றி யதனை மதிப்பார்,
துஞ்ச னேரினுந் தூயசொல் லன்றிச்

.....................................

*171–174* எண்சீர் விருத்தம், பா வகை வேறுபடுதலைக் குறிக்கும் 'வேறு' என்ற குறிப்பு விடுபட்டுள்ளது பா.பி., அர. பதிப்புகளில் இக்குறிப்பு உண்டு.

*171*ஆம் பாடலின் கிளைத்தலைப்பு "தருமனின் பதில்" – (பா.பி., அர.)

(பா-டு): 1 'முன்னர்க்' என்றிருத்தல் வேண்டும்

2 கவறு - (பா.பி., அர.) - பதிப்பாசிரியர்

சொல்மி லேச்சரைப் போலென்றுஞ் சொல்லார்*
மிஞ்சு சீர்த்திகொள் பாரத நாட்டில்
மேவு மாரிய ரென்றனர் மேலோர். 172

599. "ஆத லாலிந்தச் சூதினை வேண்டேன்!
ஐய, செல்வம் பெருமை யிவற்றின்
காத லாலர சாற்றுவ னல்லேன்,
காழ்த்து நல்லற மோங்கவு மாங்கே,
ஓத லானு முணர்த்துத லானும்
உண்மை சான்ற கலைத்தொகை யாவும்
சாத லின்றி வளர்த்திடு மாறுஞ்,
சகுனி, யானர சாளுதல் கண்டாய். 173

600. "என்னை வஞ்சித்தென் செல்வத்தைக் கொள்வோர்
என்ற னக்கிடர் செய்பவ ரல்லர்.
முன்னை நின்றதோர் நான்மறை கொல்வார்,
மூது ணர்விற் கலைத்தொகை மாய்ப்பார்,
பின்னை யென்னுயிர்ப் பாரத நாட்டில்
பீடை செய்யுங் கலியை யழைப்பார்.
நின்னை மிக்க பணிவொடு கேட்பேன்
நெஞ்சிற் கொள்கையை நீக்குதி" யென்றான். 174

வேறு

601. "சாத்திரம் பேசுகின்றாய்" – எனத்
தழல்படு விழியொடு சகுனிசொல் வான்
கோத்திரக் குலமன்னர் – பிறர்
குறைபடத் தம்புகழ் கூறுவ ரோ?

---

*சொல் மிலேச்சரைப் போலொன்றுஞ் சொல்லார் (தே.வி.)
(பா-டு): 1 காழ்த்த (பாரதியார்)

நாத்திரன்* மிகவுடையாய் – எனில்
நம்மவர் காத்திடும் பழவழக் கை
மாத்திர மறந்துவிட்டாய் – மன்னர்
வல்லினுக் கழைத்திடில் மறுப்ப துண்டோ[1] *175*

**602.** "தேர்ந்தவன் வென்றிடு வான் – தொழில்
தேர்ச்சியில் லாதவன் தோற்றிடுவான்,
நேர்ந்திடும் வாட்போரில் – குத்து
நெறியறிந் தவன்வெலப் பிறனழி வான்,
ஓர்ந்திடு சாத்திரப்போர் - தனில்
உணர்ந்தவன் வென்றிட வுணரா தான்
சோர்ந்தழி வெய்திடுவான், - இவை
சூதென்றுஞ் சதியென்றுஞ் சொல்வா ரோ? *176*

**603.** "வல்லவன் வென்றிடு வான் - தொழில்
வன்மை யிலாதவன் தோற்றிடு வான்,
நல்லவ னல்லாதான் – என
நாணமி லார்சொலுங் கதைவேண் டா,
வல்லமர் செய்திடவே - இந்த
மன்னர்முன் னேநினை யழைத்துவிட் டேன்,
சொல்லுக வருவதுண்டேல் - மனத்
துணிவிலை யேலதுஞ் சொல்லுகென் றான். *177*

வேறு

**604.** வெய்ய தான விதியை நினைந்தான்
விலக்கொ ணாதற மென்ப துணர்ந்தோன்

.....................................

*(பா-டு): * நாத்திறன் (பா. பி., அர.)*
*1 175-ஆம் பாடலின் கிளைத் தலைப்பு: "சகுனி வல்லுக் கழைத்தல்" (பா. பி., அர.)*

பொய்ய தாகுஞ் சிறுவழக் கொன்றை*
புலனி லாதவர் தம்முடம் பாட்டை
ஐய னெஞ்சி லறமெனக் கொண்டான்
ஐய கோ!அந்த நாண்முத லாகத்
துய்ய சிந்தைய ரெத்தனை மக்கள்
துன்ப மிவ்வகை யெய்தின ரம்மா! 178

605. முன்பி ருந்ததொர் காரணத் தாலே
மூட ரே,பொய்மை மெய்யென லாமோ?
முன்பெனச் சொலுங் கால மதற்கு
மூடரே, யொர் வரையறை யுண்டோ?
முன்பெ னச் சொலி னேற்றுமுன் பேயாம்,
மூன்று கோடி வருடமு முன்பே
முன்பி ருந்தெண்ணி லாது புவிமேல்
மொய்த்த மக்க ளெலாமுனி வோரோ? 179

606. நீர் பிறக்குமுன் பார்மிசை மூடர்
நேர்ந்த தில்லை யெனநினைந் தீரோ;
பார்பி றந்தது தொட்டின்று மட்டும்
பலப லப்பல பற்பல கோடி
கார்பி றக்கு மழைத்துளி போலே
கண்ட மக்க ளனைவருள் ளேயும்
நீர்பி றப்பதன் முன்பு மடமை
நீசத் தன்மை யிருந்தன வன்றோ? 180

607. பொய்யொ ழுக்கை யறமென்று கொண்டும்
பொய்யர் கேலியைச் சாத்திர மென்றும்

---

*178—ஆம் பாடலின் கிளைத் தலைப்பு: "தருமன் இணங்குதல்" (பா. பி., அர.)*
*(பா-டு): * பொய்ய தாகுஞ் சிறுவழக் கொன்றைப் (பா. பி., - அ.)*

ஐயகோ நங்கள் பாரத நாட்டில்
அறிவி லாரறப் பற்றுமிக் குள்ளோர்
நொய்ய ராகி யழிந்தவர் கோடி.
நூல்வ கைபல தேர்ந்து தெளிந்தோன்
மெய்ய றிந்தவர் தம்மு ளுயர்ந்தோன்
விதியி னாலத் தருமனும் வீழ்ந்தான். 181

608. மதியி னும்விதி தான்பெரி தன்றோ?
வைய மீதுள வாகு மவற்றுள்
விதியி னும்பெரி தோர்பொரு ளுண்டோ?
மேலை நாஞ்செயுங் கர்மமல் லாதே
நதியி லுள்ள சிறுகுழி தன்னில்
நான்கு திக்கி லிருந்தும் பன்மாசு
பதியு மாறு பிறர்செயுங் கர்மப்
பயனு நம்மை யடைவதுண் டன்றோ? 182

வேறு

609. மாயச் சூதி னுக்கே – ஐயன்
மனமி ணங்கிவிட்டான்
தாய முருட்ட லானார் – அங்கே
சகுனி யார்ப்ப ரித்தான்
நேய முற்ற விதுரன் - போலே
நெறியு ளோர்க ளெல்லாம்
வாயை மூடி விட்டார் – தங்கள்
மதிம யங்கி விட்டார். 183

610. அந்த வேளை யதனில் – ஐவர்க்
கதிப னிஃது ரைப்பான்

---

183ஆம் பாடலின் இணைத்தலைப்பு: 'சூதாடல்' (பா. பி., அர.)

பந்த யங்கள் சொல்வாய் - சகுனி
"பரப ரத்தி டாதே
விந்தை யான செல்வம் - கொண்ட
வேந்த ரோடு நீதான்
வந்தெ திர்த்து விட்டாய் – எதிரே
வைக்க நிதிய முண்டோ'' 184

611. தருமன் வார்த்தை கேட்டே – துரியோ
தனனெ ழுந்து சொல்வான்:–
''அருமை யான செல்வம் - என்பால்
அளவி லாத துண்டு
ஒரும டங்கு வைத்தால் – எதிரே
ஒன்ப தாக வைப்பேன்.
பெருமை சொல்ல வேண்டா – ஐயா,
பின்ன டக்கு'' கென்றான். 185

612. ''ஒருவ னாடப் பணையம்[1] - வேறே
ஒருவன் வைப்ப துண்டோ?
தரும மாகு மோடா - சொல்வாய்
தம்பி யிந்த வார்த்தை''
''வரும மில்லை யையா – இங்கு
மாம னாடப் பணையம்[2]
மருகன் வைக்கொ ணாதோ - இதிலே
வந்த குற்ற மேதோ'' 186

613. ''பொழுது போக்குதற்கே - சூதுப்
போர் தொடங்கு கின்றோம்
அழுத லேனி தற்கே?'' என்றே

..........................................

பாரதி திருத்தம்: 1. ஒருவ னாடப் பணயம்
2. மாம னாடப் பணயம்



77-17

அங்கர் கோன கைத்தான்.
''பழுதி ருப்பதெல்லாம் - இங்கே
பார்த்தி வர்க்கு ரைத்தேன்
முழுது மிங்கிதற்கே - பின்னர்
முடிவு காண்பிர்'' என்றான். 187

614. ஒளிசி றந்த மணியின் - மாலை
ஒன்றை யங்கு வைத்தான்.
களிமி குந்த பகைவன் – எதிரே
கனத னங்கள் சொன்னான்
விழியி மைக்கு முன்னே – மாமன்
வென்று தீர்த்து விட்டான்
பழியி லாத தருமன் - பின்னும்
பந்த யங்கள் சொல்வான் 188

615. ''ஆயி ரங்கு டம்பொன் - வைத்தே
ஆடு வோ''மி தென்றான்;
மாயம் வல்ல மாமன் - அதனை
வசம தாக்கி விட்டான்.
பாயு மாவோ ரெட்டில்[1] செல்லும் –
பார மான பொற்றேர்:
தாய முருட்ட லானார் - அங்கே
சகுனி வென்று விட்டான். 189

616. இளைய ரான மாதர் – செம்பொன்
எழிலி ணைந்த வடிவும்
வளைய·ணிந்த தோளும் - மாலை
மணிகு லுங்கு மார்பும்

.....................................

பாரதி இருத்தம்: 1 பாயுமா வொரெட்டில்

விளையு மின்ப நூல்கள் – தம்மில்
மிக்க தேர்ச்சி யோடு
களையி லங்கு முகமும் – சாயற்
கவினு நன்கு கொண்டோர் 190

617. ஆயி ரக்க ணக்கா – ஐவர்க்
கடிமை செய்து வாழ்வோர்
தாய முருட்ட லானார் – அந்தச்
சகுனி வென்று விட்டான்.
ஆயி ரங்க ளாவார் – செம்பொன்
னணிகள் பூண்டி ருப்பார்
தூயி ழைப்பொ னாடை - சுற்றுந்
தொண்டர் தம்மை வைத்தான். 191

618. சோர ணங்க வற்றை - வார்த்தை
சொல்லு முன்னர் வென்றான்.
தீர மிக்க தருமன் – உள்ளத்
திடன ழிந்தி டாதே
"நீரை யுண்ட மேகம் - போலே
நிற்கு மாயி ரங்கள்
வார ணங்கள் கண்டாய் - போரில்
மறலி யொத்து மோதும்" 192

619. என்று வைத்த பணையந் - தன்னை
யிழிஞன் வென்று விட்டான்.
வென்றி மிக்க படைகள் - பின்னர்
வேந்தன் வைத்தி ழந்தான்
நன்றி ழைத்த தேர்கள் - போரின்
நடையு ணர்ந்த பாகர்

என்றி வற்றை யெல்லாம் - தருமன்
ஈடு வைத்தி ழந்தான். 193

620. எண்ணி லாத கண்டீர் - புவியில்
இணையி லாத வாகும்
வண்ண முள்ள பரிகள் – தம்மை
வைத்தி ழந்து விட்டான்
நண்ணு பொற்க டாரந் - தம்மில்
நாலு கோடி வைத்தான்
கண்ணி ழப்ப வன்போல் – அவையோர்
கணமி ழந்து விட்டான். 194

621. மாடி ழந்து விட்டான் – தருமன்
மந்தை மந்தை யாக
ஆடி ழந்து விட்டான் - தருமன்
ஆளி ழந்து விட்டான்
பீடி ழந்த சகுனி – அங்கு[1]
பின்னுஞ் சொல்லு கின்றான்:-
"நாடிழக்க வில்லை - தருமா
நாட்டை வைத்தி" டென்றான். 195

வேறு

622. "ஐய கோவிதை யாதெனச் சொல்வோம்?
அரச ரானவர் செய்குவ தொன்றோ?
மெய்ய தாகவொர் மண்டலத் தாட்சி

.....................................

1 'அங்குப்' என்றிருத்தல் வேண்டும்

– பதிப்பாசிரியர்

வென்று சூதினி லாளுங் கருத்தோ?
வைய மி∴து பொறுத்திடு மோமேல்
வான்பொ றுத்திடு மோபழி மக்காள்
துய்ய சீர்த்தி மதிக்குல மோராம்;
து"வென் றெள்ளி[1] விதுரனுஞ் சொல்வான். 196

623. "பாண்ட வர்பொறை கொள்ளுவ ரேனும்
பைந்து ழாயனும் பாஞ்சலத் தானும்[2]
மூண்ட வெஞ்சினத் தோடுநஞ் சூழல்
முற்றும் வேரறச் செய்குவ ரன்றோ?
ஈண்டி ருக்குங் குருகுல வேந்தர்
யார்க்கு மி∴துரைப் பேன்குறிக் கொண்மின்.
மாண்டு போரில் மடிந்து நரகில்
மாழ்கு தற்கு வகைசெயல் வேண்டா. 197

624. "குலமெ லாமழி வெய்திடற் கன்றோ
குத்தி ரத்துரி யோதனன் றன்னை
நலமி லாவிதி நம்மிடை வைத்தான்.
ஞால மீதி லவன்பிறந் தன்றே
அலறி யோர்நரி போற்குரைத் திட்டான்.
அ∴து ணர்ந்த நிமித்திகர் வெய்ய
கலகந் தோன்றுமிப் பாலக னாலே
காணு வீரெனச் சொல்லிடக் கேட்டோம். 198

625. "சூதிற் பிள்ளை கெலித்திடல் கொண்டு
சொர்க்க போகம் பெறுபவன் போலப்

..........................................

1 தூவென் றெள்ளி (பாரதி திருத்தம்) 'துவென் றெள்ளி' என இருப்பது அச்சுப்பிழை —பதிப்பாசிரியர்

(பா-டு): 2 பைந்து ழாயனும் பாஞ்சாலத் தானும் - (பா. பி.,அர.)

(196ஆம் பாடலின் ஆரம்பத்தில் கிளைத்தலைப்பு "நாட்டை வைத்தாடுதல்." பா.பி., அர.)

பேதை நீயு முகமலர் வெய்திப்
பெட்பு மிக்குற வீற்றிருக் கின்றாய்.
மீது சென்று மலையிடைத் தேனில்
மிக்க மோகத்தி னாலொரு வேடன்
பாத மாங்கு நழுவிட மாயும்
படும லைச்சரி வுள்ளது காணான். 199

626. மற்று நீருமிச் சூதெனுங் கள்ளால்
மதிம யங்கி வருஞ்செயல் காணீர்;
முற்றுஞ் சாதி சுயோதன னாமோர்
மூடற் காக முழுகிட லாமோ?
பற்று மிக்கவிப் பாண்டவர் தம்மைப்
பாத கத்தி லழித்திடு கின்றாய்,
கற்ற கல்வியுங் கேள்வியு மண்ணே,
கடலிற் காயங் கரைத்ததொப் பாமே? 200

627. "வீட்டு ளேநரி யை,விடப் பாம்பை
வேண்டிப் பிள்ளை யெனவளர்த் திட்டோம்,
நாட்டு ளேபுக ழோங்கிடு மாறிந்
நரியை விற்றுப் புலிகளைக் கொள்வாய்.
மோட்டுக் கூகையைக் காக்கையை விற்று
மொய்ம்பு சான்ற மயில்களைக் கொள்வாய்.
கேட்டி லேகளி யோடுசெல் வாயோ?
கேட்குங் காது மிழந்துவிட் டாயோ? 201

628. "தம்பி மக்கள் பொருள்வெஃகு வாயோ,
சாதற் கான வயதினி லண்ணே?
நம்பி நின்னை யடைந்தவ ரன்றோ?
நாத னென்றுனைக் கொண்டவ ரன்றோ?
எம்பி ரானுளங் கொள்ளுதி யாயின்
யாவுந் தான மெனக்கொடுப் பாரே!

கும்பி மாநர கத்தினி லாழ்த்துங்
கொடிய செய்கை தொடர்வது மென்னே.? 202

629. "குருகு லத்தலை வன்சபைக் கண்ணே,
கொற்ற மிக்க துரோணன், கிருபன்,
பெருகு சீர்த்தியக் கங்கையின் மைந்தன்,
பேதை நானு மதிப்பிழந் தேகத்
திருகு நெஞ்சச் சகுனி யொருவன்
செப்பு மந்திரஞ் செல்லுத னன்றே!*
அருகு வைக்கத் தகுதியுள் ளானோ?
அவனை வெற்பிடைப் போக்குதி யண்ணே. 203

630. "நெறியி ழந்தபின் வாழ்வதி லின்பம்
நேரு மென்று நினைத்திடல் வேண்டா.
பொறியி ழந்த சகுனியின் சூதாற்
புண்ணி யர்தமை மாற்றல ராக்கிச்
சிறியர், பாதக ரென்றுல கெல்லாம்
சீயென் றேச வுகந்தர சாளும்
வறிய வாழ்வை விரும்பிட லாமோ?
வாழி சூதை நிறுத்துதி" யென்றான். 204

இரண்டாவது சூதாட்டச் சருக்கம் முற்றிற்று.

முதற்பாகம் முற்றிற்று.

---

*(பாடு): செப்பு மந்திரஞ் சொல்லுத னன்றே - (பா.பி., அ. வெ.)

# இரண்டாம் பாகம்

## பராசக்தி வணக்கம்

631, ஆங்கொரு கல்லை வாயிலிற் படியென்
றமைத்தனன் சிற்பி,மற் றொன்றை
ஓங்கிய பெருமைக் கடவுளின் வடிவென்
றுயர்த்தினான், உலகினோர் தாய்நீ;
யாங்கணே, எவரை, எங்ஙனஞ் சமைத்தற்
கெண்ணமோ, அங்ஙனஞ் சமைப்பாய்.
ஈங்குனைச் சரணென் றெய்தினேன்; என்னை
இருங்கலைப் புலவனாக் குதியே* 1

## ஸரஸ்வதி வணக்கம்

632. இடையின்றி அணுக்களெலாஞ் சுழலுமென
இயல்நூலார் இசைத்தல் கேட்டோம்;
இடையின்றிக் கதிர்களெலாஞ் சுழலுமென
வானூலார் இயம்பு கின்றார்.

........................................

*1919/1924*

*இக்காவியத்தின் முதற்பாகத் தொடக்கத்தில் உள்ள அடிக்குறிப்பைக் காண்க.*

இடையின்றித் தொழில்புரிதல் உலகினிடைப்
பொருட்கெல்லாம் இயற்கை யாயின்,
இடையின்றிக் கலைமகளே நினதருளில்
எனதுள்ளம் இயங்கொ ணாதோ? 2

மூன்றாவது

## அடிமைச் சருக்கம்

### விதுரன் சொல்லியதற்குத் துரியோதனன் மறுமொழி சொல்லுதல்

633. அறிவு சான்ற விதுரன்சொற் கேட்டான்
அழலு நெஞ்சி னரவை யுயர்த்தான்.
நெறி யுரைத்திடு மேலவர் வாய்ச்சொல்
நீச ரானவர் கொள்ளுவ துண்டோ?
பொறிப றக்க விழிக ளிரண்டும்
புருவ மாங்கு* துடிக்கச் சினத்தின்
வெறித லைக்க,[1] மதிமழுங் கிப்போய்
வேந்த னிஃது விளம்புத லுற்றான். 3

வேறு

634. நன்றி கெட்ட விதுரா, சிறிதும்
நாண மற்ற விதுரா
தின்ற உப்பி னுக்கே - நாசந்
தேடு கின்ற விதுரா,
அன்று தொட்டு நீயும் எங்கள்
அழிவு நாடு கின்றாய்
மன்றி லுன்னை வைத்தான் - எந்தை
மதியை யென்னு ரைப்பேன்! 4

---

* 'மாங்குத்' என்றிருத்தல் வேண்டும்.

1 'வெறித லைக்க' என்றிருத்தல் கூடுமோ?

— பதிப்பாசிரியர்

635. ஐவ ருக்கு நெஞ்சும் - எங்கள்
அரம னைக்கு வயிறும்
தெய்வ மன்று னக்கே - விதுரா,
செய்து விட்ட தேயோ?
மெய்வ குப்ப வன்போல் - பொதுவாம்
விதியு ணர்ந்த வன்போல்
ஐவர் பக்க நின்றே - எங்கள்
அழிவு தேடு கின்றாய். 5

636. மன்னர் சூழ்ந்த ஸபையில்* - எங்கள்
மாற்ற லார்க ளோடு
முன்னர் நாங்கள் பணையம் - வைத்தே
முறையில் வெல்லுகின் றோம்.
என்ன குற்றங் கண்டாய்? - தருமம்
யார்க்கு ரைக்க வந்தாய்?
கன்னம் வைக்கி றோமோ? - பல்லைக்
காட்டி யேய்க்கி றோமோ? 6

637. பொய்யு ரைத்து வாழ்வார் - இதழிற்
புகழு ரைத்து வாழ்வார்
வைய மீதி லுள்ளார் - அவர்தம்
வழியில் வந்த துண்டோ?
செய்யொ ணாத செய்வார் - தம்மைச்
சீரு றுத்த நாடி,
ஐய நீயெ ழுந்தால் - அறிஞர்
அவல மெய்திடா ரோ? 7

638. அன்பி லாத பெண்ணுக் - கிதமே
ஆயி ரங்கள் செய்தும்

---

(பா - டு): * மன்னர் சூழ்ந்த சபையில் (பா. பி. 1932, அர.)

முன் பினென்ணு வாளோ? – தருணம்
மூண்ட போது கழிவாள்.
வன் புரைத்தல் வேண்டா – எங்கள்
வலிபொ றுத்தல் வேண்டா
இன்ப மெங்க ணுண்டோ, - அங்கே
ஏகி டென்று ரைத்தான். 8

## விதுரன் சொல்வது

### வேறு

639. நன்றாகு நெறியறியா மன்ன னங்கு
நான்குதிசை யரசர்சபை நடுவே தன்னைக்
கொன்றாலு மொப்பாகா வடுச்சொற் கூறிக்
குமைவதனி லணுவளவுங் குழப்ப மெய்தான்;
"சென்றாலு மிருந்தாலு மினியென் னேடா?
செய்கைநெறி யறியாத சிறியாய் நின்னைப்
பொன்றாத வழிசெய்ய முயன்று பார்த்தேன்;
பொல்லாத விதியென்னைப் புறங்கண்டா னால்! 9

640. "கடுஞ்சொற்கள் பொறுக்காத மென்மைக் காதும்
கருங்கல்லில் விடந்தோய்த்தா[1] நெஞ்சுங் கொண்டோர்
படுஞ்செய்தி தோன்றுமுனே படுவர் கண்டாய்.
பால்போலுந் தேன்போலு மினிய சொல்வோர்
இடும்பைக்கு வழிசொல்வார்; நன்மை காண்பார்
இளகுமொழி கூறாரென் றினைத்தே தானும்–
நெடும்பச்சை மரம்போலே வளர்ந்து விட்டாய்-
நினக்கெவருங் கூறியவ ரில்லை கொல்லோ? 10

(பா-டு): 1 கருங்கல்லில் விடந்தோய்ந்த (அர.)

641. நலங்கூறி யிடித்துரைப்பார் மொழிகள் கேளா:
நரபதி, நின் னவைக்களத்தே யமைச்ச ராக
வலங்கொண்ட மன்னரொடு பார்ப்பார் தம்மை
வைத்திருத்தல் சிறிதேனுந் தகாது கண்டாய்.
சிலங்கைப்பொற் கச்சணிந்த வேசை மாதர்
சிறுமைக்குத் தலைகொடுத்த தொண்டர்; மற்றுங்
குலங்கெட்ட புலைநீசர், மூடவர், பித்தர்
கோமகனே, நினக்குரிய அமைச்சர் கண்டாய்! 11

642. சென்றாலு நின்றாலு மினியென் னேடா?
செப்புவன நினக்கெனநான் செப்பி னேனோ?
மன்றார நிறைந்திருக்கு மன்னர், பார்ப்பார்,
மதியில்லா மூத்தோனு மறியச் சொன்னேன்:
இன்றோடு முடிகுவதோ? வருவ தெல்லாம்
யானறிவேன்; வீட்டுமனு மறிவான் கண்டாய்.
வென்றானுள் ளாசையெலாம் யோகி யாகி
வீட்டுமனு மொன்றுரையா திருக்கின் றானே. 12

643. விதிவழிநன் குணர்ந்திடினும் பேதை யேன்யான்
வெள்ளைமன முடைமையினால் மகனே நின்றன்
சதிவழியைத் தடுத்துரைகள் சொல்லப் போந்தேன்.
சரி,சரியிங் கேதுரைத்தும் பயனொன் றில்லை.
மதிவழியே செல்லுகென விதுரன் கூறி
வாய்மூடித் தலைகுனிந்தே யிருக்கை கொண்டான்.
பதிவுறுவோம் புவியிலெனக் கலிம கிழ்ந்தான்,
பாரதப்போர் வருமென்று தேவ ரார்த்தார். 13

வேறு

### சூது மீட்டுந் தொடங்குதல்

644. காயு ருட்ட லானார் – சூதுக்
களிதொ டங்க லானார்.

மாய முள்ள சகுனி - பின்னும்
வார்த்தை சொல்லு கின்றான் —
நீய ழித்த தெல்லாம் - பின்னும்
நின்னி டத்து மீளும்.
ஓய்வ டைந்தி டாதே! - தருமா
ஊக்க மெய்து கென்றான். 14

645. கோயிற் பூசை செய்வோர் - சிலையைக்
கொண்டு விற்றல் போலும்,
வாயில் காத்து நிற்போன் — வீட்டை
வைத் திழத்தல் போலும்,
ஆயி ரங்க ளான - நீதி
யவை யுணர்ந்த தருமன்
தேயம் வைத்தி ழந்தான் - சிச்சீ!
சிறியர் செய்கை செய்தான். 15

646. நாட்டு மாந்த ரெல்லாம் - தம்போல்
நரர்க ளென்று கருதார் —
ஆட்டு மந்தை யாமென் - றுலகை
அரச ரெண்ணி விட்டார்.
காட்டு முண்மை நூல்கள் - பலதாங்
காட்டி னார்க ளேனும்
நாட்டு ராஜ நீதி - மனிதர்
நன்கு செய்ய வில்லை. 16

647. ஓரஞ் செய்தி டாமே — தருமத்
துறுதி கொன்றி டாமே
சோரஞ் செய்தி டாமே - பிறரைத்
துயரில் வீழ்த்தி டாமே

ஊரை யாளு முறைமை - உலகில்
ஓர்பு றத்து மில்லை -
ஸார மற்ற வார்த்தை! - மேலே
சரிதை சொல்லு கின்றோம். 17

வேறு

## சகுனி சொல்வது

648. "செல்வமுற் றிழந்துவிட்டாய் – தருமா
தேசமுங் குடிகளுஞ் சேர்த்திழந்தாய்.
பல்வள நிறைபுவிக்கே – தருமன்
பார்த்திவ னென்பதினிப் பழங்கதைகாண்!
சொல்வதொர் பொருள்கேளாய் – இன்னுஞ்
சூழ்ந்தொரு பணயம்வைத் தாடுதியேல்
வெல்வதற் கிடமுண்டாம். – ஆங்கவ்
வெற்றியி லனைத்தையு மீட்டிடலாம். 18

649. எல்லா மிழந்தபின்னர் – நின்றன்
இளைஞரு நீருமற் றெதிற்பிழைப்பீர்?
பொல்லா விளையாட்டில் - பிச்சை
புகநினை விடுவதை விரும்புகிலோம்
வல்லார் நினதிளைஞர் - சூதில்
வைத்திடத் தகுந்தவர் பணயமென்றே
சொல்லால் உளம்வருந்தேல் - வைத்துத்
தோற்றதை மீட்டென்று சகுனிசொன்னான். 19

வேறு

650. கருண னுஞ்சிரித்தான் – ஸபையோர்
கண்ணி னீருதிர்த் தார்.

இருணி றைந்தநெஞ்சன் - களவே
யின்ப மென்று கொண்டான்,
அரவு யர்த்தவேந்தன் – உலகை
ஆர்த்தெ ழுந்து சொல்வான்
"பரவு நாட்டையெல்லாம் – எதிரே
பணய மாக வைப்போம், 20

651. தம்பி மாரைவைத்தே - ஆடித்
தருமன் வென்றுவிட் டால்,
முன்பு மாமன்வென்ற – பொருளை
முழுது மீண்டளிப் போம்
நம்பி வேலைசெய்வாய்* - தருமா,
நாடி ழந்த பின்னர்
அம்பி னொத்தவிழியாள் - உங்கள்
ஐவ ருக்கு முரியாள் - 21

652. "அவளி கழ்ந்திடானோ? – அந்த
ஆயன் பேசு வானோ? –
கவலை தீர்த்துவைப்போம் – மேலே
களி நடக்கு" கென்றான்.
இவன வானபின்னும் - இளைஞர்
ஏதும் வார்த்தை சொல்லார்,
துவளு நெஞ்சினாராய் - வதனந்
தொங்க வீற்றிருந் தார். 22

653. வீமன் மூச்சுவிட்டான் – முழையில்
வெய்ய நாகம்போ லே
காம னொத்தபார்த்தன் - வதனக்

---

(பா-டு): * தம்பி வேலை செய்வோம் – (பா.பி., அர.) (1932)

களை யிழந்து விட்டான்.
நேம மிக்கநகுலன் - ஐயோ!
நினை வயர்ந்து விட்டான்.
ஊமை போலிருந்தான் - பின்னோன்
உண்மை முற்றுணர்ந் தான். 23

654. கங்கை மைந்தனங்கே – நெஞ்சம்
கன லுறத்து டித்தான்.
பொங்கு வெஞ்சினத்தால் – அரசர்
புகை யுயிர்த்தி ருந்தார்.
அங்க நொந்துவிட்டான் - விதுரன்
அவல மெய்தி விட்டான்
சிங்க மைந்தைநாய்கள் - கொல்லுஞ்
செய்தி காண லுற்றே 24

வேறு

ஸஹாதேவனைப் பந்தயங் கூறுதல்

655. எப்பொ ழுதும்பிர மத்திலே – சிந்தை
யேற்றி உலகமொ ராடல்போல் - எண்ணித்
தப்பின்றி யின்பங்கள் துய்த்திடும் - வகை
தானுணர்ந் தான்ஸஹ தேவனாம் – எங்கும்
ஒப்பில் புலவனை யாட்டத்தில் - வைத்தல்
உன்னித் தருமன் பணயமென் - றங்கு[1]
செப்பினன் காயையு ருட்டினார் – அங்கு[2]
தீய சகுனி கெலித்திட்டான் 25

---

(பா-டு): 1 உன்னித் தருமன் பணயமென்று - அங்குச் (அர.)
2 செப்பினன் காயை உருட்டினார் – அங்குத் (அர.)

## நகுலனை யிழத்தல்

### சகுனி சொல்வது[1]

656. நகுலனை வைத்து மிழந்திட்டான் - அங்கு
நள்ளிருட் கண்ணொரு சிற்றொளி – வந்து
புகுவது போலவன் புந்தியில் – "என்ன
புன்மைசெய் தோம்?"என எண்ணினான் – அவ்வெண்ணம்
மிகுவதன் முன்பு சகுனியும் – "ஐய,
வேறொரு தாயிற் பிறந்தவர் - வைக்கத்
தகுவரென் றிந்தச் சிறுவரை - வைத்துத்
தாயத்தி லேயிழந் திட்டனை. 26

657. "திண்ணிய வீமனும் பார்த்தனும் – குந்தி
தேவியின் மக்க ளுனையொத்தே - நின்னிற்
கண்ணிய மிக்கவ ரென்றவர் - தமைக்
காட்டுதற் கஞ்சினை போலும்நீ!" - என்று
புண்ணிய மிக்க தருமனை - அந்தப்
புல்லன் வினவிய போதினில் - தர்மன்
துண்ணென வெஞ்சின மெய்தியே - அட,
சூதி லரசிழந் தேகினும், 27

### தர்மன் சொல்வது

### பார்த்தனை யிழத்தல்

658. எங்களி லொற்றுமை தீர்ந்திடோம்; – ஐவர்
எண்ணத்தில்; ஆவியி லொன்றுகாண் - இவர்
பங்க முற்றேபிரி வெய்துவார் - என்று
பாதகச் சிந்தனை கொள்கிறாய் - அட,
சிங்க மறவர் தமக்குள்ளே - வில்லுத்

1 சகுனி சொல்வது என்பது வேறு எந்தப் பதிப்பிலும் இல்லை.

தேர்ச்சியி லேங்கு ஏற்றவன், - எண்ணில்
இங்கு புவித்தல மேழையும் - விலை
யீடெனக் கொள்ளத் தகாதவன், 28

659 ''கண்ணனுக் காருயிர்த் தோழனாம் – எங்கள்
கண்ணிலுஞ் சால இனியவன்,
வண்ணமுந் திண்மையுஞ் சோதியும் - பெற்று
வானத் தமரரைப் போன்றவன், - அவன்
எண்ணரு நற்குணஞ் சான்றவன் – புக
ழேறும் விஜயன் பணையங்[1]காண்! - பொய்யிற்
பண்ணிய காயை யுருட்டுவாய்'' - என்று
பார்த்திவன் விம்மி யுரைத் திட்டான். 29

660. மாயத்தை யேஉரு வாக்கிய - அந்த
மாமனு நெஞ்சில் மகிழ்வுற்றே – கெட்ட
தாயத்தைக் கையினிற் பற்றினான். - பின்பு
சாற்றி விருத்தமங் கொன்றையே - கையில்
தாய முருட்டி விழுத்தினான்; - அவன்
சாற்றியதே வந்து வீழ்ந்ததால். - வெறும்
ஈயத்தைப் பொன்னென்று காட்டுவார் - மன்னர்
இப்புவி மீதுள ராமன்றோ? 30

## வீமனை இழத்தல்

661. கொக்கரித் தார்த்து முழங்கியே – களி
கூடிச் சகுனியுஞ் சொல்லுவான்: - ''எட்டுத்
திக்கனைத் தும்வென்ற பார்த்தனை – வென்று
தீர்த்தனம்; வீமனைக் கூ'' றென்றான் – தர்மன்
தக்கது செய்தல் மறந்தனன், - உளஞ்

(பா-டு): 1 ழேறும் விஜயன் பணயங் - (அர.)

சார்ந்திடு வெஞ்சின வெள்ளத்தில் - எங்கும்
அக்கரை யிக்கரை காண்கிலன், – அறத்
தண்ண லிதனை யுரைக்கின்றான்:- 31

662. “ஐவர் தமக்கோர் தலைவனை, - எங்கள்
ஆட்சிக்கு வேர்வலி யஃதினை, - ஒரு
தெய்வமுன் னேநின் றெதிர்ப்பினும் - நின்று
சீறி யடிக்குந் திறலனை, – நெடுங்
கைவளர் யானை பலவற்றின் - வலி
காட்டும் பெரும்புகழ் வீமனை - உங்கள்
பொய்வளர் சூதினில் வைத்திட்டேன் – வென்று
போ!”என் றுரைத்தனன் பொங்கியே. 32

663. போரினில் யானை விழக்கண்ட - பல
பூதங்கள் நாய்நரி காகங்கள் – புலை
ஓரி கழுகென் றிவையெலாம் – தம
துள்ளங் களிகொண்டு விம்மல்போல் – மிகச்
சீரிய வீமனைச் சூதினில் – அந்தத்
தீயர் விழுந்திடக் காணலும் - நின்று
மார்பிலுந் தோளிலுங் கொட்டினார்; – களி
மண்டிக் குதித்தெழுந் தாடுவார். 33

## தருமன் தன்னைத் தானே பணையம்[1] வைத்திழத்தல்

664. மன்னவர் தம்மை மறந்துபோய் – வெறி
வாய்ந்த திருடரை யொத்தனர். – அங்கு*
சின்னச் சகுனி சிரிப்புடன் - இன்னும்
“செப்புக பந்தயம் வே”றென்றான் - இவன்

(பா-டு): 1 பணயம்
* ‘அங்குச்’ என்றிருத்தல் வேண்டும்
— பதிப்பாசிரியர்

தன்னை மறந்தவ னாதலால் – தன்னைத்
தான்பணை யம்மென வைத்தனன், - பின்பு
முன்னைக் கதையன்றி வேறுண்டோ? – அந்த
மோசச் சகுனி கெலித்தனன். 34

### துரியோதனன் சொல்வது

665. பொங்கி யெழுந்து சுயோதனன் – அங்கு*
பூதல மன்னர்க்குச் சொல்லுவான்: - "ஒளி
மங்கி யழிந்தனர் பாண்டவர் – புவி
மண்டல நம்ம தினிக்கண்டீர் – இவர்
சங்கை யிலாத நிதியெலாம்[1] - நம்மைச்
சார்ந்தது; வாழ்த்துதிர் மன்னர்காள்! - இதை
எங்கும் பறையறை வாயடா – தம்பி!"
என்றது கேட்டுச் சகுனிதான்:- 35

### சகுனி செல்வது

666. "புண்ணிடைக் கோல்கொண்டு குத்துதல் - நின்னைப்
போன்றவர் செய்யத் தகுவதோ? - இரு
கண்ணி லினியவ ராமென்றே – இந்தக்
காளையர் தம்மையிங் குந்தைதான் – நெஞ்சி
லெண்ணி யிருப்ப தறிகுவாய்!. – இவர்
யார்?நின்றன் சோதர ரல்லரோ? – களி
நண்ணித் தொடங்கிய சூதன்றோ? - இவர்
நாணுறச் செய்வது நேர்மையோ? 36

667. இன்னும் "ணையம்[2]வைத் தாடுவோம்; - வெற்றி
இன்னு மிவர்பெற லாகுங்காண்.

---

* 'அங்குப்' என்றிருத்தல் வேண்டும் - பதிப்பாசிரியர்

(பா-டு): 1 சங்கை யிலாத நிதி யெல்லாம் - (பா.பி., 1924, அர.)
2 இன்னும் பணயம் - (பா.பி., அர.)

பொன்னுங் குடிகளுந் தேசமும் - பெற்றுப்
பொற்பொடு போதற் கிடமுண்டாம்; - ஒளி
மின்னு மமுதமும் போன்றவள், – இவர்
மேவிடு தேவியை வைத்திட்டால் (அவள்[1]
துன்னு மதிட்ட முடையவள்), – இவர்
தோற்ற தனைத்தையு மீட்டலாம்." 37

**668.** என்றங்க மாம னுரைப்பவே - வளர்
இன்ப மனத்தி லுடையனாய் - "மிக
நன்று,நன்" றென்று சுயோதனன் – சிறு
நாயொன்று தேன்கல சத்தினை – எண்ணித்
துன்று முவகையில் வெற்றுநா - வினைத்
தோய்த்துச் சுவைத்து மகிழ்தல்போல் - அவன்
ஒன்றுரை யாம லிருந்திட்டான் - அழி
வுற்ற துலகத் தறமெலாம். 38

*மூன்றாவது அடிமைச் சருக்கம் முற்றிற்று*

## நான்காவது - துகிலுரிதற் சருக்கம்

### திரௌபதியை இழத்தல்

**669.** பாவியர் சபைதனிலே, – புகழ்ப்
பாஞ்சால நாட்டினர் தவப்பயனை
ஆவியி லினியவளை, - உயிர்த்
தணிசுமந் துலவிடு செய்யமுதை
ஓவிய நிகர்த்தவளை - அரு
ளொளியினைக் கற்பனைக் குயிரதனைத்
தேவியை, நிலத்திருவை – எங்குந்
தேடினுங் கிடைப்பருந் திரவியத்தை. 39

(பா-ு): 1 மேவிடு தேவியை வைத்திட்டால், – (அவள்) - (பா.பி.1924, அர.)

670. படிமிசை யிசையுறவே – நடை
பயின்றிடுந் தெய்விக மலர்க்கொடியைக்
கடிகமழ் மின்னுருவை - ஒரு
கமனியக் கனவினைக் காதலினை
வடிவுறு பேரழகை, – இன்ப
வளத்தினைச் சூதினிற் பணைய[1]மென்றே
கொடியவ ரவைக்களத்தில் – அறக்
கோமகன் வைத்திடல் குறித்துவிட்டான். *40*

வேறு

671. வேள்விப் பொருளினையே – புலைநாயின்முன்
மென்றிட வைப்பவர்போல்,
நீள்விட்டப் பொன்மாளிகை – கட்டிப்பேயினை
நேர்ந்துகுடி யேற்றல்போல்,
ஆள்விற்றுப் பொன்வாங்கியே – செய்தபூணையோர்
ஆந்தைக்குப் பூட்டுதல்போல்
கேள்விக் கொருவரில்லை – உயிர்த்தேவியைக்
கீழ்மக்கட் காளாக்கினான். *41*

672. செருப்புக்குத் தோல்வேண்டியே, – இங்கு[2]கொல்வரோ
செல்வக் குழந்தையினை?
விருப்புற்ற சூதினுக்கே – ஒத்தபந்தயம்
மெய்த்தவப் பாஞ்சாலியோ?
ஒருப்பட்டுப் போனவுடன் - கெட்ட மாமனும்
உன்னியத் தாயங்கொண்டே

---

(பா-டு): 1 வளத்தினைச் சூதினிற் பணய - (பா.பி. 1924, அர.)
2 இங்குக் கொல்வரோ - (அர.)

இருப்பகடை* போ டென்றான் - பொய்மைக்காய்களும்
இருப்பகடை போட்டவே. 42

## திரௌபதி சூதில் வசமானது பற்றிக் கௌரவர் கொண்ட மகிழ்ச்சி

673. திக்குக் குலுங்கிடவே – எழுந்தாடுமாம்
தீயவர் கூட்டமெல்லாம்.
தக்குத்தக் கென்றேயவர் - குதித்தாடுவார்
தம்மிரு தோள்கொட்டுவார்.
ஒக்குந் தருமனுக்கே – இஃதென்பரோ!
ஓ!வென் றிரைந்திடுவார்.
இக்கக்கென் றேநகைப்பார் – "துரியோதனா,
கட்டிக்கொ ளெம்மை"யென்பார். 43

674. மாமனைத் தூக்காயென்பார்; - அந்தமாமன்மேல்
மாலை பலவீசுவார்.
சேமத் திரவியங்கள் – பலநாடுகள்
சேர்ந்ததி லொன்றுமில்லை;
காமத் திரவியமாம் - இந்தப்பெண்ணையுங்
கைவச மாகச்செய்தான்;
மாமனோர் தெய்வமென்பார். – "துரியோதனன்
வாழ்க"வென் றார்த்திடுவார். 44

## துரியோதனன் சொல்வது

675. நின்று துரியோதனன் - அந்தமாமனை
நெஞ்சொடு சேரக்கட்டி,
"என்துயர் தீர்த்தாயடா, - உயிர்மாமனே,

---

* 'இரு பகடை' என்றிருக்க வேண்டியது, எதுகைநயம் நோக்கி 'இருப்பகடை' என அமைந்தது.

– பதிப்பாசிரியர்

ஏனனந் தீர்த்துவிட்டாய்.
அன்று நகைத்தாளடா! – உயிர்மாமனே,
அவளையென் ஆளாக்கினாய்.
என்று மறவேனடா! - உயிர்மாமனே,
என்னகைம் மாறுசெய்வேன்! 45

676. "ஆசை தணித்தாயடா, - உயிர்மாமனே,
ஆவியைக் காத்தா யடா.
பூசை புரிவோமடா, - உயிர்மாமனே,
பொங்க லுனக்கிடுவோம்.
நாச மடைந்ததடா - நெடுநாட்பகை
நாமினி வாழ்ந்தோமடா!
பேசவுந் தோன்றுதில்லை, – உயிர்மாமனே,
பேரின்பங் கூட்டிவிட்டாய்.'' 46

677. என்று பலசொல்லுவான், - துரியோதனன்
எண்ணி யெண்ணிக்குதிப்பான்.
குன்று குதிப்பதுபோல் - துரியோதனன்
கொட்டிக் குதித்தாடுவான்.
மன்று குழப்பமுற்றே - அவர்யாவரும்
வகை,தொகை யொன்றுமின்றி
அன்று புரிந்ததெல்லாம் - என்றன் பாட்டிலே
ஆக்க லெளிதாகுமோ? 47

திரௌபதியைத் துரியோதனன் மன்றுக்கு அழைத்துவரச் சொல்லியது பற்றி ஜகத்தில் உண்டான அதர்மக் குழப்பம்

வேறு

678. தருமம் அழிவெய்தச் சத்தியமும் பொய்யாகப்[1]
பெருமைத் தவங்கள் பெயர்கெட்டு மண்ணாக, 48

---

(பா-டு): 1 தருமம் அழிவெய்தச் சத்தியமும் பொய்யாக, – (பா.பி., அர) பகரம் மிகுதலே சரி.

- பதிப்பாசிரியர்

679. வானத்துத் தேவர் வயிற்றிலே தீப்பாய,
மோன முனிவர் முறைகெட்டுத் தாமயங்க, 49

680. வேதம் பொருளின்றி வெற்றுரையே யாகிவிட,
நாதங் குலைந்து நடுமையின்றிப் பாழாக, 50

681. கந்தருவ ரெல்லாங் களையிழக்கச் சித்தர்முதல்
அந்தரத்து வாழ்வோ ரனைவோரும் பித்துறவே, 51

682. நான்முகனார் நாவடைக்க, நாமகட்குப் புத்திகெட,
வான்முகிலைப் போன்றதொரு வண்ணத் திருமாலும் 52

683. அறிதுயில்போய் மற்றாங்கே யாழ்ந்ததுயி லெய்திவிடச்[1]
செறிதருநற் சீரழகு செல்வமெலாந் தானாகும் 53

684. சீதேவி தன்வதனஞ் செம்மைபோய்க் காரடைய,
மாதேவன் யோகம் மதிமயக்க யாகிவிட 54

685. வாலை, உமாதேவி, மாகாளி, வீறுடையாள்
மூலமா சக்தி,யொரு மூவிலைவேல் கையேற்றாள் 55

686. மாயை தொலைக்கு மஹாமாயை தானாவாள்
பேயைக் கொலையைப் பிணக்குவையைக் கண்டுவப்பாள் 56

687. சிங்கத்தி லேறிச் சிரிப்பா லுல கழிப்பாள்[2]
சிங்கத்தி லேறிச் சிரித்தெவையுங் காத்திடுவாள், 57

---

*(பா-டு): 1 அறிதுயில்போல் மற்றாங்கே யாழ்ந்த துயிலெய்திவிட — (பா.பி., அர.)*
*சகரம் மிகுதலே சரி - பதிப்பாசிரியர்*

*2 சிங்கத்திலேறிச் சிரிப்பாலுல கழிப்பாள் - இவ்வரி பின்வந்த பல பதிப்பிலும் இல்லை. விடுத்தது தவறு*

*- பதிப்பாசிரியர்*

688. நோவுங் கொலையு நுவலொணாப் பீடைகளும்
சாவுஞ் சலிப்புமெனத் தான்பல் கணமுடையாள்; 58

689. கடாவெருமை யேறுங் கருநிலத்துக் காலனார்
இடாதுபணி செய்ய இலங்கு மஹாராணி, 59

690. மங்களஞ் செல்வம் வளர்வாழ்நாள் நற்கீர்த்தி
துங்கமுறு கல்வியெனச் சூழும் பலகணத்தாள், 60

691. ஆக்கந்தா னாவாள், அழிவு நிலையாவாள்
போக்கு வரவெய்தும் புதுமையெலாந் தானாவாள்; 61

692. மாறிமா றிப்பின்னு மாறிமா றிப்பின்னும்
மாறிமா றிப்போம் வழக்கமே தானாவாள், 62

693. ஆதிபரா சக்தி யவணெஞ்சம் வன்மையுற,
சோதிக் கதிர்விடுக்கும் சூரியனாந் தெய்வத்தின் 63

694. முகத்தே யிருள்படர -

துரியோதனன் விதுரனை நோக்கி யுரைப்பது

மூடப் புலைமையினோன்,
அகத்தே யிருளுடையான், ஆரியரின் வேறானோன், 64

695. துரியோ தனனுஞ் சுறுக்கெனவே தான்திரும்பி
அரியோன் விதுர னவனுக் குரைசெய்வான்:- 65

696. செல்வாய், விதுரா,நீ சிந்தித் திருப்பதேன்?
வில்வா ணுதலினாள், மிக்க எழிலுடையாள் 66

697. முன்னேபாஞ் சாலர் முடிவேந்தன் ஆவிமகள்,
இன்னேநாம் சூதில் எடுத்த விலைமகள்பால் 67

698. சென்று விளைவெல்லாஞ் செவ்வனே தானுணர்த்தி,
'மன்றினிடை யுள்ளானின் மைத்துனனின் னோர்தலைவன் 68

699. நின்னை யழைக்கிறான் நீள்மனையி லேவலுக்கே'
என்ன வுரைத்தவளை யிங்கு[1]கொணர் வாய்''என்றான். 69

## விதுரன் சொல்வது

700. துரியோ தனனிச் சுடுசொற்கள் கூறிடவும்,
பெரியோன் விதுரன் பெரிதுஞ் சினங்கொண்டு 70

701. "மூட மகனே, மொழியொணா வார்த்தையினைக்
கேடு வரலறியாய், கீழ்மையினாற் சொல்லிவிட்டாய். 71

702. புள்ளிச் சிறுமான் புலியைப்போய்ப் பாய்வதுபோல்,
பிள்ளைத் தவளை பெரும்பாம்பை மோதுதல்போல் 72

703. ஐவர் சினத்தின் அழலை வளர்க்கின்றாய்;
தெய்வத் தவத்தியைச் சீர்குலையப் பேசுகிறாய். 73

704. நின்னுடைய நன்மைக்கிந் நீதியெலாஞ் சொல்லுகிறேன்
என்னுடைய சொல்வே றெவர்பொருட்டு மில்லையடா! 74

705. பாண்டவர்தாம் நாளைப் பழியிதனைத் தீர்த்திடுவார்
மாண்டு தரைமேல் மகனே கிடப்பாய்நீ. 75

(பா-டு): 1 என்ன வுரைத் தவளை யிங்குக் கொணர்வாய் - (அர.)
இத்திருத்தமே சரி.

— பதிப்பாசிரியர்

706. தன்னழிவு நாடுந் தறுகண்மை யென்னேடா?
முன்னமொரு வேனன் முடிந்தகதை கேட்டிலையோ? 76

707. நல்லோர் தமதுள்ளம் நையச் செயல்செய்தான்
பொல்லாத வேனன்; புழுவைப்போல் மாய்ந்திட்டான் 77

708. நெஞ்சஞ் சுடவுரைத்தல் நேர்மையெனக் கொண்டாயோ?
மஞ்சனே யச்சொல் மருமத்தே பாய்வதன்றோ? 78

709. கெட்டார்தம் வாயி லெளிதே கிளைத்துவிடும்;
பட்டார்தம் நெஞ்சிற் பலநா ளகலாது. 79

710. வெந்நரகு சேர்த்துவிடும்; வித்தை தடுத்துவிடும்;
மன்னவனே; நொந்தார் மனஞ்சுடவே சொல்லுஞ்சொல் 80

711. சொல்லிவிட்டேன்; பின்னொருகால் சொல்லேன். கவுரவர்காள்!
புல்லியர்கட் கின்பம் புவித்தலத்தில் வாராது, 81

712. பேராசை கொண்டு பிழைச்செயல்கள் செய்கின்றீர்!
வாராத வன்கொடுமை மாவிபத்து வந்துவிடும். 82

713 பாண்டவர்தம் பாதம் பணிந்தவர்பாற் கொண்டதெலாம்
மீண்டவர்க்கே ஈந்து விட்டு, விநயமுடன் 83

714. "ஆண்டவரே, யாங்கள் அறியாமை யாற்செய்த
நீண்ட பாியிதனை நீர்பொறுப்பீர்" என்றுரைத்து, 84

715. மற்றவரைத் தங்கள் வளநகர்க்கே செல்லவிடீர்.
குற்றந் தவிர்க்கு நெறியிதனைக் கொள்ளீரேல், 85

715. மாபா ரதப்போர் வரும்,நீ ரழிந்திடுவீர்,
பூபாலரே'' என்றப் புண்ணியனுங் கூறினான். 86

716. சொல்லிதனைக் கேட்டுத் துரியோ தனமூடன்
வல்லிடிபோல்:- 'சீச்சி! மடையா! கெடுக நீ! 87

717. எப்போது மெம்மைச் சபித்த லியல்புனக்கே,
இப்போதுன் சொல்லை யெவருஞ் செவிக்கொளார். 88

718. யாரடா, தேர்ப்பாகன்! நீபோய்க் கணமிரண்டில்
"பாரதர்க்கு வேந்தன் பணித்தா" னெனக்கூறிப் 89

719. பாண்டவர்தங் தேவிதனைப் பார்வேந்தர் மன்றினிலே
ஈண்டழைத்து வா'என், றியம்பினான். ஆங்கேதேர்ப் 90

720. பாகன் விரைந்துபோய்ப் பாஞ்சாலி வாழ்மனையில்
சோகந் ததும்பித் துடித்த குரலுடனே 91

721. "அம்மனே போற்றி! அறங்காப்பாய், தாள்போற்றி!
வெம்மை யுடைய விதியால் யுதிட்டிரனார் 92

722. மாமன் சகுனியொடு மாயச்சூ தாடியதில்
பூமி யிழந்து பொருளிழந்து தம்பியரைத் 93

723. தோற்றுத் தமது சுதந்திரமும் வைத்திழந்தார்.
சாற்றும் பணைய[1]மெனத் தாயே உனைவைத்தார். 94

724. சொல்லவு மேநாவு துணியவில்லை! தோற்றிட்டார்.
எல்லாருங் கூடி யிருக்கும் ஸபைதனிலே, 95

......................................

(பா-ம்): 1 சாற்றிப் பணைய - (பா.பி., அர.)

725. நின்னை யழைத்துவர நேமித்தான் எம்மரசன்''
என்ன வுரைத்திடலும்:- ''யார்சொன்ன வார்த்தையடா! 96

726. சூதர் ஸபைதனிலே தொல்சீர் மறக்குலத்து
மாதர் வருதல் மரபோடா? யார்பணியால் 97

727. என்னை யழைக்கின்றாய்?'' என்றாள். அதற்கவனும்
''மன்னர் சுயோதனன்றன் வார்த்தையினால்''
என்றிட்டான் 98

728. ''நல்லது;நீ சென்று நடந்தகதை கேட்டுவா.
வல்ல சகுனிக்கு மாண்பிழந்த நாயகர்தாம் 99

729. என்னைமுன் னேகூறி யிழந்தாரா? தம்மையே
முன்ன மிழந்து முடித்தென்னைத் தோற்றாரா? 100

730. சென்று ஸபையில்இச் செய்தி தெரிந்துவா''
என்றவளுங் கூறி யிவன்போ கியபின்னர்த்[1] 101

731. தன்னந் தனியே தவிக்கு மனத்தாளாய்,
வன்னங் குலைந்து மலர்விழிகள் நீர்சொரிய, 102

732. உள்ளத்தை அச்சம் உலைவுறுத்தப் பேய்கண்ட
பிள்ளையென வீற்றிருந்தாள். பின்னந்தத் தேர்ப்பாகன் 103

733. மன்னன் ஸபைசென்று ''வாள்வேந்தே! ஆங்கந்தப்
பொன்னரசி தாள்பணிந்து 'போதருவீர்' என்றிட்டேன். 104

734. 'என்னை முதல்வைத் திழந்தபின்பு தன்னையென்
மன்ன ரிழந்தாரா? மாறித் தமைத்தோற்ற 105

---

(பா-டு): 1 பின்னர் (பா.பி., அர.) - இந்தப் பாடம் தவறு:
- பதிப்பாசிரியர்

735. பின்னரெனைத் தோற்றாரா?' என்றேனும் பேரவையை
மின்னற் கொடியார் வினவிவரத் தாம்பணித்தார். *106*

736. வந்துவிட்டேன்'' என்றுரைத்தான். மாண்புயர்ந்த பாண்டவர்தாம்
நொந்துபோ யொன்றும் நுவலா திருந்துவிட்டார். *107*

737. மற்றும் சபைதனிலே வந்திருந்த மன்னரெலாம்
முற்று முரையிழந்து மூங்கையர்போல் வீற்றிருந்தார். *108*

வேறு

## துரியோதனன் சொல்வது

738. உள்ளந் துடித்துச் சுயோதனன் - சினம்
ஓங்கி வெறிகொண்டு சொல்லுவான்: - "அட,
பிள்ளைக் கதைகள் விரிக்கிறாய் - என்றன்
பெற்றி யறிந்திலை போலும்நீ! - அந்தக்
கள்ளக் கரிய விழியினாள் - அவள்
கல்விகள் கொண்டிங்கு வந்தனை! - அவள்
கிள்ளை மொழியி னலத்தையே - இங்கு[1]
கேட்க விரும்புமென் னுள்ளமே. *109*

739. வேண்டிய கேள்விகள் கேட்கலாம் - சொல்ல
வேண்டிய வார்த்தைகள் சொல்லலாம். - மன்னர்
நீண்ட பெருஞ்சபை தன்னிலே - அவள்
நேரிடவே வந்த பின்புதான்! - சிறு
கூண்டிற் பறவையு மல்லளே! - ஐவர்
கூட்டு மனைவிக்கு நாணமேன்? - சின

(பா-டு): 1 கிள்ளை மொழியின் நலத்தையே - இங்குக் - (அர.)

மூண்டு கடுஞ்செயல் செய்யுமுன் - அந்த
மொய்குழ லாளையிங் கிட்டுவா. 110

740. 'மன்னன் அழைத்தனன்' என்றுநீ – சொல்ல
மாறி யவளொன்று சொல்வதோ? – உன்னைச்
சின்ன முறச்செய்கு வேனடா! - கணஞ்
சென்ற வளைக்கொணர் வாய்''என்றான் - அவன்
சொன்ன மொழியினைப் பாகன்போய் - அந்தத்
தோகைமுன் கூறி வணங்கினான்[1] – அவள்
இன்னல் விளைந்திவை கூறுவாள் – "தம்பி,
என்றனை வீணி லழைப்ப தேன்? 111

## திரௌபதி சொல்வது[2]

741. நாயகர் தாந்தம்மைத் தோற்றபின் – என்னை
நல்கு முரிமை அவர்க்கில்லை - புலைத்
தாயத்தி லேவிலைப் பட்டபின் – என்ன
சாத்திரத் தாலெனைத் தோற்றிட்டார்? அவர்
தாயத்தி லேவிலைப் பட்டவர்; – புவி
தாங்குந் துருபதன் கன்னிநான், – நிலை
சாயப் புலைத்தொண்டு சார்ந்திட்டால் – பின்பு
தார முடைமை யவர்க்குண்டோ.? 112

742. ''கௌரவ வேந்தர் ஸபைதன்னில் – அறங்
கண்டவர் யாவரு மில்லையோ? - மன்னர்
சௌரியம் வீழ்ந்திடு முன்னரே - அங்கு[3]

---

(பா-டு): 1 தோகை முன் கூறி வணங்கினன் (அர.)
2 திரௌபதி சொல்லுதல் - (பா.பி., அர.)
3 'அங்குச்' என்றிருத்தல் வேண்டும்:
-பதிப்பாசிரியர்

சாத்திரஞ் செத்துக் கிடக்குமோ? – புகழ்
ஒவ்வுற வாய்ந்த குருக்களும் – கல்வி
ஓங்கிய மன்னருஞ் சூதிலே – செல்வம்
வவ்வுறத் தாங்கண் டிருந்தனர்[1]
மான மழிவதுங் காண்பரோ? *113*

**743.** "இன்பமுந் துன்பமும் பூமியின் – மிசை
யாருக்கும் வருவது கண்டனம்; – எனில்
மன்பதை காக்கு மரசர்தாம் – அற
மாட்சியைக் கொன்று களிப்பரோ? – அதை
அன்புந் தவமுஞ் சிறந்துளார் – தலை
யந்தணர் கண்டு களிப்பரோ? – அவர்
முன்பென் வினாவினை மீட்டும்போய்ச் – சொல்லி
முற்றுந் தெளிவுறக் கேட்டுவா." *114*

**744.** என்றந்தப் பாண்டவர் தேவியும் - சொல்ல
என்செய்வன் ஏழையப் பாகனே? - "என்னைக்
கொன்றுவிட் டாலும் பெரிதில்லை – இவள்
கூறும் வினாவிற் கவர்விடை - தரி
னன்றி யிவளை மறுமுறை - வந்
தழைத்திட நானங் கிசைந்திடேன்" – என[2]
நன்று மனத்திடைக் கொண்டவன் – சபை
நண்ணி நிகழ்ந்தது கூறினான். *115*

.......................................

*(பா-டு): 1 வவ்வுறத் தாங்கண் டிருந்தனர்? - என்றன் - (அர.)*

*'என்றன்' என்று ஒரு தனிச் சொல்லை ஊகித்துக் கொள்ளலாம் என்றவர் தேசிகவிநாயகம் பிள்ளை (தனிச்சொல் இருந்தால்தான் இச்சிந்தின் சந்தம் அமையும்)*

*-பதிப்பாசிரியர்*

*2 தழைத்திட நானங் கிசைந்திடேன் – (என) - (பா.பி., அர.)*

745. "மாத விடாயி லிருக்கிறாள் – அந்த
மாதர" சென்பதுங் கூறினான் – கெட்ட
பாதக னெஞ்ச மிளகிடான் - நின்ற
பாண்டவர் தம்முக நோக்கினான் – அவர்
பேதுற்று நிற்பது கண்டனன் – மற்றும்
பேரவை தன்னி லொருவரும் - இவன்
தீதுற்ற சிந்தை தடுக்கவே - உள்ளத்
திண்மை யிலாதங் கிருந்தனர். 116

746. பாகனை மீட்டுஞ் சினத்துடன் – அவன்
பார்த்திடி போலுரை செய்கின்றான்: – "பின்னும்
ஏகி நமதுளங் கூறடா! - அவள்
ஏழு கணத்தில் வரச்செய்வாய்! - உன்னைச்
சாக மிதித்திடு வேனடா!" - என்று
தார்மன்னன் சொல்லிடப் பாகனும் - மன்னன்
வேகந் தனைப்பொருள் செய்திடான் - அங்கு
வீற்றிருந் தோர்தமை நோக்கியே,:- 117

747. "சீறும் அரசனுக் கேழையேன் – பிழை
செய்ததுண் டோ?அங்கு[1] தேவியார் - தமை
நூறு தரஞ்சென் றழைப்பினும் - அவர்
நுங்களைக் கேட்கத் திருப்புவார் - அவர்
ஆறுதல் கொள்ள ஒருமொழி – சொல்லில்
அக்கண மேசென் றழைக்கின்றேன். - மன்னன்
கூறும் பணிசெய வல்லன்யான் - அ
கோதை வராவிடி லென்செய்வேன்?" 118

---

*(பா-டு): 1 செய்த துண்டோ? அங்குத் தேவியார் - (அர.)*

### துரியோதனன் சொல்வது

748. பாகனு ரைத்தது கேட்டனன் - பெரும்
பாம்புக் கொடியவன் சொல்கின்றான்: – "அவள்
பாக னழைக்க வருகிலள். - இந்தப்
பையலும் வீமனை யஞ்சியே – பல
வாகத் திகைப்புற்று நின்றனன் - இவன்
அச்சத்தைப் பின்பு குறைக்கிறேன். - தம்பீ!
போகக் கடவையிப் போதங்கே - இங்கப்
பொற்றொடி யோடும் வருகநீ!" 119

*பாஞ்சாலி சபதத்தில் நான்காவது துகிலுரிதல் சருக்கம் முற்றிற்று*

## ஐந்தாவது
## சபதச் சருக்கம்

### துச்சாதனன் திரௌபதியை ஸபைக்குக் கொணர்தல்[1]

749. இவ்வுரை கேட்டதுச் சாதனன் - அண்ண
னிச்சையை மெச்சி யெழுந்தனன் – இவன்
செவ்வி சிறிது புகலுவோம்: – இவன்
தீமையி லண்ணனை வென்றவன்; - கல்வி
எவ்வள வேனு மிலாதவன்; - கள்ளும்
ஈரக் கறியும்[2] விரும்புவோன்; – பிற
தெவ்வ ரிவன்றனை யஞ்சுவார்; – தன்னைச்
சேர்ந்தவர் பேயென் றொதுங்குவார். 120

.......................................

(பா-டு): 1 துச்சாதனன் திரௌபதியைச் சபைக்குக் கொணர்தல் - (பா.பி., அர.
2 ஈர்ற் கறியும் - (தேசிக விநாயகம் பிள்ளை)

750. புத்தி விவேக மில்லாதவன்; - புலி
போல வுடல்வலி கொண்டவன்; – கரை
தத்தி வழியுஞ் செருக்கினால் - கள்ளின்
சார்பின்றி யேவெறி சான்றவன்; – அவ
சக்தி வழிபற்றி நின்றவன்; – சிவ
சக்தி நெறியுண ராதவன்; – இன்பம்
நத்தி மறங்க ளிலைழப்பவன்; – என்றும்
நல்லவர் கேண்மை விலக்கினோன். *121*

751. அண்ண னொருவனை யன்றியே – புவி
யத்தனைக் குந்தலை யாயினோம் – என்னும்
எண்ணந் தனதிடைக் கொண்டவன்; – அண்ணன்
ஏதுசொன் னாலு மறுத்திடான்; – அருட்
கண்ணழி வெய்திய பாதகன். - "அந்தக்
காரிகை தன்னை யழைத்துவா" – என்றவ்
வண்ண னுரைத்திடல் கேட்டனன்; – நல்ல
தாமென் றுறுமி யெழுந்தனன். *122*

752. பாண்டவர் தேவி யிருந்ததோர் - மணிப்
பைங்கதிர் மாளிகை சார்ந்தனன். – அங்கு
நீண்ட துயரிற் குலைந்துபோய் - நின்ற
நேரிழை மாதினைக் கண்டனன். – அவள்
தீண்டலை யெண்ணி யொதுங்கினாள். - "அடி,
செல்வதெங் கே"யென் றிரைந்திட்டான் – இவன்
ஆண்டகை யற்ற புலையனென் - றவள்
அச்சமி லாதெதிர் நோக்கியே - *123*

## திரௌபதிக்கும் துச்சாதனனுக்கும் ஸம்வாதம்

753. "தேவர் புவிமிசைப் பாண்டவர் – அவர்
தேவி துருபதன் கன்னிநான் – இதை

யாவரு மிற்றை வரையினும் - தம்பி,
என்முன் மறந்தவ ரில்லைகாண், - தம்பி,
காவ லிழந்த மதிகொண்டாய்! - இங்கு[1]
கட்டுத் தவறி மொழிகிறாய் - தம்பி,
நீவந்த செய்தி விரைவிலே - சொல்லி
நீங்குக" என்றனள் பெண்கொடி. 124

754. "பாண்டவர் தேவியு மல்லைநீ; - புகழ்ப்
பாஞ்சாலத் தான்மக ளல்லைநீ; - புவி
யாண்டருள் வேந்தர் தலைவனாம் - எங்கள்
அண்ணனுக் கேயடி மைச்சிநீ - மன்னர்
நீண்ட ஸபைதனிற் சூதிலே - எங்கள்
நேசச் சகுனியொ டாடியங்[2] - குன்னைத்
தூண்டும் பணைய மெனவைத்தான், - இன்று
தோற்று விட்டான்தரு மேந்திரன். 125

755. "ஆடி விலைப்பட்ட தாதிநீ; - உன்னை
ஆள்பவ னண்ணன் சுயோதனன், - மன்னர்
கூடி யிருக்குஞ் சபையிலே - உன்னைக்
கூட்டி வருகென்று மன்னவன் - சொல்ல
ஓடிவந் தேனிது செய்திகாண், - இனி
ஒன்றுஞ் சொலா தென்னொ டேகுவாய், - அந்தப
பேடி மகனொரு பாகன்பாற் - சொன்ன
பேச்சுக்கள் வேண்டிலன் கேட்கவே." 126

வேறு

756. துச்சா தனனிதனைச் சொல்லினான். பாஞ்சாலி:-
"அச்சா,கேள். மாதவிலக் காதலா லோராடை 127

..........................................

(பா-டு): 1 காவ லிழந்த மதிகொண்டாய்; – இங்குக் - (அர.)
2 நேசச் சகுனியோ டாடியங் – (அர.)

757. தன்னி லிருக்கின்றேன். தார்வேந்தர் பொற்சபைமுன்
என்னை யழைத்த லியல்பில்லை. அன்றியுமே 128

758. சோதரர்தந் தேவிதனைச் சூதில் வசமாக்கி
ஆதரவு நீக்கி யருமை குலைத்திடுதல் 129

759. மன்னர் குலத்து மரபோகாண்? - அண்ணன்பால்
என்னிலைமை கூறிடுவாய் ஏகுகநீ" என்றிட்டாள். 130

760. கக்கக்க வென்று கனைத்தே பெருமூடன்
பக்கத்தில் வந்தேயப் பாஞ்சாலி கூந்தலினைக் 131

761. கையினாற் பற்றிக் கரகரெனத் தானிழுத்தான்
ஐயகோ வென்றே யலறி யுணர்வற்றுப் 132

762. பாண்டவர்தந் தேவியவள் பாதியுயிர் கொண்டுவர
நீண்ட கருங்குழலை நீசன் கரம்பற்றி 133

763. முன்னிழுத்துச் சென்றான். வழி நெடுக மொய்த்தவராய்,
என்ன கொடுமை யிதுவென்று பார்த்திருந்தார். 134

764. ஊரவர்தங் கீழ்மை யுரைக்குந் தரமாமோ?
வீரமிலா நாய்கள், விலங்கா மிளவரசன் 135

765. தன்னை மிதித்துத் தராதலத்திற் போக்கியே
பொன்னையவ ளந்தப் புரத்தினிலே சேர்க்காமல் 136

766. நெட்டை மரங்களென நின்று புலம்பினார்.
பெட்டைப் புலம்பல் பிறர்க்குத் துணையாமோ? 137

767. பேரழகு கொண்ட பெருந்தவத்து நாயகியைச்
சீரழியக் கூந்தல் சிதையக் கவர்ந்துபோய்க் 138

768. கேடுற்ற மன்னரறங் கெட்ட சபைதனிலே
கூடுதலு மங்கேபோய்க் கோவென் றலறினாள். 139

## ஸபையில் திரௌபதி நீதிகேட் டழுதல்

769. விம்மி யழுதாள். — "விதியோ, கணவரே
அம்மி மிதித்தே யருந்ததியைக் காட்டியெனை 140

770. வேதச் சுடர்த்தீமுன் வேண்டி மணஞ்செய்து
பாதகர்மு னிந்நாட் பரிசழிதல் காண்பீரோ?" 141

771. என்றாள். விஜயனுட னேறுதிறல் வீமனுமே
குன்றா மணித்தோள் குறிப்புடனே நோக்கினார். 142

772. தருமனுமற் றாங்கே தலைகுனிந்து நின்றிட்டான்.
பொருமியவள் பின்னும் புலம்புவாள், – "வான்சபையில் 143

773. கேள்வி பலவுடையோர் கேடிலா நல்லிசையோர்
வேள்வி தவங்கள் மிகப்புரிந்த வேதியர்கள் 144

774. மேலோ ரிருக்கின்றார். வெஞ்சினமேன் கொள்கிலரோ?
வேலோ ரெனையுடைய வேந்தர் பிணிப்புண்டார். 145

775. இங்கிவர்மேற் குற்ற மியம்ப வழியில்லை.
மங்கியதோர் புன்மதியாய்! மன்னர் சபைதனிலே 146

776. என்னைப் பிடித்திழுத்தே யேச்சுக்கள் சொல்லுகிறாய்.
நின்னை யெவரும் "நிறுத்தடா" என்பதிலர். 147

777. என்செய்கேன்!" என்றே யிரைந்தழுதாள். பாண்டவரை
மின்செய் கதிர்விழியால் வெந்நோக்கு நோக்கினாள். 148

778. மற்றவர்தா முன்போல் வாயிழந்து சீர்குன்றிப்
பற்றைகள்போல் நிற்பதனைப் பார்த்து,
வெறிகொண்டு, 149

779. "தாதியடி தாதி!"யெனத் துச்சா தனனவளைத்
தீதுரைகள் கூறினான். கர்ணன் சிரித்திட்டான். 150

780. சகுனி புகழ்ந்தான். சபையினோர்? ... வீற்றிருந்தார்!*
தகுதியுயர் வீட்டுமனுஞ் சொல்லுகிறான்:-" தையலே, 151

## வீட்டுமாசார்யன் சொல்வது

781. சூதாடி நின்னை யுதிட்டிரனே தோற்றுவிட்டான்.
வாதாடி நீயவன்றன் செய்கை மறுக்கின்றாய். 152

782. சூதிலே வல்லான் சகுனி; தொழில்வலியால்
மாதரசே, நின்னுடைய மன்னவனை
வீழ்த்திவிட்டான் 153

783. மற்றிதனி லுன்னையொரு பந்தயமா வைத்ததே
குற்றமென்று சொல்லுகிறாய்! கோமகளே,
பண்டையுக 154

784. வேத முனிவர் விதிப்படிநீ, சொல்லுவது[1]
நீதமெனக் கூடும்; நெடுங்காலச் செய்தியது! 155

785. ஆணொடுபெண் முற்று நிகரெனவே யந்நாளில்
பேணிவந்தார். பின்னாளி லி∴து பெயர்ந்துபோய், 156

786. இப்பொழுதை நூல்களினை யெண்ணுங்கால், ஆடவருக்
கொப்பில்லை மாதர். ஒருவன்தன் தாரத்தை 157

---

(பா-டு): 1 சொல்வது - (அர.)

787. விற்றிடலாம்; தானமென வேற்றுவர்க்குத் தந்திடலாம். முற்றும் விளங்கும் முறைமையன்றி வேறில்லை. 158

788. தன்னை யடிமையென விற்றபின் னுந்தருமன் நின்னை யடிமையெனக் கொள்வதற்கு நீதியுண்டு. 159

789. செல்லு நெறியறியார் செய்கையிங்கு[1] பார்த்திடிலோ கல்லு நடுங்கும் விலங்குகளும் கண்புதைக்கும். 160

790. செய்கை யநீதியென்று தேர்ந்தாலுஞ் சாத்திரந்தான் வைகு நெறியும் வழக்கமுநீ கேட்பதனால் 161

791. ஆங்கவையு நின்சார்பி லாகா வகை யுரைத்தேன். தீங்கு தடுக்குந் திறமிலேன்!'' என்றந்த 162

792. மேலோன் தலைகவிழ்ந்தான். மெல்லியளுஞ் சொல்லு கிறாள்:-

## திரௌபதி சொல்லுவது

"சாலநன்கு கூறினீ ரையா, தருமநெறி. 163

793. பண்டோ ரிராவணனும் ஸீதைதன்னைப் பாதகத்தால் கொண்டோர் வனத்திடையே வைத்துப்பின் கூட்டமுற 164

794. மந்திரிகள் சாத்திரிமார் தம்மை வரவழைத்தே; செந்திருவைப் பற்றிவந்த செய்தி யுரைத்திடுங்கால் 165

795. "தக்கதுநீர் செய்தீர். தருமத்துக் கிச்செய்கை ஒக்கும்''என்று[2] கூறி யுகந்தனராம் சாத்திரிமார்! 166

---

1 'யிங்குப்' என்றிருத்தல் வேண்டும் - பதிப்பாசிரியர்

2 'ஒக்குமென்று' எனக் கொண்டு யாப்பியற் சீர் அமைத்தல் வேண்டும். -பதிப்பாசிரியர்

796. பேயரசு செய்தால் பிணந்தின்னும் சாத்திரங்கள்.
மாய முணராத மன்னவனைச் சூதாட 167

797. வற்புறுத்திக் கேட்டதுதான் வஞ்சனையோ, நேர்மையோ?
முற்படவே சூழ்ந்து முடித்ததொரு செய்கையன்றோ? 168

798. மண்டபநீர் கட்டியது மாநிலத்தைக் கொள்ளவன்றோ?
பெண்டிர் தமையுடையீர்! பெண்க ளுடன்பிறந்தீர்! 169

799. பெண்பாவ மன்றோ? பெரியவசை கொள்வீரோ?
கண்பார்க்க வேண்டும்!"என்று[1] கையெடுத்துக் கும்பிட்
டாள். 170

800. அம்புபட்ட மான்போ லழுது துடிதுடித்தாள்.
வம்பு மலர்க்கூந்தல் மண்மேற் புரண்டுவிழத் 171

801. தேவி கரைந்திடுதல் கண்டே சிலமொழிகள்
பாவிதுச் சாதனனும் பாங்கிழந்து கூறினான். 172

வேறு

802. ஆடை குலைவுற்று நிற்கிறாள். — அவள்
ஆவென் றழுது துடிக்கிறாள். — வெறும்
மாடு நிகர்த்ததுச் சாதனன் — அவள்
மைக்குழல் பற்றி யிழுக்கிறான். — இந்தப்
பீடையை நோக்கினன் வீமனும்; - கரை
மீறி யெழுந்தது வெஞ்சினம். - துயர்
கூடித் தருமனை நோக்கியே - அவன்
கூறிய வார்த்தைகள் கேட்டிரோ? 173

---

1 யாப்பியலமைப்பு: 'வேண்டுமென்று'

### வேறு

### வீமன் சொல்வது

803. சூதர் மனைகளிலே – அண்ணே!
தொண்டு மகளிருண்டு.
சூதிற் பணையமென்றே[1] – அங்கோர்
தொண்டச்சி போவதில்லை. 174

804. ஏது கருதிவைத்தாய் - அண்ணே,
யாரைப் பணையம்[2] வைத்தாய்?
மாதர் குலவிளக்கை, - அன்பே
வாய்ந்த வடிவழகை,– 175

805. பூமி யரசரெல்லாங் - கண்டே
போற்ற விளங்குகிறான்–
சாமி புகழினுக்கே – வெம்போர்ச்
சண்டனப் பாஞ்சாலன்- 176

806. அவன்சு டர்மகளை - அண்ணே
ஆடி யிழந்துவிட்டாய்.
தவறு செய்துவிட்டாய்; - அண்ணே
தருமங் கொன்றுவிட்டாய். 177

807. சோரத்திற் கொண்டதில்லை. - அண்ணே
சூதிற் படைத்ததில்லை,
வீரத்தி னாற்படைத்தோம். - வெம்போர்
வெற்றி யினாற்படைத்தோம். 178

808. சக்கர வர்த்தியென்றே – மேலாந்
தன்மை படைத்திருந்தோம்.

---

(பா-டு) 1,2 பணயம் (பா.பி., அர.)

பொக்கென ஓர்கணத்தே - எல்லாம்
போகத் தொலைத்துவிட்டாய். 179

809. நாட்டையெல் லாந்தொலைத்தாய்; - அண்ணே
நாங்கள் பொறுத்திருந்தோம்.
மீட்டு மெமையடிமை - செய்தாய்;
மேலும் பொறுத்திருந்தோம். 180

810. துருப தன்மகளைத் - திட்டத்
துய்ந னுடற்பிறப்பை,
இருபகடை யென்றாய் - ஐயோ!
இவர்க் கடிமையென்றாய்! 181

811. இது பொறுப்பதில்லை - தம்பி,
எரி தழல்கொண்டுவா.
கதிரை வைத்திழந்தான் - அண்ணன்
கையை எரித்திடுவோம். 182

வேறு

### விஜயன் வீமனுக்குச் சொல்வது[1]

812. எனவீமன் ஸஹதேவ னிடத்தே சொன்னான்.
இதைக்கேட்டு வில்விஜயன் எதிர்த்துச் சொல்வான்:-
''மனமாரச் சொன்னாயோ, வீமா? என்ன
வார்த்தை சொன்னாய்? எங்குசொன்னாய்? யாவர்முன்
னே?
கனமாருந் துருபதனார் மகளைச் சூதுக்
களியிலே யிழந்திடுதல் குற்ற மென்றாய்;

1 ''அர்ஜுனன் சொல்வது'' (பா.பி., அர.)

சினமான தீயறிவைப் புகைத்தலாலே
திரிலோக நாயகனைச் சினந்து சொன்னாய். 183

813. 'தருமத்தின் வாழ்வதனைச் சூது கவ்வும்
தருமமறு படிவெல்லும்' எனுமி யற்கை
மருமத்தை நம்மாலே யுலகங் கற்கும்
வழிதேடி விதியிந்தச் செய்கை செய்தான்.
கருமத்தை மேன்மேலுங் காண்போம்; இன்று
கட்டுண்டோம்; பொறுத்திருப்போம்; கால மாறும்.
தருமத்தை யப்போது வெல்லக் காண்போம்.
தனுவுண்டு காண்டீவ மதன்பேர்.'' என்றான். 184

814. அண்ணனுக்குத் திறல்வீமன் வணங்கி நின்றான்.
அப்போது விகர்ணனெழுந் தவைமுன் சொல்வான்:-

விகர்ணன் சொல்வது

'பெண்ணரசி கேள்விக்குப் பாட்டன் சொன்ன
பேச்சதனை நான்கொள்ளேன். பெண்டிர் தம்மை
எண்ணமதில் விலங்கெனவே கணவ ரெண்ணி
ஏதெனிலுஞ் செய்திடலா மென்றான் பாட்டன்.
வண்ணமுயர் வேதநெறி மாறிப் பின்னாள்
வழங்குவதிந் நெறியென்றான்; வழுவே சொன்னான்.
185

815. 'எந்தையர்தம் மனைவியரை விற்ற துண்டோ?[1]
இது காறு மரசியரைச் சூதில் தோற்ற
விந்தையைநீர் கேட்டதுண்டோ? விலைமா தர்க்கு
விதித்ததையே பிற்கால நீதிக் காரர்
சொந்தமெனச் சாத்திரத்தில் புகுத்து விட்டார்!

(பா-டு): 1 எந்தையர் தம் மனைவியரை விற்பதுண்டோ? (பா.பி., அர.)





சொல்லளவே தானாலும் வழக்கந் தன்னில்
இந்தவிதஞ் செய்வதில்லை. சூதர் வீட்டில்
ஏவற்பெண் பணையமில்லை[1] யென்றுங் கேட்டோம். 186

816. தன்னையிவ னிழந்தடிமை யான பின்னர்த்
தாரமெது? வீடேது? தாத னான
பின்னையுமோ ருடைமையுண்டோ என்று நும்மைப்[2]
பெண்ணரசு கேட்கின்றார் பெண்மை வாயால்.
மன்னர்களே, களிப்பதுதான் சூதென் றாலும்
மனுநீதி துறந்திங்கே வலிய பாவந்
தன்னையிரு விழிபார்க்க வாய்பே சீரோ?
தாத்தனே, நீதியிது தகுமோ?'' என்றான். 187

817. இவ்வாறு விகருணனு[3] முரைத்தல் கேட்டார்,
எழுந்திட்டார் சிலவேந்தர், இரைச்ச லிட்டார்,
"ஒவ்வாது சகுனிசெயுங் கொடுமை'' யென்பார்;
"ஒருநாளு முலகிதனை மறக்கா'' தென்பார்;
"எவ்வாறு புகைந்தாலும் புகைந்து போவீர்;
ஏந்திழையை அவைக்களத்தே இகழ்தல் வேண்டா.
செவ்வானம் படர்ந்தாற்போ லிரத்தம் பாயச்
செருக்களத்தே தீருமடா பழியிஃ'' தென்பார் 188

வேறு

## கர்ணன் சொல்வது[4]

818. விகருணன் சொல்லைக் கேட்டு வில்லிசைக் கர்ணன் சொல்வான்:-
"தகுமடா, சிறியாய்! நின்சொல்; தாரணி வேந்தர் யாரும்

(பா-டு): 1 பணயமில்லை - (பா.பி., (அர.)
2 நம்மைப் - (பா.பி., அர.)
3 இவ்வாறு விகர்ணனும் - (பா.பி., அர.)
4 கர்ணன் பதில் — (பா.பி. அர.,)

புகுவது நன்றென்[1] றெண்ணி வாய்புதைத் திருந்தார்.
நீதான்
மிகுமுரை சொல்லி விட்டாய். விரகிலாய், புலனு மில்லாய் *189*

819. "பெண்ணிவள் தூண்ட லெண்ணிப் பசுமையால் பிதற்று
கின்றாய்
எண்ணிலா துரைக்க லுற்றாய்; இவளைநாம் வென்ற தாலே
நண்ணிடும் பாவ மென்றாய்! நாணிலாய்! பொறையு மில்லாய்;
கண்ணிய நிலைமை யோராய்; நீதிநீ காண்ப துண்டோ? *190*

820. "மார்பிலே துணியைத் தாங்கும் வழக்கங்கீ ழடியார்க் கில்லை
சீரிய மகளு மல்லள், ஐவரைக் கலந்த தேவி.
யாரடா பணியாள்! வாராய், பாண்டவர் மார்பி லேந்தும்
சீரையுங் களைவாய், தையல் சேலையுங் களைவாய்"
என்றான். *191*

821. இவ்வுரை கேட்டா ரைவர், பணிமக்க ளேவா[2] முன்னந்
தெவ்வர்கண் டஞ்சு மார்பைத் திறந்தனர் துணியைப்
போட்டார்.
நவ்வியைப் போன்ற கண்ணாள், ஞானசுந் தரி,பாஞ் சாலி
எவ்வழி யுய்வோ மென்றே தியங்கினாள்; இணைக்கை
கோத்தாள். *192*

வேறு

## துகிலுரிதல்*

## திரௌபதி கண்ணனுக்குச் செய்யும் ப்ரார்த்தனை

822. துச்சா தனன்எழுந்தே - அன்னை
துகிலினை மன்றிடை யுரித லுற்றான்.

(பா-டு): 1 'புகுவது நன்றன் றெண்ணி' - என்றிருத்தல் கூடுமோ?
- பதிப்பாசிரியர்

2 'பணிமக்க ளேகா முன்னந்' என்றிருத்தல் கூடுமோ?
— பதிப்பாசிரியர்

* பின்வந்த பதிப்புகளில் "துகிலுரிதல்" என்ற சொல் விடப்பட்டுள்ளது.

"அச்சோ, தேவர்களே!" - என்
றலறியவ் விதுரனுந் தரைசாய்ந்தான்.
பிச்சேறி யவனைப்போல் – அந்தப்
பேயனுந் துகிலினை யுரிகையிலே,
உட்சோதி யிற்கலந்தாள் - அன்னை
உலகத்தை மறந்தாள் ஒருமையுற்றாள். 193

823. ஹரி, ஹரி, ஹரிஎன்றாள்; - கண்ணா
அபய மபயமுனக் கபயமென்றாள்.
கரியினுக் கருள்புரிந்தே – அன்று
கயத்திடை முதலையி னுயிர்மடித்தாய்,
கரியநன் னிற முடையாய், - அன்று
காளிங்கன் தலைமிசை நடம்புரிந்தாய்!
பெரியதொர் பொருளாவாய் - கண்ணா,
பேசரும் பழமறைப் பொருளாவாய். 194

824. 'சக்கர மேந்திநின்றாய் - கண்ணா,
சார்ங்கமென் றொருவில்லைக் கரத்துடையாய்!
அக்ஷரப் பொருளாவாய் - கண்ணா,
அக்கார அமுதுண்ணும் பசுங் குழந்தாய்!
துக்கங்க ளழித்திடுவாய் - கண்ணா,
தொண்டர்கண் ணீர்களைத் துடைத்திடுவாய்,
தக்கவர் தமைக்காப்பாய், - அந்தச்
சதுர்முக வேதனைப் படைத்துவிட்டாய். 195

825. "வானத்துள் வானாவாய்! - தீ,
மண்,நீர், காற்றினில் அவையாவாய்!
மோனத்துள் வீழ்ந்திருப்பார் – தவ
முனிவர்தம் அகத்தினி லொளிர்தருவாய்!

கானத்துப் பொய்கையிலே – தனிக்
கமலமென் பூமிசை வீற்றிருப்பாள்,
தானத்து ஸ்ரீதேவி - அவள்
தாளிணை கைக்கொண்டு மகிழ்ந்திருப்பாய்! 196

826. "ஆதியி லாதியப்பா! – கண்ணா!
அறிவினைக் கடந்தவிண் ணகப்பொருளே!
சோதிக்குச் சோதியப்பா[1]! – என்றன்
சொல்லினைக் கேட்டருள் செய்திடுவாய்.
மாதிக்கு வெளியினிலே - நடு
வானத்திற் பறந்திடுங் கருடன்மிசை
சோதிக்குள் ஊர்ந்திடுவாய் - கண்ணா!
சுடர்ப்பொரு ளே! பே ரடற்பொருளே! 197

827. "கம்பத்தி லுள்ளானோ? - அடா!
காட்டுன்றன் கடவுளைத் தூணிடத்தே!
வம்புரை செயுமூடா, – என்று
மகன்மிசை யுறுமியத் தூணுதைத்தான்,
செம்பவிர் குழலுடையான் – அந்தத்
தீயவல் லிரணிய னுடல்பிளந்தாய்!
நம்பிநின் னடிதொழுதேன் - என்னை
நாணழி யாதிங்கு[2] காத்தருள்வாய். 198

828. "வாக்கினுக் கீசனையும் – நின்றன்
வாக்கினி லசைத்திடும் வலிமையினாய்!
ஆக்கினை கரத்துடையாய்! - என்றன்
அன்புடை யெந்தை,என் னருட்கடலே!

---

(பா-டு): 1 சோதிக்குச் சோதியப்பா - (அர.)
2 'நாணழியா திங்குக்' என்றிருத்தல் வேண்டும்
- பதிப்பாசிரியர்



77-20

நோக்கினிற் கதிருடையாய்! - இங்கு
நூற்றுவர் கொடுமையைத் தவிர்த்தருள்வாய்.
தேக்குநல் வானமுதே! – இங்கு[1]
சிற்றிடை யாய்ச்சியில் வெண்ணெயுண்டாய்! 199

829. வையகங் காத்திடுவாய் – கண்ணா,
மணிவண்ணா, என்றன் மனச்சுடரே!
ஐய,நின் பதமலரே – சரண்
ஹரி, ஹரி, ஹரி, ஹரி, ஹரி!"என்றாள்
பொய்யர்தந் துயரினைப்போல் - நல்ல
புண்ணிய வாளர்தம் புகழினைப்போல்,
தையலர் கருணையைப்போல் – கடல்
சலசலத் தெறிந்திடும் அலைகளைப்போல், 200

830. பெண்ணொளி வாழ்த்திடுவார் – அந்தப்
பெருமக்கள் செல்வத்தின் பெருகுதல்போல்
கண்ண பிரானருளால் – தம்பி
கழற்றிடக் கழற்றிடத்[2] துணிபுதிதாய்
வண்ணப்பொற் சேலைகளாம் – அவை
வளர்ந்தன, வளர்ந்தன, வளர்ந்தனவே!
எண்ணத்தி லடங்காவே – அவை
எத்தனை யெத்தனை நிறத்தனவோ! 201

831. பொன்னிழை பட்டிழையும் – பல
புதுப்புதுப் புதுப்புதுப் புதுமைகளாய்ச்[3]
சென்னியிற் கைகுவித்தாள் - அவள்

(பா-டு): 1 'இங்குச்' என்றிருத்தல் வேண்டும்.
- பதிப்பாசிரியர்
2 களைந்திடக் களைந்திடத் – (அர.)
3 புதுமைகளாய் - (பா.பி., அர.)

செவ்விய மேனியைச் சார்ந்துநின்றே,
முன்னிய ஹரிநாமம் – தன்னில்
மூளுநற்[1] பயனுல கறிந்திடவே
துன்னிய துகிற்கூட்டங் – கண்டு
தொழும்பத்துச் சாதனன் வீழ்ந்துவிட்டான். 202

832. தேவர்கள் பூச்சொரிந்தார் – ஓம்
ஜயஜய பாரத சக்தி![2]யென்றே
ஆவலொ டெழுந்து[3]நின்று – முன்னை
ஆரிய வீட்டுமன் கைதொழுதான்.
சாவடி மறவரெல்லாம் – "ஓம்
சக்தி,சக்தி, சக்தி"யென்று கரங்குவித்தார்.
காவலி னெறிபிழைத்தான் – கொடி
கடியர வுடையவன் தலைகவிழ்ந்தான். 203

வேறு

## வீமன் செய்த சபதம்

833. வீம னெழுந்துரை செய்வான்: – "இங்கு
விண்ணவ ராணை; பராசக்தி யாணை;
தாமரைப் பூவினில் வந்தான் - மறை
சாற்றிய தேவன் திருக்கழ லாணை;
மாமக ளைக்கொண்ட தேவன் – எங்கள்
மரபுக்குத் தேவன்கண் ணன்பதத் தாணை;
காமனைக் கண்ணழ லாலே – சுட்டுக்
காலனை வென்றவன் பொன்னடி மீதில், 204

.......................................

*(பா-டு):* 1 *முழுநற் - (பா.பி., அர.)*
2 *ஜெயஜெய பாரத சக்தி - (பா.பி., அர.)*
3 *ஆவலோ டெழுந்து - (அர.)*

**834.** ஆணையிட் டி:துரை செய்வேன்: - இந்த
ஆண்மையி லாத்துரி யோதன்[1] – றன்னை;
பேணும் பெருங்கன லொத்தாள் – எங்கள்
பெண்டு திரௌபதி யைத்தொடை மீதில்
நாணின்றி வந்திரு வென்றான் - இந்த
நாய்மக னாந்துரி யோதன்[2] றன்னை
மாணற்ற மன்னர்கண் முன்னே - என்றன்
வன்மையி னால்யுத்த ரங்கத்தின் கண்ணே, - 205

**835.** "தொடையைப் பிளந்துயிர் மாய்ப்பேன், – தம்பி
சூரத்துச் சாதனன் தன்னையு மாங்கே
கடைபட்ட தோள்களைப் பிய்ப்பேன் - அங்கு[3]
கள்ளென ஊறுமி ரத்தங் குடிப்பேன்.
நடைபெறுங் காண்பி ருலகீர்! – இது
நான்சொல்லும் வார்த்தையென் றெண்ணிடல் வேண்டா!
தடையற்ற தெய்வத்தின் வார்த்தை; - இது
சாதனை செய்க, பராசக்தி" என்றான். 206

### அர்ஜுனன் சபதம்

**836.** பார்த்த னெழுந்துரை செய்வான்: - "இந்தப்
பாதகக் கர்ணனைப் போரில் மடிப்பேன்.
தீர்த்தன் பெரும்புகழ் விஷ்ணு - எங்கள்
சீரிய நண்பன் கண்ணன்கழ லாணை;

---

(பா-டு): 1 ஆண்மையிலாத் துரியோதனன் - (பா.பி., அர.)
2 நாய் மகனாந் துரியோதனன் - (பா.பி., அர.)

இரண்டிடத்தும் 'துரியோதனன்' என்றிருந்தால்தான் ஓசைச் செம்மை அமைகின்றது, 'துரியோதன்' என்பது அச்சுப் பிழையாயிருத்தல் வேண்டும்.
- பதிப்பாசிரியர்

3 'அங்குக்' என்றிருத்தல் வேண்டும்.
- பதிப்பாசிரியர்

கார்த்தடங் கண்ணியெங் தேவி - அவள்
கண்ணிலுங் காண்டிவ வில்லிலு மாணை!
போர்த்தொழில் விந்தைகள் காண்பாய் – ஹே;
பூதல மே!அந்தப் போதினில்'' என்றான். *207*

## பாஞ்சாலி சபதம்

**837.** தேவி திரௌபதி சொல்வாள்: - ''ஓம்,
தேவி பராசக்தி யாணை யுரைத்தேன்:
பாவிதுச் சாசனன் செந்நீர்; - அந்தப்
பாழ்த்துரி யோதனன் ஆக்கை யிரத்தம்,
மேவி யிரண்டுங் கலந்து - குழல்
மீதினிற் பூசி நறுநெய்கு ளித்தே
சீவிக் குழல்முடிப் பேன்யான், - இது
செய்யுமுன் னேமுடி யே''னென் றுரைத்தாள். *208*

**838.** ஓமென் றுரைத்தனர் தேவர்; – ஓம்
ஓமென்று சொல்லி யுறுமிற்று வானம்;
பூமி யதிர்ச்சியுண் டாச்சு; – விண்ணைப்
பூழிப் படுத்திய தாஞ்சுழற் காற்று;
'சாமி தருமன் புவிக்கே' - என்று
ஸாக்ஷி யுரைத்தன பூதங்க ளைந்தும்,
நாமுங் கதையை முடித்தோம்; – இந்த
நானில முற்றுநல் லின்பத்தில் வாழ்க! *209*

*பாஞ்சாலி சபதத்தில்*

*ஐந்தாவது சபதச் சருக்கம் முற்றிற்று.*

*பாஞ்சாலி சபதம் முற்றிற்று.*

## 72. ஒளியும் இருளும்

839. வான மெங்கும் பரிதியின் சோதி,
மலைகள் மீது[1] பரிதியின் சோதி,
தானை நீர்க்கடல் மீதிலு மாங்கே
தரையின் மீதுந் தருக்களின் மீதும்,
கான கத்திலும் பற்பல ஆற்றின்
கரைகள் மீதும் பரிதியின் சோதி,
மான வன்ற னுளத்தினில் மட்டும்
வந்து நிற்கும் இருளிது வென்னே! 1

840. சோதி யென்னுங் கரையற்ற வெள்ளம்
தோன்றி யெங்குந் திரைகொண்டு பாய,
சோதி யென்னும் பெருங்கடல் – சோதிச்
சூறை – மாசறு சோதி யனந்தம்
சோதி யென்னு நிறைவி:. துலகைச்
சூழ்ந்து நிற்ப, ஒருதனி நெஞ்சம்
கோதியன்ற தொர்[2] சிற்றிருள் சேரக்
குமைந்து சோருங் கொடுமையி தென்னே! 2

---

1913 (ஞானபானு)

(பா-டு): 1 மலைகள் மீதும் – (பா.ஆ., பா.பி., அர.)

2 சோதியன்றதொர் – (தேசிகவிநாயகம் பிள்ளை)

841. தேம லர்க்கொ ரமுதன்ன சோதி,
சேர்ந்து புள்ளினம் வாழ்த்திடுஞ் சோதி,
காம முற்று நிலத்தொடு நீருங்
காற்று நன்கு தழுவி நகைத்தே
தாம யங்கிநல் லின்புறுஞ் சோதி,
தரணி முற்றுந் ததும்பி யிருப்ப,
தீமை கொண்ட புலையிருள் சேர்ந்தோர்
சிறிய நெஞ்சந் தியங்குவ தென்னே! 3

842. நீர்ச்சுனைக் கண மின்னுற் றிலக,
நெடிய குன்ற நகைத்தெழில் கொள்ள,
கார்ச்ச டைக்கரு மேகங்க ளெல்லாம்
கனக மொத்துச் சுடர் கொண்டுலாவ,
தேர்ச்சி கொண்டு பல் சாத்திரங் கற்றுந்,
தெவிட்டொ ணாதநல் லின்பக் கருவாம்
வேர்ச்சு டர்ப்பர மாண்பொருள் கேட்டும்,[1]
மெலிவொர் நெஞ்சிடை மேவுத லென்னே! 4

........................................

(பா-டு): 1 வேர்ச்சுடர் பரமாண் பொருள் கேட்கும். - (பா.ஆ.)

# 73. மது

*நித்தியதீரர் என்னும் நமது நேயர் இயற்றியது.*

**843.** போகி:- பச்சை முந்திரித் தேம்பழங் கொன்று
பாட்டுப் பாடிநற் சாறு பிழிந்தே
இச்சை தீர மதுவடித் துண்போம்
இஃது தீதென் றிடையர்கள் சொல்லும்
கொச்சைப் பேச்சிற் கைகொட்டி நகைப்போம்
கொஞ்சு மாதருங் கூட்டுணுங் கள்ளும்
இச்ச கத்திஙி லின்பங்க ளன்றோ
இவற்றி னல்லின்பம் வேறுமொன் றுண்டோ?[1] *1*

**844.** யோகி:- பச்சை முந்திரி யன்ன துலகம்
பாட்டுப் பாடல் சிவக்களி யெய்தல்
இச்சை தீர உலகினைக் கொல்வோம்
இனிய சாறு சிவமதை யுண்போம்
கொச்சை மாக்களுக் கிஃதெளி தாமோ?
கொஞ்சு மாதொரு குண்டலி சத்தி[2]
இச்ச கத்தி லிவையின்ப மன்றோ?
இவற்றி னல்லின்பம் வேறுள தாமோ? *2*

---

*1913 ஆகஸ்டு (ஞானபானு)*

*'நித்திய தீரர்' என்பது பாரதியாரின் புனைபெயர்களில் ஒன்று'*

*(பா-டு): 1 இவற்றி னல்லின்பம் வேறொன்று முண்டோ? - (பா.பி., அர.)*
*2 கொஞ்சு மாதொரு குண்டலி சக்தி - (பா.பி., அர.)*

**845.** *போகி:-* வெற்றி கொள்ளும் படைக ணடத்தி
வேந்தர் தம்முட் பெரும்புக ழெய்தி
ஒற்றை வெள்ளைக் கவிகை யுயர்த்தே
யுலக மஞ்சிப் பணிந்திட வாழ்வோம்;
சுற்று தேங்கமழ் மென்மலர் மாலை
தோளின் மீதுறப்[1] பெண்கள் குலாவச்
சற்று நெஞ்சங் கவலுத லின்றித்
தரணிமீதில் மது வுண்டு வாழ்வோம். *3*

**846.** *யோகி:-* வெற்றி யைந்து புலன்மிசைக் கொள்வோம்;
வீழ்ந்து தாளிடை வையகம் போற்றும்;
ஒற்றை வெள்ளைக் கவிகை மெய்ஞ்ஞானம்;
உண்மை வேந்தர் சிவநிலை கண்டார்;
மற்றவர் தமுட் சீர்பெற வாழ்வோம்;
வண்ம லர்நறு மாலை தெளிவாம்;
சுற்றி மார்பி லருள்மது வுண்டே
தோகை சத்தியோ டின்புற்று[2] வாழ்வோம். 4

**847.** *போகி:-* நல்ல கீதத் தொழிலுணர் பாணர்
நடனம் வல்ல நகைமுக மாதர்
அல்லல் போக விவருடன் கூடி
யாடி யாடிக் களித்தின்பங் கொள்வோம்;
சொல்ல நாவு கனியுத டாநற்
சுதியி லொத்துத் துணையொடும் பாடி
புல்லு மார்பினோ டாடிக் குதிக்கும்
போகம் போலொரு போகமிங் குண்டோ? 5

---

*(பா-டு):* 1 தோளின் மீதுருப் - (அர.)
2 தோகை சக்தியொ டின்புற்று - (பா.பி., அர.)

**848.** யோகி:- நல்ல கீதஞ் சிவத்தனி நாதம்
நடன ஞானியர் சிற்சபை யாட்டம்
அல்லல் போக இவருடன் சேர்ந்தே
யாடி யாடிப் பெருங்களி கொள்வோம்,
சொல்ல நாவி லினிக்கு தடாவான்
சுழலு மண்டத் திரளின்[1] சுதியிற்
செல்லும் பண்ணொடு சிற்சபை யாடும்
செல்வம் போலொரு செல்வ மிங்குண்டே? 6

ஞானி

**849.** மாத ரோடு மயங்கிக் களித்தும்
மதுர நல்லிசை பாடிக் குதித்தும்
காதல் செய்தும் பெறும்பல வின்பம்,
கள்ளி னின்பம்,[2] கலைகளி னின்பம்
பூத லத்தினை யாள்வதி னின்பம்[3]
பொய்மை யல்லவிவ் வின்பங்க ளெல்லாம்
யாதுஞ் சத்தி யியல்பெனக் கண்டோர்[4]
இனிய துய்ப்ப[5] ரிதய மகிழ்ந்தே. 7

**850.** இன்பந் துன்ப மனைத்துங் கலந்தே
இச்ச கத்தினி யல்வலி யாகி
முன்பு பின்பில தாகி[6]யெங் நாளும்
மூண்டு செல்லும் பராசத்தி யோடே[7]

---

(பா-டு): 1 சுழலு மண்டபத் திரளின் - (பா.பி.)
2 கள்ளில் இன்பம் — (பா.பி., அர.)
3 பூதலத்தினை ஆள்வதில் இன்பம் — (பா. பி., அர.)
4 யாதுஞ் சக்தி இயல்பெனக் கண்டோம் — (பா.பி., அர.)
5 இனைய துய்ப்பம் - (அர.)
6 முன்பு பின்பல தாகி — (பா.பி., அர.)
7 மூண்டு செல்லும் பராசக்தி யோடே - (பா. பி., அர.)

அன்பி லொன்றிப் பெருஞ்சிவ யோகத்
தறிவு தன்னி லொருப்பட்டு நிற்பார்,
துன்ப நேரினு[1] மின்பெனக் கொள்வார்,
துய்ப்ப ரின்ப மிகச்சுவை கண்டே.[2] 8

851. இச்சகத் தோர்[3] பொருளையுந் தீரர்
இல்லை யென்று வருந்துவ தில்லை;
நச்சி நச்சி யுளத்தொண்டு கொண்டு
நானிலத் தின்ப நாடுவ தில்லை;
பிச்சை கேட்பது மில்லை, யின்பத்திற்
பித்துக் கொண்டு மயங்குவ தில்லை;
துச்ச மென்று சுகங்களைக் கொள்ளச்
சொல்லு மூடர்சொற் கொள்வது மில்லை.[4] 9

852. தீது நேர்ந்திடின் அஞ்சுவ தில்லை
தேறு நெஞ்சினோ டே[5]சிவங் கண்டோர்
மாத ரின்ப முதலிய வெல்லாம்
வையகத்துச் சிவன் வைத்த தென்றே[6]
ஆதரித்தவை முற்றிலுங் கொள்வார்
அங்கு மிங்குமொன் றீமெனத் தேர்வார்
யாது மெங்கள் சிவன்றிருக் கேளி
இன்பம் யாவு மவனுடை யின்பம். 10

853. வேத மந்திர நாத மொருபால்
வேயி னின்குழல் மெல்லொலி யோர்பால்

(பா-டு): 1 துன்புநேரினும் - (பா.பி., அர.)
2 துய்ப்பர் இன்பம் மிகச்சுவைகொண்டே - (பா.பி., அர.)
3 இச்சகத் தொர் - (பா.பி.)
4 சொல்லு மூடர் சொற் கேட்பதும் இல்லை - (பா.பி., அர.)
5 தேறு நெஞ்சி னொடே - (பா.பி., அர.)
6 வையகத்துச் சிவன் வைத்த வென்றே - (பா.பி., அர.)

காதன் மாதரோ டாட[1] லொருபால்
களவெம் போரிடை வென்றிட லோர்பால்
போத நல்வெறி துய்த்திட லோர்பால்
பொலியுங் கள்வெறி துய்த்தல்மற் றோர்பால்
ஏதெ லாநமக் கின்புற நிற்கும்
எங்கள் தாயருட் பாலது வன்றே. *11*

## ஸங்கீர்த்தனம்

### மூவரும் சேர்ந்து பாடுவது

854. மதுநமக்கு மதுநமக்கு மதுநமக்கு விண்ணெலாம்
மதுரமிக்க ஹரிநமக்கு மதுவெனக் கதித்தலால்
மதுநமக்கு மதியுநாளு மதுநமக்கு வானமீன்
மதுநமக்கு மண்ணுநீரு மதுநமக்கு மலையெலாம்
மதுநமக்கோர்[2] தோல்வி வெற்றி மதுநமக்கு வினையெலாம்
மது நமக்கு மாதரின்பம் மது நமக்கு மதுவகை
மது நமக்கு மதி நமக்கு மது மனத்தோடாவியும்[3]
மதுர மிக்க சிவ நமக்கு மது யெனக்கதித்தலால்.[4] *12*

---

*(பா-டு): 1 காதல் மாதரொ டாட - (பா.பி., அர.)*
*2 மது நமக்கொர் - (பா.பி., அர.)*
*3 மதுநமக்கு மதுநமக்கு, மதுமனத்தொ டாவியும் - (அர.)*
*மதுமனத்தொ டார்வியும் – (பா.பி.)*
*4 மதுரமிக்க சிவநமக்கு மதுவெனக் கதித்தலால் - (பா.பி.)*
*மதுரமிக்க சிவநமக்கு மடவெனக் கதித்தலால் - (அர.)*

## 74. கண்ணன் - என்தாய்

855. உண்ண வுண்ணத் தெவிட்டாதே – அம்மை
உயிரெனு முலையினில் உணர்வெனும் பால்
வண்ணமுற வைத் தெனக்கே - என்றன்
வாயினிற் கொண் டூட்டுமோர் வண்மையுடையாள்
கண்ணனெனும் பெயருடையாள் - என்னைக்
கட்டி நிறைவா னெனுந்தன் கையி லணைத்து
மண்ணெனுந்தன் மடியில் வைத்தே - பல
மாயமுறுங் கதைசொல்லி மனங் களிப்பாள். 1

856. இன்பமெனச் சில கதைகள் - எனக்
கேற்ற மென்றும் வெற்றி யென்றும் சில கதைகள்
துன்பமெனச் சிலகதைகள் - கெட்ட
தோல்வி யென்றும் வீழ்ச்சி யென்றும் சிலகதைகள்
என்பருவ மென்றன் விருப்பம் - எனும்
இவற்றினுக் கிணங்க வென்னுள மறிந்தே
அன்போடவள் சொல்லி வருவாள் – அதில்
அற்புதமுண்டாய்ப் பரவசமடைவேன். 2

........................................

*1913 அக்டோபர் (ஞானபானு)*

*இப்பாடல் 'கண்ணன் பாட்டு'த் தொகுதியுள் காணப்படுகிறது.*

*மற்றும், 'கண்ணம்மா-என் காதலி', 'கண்ணன்-என்காதலன்' - ஆகிய இரு பாடல்களும் கையெழுத்து வடிவில் உள்ளன. கண்ணனைப் பற்றித் தனித் தனிப்பாடல்கள் எழுதிய பின்னர்தான் பாரதியார் மேலும் சில பாடல்களை இயற்றிக் 'கண்ணன் பாட்'டாக நூல் வடிவம் கொடுத்தார் எனக் கொள்ளலாம்.*

857. விந்தை விந்தை யாக வெனக்கே - பல
விதவிதத் தோற்றங்கள் காட்டு விப்பாள்
சந்திரனென் றொரு பொம்மை – அதில்
தண்ணமுதம் போல வொளி பரந்தொழுகும்
மந்தை மந்தை யாமேகம் - பல
வன்னமுறும் பொம்மையது மழைபொழியும்
முந்த வொரு சூரியனுண்டு – அதன்
முகத்தொளி கூறுதற்கோர் மொழியிலையே. 3

858. வானத்து மீன்களுண்டு - சிறு
மணிகளைப் போல் மின்னி நிறைந்திருக்கும்
நானத்தைக் கணக்கிடவே – மன
நாடிமிக முயல் கினும் கூடுவதில்லை
கானத்து மலை களுண்டு - எந்தக்
காலமுமோ ரிடம் விட்டு நகர்வதில்லை
மோனத்திலே யிருக்கும் - ஒரு
மொழியுரையாது விளையாடவருங் காண். 4

859. நல்ல நல்ல நதிகளுண்டு – அவை
நாடெங்கு மோடி விளையாடி வருங் காண்
மெல்ல மெல்லப் போயவைதாம் - விழும்
விரிகடற் பொம்மையது மிகப்பெரிது
எல்லை யதிற் காணுவதில்லை - அலை
யெற்றி நுரைகக்கி யொரு பாட்டிசைக்கும்
ஒல்லெனுமப் பாட்டினிலே - அம்மை
யோமெனும் பெயரென்று மொலித்திடுங் காண். 5

860. சோலைகள் காவினங்கள் – அங்கு
சூழ்தரும் பலநிற மணிமலர்கள்

சாலவு மினியனவாய் – அங்கு
தருக்களில் தூங்கிடுங் கனிவகைகள்
ஞால முற்றிலு நிறைந்தே – மிக
நயந்தரு பொம்மைக ளெனக் கெனவே
கோலமுஞ் சுவையுமுற - அவள்
கோடிபல் கோடிகள் குவித்து வைத்தாள். 6

861. தின்றிடப் பண்டங்களும் – செவி
தெவிட்டறக் கேட்க நற் பாட்டுக்களும்
ஒன்றுறப் பழகுதற்கே – அறி
வுடையமெய்த் தோழரு மவள் கொடுத்தாள்
கொன்றிடு மென வினிதாய் - இன்பக்
கொடுநெருப் பாய்அனற் சுவையமுதாய்
நன்றியல் காதலுக்கே - இந்த
நாரியர் தமை யெனைச் சூழவைத்தாள். 7

862. சிறகுடைப் பறவைகளும் - நிலந்
திரிந்திடும் விலங்குக ளூர்வனகள்
அறைகடனி றைந்திடவே – எண்ணில்
அமைத்திடற் கரியபல் வகைப் படவே
சுறவுகள் மீன்வகை கள் – எனத்
தோழர்கள் பலருமிங் கெனக் களித்தாள்
நிறைவுற வின்பம் வைத்தாள் - அதை
நினைக்கவு முழுதிலுங் கூடுதில்லை. 8

863. சாத்திரங் கோடிவைத்தாள் - அவை
தம்மினு முயர்ந்ததோர் ஞானம் வைத்தாள்
மீத்திடும் பொழுதினிலே - நான்
வேடிக்கை யுறக்கண்டு நகைப்பதற்கே

கோத்த பொய் வேதங்களும் - மதக்
    கொலைகளு மரசர்தங் கூத்துக்களும்
மூத்தவர் பொய் நடையும் - இன
    மூடர்தங் கவலையு மவள் புனைந்தாள். 9

864. வேண்டிய கொடுத்திடுவாள் – அவை
    விரும்புமுன் கொடுத்திட விரைந்திடுவாள்
ஆண்டருள் புரிந்திடுவாள் – அண்ணன்
    அருச்சுனன் போலெனை யாக்கிடுவாள்
யாண்டு மெக் காலத்தினும் - அவள்
    இன்னருள் பாடுநற் றொழில் புரிவேன்
நீண்டதோர் புகழ் வாழ்வும் - பிற
    நிகரறு பெருமையு மவள் கொடுப்பாள். 10

# 75. யோகசித்தி

ஓர் உத்தம தேசாபிமானியால் இயற்றப்பட்டது

865. விண்ணும் மண்ணுந்தனி யாளும் - அடி[1]
வீர சக்தி[2]நின தருளே - என்றன்
கண்ணுங் கருத்துமெனக் கொண்டு - அன்பு
கசிந்து கசிந்துகசிந் துருகி - நான்
பண்ணும் பூசனைக ளெல்லாம் - வெறும்
பாலை வனத்திலிட்ட நீரோ - உனக்
கெண்ணுஞ் சிந்தையொன் றிலையோ? - அறி
வில்லா தகிலமளிப் பாயோ? 1

866. நீயே சரணமென்று கூவி - என்றன்
நெஞ்சிற் பேருறுதி கொண்டு – அடி
தாயே யெனக்குமிக நிதியும் – அறந்
தன்னைக் காப்பதற்கோர்[3] திறனும் – தரு
வாயே யென்றுபணிந் தேத்தி[4] - பல
வாறா நினதுபுகழ் பாடி - வாய்

.......................................

1913 டிசம்பர் (ஞானபானு)

(பா-டு): 1 விண்ணும் மண்ணுந் தனியாளும் - எங்கள் – (பாரதியார்)
2 வீரை சக்தி – (பாரதியார்)
3 தன்னைக் காக்கு மொரு – (பாரதியார்)
4 வாயே யென்று பணிந்தேத்திப் - (பாரதியார்)

ஓயே னாவதுண ராயோ?[1] – நின
　　துண்மை தவறுவதோ[2] ருலகோ.[3] 2

867. காளி வலியசா முண்டி[4] - ஓங்
　　காரத் தலைவியென்னி ராணி - பல
நாளிங் கெனையலைக்க லாமோ? உள்ளம்
　　நாடும் பொருளடைதற் கன்றோ – மலர்த்
தாளில் விழுந்தபயம் கேட்டேன் – அது
　　தாரா யெனிலுயிரைத் தீராய் – துன்ப
மீளி லுயிர்தரிக்க மாட்டேன் – கரு
　　நீலி[5] யென்னியல்பறி யாயோ? 3

868. தேடிச் சோறுநிதந் தின்று - பல
　　சின்னஞ் சிறுகதைகள் பேசி - மனம்
வாடித் துன்பமிக வுழன்று - பிறர்
　　வாடப் பலசெயல்கள் செய்து – நரை
கூடிக் கிழப்பருவ மெய்தி - கொடுங்
　　கூற்றுக் கிரையெனப்பின் மாயும் - பல
வேடிக்கை மனிதரைப் போலே – நான்
　　வீழ்வே னென்றுநினைத் தாயோ? 4

869. நின்னைச் சிலவரங்கள் கேட்பேன் – அவை
　　நேரே யின்றெனக்குத் தருவாய் - என்றன்
முன்னைத் தீயவினைப் பயன்கள் - இன்னும்
　　மூளா தழிந்திடுதல் வேண்டும் – இனி

---

(பா-டு): 1 ஓயே னாலதுணராயோ? - (பா. ஆ.)
2 துண்மை தவறு தொருலகோ? - (பாரதியார்)
3 துண்மை தவறுவ தோரழகோ? - (பா. பி.)
4 காளீ - (பாரதியார்)
5 நீலி - (பா. ஆ., பா. பிர., அர.)

என்னைப் புதியவுயி ராக்கி - எனக்
கேதுங் கவலையறச் செய்து – மதி
தன்னை மிகத்தெளிவு செய்து - என்றும்
சந்தோஷங்* கொண்டிருக்கச் செய்வாய். 5

870. தோளை வலியுடைய தாக்கி - உடற்
சோர்வும் பிணிபலவும் போக்கி - அரி
வாளைக் கொண்டுபிளந் தாலும் - கட்டு
மாறா வுடலுறுதி தந்து - சுடர்
நாளைக் கண்டதோர் மலர்போல் - ஒளி
நண்ணித் திகழுமுகந் தந்து – மத
வேளை வெல்லுமுறை கூறித் – தவ
மேன்மை கொடுத்தருளல் வேண்டும். 6

871. எண்ணுங் காரியங்க ளெல்லாம் – வெற்றி
யேறப் புரிந்தருள வேண்டும்[1] - தொழில்
பண்ணப் பெருநிதியம் வேண்டும் - அதிற்
பல்லோர் துணைபுரிய வேண்டும் - அவை[2]
நண்ணும் பாட்டினொடு தாளம் - மிக
நன்றா யுளத்தழுந்த வேண்டும்[3] - பல
மண்ணிற்[4] கோடிவகை யின்பம் – நான்
பாடத் திறனடைதல் வேண்டும். 7

---

*(பா-டு): * ஸந்தோஷங் - (பாரதியார்)*

*1 யேறப் புரிந்தருளல் வேண்டும் - (பாரதியார்)*

*2 பல்லோர் துணை புரிதல் வேண்டும் - சுவை - (பாரதியார்)*

*3 நன்றா வுளத்தழுந்தல் வேண்டும் - (பாரதியார்)*

*4 பண்ணிற் - (பாரதியார்).*

872. கல்லை வயிரமணி யாக்கல் - செம்பைக்
கட்டித் தங்கமெனச் செய்தல்[1]
புல்லை நெல்லெனப் புரிதல் - பன்றிப்
போத்தைச் சிங்கவே றாக்கல் - மண்ணை
வெல்லத் தினிப்புறச் செய்தல்[2] - என
விந்தை தோன்றிடவிந் நாட்டை - நான்
தொல்லை தீர்த்துயர்வு கல்வி - வெற்றி
சூழும் வீரமறி வாண்மை, 8

873. கூடுந் திரவியத்தின் குவைகள் - திறல்
கொள்ளுங் கோடிவகைத் தொழில்கள் - இவை
நாடும் படிக்குவினை செய்து - இந்த
நாட்டோர் கீர்த்தியெங்கு மோங்க[3] - கலி
சாடுந் திறனெனக்குத் தருவாய், - அடி
தாயே யுனக்கரிய துண்டோ? - மதி
மூடும் பொய்மையிரு ளெல்லாம் - எனை
முற்றும் விட்டகல வேண்டும். 9

874. ஐயந் தீர்ந்துவிடல் வேண்டும் - புலை
யச்சம் போயொழிதல் வேண்டும், - பல
பையச் சொல்லுவதிங் கென்னே! - முன்னைப்
பார்த்தன் கண்ணனிவர் நேரா - எனை
உய்யக் கொண்டருளல் வேண்டும்[4] - அடி
உன்னைக் கோடிமுறை தொழுதேன் - இனி

---

(பா-டு) 1 கட்டித் தங்க மெனச் செய்தல்-வெறும் - (பாரதியார்)
2 வெல்லத் தினிப்பு வரச்செய்தல் - (பாரதியார்)
3 நாட்டோர் கீர்த்தி யெங்கு மோங்கக் - (பாரதியார்)
4 உய்யக் கொண்டருள வேண்டும - (பாரதியார்)

வையத் தலைமையெனக் கருள்வாய் - அன்னை
வாழி[1] நின்னதருள் வாழி. 10

குறிப்பு:- "இப்பாடலை ஹனும தோடி மேளத்தில் ஆதி தாளத்தில்
"மாமா - காக - ரிரி - ஸாஸாநிநி - ஸகா-காககா -
கம கமபா - மம - மாமா - காக - ரிரி - ஸாஸா"
என்ற இசையில் ஸமயோசிதமாக மாற்றிப் பாடுக"

---

பாடலின் இறுதியில்,

" (ஓம்) காளீ வலிய சாமுண்டீ ஓங்
காரத் தலைவி யென்னிராணி"

என்னும் இருஅடிகள் கைப்பிரதியில் உள்ளன. சங்கீதக் குறிப்பு கைப்பிரதியில் காணப்படவில்லை.

பாரதியார் செய்த திருத்தங்களே பாரதி ஆச்ரமம், பாரதி பிரசுராலயம், அரசாங்கப் பதிப்புக்களிலும் கையாளப்பட்டுள்ளன.

- பதிப்பாசிரியர்

(பா-டு): 1 வாழீ - (பாரதியார்)

# 76. புதிய ஆத்திசூடி

## காப்பு

### பரம்பொருள் வாழ்த்து

875. ஆத்தி சூடி யிளம்பிறை யணிந்து
மோனத் திருக்கு முழுவெண் மேனியான்,
கருநிறங் கொண்டுபாற் கடல்மிசைக் கிடப்போன்,
மகமது நபிக்கு மறையருள் புரிந்தோன்,
ஏசுவின் தந்தை யெனப்பல மதத்தினர்
உருவகத் தாலே யுணர்ந்துண ராது
பலவகை யாகப் பரவிடும் பரம்பொருள்
ஒன்றே; அதனியல் ஒளியுறு மறிவாம்;
அதனிலை கண்டார் அல்லலை யகற்றினார்;
அதனருள் வாழ்த்தி யமரவாழ் வெய்துவோம்.

### நூல்

876. அச்சந் தவிர்
ஆண்மை தவறேல்.
இளைத்த லிகழ்ச்சி.
ஈகை திறன்.
880. உடலினை யுறுதிசெய். 5

.........................................

*1913 (நூல் - முதற்பதிப்பு)*

ஊண்மிக விரும்பு.
எண்ணுவ துயர்வு.
ஏறு போல்நட.
ஐம்பொறி யாட்சிகொள்.
885. ஒற்றுமை வலிமையாம். 10
ஓய்த லொழி.
ஔடதங் குறை.
கற்ற தொழுகு.
கால மழியேல்
890. கிளைபல தாங்கேல். 15
கீழோர்க் கஞ்சேல்.
குன்றென நிமிர்ந்துநில்.
கூடித் தொழில்செய்.
கெடுப்பது சோர்வு.
895. கேட்டிலுந் துணிந்துநில். 20
கைத்தொழில் போற்று.
கொடுமையை யெதிர்த்துநில்.
கோல்கைக் கொண்டுவாழ்.
கல்வியதை விடேல்.
900. சரித்திரத் தேர்ச்சிகொள். 25
சாவதற் கஞ்சேல்.
சிதையா நெஞ்சுகொள்.
சீறுவோர்ச் சீறு.
சுமையினுக் கிளைத்திடேல்.
905. சூரரைப் போற்று. 30

செய்வது துணிந்துசெய்.
சேர்க்கை யழியேல்.
சைகையிற் பொருளுணர்
சொல்வது தெளிந்துசொல்.
910. சோதிடந் தனையிகழ்.
சௌரியந் தவறேல். 35
ஞமலிபோல் வாழேல்
ஞாயிறு போற்று.
ஞிமிரென இன்புறு.
915. ஞெகிழ்வ தருளின். 40
ஞேயங் காத்தல்செய்.
தன்மை யிழவேல்.
தாழ்ந்து நடவேல்.
திருவினை வென்றுவாழ்.
920. தீயோர்க் கஞ்சேல். 45
துன்ப மறந்திரு.
தூற்றுத லொழி.
தெய்வநீ யென்றுணர்.
தேசத்தைக் காத்தல்செய்.
925. தையலை யுயர்வுசெய். 50
தொன்மைக் கஞ்சேல்.
தோல்வியிற் கலங்கேல்.
தவத்தினை நிதம்புரி.
நன்று கருது.
930. நாளெலாம் வினைசெய். 55

நினைப்பது முடியும்.

நீதிநூல் பயில்.

நுனியளவு செல்.

நூலினைப் பகுத்துணர்.

935. நெற்றி சுருக்கிடேல். 60

நேர்படப் பேசு.

நையப் புடை.

நொந்தது சாகும்.

நோற்பது கைவிடேல்.

940. பணத்தினைப் பெருக்கு. 65

பாட்டினி லன்புசெய்.

பிணத்தினைப் போற்றேல்.

பீழைக் கிடங்கொடேல்.

புதியன விரும்பு.

945. பூமி யிழந்திடேல். 70

பெரிதினும் பெரிதுகேள்.

பேய்களுக் கஞ்சேல்.

பொய்மை யிகழ்.

போர்த்தொழில் பழகு.

950. மந்திரம் வலிமை. 75

மானம் போற்று.

மிடிமையி லழிந்திடேல்.

மீளுமா றுணர்ந்துகொள்.

முனையிலே முகத்துநில்.

955. மூப்பினுக் கிடங்கொடேல். 80

மெல்லத் தெரிந்துசொல்.
மேழி போற்று.
மொய்ம்புறத் தவஞ்செய்.
மோனம் போற்று.
960. மௌட்டியந் தனைக்கொல். 85
யவனர்போன் முயற்சிகொள்
யாரையு மதித்துவாழ்.
யௌவனங் காத்தல்செய்.
ரஸத்திலே தேர்ச்சிகொள்.
965. ராஜஸம் பயில். 90
ரீதி தவறேல்.
ருசிபல வென்றுணர்.
ரூபஞ் செம்மைசெய்.
ரேகையிற் கனிகொள்.
970. ரோதனந் தவிர். 95
ரௌத்திரம் பழகு.
லவம்பல வெள்ளமாம்.
லாகவப் பயிற்சிசெய்.
லீலை யிவ்வுலகு.
975. (உ)லுத்தரை யிகழ். 100
(உ)லோகநூல் கற்றுணர்.
லௌகிக மாற்று.
வருவதை மகிழ்ந்துண்.
வானநூற் பயிற்சிகொள்.
980. விதையினைத் தெரிந்திடு 105

வீரியம் பெருக்கு.

வெடிப்புறப் பேசு.

வேதம் புதுமைசெய்.

வையத் தலைமைகொள்.

985. வௌவுத லீக்கு. 110

## 77. வேய்ங் குழல்

ராகம் - ஹிந்துஸ்தானி தோடி[1] – ஏகதாளம்

986. எங்கிருந்து வருகுவதோ - ஒலி
யாவர் செய்குவதோ? - அடிதோழி. 1

987. குன்றினின்றும் வருகுவதோ - மரக்
கொம்பினின்றும் வருகுவதோ - வெளி
மன்றினின்று வருகுவதோ - என்றன்
மதிமருண்டிடச் செய்குதடி[2] - (இ:.தெங்கிருந்து)[3] 2

988. அலையொலித்திடும் தெய்வ - யமுனை
யாற்றினின்றும் ஒலிப்பதுவோ - அன்றி
இலையொலிக்கும் பொழிலிடை நின்றும்
எழுவதோஇ:. தின்னமுதைப்போல் (எங்கிருந்து) 3

989. காட்டினின்றும் வருகுவதோ - நிலாக்
கற்றைகொண்டு[4] தருகுவதோ – வெளி

---

*1914 ஜனவரி (ஞானபானு)*

*(பா-டு): 1 பா. பி., அர. பதிப்புகளில் தாளத்தின் பெயர் இல்லை.*

*2 மதிமருண்டிடச் செய்குதடி - (அர.)*

*3 தனிச்சீராக அமைந்துள்ளது தவறு. 'இஃது' தனிச்சொல் - ('எங்கிருந்து' - பல்லவி) மதிமருண்டிடச் செய்குதடி! - இஃது - (எங்கிருந்து - அர.)*

*4 காற்றைக் கொண்டு – (பா. பி., அர.)*

நாட்டினின்று மித்தென்றல் கொணர்வதோ
நாதமி:. தெ னுயிரையுருக்குதே – (எங்கிருந்து) 4

990. பறவையேது மொன்றுள்ளதுவோ – இங்ஙன்
பாடுமோ அமுதக்கனற்பாட்டு
மறைவினின்றிடுங்[1] கின்னர ராதியர்
வாத்தியத்தி னிலைசிப்பதுவோ - அடி (எங்கிருந்து) 5

991. கண்ணனூதிடும் வேய்ங்குழல்தானடி
காதிலேயமு துள்ளத்தில்நஞ்சு
பண்ணன்றாமடி பாவையர்வாடப்
பாடிவெய்திடும் அம்படிதோழி (எங்கிருந்து) 6

---

(பா-டு) 1 மறைவினின்றுங் - (பா. பி., அர.)

# 78. இறவாமை

## தாயுமானவர் வாழ்த்து[1]

"வானைப் போல வளைந்து கொண்டா னந்தத்
தேனைத் தந்தெனைச் சேர்ந்து கலந்தமெய்ஞ்
ஞானத் தெய்வத்தை நாடுவேன்; நானெனும்
ஈனப் பாழ்கெட என்று மிருப்பனே" -தாயுமானவர்.*

992. என்று மிருக்க வுளங்கொண்டாய்
இன்பத் தமிழுக் கிலக்கியமாய்;
இன்று மிருத்தல் செய்கின்றாய்
இறவாய் தமிழோ டிருப்பாய்நீ;
ஒன்று பொருளஃ தின்பமென
உணர்ந்தாய் தாயு மானவனே!
நின்ற பரத்து மாத்திரமோ?
நில்லா இகத்தும் நிற்பாய்நீ.

---

*1914 பிப்ரவரி (ஞானபானு)*

1 'தாயுமானவர் வாழ்த்து'- (அர.)

* அரசாங்கப் பதிப்பில் இப்பாடல் நீக்கப்பட்டுள்ளது

# 79. வெற்றி

993. எடுத்த காரியம் யாவினும் வெற்றி
எங்கு நோக்கினும் வெற்றிமற் றாங்கே
விடுத்த வாய்மொழிக் கெங்கணும் வெற்றி
வேண்டி னேனுக் கருளினள் காளி
தடுத்து நிற்பது தெய்வத மேனும்
சாரு மானுட[1] மாயினு மஃதைப்
படுத்து மாய்ப்ப ளருட்பெருங் காளி
பாரில் வெற்றி யெனக்குறு மாறே. 1

994. எண்ணு மெண்ணங்கள் யாவினும் வெற்றி
எங்கும வெற்றி யெதனிலும் வெற்றி
கண்ணு மாருயி ரும்மென நின்றாள்
காளித் தாயிங் கெனக்கருள் செய்தாள்
மண்ணுங் காற்றும் புனலு மனலும்
வானும் வந்து வணங்கிநில் லாவோ?
விண்ணு ளோர்பணிந் தேவல்செய் யாரோ
வெல்க காளி பதங்களென் பார்க்கே? 2

.........................................

1914 (மாதாமணிவாசகம்)
(பா-டு): 1 சாருமானுட (அர.)

## 80. அச்சமில்லை

### (பண்டாரப் பாட்டு)

995. அச்சமில்லை யச்சமில்லை
அச்சமென்ப தில்லையே

996. இச்சகத்து ளோரெலாம்
எதிர்த்துநின்ற போதினும்
அச்சமில்லை யச்சமில்லை
அச்சமென்ப தில்லையே!
துச்சமாக வெண்ணிநம்மைத்
தூறுசெய்த போதினும்
அச்சமில்லை யச்சமில்லை
அச்சமென்ப தில்லையே!
பிச்சைவாங்கி யுண்ணும்வாழ்க்கை
பெற்றுவிட்ட போதினும்
அச்சமில்லை யச்சமில்லை
அச்சமென்ப தில்லையே!

---

*1914 (மாதா மணிவாசகம்)*

'அச்சமில்லை அச்சமில்லை அச்சமென்ப தில்லையே' என்பதைப் பல்லவி யாகக் கொண்டமைந்த வழிநடைப் பாட்டு இது. பல்லவியைத் தனியே (அச்சிட்டுள்ளதுபோல்) விடுத்து நோக்கினால், இரண்டு எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தங்கள் இருப்பதை அறியலாம்.

- பதிப்பாசிரியர்

இச்சைகொண்ட பொருளெலா
மிழந்துவிட்ட போதினும்
அச்சமில்லை யச்சமில்லை
அச்சமென்ப தில்லையே! 1

997. கச்சணிந்த கொங்கைமாதர்
கண்கள் வீசுபோதினும்
அச்சமில்லை யச்சமில்லை
அச்சமென்ப தில்லையே!
நச்சைவாயி லேகொணர்ந்து
நண்பரூட்டு போதினும்
அச்சமில்லை யச்சமில்லை
அச்சமென்ப தில்லையே!
பச்சையூ னியைந்தவேற்
படைகள் வந்தபோதினும்
அச்சமில்லை யச்சமில்லை
அச்சமென்ப தில்லையே!
உச்சிமீது வானிடிந்து
வீழுகின்ற போதினும்
அச்சமில்லை யச்சமில்லை
அச்சமென்ப தில்லையே! 2

......................

*பாரதியார் எழுதிய 'பேய்க்கூட்டம் II' என்ற கதையில் பேய்களின்" தலைவன் கூற்றாக வரும் பின்காணும் வாக்கியங்கள் உணரத்தக்கன: "வாப்பா, காளிதாஸா, பயப்படாதே. தரையின்மேல் உட்கார்ந்துகொள். மனதைக் கட்டு, மூச்சை நேராக்கு, ஒன்றும் குடிமுழுகிப் போய்விடவில்லை. நீ செய்த நூல்கள் சில நாம் பார்த்திருக்கிறோம்' 'கடலெதிர்ந்து வந்தால் கலங்கமாட்டோம்; தலைமேல் இடிவிழுந்தால் தளரமாட்டோம்; எங்கும் அஞ்சோம்; யார்க்கு மஞ்சோம்; எதற்கு மஞ்சோம்; எப்போதும் அஞ்சோம்' என்று நீ பாடினதை நான் நேற்று ஒரு புஸ்தகத்தில் பார்த்தேன்."*

*-பதிப்பாசிரியர்*

## 81. ஹே, காளீ!*

998. எண்ணி லாத பொருட்குவை தானும்
ஏற்ற மும்புவி யாட்சியு மாங்கே
விண்ணி லாதவ னேர்த்திடும்[1] ஒளியும்
வெம்மை யும்பெருந் திண்மையு மறிவும்
தண்ணி லாவி னமைதியும் அருளும்
தருவ ளின்றென தன்னையென் காளி
மண்ணி லார்க்குந் துயரின்றிச் செய்வேன்
வறுமை யென்பதை மண்மிசை மாய்ப்பேன். 1

999. தானம் வேள்வி தவங்கல்வி யாவும்
தரணி மீதி னிலைபெறச் செய்வேன்
வான மூன்று மழைதரச் செய்வேன்
மாறி லாத வளங்கள் கொடுப்பேன்
மானம் வீரிய மாண்மைநன் னேர்மை
வண்மை யாவும் வழங்குறச் செய்வேன்
ஞான மோங்கி வளர்ந்திடச் செய்வேன்
நான்வி ரும்பிய காளி தருவாள். 2

---

*1914 (மாதா மணிவாசகம்)*

**'காளி தருவாள்' - (அர.)*

*(பா-டு): 1 விண்ணில் ஆதவன் நேர்ந்திடும் - (அர.)*

# 82. சங்கு

1000. செத்த பிறகு சிவலோகம் வைகுந்தம்
சேர்ந்திட லாமென்றே யெண்ணி யிருப்பார்
பித்த மனித ரவர்சொலுஞ் சாத்திரம்
பேயுரை யாமென்றிங் கூதேடா சங்கம். 1

1001. இத்தரை மீதினி லேயிந்த நாளினில்
இப்பொழு தேமுக்தி சேர்ந்திட நாடிச்
சுத்த அறிவு நிலையிற் களிப்பவர்
தூயவ ராமென்றிங் கூதேடா சங்கம். 2

1002. பொய்யுறு மாயையைப் பொய்யெனக் கொண்டு
புலங்களை[1] வெட்டிப் புறத்தி லெறிந்தே
ஐயுற வின்றிக்[2] களித்திருப் பாரவர்
ஆரிய ராமென்றிங் கூதேடா சங்கம். 3

---

*1914 (மாதா மணிவாசகம்)*

*தத்துவராய சுவாமிகளின் 'பாடுதுறை'யில் வரும் 'காளம்' (128) என்னும் கவிதையுடன் ஒப்புநோக்குக'' - என்ற குறிப்பு அரசாங்க வெளியீட்டில் தரப்பெற்றுள்ளது.*

*நான்கு பாடல்களாகக் கொண்டால் குறள்வெண்செந்துறைகள். இரண்டிரண்டை இணைத்து இரண்டு பாடல்களாகக் கொண்டால் எண்சீர் விருத்தங்கள். பாரதியார் பதிப்பில் நான்கு பாடல்களாக அச்சிடப்பட்டுள்ளன.*

*— பதிப்பாசிரியர்*

*(பா-டு):- 1 புலன்களை - (பா.பி., அர.)*
*2 ஐயுறலின்றிக் - (பா.பி., அர.)*

1003. மையுறு வாள்விழி யாரையும் பொன்னையு
மண்ணெனக் கொண்டு மயக்கற் றிருந்தாரே
செய்யுறு காரியம் தாமன்றிச் செய்வார்
சித்தர்க ளாமென்றிங் கூதேடா சங்கம். 4

## 83. ஸூர்ய தர்சனம்*

*(காலை வேளையில், கடற்கரையில், சூரியன் மேகங்களால் மூடப்பட்டிருக்க, முகம் காட்டும்படி அவனை வேண்டிப் பாடிய பாடல்கள்.)*

பூபாள ராகம்

1004. சுருதி யின்கண் முனிவரும் பின்னே
தூமொ ழிப்புல வோர்பலர் தாமும்
பெரிது நின்றன் பெருமையென் றேத்தும்
பெற்றி கண்டுனை வாழ்த்திட வந்தேன்.
பரிதி யே,பொருள் யாவிற்கு முதலே!
பானுவே! பொன்செய் பேரொளித் திரளே!
கருதி நின்னை வணங்கிட வந்தேன்.
கதிர்கொள் வாண்முகம் காட்டுதி சற்றே. *1*

1005. வேதம் பாடிய சோதியைக் கண்டு
வேள்விப் பாடல்கள் பாடுதற் குற்றேன்.
நாத வார்கட லின்னொலி யோடு
நற்ற மிழ்ச்சொ லிசையையுஞ் சேர்ப்பேன்.

.......................................

*1914 (மாதா மணிவாசகம்)*

* *அரசாங்க வெளியீட்டில் இப்பாடலின் தலைப்பு "ஸூரிய தரிசனம்" என்று காணப்படுகிறது.*

காத மாயிர மோர்கணத் துள்ளே
கடுகி யோடும் கதிரினம் பாடி
ஆத வாநினை வாழ்த்திட வந்தேன்.
அணிகொள் வாண்முகம் காட்டுதி சற்றே. 2

## 84. வெண்ணிலா*

1006. எல்லையில் லாததோர் வானக் கடலிடை
வெண்ணிலாவே, - விழிக்
கின்ப மளிப்பதொர் தீவென் றிலகுவை
வெண்ணிலாவே.
சொல்லையுங் கண்ணையு[1] நெஞ்சையுஞ் சேர்த்திங்கு
வெண்ணிலாவே, - நின்றன்
சோதி மயக்கும் வகையது தானென்சொல்
வெண்ணிலாவே.
நல்ல வொளியின் வகைபல கண்டுளன்[2]
வெண்ணிலாவே,[3]
நனவை மறந்திடச் செய்வது கண்டிலன்
வெண்ணிலாவே.
கொல்லு மமிழ்தை நிகர்த்திடுங் கள்ளொன்று
வெண்ணிலாவே, — வந்து
கூடி யிருக்குது நின்னொளி யோடிங்கு
வெண்ணிலாவே. 1

---

*19.14 (மாதா மணிவாசகம்)*

*வெண்ணிலா என்பது இங்குச் சந்திரனுடைய பிரகாசத்தை யன்று, சந்திரனையே குறிப்பது.*

(பா-டு): 1 *சொல்லையும் கள்ளையும் - (பா.பி., அர.)*
2 *நல்ல வொளியின் வகைபல கண்டிலன் - (பா.பி., அர.)*
3 *வெண்ணிலாவே - (இந்த) - (அர.)*

1007. மாதர் முகத்தை நினக்கிணை கூறுவர்
வெண்ணிலாவே, - அஃது
வயதிற் கவலையி னோவிற் கெடுவது
வெண்ணிலாவே,
காத லொருத்தி யிளைய பிராயத்தள்
வெண்ணிலாவே, - அந்தக்
காமன்றன் வில்லை யிணைத்த புருவத்தள்
வெண்ணிலாவே,
மீதெழு மன்பின் விளைபுன் னகையினள்
வெண்ணிலாவே, - முத்தம்
வேண்டிமுன் காட்டு முகத்தி னெழிலிங்கு
வெண்ணிலாவே,
சாத லழித லிலாது நிரந்தரம்
வெண்ணிலாவே, – நின்
தண்முகந் தன்னில் விளங்குவ தென்னைகொல்?
வெண்ணிலாவே!

1008. நின்னொளி யாகிய பாற்கடல் மீதிங்கு
வெண்ணிலாவே, - நன்கு
நீயு மமுது மெழுந்திடல் கண்டனன்
வெண்ணிலாவே,
மன்னு பொருள்க ளனைத்தினு நிற்பவன்[1]
வெண்ணிலாவே - அந்த
மாயனப் பாற்கடல் மீதுறல் கண்டனன்
வெண்ணிலாவே.
துன்னிய நீல நிறத்தள் பராசக்தி
வெண்ணிலாவே, - இங்கு[2]

---

(பா-டு): 1 மன்னு பொருள்க ளனைத்திலும் நிற்பவன் - (பா.பி., அர.)
2 'இங்குத்' என்றிருத்தல் வேண்டும்.

- பதிப்பாசிரியர்

தோன்று முலகவ னேயென்று கூறுவர்
　　வெண்ணிலாவே,
பின்னிய மேகச் சடைமிசைக் கங்கையும்
　　வெண்ணிலாவே,[1]
பெட்புற நீயும் விளங்குதல் கண்டனன்
　　வெண்ணிலாவே. 3

1009. காதலர் நெஞ்சை வெதுப்புவை நீயென்பர்
　　வெண்ணிலாவே, - நினைக்
காதல்செய் வார்நெஞ்சிற் கின்னமு தாகுவை
　　வெண்ணிலாவே.
சீத மணிநெடு வானக் குளத்திடை
　　வெண்ணிலாவே, - நீ
தேசு மிகுந்தவெண் டாமரை போன்றனை
　　வெண்ணிலாவே,
மோத வருங்கரு மேகத் திரளினை
　　வெண்ணிலாவே, - நீ
முத்தி னொளிதந் தழகுறச் செய்குவை
　　வெண்ணிலாவே,
தீது புரிந்திட வந்திடும் தீயர்க்கும்
　　வெண்ணிலாவே, – நலஞ்
செய்தொளி நல்குவர் மேலவ ராமன்றோ
　　வெண்ணிலாவே. 4

1010. மெல்லிய மேகத் திரைக்குள் மறைந்திடும்
　　வெண்ணிலாவே, - உன்றன்
மேனி யழகு மிகைபடக் காணுது
　　வெண்ணிலாவே.

---

*(பா-டு): 1 வெண்ணிலாவே! - (நல்ல) - (அர.)*

நல்லிய லார்யவ னத்தியர் மேனியை
வெண்ணிலாவே - மூடு
நற்றிரை மேனி நயமிகக் காட்டிடும்
வெண்ணிலாவே,
சொல்லிய வார்த்தையில் நாணுற்றவை போலும்
வெண்ணிலாவே, – நின்
சோதி வதன முழுது மறைத்தனை
வெண்ணிலாவே,
புல்லியன் செய்த பிழைபொறுத் தேயருள்
வெண்ணிலாவே, - இருள்
போகிடச் செய்து நினதெழில் காட்டுதி
வெண்ணிலாவே. 5

# 85. அறிவே தெய்வம்

கண்ணிகள்

1011. ஆயிரந் தெய்வங்க ளுண்டென்று தேடி
யலையு மறிவிலிகாள் — பல்
லாயிரம் வேத மறிவொன்றே தெய்வமுண்
டாமெனல் கேளீரோ! 1

1012. மாடனைக் காடனை வேடனைப் போற்றி
மயங்கு மதியிலிகாள் — எத
னூடுநின் றோங்கு மறிவொன்றே தெய்வமென்
றோதி யறியீரோ? 2

1013. சுத்த அறிவே சிவமென்று கூறுஞ்
சுருதிகள் கேளீரோ? — பல
பித்த மதங்களி லேதடு மாறிப்
பெருமை யழிவீரோ? 3

1014. வேடம்பல் கோடியொ ருண்மைக் குளவென்று
வேதம் புகன்றிடுமே — ஆங்கோர்
வேடத்தை நீருண்மை யென்றுகொள் வீரென்றவ்
வேதம் அறியாதே. 4

.............................................

*1914 (மாதா மணிவாசகம்)*

1015. நாமம்பல் கோடியொ ருண்மைக் குளவென்று
நான்மறை கூறிடுமே ஆங்கோர்
நாமத்தை நீருண்மை யென்றுகொள் வீரென்றந்
நான்மறை கண்டிலதே. 5

1016. போந்த நிலைகள் பலவும் பராசக்தி
பூணு நிலையாமே உப
சாந்த நிலையேவே தாந்த நிலையென்று
சான்றவர் கண்டனரே. 6

1017. கவலை துறந்திங்கு வாழ்வது வீடென்று
காட்டு மறைகளெலாம்[1] நீவிர்
அவலை நினைந்துமி மெல்லுதல் போலிங்
கவங்கள் புரிவீரோ? 7

1018. உள்ள தனைத்திலு முள்ளொளி யாகி
யொளிர்ந்திடு மான்மாவே இங்கு[2]
கொள்ளற் கரிய பிரமமென் றேமறை
கூவுதல் கேளீரோ? 8

1019. மெள்ளப் பலதெய்வம் கூட்டி வளர்த்து
வெறுங்கதை கள்சேர்த்து[3] பல
கள்ள மதங்கள் பரப்புதற் கோர்மறை
காட்டவும் வல்லீரோ? 9

---

(பா–டு): 1 காட்டும் மறைகளெல்லாம் - (அர.)

2 'இங்குக்' என்றிருத்தல் வேண்டும். - பதிப்பாசிரியர்.

3 வெறுங் கதைகள் சேர்த்துப் - (பா.பி., அர.)

1020. ஒன்று பிரம முளதுண்மை யஃதுன்
உணர்வெனும் வேதமெலாம் என்றும்
ஒன்று பிரம முளதுண்மை யஃதுன்
உணர்வெனக் கொள்வாயே. 10

## 86. மஹா சக்தி பஞ்சகம்

1021. கரணமுந் தனுவு நினக்கெனத் தந்தேன்
காளிநீ காத்தருள் செய்யே,
மரணமு மஞ்சேன் நோய்களை யஞ்சேன்
மாரவெம் பேயினை யஞ்சேன்.
இரணமுஞ் சுகமும் பழியுநற் புகழும்
யாவுமோர் பொருளெனக் கொள்ளேன்.
சரணமென் றுனது பதமலர் பணிந்தேன்,
தாயெனைக் காத்தலுன் கடனே.

1022. எண்ணிலாப் பொருளும் எல்லையில் வெளியும்
யாவுமா நின்றனை போற்றி!
மண்ணிலார் வந்து வாழ்த்தினுஞ் செறினும்
மயங்கிலேன்; மனமெனும் பெயர்கொள்
கண்ணிலாப் பேயை யெள்ளுவேன்; இனியெக்
காலுமே யமைதியி லிருப்பேன்;
தண்ணிலா முடியிற் புனைந்துநின் றிலகுந்
தாரினைச்[1] சரண்புகுந் தேனால்.

..........................................

*1914 (மாதா மணிவாசகம்)*

*(பா-டு): 1 தாயுனைச் – (பா.பி., அர.)*

1023. நீசருக் கினிதாந் தனத்தினு மாதர்
நினைப்பினு நெறியிலா மாக்கள்
மாசுறு பொய்ந்நட் பதனிலும் பன்னாள்
மயங்கினேன்; அவையினி மதியேன்.
தேசுறு நீல நிறத்தினாள் அறிவாய்ச்
சிந்தையிற் குலவிடு திறத்தள்,[1]
வீசுறுங் காற்றி னெருப்பினில் வெளியில்
விளங்குவாள் தனைச்சரண் புகுந்தேன். 3

1024. ஐயமுந் திகைப்புந் தொலைந்தன, ஆங்கே
அச்சமுந் தொலைந்தது, சினமும்
பொய்யுமென் றினைய புன்மைக ளெல்லாம்
போயின; வுறுதிநான் கண்டேன்
வையமிங் கனைத்து மாக்கியும் காத்தும்
மாய்த்துமே மகிழ்ந்திடு தாயைத்
துய்யவெண் ணிறத்தாள் தனைக்கரி யவளைத்
துணையெனத் தொடர்ந்து கொண்டே.[2] 4

1025. தவத்தினை யெளிதாப் புரிந்தனன், யோகத்
தனிநிலை யெளிதெனப் புரிந்தான்;
சிவத்தினை யினிதாப் புரிந்தனள்; மூடச்
சித்தமுந் தெளிவுறச் செய்தாள்.
பவத்தினை வெறுப்ப அருளினள் நானாம்
பான்மைகொன் றவண்மயம் புரிந்தாள்.
அவத்தினைக் களைந்தாள்; அறிவென விளைந்தாள்;
அநந்தமா வாழ்கவிங் கவளே! 5

---

(பா-டு): 1 சிந்தையிற் குலவிடு திறத்தாள் - (பா.பி., அர.)
2 துணையெனத் தொடர்ந்தது கொண்டே - (பா.பி., அர.)
(தொடர்ந்து என்றிருப்பின் ஓசை குறையும் - பதிப்பாசிரியர்.)

## 87. மஹா காளியின் புகழ்

காவடிச்சிந்து

ராகம் ஆனந்தபைரவி - ஆதிதாளம்

1026. காலமாம் வனத்திலண்டக் கோலமா மரத்தின்மீது
காளிசக்தி யென்றபெயர் கொண்டு – ரீங்
கார்மிட் டுலவுமொரு வண்டு - தழல்
காலும்வழி நீலவன்ன மூலஅத்து வாக்கனெனும்
கால்களா றுடையதெனக் கண்டு – மறை
காணுமுனி வோருரைத்தார் பண்டு.
மேலுமாகிக் கீழுமாகி வேறுள திசையுமாகி
விண்ணுமண்ணு மானசக்தி வெள்ளம் - இந்த
விந்தையெல்லா மாங்கதுசெய் கள்ளம் – பழ
வேதமா யதன்முனுள்ள நாதமாய் விளங்குமிந்த
வீரசக்தி வெள்ளம்விழும் பள்ளம் - ஆக
வேண்டுநித்த மென்றனேழை யுள்ளம். 1

1027. அன்புவடி வாகிநிற்பள் துன்பெலா மவளிழைப்பள்
ஆக்கநீக்கம் யாவுமவள் செய்கை – இதை
ஆர்ந்துணர்ந்த வர்களுக்குண் டுய்கை – அவள்
ஆதியா யநாதியா யகண்டவறி வாவளுன்றன்

.........................................

*1914 (மாதா மணிவாசகம்)*

அறிவுமவள் மேனியிலோர் சைகை - அவள்
ஆனந்தத்தி னெல்லையற்ற பொய்கை
இன்புவடி வாகிநிற்பள்[1] துன்பெலா மவளிழைப்பள்
இஃதெலா மவள்புரியு மாயை – அவள்
ஏதுமற்ற மெய்ப்பொருளின் சாயை - எனில்
எண்ணியேஓம் சக்தியெனும் புண்ணிய முனிவர்நித்த
மெய்துவார்மெய்ஞ் ஞானமெனுந் தீயை - எரித்
தெற்றுவாரிந் நானெனும்பொய்ப் பேயை. 2

1028. ஆதியாஞ் சிவனுமவன் சோதியான சத்தியுந்தான்[2]
அங்குமிங்கு மெங்குமுள வாகும் – ஒன்றே
யாகினா லுலகனைத்தும் சாகும் – அவை
யன்றியோர் பொருளுமில்லை, அன்றியொன்று
மில்லையிதை[3]
ஆய்ந்திடில்து யரமெல்லாம் போகும் - இந்த
அறிவுதான் பரமஞான மாகும்.
நீதியா மரகுசெய்வார்[4] நிதிகள்பல கோடிதுய்ப்பர்
நீண்டகாலம் வாழ்வர் தரைமீது - எந்த
நெறியுமெய்து வார்[5]நினைத்த போது - அந்த
நித்தபுத்த சுத்தசத்த பெருங் காளி பத[6]

---

(பா-டு): 1 இன்பவடிவாகி நிற்பள் - (பா.பி., அர.)
2 ஆதியாஞ் சிவனுமவன் சோதியான சக்தியுந்தான் - (அர.)
3 யன்றியோர் பொருளுமில்லை அன்றி யொன்று மில்லை - (அர.)
4 நீதியா மரசுசெய்வர் - (பா.பி., அர.)
5 நெறியுமெய்து வர் - (பா.பி., அர.)
6 நித்தமுத்த சுத்தபுத்த சத்தபெருங் காளிபத - (பா.பி., அர.)
இந்தப் பாடமே ஏற்கத்தக்கதெனத் தோன்றுகிறது.

நீழலடைந் தார்க்கில்லையோர் தீது[1] - என்று
நேர்மை வேதஞ் சொல்லும்வழி யீது[2].

(பா-டு): 1 'நீழலடைந் தார்க்கிலையோர் தீது' என்றிருந்தால் ஓசைப் பொருத்தம் சிறக்கிறது

- பதிப்பாசிரியர்

2 மூன்று பாடல்களிலும் நான்காம் அடியில் எதுகை மாற்றம் காண்க.

- பதிப்பாசிரியர்

## 88. மஹா சக்தி வாழ்த்து

**1029.** விண்டு ரைக்க, அறிய, அரியதாய்
விரிந்த வான வெளியென நின்றனை.
அண்ட கோடிகள் வானி லமைத்தனை
அவற்றிலெண் ணற்ற வேகஞ் சமைத்தனை.
மண்ட லத்தை யணுவணு வாக்கினால்
வருவ தெத்தனை யத்தனை யோசனை
கொண்ட தூர மவற்றிடை வைத்தனை,
கோலமே நினைக் காளியென் றேத்துவேன். 1

**1030.** நாடு காக்கு மரசன் றனையந்த
நாட்டு ளோரர சென்றறிவார், எனிற்
பாடு தண்டைக் குழந்தை, தனக்கிதம்
பண்ணு மப்ப னிவனென் றறிந்திடும்.
கோடி யண்ட மியக்கி யளிக்குநின்
கோல மேழை குறித்திட லாகுமோ?
நாடி யிச்சிறு பூமியிற் காணுநின்
நலங்க ளேத்திட நல்லருள் செய்கவே. 2

**1031.** பரிதி யென்னும் பொருளிடை யேய்ந்தனை.
பரவும் வெய்ய கதிரெனக் காய்ந்தனை.

..........................................

*1914 (மாதா மணிவாசகம்)*

கரிய மேகத் திரளெனச் செல்லுவை.
காலு மின்னென வந்துயிர் கொல்லுவை.
சொரியு நீரெனப் பல்லுயிர் போற்றுவை.
சூழும் வெள்ள மெனவுயிர் மாற்றுவை.
விரியு நீள்கட லென்ன நிறைந்தனை,
வெல்க, காளி யெனதம்மை வெல்கவே! 3

1032. வாயு வாகி வெளியை யளந்தனை.
வாழ்வெ தற்கு முயிர்நிலை யாயினை.
தேயு வாகி யொளியருள் செய்குவை
செத்த வற்றைக் கருப்பொரு ளாக்குவை,
பாயு மாயிரஞ் சத்திக ளாகியே
பாரி லுள்ள தொழில்க ளியற்றுவை, -
சாயும் பல்லுயிர் கொல்லுவை, நிற்பன
தம்மைக் காத்துச் சுகம்பல நல்குவை. 4

1033. நிலத்தின் கீழ்ப்பல்[1] லுலோகங்க ளாயினை.
நீரின் கீழெண் ணிலாநிதி வைத்தனை.
தலத்தின் மீது மலையு நதிகளுஞ்
சாருங் காடுஞ் சுனைகளு மாயினை,
குலத்தி லெண்ணற்ற பூண்டு பயிரினம்
கூட்டி வைத்துப் பலநலந் துய்த்தனை.
புலத்தை யிட்டிங் குயிர்கள்செய் தாயன்னே!
போற்றி, போற்றி, நினதருள் போற்றியே! 5

1034. சித்த சாகரஞ் செய்தனை, யாங்கதிற்
செய்த கர்மப் பயனெனப் பல்கினை,
தத்து கின்ற திரையுஞ் சுழிகளும்
தாக்கி யெற்றிடுங் காற்றுமுள் ளோட்டமுஞ்

---

(பா-டு): 1 நிலத்தின் கீழ்பல் (பா.பி., அர.)

சுத்த மோனப் பகுதியும் வெண்பனி
சூழ்ந்த பாகமுஞ் சுட்டவெந் நீருமென்
றொத்த நீர்க்கடல் போலப் பலவகை
யுள்ள மென்னுங் கடலி லமைத்தனை. 6

# 89. சரஸ்வதி தேவியின் புகழ்*

ஆனந்தபைரவி – ராகம் சாப்பு – தாளம்

1035. வெள்ளைத் தாமரைப் பூவி லிருப்பாள்
வீணை செய்யு மொலியி லிருப்பாள்;
கொள்ளை யின்பங் குலவு கவிதை
கூறுபாவல ருள்ளத் திருப்பாள்;
உள்ள தாம்பொருள் தேடி யுணர்ந்தே
யோதும் வேதத்தி னுண்ணின் றொளிர்வாள்;
கள்ள மற்ற முனிவர்கள் கூறும்
கருணை வாசகத் துட்பொரு ளாவாள். (வெள்ளைத்) 1

1036. மாதர் தீங்குரற் பாட்டி லிருப்பாள்;
மக்கள் பேசு மழலையி லுள்ளாள்;
கீதம் பாடும் குயிலின் குரலைக்
கிளியி னாவை யிருப்பிடங் கொண்டாள்;
கோத கன்ற தொழிலுடைத் தாகிக்
குலவு சித்திரம், கோபுரம், கோயில்
ஈத னைத்தி னெழிலிடை யுற்றாள்;
இன்ப மேவடி வாகிடப் பெற்றாள். (வெள்ளைத்) 2

---

*1914 (மாதா மணிவாசகம்)*

* *'வெள்ளைத் தாமரை' - (அர.)*

1037. வஞ்ச மற்ற தொழில்புரிந் துண்டு
வாழு மாந்தர் குலதெய்வ மாவாள்;
வெஞ்ச மர்க்குயி ராகிய கொல்லர்,
வித்தை யோர்ந்திடு சிற்பியர், தச்சர்,
மிஞ்ச நற்பொருள் வாணிகஞ் செய்வோர்,
வீர மன்னர்பின் வேதியர், யாரும்
தஞ்ச மென்று வணங்கிடுந் தெய்வம்
தரணி மீதறி வாகிய தெய்வம். (வெள்ளைத்) *3*

1038. தெய்வம் யாவு முணர்த்திடுந் தெய்வம்[1];
தீமை காட்டி விலக்கிடுந் தெய்வம்;
உய்வ மென்ற கருத்துடை யோர்கள்
உயிரி னுக்குயி ராகிய தெய்வம்;
செய்வ மென்றொரு செய்கை யெடுப்போர்
செம்மை நாடிப் பணிந்திடு தெய்வம்;
கைவ ருந்தி யுழைப்பவர் தெய்வம்;
கவிஞர் தெய்வம், கடவுளர் தெய்வம். (வெள்ளைத்) *4*

1039. செந்த மிழ்மணி நாட்டிடை யுள்ளீர்!
சேர்ந்தித் தேவை வணங்குவம் வாரீர்!
வந்த னம்மிவட் கேசெய்வ தென்றால்
வாழி யஃதிங் கெளிதன்று, கண்டீர்.
மந்தி ரத்தை முணுமுணுத் தேட்டை
வரிசை யாக அடுக்கி யதன்மேல்
சந்த னத்தை மலரை யிடுவோர்
சாத்தி ரம்மிவள் பூசனை யன்றாம். (வெள்ளைத்) *5*

1040. வீடு தோறுங் கலையின் விளக்கம்,
வீதி தோறு மிரண்டொரு பள்ளி,

---

*(பா-டு): 1 தெய்வம் யாவும் உணர்ந்திடுந் தெய்வம் - (பா.ஆ., பா.பி., அர.)*

நாடு முற்றிலு முள்ளன வூர்கள்
நகர்க ளெங்கும் பலபல பள்ளி,
தேடு கல்வியி லாததொ ரூரைத்
தீயினுக் கிரையாக மடுத்தல்
கேடு தீர்க்கு மமுதமெ னன்னை
கேண்மை கொள்ள வழியிவை கண்டீர்.
(வெள்ளைத்) 6

1041. ஊணர் தேசம், யவனர்தந் தேசம்,
உதய ஞாயிற் றொளிபெறு நாடு,
சேண கன்றதோர் சிற்றடிச் சீனம்,
செல்வப் பார சிகப்பழந் தேசம்,
தோண லத்த துருக்க, மிசிரம்,
சூழ்க டற்கப் புறத்தினி லின்னும்
காணும் பற்பல நாட்டிடை யெல்லாம்
கல்வித் தேவி னொளிமிகுத் தோங்க[1]
(வெள்ளைத்) 7

1042. ஞான மென்பதோர் சொல்லின் பொருளாம்
நல்ல பாரத நாட்டிடை வந்தீர்!
ஊன மின்று பெரிதிழைக் கின்றீர்;
ஓங்கு கல்வி யுழைப்பை மறந்தீர்,
மான மற்று விலங்குக ளொப்ப
மண்ணில் வாழ்வதை வாழ்வென லாமோ?
போன தற்கு வருந்துதல் வேண்டா;
புன்மை தீர்ப்ப முயலுவம் வாரீர்! (வெள்ளைத்) 8

(பா-டு): 1 கல்வித் தேவி னொளி மிகுந்தோங்க - (பா.பி., அர.)

1043. இன்ன றுங்கனிச் சோலைகள் செய்தல்,
இனிய நீர்த்தண் சுனைக ளியற்றல்,
அன்ன சத்திர மாயிரம் வைத்தல்,
ஆல யம்பதி னாயிர நாட்டல்,
பின்ன ருள்ள தருமங்கள் யாவும்
பெயர்வி ளங்கி யொளிர நிறுத்தல்;
அன்ன யாவினும் புண்ணியங் கோடி
ஆங்கோ ரேழைக் கெழுத்தறி வித்தல். (வெள்ளைத்) *9*

1044. நிதிமி குத்தவர் பொற்குவை தாரீர்!
நிதிகு றைந்தவர் காசுகள் தாரீர்!
அதுவு மற்றவர் வாய்ச்சொ லருளீர்!
ஆண்மை யாள ருழைப்பினை நல்கீர்!
மதுரத் தேமொழி மாதர்க ளெல்லாம்
வாணி பூசைக் குரியன பேசீர்!
எதுவு நல்கியிங் கெவ்வகை யானும்
இப்பெ ருந்தொழில் நாட்டுதும் வாரீர்[1] (வெள்ளைத்) *10*

---

*(பா-பு):* 1 இப்பெருந் தொழில் நாட்டுவம் வாரீர். - *(பா. ஆ., பா. பி., அர.)*

# 90. பரசிவ வெள்ளம்

**1045.** உள்ளும் புறமுமா
  யுள்ளதெலாந் தானாகும்
வெள்ளமொன்றுண் டாமதனை[1]
  தெய்வமென்பார் வேதியரே. 1

**1046.** காணுவன நெஞ்சிற்
  கருதுவன, உட்கருத்தைப்
பேணுவன, யாவும்
  பிறப்பதந்த வெள்ளத்தே. 2

**1047.** எல்லை,பிரி வற்றதுவாய்,
  யாதெனுமோர் பற்றிலதாய்
இல்லையுள தென்றறிஞ
  ரென்றுமய லெய்துவதாய், 3

**1048.** வெட்டவெளி யாயறிவாய்,
  வேறுபல சத்திகளைக்[2]
கொட்டுமுகி லாயணுக்கள்
  கூட்டிப் பிரிப்பதுவாய், 4

---

*1914 (மாதா மணிவாசகம்)*

*(பா-டு): 1 வெள்ள மொன்றுண் டாமதனைந் - (பா.பி., அர.)*
*தகரம் மிக்கதாகவுள்ள இப்பாடமே சரியானது.*
*- பதிப்பாசிரியர்*

*2 வேறுபல சக்திகளைக் - (பா.ஆ., பா.பி., அர.)*

1049. தூல வணுக்களாய்ச்
சூக்குமமாய்ச், சூக்குமத்திற்
சாலவுமே நுண்ணியதாய்த்
தன்மையெலாந் தானாகி, 5

1050. தன்மையொன்றி லாததுவாய்த்
தானே யொருபொருளாய்த்
தன்மை பலவுடைத்தாய்த்
தான்பலவாய் நிற்பதுவே. 6

1051. எங்குமுளான், யாவும்வலான்,
யாவுமறி வானெனவே
தங்கு பலமதத்தோர்
சாற்றுவது மிங்கிதையே. 7

1052. வேண்டுவோர் வேட்கையாய்,
வேட்பாராய், வேட்பாருக்
கீண்டுபொரு ளாயதனை
யீட்டுவதாய் நிற்குமிதே. 8

1053. காண்பார்தங் காட்சியாய்க்
காண்பாராய்க் காண்பொருளாய்
மாண்பார்ந் திருக்கும்
வகுத்துரைக்க வொண்ணாதே. 9

1054. எல்லாந்தா னாகி
யிருந்திடினு மிஃதறிய
வல்லார் சிலரென்பர்
வாய்மையெலாங்[1] கண்டவரே. 10

---

(பா-டு): 1 வாய்மையெல்லாங் - (பா.பி., அர)

1055. மற்றிதனைக் கண்டார்
மலமற்றார் துன்பமற்றார்;
பற்றிதனைக் கொண்டார்
பயனனைத்துங் கண்டாரே. 11

1056. இப்பொருளைக் கண்டா
ரிடருக்கோ ரெல்லைகண்டார்;
எப்பொருளுந் தாம்பெற்றிங்
கின்பநிலை யெய்துவரே. 12

1057. வேண்டுவ வெலாம்பெறுவார்,
வேண்டா ரெதனையுமற்
றீண்டுபுவி யோரவரை
யீசரெனப் போற்றுவரே. 13

1058. ஒன்றுமே வேண்டா
துலகனைத்தும் ஆளுவர்காண்
என்றுமே யிப்பொருளோ
டேகாந்தத் துள்ளவரே. 14

1059. வெள்ளமடா தம்பி
விரும்பியபோ தெய்திநின
துள்ளமிசைத் தானமுத
வூற்றாய்ப் பொழியுமடா. 15

1060. யாண்டுமிந்த இன்பவெள்ளம்
என்றுநின்னுள் வீழ்வதற்கே
வேண்டு முபாய
மிகவுமெளி தாகுமடா. 16

1061. எண்ணமிட்டா லேபோது
மெண்ணுவதே யிவ்வின்பத்
தண்ணமுதை யுள்ளே
ததும்பப் புரியுமடா. 17

1062. எங்கு நிறைந்ததிந்த[1]
ஈசவெள்ள மென்னகத்தே
பொங்குகின்ற தென்றெண்ணிப்
போற்றிநின்றாற் போதுமடா. 18

1063. யாதுமா மீசவெள்ள
மென்னுள் நிரம்பியதென்
றோதுவதே போதுமதை
யுள்ளுவதே போதுமடா. 19

1064. காவித் துணிவேண்டா,
கற்றைச் சடைவேண்டா,
பாவித்தல் போதும்
பரமநிலை யெய்துதற்கே. 20

1065. சாத்திரங்கள் வேண்டா,
சதுமறைக ளேதுமில்லை
தோத்திரங்க ளில்லையுளந்
தொட்டுநின்றாற் போதுமடா. 21

1066. தவமொன்று மில்லையொரு
சாதனையு மில்லையடா;
சிவமொன்றே யுள்ளதெனச்
சிந்தைசெய்தாற் போதுமடா. 22

---

*(பா-டு): 1 எங்கு நிறைந்திருந்த - (பா.பி., அர.)*

1067. சந்ததமு மெங்குமெல்லாந்
தானாகி நின்றசிவம்
வந்தெனுளே பாயுதென்று
வாய்சொன்னாற் போதுமடா. 23

1068. நித்தசிவ வெள்ளமென்னுள்
வீழ்ந்து நிரம்புதென்றுன்
சித்தமிசைக் கொள்ளுஞ்
சிரத்தையொன்றே போதுமடா. 24

## 91. குயில்

1069. காலை யிளம்பரிதி வீசுங் கதிர்களிலே
நீலக் கடலோர் நெருப்பெதிரே சேர்மணிபோல் 1

1070. மோகனமாஞ் சோதி பொருந்தி முறைதவறா
வேகத் திரைகளினால் வேதப் பொருள்பாடி 2

1071. வந்து தழுவும் வளஞ்சார் கரையுடைய
செந்தமிழ்த் தென்புதுவை யென்னுந் திருநகரின் 3

1072. மேற்கே சிறுதொலையில் மேவுமொரு மாஞ்சோலை;
நாற்கோணத் துள்ளபல நத்தத்து வேடர்களும் 4

1073. வந்து பறவைசுட வாய்ந்த பெருஞ்சோலை;–
அந்தமாஞ் சோலை யதனிலோர் காலையிலே, 5

1074. வேடர் வராத விருந்துத் திருநாளில்,
பேடைக் குயிலொன்று பெட்புறவோர் வான்கிளையில் 6

1075. வீற்றிருந்தே யாண்குயில்கள் மேனி புளகமுற,
ஆற்ற லழிவுபெற, உள்ளத் தனல்பெருக, 7

1076. சோலைப் பறவை யெலாஞ் சூழ்ந்து பரவசமாய்க்
காலைக் கடனிற் கருத்தின்றிக் கேட்டிருக்க, 8

1077. இன்னமுதைக் காற்றினிடை யெங்குங் கலந்ததுபோல்
மின்னற் சுவைதான் மெலிதாய், மிகவினிதாய் 9

1078. வந்து பரவுதல்போல் வானத்து மோகினியாள்
இந்தவுரு வெய்தித்தன் னேற்றம் விளக்குதல்போல் 10

1079. இன்னிசைத்தீம் பாட லிசைத்திருக்கும் விந்தைதனை—
முன்னிக் கவிதைவெறி மூண்டே நனவழியப் 11

1080. பட்டப் பகலிலே பாவலர்க்குத் தோன்றுவதாம்
நெட்டைக் கனவி னிகழ்ச்சியிலே - கண்டேன்யான். 12

1081. கன்னிக் குயிலன்று காவிடத்தே பாடியதோர்
இன்னிசைப் பாட்டினிலே யானும் பரவசமாய், 13

1082. "மனிதவுரு நீங்கிக் குயிலுருவம் வாராதோ?
இனிதிக் குயிற்பேட்டை யென்றும் பிரியாமல் 14

1083. காதலித்துக் கூடிக் களியுடனே வாழோமோ?
நாதக் கனலிலே[1] நம்முயிரைப் போக்கோமோ?" 15

1084. என்று பலவெண்ணி யேக்கமுறப் பாடிற்றால்.
அன்றுநான் கேட்ட தமரர்தாங் கேட்பாரோ? 16

1085. குக்குக்கு வென்று குயில்பாடும் பாட்டினிலே
தொக்க பொருளெல்லாந் தோன்றியதென் சிந்தைக்கே. 17

1086. அந்தப் பொருளை யவனிக் குரைத்திடுவேன்
விந்தைக் குரலுக்கு, மேதினியீர், என் செய்கேன்? 18

---

*1914–1915*
*(பா-டு): 1 நாதக் கனலினிலே - (பா. பி.)*

## குயிலின் பாட்டு

சங்கராபரணம்

ஸ்வரம்:- ஸகா - ரிமா - காரீ
பாபா பாபா - மாமா மாமா
ரீகா - ரிகமா - மாமா

(சந்த பேதங்களுக்குத் தக்கபடி மாற்றிக் கொள்க.)

தாளம் - ஏக தாளம்

1087. காதல் காதல் காதல்,
காதல் போயிற் காதல் போயிற்
சாதல் சாதல் சாதல். (காதல்) 19

1088. அருளே யாநல் லொளியே,
ஒளிபோ மாயின், ஒளிபோ மாயின்
இருளே, யிருளே, யிருளே. (காதல்) 20

1089. இன்பம், இன்பம், இன்பம்,
இன்பத் திற்கோ ரெல்லை காணில்
துன்பம், துன்பம், துன்பம். (காதல்) 21

1090. நாதம், நாதம், நாதம்,
நாதத் தேயோர் நலிவுண் டாயிற்
சேதம், சேதம், சேதம், (காதல்) 22

1091. தாளம், தாளம், தாளம்,
தாளத் திற்கோ தடையுண் டாயில்
கூளம், கூளம், கூளம். (காதல்) 23

1092. பண்ணே, பண்ணே, பண்ணே,
பண்ணிற் கேயோர் பழுதுண் டாயின்
மண்ணே, மண்ணே, மண்ணே. (காதல்) 24

1093. புகழே, புகழே, புகழே,
புகழுக் கேயோர் புரையுண் டாயின்
இகழே, இகழே, இகழே. (காதல்) 25

1094. உறுதி, உறுதி, உறுதி,
உறுதிக் கேயோர் உடைவுண் டாயின்
இறுதி, இறுதி, இறுதி. (காதல்) 26

1095. கூடல், கூடல், கூடல்,
கூடிப் பின்னே குமரன் போயில்
வாடல், வாடல், வாடல். (காதல்) 27

1096. குழலே, குழலே, குழலே,
குழலிற் கீறல் கூடுங் காலை
விழலே, விழலே, விழலே. (காதல்) 28

1097. மோகனப் பாட்டு முடிவுபெறப் பாரெங்கும்*
ஏக மவுன மியன்றதுகாண், மற்றதிலோர் 29

1098. இன்ப வெறியுந் துயரும் இணைந்தனவால்,
பின்புநான் பார்க்கப் பெடைக்குயிலஃ தொன்றல்லால், 30

1099. மற்றைப் பறவை மறைந்தெங்கோ போகவுமிவ்
வொற்றைக் குயில்சோக முற்றுத் தலைகுனிந்து 31

---

* 'மோகனப்பாட்டு. ......'' என்ற கண்ணிக்குமுன் 'குயிலின காதற் கதை' என்ற தலைப்புப் பிற்காலப் பதிப்புக்களில் உள்ளது.

1100. வாடுவது கண்டேன், மரத்தருகே போய்நின்று
"பேடே, திரவியமே, பேரின்பப் பாட்டுடையாய், 32

1101. ஏழுலகு மின்பத்தீ யேற்றுந் திறனுடையாய்,
பீழையுனக் கெய்தியதேன்?[1] பேசாய், "எனக் கேட்டேன். 33

1102. மாயக் குயிலதுதான் மானுடவர் பேச்சினிலோர்
மாயச்சொல் கூற மனந்தீ யுறநின்றேன். 34

1103. "காதலை வேண்டிக் கரைகின்றேன், இல்லையெனில்
சாதலை வேண்டித் தவிக்கின்றேன்" என்றதுவால். 35

1104. "வானத்துப் புள்ளெல்லா மையலுறப் பாடுகிறாய்,
ஞானத்திற் புட்களிலு நன்கு சிறந்துள்ளாய். 36

1105. காதலர்நீ யெய்துகிலாக் காரணந்தான் யாதெ"ன்றேன்.
வேதனையு நாணு மிகுந்த குரலினிலே, 37

1106. கானக் குயிலிக் கதைசொல்ல லாயிற்று:-

## குயிலின் காதற் கதை

"மானக் குலைவும் வருந்தமுநான் பார்க்காமல், 38

1107. உண்மை முழுதும் உரைத்திடுவேன், மேற்குலத்தீர்,
பெண்மைக் கிரங்கிப் பிழைபொறுத்தல் கேட்கின்றேன். 39

1108. அறிவும் வடிவுங் குறுகி யவனியிலே
சிறியதொரு புள்ளாய்ச் சிறியேன் பிறந்திடினும் 40

1109. தேவர் கருணையிலோ, தெய்வச் சினத்தாலோ,
யாவர் மொழியும் எளிதுணரும் பேறுபெற்றேன். 41

---

1 பீழையுனக் கெய்தியதென் - (அர.)

1110. மானுடவர் நெஞ்ச வழக்கெல்லாந் தேர்ந்திட்டேன்.
கானப் பறவை கலகலெனு மோசையிலும்; 42

1111. காற்று மரங்களிடைக் காட்டு மிசைகளிலும்,
ஆற்றுநீ ரோசை, அருவி யொலியினிலும், 43

1112. நீலப் பெருங்கடலெந் நேரமுமே தானிசைக்கும்
ஓலத் திடையே யுதிக்கு மிசையினிலும், 44

1113. மானுடப் பெண்கள் வளருமொரு காதலினால்
ஊனுருகப் பாடுவதி லூறிடுந்தேன் வாரியிலும், 45

1114. ஏற்றநீர்ப் பாட்டி னிசையினிலும், நெல்லிடிக்குங்
கோற்றொடியார் குக்குவெனக் கொஞ்சு மொலியினிலும், 46

1115. சுண்ண மிடிப்பார்தஞ் சுவைமிகுந்த பண்களிலும்,
பண்ணை மடவார் பழகுபல பாட்டினிலும், 47

1116. வட்டமிட்டுப் பெண்கள் வளைக்கரங்கள் தாமொலிக்கக்
கொட்டி யிசைத்திடுமோர் கூட்டமுதப் பாட்டினிலும், 48

1117. வேயின் குழலோடு வீணைமுத லாமனிதர்
வாயினிலுங் கையாலும் வாசிக்கும் பல்கருவி 49

1118. நாட்டினிலுங் காட்டினிலும் நாளெல்லாம் நன்றொலிக்கும்
பாட்டினிலும், நெஞ்சைப் பறிகொடுத்தேன் பாவியேன். 50

1119. நாவு மொழிய நடுக்கமுறும் வார்த்தைகளைப்
பாவிமனந் தானிறுகப் பற்றிநிற்ப தென்னேயோ? 51

1120. நெஞ்சத்தே தைக்க நெடுநோக்கு நோக்கிடுவீர்,
மஞ்சரே, என்றன் மனநிகழ்ச்சி காணீரோ? 52

1121. காதலை வேண்டிக் கரைகின்றேன், இல்லையெனில்
சாதலை வேண்டித் தவிக்கின்றேன்'' என்றதுவே. 53

1122. சின்னக் குயிலிதனைச் செப்பியவப் போழ்தினிலே
என்னைப் புதியதோர் இன்பச் சுரங்கவர, 54

1123. உள்ளத் திடையு முயிரிடையு மாங்கந்தப்
பிள்ளைக் குயிலினதோர் பேச்சன்றி வேறற்றேன்; 55

1124. காதலோ காதலினிக் காதல் கிடைத்திலதேல்
சாதலோ சாதலெனச் சாற்றுமொரு பல்லவியென் 56

1125. உள்ளமாம் வீணைதனில் உள்ளவீ டத்தனையும்
விள்ள வொலிப்பதலால் வேறோ ரொலியில்லை. 57

1126. சித்த மயங்கித் திகைப்பொடுநா னின்றிடவும்
அத்தருணத் தேபறவை யத்தனையுந் தாந்திரும்பிச் 58

1127. சோலைக் கிளையிலெலாந் தோன்றி யொலித்தனவால்.
நீலக் குயிலு நெடிதுயிர்த்தாங் கி∴துரைக்கும்:- 59

1128. "காதல் வழிதான் கரடுமுர டாமென்பர்.
சோதித் திருவிழியீர், துன்பக் கடலினிலே 60

1129. நல்லுறுதி கொண்டதோர் நாவாய்போல் வந்திட்டீர்;
அல்லற நும்மோ டளவளாய் நான்பெறுமிவ் 61

1130. வின்பத் தினுக்கும் இடையூறு மூண்டதுவே!
அன்பொடுநீ ரிங்கே யடுத்தநாள் காலையினில் 62

1131. வந்தருளல் வேண்டும் மறவாதீர், மேற்குலத்தீர்,
சிந்தை பறிகொண்டு செல்கின்றீர்; வாரீரேல், 63

1132. ஆவி தரியேன், அறிந்திடுவீர்; நான்காநாள்
பாவியிந்த நான்குநாள் பத்துயுக மாக்கழிப்பேன். 64

1133. சென்றுவரு வீரென் சிந்தைகொடு போகின்றீர்,
சென்று வருவீ" ரெனத்தேறாப் பெருந்துயரங் 65

1134. கொண்டு சிறுகுயிலுங் கூறி மறைந்ததுகாண்.

## காதலோ காதல்

கண்டதொரு காட்சி கனவுநன வென்றறியேன், 66

1135. எண்ணுதலுஞ் செய்யேன், இருபதுபேய் கொண்டவன்போல்
கண்ணு முகமுங் களியேறிக் காமனார் 67

1136. அம்பு நுனிக ளகத்தே யமிழ்ந்திருக்கக்[1]
கொம்புக் குயிலுருவங் கோடி பல கோடியாய், 68

1137. ஒன்றே யதுவாய், உலகமெலாந் தோற்றமுறச்[2]
சென்றே மனைபோந்து சிந்தந் தனதின்றி 69

1138. நாளொன்று போவதற்கு நான்பட்ட பாடனைத்தும்
தாளம் படுமோ? தறிபடுமோ? யார்படுவார்? 70

1139. *(சாமி படுமோ? தமிழ்ப்பாட்டுத் தான்படுமோ?
காமி ... த்தீயைக் கவிதா னுரைத்திடுமோ?) 71

........................................

(பா-டு): 1 அம்புநுனிகளத்தே யமிழ்ந்திருக்க, (பா.பி , 1937, அர.)

2 ஒன்றே யதுவாய் உலகமெலாந் தோற்றமுற, (பா.பி., 1937, அர.)

* 'சாமி படுமோ' என்று தொடங்கும் கண்ணி கைப்பிரதியில் பாரதியார் அடிக்கப்பட்டுள்ளது.

—பதிப்பாசிரியர்

1140. நாளொன்று போயினது, நானு மெனதுயிரும்,
நீளச் சிலைகொண்டு நின்றதொரு மன்மதனும், 72

1141. மாயக் குயிலுமதன் மாமாயத் தீம்பாட்டும்,
சாயைபோ லிந்திரமா சாலம்போல் வையமுமா 73

1142. மிஞ்சிநின்றோம். ஆங்கு, மறுநாள் விடிந்தவுடன்,
வஞ்சனைநான் கூறவில்லை மன்மதனார் விந்தையால் 74

1143. புத்தி மனஞ்சித்தம் புலனொன் றறியாமல்,
வித்தைசெயுஞ் சூத்திரத்தின் மேவுமொரு பொம்மை
யெனக் 75

1144. காலிரண்டுங் கொண்டு கடுகவுநான் சோலையிலே
நீலிதனைக் காணவந்தேன், நீண்ட வழியினிலே 76

1145. நின்றபொருள் கண்ட நினைவில்லை, சோலையிடைச்
சென்றுநான் பார்க்கையிலே செஞ்ஞாயிற் றொண்கதிரால் 77

1146. பச்சைமர மெல்லாம் பளபளென, என்னுளத்தின்
இச்சை யுணர்ந்தனபோல் ஈண்டும் பறவையெலாம் 78

1147. வேறெங்கோ போயிருப்ப, வெம்மைக் கொடுங்காதல்
மீறவெனைத் தான்புரிந்த விந்தைச் சிறுகுயிலைக் 79

1148. காணநான் வேண்டிக் கரைகடந்த வேட்கையுடன்
கோணமெலாஞ் சுற்றிமரக் கொம்பையெலா
நோக்கிவந்தேன். 80

## குயிலும் குரங்கும்

1149. மற்றைநாட் கண்ட மரத்தே குயிலில்லை.
சுற்றுமுற்றும் பார்த்துத் துடித்து வருகையிலே, 81

1150. வஞ்சனையே! பெண்மையே! மன்மதனாம் பொய்த்தேவே!
நெஞ்சகமே! தொல்விதியி னீதியே! பாழுலகே! 82

1151. கண்ணாலே நான்கண்ட காட்சிதனை யென்னுரைப்பேன்!
பெண்ணா லறிவிழக்கும் பித்தரெலாங் கேண்மினோ! 83

1152. காதலினைப் போற்றுங் கவிஞரெலாங் கேண்மினோ!
மாதரெலாங் கேண்மினோ! வல்விதியே கேளாய்நீ! 84

1153. மாயக் குயிலோர் மரக்கிளையில் வீற்றிருந்தே,
பாயும் விழிநீர், பதைக்குஞ் சிறியவுடல், 85

1154. விம்மிப் பரிந்துசொலும் வெந்துயர்ச்சொல் கொண்டதுவாய்,
அம்மவோ! மற்றாங்கோ ராண்குரங்கு தன்னுடனே 86

1155. ஏதேதோ கூறி யிரங்கு நிலைகண்டேன்.
தீதேது? நன்றேது? செய்கைத் தெளிவேது? 87

1156. அந்தக் கணமே யதையுங் குரங்கினையும்
சிந்தக் கருதி யுடைவாளிற் கைசேர்த்தேன். 88

குயில் குரங்கினிடம் சொல்லிய காதற்கதை*

1157. கொன்றுவிடு முன்னே, குயிலுரைக்கும் வார்த்தைகளை
நின்றுசற்றே கேட்பதற்கென் நெஞ்சம் விரும்பிடவும் 89

1158. ஆங்கவற்றின் கண்ணில் அகப்படா வாறருகே
ஓங்கு மரத்தின்பால் ஒளிந்துநின்று கேட்கையிலே, 90

1159. பேடைக் குயிலிதனைப் பேசியது:- "வானரரே,
ஈடறியா மேன்மையழ கேய்ந்தவரே, பெண்மைதான் 91

---

* தற்காலப் பதிப்புக்களில் உட்தலைப்பு விடப்பட்டுள்ளது

— பதிப்பாசிரியர்

1160. எப்பிறப்புக் கொண்டாலும், ஏந்தலே, நின்னழகைத்
தப்புமோ? மையல் தடுக்குந் தரமாமோ? 92

1161. மண்ணிலுயிர்க் கெல்லாந் தலைவரென மானிடரே
எண்ணிநின்றார் தம்மை; எனிலொருகால், ஊர்வகுத்தல் 93

1162. கோயில், அரசு, குடிவகுப்புப் போன்றசில
வாயிலிலே யந்த மனித ருயர்வெனலாம். 94

1163. மேனி யழகினிலும் விண்டுரைக்கும் வார்த்தையிலும்
கூனி யிருக்கும் கொலுநேர்த்தி தன்னிலுமே, 95

1164. வானரர்தஞ் சாதிக்கு மாந்தர்நிக ராவாரோ?
ஆன வரையு மவர்முயன்று பார்த்தாலும், 96

1165. பட்டு மயிர் மூடப் படாத தமதுடலை
எட்டுடையால் மூடி யெதிருமக்கு வந்தாலும், 97

1166. மீசையையும் தாடியையும் விந்தைசெய்து வானரர்தம்
ஆசை முகத்தினைப்போ லாக்க முயன்றிடினும், 98

1167. ஆடிக் குதிக்கும் அழகிலுமை நேர்வதற்கே
கூடிக் குடித்துக் குதித்தாலும், கோபுரத்தில் 99

1168. ஏறத் தெரியாமல் ஏணிவைத்துச் சென்றாலும்,
வேறெத்தைச் செய்தாலும், வேகமுறப் பாய்வதிலே 100

1169. வானரர்போ லாவரோ? வாலுக்குப் போவதெங்கே?
ஈனமுறுங் கச்சை யிதற்கு நிகராமோ? 101

1170. பாகையிலே வாலிருக்கப் பார்த்ததுண்டு கந்தைபோல்;
வேகமுறத் தாவுகையில் வீசி யெழுவதற்கே 102

1171. தெய்வங் கொடுத்த திருவாலைப் போலாமோ?
சைவசுத்த போசனமும் - சாதுரியப் பார்வைகளும் – 103

1172. வானரர்போற் சாதியொன்று மண்ணுலகின் மீதுளதோ?
வானரர் தம்முள்ளே மணிபோ லுமையடைந்தேன். 104

1173. பிச்சைப் பறவைப் பிறப்பிலே தோன்றிடினும்
நிச்சயமா முன்புரிந்த நேமத் தவங்களினால் 105

1174. தேவரீர் காதல்பெறுஞ் சீர்த்திகொண்டேன். தம்மிடத்தே
ஆவலினாற் பாடுகின்றேன். ஆரியரே கேட்டருள்வீர்." 106

1175. (வானரப் பேச்சினிலே மைக்குயிலி பேசியதை
யானறிந்து கொண்டுவிட்டேன் யாதோ வொருதிறத்தால்). 107

## குயிலின் பாட்டு

1176. நீசக் குயிலு நெருப்புச் சுவைக்குரலில்
ஆசை ததும்பி யமுதூறப் பாடியதே:- 108

1177. காதல், காதல், காதல்,
காதல் போயிற் காதல் போயிற்
சாதல், சாதல், சாதல். (முதலியன) 109

1178. காட்டில் விலங்கறியும் கைக்குழந்தை தானறியும்
பாட்டின் சுவையதனைப் பாம்பறியு மென்றுரைப்பார். 110

1179. வற்றற் குரங்கு மதிமயங்கிக் கள்ளினிலே
முற்றும் வெறிபோல் முழுவெறிகொண் டாங்ஙனே 111

1180. தாவிக் குதிப்பதுவுந் தாளங்கள் போடுவதும்
"ஆவி யுருகுதடீ, ஆ ஹஹா![1] என்பதுவும் 112

---

(பா-டு): 1 "ஆவியுருகுதடீ, ஆஹா ஹா!" (பா.பி., 1937, அர.)

1181. கண்ணைச் சிமிட்டுவதும், காலாலுங் கையாலும்
மண்ணைப் பிறாண்டியெங்கும் வாரி யிறைப்பதுவும், 113

1182. "ஆசைக் குயிலே; அரும்பொருளே, தெய்வதமே,
பேச முடியாப் பெருங்காதல் கொண்டுவிட்டேன், 114

1183. காதலில்லை யானாற் கணத்திலே சாதலென்றாய்,
காதலினாற் சாகுங் கதியினிலே என்னைவைத்தாய். 115

1184. எப்பொழுது நின்னை இனிப்பிரிவ தாற்றகிலேன்,[1]
இப்பொழுதே நின்னைமுத்த மிட்டுக் களியுறுவேன்". 116

1185. என்றுபல பேசுவது மென்னுயிரைப் புண்செயவே,
கொன்றுவிட வெண்ணிக் குரங்கின்மேல் வீசினேன் 117

1186. கைவாளை யாங்கே; கனவோ? நனவுகொலோ?
தெய்வ வலியோ? சிறுகுரங்கென் வாளுக்குத் 118

1187. தப்பி, முகஞ்சுளித்துத் தாவி யொளித்திடவும்,
ஒப்பிலா மாயத் தொருகுயிலுந் தான்மறைய, 119

1188. சோலைப் பறவை தொகைதொகையாத் தாமொலிக்க,
மேலைச் செயலறியா வெள்ளறிவிற் பேதையேன் 120

1189. தட்டித் தடுமாறிச் சார்பனைத்துந் தேடியுமே
குட்டிப் பிசாசக் குயிலையெங்கும் காணவில்லை. 121

## இருளும் ஒளியும்

1190. வான நடுவிலே மாட்சியுற ஞாயிறுதான்
மோனவொளி சூழ்ந்திடவு மொய்ம்பிற்
கொலுவிருந்தான். 122

---

(பா-டு): 1 எப்பொழுதும் நின்னை இனிப்பிரிவ தாற்றுகிலேன் - (அர.)

1191. மெய்யெல்லாஞ் சோர்வு விழியில் மயக்கமுற
உய்யும் வழியுணரா துள்ளம் பதைபதைக்க, 123

1192. நாணுந் துயரு நலிவுறுத்த நான்மீண்டு
பேணுமனை வந்தேன்; பிரக்கினைபோய்
வீழ்ந்துவிட்டேன். 124

1193. மாலையிலே மூர்ச்சைநிலை மாறித் தெளிவடைந்தேன்.
நாலு புறமுமெனை நண்பர்வந்து சூழ்ந்துநின்றார். 125

1194. "ஏனடா மூர்ச்சையுற்றாய்? எங்குசென்றாய்? ஏதுசெய்தாய்?
வானம் வெளிறுமுன்னே வைகறையி லேதனித்துச் 126

1195. சென்றனை யென்கிறாரச் செய்தியென்னே? ஊணின்றி
நின்றதென்னே?" என்று நெரித்துவிட்டார் கேள்விகளை.
127

1196. இன்னார்க் கிதுசொல்வ தென்று தெரியாமல்,
"என்னாற் பலவுரைத்த லிப்பொழுது கூடாதாம். 128

1197. நாளை வருவீரேல் நடந்ததெலாஞ் சொல்வேன்,இவ்
வேளை யெனைத்தனியே விட்டகல்வீர்," என்றுரைத்தேன்.
129

1198. நண்பரெல்லாஞ் சென்றுவிட்டார். நைந்துநின்ற தாயார்தாம்
உண்பதற்குப் பண்ட முதவிநல்ல பால்கொணர்ந்தார். 130

1199. சற்றுவிடாய் தீர்ந்து தனியே படுத்திருந்தேன்.
முற்று மறந்து முழுத்துயிலி லாழ்ந்துவிட்டேன். 131

1200. பண்டு நடந்ததனைப் பாடுகின்ற விப்பொழுதும்
மண்டு துயரெனது மார்பையெலாங் கவ்வுவதே. 132

1201. ஓடித் தவறி யுடைவனவாஞ் சொற்களெலாம்;
கூடி மதியிற் குவிந்திடுமாஞ் செய்தியெலாம். 133

1202. நாசக் கதையை நடுவே நிறுத்திவிட்டுப்
பேசு மிடைப்பொருளின் பின்னே மதிபோக்கிக் 134

1203. கற்பனையும் வர்ணனையுங் காட்டிக் கதைவளர்க்கும்
விற்பனர்தஞ் செய்கை விதமுந் தெரிகிலன்யான். 135

1204. மேலைக் கதையுரைக்க வெள்கிக் குலையுமனம்.
காலைக் கதிரழகின் கற்பனைகள் பாடுகிறேன். 136

1205. தங்க முருக்கித் தழல்குறைத்துத் தேனாக்கி
எங்கும் பரப்பியதோ ரிங்கிதமோ? வான்வெளியைச் 137

1206. சோதி கவர்ந்து சுடர்மயமாம் விந்தையினை
ஓதிப் புகழ்வார் உவமையொன்று காண்பாரோ? 138

1207. கண்ணையினி தென்றுரைப்பர் கண்ணுக்குக் கண்ணாகி
விண்ணை யளக்குமொளி மேம்படுமோ ரின்பமன்றோ? 139

1208. மூலத் தனிப்பொருளை மோனத்தே சிந்தைசெய்யும்
மேலவரு மஃதோர் விரியுமொளி யென்பாரேல், 140

1209. நல்லொளிக்கு வேறுபொருள் ஞாலமிசை யொப்புளதோ?
புல்லை நகையுறுத்திப் பூவை வியப்பாக்கி, 141

1210. மண்ணைத் தெளிவாக்கி, நீரில் மலர்ச்சிதந்து,
விண்ணை வெளியாக்கி, விந்தைசெயுஞ் சோதியினைக் 142

1211. காலைப் பொழுதினிலே கண்விழித்து நான்தொழுதேன்.
நாலு புறத்துமுயிர் நாதங்க ளோங்கிடவும், 143

**1212.** இன்பக் களியி லியங்கும் புவிகண்டேன்.
துன்பக் கதையின் தொடருரைப்பேன். யாருமெனைச்[1] *144*

**1213.** (சிந்தை தனிலிகழ்ச்சி செய்யாமை வேண்டுகின்றேன்.
ஐந்து மலர்க்கணையின் ஆற்ற லறியீரோ?)[2] *145*

## குயிலும் மாடும்

**1214.** காலைத் துயிலெழுந்து காலிரண்டு முன்போலே
சோலைக் கிழுத்திடநான் சொந்தவுணர் வில்லாமே *146*

**1215.** சோலையினில் வந்துநின்று, சுற்றுமுற்றுந் தேடினேன்.
கோலப் பறவைகளின் கூட்டமெல்லாங் காணவில்லை. *147*

**1216.** மூலையிலோர் மாமரத்தின் மோட்டுக் கிளையினிலே
நீலக் குயிலிருந்து நீண்டகதை சொல்லுவதும், *148*

**1217.** கீழே யிருந்தோர் கிழக்காளை மாடதனை
ஆழ மதியுடனே ஆவலுறக் கேட்பதுவும் *149*

**1218.** கண்டேன், வெகுண்டேன், கலக்கமுற்றேன், நெஞ்சிலனல்
கொண்டேன், குமைந்தேன், குமுறினேன்,
மெய்வெயர்த்தேன். *150*

**1219.** கொல்லவாள் வீசல் குறித்தேன்,இப் பொய்ப்பறவை
சொல்லுமொழி கேட்டதன்பின் கொல்லுதலே சூழ்ச்சியென
*151*

---

*1 துன்பக் கதையின் தொடருரைப்பேன், கேளீரோ - (பாரதி திருத்தம்)*

*2 'சிந்தை தனிலிகழ்ச்சி' எனத் தொடங்கும் கண்ணியைப் பாரதியார் கைப்பிரதியில் அடித்திருக்கிறார்.*

*- பதிப்பாசிரியர்*

1220. முன்போல் மறைந்துநின்றேன்; மோகப் பழங்கதையைப்
பொன்போற் குரலும் புதுமின்போல் வார்த்தைகளும் 152

1221. கொண்டு குயிலாங்கே கூறுவதாம்:- "நந்தியே,
பெண்டிர் மனத்தைப் பிடித்திழுக்கும் காந்தமே, 153

1222. காமனே மாடாகக் காட்சிதரு மூர்த்தியே,
பூமியிலே மாடுபோற் பொற்புடைய சாதியுண்டோ? 154

1223. மானிடருந் தம்முள் வலிமிகுந்த மைந்தர்தமை
மேனியுறுங் காளையென்று மேம்பா டுறப்புகழ்வார். 155

1224. காளையர்த முள்ளே[1] கனமிகுந்தீர், ஆரியரே,
நீள முகமும், நிமிர்ந்திருக்குங் கொம்புகளும், 156

1225. பஞ்சுப் பொதிபோற் படர்ந்த திருவடிவும்,
மிஞ்சு புறச்சுமையும், வீரத் திருவாலும், 157

1226. வானத் திடிபோல மாவென் றுருமுவதும்,[2]
ஈனப் பறவை முதுகின்மிசை யேறிவிட்டால் 158

1227. வாலைக் குழைத்து வளைத்தடிக்கு நேர்மையும்பல்
காலநான் கண்டு கடுமோக மெய்திவிட்டேன். 159

1228. பார வடிவும் பயிலு முடல்வலியும்
தீர நடையும் சிறப்புமே யில்லாத 160

1229. சல்லித் துளிப்பறவைச் சாதியிலே நான்பிறந்தேன்.
அல்லும் பகலுநித மற்ப வயிற்றினுக்கே, 161

---

(பா-டு): 1 காளையர்தம் முள்ளே - (அர.)
2 வானத்திடிபோல 'மா'வென் றுறுமுவதும் - (பா.பி., அர.)
'உருமுவதும்' - இடையின 'ரு' தவறு, எழுத்துப்பிறழ்ச்சி.

1230. காடெல்லாஞ் சுற்றிவந்து, காற்றிலே யெற்றுண்டு,
மூட மனிதர் முடைவயிற்றுக் கோருணவாம் 162

1231. சின்னக் குயிலின் சிறுகுலத்தி லேதோன்றி
என்னபயன் பெற்றேன்? எனைப்போலோர் பாவியுண்டோ?
163

1232. சேற்றிலே தாமரையும் சீழுடைய மீன்வயிற்றிற்
போற்றுமொளி முத்தும் புறப்படுதல் கேட்டிலிரோ? 164

1233. நீசப் பிறப்பொருவர் நெஞ்சிலே தோன்றிவரும்
ஆசை தடுக்கவல்ல தாகுமோ? காமனுக்கே 165

1234. சாதி பிறப்புத் தராதரங்கள் தோன்றிடுமோ?
வாதித்துப் பேச்சை வளர்த்தோர் பயனுமில்லை. 166

1235. மூட மதியாலோ முன்னைத் தவத்தாலோ,
ஆடவர்த முன்னே[1] அடியா ளுமைத்தெரிந்தேன். 167

1236. மானுடராம் பேய்கள் வயிற்றுக்குச் சோறிடவும்
கூனர்தமை யூர்களிலே கொண்டு விடுவதற்கும் 168

1237. தெய்வமென நீருதவி செய்தபின்னர் மேனிவிடாய்
எய்தி யிருக்கு மிடையினிலே, பாவியேன் 169

1238. வந்துமது காதில் மதுரவிசை பாடுவேன்.
வந்து முதுகில் ஒதுங்கிப் படுத்திருப்பேன். 170

1239. வாலிலடி பட்டு மனமகிழ்வேன். மாவென்றே
ஒலிடுநும் பேரொலியோ டொன்றுபடக் கத்துவேன். 171

---

(பா-டு): 1 ஆடவர்தம் முன்னே - (அர.)

1240. மேனியிலே யுண்ணிகளை மேவாது கொன்றிடுவேன்.
கானிடையே சுற்றிக் கழனியெலா மேய்ந்துநீர் *172*

1241. மிக்கவுண வுண்டுவாய் மென்றசைதான் போடுகையில்
பக்கத் திருந்து பலகதைகள் சொல்லிடுவேன். *173*

1242. காளை யெருதரே, காட்டிலுயர் வீரரே,
தாளைச் சரணடைந்தேன். தையலெனைக் காத்தருள்வீர்.
*174*

1243. காதலுற்று வாடுகின்றேன் காதலுற்ற செய்தியினை
மாத ருரைத்தல் வழக்கமில்லை யென்றறிவேன். *175*

1244. ஆனாலு மென்போ லபூருவமாங்[1] காதல்கொண்டால்,
தானா வுரைத்தலன்றிச் சாரும் வழியுளதோ? *176*

1245. ஒத்த குலத்தவர்பால் உண்டாகும் வெட்கமெல்லாம்[2]
இத்தரையில் மேலோர்முன் ஏழையர்க்கு நாணமுண்டோ?
*177*

1246. தேவர்முன்னே யன்புரைக்கச் சிந்தைவெட்கங்
கொள்வதுண்டோ?
காவலர்க்குந் தங்குறைகள் காட்டாரோ கீழடியார்? *178*

1247. ஆசைதான் வெட்க மறியுமோ?'' என்றுபல
நேசவுரை கூறி, நெடிதுயிர்த்துப் பொய்க்குயிலி *179*

1248. பண்டுபோ லேதனது பாழடைந்த பொய்ப்பாட்டை
எண்டிசையு மின்பக் களியேறப் பாடியதே. *180*

---

*(பா—டு): 1 ஆனாலும் என்போல் அபூர்வமாங் - (பா.பி., 1937, அர.)*
*2 ஒத்த குலத்தவர்பால் உண்டாகும் வெட்கமெலாம் - (பா.பி., அர.)*

## குயிலின் பாட்டு

**1249.** காதல், காதல், காதல்,
காதல் போயிற் காதல் போயிற்
சாதல், சாதல், சாதல். (முதலியன) *181*

**1250.** பாட்டு முடியும்வரை பாரறியேன், விண்ணறியேன்,
கோட்டுப் பெருமரங்கள் கூடிநின்ற காவறியேன், *182*

**1251.** தன்னை யறியேன், தனைப்போ லெருதறியேன்,
பொன்னை நிகர்த்தகுரல் பொங்கிவரு மின்பமொன்றே *183*

**1252.** கண்டேன், படைப்புக் கடவுளே, நான்முகனே,
பண்டே யுலகு படைத்தனைநீ யென்கின்றார். *184*

**1253.** நீரைப் படைத்து நிலத்தைத் திரட்டிவைத்தாய்;
நீரைப் பழைய நெருப்பிற் குளிர்வித்தாய்; *185*

**1254.** காற்றைமுன்னே யூதினாய்; காணரிய வானவெளி
தோற்றுவித்தாய், நின்றன் தொழில்வலிமை யாரறிவார்? *186*

**1255.** உள்ளந்தான் கவ்வ வொருசிறிதுங் கூடாத
கொள்ளைப் பெரியவுருக் கொண்ட பலகோடி *187*

**1256.** வட்ட வுருளைகள்போல் வானத்தி லண்டங்கள்
எட்ட நிரப்பியவை யெப்போதும் ஓட்டுகின்றாய்; *188*

**1257.** எல்லா மசைவில் இருப்பதற்கே சக்திகளைப்[1]
பொல்லாப் பிரமா, புகுத்துவிட்டாய். அம்மவோ![2] *189*

.........................................

*(பா-டு): 1 எல்லா மறைவில் இருப்பதற்கே சக்திகளை - (பா. பி. 1937)*
*2 பொல்லாப் பிரமா புகுத்துவிட்டாய், அம்மாவோ! (பா. பி. 1937, அர.)*

1258. காலம் படைத்தாய் கடப்பதிலாத் திக்கமைத்தாய்,
ஞாலம் பலவினிலு நாடோறுந் தாம்பிறந்து 190

1259. தோன்றி மறையுந் தொடர்பாப் பலவனந்தஞ்
சான்றவுயிர்கள் சமைத்துவிட்டாய், நான்முகனே.* 191

1260. சால மிகப்பெரிய சாதனைகா ணிஃதெல்லாம்
தாலமிசை நின்றன் சமர்த்துரைக்க வல்லார்யார்? 192

1261. ஆனாலு நின்றன் அதிசயங்கள் யாவினுமே
கானா முதம்படைத்த காட்சிமிக விந்தையடா! 193

1262. காட்டுநெடு வானங் கடலெல்லாம் விந்தையெனில்,
பாட்டினைப்போ லாச்சரியம் பாரின்மிசை யில்லையடா.
194

1263. பூதங்க ளொத்துப் புதுமைதரல் விந்தையெனில்
நாதங்கள் சேரு நயத்தினுக்கு நேராமோ? 195

1264. ஆசைதருங் கோடி யதிசயங்கள் கண்டதிலே
ஓசைதரு மின்பம் உவமையிலா வின்பமன்றோ? 196

1265. செத்தைக் குயில்புரிந்த தெய்விகத்தீம் பாட்டெனுமோர்
வித்தை முடிந்தவுடன் மீட்டுமறி வெய்திநான் 197

1266. கையில் வாளெடுத்துக் காளையின்மேல் வீசினேன்.
மெய்யிற் படுமுன் விரைந்ததுதான் ஓடிவிட, 198

1267. வன்னக் குயில்மறைய மற்றைப் பறவையெலாம்
முன்னைப்போற் கொம்பு முனைகளிலே வந்தொலிக்க, 199

---

*இந்தவரி தற்காலப் பதிப்புக்களில் விடப்பட்டுள்ளது.
— பதிப்பாசிரியர்

1268. நாணமிலாக்[1] காதல்கொண்ட நானுஞ் சிறுகுயிலை
வீணிலே தேடியபின், வீடுவந்து சேர்ந்துவிட்டேன். 200

1269. எண்ணியெண்ணிப் பார்த்தேன் எதுவும் விளங்கவில்லை
கண்ணிலே நீர்ததும்பக் கானக் குயிலெனக்கே 201

1270. காதற் கதையுரைத்து நெஞ்சங் கரைத்ததையும்,
பேதைநா னங்கு[2] பெரியமயல் கொண்டதையும், 202

1271. இன்பக் கதையி னிடையே தடையாகப்
புன்பறவை யெல்லாம் புகுந்த வியப்பினையும், 203

1272. ஒன்றைப் பொருள்செய்யா வுள்ளத்தைக் காயவனல்
தின்றெனது சித்தந் திகைப்புறவே செய்ததையும், 204

1273. சொற்றைக் குரங்கும் தொழுமாடும் வந்தெனக்கு
முற்றும் வயிரிகளா மூண்ட கொடுமையையும், 205

1274. இத்தனைகோ லத்தினுக்கும் யான்வேட்கை தீராமல்
பித்தம் பிடித்த பெரிய கொடுமையையும், 206

1275. எண்ணியெண்ணிப் பார்த்தேன் எதுவும் விளங்கவில்லை;
கண்ணிரண்டு மூடக் கடுந்துயிலி லாழ்ந்துவிட்டேன். 207

## நான்கா நாள்

1276. நான்காநாள். என்னை நயவஞ் சனைபுரிந்து
வான்காதல் காட்டி மயக்கிச் சதிசெய்த 208

.........................................

(பா-டு): 1 நாணமில்லாக் - (அர.)
2 'னங்குப்' என்றிருத்தல் வேண்டும்.

1277. பொய்மைக்[1] குயிலென்னைப் போந்திடவே கூறியநாள்.
மெய்மை[2] யறிவிழந்தென் வீட்டிலே மாடமிசை 209

1278. சித்தத் திகைப்புற்றோர் செய்கை யறியாமல்
எத்துக் குயிலென்ன எய்துவித்த தாழ்ச்சியெலாம் 210

1279. மீட்டு நினைந்தங்கு வீற்றிருக்கும் போழ்தினிலே
காட்டுத் திசையினிலென் கண்ணிரண்டு நாடியவால். 211

1280. வானத்தே யாங்கோர் கரும்பறவை வந்திடவும்
யானதனைக் கண்டே, "இதுநமது பொய்க்குயிலே?[3] 212

1281. என்று திகைத்தேன். இருந்தொலைக்கே நின்றதனால்
நன்று வடிவந் துலங்கவில்லை; நாடுமனம் 213

1282. ஆங்கதனை விட்டுப் பிரிதற்கு[4] மாகவில்லை.
ஓங்குந் திகைப்பி லுயர்மாடம் விட்டுநான் 214

1283. வீதியிலே வந்துநின்றேன். மேற்றிசையி லவ்வுருவம்
சோதிக் கடலிலே தோன்றுகரும் புள்ளியெனக் 215

1284. காணுதலும், 'சற்றே கடுகி யருகேபோய்,
நாணமிலாப் பொய்குயிலோ[5] வென்பதனை நன்கறிவோம்
216

1285. என்ற கருத்துடனே யான்விரைந்து சென்றிடுங்கால்
நின்ற பறவையுந்தான் நேராகப் போயினதால். 217

---

(பா-டு): 1 பொய்ம்மைக் - (பா.பி., 1937) இப்பாடமே சரியானது
2 மெய்ம்மை (பா.பி., 1937) இப்பாடமே சரியானது.
3 யானதனைக் கண்டே, இதுநமது பொய்க்குயிலோ? (அர.)
4 ஆங்கதனை விட்டுப் பிரிவதற்கு - (அர.)
5 'பொய்க்குயிலோ' என்றிருத்தல் வேண்டும்.
- பதிப்பாசிரியர்

1286. யானின்றால் தானிற்கும், யான்சென்றால் தான்செல்லும்;
மேனிநன்கு தோன்ற அருகினிலே மேவாது 218

1287. வானி லதுதான் வழிகாட்டிச் சென்றிடவும்
யானிலத்தே சென்றேன் இறுதியிலே முன்புநாம் 219

1288. கூறியுள்ள மாஞ்சோலை தன்னைக் குறுகியந்த
ஊறிலாப் புள்ளுமத னுள்ளே மறைந்ததுவால். 220

1289. மாஞ்சோலைக் குள்ளே மதியிலிநான் சென்றாங்கே
ஆஞ்சோதி வெள்ளம் அலையுமொரு கொம்பரின்மேல் 221

1290. சின்னக் கருங்குயிலி செவ்வனே வீற்றிருந்து
பொன்னங் குழலின் புதிய வொலிதனிலே 222

1291. பண்டைப்பொய்க் காதற் பழம்பாட்டைத் தான்பாடிக்
கொண்டிருத்தல் கண்டேன் குமைந்தேன். எதிரேபோய்,223

1292. "நீசக் குயிலே, நிலையறியாப் பொய்மையே[1],
ஆசைக் குரங்கினையும் அன்பா ரெருதினையும் 224

1293. எண்ணிநீ பாடும் இழிந்த புலைப்பாட்டை
நண்ணியிங்கு[2] கேட்க நடத்திவந்தாய் போலுமெனை" 225

1294. என்று சினம்பெருகி ஏதேதோ சொல்லுரைத்தேன்.
கொன்றுவிட நெஞ்சிற் குறித்தேன். மறுபடியும், 226

1295. நெஞ்ச மிளகி நிறுத்திவிட்டேன். ஈங்கிதற்குள்,
வஞ்சக் குயிலி மனத்தை யிரும்பாக்கிக் 227

---

(பா-டு): 1. "நீசக் குயிலே, நிலையறியாப் பொய்ம்மையே - (பா.பி., 1937) இப்பாடமே சரியானது.

2 'நண்ணியிங்குக்' என்றிருத்தல் வேண்டும்.

— பதிப்பாசிரியர்

1296. கண்ணிலே பொய்நீர்[1] கடகடெனத் தானூற்றப்
பண்ணிசைபோ லின்குரலாற் பாவியது கூறிடுமால்:- *228*

1297. "ஐயனே, என்னுயிரின் ஆசையே, ஏழையெனை
வையமிசை வைக்கத் திருவுளமோ? மற்றெனையே *229*

1298. கொன்றுவிடச் சித்தமோ? கூறீ ரொருமொழியில்.
அன்றிச் சிறுபறவை யாண்பிரிய வாழாது. *230*

1299. ஞாயிறுதான் வெம்மைசெயில் நாண்மலர்க்கு வாழ்வுளதோ?
தாயிருந்து கொன்றால் சரண்மதலைக் கொன்றுளதோ? *231*

1300. தேவர் சினந்துவிட்டால் சிற்றுயிர்க ளென்னாகும்?
ஆவற் பொருளே, அரசே,என் னாரியரே, *232*

1301. சிந்தையினீ ரென்மேற் சினங்கொண்டால் மாய்ந்திடுவேன்.
வெந்தழலில் வீழ்வேன். விலங்குகளின் வாய்ப்படுவேன். *233*

1302. குற்றநீ ரென்மேற் கொணர்ந்ததனை யானறிவேன்.
குற்றநுமைக் கூறுகிலேன், குற்றமிலேன் யானம்ம. *234*

1303. புன்மைக் குரங்கைப் பொதிமாட்டை நான்கண்டு
மென்மையுறக் காதல் விளையாடினே னென்றீர், *235*

1304. என்சொல்கேன்! எங்ஙனுய்வேன்! ஏதுசெய்கேன்! ஐயனே,
நின்சொல் மறுக்க நெறியில்லை; ஆயிடினும்[2] *235*

1305. என்மேற் பிழையில்லை! யாரிதனை நம்பிடுவார்?
நின்மேற் சுமைமுழுது நேராகப் போட்டுவிட்டேன், *237*

..........................................

*(பா-டு):* 1. கண்ணிலே பொய்ந்நீர் - (பா.பி., 1937, அர.)
இப்பாடமே சரியானது
2 நின்சொல் மறுக்க நெறியில்லை; ஆயிடினும் (பா.பி. 1937)

1306. வெவ்விதியே! நீயென்னை மேம்பா டுறச்செய்து
செவ்விதினிங் கென்னையென்றன் வேந்தனொடு
சேர்த்திடினும், 238

1307. அல்லாதென் வார்த்தை யவர்சிறிது நம்பாமே
புல்லாக வெண்ணிப் புறக்கணித்துப் போய்விடநான் 239

1308. அக்கணத்தே தீயில் அழிந்துவிழ நேரிடினும்
எக்கதிக்கும் ஆளாவேன். என்செய்கேன், வெவ்விதியே!''
240

## குயில் தனது பூர்வ ஜன்மக் கதை யுரைத்தல்

1309. ''தேவனே! என்னருமைச் செல்வமே, என்னுயிரே,
போவதன்முன் னொன்று புகல்வதனைக்
கேட்டருள்வீர். 241

1310. முன்ன மொருநாள் முடிநீள் பொதியமலை
தன்னருகே நானுந் தனியேயோர் சோலைதனில், 242

1311. மாங்கிளையி லேதோ மனதிலெண்ணி வீற்றிருந்தேன்.
ஆங்குவந்தா ரோர்முனிவர். ஆரோ பெரியரென்று. 243

1312. பாதத்தில் வீழ்ந்து பரவினேன். ஐயரெனை
ஆதரித்து வாழ்த்தி யருளினார். மற்றதின்பின்,[1] 244

1313. ''வேத முனிவரே, மேதினியிற் கீழ்ப்பறவைச்
சாதியிலே நான்பிறந்தேன். சாதிக் குயில்களைப்போல் 245

1314. இல்லாமல் என்றன் இயற்கை பிரிவாகி
எல்லார் மொழியும் எனக்கு விளங்குவதேன்? 246

---

(பா—டு): 1 ஆதரித்து வாழ்த்தி யருளினார், மற்றதன்பின் - (பா.பி. 1937,அர)

1315. மானுடர்போற் சித்தநிலை வாய்ந்திருக்குஞ்[1] செய்தியேன்.
யானுணரச் சொல்வீர்'' எனவணங்கிக் கேட்கையிலே, 247

1316. கூறுகின்றார் ஐயர்:-'' குயிலேகேள், முற்பிறப்பில்
வீறுடைய வெந்தொழிலார் வேடர் குலத்தலைவன் 248

1317. வீர முருகனெனும் வேடன் மகளாக[2]
சேர வளநாட்டில் தென்புறத்தே ஓர்மலையில் 249

1318. வந்து பிறந்து வளர்ந்தாய்நீ. நல்லிளமை
முந்து மழகினிலே மூன்று தமிழ்நாட்டில் 250

1319. யாரு நினக்கோர் இணையில்லை யென்றிடவே
சீருயர நின்றாய். செழுங்கான வேடரிலுன் 251

1320. மாமன் மகனொருவன், மாடனெனும் பேர்கொண்டான்
காமன் கணைக்கிரையாய், நின்னழகைக் கண்டுருகி 252

1321. நின்னை மணக்க நெடுநாள் விரும்பியவன்
பொன்னை மலரைப் புதுத்தேனைக் கொண்டுனக்கு 253

1322. நித்தங் கொடுத்து நினைவெல்லா நீயாகச்
சித்தம் வருந்துகையில், தேமொழியே நீயவனை 254

1323. மாலையிட வாக்களித்தாய்; மையலினா லில்லை;அவன்
சால வருந்தல் சகிக்காமற் சொல்லிவிட்டாய். 255

1324. ஆயிடையே நின்றன் அழகின் பெருங்கீர்த்தி
தேயமெங்குந் தான்பரவத் தேன்மலையின் சார்பினிலோர் 256

---

*(பா-டு) 1 மானுடர்போற் சித்தநிலை வாய்த்திருக்குஞ் - (அர.)*
*2 வீர முருகனெனும் வேடன் மகளாகச் - (பா.பி., 1937, அர.)*
*இத்திருத்தமே பொருத்தமானது*

*— பதிப்பாசிரியர்*

1325. வேடர்கோன், செல்வமுநல் வீரமுமே தானுடையான்,
நாடனைத்து மஞ்சி நடுங்குஞ் செயலுடையான், 257

1326. மொட்டைப் புலியனுந்தன் மூத்த மகனான
நெட்டைக் குரங்கனுக்கு நேரான பெண்வேண்டி, 258

1327. நின்னை மணம்புரிய நிச்சயித்து, நின்னப்பன்
தன்னை யணுகிநின்னோர் தையலையென் பிள்ளைக்குக் 259

1328. கண்ணாலஞ் செய்யும் கருத்துடையேன்' என்றிடலும்,
எண்ணாப் பெருமகிழ்ச்சி எய்தியே, நின்தந்தை 260

1329. ஆங்கே யுடம்பட்டான். ஆறிரண்டு நாட்களிலே
பாங்கா மணம்புரியத் தாமுறுதி பண்ணிவிட்டார். 261

1330. பன்னிரண்டு நாட்களிலே பாவையுனைத் தேன்மலையில்
அன்னியன்கொண் டேகிடுவான் என்னும் அதுகேட்டு 262

1331. மாடன் மனம்புகைந்து மற்றைநாள் உன்னைவந்து
நாடிச் சினத்துடனே நானா மொழிகூற 263

1332. நீயு மவனிடத்தே நீண்ட கருணையினால்,
"காயுஞ் சினந்தவிர்ப்பாய், மாடா, கடுமையினால் 264

1333. நெட்டைக் குரங்கனுக்குப் பெண்டாக நேர்ந்தாலும்,
கட்டுப் படியவர்தங் காவலிற்போய், வாழ்ந்தாலும், 265

1334. மாதமொரு மூன்றில் மருமஞ் சிலசெய்து
பேதம் விளைவித்துப் பின்னிங்கே வந்திடுவேன். 266

1335. தாலிதனை மீட்டுமவர் தங்களிட மேகொடுத்து
நாலிரண்டு மாதத்தே நாயகனா நின்றனையே 267

1336. பெற்றிடுவேன். நின்னிடத்தே பேச்சுத் தவறுவெனோ?[1]
மற்றிதனை நம்பிடுவாய், மாடப்பா'' என்றுரைத்தாய். 268

1337. காதலினா லில்லை, கருணையினா லிஃதுரைத்தாய்.
(மாதரசாய் வேடன் மகளான முற்பிறப்பில் 269

1338. சின்னக் குயிலியென்று செப்பிடுவார் நின்னாமம்.)
பின்னர்ச் சிலதினங்கள் சென்றதன்பின், பெண்குயிலி, 270

1339. நின்னொத்த தோழியரு நீயுமொரு மாலையிலே
மின்னற் கொடிகள் விளையா டுதல்போலே 271

1340. காட்டி னிடையே களித்தாடி நிற்கையிலே,
வேட்டைக் கெனவந்தான் வெல்வேந்தன் சேரமான் 272

1341. தன்னருமை மைந்தன். தனியே, துணைபிரிந்து
மன்னவன்றன் மைந்தனொரு மானைத் தொடர்ந்துவரத் 273

1342. தோழியரு நீயுந் தொகுத்துநின்றே யாடுவதை
வாழியவன் கண்டுவிட்டான். மையல் கரைகடந்து 274

1343. நின்னைத் தனதாக்க நிச்சயித்தான். மாதுநீ
மன்னவனைக் கண்டவுடன் மாமோகங் கொண்டுவிட்டாய், 275

1344. நின்னையவன் நோக்கினான். நீயவனை நோக்கி நின்றாய்.
அன்னதொரு நோக்கினிலே ஆவி கலந்துவிட்டீர், 276

---

*(பா-டு): 1 பெற்றிடுவேன்; நின்னிடத்தே பேச்சுத் தவறுவனோ?*
*(பா. பி., 1937, அர.)*

*பெற்றிடுவேன்; நின்னிடத்தே பேச்சுத் தவறுவேனோ? (பா.பி. 1923)*

1345. தோழியரும் வேந்தன் சுடர்க்கோலந் தான்கண்டே
ஆழி யரச னரும்புதல்வன் போலுமென்றே 277

1346. அஞ்சி மறைந்துவிட்டார். ஆங்கவனு நின்னிடத்தே,
'வஞ்சித் தலைவன் மகன்யான்' எனவுரைத்து, 278

1347. "வேடர் தவமகளே, விந்தை யழகுடையாய்,
ஆடவனாத் தோன்றி யதன்பயனை யின்றுபெற்றேன். 279

1348. கண்டதுமே நின்மிசைநான் காதல்கொண்டேன்" என்றிசைக்க,
மண்டுபெருங் காதல் மனத்தடக்கி நீமொழிவாய்:– 280

1349. "ஐயனே, உங்க ளரமனையில் ஐந்நூறு
தையலருண் டாம்.அழகில் தந்நிகரில் லாதவராம்.[1] 281

1350. கல்வி தெரிந்தவராம். கல்லுருகப் பாடுவராம்.
பல்விதமாங் கூத்துப் பழகி யிருப்பவராம்[2] 282

1351. அன்னவரைச் சேர்ந்தேநீர் அன்புடனே வாழ்ந்திருப்பீர்.
மன்னவரை வேண்டேன், மலைக்குறவர் தம்மகள்யான். 283

1352. கொல்லுமடற் சிங்கம் குழிமுயலை வேட்பதுண்டோ?
வெல்லுதிறல் மூவேந்தர்[3] வேடருள்ளோ பெண்ணெடுப்பார்? 284

1353. பத்தினியா வாழ்வதல்லால் பார்வேந்தர் தாமெனினும்
நத்தி விலைமகளா நாங்கள்குடி போவதில்லை. 285

---

பா–டு): 1 தையலருண்டாம்; அழகில் தன்னிகரில் லாதவராம் - (அர.)
2 இவ்வரி பா. பி. 1937, அர. பதிப்புகளில் விடுபட்டுள்ளது.
3 வெல்லுதிறல் மாவேந்தர் - (பா.பி., அர.)

1364. நாணந் தவிர்த்தாய். நனவே தவிர்ந்தவனாய்க்[1]
காணத் தெவிட்டாதோ ரின்பக் கனவினிலே 296

1365. சேர்ந்துவிட்டாய். மன்னவன்றன் திண்டோளை நீயுவகை
ஆர்ந்து தழுவி அவனிதழில் தேன்பருகச் 297

1366. சிந்தைகொண்டாய். வேந்தன்மகன் தேனில்விழும் வண்டினைப்போல்
விந்தையுறு காந்தமிசை வீழு மிரும்பினைப்போல், 298

1367. ஆவலுட னின்னை யறத்தழுவி, ஆங்குனது
கோவை யிதழ்பருகிக் கொண்டிருக்கும் வேளையிலே, 299

1368. சற்றுமுன்னே யூரினின்று தான்வந் திறங்கியவன்,
மற்றுநீ வீட்டைவிட்டு மாதருடன் காட்டினிலே 300

1369. கூத்தினுக்குச் சென்றதனைக் கேட்டுக் குதூகலமாய்
ஆத்திரந்தான் மிஞ்சிநின்னை ஆங்கெய்திக் காணவந்தோன், 301

1370. நெட்டைக் குரங்கன் நெருங்கிவந்து பார்த்துவிட்டான்.
"பட்டப் பகலிலே! பாவிமகள் செய்தியைப்பார்! 302

1371. கண்ணாலங் கூடஇன்னுங் கட்டி முடியவில்லை.
மண்ணாக்கி விட்டாள்!என் மானந் தொலைத்துவிட்டாள்! 303

1372. 'நிச்சயதாம் பூலம்' நிலையா நடந்திருக்கப்
பிச்சைச் சிறுக்கிசெய்த பேதகத்தைப் பார்த்தாயோ!" 304

(பா-டு): 1 நாணந் தவிர்த்தாய்; நனவே தவிர்ந்தவளாய் – (பா.பி., அர.) இப்பாடம் தவறு.

1373. என்று மனதில் எழுகின்ற தீயுடனே
நின்று கலங்கினான் நெட்டைக் குரங்கனங்கே. 305

1374. மாப்பிளைதான் ஊருக்கு வந்ததையும், பெண்குயிலி
தோப்பிலே தானுந்தன் தோழிகளு மாச்சென்று 306

1375. பாடி விளையாடும் பண்புகேட் டேகுரங்கன்
ஓடி யிருப்பதோ ருண்மையையு மாடனிடம் 307

1376. யாரோ வுரைத்துவிட்டார்; ஈரிரண்டு பாய்ச்சலிலே
நீரோடு மேனி நெருப்போடுங் கண்ணுடனே 308

1377. மாடனங்கு வந்துநின்றான். மற்றிதனைத் தேன்மலையின்
வேடன்கோன் மைந்தன் விழிகொண்டு பார்க்கவில்லை. 309

1378. நெட்டைக் குரங்கனங்கு நீண்ட மரம்போலே
எட்டிநிற்குஞ் செய்தி யிவன்பார்க்க நேரமில்லை. 310

1379. அன்னியனைப் பெண்குயிலி யார்ந்திருக்குஞ் செய்தியொன்று
தன்னையே யிவ்விருவர் தாங்கண்டார் வேறறியார். 311

1380. மாடனைத் தான்கண்டான், மற்றவனு மங்ஙனமே.
மாடன் வெறிகொண்டான், மற்றவனு மவ்வாறே. 312

1381. காவலன்றன் மைந்தனுமக் கன்னிகைநீ[1] தானுமங்கு
தேவசுகங் கொண்டு விழியே திறக்கவில்லை. 313

1382. ஆவிக் கலப்பி னமுத சுகந்தனிலே
மேவியங்கு மூடி யிருந்த விழிநான்கு. 314

---

*(பா-டு): 1 காவலன்றன் மைந்தனுமக் கன்னிகையுந் - (பா.பி.1937,அர.)*

1383. ஆங்கவற்றைக் கண்டமையால் ஆவியிலே தீப்பற்றி
ஓங்கும் பொறிக ளுதிர்க்கும் விழிநான்கு. 315

1384. மாடனுந்தன்வாளுருவி மன்னவனைக் கொன்றிடவே
ஓடிவந்தான்; நெட்டைக் குரங்கனும்வா னோங்கிவந்தான் 316

1385. வெட்டிரண்டு வீழ்ந்தனகாண் வேந்தன் முதுகினிலே
சட்டெனவே மன்னவனுந் தான்திரும்பி வாளுருவி 317

1386. வீச்சிரண்டி லாங்கவரை வீழ்த்தினான்; வீழ்ந்தவர்தாம்
பேச்சிழந்தே யங்கு* பிணமாக் கிடந்துவிட்டார் 318

1387. மன்னவனுஞ் சோர்வெய்தி மண்மேல் விழுந்துவிட்டான்.
பின்னவனை நீயும் பெருந்துயர்கொண் டேமடியில் 319

1388. வாரி யெடுத்துவைத்து வாய்புலம்பக் கண்ணிரண்டும்
மாரி பொழிய மனமழிந்து நிற்கையிலே, 320

1389. கண்ணை விழித்துனது காவலனுங் கூறுகின்றான்:
"பெண்ணே இனிநான் பிழைத்திடேன் சிலகணத்தே 321

1390. ஆவி துறப்பேன். அழுதோர் பயனில்லை.
சாவிலே துன்பமில்லை தையலே, இன்னமுநாம் 322

1391. பூமியிலே தோன்றிடுவோம். பொன்னே, நினைக்கண்டு
காமுறுவேன். நின்னைக் கலந்தினிது வாழ்ந்திடுவேன். 323

1392. இன்னும் பிறவியுண்டு மாதரசே, இன்பமுண்டு.
நின்னுடனே வாழ்வெனினி[1] நேரும் பிறப்பினிலே" 324

---

* 'யங்குப்' என்றிருத்தல் வேண்டும்:

- பதிப்பாசிரியர்

(பா-டு): 1 'நின்னுடனே வாழ்வனினி - (பா.பி.1937, அர.)

1393. என்றுசொல்லிக் கண்மூடி இன்பமுறு புன்னகைதான்
நின்று முகத்தே நிலவுதர மாண்டனன்காண். 325

1394. மாடனிங்கு[1] செய்ததோர் மாயத்தால் இப்பொழுது
பீடையுறு புள்வடிவம் பேதையுனக் கெய்தியது. 326

1395. வாழிநின்றன் மன்னவனுந் தொண்டை வளநாட்டில்
ஆழிக் கரையி னருகேயோர் பட்டினத்தில் 327

1396. மானிடனாத் தோன்றி வளருகின்றான், நின்னையொரு
கானிடத்தே காண்பான், கனிந்துநீ பாடுநல்ல 328

1397. பாட்டினைத்தான் கேட்பான் பழவினையின் கட்டினால்
மீட்டுநின்மேற் காதல்கொள்வான், மென்குயிலே" என்றந்தத் 329

1398. தென்பொதியை மாமுனிவர் செப்பினார், "சாமீ,[2] 330

1399. குயிலுருவங் கொண்டேன்யான்; கோமானோ மேன்மை
பயிலு மனிதவுருப் பற்றிநின்றான் எம்முள்ளே 331

1400. காதலிசைந் தாலுங் கடிமணந்தான் கூடாதாம்..
சாதற் பொழுதிலே தார்வேந்தன் கூறியசொல் 332

1401. பொய்யாய் முடியாதோ?" என்றிசைத்தேன், புன்னகையில்
ஐய ருரைப்பார்:- "அடிபேதாய், இப்பிறவி 333

1402. தன்னிலுநீ விந்தகிரிச் சார்பினிலோர் வேடனுக்குக்
கன்னியெனத் தான்பிறந்தாய், கர்ம வசத்தினால் 334

---

1 'மாடனிங்குச்' என்றிருத்தல் வேண்டும்.

2 இதனை அடுத்த ஒரு வரி விடுபட்டிருக்க வேண்டும்.

— பதிப்பாசிரியர்

1403. மாடன் குரங்க னிருவருமே வன்பேயாக்
காடுமலை சுற்றி வருகையிலே கண்டுகொண்டார் 335

1404. நின்னையங்கே, இப்பிறப்பில் நீயும் பழமைபோல்
மன்னனையே சேர்வையென்று தாஞ்சூழ்ந்து மற்றவரும் 336

1405. நின்னைக் குயிலாக்கி நீசெல்லுந் திக்கிலெலாம்
நின்னுடனே சுற்றுகின்றார். நீயிதனைத் தேர்கிலையோ?"
337

1406. என்றார், "விதியே!. இறந்தவர்தாம் வாழ்வாரை
நின்று துயருறுத்தல் நீதியோ? பேய்களெனைப் 338

1407. பேதைப் படுத்திப் பிறப்பை மறப்புறுத்தி
வாதைப் படுத்தி வருமாயில், யானெனது 339

1408. காதலனைக் காணுங்கால், காய்சினத்தா லேதேனுந்
தீதிழைத்தா லென்செய்வேன்? தேவரே, மற்றிதற்கோர் 340

1409. மாற்றிலையோ?" என்று மறுகிநான் கேட்கையிலே,
தேற்றமுறு மாமுனிவர் செப்புகின்றார்:- "பெண்குயிலே,
341

1410. தொண்டைவள நாட்டிலோர் சோலையிலே வேந்தன்மகன்
கண்டுனது பாட்டிற் கருத்திளகிக் காதல் கொண்டு 342

1411. நேச மிகுதியுற்று நிற்கையிலே, பேயிரண்டும்
மோச மிகுந்த முழுமாயச் செய்கைபல 343

1412. செய்துபல பொய்த்தோற்றங் காட்டித் திறல்வேந்தன்
ஐயமுறச் செய்துவிடும். ஆங்கவனு நின்றனையே 344

1413. வஞ்சகியென் றெண்ணி மதிமருண்டு நின்மீது
வெஞ்சினந்தா னெய்திநினை விட்டுவிட நிச்சயிப்பான். 345

1414. பிந்தி விளைவதெல்லாம் பின்னேநீ கண்டுகொள்வாய்,
சந்திஜபம் செய்யுஞ் சமயமாய் விட்ட'' தென்றே 346

1415. காற்றில் மறைந்துசென்றார் மாமுனிவர். காதலரே,
மாற்றி யுரைக்கவில்லை; மாமுனிவர் சொன்னதெல்லாம் 347

1416. அப்படியே சொல்லிவிட்டேன். ஐயோ! திருவுளத்தில்
எப்படிநீர் கொள்வீரோ? யானறியேன். ஆரியரே, 348

1417. காத லருள்புரிவீர். காதலில்லை யென்றிடிலோ
சாத லருளித் தமதுகையாற் கொன்றிடுவீர்!'' 349

1418. என்று குயிலு மெனதுகையில் வீழ்ந்ததுகாண்.
கொன்று விடமனந்தான் கொள்ளுமோ? பெண்ணென்றால் 350

1419. பேயு மிரங்காதோ? பேய்க ளிரக்கமின்றி
மாயமிழைத் தாலதனை மானிடனுங் கொள்ளுவதோ? 351

1420. காதலிலே யையங் கலந்தாலு நிற்பதுண்டோ?
மாதரன்பு கூறில் மனமிளகா ரிங்குளரோ? 352

1421. அன்புடனே யானும் அருங்குயிலைக் கைக்கொண்டு
முன்புவைத்து நோக்கியபின் மூண்டுவரு மின்பவெறி 353

1422. கொண்டதனை முத்தமிட்டேன். கோகிலத்தைக் காணவில்லை!
விண்டுரைக்க மாட்டாத விந்தையடா! விந்தையடா! 354

1423. ஆசைக் கடலின் அமுதடா! அற்புதத்தின்
தேசமடா! பெண்மைதான் தெய்விகமாங் காட்சியடா! 355

1424. பெண்ணொருத்தி யங்குநின்றாள் பேருவகை
கொண்டுதான்
கண்ணெடுக்கா தென்னைக் கணப்பொழுது நோக்கினாள். 356

1425. சற்றே தலைகுனிந்தாள். சாமீ! இவளழகை
எற்றே தமிழி லிசைத்திடுவேன்? கண்ணிரண்டும் 357

1426. ஆளை விழுங்கும் அதிசயத்தைக் கூறுவனோ?
மீன விழியில் மிதந்த கவிதையெலாம் 358

1427. சொல்லி லகப்படுமோ? தூயசுடர் முத்தையொப்பாம்
பல்லிற் கனியிதழிற் பாய்ந்த நிலவினையான் 359

1428. என்று மறத்தல் இயலுமோ? பாரின்மிசை
நின்றதொரு மின்கொடிபோல் நேர்ந்தமணிப்
பெண்ணரசின் 360

1429. மேனி நலத்தினையும் வெட்டினையுங் கட்டினையும்
தேனி லினியாள் திருத்த நிலையினையும் 361

1430. மற்றவர்க்குச் சொல்ல வசமாமோ? ஓர்வார்த்தை
கற்றவர்க்குச் சொல்வேன், கவிதைக் கனிபிழிந்த 362

1431. சாற்றினிலே பண்,கூத் தெனுமிவற்றின் சாரமெலாம்
ஏற்றி யதனோடே யின்னமுதைத் தான்கலந்து 363

1432. காதல் வெயிலிலே காயவைத்த கட்டியினால்
மாதவளின் மேனி வகுத்தான் பிரமனென்பேன். 364

1433. பெண்ணவளைக் கண்டு பெருங்களிகொண் டாங்ஙனே
நண்ணித் தழுவி நறுங்கள் ளிதழினையே 365

1434. முத்தமிட்டு முத்தமிட்டு மோகப் பெருமயக்கில்
சித்த மயங்கிச் சிலபோழ் திருந்தபின்னே 366

1435. பக்கத் திருந்தமணிப் பாவையுடன் சோலையெலாம்
ஒக்க மறைந்திடலும், 'ஓஹோ!' வெனக்கதறி 367

1436. வீழ்ந்தேன் பிறகு விழிதிறந்து பார்க்கையிலே
சூழ்ந்திருக்கும் பண்டைச் சுவடி, எழுதுகோல் 368

1437. பத்திரிகைக் கூட்டம் பழம்பாய் வரிசையெல்லாம்
ஒத்திருக்க 'நாம் வீட்டில் உள்ளோம்' எனவுணர்ந்தேன்.[1] 369

1438. சோலை குயில்–காதல்– சொன்னகதை யத்தனையும்
மாலை யழகின் மயக்கத்தால் உள்ளத்தே 370

1439. தோன்றியதோர் கற்பனையின் சூழ்ச்சியென்றே கண்டுகொண்டேன்
ஆன்ற தமிழ்ப்புலவீர், கற்பனையே யானாலும் 371

1440. வேதாந்த மாக விரித்துப் பொருளுரைக்க
யாதானுஞ் சற்றே யிடமிருந்தாற் கூறீரோ? 372

........................

1. 'ஞானரதம்': சத்திய யோகம் என்ற பிரிவின் கடைசியில் இது போன்ற வருணனை உண்டு.

# 92. பாப்பாப் பாட்டு*

1441. ஓடி விளையாடு பாப்பா – நீ
ஓய்ந்திருக்க லாகாது பாப்பா.
கூடி விளையாடு பாப்பா - ஒரு
குழந்தையை வையாதே பாப்பா. 1

1442. சின்னஞ் சிறுகுருவி போலே – நீ
திரிந்து பறந்துவா பாப்பா
வன்னப் பறவைகளைக் கண்டு – நீ
மனத்தில் மகிழ்ச்சிகொள்ளு பாப்பா. 2

1443. கொத்தித் திரியுமந்தக் கோழி - அதைக்
கூட்டி விளையாடு பாப்பா
எத்தித் திருடுமந்தக் காக்காய் – அதற்
கிரக்கப் படவேணும் பாப்பா. 3

1444. பாலைப் பொழிந்துதரும் பாப்பா – அந்தப்
பசுமிக நல்லதடி பாப்பா
வாலைக் குழைத்துவரு நாய்தான் – அது
மனிதர்க்குத் தோழனடி பாப்பா. 4

---

*1915 (மார்ச்சு. 'ஞானபாநு')*

** முதலில் 'ஞானபாநு'வில் வெளிவந்தபோது இதன் தலைப்பினைப் 'பாப்பா பாட்டு' எனப் பிழைபட வெளியிட்டுள்ளனர். பா.பி., அர. பதிப்புகளில் திருத்தமாக வெளியிட்டுள்ளனர். தனிச்சீரை விடுத்து நோக்கினால், நெடுகிலும் வெண்டளை அமைந்துள்ளதைக் காணலாம்.*

*- பதிப்பாசிரியர்*

1445. வண்டி யிழுக்கும் நல்ல குதிரை - ஊர்[1]
வயலி லுழுதுவரு மாடு
அண்டிப் பிழைக்கு நம்மை யாடு – இவை
ஆதரிக்க வேணுமடி பாப்பா. 5

1446. காலை யெழுந்தவுடன் படிப்பு - பின்பு
கனிவு கொடுக்குநல்ல பாட்டு.
மாலை முழுதும்விளை யாட்டு - என்று
வழக்கப் படுத்திக் கொள்ளு பாப்பா. 6

1447. பொய்சொல்லக் கூடாது பாப்பா - என்றும்
புறஞ்சொல்ல லாகாது பாப்பா
தெய்வ நமக்குத்துணை பாப்பா – ஒரு
தீங்குவர மாட்டாது பாப்பா. 7

1448. பாதகஞ் செய்பவரைக் கண்டால் - நாம்
பயங்கொள்ள லாகாது பாப்பா.
மோதி மிதித்துவிடு பாப்பா – அவர்
முகத்தி லுமிழ்ந்துவிடு பாப்பா. 8

1449. துன்ப நெருங்கிவந்த போதும் - நாம்
சோர்ந்துவிட லாகாது பாப்பா
அன்பு மிகுந்த தெய்வமுண்டு – துன்பம்
அத்தனையும் போக்கிவிடும் பாப்பா. 9

1450. சோம்பல் மிகக்கெடுதி பாப்பா – தாய்
சொன்னசொல்லைத் தட்டாதே பாப்பா.

..................................................

1 1917 (பரலி சு. நெல்லையப்பர்) நூலாக வெளிவந்தபோது 'நெல்லு' என்ற சொல் தனிச்சீராக உள்ளது.

தேம்பி யழுங்குழந்தை நொண்டி - நீ
திடங்கொண்டு போராடு பாப்பா. 10

1451. தமிழத்[1] திருநாடு தன்னைப் – பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா
அமிழ்தி லினியதடி பாப்பா - எங்கள்
ஆரிய[2] தேசமடி பாப்பா. 11

1452. சொல்லி லினிதுதமிழ்ச்[3] சொல்லே - அதைத்
தொழுது படித்திடடி பாப்பா.
செல்வ நிறைந்தஹிந்து ஸ்தானம் - அதைத்
தெய்வமென்று கொண்டாடு[4] பாப்பா. 12†

1455. சாதி பெருமையில்லை பாப்பா - அதில்
தாழ்ச்சி யுயர்ச்சிசெய்தல் பாவம்.

---

1 1917 (பரலி,சு.நெ.) பதிப்பில் "தமிழ்த்திரு நாடுதன்னைப் –பெற்ற" ஓசையமைதிக்கு இத்திருத்தமே பொருத்தம்.
2 ஷை பதிப்பில் : 'ஆன்றோர்கள்'
3 ஷை : 'லுயர்வுதமிழ்ச்'
4 ஷை : 'தினமும் புகழ்ந்திடடி.'

† ஷை பதிப்பில் 13, 14ஆம் பாடல்களாகப் பின்வருவன புதியனவாகச் சேர்க்கப்பட்டுள்ளன.

*1453.* *வடக்கி லிமயமலை பாப்பா – தெற்கில்*
*வாழுங் குமரிமுனை பாப்பா*
*கிடக்கும் பெரியகடல் கண்டாய் - இதன்*
*கிழக்கிலும் மேற்கிலும் பாப்பா* *13*

*1454.* *வேத முடையதிந்த நாடு - நல்ல*
*வீரர் பிறந்ததிந்த நாடு*
*சேதமில் லாதஹிந்துஸ் தானம் - இதைத்*
*தெய்வமென்று கும்பிடடி பாப்பா* *14*

நீதி, தெளிந்தமதி, அன்பு - இவை
நிறைய வுடையவர்கள் மேலோர்‡ 15

1456. உயிர்க ளிடத்திலன்பு வேணும் – தெய்வம்
உண்மையென்று தானறிதல் வேணும்
வயிர முடையநெஞ்சு வேணும் - இது
வாழு முறைமையடி பாப்பா. 16*

.........................................

‡ ஷை பதிப்பில்:

*சாதிக ளில்லையடி பாப்பா - குலத்*
*தாழ்ச்சி யுயர்ச்சிசொல்லல் பாவம்*
*நீதி உயர்ந்தமதி கல்வி - அன்பு*
*நிறைய வுடையவர்கள் மேலோர்*

* ஆக, 1917இல் நூல்வடிவில் பரலி நெல்லையப்பர் வெளியிட்டபோது பதினாறு பாடல்கள் காணப்படுகின்றன. பாரதியாரின் மிகநெருங்கிய நண்பர் நெல்லையப்பர்; கவிஞர் வாழ்ந்த காலத்திலேயே வெளிவந்த பதிப்பாதலின் பாரதியார் திருத்திக்கொடுத்தவண்ணமே வெளிவந்தது என்றே கொள்ளுதல் வேண்டும்.

- பதிப்பாசிரியர்

# 93. ஞானபாநு*

## ஸூர்ய ஸ்தோமம்

1457. திருவளர் வாழ்க்கை, கீர்த்தி, தீர,நல் லறிவு, வீரம்,
மருவுபல் கலையின் சோதி, வல்லமை, - யென்ப வெல்லாம்
வருவது ஞானத் தாலே, வையக முழுது மெங்கள்
பெருமைதா னிலவி நிற்கப் பிறந்தது *ஞானபாநு* 1

1458. கவலைகள், சிறுமை, நோவு, கைதவம், வறுமைத் துன்பம்,
அவலமா மனைத்தைக் காட்டில் அவலமாம் புலைமை யச்சம்,
இவையெலாம் அறிவிலாமை என்பதோ ரிருளிற் பேயாம்.
நவமுறு *ஞானபாநு* நண்ணுக; தொலைக பேய்கள். 2

1459. அனைத்தையுந் தேவர்க் காக்கி, அறத்தொழில் செய்யு மேலோர்
மனத்திலே சக்தி யாக வளர்வது நெருப்புத் தெய்வம்.
*தினத்தொளி* ஞானங் கண்டீர். இரண்டுமே சேர்ந்தால் வானோர்
இனத்திலே கூடி வாழ்வர் மனிதரென் றிசைக்கும் வேதம். 3

---

*1915 (ஏப்ரல் - ஞானபாநு)*

* *"ஸூர்ய ஸ்தோமம் - ஞானபாநு" - (பா.ஆ., பா.பி.)*

*'ஞானபாநு' (அ.)*

1460. பண்ணிய முயற்சி யெல்லாம் பயனுற வோங்கு மாங்கே,
எண்ணிய எண்ண மெல்லாம் எளிதிலே வெற்றி யெய்தும்,
திண்ணிய கருத்தி னோடும் சிரித்திடு முகத்தி னோடும்
நண்ணிடு ஞானபாநு வதனை நாம் நன்கு போற்றின். 4

## 94. புயற் காற்று

(நள - கார்த்திகை - 8உ புதன்கிழமை யிரவு)

ஒரு கணவனும் மனைவியும்

மனைவி சொல்லுகிறாள்:-

1461. "காற்ற டிக்குது கடல்குமுறுது
கண்ணை விழிப்பாய் நாயகனே,
தூற்றல் கதவு சாளர மெல்லாந்
தொளைத்த டிக்குது பள்ளியிலே.

கணவன் சொல்:-

1462. வானஞ்சி னந்தது; வையநடுங்குது;
வாழி பராசக்தி காத்திடவே
தீனக் குழந்தைகள் துன்பப்படாதிங்கு,
தேவி யருள்செய்ய வேண்டுகின்றோம். 2

---

*22-11-1916*

*27-11-1916 'சுதேசமித்திர'னில் 'புதுச்சேரியில் புயற்காற்று' என்ற தலைப்பில் பாரதியாரே ஒரு கட்டுரையும் எழுதியுள்ளார்.*

- பதிப்பாசிரியர்

மனைவி சொல்:-

1463. **நேற்றிருந் தோமந்த வீட்டினிலேயிந்த**
**நேர மிருந்தா லென்படுவோம்?**
**காற்றென வந்தது கூற்றமிங்கே நம்மைக்**
**காத்தது தெய்வ வலிமையன்றோ?** *3*

*'மழை' என்ற கதையில் இப்பாடலின் சில வரிகள் பாரதியாரால் தரப்பட்டுள்ளன. அங்குள்ள வரிகள் பின்வருமாறு:*

*காற்றடிக்குது கடல்குமுறுது*
*கண்ணை விழிப்பாய் நாயகனே*
*தூற்றல் கதவு சாளர மெல்லாம்*
*தொளைத்தடிக்குது கூடத்திலே – மழை*
*தொளைத்தடிக்குது கூடத்திலே*

## 95. பிழைத்த தென்னந் தோப்பு

1464. வயலிடை யினிலே – செழுநீர்
மடுக் கரையினிலே
அயலெவரு மில்லை – தனியே
ஆறுதல் கொள்ளவந்தேன். 1

1465. காற்ற டித்ததிலே - மரங்கள்
கணக்கிடத் தகுமோ?
நாற்றி னைப்போலே – சிதறி
நாடெங்கும் வீழ்ந்தனவே! 2

1466. சிறிய திட்டையிலே – உளதோர்
தென்னஞ் சிறுதோப்பு.
வறியவ னுடைமை – அதனை
வாயு பொடிக்கவில்லை. 3

1467. வீழ்ந்தன சிலவாம் – மரங்கள்
மீந்தன பலவாம்.
வாழ்ந்திருக்க வென்றே – அதனை
வாயு பொறுத்துவிட்டான். 4

1468. தனிமை கண்டதுண்டு - அதிலே
ஸார மிருக்குதம்மா!

---

*22–11–1916*

பனிதொ லைக்கும்வெயில் - அதுதேம்
பாகு மதுரமன்றோ? 5

1469. இரவி நின்றதுகாண் – விண்ணிலே
இன்ப வொளித்திரளாய்
பரவி யெங்கணுமே – கதிர்கள்
பாடிக் களித்தனவே. 6

1470. நின்ற மரத்திடையே - சிறிதோர்
நிழலினி லிருந்தேன்.
என்றுங் கவிதையிலே – நிலையாம்
இன்ப மறிந்துகொண்டேன். 7

1471. வாழ்க பராசக்தீ[1] – நினையே
வாழ்த்திடு வார்வாழ்வார்[2]
வாழ்க பராசக்தி! – இதையென்
வாக்கு மறவாதே. 8

(பா-டு): 1 வாழ்க பராசக்தி - (அர.)
2 வாழ்த்திடுவோர் வாழ்வார் - (பா. ஆ., பா.பி., அர.)

# 96. மழை

**1472.** திக்குக்க ளெட்டுஞ் சிதறி – தக்கத்
தீம்தரிகிட தீம்தரிகிட தீம்தரிகிட தீம்தரிகிட
பக்க மலைகளுடைந்து – வெள்ளம்
பாயுது பாயுது பாயுது – தாம்தரிகிட
தக்கத் ததிங்கிட தித்தோம் – அண்டம்
சாயுது சாயுது சாயுது – பேய்கொண்டு
தக்கை யடிக்குது காற்று – தக்கத்
தாம்தரிகிட தாம்தரிகிட தாம்தரிகிட தாம்தரிகிட    1

**1473.** வெட்டி யடிக்குது மின்னல் – கடல்
வீரத்திரை கொண்டு விண்ணை யிடிக்குது
கொட்டி யிடிக்குது மேகம் -கூ
கூவென்று விண்ணைக் குடையுது காற்று
சட்டச்சட சட்டச்சட டட்டா - என்று
தாளங்கள் கொட்டிக் கனைக்குது வானம்
எட்டுத் திசையு மிடிய – மழை
எங்ஙனம் வந்த தடாதம்பி வீரா!    2

---

*12-7-1917 (சுதேசமித்திரன்)*

**'கதைக் கொத்து' என்ற நூலில் 'மழை' என்ற கதையில் இப்பாடல் காணப்படுகிறது. "காளிதாஸன்" என்ற புனைபெயரில் பாரதி இதை எழுதியுள்ளார்.*
*- பதிப்பாசிரியர்*

1474. அண்டங் குலுங்குது தம்பி - தலை
ஆயிரந் தூக்கிய சேடனும் பேய்போல்
மிண்டிக் குதித்திடு கின்றான் - திசை
வெற்புக் குதிக்குது வானத்துத் தேவர்
சென்டு புடைத்திடு கின்றார் - என்ன
தெய்விகக் காட்சியைக் கண்முன்பு கண்டோம்
கண்டோம் கண்டோம் கண்டோம் - இந்தக்
காலத்தின் கூத்தினைக் கண்முன்பு கண்டோம் 3
தத்தரிகிட தத்தரிகிட தித்தோம்

'மழை' என்ற கதையில் வேணு முதலி என்ற பாத்திரம் பாடுவதாக இப்பாடல் அமைந்துள்ளது. இங்குள்ள பாடங்களில் சில வேறு வகையில் அங்கே உள்ளன.

-பதிப்பாசிரியர்.

## கண்ணன் பாட்டு

# 97. கண்ணன் - என் தோழன்

புன்னாக வராளி — திஸ்ரஜாதி ஏகதாளம்; வத்ஸல ரஸம்

1475. பொன்னவிர் மேனிச் சுபத்திரை மாதைப்
புறங்கொண்டு போவதற்கே—இனி
என்ன வழியென்று கேட்கி லுபாயம்
இருகணத் தேயுரைப்பான் — அந்தக்
"கன்னன்வில் லாளர் தலைவனைக் கொன்றிடக்
காணும் வழியொன்றில்லேன்— வந்திங்
குன்னைய டைந்தனன்" என்னி லுபாயம்
ஒருகணத் தேயுரைப்பான். 1

1476. கானகத் தேசுற்று நாளிலு நெஞ்சிற்
கலக்க மிலாதுசெய்வான் - பெருஞ்
சேனைத் தலைநின்று போர்செய்யும் போதினில்
தேர்ந டத்திக்கொடுப்பான் – என்றன்
ஊனை வருத்திடு நோய்வரும் போதினில்
உற்ற மருந்து சொல்வான் - நெஞ்சம்
ஈனக் கவலைக ளெய்திடும் போதில்
இதஞ்சொல்லி மாற்றிடுவான். 2

---

1917

1477. பிழைக்கும் வழிசொல்ல வேண்டுமென் றாலொரு
பேச்சினி லேசொல்லுவான்.
உழைக்கும் வழிவினை யாளும் வழிபயன்
உண்ணும் வழியுரைப்பான்
அழைக்கும் பொழுதினிற் போக்குச்சொல் லாமல்
அரைநொடிக் குள்வருவான்
மழைக்குக் குடைபசி நேரத் துணவென்றன்
வாழ்வினுக் கெங்கள்கண்ணன். 3

1478. கேட்ட பொழுதிற் பொருள்கொடுப் பான்சொல்லுங்
கேலி பொறுத்திடுவான் – எனை
ஆட்டங்கள் காட்டியும் பாட்டுக்கள் பாடியும்
ஆறுதல் செய்திடுவான் – என்றன்
நாட்டத்திற் கொண்ட குறிப்பினை யிஃதென்று
நான்சொல்லு முன்னுணர்வான் – அன்பர்
கூட்டத்தி லேயிந்தக் கண்ணனைப் போலன்பு
கொண்டவர் வேறுளரோ? 4

1479. உள்ளத்தி லேகரு வங்கொண்ட போதினில்
ஓங்கி யடித்திடுவான் – நெஞ்சில்
கள்ளத்தைக் கொண்டொரு வார்த்தைசொன் னாலங்கு
காறி யுமிழ்ந்திடுவான் – சிறு
பள்ளத்தி லேநெடு நாளழு குங்கெட்ட
பாசியை யெற்றிவிடும் - பெரு
வெள்ளத்தைப் போலருள் வார்த்தைகள் சொல்லி
மெலிவு தவிர்த்திடுவான். 5

1480. சின்னக் குழந்தைகள் போல்விளை யாடிச்
சிரித்துக் களித்திடுவான் – நல்ல

வன்ன மகளிர் வசப்பட வேபல
மாயங்கள் சூழ்ந்திடுவான் – அவன்
சொன்ன படிநட வாவிடி லோமிகத்
தொல்லை பிழைத்திடுவான் - கண்ணன்
தன்னை யிழந்து விடில்,ஐய கோ!பின்
சகத்தினில் வாழ்வதிலேன். 6

1481. கோபத்தி லேயொரு சொல்லிற் சிரித்துக்
குலுங்கிடச் செய்திடுவான் – மனஸ்
தாபத்தி லேயொன்று செய்து மகிழ்ச்சி
தளிர்த்திடச் செய்திடுவான் - பெரும்
ஆபத்தி னில்வந்து பக்கத்தி லேநின்
றதனை விலக்கிடுவான் – சுடர்த்
தீபத்தி லேவிழும் பூச்சிகள் போல்வருந்
தீமைகள் கொன்றிடுவான். 7

1482. உண்மை தவறி நடப்பவர் தம்மை
உதைத்து நசுக்கிடுவான் – அருள்
வண்மையி னாலவன் மாத்திரம் பொய்கள்
மலைமலை யாவுரைப்பான் – நல்ல
பெண்மைக் குணமுடை யான்சில நேரத்திற்
பித்தர் குணமுடையான் - மிகத்[1]
தன்மைக் குணமுடை யான்சில நேரம்
தழலின் குணமுடையான். 8

1483. கொல்லுங் கொலைக்கஞ்சி டாத மறவர்
குணமிகத் தானுடையான் – கண்ணன்
சொல்லு மொழிகள் குழந்தைகள் போலொரு

---

(பா-பு) : 1 பித்தர் குணமுடையான் - மிக்கத்- (பா.பி., அர.)

சூதறி யாதுசொல்வான் - என்றும்
நல்லவ ருக்கொரு தீங்கு நண்ணாது
நயமுறக் காத்திடுவான் – கண்ணன்
அல்லவ ருக்கு விடத்தினில், நோயில்,
அழலினி லுங்கொடியான் 9

1484. காதல் விளைய மயக்கிடும் பாட்டினிற்
கண்மகிழ் சித்திரத்தில் – பகை
மோதும் படைத்தொழில் யாவினு மேதிற
முற்றிய பண்டிதன்காண் - உயர்
வேத முணர்ந்த முனிவ ருணர்வினில்
மேவு பரம்பொருள்காண் - நல்ல
கீதை யுரைத்தெனை யின்புறச் செய்தவன்
கீர்த்திகள் வாழ்த்திடுவேன். 10

## 98. கண்ணன் - என் தாய்*

### நொண்டிச்சிந்து

1485. உண்ணஉண்ணத் தெவிட்டாத - அம்மை
உயிரெனும் முலையினில் உணர்வெனும்பால்
வண்ணமுற வைத்தெனக்கே – என்றன்
வாயினிற்கொண் டூட்டுமோர் வண்மையுடையாள்
கண்ணனெனும் பெயருடையாள் – என்னைக்
கட்டிநிறை வான்எனுந்தன் கையிலணைத்து
மண்ணெனுந்தன் மடியில்வைத்தே - பல
மாயமுறுங் கதைசொல்லி மனங்களிப்பாள். 1

1486. இன்பமெனச் சிலகதைகள் – எனக்
கேற்றமென்றும் வெற்றியென்றும் சிலகதைகள்
துன்பமெனச் சிலகதைகள் - கெட்ட
தோல்வியென்றும் வீழ்ச்சியென்றுஞ் சிலகதைகள்
என்பருவம் என்றன் விருப்பம் - எனும்
இவற்றினுக் கிணங்கவென் னுளமறிந்தே
அன்பொ[1]டவள் சொல்லிவருவாள் - அதில்
அற்புதமுண் டாய்ப்பர வசமடைவேன். 2

---

*1913 இல் எழுதி வெளியிடப்பட்ட கால வரிசையில் இந்நூலில் இப்பாடல் முன்பே (வரிசை எண் 74) இடம் பெற்றுள்ளது. தொடர்பு கருதி மீண்டும் இங்கே அச்சிடப்படுகிறது: – பதிப்பாசிரியர்*

*(பா- டு): 1 அன்போ டவள். (ஞானபாநு 1913)*

**1487.** விந்தைவிந்தை யாகவெனக்கே – பல
விதவிதத் தோற்றங்கள் காட்டுவிப்பாள்
சந்திரனென் றொருபொம்மை – அதில்
தண்ணமுதம் போலஒளி பரந்தொழுகும்
மந்தைமந்தை யாமேகம் - பல
வன்னமுறும் பொம்மையது மழைபொழியும்
முந்தஒரு சூரியனுண்டு - அதன்
முகத்தொளி கூறுதற்கொர்[1] மொழியிலையே. 3

**1488.** வானத்து மீன்களுண்டு - சிறு
மணிகளைப் போல்மின்னி நிறைந்திருக்கும்
நானத்தைக் கணக்கிடவே - மன
நாடிமிக முயல்கினுங் கூடுவதில்லை.
கானத்து மாலைகளுண்டு - எந்தக்
காலமுமொ ரிடம்[2]விட்டு நகர்வதில்லை
மோனத்தி லேயிருக்கும் - ஒரு
மொழியுரை யாதுவிளை யாடவருங்காண். 4

**1489.** நல்லநல்ல நதிகளுண்டு – அவை
நாடெங்கு மோடிவிளை யாடிவருங்காண்
மெல்லமெல்லப் போயவைதாம் - விழும்
விரிகடற் பொம்மையது மிகப்பெரிதாம்[3]
எல்லையதிற் காணுவதில்லை - அலை
எற்றிநுரை கக்கியொரு பாட்டிசைக்கும்,
ஒல்லெனுமப் பாட்டினிலே - அம்மை
ஓமெனும் பெயரென்றும் ஒலித்திடுங்காண் 5

---

(பா-டு): 1 முகத்தொளி கூறுதற்கோர் - (ஞானபாநு 1913)
2 காலமுமோரிடம் - (ஞானபாநு 1913)
3 விரிகடற் பொம்மையது மிகப்பெரிது – (ஞானபாநு 1913)

1490. சோலைகள் காவினங்கள் – அங்கு[1]
சூழ்தரும் பலநிற மணிமலர்கள்
சாலவு மினியனவாய் – அங்கு[2]
தருக்களில் தூங்கிடும் கனிவகைகள்
ஞாலமுற் றிலுநிறைந்தே - மிக
நயந்தரு பொம்மைக ளெனக்கெனவே
கோலமுஞ் சுவையுமுற - அவள்
கோடிபல கோடிகள் குவித்துவைத்தாள்[3] 6

1491. தின்றிடப் பண்டங்களும் – செவி
தெவிட்டறக் கேட்கநற் பாட்டுகளும்[4]
ஒன்றுறப் பழகுதற்கே - அறி
வுடையமெய்த் தோழரு மவள்கொடுத்தாள்
கொன்றிடு மெனஇனிதாய் - இன்பக்
கொடுநெருப் பாய்,அனற் சுவையமுதாய்
நன்றியல் காதலுக்கே – இந்த
நாரியர் தமையெனைச் சூழவைத்தாள். 7

1492. இறகுடைப் பறவைகளும் - நிலங்[5]
திரிந்திடும் விலங்குகள் ஊர்வனகள்
அறைகடல் நிறைந்திடவே - எண்ணில்
அமைத்திடற் கரியபல் வகைப்படவே
சுறவுகள் மீன்வகைகள் – எனத்
தோழர்கள் பலருமிங் கெனக்களித்தாள்
நிறைவுற இன்பம்வைத்தாள் -அதை
நினைக்கவு முழுதிலுங் கூடுதில்லை. 8

........................................

(பா-டு): 1 'அங்குச்' என்றிருந்தல் வேண்டும் - பதிப்பாசிரியர்
2 'அங்குத்' என்றிருத்தல் வேண்டும். - பதிப்பாசிரியர்
3 கோடி பல் கோடிகள் - (ஞானபாநு 1913)
4 தெவிட்டறக் கேட்க நற் பாட்டுக்களும் - (ஞானபாநு 1913,அர.)
5 சிறகுடைப் பறவைகளும் - (ஞானபாநு 1913)

1493. சாத்திரங் கோடிவைத்தாள் – அவை
தம்மினு முயர்ந்ததொர் ஞானம்வைத்தாள்[1]
மீத்திடும் பொழுதினிலே – நான்
வேடிக்கை யுறக்கண்டு நகைப்பதற்கே
கோத்தபொய் வேதங்களும் – மதக்
கொலைகளும் அரசர்தம் கூத்துக்களும்
மூத்தவர் பொய்ந்நடையும்[2] – இள
மூடர்தம் கவலையு மவள்புனைந்தாள். 9

1494. வேண்டிய கொடுத்திடுவாள் - அவை
விரும்புமுன் கொடுத்திட விரைந்திடுவாள்
ஆண்டருள் புரிந்திடுவாள் - அண்ணன்
அருச்சுனன் போலெனை யாக்கிடுவாள்
யாண்டுமெக் காலத்திலும் – அவள்
இன்னருள் பாடுநற் றொழில்புரிவேன்
நீண்டதொர்[3] புகழ்வாழ்வும் – பிற
ரிகரறு பெருமையு மவள்கொடுப்பாள். 10

(பா-டு): 1 தம்மினு முயர்ந்ததோர் - (ஞானபாநு 1913, அர.)
2 மூத்தவர் பொய் நடையும் - (ஞானபாநு 1913)
3 நீண்டதோர் – (ஞானபாநு 1913)

# 99. கண்ணன் - என் தந்தை

நொண்டிச்சிந்து. ப்ரதான ரஸம் அற்புதம்

1495. பூமிக் கெனையனுப்பினான் - அந்தப்
புதமண் டலத்திலென் தம்பிக ளுண்டு
நேமித்த நெறிப்படியே - இந்த
நெடுவெளி யெங்கணு நித்தமு ருண்டே
போமித் தரைகளிலெல்லாம் - மனம்
போலவிருந் தாளுபவ ரெங்க ளினத்தார்
சாமி யிவற்றினுக்கெல்லாம் - எங்கள்
தந்தையவன் சரிதைகள் சிறிது ரைப்பேன். 1

1496. செல்வத்திற்கொர் குறையில்லை - எந்தை
சேமித்து வைத்தபொன்னுக் களவொன் றில்லை
கல்வியில் மிகச்சிறந்தோன் - அவன்
கவிதையி னினிமையொர் கணக்கி லில்லை.
பல்வகை மாண்பினிடையே - கொஞ்சம்
பயித்திய மடிக்கடி தோன்றுவ துண்டு
நல்வழி செல்லுபவரை - மனம்
நையும்வரை சோதனைசெய் நடத்தை யுண்டு. 2

1497. நாவு துணிகுவதில்லை - உண்மை
நாமத்தை வெளிப்பட உரைப்ப தற்கே

---

*1917*

யாவருந் தெரிந்திடவே - எங்கள்
ஈசனென்றும் கண்ணனென்றும் சொல்லுவ துண்டு.
மூவகைப் பெயர்புனைந்தே – அவன்
முகமறி யாதவர் சண்டைகள் செய்வார்.
தேவர் குலத்தவ னென்றே - அவன்
செய்திதெரி யாதவர் சிலரு ரைப்பார். 3

1498. பிறந்தது மறக்குலத்தில் – அவன்
பேதமற வளர்ந்ததும் இடைக்கு லத்தில்
சிறந்தது பார்ப்பனருள்ளே – சில
செட்டிமக்க ளோடுமிகப் பழக்க முண்டு
நிறந்தனிற் கருமை கொண்டான் – அவன்
நேயமுறக் களிப்பது பொன்னிறப் பெண்கள்
துறந்த நடைகளுடையான் – உங்கள்
சூனியப்பொய்ச் சாத்திரங்கள் கண்டு நகைப்பான். 4

1499. ஏழைகளைத் தோழமைகொள்வான் - செல்வம்
ஏறியார் தமைக்கண்டு சீறி விழுவான்
தாழவரு துன்பமதிலும் - நெஞ்சத்
தளிர்ச்சிகொள் ளாதவர்க்குச் செல்வ மளிப்பான்
நாழிகைக்கொர் புத்தியுடையான் - ஒரு
நாளிருந்த படிமற்றொர் நாளினி லில்லை.
பாழிடத்தை நாடி யிருப்பான் – பல
பாட்டினிலுங் கதையிலு நேர மழிப்பான். 5

1500. இன்பத்தை யினிதெனவும் – துன்பம்
இனிதில்லை யென்றுமவன் எண்ணுவ தில்லை
அன்பு மிகவுமுடையான் - தெளிந்
தறிவினில் உயிர்க்குலம் ஏற்ற முறவே

வன்புகள் பலபுரிவான் - ஒரு
மந்திரியுண் டெந்தைக்கு விதியென் பவன்
முன்பு விதித்ததனையே - பின்பு
முறைப்படி யறிந்துண்ண மூட்டி விடுவான். 6

1501. வேதங்கள் கோத்துவைத்தான் – அந்த
வேதங்கள் மனிதர்தம் மொழியி லில்லை
வேதங்க ளென்றுபுவியோர் – சொல்லும்
வெறுங்கதைத் திரளிலவ் வேத மில்லை
வேதங்க ளென்றவற்றுள்ளே[1] – அவன்
வேதத்திற் சிலசில் கலந்த துண்டு
வேதங்க ளன்றியொன்றில்லை – இந்த
மேதினி மாந்தர்சொல்லும் வார்த்தைக ளெல்லாம் 7

1502. நாலு குலங்களமைத்தான் – அதை
நாசமுறப் புரிந்தனர் மூட மனிதர்
சீல மறிவுகருமம் – இவை
சிறந்தவர் குலத்தினிற் சிறந்தவ ராம்
மேலவர் கீழவரென்றே – வெறும்
வேடத்திற் பிறப்பினில் விதிப்பன வாம்
போலிச் சுவடியையெல்லாம் – இன்று
பொசுக்கிவிட்டா லெவர்க்கும் நன்மையுண் டென்பான்[2] 8

1503. வயது முதிர்ந்துவிடினும் – எந்தை
வாலிபக் களையென்று மாறுவ தில்லை
துயரில்லை மூப்புமில்லை - என்றும்
சோர்வில்லை நோயொன்று தொடுவதில்லை

---

(பா-டு): 1 வேதங்க ளென்பவற்றுள்ளே - (முதற்பதிப்பு 1917)

2 இப்பாட்டில் சீர்ப் பகுப்பிலே ஒருமைப்பாடு இல்லையெனினும் சிந்துக்குரிய ஓசை சிதையாமை உணரத்தக்கது.

- பதிப்பாசிரியர்

பயமில்லை பரிவொன்றில்லை - எவர்
பக்கமுநின் றெதிர்ப்பக்கம் வாட்டுவ தில்லை
நயமிகத் தெரிந்தவன்காண் - தனி
நடுநின்று விதிச்செயல் கண்டு மகிழ்வான். 9

1504. துன்பத்தில் நொந்து வருவோர் - தன்னைத்[1]
தூவென் றிகழ்ந்துசொல்லி வன்பு கனிவான்
அன்பினைக் கைக்கொளென்பான் - துன்பம்
அத்தனையு மப்பொழுது தீர்ந்திடு மென்பான்
என்புடை பட்டபொழுதும் - நெஞ்சில்
ஏக்கமுறப் பொறுப்பவர் தம்மை யுகப்பான்.
இன்பத்தை எண்ணுபவர்க்கே - என்றும்
இன்பமிகத் தருவதி லின்ப முடையான். 10

---

(பா·மு): 1 துன்பத்தில் நொந்து வருவோர் - தம்மைத் (தேசிகவிநாயகம் பிள்ளை, அர.)

## 100. கண்ணன் - என் சேவகன்

1505. கூலிமிகக் கேட்பார் கொடுத்ததெலாந் தாமறப்பார்;
வேலைமிக வைத்திருந்தால் வீட்டிலே தங்கிடுவார்; 1

1506. ஏனடா நீநேற்றைக் கிங்குவர வில்லையென்றால்
பானையிலே தேளிருந்து பல்லாற் கடித்ததென்பார்; 2

1507. வீட்டிலே பெண்டாட்டி மேற்பூதம் வந்ததென்பார்;
பாட்டியார் செத்துவிட்ட பன்னிரண்டா நாளென்பார்;[1] 3

1508. ஓயாமற் பொய்யுரைப்பார்; ஒன்றுரைக்க வேறுசெய்வார்;
தாயாதி யோடு தனியிடத்தே பேசிடுவார்; 4

1509. உள்வீட்டுச் செய்தியெலாம் ஊரம் பலத்துரைப்பார்;[2]
எள்வீட்டி லில்லையென்றால் எங்கு முரசறைவார்; 5

1510. சேவகராற் பட்ட சிரமமிக வுண்டுகண்டீர்;
சேவகரில் லாவிடிலோ செய்கை நடக்கவில்லை. 6

1511. இங்கிதனால் யானும் இடர்மிகுந்து வாடுகையில்
எங்கிருந்தோ வந்தான், இடைச்சாதி நானென்றான்; 7

---

*1917*

*(பா-டு): 1 பாட்டியார் செத்துவிட்ட பன்னிரெண்டாம் - (அர.) - இது தவறு.*
*- பதிப்பாசிரியர்*

*2 உள்வீட்டுச் செய்தியெல்லாம் - (அர.)*

1512. "மாடுகன்று மேய்த்திடுவேன், மக்களைநான் காத்திடுவேன்;
வீடு பெருக்கி விளக்கேற்றி வைத்திடுவேன்; 8

1513. சொன்னபடி கேட்பேன்; துணிமணிகள் காத்திடுவேன்;
சின்னக் குழந்தைக்குச் சிங்காரப் பாட்டிசைத்தே 9

1514. ஆட்டங்கள் காட்டி அழாதபடி பார்த்திடுவேன்;
காட்டுவழி யானாலும் கள்ளர்பய மானாலும் 10

1515. இரவிற் பகலிலே யெந்நேர மானாலும்
சிரமத்தைப் பார்ப்பதில்லை, தேவரீர் தம்முடனே 11

1516. சுற்றுவேன், தங்களுக்கோர் துன்பமுறா மற்காப்பேன்;
கற்றவித்தை யேதுமில்லை, காட்டு மனிதனையே,[1] 12

1517. ஆனபொழு துங்கோ லடி,குத்துப் போர்,மற்போர்,
நானறிவேன்; சற்றும் நயவஞ் சனைபுரியேன்[2] 13

1518. என்றுபல சொல்லிநின்றான். "ஏதுபெயர்? சொல்"என்றேன்
"ஒன்றுமில்லை - கண்ணனென்பார் ஊரிலுள்ளோர்
என்னை" என்றான். 14

1519. கட்டுறுதி யுள்ளவுடல், கண்ணிலே நல்லகுணம்,
ஒட்டுறவே நன்றா வுரைத்திடுஞ்சொல் ஈங்கிவற்றால், 15

1520. தக்கவனென் றுள்ளத்தே சார்ந்த மகிழ்ச்சியுடன்,
"மிக்கவுரை பலசொல்லி விருதுபல சாற்றுகிறாய்;[3] 16

---

*(பா-டு): 1 கற்ற வித்தை யேதுமில்லை, காட்டு மனிதன், ஐயே- (பா.பி., அர.)*
*2 நானறிவேன்; சற்றே (முதற் பதிப்பு 1977)*
*3 'மிக்கவுரை சொல்லி விருதுபல சாற்றுகிறாய்' என்றுதான் இருக்க வேண்டும், 'மிக்கவுரை பலசொல்லி' என்று இருப்பது நெடுகிலும் உள்ள வெண் டளைக்கு முரண்படுகிறது.*
*- பதிப்பாசிரியர்*

1521. கூலியென்ன கேட்கின்றாய்? கூறு"கென்றேன். "ஐயனே,
தாலிகட்டும் பெண்டாட்டி சந்ததிக ளேதுமில்லை 17

1522. நானோர் தனியாள், நரைதிரைதோன் றாவிடினும்
ஆன வயதிற் களவில்லை - தேவரீர் 18

1523. ஆதரித்தாற் போதும் அடியேனை; நெஞ்சிலுள்ள
காதல் பெரிதெனக்குக் காசுபெரி தில்லை"யென்றான் 19

1524. பண்டைக்கா லத்துப் பயித்தியத்தி லொன்றெனவே
கண்டு, மிகவும் களிப்புடனே நானவனை 20

1525. ஆளாகக் கொண்டுவிட்டேன். அன்று முதற்கொண்டு
நாளாக நாளாக நம்மிடத்தே கண்ணனுக்குப் 21

1526. பற்று மிகுந்துவரல் பார்க்கின்றேன்; கண்ணனால்
பெற்றுவரு நன்மையெலாம் பேசி முடியாது. 22

1527. கண்ணை யிமையிரண்டும் காப்பதுபோல், என்குடும்பம்
வண்ணமுறக் காக்கின்றான். வாய்முணுத்தல்
கண்டறியேன். 23

1528. வீதி பெருக்குகிறான்; வீடுசுத்த மாக்குகிறான்.
தாதியர்செய் குற்றமெலாந் தட்டி யடக்குகிறான்; 24

1529. மக்களுக்கு வாத்தி, வளர்ப்புத்தாய், வைத்தியனாய்
ஒக்கநயங் காட்டுகிறான். ஒன்றுங் குறைவின்றிப் 25

1530. பண்டமெல்லாஞ் சேர்த்துவைத்துப் பால்வாங்கி
மோர்வாங்கிப்
பெண்டுகளைத் தாய்போற் பிரியமுற ஆதரித்து, 26

1531. நண்பனாய் மந்திரியாய் நல்லா சிரியனுமாய்
பண்பிலே தெய்வமாய்ப் பார்வையிலே சேவகனாய் 27

1532. எங்கிருந்தோ வந்தான், இடைச்சாதி யென்றுசொன்னான்.
இங்கிவனை யான்பெறவே என்னதவஞ் செய்துவிட்டேன் 28

1533. கண்ணன் எனதகத்தே கால்வைத்த நாள்முதலாய்
எண்ணம், விசாரம் எதுவு மவன்பொறுப்பாய்ச் 29

1534. செல்வம், இளமாண்பு, சீர்,சிறப்பு, நற்கீர்த்தி,
கல்வி, அறிவு, கவிதை, சிவயோகம், 30

1535. தெளிவே வடிவாஞ் சிவஞானம், என்றும்
ஒளிசேர் நலமனைத்தும் ஓங்கிவரு கின்றனகாண்! 31

1536. கண்ணனைநான் ஆட்கொண்டேன்! கண்கொண்டேன்
கண்கொண்டேன்!
கண்ணனெனை யாட்கொள்ளக் காரணமு முள்ளனவே![1] 32

---

(பா-டு): 1 கண்ணனை யாட்கொள்ளக் – (அ.)

## 101. கண்ணன் - என் அரசன்*

1537. பகைமை முற்றி முதிர்ந்திடு மட்டிலும்
பார்த்திருப்ப தல்லா லொன்றுஞ் செய்திடான்
நகைபு ரிந்து பொறுத்துப் பொறுத்தையோ
நாட்கள் மாதங்க ளாண்டுகள் போக்குவான். 1

1538. கண்ணன் வென்று பகைமை யழிந்துநாம்
கண்ணிற் காண்ப தரிதெனத் தோன்றுமே;
எண்ணமிட் டெண்ண மிட்டுச் சலித்துநாம்
இழந்த நாட்கள் யுகமெனப் போகுமே. 2

1539. படைகள் சேர்த்தல், பரிசனம் சேர்த்திடல்,
பணமுண் டாக்க லெதுவும் புரிந்திடான்;
இடையன், வீர மிலாதவன், அஞ்சினோன்
என்றவர் சொலும்[1] ஏச்சிற்கு நாணிலான் 3

1540. கொல்லப் பூத மனுப்பிடு மாமனே
கோலு யர்த்துல காண்டு களித்திட

---

*1919*

*''கண்ணன் - என் அரசன்'' என்ற தலைப்பிட்ட இப்பாடல் 1917ஆம் வருடப் பதிப்பில் இல்லை. இரண்டாம் பதிப்பில்தான் முதன்முதலாக இடம் பெற்றது.

1 'சொல்லிடும்' என்றோ 'சொல்லும்' என்றோ இருத்தல் கூடுமோ
— பதிப்பாசிரியர்

முல்லை மென்னகை மாதர்க்கும் பாட்டிற்கும்
மோக முற்றுப் பொழுதுகள் போக்குவான். 4

1541. வான நீர்க்கு வருந்தும் பயிரென
மாந்தர் மற்றிவண் போர்க்குத் தவிக்கவும்
தானங் கீர்த்தனை தாளங்கள் கூத்துக்கள்
தனிமை வேய்ங்குழ லென்றிவை போற்றுவான். 5

1542. காலினைக் கையி னாற்பற்றிக் கொண்டுநாம்
கதியெமக் கொன்று காட்டுவை யென்றிட்டால்
நாலி லொன்று பலித்திடுங் காணென்பான்
நாமச் சொல்லின் பொருளெங் குணர்வதே? 6

1543. நாம வன்வலி நம்பி யிருக்கவும்
நாண மின்றிப் பதுங்கி வளருவான்.
தீமை தன்னை விலக்கவுஞ் செய்குவான்,
சிறுமை கொண்டொளித் தோடவுஞ் செய்குவான், 7

1544. தந்தி ரங்கள் பயிலவுஞ் செய்குவான்,
சவுரி யங்கள் பழகவுஞ் செய்குவான்,
மந்தி ரத்திற னும்பல காட்டுவான்,
வலிமை யின்றிச் சிறுமையில் வாழ்குவான், 8

1545. காலம் வந்துகை கூடுமப் போதிலோர்
கணத்தி லேபுதி தாக விளங்குவான்!
ஆல கால விடத்தினைப் போலவே
அகில முற்று மசைந்திடச் சீறுவான். 9

1546. வேரும் வேரடி மண்ணுமி லாமலே
வெந்து போகப் பகைமை பொசுக்குவான்.

பாரும் வானமு மாயிர மாண்டுகள்
பட்ட துன்பங் கணத்திடை மாற்றுவான்! 10

1547. சக்க ரத்தை யெடுப்ப தொருகணம்!
தருமம் பாரில் தழைத்தல் மறுகணம்!
இக்க ணத்தி லிடைக்கண மொன்றுண்டோ?
இதனுள் ளேபகை மாய்த்திட வல்லன்காண்! 11

1548. கண்ண னெங்க ளரசன் புகழினைக்
கவிதை கொண்டெந்தக் காலமும் போற்றுவேன்.
திண்ணை வாயில் பெருக்கவந் தேனெனைத்
தேசம் போற்றத்தன் மந்திரி யாக்கினான். 12

1549. நித்தச் சோரினுக்[1] கேவல் செயவந்தேன்
நிகரி லாப்பெருஞ் செல்வ முதவினான்
வித்தை நன்குகல் லாதவன் என்னுளே
வேத நுட்பம் விளங்கிடச் செய்திட்டான். 13

1550. கண்ண னெம்பெரு மானருள் வாழ்கவே!
கலி யழிந்து புவித்தவம் வாழ்கவே![2]
அண்ண லின்னருள் நாடிய நாடுதான்
அவல நீங்கிப் புகழி லுயர்கவே! 14

---

*(பா-டு): 1 நித்தச் சோற்றினுக்கேவல் - (அர.) இத்திருத்தம் பொருத்தமானது*
*2 கலியழிந்து புவித்தலம் - (அர.)*

## 102. கண்ணன் - என் சீடன்

ஆசிரியப்பா

1551. யானே யாகி என்னலாற் பிறவாய்
யானும் அவையுமாய் இரண்டினும் வேறாய்
யாதோ பொருளாம் மாயக் கண்ணன்
என்னிலு மறிவினிற் குறைந்தவன் போலவும்
என்னைத் துணைக்கொண் டென்னுடை முயற்சியால் 5
என்னடை பழகலால், என்மொழி கேட்டலால்,
மேம்பா டெய்த வேண்டினோன் போலவும்,
யான்சொலுங் கவிதை, என்மதி யளவை, -
இவற்றினைப் பெருமை யிலங்கின வென்று
கருதுவான் போலவும் கண்ணக் கள்வன் 10
சீடனா வந்தெனைச் சேர்ந்தனன். தெய்வமே!
பேதையேன் அவ்வலைப் பின்னலில் வீழ்ந்து
பட்டன தொல்லை பலபெரும் பாரதம்.
உளத்தினை வென்றிடேன் உலகினை வெல்லவும்,
தானகஞ் சுடாதேன் பிறர்தமைத் தானெனும் 15
சிறுமையி னகற்றிச் சிவத்திலே நிறுத்தவும்
தன்னுளே[1] தெளிவும் சலிப்பிலா மகிழ்ச்சியும்
உற்றிடேன் இந்தச் சகத்திலே யுள்ள

(பா-டு): 1 தன்னுள்ளே - (முதற் பதிப்பு 1917)

மாந்தர்க் குற்ற துயரெலா மாற்றி
இன்பத் திருத்தவும் - எண்ணிய பிழைக்கெனைத் 20
தண்டனை புரிந்திடத் தானுளங் கொண்டு,
மாயக் கண்ணன் வலிந்தெனைச் சார்ந்து,
புகழ்ச்சிகள் கூறியும் புலமையை வியந்தும்,
பலவகை யால்அகப் பற்றுறச் செய்தான்.
வெறும்வாய் மெல்லுங் கிழவிக் கி∴தோர் 25
அவலாய் மூண்டது. யானுமங் கவனை
உயர்நிலைப் படுத்தலில் ஊக்கமிக் கவனாய்
"இன்னது செய்திடேல், இவரொடு பழகேல்
இவ்வகை மொழிந்திடேல், இனையன விரும்பேல்,
இன்னது கற்றிடேல், இன்னநூல் கற்பாய்,
இன்னவ ருறவுகொள், இன்னவை விரும்புவாய்" 30
எனப்பல தருமம் எடுத்தெடுத் தோதி
ஓய்விலா தவனோ டுயிர்விட லானேன்.
கதையிலே கணவன் சொல்லினுக் கெல்லாம்
எதிர்செயும் மனைவிபோல், இவனுநான் காட்டும் 35
நெறியினுக் கெல்லாம் நேரெதிர் நெறியே
நடப்பா னாயினன். நானிலத் தவர்தம்
மதிப்பையும் புகழுறு வாழ்வையும் புகழையும்
தெய்வமாக் கொண்ட சிறுமதி யுடையேன்,
கண்ணனாஞ் சீடன்யான் காட்டிய வழியெலாம் 40
விலகியே நடக்கும் விநோதமிங் கன்றியும்
உலகினர் வெறுப்புறும் ஒழுக்கமத் தனையும்
தலையாக் கொண்டு சார்பெலாம் பழிச்சொலும்,
இகழுமிக் கவனாய் என்மனம் வருந்த
நடந்திடல் - கண்டேன். நாட்பட நாட்படக் 45
கண்ணனுந் தனது கழிபடு நடையில்
மிஞ்சுவா னாகி வீதியிற் பெரியோர்

கிழவிய ரெல்லாங் கிறுக்கனென் றிவனை
இகழ்ச்சியோ டிரக்கமுற் றேளனம் புரியும்
நிலையும் வந்திட்டான். நெஞ்சிலே யெனக்குத் 50
தோன்றிய வருத்தஞ் சொல்லிடப் படாது.
முத்தனாக் கிடனான்[1] முயன்றதோ ரிளைஞன்
பித்தனென் றுலகினர் பேசிய பேச்சென்
நெஞ்சினை யறுத்தது. நீதிகள் பலவும்
தந்திரம் பலவும் சாத்திரம் பலவும் 55
சொல்லிநான் கண்ணனைத் தொளைத்திட லாயினேன்.
தேவ நிலையிலே சேர்ந்திடா விடினும
மானுடந் தவறி மடிவுறா வண்ணம்
கண்ணனை நானுங் காத்திட விரும்பித்
தீயெனக் கொதித்துச் சினமொழி யுரைத்தும் 60
சிரித்துரை கூறியும் செள்ளென விழுந்தும்
கேலிகள் பேசிக் கிளறியும் இன்னும்
எத்தனை வகையிலோ, என்வழிக் கவனைக்
கொணர்ந்திட முயன்றேன், கொள்பய னொன்றிலை[2]
கண்ணன் பித்தனாய்க் காட்டா ளாகி, 65
எவ்வகைத் தொழிலினும்[3] எண்ணமற் றவனாய்
எவ்வகைப் பயனிலுங் கருத்திழந் தவனாய்[4]
குரங்காய்க் கரடியாய்க் கொம்புடைப் பிசாசாய்
யாதோ பொருளாய் எங்ஙனோ நின்றான். 70
இதனால்,
அகந்தையு மமதையும் ஆயிரம புண்ணுற

..............................................

(பா-டு): 1 'கிட நான்' என்றிருத்தல் வேண்டும்.

- பதிப்பாசிரியர்

2 கொணர்ந்திட முயன்றேன், கொள்பய னொன்றில்லை - (பா.பி.)
3 எவ்வகைத் தொழிலிலும் - (பா.பி., அர.)
4 'தவனாய்க்' என்றிருத்தல் வேண்டும் - பதிப்பாசிரிய[illegible]

யான்கடுஞ் சினமுற் றெவ்வகை யானும்
'கண்ணனை நேருறக் கண்டே தீர்ப்பேன்'
எனப்பெருந் தாப மெய்தினே னாகி, 75
"எவ்வா றேனும் இவனையோர் தொழிலில்
ஓரிடந் தன்னில் ஒருவழி வலிய
நிறுத்துவோ மாயின் நேருற் றிடுவான்"
என்றுளத் தெண்ணி, இசைந்திடுஞ் சமயங்
காத்திருந் திட்டேன் - ஒருநாட் கண்ணனைத்
தனியே யெனது வீட்டினிற் கொணடு, 80
"மகனே என்பால் வரம்பிலா நேசமும்,
அன்புநீ யுடையை. அதனையான் நம்பி,
நின்னிட மொன்று கேட்பேன். நீயது
செய்திடல் வேண்டும். சேர்க்கையின் படியே
மாந்தர்தஞ் செயலெலாம் வகுப்புறல் கண்டாய். 85
சாத்திர நாட்டமும், தருக்கமும், கவிதையில்
மெய்ப்பொரு ளாய்வதில் மிஞ்சிய விழைவும்
கொண்டோர் தமையே அருகினிற் கொண்டு
பொருளினுக் கலையு நேரம் போக
மிஞ்சிய பொழுதெலாம் அவருடன் மேவி 90
இருந்திட லாகுமேல் எனக்குநன் றுண்டாம்;
பொழுதெலாம் என்னுடன் போக்கிட விரும்பும்
அறிவுடை மகனிங் குனையலால் அறிந்திடேன்.
ஆதலால்,
என்பயன் கருதி எனக்கொரு துணையாய் 95
என்னுடன் சிலநாள் இருந்திட நின்னை
வேண்டிநிற் கின்றேன். வேண்டுதல் மறுத்தே
என்னைநீ துன்ப மெய்துவித் திடாமே,
இவ்வுரைக் கிணங்குவாய்" என்றேன். கண்ணனும்,
"அங்ஙனே புரிவேன். ஆயினின் னிடத்தே 100

தொழிலிலா தியாங்ஙனஞ் சோம்பரி லிருப்பது?
காரிய மொன்று காட்டுவை யாயின்,
இருப்பேன்'' என்றான். இவனுடை இயல்பையும்
திறனையுங் கருதி,"என் செய்யுளை யெல்லாம்
நல்லதோர் பிரதியில் நாடொறும் எழுதிக் 105
கொடுத்திடுந் தொழிலினைக் கொள்ளுதி'' என்றேன்
நன்றெனக் கூறியோர் நாழிகை யிருந்தான்.
"செல்வேன்'' என்றான், சினத்தொடு நானும்
பழங்கதை யெழுதிய பகுதியொன் றினையவன்
கையினிற் கொடுத்துக் "கவினுற இதனை 110
எழுதுக'' என்றேன். இணங்குவான் போன்றதைக்
கையிலே கொண்டு கணப்பொழு திருந்தான்
"செல்வேன்'' என்றான். சினந்தீ யாகினான்,
"ஏதடா, சொன்னசொல் அழித்துரைக் கின்றாய்?
பித்தனென் றுன்னை உலகினர் சொல்வது 115
பிழையிலை போலும்[1]'' என்றேன். அதற்கு
"நாளைவந் திவ்வினை நடத்துவேன்'' என்றான்.
"இத்தொழி லிங்கே இப்பொழு தெடுத்துச்
செய்கின் றனையா? செய்குவ தில்லையா?
ஒருரை சொல்''என் றுறுமினேன். கண்ணனும் 120
"இல்லை''யென் றொருசொல் இமைக்குமுன் கூறினான்.
வெடுக்கெனச் சினத்தீ வெள்ளமாப் பாய்ந்திடக்
கண்சிவந் திதழ்கள்[2] துடித்திடக் கனன்று நான்
"சீச்சீ, பேயே, சிறிதுபோழ் தேனும்
இனியென் முகத்தி னெதிர்நின் றிடாதே. 125
என்று மிவ்வுலகில் என்னிடத் தினிநீ

(பா-டு): 1 பிழையிலைப் போலும் - (முதற் பதிப்பு 1917- பா.பி., அர.)
2 கண் செவந் திதழ்கள் - (முதற் பதிப்பு 1917)

**போந்திடல் வேண்டா, போ,போ, போ,"என் –**
**றிடியுறச் சொன்னேன். கண்ணனும் எழுந்து**
**செல்குவ னாயினன். விழிநீர் சேர்ந்திட[1]**
**"மகனே, போகுதி, வாழ் கநீ, நின்னைத்** 130
**தேவர்காத் திடுக! நின்றனைச் செம்மை**
**செய்திடக் கருதிஏ தேதோ செய்தேன்.**
**தோற்றுவிட் டேனடா! சூழ்ச்சிக ளழிந்தேன்.**
**மறித்தினி வாராய், செல்லுதி, வாழிநீ!"**
**எனத்துயர் நீங்கி, அமைதியோ டிசைத்தேன்.** 135
**சென்றனன் கண்ணன். திரும்பியோர் கணத்தே**
**எங்கிருந் தோநல் லெழுதுகோல் கொணர்ந்தான்.**
**காட்டிய பகுதியைக் கவினுற வரைந்தான்.**
**"ஐயனே, நின்வழி யனைத்தையுங் கொள்வேன்[2]**
**தொழில்பல புரிவேன். துன்பமிங் கென்றும்,** 140
**இனிநினக் கென்னால் எய்திடா" தெனப்பல**
**நல்லசொல் லுரைத்து நகைத்தனன் மறைந்தான்.**
**மறைந்ததோர் கண்ணன் மறுகணத் தென்றன்**
**நெஞ்சிலே தோன்றி நிகழ்த்துவா னாயினன். -**
**"மகனே, ஒன்றை யாக்குதல், மாற்றுதல்,** 145
**அழித்திட லெல்லாம் நின்செய லன்றுகாண்.**
**தோற்றே னெனநீ உரைத்திடும் பொழுதிலே**
**வென்றாய், உலகினில் வேண்டிய தொழிலெலாம்**
**ஆசையுந் தாபமும் அகற்றியே புரிந்து**
**வாழ்கநீ" என்றான். வாழ்கமற் றவனே!** 150

---

*(பா-டு): 1 செல்குவ. தாயினன், விழிநீர் சேர்ந்திட - (முதற் பதிப்பு 1917)*
*செல்குவ னாயினன். விழிநீர் சோர்ந்திட - (பா.பி )*
*2 "ஐயனே, நின்வழி யனைத்தையுங் கொள்ளுவேன் - (அர.)*

## 103. கண்ணன் - எனது சற்குரு

புன்னாக வராளி - திஸ்ரஜாதி ஏகதாளம். ரஸங்கள்:
அற்புதம், பக்தி

1552. சாத்திரங் கள்பல தேடினேன் - அங்கு[1]
சங்கையில் லாதன சங்கையாம் - பழங்
கோத்திரங் கள்சொல்லு மூடர்தம் - பொய்மைக்[2]
கூடையி லுண்மை கிடைக்குமோ? - நெஞ்சில்
மாத்திர மெந்த வகையிலும் - சக
மாய முணர்ந்திடல் வேண்டுமே - என்னும்
ஆத்திர நின்ற திதனிடை - நித்தம்
ஆயிரந் தொல்லைகள் சூழ்ந்தன. 1

1553. நாடு முழுதிலுஞ் சுற்றிநான் - பல
நாட்க ளலைந்திடும் போதினில் - நிறைந்
தோடும் யமுனைக் கரையிலே - தடி
ஊன்றிச்சென் றாரொரோர்† கிழவனார் - ஒளி
கூடு முகமுந் தெளிவுதான் - குடி
கொண்ட விழியுஞ் சடைகளும் - வெள்ளைத்

---

*1917*

*(பாடு):* 1 'அங்குச்' என்றிருத்தல் வேண்டும் - பதிப்பாசிரியர்
2 'பொய்ம்மைக்' என்றிருத்தல் நலம் - பதிப்பாசிரியர்

† ஊன்றிச் சென்றாரோரோர் - (பா.பி., அர.)

தாடியுங் கண்டு வணங்கியே - பல
சங்கதி பேசி வருகையில் 2

1554. என்னுளத் தாசை யறிந்தவர் - மிக
இன்புற் றுரைத்திட லாயினர், – தம்பி
நின்னுளத் திற்குத் தகுந்தவன் - சுடர்
நித்திய மோனத் திருப்பவன் - உயர்
மன்னர் குலத்திற் பிறந்தவன் – வட
மாமது ரைப்பதி யாள்கின்றான் – கண்ணன்
தன்னைச் சரணென்று போவையேல் – அவன்
சத்தியங் கூறுவ னென்றனர். 3

1555. மாமது ரைப்பதி சென்றுநான் – அங்கு
வாழ்கின்ற கண்ணனைப் போற்றியே – என்றன்
நாமமு மூருங் கருத்துமே - சொல்லி
நன்மை தருகென வேண்டினன். - அவன்
காமனைப் போன்ற வடிவமும் - இளங்
காளையர் நட்பும் பழக்கமும் – கெட்ட
பூமியைக் காக்குந் தொழிலிலே – எந்தப்
போதுஞ் செலுத்திடுஞ் சிந்தையும் 4

1556. ஆடலும் பாடலுங் கண்டுநான் - முன்னர்
ஆற்றங் கரையினிற் கண்டதோர் - முனி
வேடந் தரித்த கிழவரைக் – கொல்ல
வேண்டுமென் றுள்ளத்தி லெண்ணினேன். – 'சிறு
நாடு புரந்திடு மன்னவன்[1] – கண்ணன்
நாளுங் கவலையில் மூழ்கினோன்; - தவப்
பாடுபட் டோர்க்கும் விளங்கிடா - உண்மை
பார்த்திவ னெங்ஙனங் கூறுவான்?' 5

(பா-டு): 1 நாடு புரிந்திடு மன்னவன் - (பா.பி.)

1557. என்று கருதி யிருந்திட்டேன் – பின்னர்
என்னைத் தனியிடங் கொண்டுபோய் - "நினை
நன்று மருவுக! மைந்தனே - பர
ஞான முரைத்திடக் கேட்பைநீ, - நெஞ்சில்
ஒன்றுங் கவலையில் லாமலே - சிந்தை
ஊன்ற நிறுத்திக் களிப்புற்றே – தன்னை
வென்று மறந்திடும் போழ்தினில் - அங்கு
விண்ணை யளக்கு மறிவுதான். 6

1558. "சந்திரன் சோதி யுடையதாம்; - அது
சத்திய நித்திய வஸ்துவாம் - அதைச்
சிந்திக்கும் போதினில் வந்துதான் – நின்னைச்[1]
சேர்ந்து தழுவி யருள்செயும். - அதன்
மந்திரத் தாலிவ் வுலகெலாம் - வந்த
மாயக் களிப்பெருங் கூத்துக்காண் - இதைச்
சந்ததம் பொய்யென் றுரைத்திடும் - மடச்
சாத்திரம் பொய்யென்று தள்ளடா. 7

1559. ஆதித் தனிப்பொரு ளாகுமோர் – கடல்
ஆருங் குமிழி உயிர்களாம். – அந்தச்
சோதி யறிவென்னு ஞாயிறு - தன்னைச்
சூழ்ந்த கதிர்க ளுயிர்களாம். - இங்கு
மீதிப் பொருள்க ளனைவையுமே - அதன்
மேனியில் தோன்றிடும் வண்ணங்கள். - வண்ண
நீதி யறிந்தின்ப மெய்தியே - ஒரு
நேர்மைத் தொழிலி லியங்குவார் 8

(பா-டு): 1 சிந்திக்கும் போதினில் வந்துதான் - நினைச் - (பா.பி., அர.)

1560. "சித்தத்தி லேசிவ நாடுவார் – இங்கு[1]
சேர்ந்து களித்துல காளுவார் – நல்ல
மத்த மதவெங் களிறுபோல் - நடை
வாய்ந்திறு மாந்து திரிகுவார். - இங்கு
நித்த நிகழ்வ தனைத்துமே - எந்தை
நீண்ட திருவரு ளால்வரும். - இன்பம்
சுத்த சுகந்தனி யாநந்தம் – எனச்
சூழ்ந்து கவலைகள் தள்ளியே 9

1561. "சோதி யறிவில் விளங்கவும் - உயர்
சூழ்ச்சி மதியில் விளங்கவும் -அற
நீதி முறைவழு வாமலே - எந்த
நேரமும் பூமித் தொழில் செய்து – கலை
ஓதிப் பொருளியல் கண்டுதாம் – பிறர்
உற்றிடுந் தொல்லைகள் மாற்றியே – இன்ப
மோதி விழிக்கும் விழியினார் – பெண்மை
மோகத்தில், செல்வத்தில், கீர்த்தியில், 10

1562. ஆடுதல், பாடுதல், சித்திரம் – கவி
யாதி யினைய கலைகளில் – உள்ளம்
ஈடுபட் டென்று நடப்பவர் - பிறர்
ஈன நிலைகண்டு துள்ளுவார், - அவர்
நாடும் பொருள்க ளனைத்தையும் – சில
நாளினி லெய்தப் பெறுகுவார் - அவர்
காடு புதரில் வளரினும் – தெய்வக்
காவன மென்றதைப் போற்றலாம். 11

---

1 'இங்குச்' என்றிருத்தல் வேண்டும்

– பதிப்பாசிரியர்

1563. "ஞானியர் தம்மியல் கூறினேன் - அந்த*
ஞானம் விரைவினி லெய்துவாய்" - எனத்
தேனி லினிய குரலிலே - கண்ணன்
செப்பவு முண்மை நிலைகண்டேன். பண்டை
ஈன மனிதக் கனவெலாம் - எங்ஙன்
ஏகி மறைந்தது கண்டிலேன்! - அறி
வான தனிச்சுடர் நான்கண்டேன்! - அதன்
ஆட லுலகென நான்கண்டேன்! 42

---

(பா-டு): *ஞானியர் தம்மியல் கூறினேன் = இந்த (முதல் பதிப்பு 1917)

## 104. கண்ணம்மா-என் குழந்தை

(பராசக்தியைக் குழந்தையாகக் கண்டு சொல்லிய பாட்டு இதனைப் பாட விரும்புவோர் பைரவி ராகம் ரூபகதாளத்தில்

ஸ ஸ ஸ - ஸா ஸா ஸா – பபபா
தநீத - பதப - பா
பபப - பதப - பமா - கரிஸா
ரிகம - ரிகரி - ஸா

என்ற ஸ்வர வரிசைகளை மாதிரியாக வைத்துக்கொண்டு மனோபாவப்படி மாற்றிப் பாடுக)

**1564. சின்னஞ் சிறுகிளியே - கண்ணம்மா**
**செல்வக் களஞ்சியமே!**
**என்னைக் கலிதீர்த்தே – உலகில்**
**ஏற்றம் புரியவந்தாய்.[1]** 1

---

*1917*

1 பாரதியார் காட்டியுள்ள சுர முறையில் இசை ஒழுங்குக்கு ஏற்பப் பிரிப்பதாயின்

சின்னஞ் சிறுகிளியே - கண்ணம்மா
செல்வக் களஞ்சிய மே
என்னைக் கலிதீர்த்தே - உலகில்
ஏற்றம் புரியவந் தாய்

என அமைத்தல் வேண்டும். இங்கு அடிக்கு ஐந்து சீர்கொண்ட சிந்தாக அச்சிடப்பட்டுள்ளது. பாரதியார் யாப்பியற் கொள்கைக்கு இது பொருந்து மென்பதை அவரே சுட்டிக் காட்டியுள்ள பிற சிந்துப் பாடல்களால் அறியலாம்.

- பதிப்பாசிரியர்.

1565. பிள்ளைக் கனியமுதே – கண்ணம்மா
பேசும்பொற் சித்திரமே!
அள்ளி யணைத்திடவே - என் முன்னே
ஆடி வருந்தேனே! 2

1566. ஓடி வருகையிலே - கண்ணம்மா
உள்ளங் குளிருதடி
ஆடித்திரிதல் கண்டால் – உன்னைப்போய்
ஆவி தழுவுதடி. 3

1567. உச்சி தனைமுகந்தால் - கருவம்
ஓங்கி வளருதடி
மெச்சி யுனையூரார் – புகழ்ந்தால்
மேனி சிலிர்க்குதடி. 4

1568. கன்னத்தில் முத்தமிட்டால் - உள்ளந்தான்
களவெறி கொள்ளுதடி
உன்னைத் தழுவிடிலோ – கண்ணம்மா
உன்மத்த மாகுதடி 5

1569. சற்றுன் முகஞ்சிவந்தால் – மனது
சஞ்சல மாகுதடி
நெற்றி சுருங்கக்கண்டால் – எனக்கு
நெஞ்சம் பதைக்குதடி. 6

1570. உன்கண்ணில் நீர்வழிந்தால் – என்னெஞ்சில்
உதிரங் கொட்டுதடி
என்கண்ணிற் பாவையன்றோ? - கண்ணம்மா
என்னுயிர் நின்னதன்றோ? 7

1571. சொல்லு மழலையிலே - கண்ணம்மா
துன்பங்கள் தீர்த்திடுவாய்
முல்லைச் சிரிப்பாலே - எனது
மூர்க்கந் தவிர்த்திடுவாய். 8

1572. இன்பக் கதைகளெல்லாம் - உன்னைப்போல்
ஏடுகள் சொல்வதுண்டோ
அன்பு தருவதிலே – உனைநேர்
ஆகுமோர் தெய்வமுண்டோ? 9

1573. மார்பி லணிவதற்கே - உன்னைப்போல்
வைர மணிகளுண்டோ?
சீர்பெற்று வாழ்வதற்கே – உன்னைப்போல்
செல்வம் பிறிதுமுண்டோ? 10

## 105. கண்ணன் - என் விளையாட்டுப் பிள்ளை

கேதாரம், கண்டஜாதி ஏகதாளம்;
ரஸங்கள் அற்புதம், சிருங்காரம்

1574. தீராத விளையாட்டுப் பிள்ளை - கண்ணன்
தெருவிலே பெண்களுக் கோயாத தொல்லை. (தீராத) 1

1575. தின்னப் பழங்கொண்டு தருவான் - பாதி
தின்கின்ற போதிலே தட்டிப் பறிப்பான்
என்னப்பன் என்னையன் என்றால் – அதனை
எச்சிற் படுத்திக் கடித்துக் கொடுப்பான். (தீராத) 2

1576. தேனொத்த பண்டங்கள் கொண்டு - என்ன
செய்தாலும் எட்டாத உயரத்தில் வைப்பான்
மானொத்த பெண்ணடி[1] யென்பான் - சற்று
மனமகிழு நேரத்தி லேகிள்ளி விடுவான். (தீராத) 3

1577. அழகுள்ள மலர்கொண்டு வந்தே - என்னை
அழஅழச் செய்துபின் "கண்ணைமூ டிக்கொள்,
குழலிலே சூட்டுவேன்" என்பான் - என்னைக்
குருடாக்கி மலரினைத் தோழிக்கு வைப்பான். (தீராத) 4

........................................

*1917*
*(பா-டு): 1 மானொத்த பெண்ணடீ - (முதற் பதிப்பு 1917)*

**1578.** பின்னலைப் பின்னின் றிழுப்பான் - தலை
பின்னேதி ரும்புமுன்[1] னேசென்று மறைவான்!
வன்னப் புதுச்சேலை தனிலே – புழுதி
வாரிச் சொரிந்தே வருத்திக் குலைப்பான். (தீராத) 5

**1579.** புள்ளாங் குழல்கொண்டு வருவான் - அமுது
பொங்கித் ததும்புநற் கீதம் படிப்பான்
கள்ளால் மயங்குவது போலே - அதைக்
கண்மூடி வாய்திறந் தேகேட் டிருப்போம். (தீராத) 6

**1580.** அங்காந் திருக்கும்வாய் தனிலே – கண்ணன்
ஆறேழு கட்டெறும் பைப்போட்டு விடுவான்
எங்காகிலும் பார்த்த துண்டோ? - கண்ணன்
எங்களைச் செய்கின்ற வேடிக்கை யொன்றோ? (தீராத) 7

**1581.** விளையாட வாவென் றழைப்பான் - வீட்டில்
வேலையென் றாலதைக் கேளா திழுப்பான்[2]
இளையாரொ டாடிக் குதிப்பான் - எம்மை
இடையிற் பிரிந்துபோய் வீட்டிலே சொல்வான் (தீராத) 8

**1582.** அம்மைக்கு நல்லவன் கண்டீர் - மூளி
அத்தைக்கு நல்லவன் தந்தைக்கு மஃதே.
எம்மைத் துயர்செய்யும் பெரியோர் - வீட்டில்
யாவர்க்கு நல்லவன் போலே நடப்பான். (தீராத) 9

---

*(பா-டு): 1 பின்னே திருப்புமுன் – (முதற் பதிப்பு 1917)*

*2 வேலையென் றாலதைக் கேளா திருப்பான் - (முதற் பதிப்பு 1917)*

1583. கோளுக்கு மிகவுஞ் சமர்த்தன் - பொய்மை[1]
குத்திரம் பழிசொலக் கூசாச் சழக்கன்
ஆளுக் கிசைந்தபடி பேசி - தெருவில்
அத்தனை பெண்களையு மாகா தடிப்பான். (தீராத) 10

1 'பொய்ம்மை' என்றிருப்பது சிறப்பு

- பதிப்பாசிரியர்

## 106. கண்ணன் - என் காதலன்

செஞ்சுருட்டி - திஸ்ர ஏகதாளம்; சிருங்கார ரஸம்

1584. தூண்டிற் புழுவினைப்போல் - வெளியே
சுடர்வி ளக்கினைப்போல்,
நீண்ட பொழுதாக - எனது
நெஞ்சந் துடித்ததடீ.
கூண்டுக் கிளியினைப்போல் - தனிமை
கொண்டு மிகவுநொந்தேன் -
வேண்டும் பொருளையெல்லாம் - மனது
வெறுத்து விட்டதடீ. 1

1585. பாயின் மிசைநானும் - தனியே
படுத் திருக்கையிலே,
தாயினைக் கண்டாலும் - ஸகியே
சலிப்பு வந்ததடீ.
வாயினில் வந்ததெல்லாம் - ஸகியே
வளர்த்துப் பேசிடுவீர்,
நோயினைப் போலஞ்சினேன் - ஸகியே
நுங்க ளுறவையெல்லாம். 2

1586. உணவு செல்லவில்லை - ஸகியே
உறக்கங் கொள்ளவில்லை

---

1917

மணம் விரும்பவில்லை - ஸகியே
மலர் பிடிக்கவில்லை
குண முறுதியில்லை – எதிலும்
குழப்பம் வந்ததடி
கணமு முள்ளத்திலே - சுகமே
காணக் கிடைத்ததில்லை, 3

1587. பாலுங் கசந்ததடீ – ஸகியே
படுக்கை நொந்ததடீ
கோலக் கிளிமொழியும் - செவியில்
குத்த லெடுத்ததடீ.
நாலு வயித்தியரும் – இனிமேல்
நம்புதற் கில்லையென்றார்
பாலத்துச் சோசியனும் – கிரகம்
படுத்து மென்றுவிட்டான். 4

1588. கனவு கண்டதிலே - ஒருநாள்
கண்ணுக்குத் தோன்றாமல்
இனம் விளங்கவில்லை - எவனோ
என்னகந் தொட்டுவிட்டான்
வினவக் கண்விழித்தேன் - ஸகியே
மேனி மறைந்துவிட்டான்
மனதில் மட்டிலுமே - புதிதோர்
மகிழ்ச்சி கண்டதடீ. 5

1589. உச்சி குளிர்ந்ததடீ - ஸகியே
உடம்பு நேராச்சு.
மச்சிலும் வீடுமெல்லாம் - முன்னைப்போல்
மனத்துக் கொத்ததடீ.

இச்சை பிறந்ததடி - எதிலும்
இன்பம் விளைந்ததடி.
அச்ச மொழிந்ததடி - ஸகியே
அழகு வந்ததடி. 6

1590. எண்ணும் பொழுதிலெல்லாம் - அவன்கை
இட்ட விடத்தினிலே
தண்ணென் றிருந்ததடி — புதிதோர்
சாந்தி பிறந்ததடி
எண்ணி யெண்ணிப்பார்த்தேன் - அவன்தான்
யாரெனச் சிந்தைசெய்தேன்
கண்ணன் திருவுருவம் - அங்ஙனே
கண்ணின்முன் னின்றதடி. 7

# 107. கண்ணன் - என் காதலன்

## உறக்கமும் விழிப்பும்

நாதநாமக்கிரியை - ஆதி தாளம் - ரஸங்கள் வீபத்ஸம், சிருங்காரம்

1591. நேர மிகுந்ததின்னும் நித்திரையின்றி - உங்கள்
நினைப்புத் தெரியவில்லை, கூத்தடிக்கிறீர்
சோர வுறங்கிவிழு நள்ளிரவிலே - என்ன
தூளி படுகுதடி இவ்விடத்திலே
ஊரை யெழுப்பிவிட நிச்சயங்கொண்டீர் - அன்னை
ஒருத்தியுண் டென்பதையு மறந்துவிட்டீர்
சார மிகுந்ததென்று வார்த்தைசொல்கிறீர் – மிகச்
சலிப்புத் தருகுதடி சகிப்பெண்களே. 1

1592. நானும் பலதினங்கள் பொறுத்திருந்தேன் - இது
நாளுக்கு நாளதிக மாகிவிட்டதே
கூன னொருவன் வந்திந் நாணிபின்னலைக்
கொண்டை மலர்சிதற நின்றிழுத்ததும்
ஆனை மதம்பிடித்திவ் - அஞ்சியம்மையின்
அருகினி லோடஇவள் மூர்ச்சையுற்றதும்
பானையில் வெண்ணெய்முற்றும் தின்றுவிட்டதால்
பாங்கி யுரோகிணிக்கு நோவுகண்டதும்

.........................................

*1917*

1593. பத்தினி யாளையொரு பண்ணைவெளியில்
பத்துச் சிறுவர்வந்து முத்தமிட்டதும்
நத்தி மகளினுக்கோர் சோதிடன்வந்து
நாற்ப தரசர்தம்மை வூக்களித்ததும்
கொத்துக் கனல்விழியக் கோவினிப்பெண்ணைக்
கொங்கத்து மூளிகண்டு கொக்கரித்ததும்
வித்தைப் பெயருடைய வீணியவளும்;
மேற்குத் திசைமொழிகள் கற்றுவந்ததும் 3

1594. எத்தனை பொய்களடி, என்னகதைகள்!
என்னை யுறக்கமின்றி இன்னல்செய்கிறீர்
சத்த மிடுங்குழல்கள் வீணைகளெல்லாம்
தாளங்க ளோடுகட்டி மூடிவைத்தங்கே,
மெத்த வெளிச்சமின்றி யொற்றைவிளக்கை
மேற்குச் சுவரருகில் வைத்ததன்பின்னர்,
நித்திரை கொள்ளஎனைத் தனியில்விட்டே
நீங்களெல் லீருமுங்கள்[1] வீடுசெல்லுவீர். 4

பாங்கியர் போன பின்பு தனியிருந்து சொல்லுதல்

1595. கண்க ளுறங்கவொரு காரணமுண்டோ,
கண்ணனை யின்றிரவு காண்பதன்முன்னே?
பெண்க ளெல்லோருமவர் வீடுசென்றிட்டார்
பிரிய மிகுந்தகண்ணன் காத்திருக்கின்றான்
வெண்கல வாணிகரின் வீதிமுனையில்
வேலிப் புறத்திலெனைக் காணடியென்றான்
கண்க ளுறங்கலெனுங் காரியமுண்டோ?
கண்ணனைக் கையிரண்டுங் கட்டலின்றியே? 5

---

(பா-டு): 1 நீங்களெல்லோரு முங்கள் – (பா.பி., அர.)

# 108. கண்ணன் - என் காதலன்

## காட்டிலே தேடுதல்

ஹிந்துஸ்தானி தோடி – ஆதிதாளம்: ரஸங்கள்,
பயாநகம், அத்புதம்

பல்லவி*

1596. திக்குத் தெரியாத காட்டில் - உனைத்
தேடித் தேடி யிளைத்தேனே 1

சரணங்கள்

1597. மிக்க நலமுடைய மரங்கள் - பல
விந்தைச் சுவையுடைய கனிகள் - எந்தப்
பக்கத்தையு மறைக்கும் வரைகள் - அங்கு[1]
பாடி நகர்ந்துவரு நதிகள் - ஒரு (திக்குத்) 2

1598. நெஞ்சிற் கனல்மணக்கும் பூக்கள் - எங்கும்
நீளக் கிடக்குமிலைக் கடல்கள் - மதி

---

*1917*

* இப்பாடலில் இடம்பெற்ற 'பல்லவி, 'சரணங்கள்' - ஆகிய சொற்கள் பிற்காலப் பதிப்புகளில் விடுபட்டுள்ளன.

- பதிப்பாசிரியர்

1 'அங்குப்' என்றிருத்தல் வேண்டும்.

- பதிப்பாசிரியர்

வஞ்சித் திடுமகழிச் சுனைகள் - முட்கள்
மண்டித் துயர்கொடுக்கும் புதர்கள் - ஒரு (திக்குத்) 3

1599. ஆசை பெறவிழிக்கும் மான்கள் - உள்ளம்
அஞ்சக் குரல்பழகும் புலிகள் - நல்ல
நேசக் கவிதைசொல்லும் பறவை - அங்கு
நீண்டே படுத்திருக்கும் பாம்பு - ஒரு (திக்குத்) 4

1600. தன்னிச்சை கொண்டலையும் சிங்கம் - அதன்
சத்தத்தி னிற்கலங்கும் யானை - அதன்
முன்னின் றோடுமின மான்கள் - இவை
முட்டா தயல்பதுங்குந் தவளை - ஒரு (திக்குத்) 5

1601. கால்கை சோர்ந்து விழலானேன் - இரு
கண்ணுந் துயில்படர லானேன் - ஒரு
வேல்கைக் கொண்டுகொலை வேடன் - உள்ளம்
வெட்கங் கொண்டொழிய விழித்தான் - ஒரு (திக்குத்) 6

1602. "பெண்ணே, உனதழகைக் கண்டு - மனம்
பித்தங் கொள்ளு"தென்று நகைத்தான் - "அடி
கண்ணே, எனதிருகண் மணியே - உனைக்
கட்டித் தழுவமனங் கொண்டேன். 7

1603. "சோர்ந்தே படுத்திருக்க லாமோ? - நல்ல
துண்டக் கறிசமைத்துத் தின்போம் - சுவை
தேர்ந்தே கனிகள்கொண்டு தருவேன் - நல்ல
தேங்கள் ளுண்டினிது களிப்போம்" 8

1604. என்றே கொடியவிழி வேடன் - உயிர்
இற்றுப் போகவிழித் துரைத்தான் - தனி

நின்றே இருகரமுங் குவித்து - அந்த
நீசன் முன்னரிவை சொல்வேன். - 9

1605. "அண்ணா, உனதடியில் வீழ்வேன் - எனை
அஞ்சக் கொடுமைசொல்ல வேண்டா - பிறன்
கண்ணாலஞ் செய்துவிட்ட பெண்ணை - உன்றன்
கண்ணாற் பார்த்திடவுந் தகுமோ?" 10

1606. "ஏடி, சாத்திரங்கள் வேண்டேன் - நின
தின்பம் வேண்டுமடி கனியே! - நின்றன்
மோடி கிறுக்குதடி தலையை - நல்ல
மொந்தைப் பழைய கள்ளைப் போலே." 11

1607. காதா லிந்தவுரை கேட்டேன் – அட
கண்ணா! வென்றலறி வீழ்ந்தேன் – மிகப்
போதாக வில்லையிதற் குள்ளே – என்றன்
போதந் தெளியநினைக் கண்டேன். 12

1608. கண்ணா, வேடனெங்கு[1] போனான்? - உனைக்
கண்டே யலறிவிழுந் தானோ? - மணி
வண்ணா! எனதபயக் குரலில் - எனை
வாழ்விக்க வந்தஅருள் வாழி! 13

........................................

1 'னெங்குப்' என்றிருத்தல் வேண்டும். - பதிப்பாசிரியர்

## 109. கண்ணன் - என் காதலன்

### பாங்கியைத் தூது விடுத்தல்

தங்கப்பாட்டு மெட்டு. ரஸங்கள்: சிருங்காரம், ரௌத்ரம்

1609. கண்ணன் மனநிலையைத் தங்கமே தங்கம் (அடி
தங்கமே தங்கம்)
கண்டுவர வேணுமடி தங்கமே தங்கம்
எண்ண முரைத்துவிடில் தங்கமே தங்கம் – பின்னர்
ஏதெனிலுஞ் செய்வமடி தங்கமே தங்கம். *1*

1610. கன்னிகை யாயிருந்து தங்கமே தங்கம் – நாங்கள்
காலங் கழிப்பமடி தங்கமே தங்கம்
அன்னிய மன்னர்மக்கள் பூமியி லுண்டாம் – என்னும்
அதனையுஞ் சொல்லிடடி தங்கமே தங்கம். *2*

1611. சொன்ன மொழிதவறு மன்னவ னுக்கே – எங்கும்
தோழமை யில்லையடி தங்கமே தங்கம்
என்ன பிழைகளிங்கு[1] கண்டிருக் கின்றான்? - அவை
யாவுந் தெளிவுபெறக் கேட்டு விடடீ. *3*

1612. மையல் கொடுத்துவிட்டுத் தங்கமே தங்கம் – தலை
மறைந்து திரிபவர்க்கு மானமு முண்டோ?

---

*1 'ளிங்குக்' என்றிருத்தல் வேண்டும்.*

*- பதிப்பாசிரியர்*

பொய்மை யுருவமெனக் கொண்டவ னென்றே – கிழப்
பொன்னி யுரைத்ததுண்டு தங்கமே தங்கம். 4

1613. ஆற்றங் கரையதனில் முன்ன மொருநாள் - எனை
அழைத்துத் தனியிடத்திற் பேசிய தெல்லாம்
தூற்றி நகர்முரசு சாற்றுவ னென்றே
சொல்லி வருவையடி தங்கமே தங்கம். 5

1614. சோர மிழைத்திடையர் பெண்க ளுடனே - அவன்
சூழ்ச்சித் திறமைபல காட்டுவ தெல்லாம்
வீர மறக்குலத்து மாத ரிடத்தே
வேண்டிய தில்லையென்று சொல்லி விடடி. 6

1615. பெண்ணென்று பூமிதனிற் பிறந்து விட்டால் – மிகப்
பீழை யிருக்குதடி தங்கமே தங்கம்
பண்ணொன்று வேய்ங்குழலில் ஊதி வந்திட்டான் - அதைப்
பற்றி மறக்குதில்லை பஞ்சை யுள்ளமே. 7

1616. நேர முழுதிலுமப் பாவி தன்னையே - உள்ளம்
நினைத்து மறுகுதடி தங்கமே தங்கம்.
தீர ஒருசொலின்று கேட்டு வந்திட்டால் – பின்பு
தெய்வ மிருக்குதடி தங்கமே தங்கம். 8

## 110. கண்ணன் - என் காதலன்*

ராகம் – பிலஹரி

1617. ஆசை முகமறந்து போச்சே - இதை
ஆரிடம் சொல்வேனடி தோழி?
நேச மறக்கவில்லை நெஞ்சம் - எனில்
நினைவு முகமறக்க லாமோ? *1*

1618. கண்ணில் தெரியுதொரு தோற்றம் - அதில்
கண்ண னழகுமுழு தில்லை
நண்ணு முகவடிவு காணில் - அந்த
நல்ல மலர்ச்சிரிப்பைக் காணோம். *2*

1619. ஓய்வு மொழிதலுமில் லாமல் - அவன்
உறவை நினைத்திருக்கு முள்ளம்
வாயு முரைப்பதுண்டு கண்டாய் - அந்த
மாயன் புகழினையெப் போதும் *3*

1620. கண்கள் புரிந்துவிட்ட பாவம் – உயிர்க்
கண்ண னுருமறக்க லாச்சு.

---

*1917*

* *அரசாங்கப் பதிப்பில் இத்தலைப்பினை அடுத்து, 'பிரிவாற்றாமை' என்ற கிளைத் தலைப்புத் தரப்பட்டுள்ளது:*

*- பதிப்பாசிரியர்*

பெண்க ளினத்தி லிதுபோலே - ஒரு
பேதையை முன்புகண்ட துண்டோ? 4

1621. தேனை மறந்திருக்கும் வண்டும் - ஒளிச்
சிறப்பை மறந்துவிட்ட பூவும்
வானை மறந்திருக்கும் பயிரும் - இந்த
வைய முழுதுமில்லை தோழி. 5

1622. கண்ணன் முகமறந்து போனால் – இந்தக்
கண்க ளிருந்துபய னுண்டோ?
வண்ணப் படமுமில்லை கண்டாய் – இனி
வாழும் வழியென்னடி தோழி? 6

## 111. கண்ணன் - என் காந்தன்*

வராளி, திஸ்ர - ஏகதாளம்: சிருங்கார ரஸம்

**1623.** கனிகள் கொண்டுதரும் - கண்ணன்
கற்கண்டு போலினிதாய்.
பனிசெய் சந்தனமும் - பின்னும்
பல்வகை யத்தர்களும்
குனியும் வாண்முகத்தான் - கண்ணன்
குலவி நெற்றியிலே
இனிய பொட்டிடவே - வண்ண
மியன்ற சவ்வாதும் *1*

**1624.** கொண்டை முடிப்பதற்கே – மணங்
கூடு தயிலங்களும்
வண்டு விழியினுக்கே – கண்ணன்
மை கொண்டுதரும்.
தண்டைப் பதங்களுக்கே – செம்மை
சார்ந்துசெம் பஞ்சுதரும்

---

*1917*

* இது நாயக - நாயகி பாவத்தில் புதிய வகை. இதில் கவிஞர் தம்மை ஒரு பரத்தையாக - விலைமகளாக-க் கற்பித்துக் கொண்டு, கண்ணனைக் காந்தனாகக் காட்டுகிறார். 'சங்கையிலாத பணம் தந்தே தழுவி மையல் செய்யும்' என்ற தொடரைக் காண்க.

- பதிப்பாசிரியர்

பெண்டிர் தமக்கெல்லாம் - கண்ணன்
பேசருந் தெய்வமடி! 2

1625. குங்குமங் கொண்டுவரும் - கண்ணன்
குழைத்து மார்பெழுத
சங்கையி லாதபணம் - தந்தே
தழுவி மையல்செய்யும்
பங்கமொன் றில்லாமல் - முகம்
பார்த்திருந் தாற்போதும்
மங்கள மாகுமடி - பின்னோர்
வருத்த மில்லையடி! 3

# 112. கண்ணம்மா - என் காதலி

## காட்சி வியப்பு

செஞ்சுருட்டி; ஏகதாளம்; ரஸங்கள்: சிங்காரம், அற்புதம்

1626. சுட்டும் விழிச்சுடர்தான் - கண்ணம்மா
சூரிய சந்திரரோ?
வட்டக் கரியவிழி - கண்ணம்மா
வானக் கருமைகொல்லோ?
பட்டுக் கருநீலப் - புடவை
பதித்த நல்வயிரம்
நட்ட நடுநிசியில் - தெரியும்
நக்ஷத் திரங்களடீ! 1

1627. சோலை மலரொளியோ - உனது
சுந்தரப் புன்னகைதான்?
நீலக் கடலலையே - உனது
நெஞ்சி லலைகளடீ
கோலக் குயிலோசை - உனது
குரலி னிமையடீ,
வாலைக் குமரியடீ - கண்ணம்மா
மருவக் காதல்கொண்டேன். 2

---

*1917*

1628. சாத்திரம் பேசுகிறாய் - கண்ணம்மா
சாத்திர மேதுக்கடி?
ஆத்திரங் கொண்டவர்க்கே - கண்ணம்மா
சாத்திர முண்டோடி?
மூத்தவர் சம்மதியில் – வதுவை
முறைகள் பின்புசெய்வோம்
காத்திருப் பேனோடி - இதுபார்
கன்னத்து முத்தமொன்று! 3

## 113. கண்ணம்மா - என் காதலி

### பின்னே வந்து நின்று கண் மறைத்தல்

நாதநாம க்ரியை – ஆதிதாளம்: சிருங்கார ரஸம்

1629. மாலைப் பொழுதிலொரு மேடைமிசையே
வானையுங் கடலையு நோக்கியிருந்தேன்
மூலைக் கடலினையவ் வானவளையம்
முத்தமிட் டேதழுவி முகிழ்த்தல்கண்டேன்.
நீல நெருக்கிடையில் நெஞ்சுசெலுத்தி
நேரங் கழிவதிலு நினைப்பின்றியே
சாலப் பலபலநற் பகற்கனவில்
தன்னை மறந்தலயந் தன்னிலிருந்தேன். 1

1630. ஆங்கப் பொழுதிலென் பின்புறத்திலே
ஆள்வந்து நின்றெனது கண்மறைக்கவே,
பாங்கினிற் கையிரண்டுந் தீண்டியறிந்தேன்;
பட்டுடை வீசுகமழ் தன்னிலறிந்தேன்;
ஓங்கி வருமுவகை யூற்றிலறிந்தேன்;
ஒட்டு மிரண்டுளத்தின் தட்டிலறிந்தேன்
"வாங்கி விடடிகையை யேடிகண்ணம்மா,
மாய மெவரிடத்தில்?" என்றுமொழிந்தேன். 2

1631. சிரித்த ஒலியிலவள் கைவிலக்கியே,
திருமித் தழுவி,"என்ன செய்திசொல்"லென்றேன்.
"நெரித்த திரைக்கடலில் என்னகண்டிட்டாய்?
நீல விசும்பினிடை என்னகண்டிட்டாய்?
திரித்த நுரையினிடை என்னகண்டிட்டாய்?
சின்னக் குமிழிகளில் என்னகண்டிட்டாய்?
பிரித்துப் பிரித்துநித மேகமளந்தே
பெற்ற நலங்கவென்ன? பேசுதி"என்றாள். 3

1632. "நெரித்த திரைக்கடலில் நின்முகங்கண்டேன்.
நீல விசும்பினிடை நின்முகங்கண்டேன்.
திரித்த நுரையினிடை நின்முகங்கண்டேன்.
சின்னக் குமிழிகளில் நின்முகங் கண்டேன்.
பிரித்துப் பிரித்துநித மேகமளந்தே
பெற்றதுன் முகமன்றிப் பிறிதொன்றில்லை.
சிரித்த ஒலியினிலுன் கைவிலக்கியே
திருமித் தழுவியதில் நின்முகங்கண்டேன்." 4

## 114. கண்ணம்மா - என் காதலி

### முகத்திரை களைதல்

நாத நாம க்ரியை – ஆதிதாளம்; ஸிருங்கார ரஸம்

1633. தில்லித் துருக்கர்செய்த வழக்கமடி - பெண்கள்
திரையிட்டு முகமலர் மறைத்துவைத்தல்.
வல்லி யிடையினையும் ஓங்கிமுன்னிற்கும் - இந்த
மார்பையு மூடுவது சாத்திரங்கண்டாய்.
வல்லி யிடையினையும் மார்பிரண்டையும் - துணி
மறைத்தத னாலழகு மறைந்ததில்லை.
சொல்லித் தெரிவதில்லை மன்மதக்கலை - முகச்
சோதி மறைத்துமொரு காதலிங்குண்டோ? 1

1634. ஆரியர் முன்னெறிகள் மேன்மையென்கிறாய் - பண்டை
ஆரியப் பெண்களுக்குத் திரைகளுண்டோ?
ஓரிரு முறைகண்டு பழகியபின் - வெறும்
ஒப்புக்குக் காட்டுவதிந் நாணமென்னடி?
யாரிருந் தென்னையிங்கு தடுத்திடுவார்? - வலு
வாக முகத்திரையை யகற்றிவிட்டால்?
காரிய மில்லையடி வீண்பசப்பிலே - கனி
கண்டவன் தோலுரிக்கக் காத்திருப்பனோ?[1] 2

---

*1917*

*(பா-டு): 1 கண்டவன் தோலுரிக்கக் காத்திருப்பேனா? - (முதற்பதிப்பு 1917)*
*கண்டவன் தோலுரிக்கக் காத்திருப்பேனோ? - (பா.பி.)*

# 115. கண்ணம்மா - என் காதலி

## நாணிக் கண் புதைத்தல்

நாத நாமக்கிரியை, ஆதிதாளம்; சிருங்கார ரஸம்

1635. மன்னர் குலத்தினிடைப் பிறந்தவளை - இவன்
மருவ நிகழ்ந்ததென்று நாணமுற்றதோ?
சின்னஞ் சிறுகுழந்தை யென்றகருத்தோ - இங்கு[1]
செய்யத் தகாதசெய்கை செய்தவருண்டோ?
வன்ன முகத்திரையை களைந்திடென்றேன் - நின்றன்
மதங்கண்டு துகிலினை வலிதுரிந்தேன்.
என்ன கருத்திலடி கண்புதைக்கிறாய்? - எனக்
கெண்ணப் படுவதில்லை யேடிகண்ணம்மா! *1*

1636. கன்னி வயதிலுனைக் கண்டதில்லையோ? - கன்னங்
கன்றிச் சிவக்கமுத்த மிட்டதில்லையோ?
அன்னியமாக நம்முள் எண்ணுவதில்லை - இரண்
டாவியுமொன் றாகுமெனக் கொண்டதில்லையோ?
பன்னிப் பலவுரைகள் சொல்லுவதென்னே? – துகில்
பறித்தவன் கைபறிக்கப் பயங்கொள்வனோ?[2]

---

*1917*

*(பா–டு): 1* இங்குச், என்றிருத்தல் வேண்டும்.

*2* பறித்தவன் கைபறிக்கப் பயங் கொள்வானோ! (அர.)

- பதிப்பாசிரியர்

என்னைப் புறமெனவுங் கருதுவதோ? - கண்கள்
இரண்டினி லொன்றையொன்று கண்டுவெள்குமோ? 2

1637. நாட்டினிற் பெண்களுக்கு நாயகர்சொல்லும் - சுவை
நைந்த பழங்கதைகள் நானுரைப்பதோ?
பாட்டுஞ் சுதியுமொன்று கலந்திடுங்கால் - தம்முட்
பன்னி யுபசரணை பேசுவதுண்டோ?
நீட்டுங் கதிர்களொடு நிலவுவந்தே - விண்ணை
நின்று புகழ்ந்துவிட்டுப் பின்மருவுமோ?
மூட்டும் விறகினையச் சோதிகவ்வுங்கால் - அவை
முன்னுப சாரவகை மொழிந்திடுமோ? 3

1638. சாத்திரக் காரரிடம் கேட்டுவந்திட்டேன் - அவர்
சாத்திரஞ் சொல்லியதை நினக்குரைப்பேன்:
நேற்றுமுன் னாளில்வந்த உறவன்றடி – மிக
நெடும்பண்டைக் காலமுதல் நேர்ந்துவந்ததாம்.
போற்றுமி ராமனென முன்புதித்தனை - அங்கு[1]
பொன்மிதி லைக்கரசன் பூமடந்தைநான்;
ஊற்றமு தென்னவொரு வேய்ங்குழல்கொண்டோன் – கண்ணன்
உருவ நினக்கமையப் பார்த்தனங்குநான்; 4

1639. முன்னை மிகப்பழமை யிரணியனாம் - எந்தை
மூர்க்கந் தவிர்க்கவந்த நாரசிங்கனீ,[2]
பின்னையொர் புத்தனென நான்வளர்த்திட்டேன் - ஒளிப்
பெண்மை அசோதரையென் றுன்னையெய்தினேன்.

.......................................

(பா-டு): 1 'அங்குப்' என்றிருத்தல் வேண்டும்.
- பதிப்பாசிரியர்
2 மூர்க்கந் தவிர்க்க வந்த நரசிங்கனீ - (பா.பி., அர.)

சொன்னவர் சாத்திரத்தில் மிகவல்லர்காண் - அவர்
சொல்லிற் பழுதிருக்கக் காரணமில்லை
இன்னும் கடைசிவரை ஒட்டிருக்குமாம் – இதில்
ஏதுக்கு நாணமுற்றுக் கண்புதைப்பதே? 5

## 116. கண்ணம்மா - என் காதலி

### குறிப்பிடம் தவறியது

செஞ்சுருட்டி, ஆதிதாளம் – ஸ்ருங்கார ரசம்

1640. தீர்த்தக் கரையினிலே - தெற்குமூலையில்
செண்பகத் தோட்டத்திலே,
பார்த்திருந்தால் வருவேன் – வெண்ணிலாவிலே
பாங்கியோ டென்றுசொன்னாய்
வார்த்தை தவறிவிட்டாய் - அடி கண்ணம்மா!
மார்பு துடிக்குதடீ!
பார்த்த விடத்திலெல்லாம் – உன்னைப்போலவே
பாவை தெரியுதடி! 1

1641. மேனி கொதிக்குதடீ – தலைசுற்றியே
வேதனை செய்குதடீ
வானி லிடத்தையெல்லாம் - இந்தவெண்ணிலா
வந்து தழுவதுபார்.
மோனத் திருக்குதடீ – இந்தவையகம்
மூழ்கித் துயிலினிலே
நானொருவன் மட்டிலும் - பிரிவென்பதோர்
நரகத் துழலுவதோ? 2

**1642.** கடுமை யுடையதடீ - எந்தநேரமும்
காவலுன் மாளிகையில்,
அடிமை புகுந்தபின்னும் - எண்ணும்போதுநான்
அங்கு வருதற்கில்லை[1]
கொடுமை பொறுக்கவில்லை - கட்டுங்காவலும்
கூடிக் கிடக்குதங்கே
நடுமை யரசியவள் - எதற்காகவோ
நாணிக் குலைந்திடுவாள். *3*

**1643.** கூடிப் பிரியாமலே - ஓரிராவெலாம்
கொஞ்சிக் குலவியங்கே,
ஆடி விளையாடியே - உன்றன்மேனியை
ஆயிரங் கோடிமுறை,
நாடித் தழுவிமனக் - குறைதீர்ந்துநான்
நல்ல களியெய்தியே
பாடிப் பரவசமாய் - நிற்கவேதவம்
பண்ணிய தில்லையடி! *4*

---

*(பா-டு): 1 அங்கு வருவதற்கில்லை —(அ.ம.)*

## 117. கண்ணம்மா - என் காதலி

### யோகம்

1644. பாயுமொளி நீயெனக்கு - பார்க்கும்விழி நானுனக்கு
தோயுமது நீயெனக்கு - தும்பியடி நானுனக்கு
வாயுரைக்க வருகுதில்லை - வாழிநின்றன்
மேன்மையெல்லாம்
தூயசுடர் வானொளியே - சூறையமுதே கண்ணம்மா. 1

1645. வீணையடி நீயெனக்கு - மேவும்விரல் நானுனக்கு
பூணும்வட நீயெனக்கு - புதுவயிர நானுனக்கு
காணுமிடந் தோறுநின்றன் - கண்ணினொளி வீசுதடி
மானுடைய பேரரசே - வாழ்வுநிலையே!கண்ணம்மா 2

1646. வானமழை நீயெனக்கு - வண்ணமயில் நானுனக்கு
பானமடி நீயெனக்கு – பாண்டமடி நானுனக்கு[1]
ஞானவொளி வீசுதடி[2] – நங்கைநின்றன் சோதிமுகம்
ஊனமறு நல்லழகே -ஊறுசுவையே! கண்ணம்மா. 3

1647. வெண்ணிலவு நீயெனக்கு - மேவுகடல் நானுக்கு
பண்ணுசுதி நீயெனக்கு - பாட்டினிமை நானுனக்கு

.......................................

(பா-டு): 1 பானமடி நீ யெனக்கு, பாண்டமிங்கு நானுனக்கு
(பாரதியார் திருத்தம்)
2 ஞானவொளி வீசுதடீ – (பாரதியார் திருத்தம்)

எண்ணியெண்ணிப் பார்த்திடிலோர் எண்ணமில்லை
நின்சுவைக்கே[1]
கண்ணின்மணி போன்றவனே! கட்டியமுதே! கண்ணம்மா! 4

**1648.** வீசுகமழ் நீயெனக்கு - விரியுமலர் நானுனக்கு
பேசுபொருள் நீயெனக்கு - பேணுமொழி நானுனக்கு
நேசமுள்ள வான்சுடரே! நின்னழகை யேதுரைப்பேன்?
ஆசைமது வே,கனியே, அள்ளுசுவையே! கண்ணம்மா. 5

**1649.** காதலடி நீயெனக்கு – காந்தமடி நானுனக்கு
வேதமடி நீயெனக்கு - வித்தையடி நானுனக்கு
போதமுற்ற போதினிலே பொங்கிவருந் தீஞ்சுவையே!
நாதவடி வானவளே, நல்லவுயிரே, கண்ணம்மா! 6

**1650.** நல்லவுயிர் நீயெனக்கு - நாடியடி[2] நானுனக்கு
செல்வமடி நீயெனக்கு - சேமநிதி நானுனக்கு
எல்லையற்ற பேரழகே! எங்குநிறை பொற்சுடரே!
முல்லைநிகர் புன்னகையாய்! மோதுமின்பமே! கண்ணம்மா! 7

**1651.** தாரையடி நீயெனக்கு – தண்மதிய நானுனக்கு
வீரமடி நீயெனக்கு – வெற்றியடி நானுனக்கு
தாரணியில், வானுலகில், சார்ந்திருக்கு மின்பமெலாம்
ஒருருவ மாய்ச்சமைந்தாய்! உள்ளமுதமே கண்ணம்மா! 8

---

*(பா-டு):* 1 எண்ணியெண்ணிப் பார்த்திடிலோர் எல்லையில்லை
(பாரதியார் திருத்தம்)
எண்ணி யெண்ணிப் பார்த்திடிலோர் எண்ணமிலை - (பா.பி.,அர)
2 நல்லவுயிர் நீயெனக்கு - நாடியது (பாரதியார் திருத்தம்)

## 118. கண்ணன் என் - ஆண்டான்

புன்னாகவராளி திஸ்ர: - ஏகதாளம்: ரஸங்கள்:அற்புதம், கருணை

1652. தஞ்ச முலகினில் எங்கணு மின்றித்
தவித்துத் தடுமாறி[1]
பஞ்சைப் பறைய னடிமை புகுந்தேன்
பார முனக்காண்டே -
ஆண்டே - பாரமுனக் காண்டே! 1

1653. துன்பமு நோயு மிடிமையுந் தீர்த்துச்
சுகமரு ளல்வேண்டும்!
அன்புட னின்புகழ் பாடிக்கு தித்துமின்
ஆணை வழிநடப்பேன் -
ஆண்டே – ஆணைவழி நடப்பேன். 2

1654. சேரி முழுதும் பறையடித் தேயருட்
சீர்த்திகள் பாடிடுவேன்
பேரிகை கொட்டித் திசைக ளதிரநின்
பெயர் முழக்கிடுவேன்
ஆண்டே - பெயர்மு ழக்கிடுவேன். 3

---

*1917*

1 'தடுமாறிப்' என்றிருத்தல் வேண்டும்.

- பதிப்பாசிரியர்

**1655.** பண்ணைப் பறையர்தங் கூட்டத்தி லேயிவன்
பாக்கிய மோங்கிவிட்டான்
கண்ண னடிமை யிவனெனுங் கீர்த்தியில்
காதலுற் றிங்குவந்தேன் - ஆண்டே -
காதலுற் றிங்குவந்தேன். 4

**1656.** காடு கழனிகள் காத்திடு வேன்நின்றன்
காலிகள் மேய்த்திடுவேன்
பாடுபடச் சொல்லிப் பார்த்ததன் பின்னரென்
பக்குவஞ் சொல்லாண்டே -
ஆண்டே - பக்குவஞ் சொல்லாண்டே! 5

**1657.** தோட்டங்கள் கொத்திச் செடிவளர்க் கச்சொல்லிச்
சோதனை போடாண்டே
காட்டு மழைக்குறி தப்பிச்சொன் னாலெனைக்
கட்டியடி யாண்டே
- ஆண்டே - கட்டியடி யாண்டே! 6

**1658.** பெண்டு குழந்தைகள் கஞ்சி குடித்துப்
பிழைத்திட வேண்டுமையே!
அண்டை அயலுக்கென் னாலுப காரங்கள்
ஆகிட வேண்டுமையே! 7
- உபகாரங்கள் - ஆகிட வேண்டுமையே!

**1659.** மானத்தைக் காக்கவோர் நாலு முழத்துணி
வாங்கித் தரவேணும்
தானத்துக் குச்சில வேட்டிகள் வாங்கித்
தரவும் கடனாண்டே!
- சிலவேட்டி - தரவுங் கடனாண்டே! 8

**1660.** ஒன்பது வாயிற் குடிலினைச் சுற்றி
ஒருசில பேய்கள் வந்தே
துன்பப் படுத்துது, மந்திரஞ் செய்து
தொலைத்திட வேண்டுமையே!
- பகையாவுந் – தொலைத்திட வேண்டுமையே! *9*

**1661.** பேயும் பிசாசுந் திருடரு மென்றன்
பெயரினைக் கேட்டளவில்,
வாயுங் கையுங்கட்டி அஞ்சி நடக்க
வழிசெய்ய வேண்டுமையே!
- தொல்லைதீரும் - வழிசெய்ய வேண்டுமையே! *10*

## 119. கண்ணம்மா - எனது குலதெய்வம்

ராகம் – புன்னாகவராளி

பல்லவி

1662. நின்னைச் சரணடைந்தேன் - கண்ணம்மா!
நின்னைச் சரணடைந்தேன்! *1*

சரணங்கள்

1663. பொன்னை உயர்வைப் புகழை விரும்பிடும்
என்னைக் கவலைகள் தின்னத் தகாதென்று (நின்னை) *2*

1664. மிடிமையு மச்சமு மேவியென் னெஞ்சிற்
குடிமை புகுந்தன, கொன்றவை போக்கென்று *3*

1665. தன்செய லெண்ணித் தவிப்பது தீர்ந்திங்கு
நின்செயல் செய்து நிறைவு பெறும்வணம் (நின்) *4*

1666. துன்ப மினியில்லை, சோர்வில்லை, தோற்பில்லை
அன்பு நெறியில் அறங்கள் வளர்த்திட (நின்) *5*

1667. நல்லது தீயது நாமறியோம் அன்னை!
நல்லது நாட்டுக! தீமையை ஓட்டுக! (நின்) *6*

.....................................

*1917*

## 120. முரசு

1669. ஊருக்கு நல்லது சொல்வேன் - எனக்
குண்மை தெரிந்தது சொல்வேன்
சீருக்கெல் லாமுத லாகும் - ஒரு
தெய்வந் துணைசெய்ய வேண்டும். 2*

1670. வேத மறிந்தவன் பார்ப்பான் – பல
வித்தை தெரிந்தவன் பார்ப்பான்

---

*1917*

*முதன்முதலில் பரலி சு. நெல்லையப்பரால் சிறுநூலாகப் பிங்கள, ஐப்பசி மீ' (1917இல்) வெளியிடப்பட்டது. இதற்குமுன் ஆவணியில் 'கண்ணன்பாட்டு, அவரால் நூல்வடிவில் வெளியிடப்பட்டது. அவர் பதிப்பு முகவுரைகளைப் பின்னிணைப்பில் காண்க.*

**1922இல் வெளியான சுதேச கீதங்கள் (இரண்டாம் தொகுதி) என்ற நூலில் இப்பாடலின் தொடக்கத்தில்,*

*1668* வெற்றி யெட்டுத் திக்கு மெட்டக்
கொட்டு முரசே
வேத மென்றும் வாழ்க வென்று
கொட்டு முரசே
நெற்றி யொற்றைக் கண்ணனோடே
நிர்த்தனஞ் செய்தாள்
நித்த சக்தி வாழ்க வென்று
கொட்டு முரசே 1

*என்ற கண்ணி இணைக்கப்பட்டுள்ளது. முதற் பதிப்பிலோ, 1919-இல் வெளிவந்த ('முரசு')இரண்டாம் பதிப்பிலோ இப்பாடல் காணப்படவில்லை.*

*-பதிப்பாசிரியர்*

நீதி நிலைதவ றாமல் - தண்ட
நேமங்கள் செய்பவன் நாய்க்கன். 3

1671. பண்டங்கள் விற்பவன் செட்டி – பிறர்
பட்டினி தீர்ப்பவன் செட்டி
தொண்டரென் றோர்வகுப் பில்லை - தொழில்
சோம்பலைப் போலிழி வில்லை. 4

1672. நாலு வகுப்புமிங் கொன்றே - இந்த
நான்கினி லொன்று குறைந்தால்
வேலை தவறிச் சிதைந்தே - செத்து
வீழ்ந்திடு மானிடச் சாதி. 5

1673. ஒற்றைக் குடும்பம் தனிலே – பொருள்
ஓங்க வளர்ப்பவன் தந்தை
மற்றைக் கருமங்கள் செய்தே – மனை
வாழ்ந்திடச் செய்பவ ளன்னை. 6

1674. ஏவல்கள் செய்பவர் மக்கள் - இவர்
யாவரு மோர்குல மன்றோ?
மேவி யனைவரு மொன்றாய் - நல்ல
வீடு நடத்துதல் கண்டோம். 7

1675. சாதிப் பிரிவுகள் சொல்லி - அதில்
தாழ்வென்று மேலென்றும் கொள்வார்
நீதிப் பிரிவுகள் செய்வார் – அங்கு
நித்தமும் சண்டைகள் செய்வார். 8

1676. சாதிக் கொடுமைகள் வேண்டாம் – அன்பு
தன்னிற் செழித்திடும் வையம்
ஆதர வுற்றிங்கு வாழ்வோம் - தொழில்
ஆயிர மாண்புறச் செய்வோம். 9

1677. பெண்ணுக்கு ஞானத்தை வைத்தான் – புவி
பேணி வளர்த்திடு மீசன்;
மண்ணுக்குள் ளேசில மூடர் – நல்ல
மாத ரறிவைக் கெடுத்தார். 10

1678. கண்க ளிரண்டினி லொன்றைக் - குத்திக்
காட்சி கெடுத்திட லாமோ?
பெண்க ளறிவை வளர்த்தால் - வையம்
பேதைமை யற்றிடுங் காணீர். 11

1679. தெய்வம் பலபலச்[1] சொல்லிப் - பகைத்
தீயை வளர்ப்பவர் மூடர்
உய்வ தனைத்திலு மொன்றாய் - எங்கும்
ஓர்பொரு ளானது தெய்வம். 12

1680. தீயினைக் கும்பிடும் பார்ப்பார் - நித்தந்
திக்கை வணங்குந் துருக்கர்
கோயிற் சிலுவையின் முன்னே - நின்று
கும்பிடும் யேசு மதத்தார் 13

1681. யாரும் பணிந்திடும் தெய்வம் - பொருள்
யாவினும் நின்றிடும் தெய்வம்
பாருக்குள் ளேதெய்வ மொன்று - இதிற்
பற்பல சண்டைகள் வேண்டாம். 14

1682. வெள்ளை நிறத்தொரு பூனை - எங்கள்
வீட்டில் வளருது கண்டீர்

(பா-டு): 1 தெய்வம் பலபல (பா.ஆ., பா.பி., அர.)

பிள்ளைகள் பெற்றந்தப்[1] பூனை - அவை
பேருக் கொருநிற மாகும். 15

1683. சாம்பல் நிறமொரு குட்டி - கருஞ்
சாந்து நிறமொரு குட்டி
பாம்பு நிறமொரு குட்டி – வெள்ளைப்
பாலி னிறமொரு குட்டி. 16

1684. எந்த நிறமிருந் தாலும் - அவை
யாவு மொரேதர மன்றோ?
இந்த நிறம்சிறி தென்றும் - இஃ
தேற்ற மென்றுஞ்சொல்ல லாமோ? 17

1685. வண்ணங்கள் வேற்றுமைப் பட்டால் – அதில்
மானுடர் வேற்றுமை யில்லை.
எண்ணங்கள் செய்கைக ளெல்லாம் – இங்கு
யாவர்க்கு மொன்றெனல் காணீர். 18

1686. நிகரென்று கொட்டு முரசே – இந்த
நீணிலம் வாழ்பவ ரெல்லாம்
தகரென்று கொட்டு முரசே – பொய்மைச்[2]
சாதி வகுப்பினை யெல்லாம். 19

1687. அன்பென்று கொட்டு முரசே - அதில்
ஆக்கமுண் டாமென்று கொட்டு
துன்பங்கள் யாவுமே போகும் - வெறுஞ்
சூதுப் பிரிவுகள் போனால். 20

1688. அன்பென்று கொட்டு முரசே - மக்கள்
அத்தனை பேரு நிகராம்

---

(பா-டு): 1 பிள்ளைகள் பெற்றதப் (பா.பி.அர.) – இத்திருத்தமே பொருத்தம்.
2 'பொய்ம்மைச்' என்றிருத்தல் வேண்டும். – பதிப்பாசிரியர்

இன்பங்கள் யாவும் பெருகும் – இங்கு
யாவரு மொன்றென்று கொண்டால். 21

1689. உடன்பிறந் தார்களைப் போலே – இவ்
வுலகில் மனிதரெல் லாரும்.
இடம்பெரி துண்டுவை யத்தில் - இதில்
ஏதுக்குச் சண்டைகள் செய்வீர்? 22

1690. மரத்தினை நட்டவன் தண்ணீர் – நன்கு
வார்த்ததை யோங்கிடச் செய்வான்,.
சிரத்தை யுடையது தெய்வம் - இங்கு
சேர்த்த[1] வுணவெல்லை யில்லை. 23

1691. வயிற்றுக்குச் சோறுண்டு கண்டீர் – இங்கு
வாழு மனிதரெல் லோர்க்கும்
பயிற்றி யுழுதுண்டு வாழ்வீர் - பிறர்
பங்கைத் திருடுதல் வேண்டாம் 24

1692. உடன்பிறந் தார்களைப்[2] போலே - இவ்
வுலகில் மனிதரெல் லாரும்[3]
திடங்கொண் டவர்மெலிந் தோரை - இங்கு[4]
தின்று பிழைத்திட லாமோ? 25

1693. வலிமை யுடையது தெய்வம் - நம்மை
வாழ்ந்திடச் செய்வது தெய்வம்
மெலிவுகண் டாலுங் குழந்தை – தன்னை
வீழ்த்தி மிதித்திட லாமோ? 26

---

*(பா-டு): 1 சேர்ந்த (அர.)*
*2 உடன்பிறந் தவர்களைப் - (பா.பி., அர.)*
*3 வுலகினில் மனிதரெல் லோரும். – (அர.)*
*4 'இங்குத்' என்றிருத்தல் வேண்டும் - பதிப்பாசிரியர்*

1694. தம்பிசற் றேமெலி வானால் - அண்ணன்
தானடி மைகொள்ள லாமோ?
செம்புக்குங் கொம்புக்கு மஞ்சி - மக்கள்
சிற்றடி மைப்பட லாமோ? 27

1695. அன்பென்று கொட்டு முரசே - அதில்
யார்க்கும் விடுதலை யுண்டு
பின்பு மனிதர்க ளெல்லாம் - கல்வி
பெற்றுப் பதம்பெற்று வாழ்வார். 28

1696. அறிவை வளர்த்திட வேண்டும் - மக்கள்
அத்தனை பேருக்கு மொன்றாய்.
சிறியரை[1] மேம்படச் செய்தால் – பின்பு
தெய்வமெல் லோரையும் வாழ்த்தும். 29

1697. பாருக்குள் ளேசமத் தன்மை - தொடர்
பற்றுஞ் சகோதரத் தன்மை
யாருக்குந் தீமைசெய் யாது - புவி
யெங்கும் விடுதலை செய்யும். 30

1698. வயிற்றுக்குச் சோறிட வேண்டும் – இங்கு
வாழு மனிதருக் கெல்லாம்
பயிற்றிப் பலகல்வி தந்து – இந்தப்
பாரை யுயர்த்திட வேண்டும். 31

1699. ஒன்றென்று கொட்டு முரசே - அன்பில்
ஓங்கென்று கொட்டு முரசே
நன்றென்று கொட்டு முரசே - இந்த
நானில மாந்தருக் கெல்லாம், 32

(பா-டு): 1 சிறியாரை - (அர.)

## 121. புதிய ருஷியா

### ஸார் சக்ரவர்த்தியின் வீழ்ச்சி*

(*1917* இல் எழுதப்பட்டது)

1700. மாகாளி பராசக்தி உருசியநாட்
டினிற்கடைக்கண் வைத்தா ளங்கே
ஆகாவென் றெழுந்துதபார் யுகப்புரட்சி;
கொடுங்காலன் அலறி வீழ்ந்தான்
வாகான தோள்புடைத்தார் வானமரர்
பேய்களெலாம்[1] வருந்திக் கண்ணீர்
போகாமற் கண்புகைந்து மடிந்தனவாம்;
வையகத்தீர் புதுமை காணீர்! 1

1701. இரணியன்போ லரசாண்டான் கொடுங்கோலன்
ஜாரெனும்பே ரிசைந்த பாவி
சரணின்றித் தவித்திட்டார், நல்லோரும்
சான்றோரும் தருமந் தன்னைத்
திரணமெனக் கருதிவிட்டான் ஜார்மூடன்
பொய்,சூது, தீமை யெல்லாம்
அரணியத்திற் பாம்புகள்போல் மலிந்துவளர்ந்
தோங்கினவே யந்த நாட்டில். 2

---

*1917*

* *ஜார் சக்ரவர்த்தியின் வீழ்ச்சி*

*(பா-டு): 1 'பேய்களெல்லாம்' - (அர.)*

1702. உழுதுவிதைத் தறுப்பாருக் குணவில்லை;
பிணிகள்பல வுண்டு; பொய்யைத்
தொழுதடிமை செய்வார்க்குச் செல்வங்க
ளுண்டுண்மை சொல்வோர்க் கெல்லாம்
எழுதரிய பெருங்கொடுமைச் சிறையுண்டு
தூக்குண்டே யிறப்ப துண்டு
முழுதுமொரு பேய்வனமாஞ் சிவேரி[1]யிலே
யாவிகெட முடிவ துண்டு. 3

1703. இம்மென்றால் சிறைவாசம்; ஏனென்றால்
வனவாசம் இவ்வா றங்கே
செம்மையெலாம் பாழாகிக் கொடுமையே
யறமாகித் தீர்ந்த போதில்
அம்மைமனங் கனிந்திட்டாள்; அடிபரவி
யுண்மைசொலும் அடியார் தம்மை
மும்மையிலுங் காத்திடுநல் விழியாலே
நோக்கினாள்; முடிந்தான் காலன். 4

1704. இமயமலை வீழ்ந்ததுபோல் வீழ்ந்துவிட்டான்
ஜாரரசன், இவனைச் சூழ்ந்து
சமயமுள படிக்கெல்லாம் பொய்கூறி
யறங்கொன்று சதிகள் செய்த
சுமடர்சட சடவென்று சரிந்திட்டார்
புயற்காற்றுச் சூறை தன்னில்
திமுதிமென மரம்விழுந்து காடெல்லாம்
விறகான செய்தி போலே. 5

1705. குடிமக்கள் சொன்னபடி குடிவாழ்வு
மேன்மையுறக் குடிமை நீதி

---

1 'சிவேரி என்பது சைபீரியாவைக் குறிக்கும்'. (பா.பி. குறிப்பு)

கடியொன்றி லெழுந்ததுபார்; குடியரசென்
 றுலகறியக் கூறி விட்டார்
அடிமைக்குத் தளையில்லை. யாருமிப்போ
 தடிமையில்லை. அறிக! என்றார்
இடிபட்ட சுவர்போலே கலிவிழுந்தான்;
 கிருதயுகம் எழுக மாதோ! 6

# 122. விநாயகர் நான்மணி மாலை

## வெண்பா[1]

**1706.** (சக்திபெறும்)[2] பாவாணர் சாற்றுபொருள் யாதெனினும்[3]

---

***1929***

*3-8-1918*இல் பாரதியார் தம் தம்பி திரு. சி. விசுவநாத ஐயருக்கு எழுதிய ஒரு கடிதத்தில் "திருப்பயணம் வி. ராமஸ்வாமி அய்யங்கார் என்னிடம் 'விநாயகர் ஸ்தோத்திரம்' (தமிழ்நூல்) அச்சிட வாங்கிக்கொண்டு போனார் இன்னும் அச்சிட்டனுப்பவில்லை ... 'விநாயகர் ஸ்தோத்திரம்' வேலையை விரைவில் முடித்துப் புஸ்தகங்களனுப்பும்படி சொல்லு" என்று எழுதியிருக்கிறார். 'விநாயகர் ஸ்தோத்திரம்' என்பது இந்த 'விநாயகர் நான்மணி மாலை'யே எனக் கொண்டால், இஃது எழுதப்பட்டது 1918ஆம் ஆண்டை ஒட்டியிருக்க வேண்டும். இது வேறு என்று கொண்டால், அச்சில் முதற்பதிப்பு வெளிவந்தது *1929*ஆம் ஆண்டில் என்பதை நினைவிற் கொள்ளவேண்டும்.

இந்தப் பதிப்புக்கு ஆதாரம் *1930*இல் வெளிவந்த இரண்டாம் பதிப்பு; முதற்பதிப்புக் கிடைக்கவில்லை.

*1 1936*இல் வெளிவந்த இரண்டாம் பதிப்பில் இவ்வெண்பா முதற்பாடல். அந்த அமைப்பே பொருத்தம். வெண்பா, கட்டளைக் கலித்துறை, ஆசிரிய விருத்தம், அகவல் என்ற நிரலமைப்புக்கும் அந்தாதித் தொடைக்கும் இயைய இவ்வெண்பா முதலில் இருத்தல் வேண்டும். *1930*இல் வெளிவந்த பதிப்பில் இவ்வெண்பா இல்லை. பதிப்பித்தோர் பிழை.

இந்நூலுள் வரும் வெண்பாக்கள் யாவும் நேரிசை வெண்பாக்களே.

*2* 'சக்திபெறும்' - சுத்தானந்த பாரதியார் நிறைவுசெய்த பாடம். 'சக்திவளர்', 'சக்திகொள்', 'சக்திகொள்', 'சத்தியுள்', 'சக்தியுள', 'சத்தியுள்ள', 'சக்தியுள்ள', — கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை நிறைவுசெய்த பாடங்கள். இக்கவிதையின் கைப்பிரதி சிதைவுற்றிருந்தமையால் சுத்தானந்தரையும் கவிமணியையும் நாடிச் சீர்செய்தனர் பதிப்பாளர்கள். அவர்கள் நிறைவுசெய்த இடங்கள் நகவளைவுள் தரப்பட்டுள்ளன. - பதிப்பாசிரியர்

*3* பாரதியாரின் கையெழுத்துப் படியில் 'யாதோதான்' என்ற சீர் அடிக்கப் பெற்று, 'யாதெனினும்' என்று எழுதப்பட்டுள்ளது. — பதிப்பாசிரியர்

சித்(திபெறச் செய்வாக்கு வல்லமைக்கா)[1] – அத்தனே
(நின்)[2]றாளக்குக் காப்புரைப்பார் நின்மீது செய்யுநூல்
இன்றிதற்குங் காப்புநீ யே

கலித்துறை*

1707. நீயே சரண நினதரு ளேசர ணஞ்சரணம்
நாயேன் பலபிழை செய்து களைத்துனை நாடிவந்தேன்
வாயே திறவாத மௌனத் திருந்துன் மலரடிக்குத்
தீயே நிகர்த்தொளி வீசுந் தமிழ்க்கவி செய்குவனே 2

விருத்தம்†

1708. செய்யுந் தொழிலுன் தொழிலேகாண்;
சீர்பெற் றிடநீ யருள்செய்வாய்,
வையந் தனையும் வெளியினையும்
வானத் தையுமுன் படைத்தவனே!
ஐயா, நான்மு கப்பிரமா,
யானை முகனே, வாணிதனைக்
கையா லணைத்துக் காப்பவனே,
கமலா சனத்துக் கற்பகமே. 3

அகவல்‡

1709. கற்பக விநாயகக் கடவுளே போற்றி!
சிற்பர மோனத் தேவன் வாழ்க!

1 கையெழுத்துப் படியில் 'நூல் செய்திடினும் வல்லமைக்கா' என்ற தொடர் அடிக்கப்பெற்று, 'சித்' என்றுமட்டும் காணப்படுகிறது. 'வல்லமைக்கே' – சுத். பா., 'வைத்துநூல் செய்திடினும் வல்லமைக்கா' 'சித்தமதிற் கொண்டு நூல் செய்வரெனில்' – கவிமணி

2 சுத். பா.; கவிமணி

*கலித்துறை எனக் குறிக்கப்பட்டுள்ளவை யாவும் கட்டளைக் கலித்துறைகளாகும் – பதிப்பாசிரியர்

†இதில் வரும் பத்து விருததங்களும் அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தமே

‡இந்நூலுள் வரும் பத்து அகவற் பாக்களும் நேரிசை ஆசிரியப்பாக்களே

வாரண முகத்தான் மலர்த்தாள் வெல்க!
ஆரண முகத்தான் அருட்பதம் வெல்க!
படைப்புக் கிறையவன் பண்ணவர் நாயகன் 5
இந்திர குருஎன திதயத் தொளிர்வான்
சந்திர மவுலித் தலைவன் மைந்தன்
கணபதி தாளைக் கருத்திடை வைப்போம்;
குணமதிற் பலவாம்; கூறக் கேளீர்;
உட்செவி திறக்கும்; அதன்கண் ஒளிதரும்; 10
அக்கினி தோன்றும்; ஆண்மை வலியுறும்;
திகைகெலாம் வென்று ஜயக்கொடி நாட்டலாம்;
கட்செவி தன்னைக் கையிலே யெடுக்கலாம்;
விடத்தையும் நோவையும் வெம்பகை யதனையும்
துச்சமென் றெண்ணித் துயரிலா திங்கு 15
(எதற்கு மஞ்சா வியல்புநாம் பெறலாம்)[1]
நிச்சலும் வாழ்ந்து நிலைபெற் றோங்க.[2]
அச்சந் தீரும்; அமுதம் விளையும்;
வித்தை வளரும்; வேள்வி யோங்கும்;[3]
அமரத் தன்மையு மெய்தவும்[4] 20
இங்குநாம் பெறலாம் இஃதுணர் வீரே[5]
(நரர்க ளிதனை நன்குணர் வீரே)[6] 22

---

1 இவ்வரி நகவளைவுக்குள் இருந்தது. இது கையெழுத்துப் பிரதியிலே காணப்படாமையின் மூலத்தினின்று நீக்கப்பட்டது. – (பா.பி. 1936)

2 நிச்சலும் வாழ்ந்து நிலை பெற்றோங்கலாம் - (பா.பி. 1936)
'வித்தை வளரும்: வீரமேயியல் பாம்' - கவிமணி

3 'வித்தை வளரும்: வேள்வி யோங்கும்; (வீரமே யியல்பாம்)' என முதற் பதிப்பில் இருந்ததாகப் பாரதி பிரசுராலயப் பதிப்பில் குறிக்கப்பட்டுள்ளது.
- பதிப்பாசிரியர்

4 'அமரத் தன்மையு மெய்துவம்'
'அமரத் தன்மை எய்தவும்' - (அர.)

5 நமர்க ளிதனை நன்குணர் வீரே' - கவிமணி

6 முதற்பதிப்பில் இவ்வரியும் உள்ளதாகப் பா.பி. பதிப்பில் குறிக்கப் பட்டுளது. இவ்வரி நீக்கப்பட்டது பொருத்தமே.
- பதிப்பாசிரியர்

### வெண்பா

1710. (உண)[1]ர்வீர் உணர்வீர் உலகத்தீ ரிங்குப்
(புண)ர்வீ(ர் அமரு)றும் போக(ம்) – கண(ப) தி (யைப்)[2]
(போதவடி வாகப் போற்றிப் பணிந்திடுமின்
காதலுடன் கஞ்சமலர்க் கால்)[3]

### கலித்துறை

1711. காலைப் பிடித்தேன் கணபதி நின்பதங் கண்ணிலொற்றி
நூலைப் பலபல வாகச் சமைத்து நொடிப்பொழுது[4]
வேலைத் தவறு நிகழாது நல்ல வினைகள்செய்துன்
கோலை மனமெனு நாட்டி னிறுத்தல் குறியெனக்கே.

### விருத்தம்

1712. எனக்கு வேண்டும் வரங்களை[5]
யிசைப்பேன் கேளாய் கணபதி,
மனத்திற் சலன மில்லாமல்,
மதியி லிருளே தோன்றாமல்,

---

1 சுத்.பா., கவிமணி

2 'புணர்வீர் அமரர் சுகபோகம்-கணபதியை' – சுத்.பா. 'புணர்வீர் அமர ருறும்போகம் - கணபதியை' – கவிமணி

3 சுத்.பா. (மூலத்திலுள்ள பாடம் என்கிறது பா.பி., பதிப்பு) – கவிமணி தரும் பாடங்கள்.

நெஞ்சி லிருத்தி நிதமுமன் பாகவவன்
கஞ்சமலர்த் தாள்பணிந்தக் கால் (அல்லது)
தஞ்சமெனக் கொண்டு தளராதெந் நாளுமவன்
கஞ்சமலர்த் தாள்பணிந்தக் கால் (அல்லது)
நெஞ்சமரக் கொண்டு நிதமுமன் பாகவவன்
கஞ்சமலர்த் தாள்பணிந்தக் கால் (அல்லது)
அல்லும் பகலும் அடிபணிந்தில் வன்னெஞ்சக்
கல்லும் கசிந்துருகுங் கால்

(பா-டு): 4 'நூலைப் பல பலவாகச் சமைத்து நொடிப் பொழு(தும்)' (பா.பி., 1937, அர.)

5 எனக்கு வேண்டும் வரங்களை நீ - (பா. பி. 1937)

உண்மை வாழி! ஊக்கம் வாழி!
நல்ல குணங்களே நம்மிடை யமரர்
பதங்களாம் கண்டீர் பாரிடை மக்களே!
(சேவற் கொடியோன் தேவசே னாபதி 25
வேலோன் றனக்கு மிக்காய், போற்றி!
உலகெலாம் படைத்தாய், ஒன்றே, போற்றி!
ஆதிமா சக்திநீ யாவாய், போற்றி!
எந்தாய், போற்றி! எம்மோய் போற்றி!
ஆதி மூலமே யரசே போற்றி,)[1] 30
கிருத யுகத்தினைக் கேடின்றி நிறுத்த
விரதநான் கொண்டனன், வெற்றி
கருஞ்சுடர் விநாயகன் தாளிணை வாழியே! 40

---

1 1936-ஆம் வருடப் பதிப்பில் அடைப்புக் குறிக்குள் உள்ளவை நீக்கப் பட்டுள்ளன.

## 123. முருகன் பாட்டு*

ராகம் - நாட்டைக் குறிஞ்சி, தாளம் - ஆதி

பல்லவி

1746. முருகா – முருகா - முருகா. 1

சரணங்கள்

1747. வருவாய் மயில்மீ தினிலே
வடிவே லுடனே வருவாய்
தருவாய் நலமுந் தகவும் புகழுந்
தவமுந் திறமுந் தனமுங் கனமும். (முருகா) 2

1748. அடியார் பலரிங் குளரே
அவரை விடுவித் தருள்வாய்
முடியா மறையின் முடிவே, யசுரர்
முடிவே கருதும் வடிவே லவனே! (முருகா) 3

1749. சுருதிப் பொருளே வருக.
துணிவே கனலே வருக.
கருதிக் கருதிக் கவலைப் படுவார்
கவலைக் கடலைக் கடியும் வடிவேல். (முருகா) 4

---

*1919*

* 'முருகா! முருகா!' - (அர.)

1750. அமரா வதிவாழ் வுறவே
அருள்வாய்! சரணம், சரணம்!
குமரா பிணியா வையுமே சிதறக்
குமுறும் சுடர்வே லவனே சரணம்! (முருகா) 5

1751. அறிவா கியகோ யிலிலே
அருளா கியதாய் மடிமேல்
பொறிவே லுடனே வளர்வாய் அடியார்
புதுவாழ் வுறவே புவிமீ தருள்வாய். (முருகா) 6

1752. குருவே பரமன் மகனே
குகையில் வளருங் கனலே
தருவாய் தொழிலும் பயனும் அமரர்
ஸமராதிப னே சரணம் சரணம்! (முருகா) 7

## 124. ஸ்ரீமான் எட்டயபுரம் மஹாராஜா அவர்கள் மீது சீட்டுக் கவிகள்

I

**1753.** ராஜமஹா ராஜேந்திர ராஜகுல
சேகரன்ஸ்ரீ ராஜ ராஜன்
தேசமெலாம் புகழ்விளங்கு மிளசைவெங்க
டேசுரெட்ட சிங்கன் காண[1]
வாசமிகு துழாய்த்தாரான்[2] கண்ணனடி
மறவாத மனத்தான் சக்தி
தாசனெனப் புகழ்வளர்சுப் பிரமணிய[3]
பாரதிதான் சமைத்த பாட்டு[4]

**1754.** மன்னவனே தமிழ்நாட்டில் தமிழறிந்த
மன்னரிலை யென்று மாந்தர்
இன்னலுறப் புகன்றவசை நீமகுடம்
புனைந்தபொழு திறந்த தன்றே?[5]

---

*2-5-1919 (ஆதாரம்: சித்திரபாரதி)*

*பாரதி பிரசுராலயப் பதிப்பு முதலான எல்லாப் பதிப்புகளிலும் இதுவும் அடுத்துவரும் சீட்டுக்கவியும் 2, மே, 1919 என்றே தேதியிடப்பட்டுள்ளன.*

*(பா-டு): 1 'வெங்க டேசுரெட்ட சிங்கன் காண்க' - (பா.பி., அர.)*
*2 'வாசமிகு துழாய்த்தாரன்' - (பா.பி.)*
*3 'தாசனெனப் புகழுவளர் சுப்ரமண்ய' - (பா.பி)*
*'தாசனெனப் புகழ்வளரும் சுப்ரமண்ய' - (அர.)*
*4 'பாரதிதான் சமைத்த தூக்கு' - (பா.பி., அர.)*
*5 'புனைந்தபொழு திருந்த தன்றே?' - (பா.பி., அர.)*

சொன்னலமும் பொருணலமுஞ் சுவைகண்டு
சுவைகண்டு துய்த்துத் துய்த்துக்
கன்னலிலே சுவையறியுங் குழந்தைகள்போல்
தமிழ்ச்சுவைநீ களித்தா யன்றே? 2

**1755.** புவியனைத்தும் போற்றிடவான் புகழ்படைத்துத்
தமிழ்மொழியைப் புகழி லேற்றுங்
கவியரசர் தமிழ்நாட்டுக் கில்லையெனும்
வசையென்னாற் கழிந்த தன்றே?
சுவைபுதிது நயம்புதிது[1] வளம்புதிது
சொற்புதிது ஜோதி கொண்ட[2]
நவகவிதை யெந்நாளு மழியாத
மஹாகவிதை யென்று நன்கு 3

**1756.** பிரான்ஸென்னு முயர்ந்தபுகழ்[3] நாட்டிலுயர்
புலவோரும் பிறரு மாங்கே
விராவுபுக ழாங்கிலத்தீங் கவியரசர்
தாமுமிக வியந்து கூறிப்
பராவியென்றன் தமிழ்ப்பாட்டை[4] மொழிபெயர்த்துப்
போற்றுகிறார்;[5] பாரோ ரேத்துந்
தராதிபனே யிளசைவெங்க டேசுரெட்டா
நின்பாலத் தமிழ்கொ ணர்ந்தேன். 1

**1757.** வியப்புமிகு புத்திசையில் வியத்தகுமென்
கவிதையினை வேந்த னேநின்

.....................................

(பா-டு): 1 'சுவைபுதிது பொருள்புதிது' - (பா.பி., அர.)
2 'சொற்புதிது சோதி மிக்க' - (பா.பி., அர.)
3 'பிரான்ஸென்னுஞ் சிறந்தபுகழ்' - (பா.பி., அர)
4 'பராவியென்றன் தமிழ்க்கவியை' - (பா.பி., அர.)
5 'பெயர்த்துப் போற்றுகின்றார்' (பா.பி., அர.)

நயப்படுஸங் நிதிதனிலே[1] நான்பாட
நீகேட்டு நன்கு போற்றி,
ஜயப்பறைகள் சாற்றுவித்துச் சாலுவைகள்
பொற்பைகள் ஜதிபல் லக்கு
வயப்பரிவா ரங்கள்முதற் பரிசளித்துப்
பல்லூழி வாழ்க நீயே. 5

(பா-டு): 1 'நயப்படுசந் நிதிதனிலே' - (பா.பி., அர.)

## 125. எட்டயபுரம் மஹாராஜாவின்மீது சீட்டுக்கவி

II

1758. *பாரிவாழ்ந் திருந்த சீர்த்திப்
பழந்தமிழ் நாட்டின் கண்ணே
ஆரிய, நீயிந் நாளி
லரசுவீற் றிருக்கின் றாயால்;
காரியங் கருதி நின்னைக்
கவிஞர்தாங் காண வேண்டின்
நேரிலப் போதே யெய்தி
வழிபட நினைகி லாயோ? 1

1759. விண்ணள வுயர்ந்த கீர்த்தி
வெங்கடேசு ரெட்ட மன்னா!
பண்ணள வுயர்ந்த தென்பண்
பாவள வுயர்ந்த தென்பா
எண்ணள வுயர்ந்த வெண்ணி
லிரும்புகழ்க் கவிஞர் வந்தால்
அண்ணலே பரிசு கோடி
யளித்திட விரைகி லாயோ? 2

1760. கல்வியே தொழிலாக் கொண்டாய்
கவிதையே தெய்வ மாக

3-5-1919 (சான்று: ''சித்திரபாரதி'')

*பாரதி குறிப்பு: பண்டைத் தமிழ்நாட்டு வள்ளல்களில் பாரி ஒருவன். இவன் தனது ராஜ்ய முழுதையும் கொடுத்தான்.

அல்லுநன் பகலும் போற்றி
யதைவழி பட்டு நின்றாய்!
சொல்லிலே நிகரி லாத
புலவர்நின் சூழ லுற்றால்
எல்லினைக் காணப் பாயும்
இடபம்போல் முற்ப டாயோ. 3

# 126. செந்தமிழ் நாடு

**1761.** செந்தமிழ் நாடெனும் போதினிலே - இன்பத்
தேன்வந்து பாயுது காதினிலே - எங்கள்
தந்தையர் நாடென்ற பேச்சினிலே – ஒரு
சக்தி பிறக்குது மூச்சினிலே - எங்கள். (செந்தமிழ்) 1

**1762.** வேதம் நிறைந்த தமிழ்நாடு – உயர்
வீரம் செறிந்த தமிழ்நாடு - நல்ல
காதல்புரியும் அரம்பையர் போலிளங்
கன்னியர் சூழ்ந்த தமிழ் நாடு. (செந்தமிழ்) 2

**1763.** காவிரி தென்பெண்ணை பாலாறு – தமிழ்
கண்டதொர்[1] வையை பொருனைநதி - யென
மேவிய யாறு பல வோடத் - திரு
மேணி செழித்த தமிழ்நாடு (செந்தமிழ்) 3

---

*1919 (ஜூன் – நாட்டுப் பாட்டு) - இதுமுதல் 'தொழில்' என்ற தலைப்புடைய கவிதை ஈறாக உள்ளவை பரலி நெல்லையப்பரால் வெளியிடப்பட்ட 'நாட்டுப் பாட்டு' என்ற தொகுப்பில் உள்ளவை. நமக்கு ஆதாரம் 1919இல் வெளிவந்த அதன் இரண்டாம் பதிப்பு.*

*பதினெட்டுத் தலைப்புகளில் உள்ள கவிதைகள் 'நாட்டுப் பாட்டு'த் தொகுதியில் இடம் பெற்றன. கால வரிசையில் முன்னரே இப்பதிப்பில் இடம் பெற்றவை தவிர, ஏனைய ஐந்தும் இவ்விடத்தில் (124-128) இடம் பெறுகின்றன.*

*- பதிப்பாசிரியர்*

*(பா-டு) 1 'கண்டதோர்' - (பா.ஆ., பா.பி., அர.)*

1764. முத்தமிழ் மாமுனி நீள்வரையே நின்று
மொய்ம்புறக் காக்குந் தமிழ்நாடு - செல்வம்
எத்தனை யுண்டு புவிமீதே - அவை
யாவும் படைத்த தமிழ்நாடு (செந்தமிழ்) 4

1765. நீலத் திரைக்கட லோரத்திலே - நின்று
நித்தந் தவஞ்செய் குமரியெல்லை – வட
மாலவன் குன்றம் இவற்றிடை யேபுகழ்
மண்டிக் கிடக்குந் தமிழ்நாடு (செந்தமிழ்) 5

1766. கல்வி சிறந்த தமிழ்நாடு - புகழ்க்
கம்பன் பிறந்த தமிழ்நாடு - நல்ல
பல்வித மாயின சாத்திரத் தின்மணம்
பாரெங்கும் வீசுந் தமிழ்நாடு. (செந்தமிழ்) 6

1767. வள்ளுவன் தன்னை உலகினுக் கேதந்து
வான்புகழ் கொண்ட தமிழ்நாடு - நெஞ்சை
அள்ளும் சிலப்பதி காரமென் றோர்மணி
யாரம் படைத்த தமிழ்நாடு. (செந்தமிழ்) 7

1768. சிங்களம் புட்பகம் சாவக மாதிய
தீவு பலவினுஞ் சென்றேறி - அங்கு[1]
தங்கள் புலிக்கொடி மீன்கொடி யும்நின்று
சால்புறக் கண்டவர் தாய்நாடு. (செந்தமிழ்) 8

1769. விண்ணை யிடிக்கும் தலையிமயம் - எனும்
வெற்பை யடிக்கும் திறனுடையார் – சமர்
பண்ணிக் கலிங்கத் திருள்கெடுத் தார்தமிழ்ப்
பார்த்திவர் நின்ற தமிழ்நாடு. (செந்தமிழ்) 9

1 'அங்குக்' என்றிருத்தல் வேண்டும். - பதிப்பாசிரியர்

1770. சீன மிசிரம் யவனரகம் - இன்னும்
தேசம் பலவும் புகழ்வீசிக் - கலை
ஞானம் படைத்தொழில் வாணிப மும்மிக
நன்று வளர்த்த தமிழ்நாடு. (செந்தமிழ்) 10

## 127. பாரத தேசம்

ராகம்: புன்னாக வராளி

பல்லவி

1771. பாரத தேசமென்று பெயர்சொல்லுவார் – மிடிப்
பயங்கொல்லு வார்துயர்ப் பகைவெல்லுவார். *1*

சரணங்கள்

1772. வெள்ளிப் பனிமலையின் மீதுலவுவோம் - அடி
மேலைக் கடல்முழுதுங் கப்பல்விடுவோம்
பள்ளித் தலமனைத்துங் கோயில்செய்குவோம் - எங்கள்
பாரத தேசமென்று தோள்கொட்டுவோம். *2*

1773. சிங்களத் தீவினுக்கோர் பாலமமைப்போம்
சேதுவை மேடுறுத்தி வீதிசமைப்போம்
வங்கத்தி லோடிவரும் நீரின்மிகையால்
மையத்து நாடுகளிற் பயிர்செய்குவோம். *3*

1774. வெட்டுக் கனிகள்செய்து தங்கமுதலாம்
வேறு பலபொருளுங் குடைந்தெடுப்போம்

---

*1919 (நாட்டுப் பாட்டு)*

*'நாட்டுப் பாட்டு' என்ற தொகுதியில் ராகத்தின் பெயர், பல்லவி, சரணங்கள் என்ற குறிப்பு ஆகியன இல்லை. 1922இல் வெளிவந்த தொகுப்பில்தான் இவை இடம் பெற்றுள்ளன.*

*— பதிப்பாசிரியர்*

எட்டுத் திசைகளிலுஞ் சென்றிவைவிற்றே
எண்ணும் பொருளனைத்தும் கொண்டுவருவோம். 4

1775. முத்துக் குளிப்பதொரு தென்கடலிலே
மொய்த்து வணிகர்பல நாட்டினர்வந்தே
நத்தி நமக்கினிய பொருள்கொணர்ந்து
நம்மருள் வேண்டுவது மேற்கரையிலே. 5

1776. சிந்து நதியின்மிசை நிலவினிலே
சேரநன் னாட்டிளம் பெண்களுடனே
சுந்தரத் தெலுங்கினிற் பாட்டிசைத்துத்
தோணிக் ளோட்டிவிளை யாடிவருவோம். 6

1777. கங்கை நதிப்புரத்துக்[1] கோதுமைப்பண்டம்
காவிரி வெற்றிலைக்கு மாறுகொள்ளுவோம்
சிங்க மராட்டியர்தங் கவிதைகொண்டு
சேரத்துத் தந்தங்கள் பரிசளிப்போம். 7

1778. காசி நகர்ப்புலவர் பேசுமுரைதான்
காஞ்சியிற் கேட்பதற்கொர்[2] கருவி செய்வோம்
ராசபுத் தானத்து வீரர்தமக்கு
நல்லியற் கன்னடத்துத் தங்கமளிப்போம். 8

1779. பட்டினி லாடையும் பஞ்சிலுடையும்
பண்ணி மலைகளென வீதிகுவிப்போம்.
கட்டித் திரவியங்கள் கொண்டுவருவார்
காசினி வணிகருக் கவைகொடுப்போம். 9

.........................................................

(பா-டு): 1 'கங்கை நதிப்புறத்துக்' - (பா.பி. அர.)
2 'காஞ்சியிற் கேட்பதற்கோர்' - (பா.ஆ., பா.பி., அர.)

1780. ஆயுதம் செய்வோம்நல்ல காகிதம்செய்வோம்
ஆலைகள் வைப்போம்கல்விச் சாலைகள்வைப்போம்
ஓயுதல் செய்யோம்தலை சாயுதல்செய்யோம்
உண்மைகள் சொல்வோம்பல வண்மைகள்செய்வோம். 10

1781. குடைகள் செய்வோம்உழு படைகள்செய்வோம்
கோணிகள் செய்வோம்இரும் பாணிகள்செய்வோம்
நடையும் பறப்புமுணர் வண்டிகள்செய்வோம்
ஞாலம் நடுங்கவரும் கப்பல்கள்செய்வோம். 11

1782. மந்திரங் கற்போம்வினைத் தந்திரங்கற்போம்
வானை யளப்போம்கடல் மீனையளப்போம்
சந்திர மண்டலத்தியல் கண்டுதெளிவோம்
சந்தி தெருப்பெருக்கும் சாத்திரங்கற்போம். 12

1783. காவியஞ் செய்வோம்நல்ல காடுவளர்ப்போம்
கலை வளர்ப்போம்கொல்ல ருலைவளர்ப்போம்.
ஓவியம் செய்வோம்நல்ல ஊசிகள்செய்வோம்
உலகத் தொழிலனைத்து முவந்துசெய்வோம். 13

1784. சாதி இரண்டொழிய வேறிலையென்றே
தமிழ்மகள் சொல்லியசொல் அமிழ்தமென்போம்
நீதி நெறியினின்று பிறர்க்குதவும்
நேர்மையர் மேலவர் கீழவர்மற்றோர். (பாரத) 14

## 128. தமிழ்

1785. யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழிபோல்
இனிதாவ தெங்குங் காணோம்.
பாமரராய், விலங்குகளாய், உலகனைத்தும்
இகழ்ச்சிசொலப் பான்மை கெட்டு
நாமமது தமிழரெனக் கொண்டிங்கு
வாழ்ந்திடுதல் நன்றோ? சொல்லீர்!
தேமதுரத் தமிழோசை உலகமெலாம்
பரவும்வகை செய்தல் வேண்டும். 1

1786. யாமறிந்த புலவரிலே கம்பனைப்போல்,
வள்ளுவர்போல், இளங்கோவைப் போல்
பூமிதனில் யாங்கணுமே பிறந்ததிலை;
உண்மை;வெறும் புகழ்ச்சி யில்லை;
ஊமையராய்ச் செவிடர்களாய்க் குருடர்களாய்
வாழ்கின்றோம்; ஒருசொற் கேளீர்!
சேமமுற வேண்டுமெனில் தெருவெல்லாம்
தமிழ்முழக்கம் செழிக்கச் செய்வீர்! 2

1787. பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள்
தமிழ்மொழியிற் பெயர்த்தல் வேண்டும்;

---

*1919 (நாட்டுப் பாட்டு)*

இறவாத புகழுடைய புதுநூல்கள்
தமிழ்மொழியில் இயற்றல் வேண்டும்;
மறைவாக நமக்குள்ளே பழங்கதைகள்
சொல்வதிலோர் மகிமை யில்லை;
திறமான புலமையெனில் வெளிநாட்டோர்
அதைவணக்கஞ் செய்தல் வேண்டும். 3

1788. உள்ளத்தி லுண்மையொளி யுண்டாயின்
வாக்கினிலே ஒளியுண் டாகும்[1]
வெள்ளத்தின் பெருக்கைப்போற் கலைப்பெருக்கும்
கவிப்பெருக்கும் மேவு மாயின்
பள்ளத்தில் வீழ்ந்திருக்குங் குருடரெலாம்
விழிபெற்றுப் பதவி கொள்வார்;
தெள்ளுற்ற தமிழமுதின் சுவைகண்டார்
இங்கமரர் சிறப்புக் கண்டார். 4

.............................

1. அக்கினி தேவனுக்குரிய மந்திரங்கள் சிலவற்றை மொழிபெயர்த்து 'வேதரிஷிகளின் கதை'யில் பாரதியார் தருகிறார். அங்கே அரவிந்தரின் கருத்தை எடுத்துக்காட்டி, பின்வருமாறு எழுதுகிறார். "ஆம், உயர்ந்த கவிதையின் நெறியே அது. கவியின் இஷ்ட தேவதை அல்லது இஷ்ட சித்தி, இஷ்ட தர்மம், இஷ்ட சுகம் – இதனுடைய காந்தி அவனுடைய உள்ளத்திலே வீசும். அந்த ஒளி பாட்டிலே தெரியும். உயர்ந்த கவிதையின் நெறி அது ......"

வேத ரிஷிகளின் கதை - பா.பி. பதிப்பு (1924) பக். 13.

- பதிப்பாசிரியர்

## 129. தமிழ்த் தாய்

### தன் மக்களைப் புதிய சாத்திரம் வேண்டுதல்

(தாயுமானவர் ஆனந்தக்களிப்பு சந்தம்)[1]

**1789.** ஆதிசிவன் பெற்று விட்டான் - என்னை
ஆரிய மைந்தன் அகத்திய னென்றோர்
வேதியன் கண்டு மகிழ்ந்தே - நிறை
மேவும் இலக்கணஞ் செய்து கொடுத்தான். 1

**1790.** மூன்று குலத்தமிழ் மன்னர் – என்னை
மூண்டநல் லன்பொடு நித்தம் வளர்த்தார்;
ஆன்ற மொழிகளி னுள்ளே – உயர்
ஆரியத் திற்கு நிகரென வாழ்ந்தேன். 2

**1791.** கள்ளையுந் தீயையுஞ் சேர்த்து – நல்ல
காற்றையும் வான வெளியையுஞ்[2] சேர்த்துத்
தெள்ளு தமிழ்ப்புல வோர்கள் – பல
தீஞ்சுவைக் காவியஞ் செய்து கொடுத்தார். 3

---

*(பா-டு): 1 தாயுமானவர் ஆனந்தக்களிப்புச் சந்தம்*
*(தனிச்சீரை விடுத்து அலகிட்டால் வெண்டளையாய் அமைதல் காணத்தக்கது.)*
*— பதிப்பாசிரியர்*

*2 'காற்றையும் வானவொளியையுஞ்' - (கவிமணி)*

1792. சாத்திரங் கள்பல தந்தார் - இந்தத்
தாரணி யெங்கும் புகழ்ந்திட வாழ்ந்தேன்;
நேத்திரங் கெட்டவன் காலன் - தன்முன்
நேர்ந்த தனைத்துந் துடைத்து முடிப்பான்! 4

1793. நன்றென்றுந் தீதென்றும் பாரான் - முன்பு
நாடும் பொருள்கள் அனைத்தையும் வாரிச்
சென்றிடுங் காட்டுவெள் ளம்போல் - வையச்
சேர்க்கை யனைத்தையுங் கொன்று நடப்பான். 5

1794. கன்னிப் பருவத்தில் அந்நாள் – என்றன்
காதில் விழுந்த திசைமொழி யெல்லாம்
என்னென்ன வோபெய ருண்டு - பின்னர்
யாவும் அழிவுற் றிறந்தன கண்டீர். 6

1795. தந்தை அருள்வலி யாலும் - முன்பு
சான்ற புலவர் தவவலி யாலும்
இந்தக் கணமட்டுங் காலன் - என்னை
ஏறிட்டுப் பார்க்கவும் அஞ்சி யிருந்தான். 7

1796. இன்றொரு சொல்லினைக் கேட்டேன்! - இனி
ஏதுசெய் வேன்?என தாருயிர் மக்காள்!
கொன்றிடல் போலொரு வார்த்தை – இங்கு*
கூறத் தகாதவன் கூறினன் கண்டீர்! 8

1797. "புத்தம் புதிய கலைகள் - பஞ்ச
பூதச் செயல்களின் நுட்பங்கள் கூறும்;

---

* 'இங்குக்' என்றிருத்தல் வேண்டும்.

- பதிப்பாசிரியர்

மெத்த வளருது மேற்கே - அந்த
மேன்மைக் கலைகள் தமிழினில் இல்லை. 9

1798. "சொல்லவுங் கூடுவ தில்லை - அவை
சொல்லுந் திறமை தமிழ்மொழிக் கில்லை;
மெல்லத் தமிழினிச் சாகும் - அந்த
மேற்கு மொழிகள் புவிமிசை யோங்கும்" 10

1799. என்றந்தப் பேதை உரைத்தான் – ஆ!
இந்த வசையெனக் கெய்திட லாமோ!
சென்றிடுவீ ரெட்டுத் திக்கும் – கலைச்
செல்வங்கள் யாவுங் கொணர்ந்திங்குச்[1] சேர்ப்பீர். 11

1800. தந்தை யருள்வலி யாலும் – இன்று
சார்ந்த புலவர் தவவலி யாலும்
இந்தப் பெரும்பழி தீரும் - புகழ்
ஏறிப் புவிமிசை யென்று மிருப்பேன். 12

---

(பா-டு): 1 'செல்வங்கள் யாவுங் கொணர்ந் திங்கு' - (பா.பி., அர.)
சகரம் மிக்கிருப்பதே சரி,

- பதிப்பாசிரியர்

## 130. தொழில்

1801. இரும்பைக் காய்ச்சி உருக்கிடு வீரே!
யந்தி ரங்கள் வகுத்திடு வீரே!
கரும்பைச் சாறு பிழிந்திடு வீரே!
கடலில் மூழ்கிநன் முத்தெடுப் பீரே!
அரும்பும் வேர்வை உதிர்த்துப் புவிமேல்
ஆயிரந் தொழில் செய்திடு வீரே!
பெரும்பு கழ்நுமக் கேயிசைக் கின்றேன்
பிரம தேவன் கலையிங்கு நீரே!

1802. மண்ணெ டுத்துக் குடங்கள்செய் வீரே!
மரத்தை வெட்டி மனைசெய்கு வீரே!
உண்ணக் காய்கனி தந்திடு வீரே!
உழுது நன்செய்ப் பயிரிடு வீரே!
எண்ணெய், பால்,நெய், கொணர்ந்திடு வீரே!
இழையை நூற்றுநல் லாடைசெய் வீரே![1]
விண்ணி னின்றெமை வானவர் காப்பார்
மேவிப் பார்மிசைக் காப்பவர் நீரே!

1803. பாட்டுஞ் செய்யுளுங் கோத்திடு வீரே!
பாரத நாட்டியக் கூத்திடு வீரே!

.................................

*1919 (நாட்டுப் பாட்டு)*
*(பா-டு): 1 இழையை நூற்றுநல் லாடைநெய் வீரே - (பாரதியார்)*

காட்டும் வையப் பொருள்களின் உண்மை
கண்டு சாத்திரம் சேர்த்திடு வீரே!
நாட்டி லேயறம் கூட்டிவைப் பீரே!
நாடும் இன்பங்கள் ஊட்டிவைப் பீரே!
தேட்ட மின்றி விழியெதிர் காணும்
தெய்வ மாக விளங்குவிர் நீரே! 3

# 131. செட்டிமக்கள் குலவிளக்கு

1804. பல்லாண்டு வாழ்ந்தொளிர்க! கானாடு
காத்தநகர்ப் பரிதி போன்றாய்
சொல்லாண்ட புலவோர்த முயிர்த்துணையே
தமிழ்காக்குந் துரையே, வெற்றி
வில்லாண்ட இராமனைப்போல், நிதியாளும்
இராமனென விளங்கு வாய்நீ
மல்லாண்ட திண்டோளாய், சண்முகநா
மம்படைத்த வள்ளற் கோவே. 1

1805. செட்டிமக்கள் குலத்தினுக்குச் சுடர்விளக்கே
பாரதமா தேவி தாளைக்
கட்டியுளத் திருத்திவைத்தாய், பராசக்தி
புகழ்பாடிக் களித்து நிற்பாய்,

........................................

*31-10-1919 - (ஆதாரம்: திரு. வை. சு. ச. கடிதம்)*

*இப்பாடல் முதன்முதலாகச் சக்தி காரியாலயப் பதிப்பில் 1957ஆம் ஆண்டில் அச்சில் இடம்பெற்றது. ''செட்டி மக்கள் குலவிளக்கு'' என்பது சக்தி காரியாலயத்தார் தந்த தலைப்பு. கானாடுகாத்தானில் வதிந்த இவர் இல்லத்தில் தங்கியிருந்த சமயத்தில்தான் இப்பாடலைப் பாரதியார் பாடினார். இப்பெரிய வர் ''காரைக்குடியில் பாரதியார்'' என்ற கட்டுரை ஒன்றில் பாரதியிடம் தமக் குள்ள நெருக்கத்தைக் குறித்துள்ளார். பாரதியாரும் இவருக்குப் பல கடிதங்கள் எழுதியுள்ளார்.*

*— பதிப்பாசிரியர்.*

ஒட்டியபுன் கவலைபயஞ் சோர்வென்னும்
அரக்கரெலாம் ஒருங்கு மாய
வெட்டியுயர் புகழ்படைத்தாய் விடுதலையே
வடிவமென மேவி நின்றாய். 2

**1806.** தமிழ்மணக்கும் நின்னாவு; பழவேத
உபநிடதத்தின்[1] சார மென்னும்
அமிழ்துநின தகத்தினிலே மணம்வீசும்;
அதனாலே யமரத் தன்மை
குமிழ்படநின் மெனியெலா[2] மணமோங்கும்;
உலகமெலாங் குழையு மோசை
உமிழ்படுவேய்ங் குழலுடைய கண்ணனென
நினைப்புலவோர் ஓது வாரே. 3

**1807.** பாரததா னாதிபதி எனநினையே
வாழ்த்திடுவார் பாரி லுள்ளோர்;
ஈரமிலா நெஞ்சுடையோர் நினைக் கண்டா
லருள்வடிவ மிசைந்து நிற்பார்;
நேரறியா மக்களெலா நினைக்கண்டால்
நீதிநெறி நேர்ந்து வாழ்வார்.
யாரறிவார் நின்பெருமை? யாரதனை
மொழியினிடை யமைக்க வல்லார். 4

**1808.** பலநாடு சுற்றிவந்தோம்; பலகலைகள்
கற்றுவந்தோ மிங்கு பற்பல[3]

.........................................

1 'உபநிடதத்தின்' என்பது நான்கசைச் சீர்; மூவசைச் சீரே இங்கிருத்தல் வேண்டும். 'உபநிடதச்' என்றிருக்கலாம்.

- பதிப்பாசிரியர்

2 'மேனியெலா' என்றிருத்தல் வேண்டும். 'மெனியெலா' - அச்சுப்பிழை.

- பதிப்பாசிரியர்

3 'மிங்குப் பற்பல்' - என்றிருத்தல் வேண்டும்.

- பதிப்பாசிரியர்

குலமார்ந்த மக்களுடன் பழகிவந்தோம்;
பலசெல்வர் குழாத்தைக் கண்டோம்;
நிலமீது நின்போலோர் வள்ளலையாங்
கண்டிலமே, நிலவை யன்றிப்
புலனாரச் சகோரபக்ஷி களிப்பதற்கு
வேறுசுடர்ப் பொருளிங் குண்டோ? 5

1809. மன்னர்மிசைச் செல்வர்மிசைத் தமிழ்பாடி
யெய்ப்புற்று மனங்க சந்து
பொன்னனைய கவிதையினி வானவர்க்கே
யன்றிமக்கட் புறத்தார்க் கீயோம்
என்னநம துளத்தெண்ணி யிருந்தோமற்
றுன்னிடத்தே இமையோர்க் குள்ள
வன்னமெலாங் கண்டுநினைத் தமிழ்பாடிப்
புகழ்தற்கு மனங்கொண் டோமே. 6

1810. மீனாடு கொடியுயர்த்த மதவேளை
நிகர்த்தவுரு மேவி நின்றாய்
யா(ம்)நாடு பொருளையெமக் கீந்தெமது
வறுமையினை யின்றே கொல்வாய்.
வானாடு மன்னாடுங் களியோங்கத்
திருமாது வந்து புல்கக்
கானாடு காத்தநக ரவதரித்தாய்,
சண்முகனாங் கருணைக் கோவே. 7

## 132. காரைக்குடி ஹிந்து மதாபிமான சங்கத்தார்மீது வாழ்த்துப் பாட்டுக்கள்*

1811. மண்ணுலகின் மீதினிலே யெக்காலும்
அமரரைப்போல் மடிவில் லாமல்
திண்ணமுற வாழ்ந்திடலா மதற்குரிய
உபாயமிங்கு[1] செப்பக் கேளீர்,
நண்ணியெலாப் பொருளினிலு முட்பொருளாய்ச்
செய்கையெலாம் நடத்தும் வீறாய்த்
திண்ணியநல் லறிவொளியாய்த் திகழுமொரு
பரம்பொருளை யகத்திற் சேர்த்து, 1

1812. செய்கையெலா மதன்செய்கை நினைவெல்லா
மதனினைவு தெய்வ மேநாம்
உய்கையுற நாமாகி நமக்குள்ளே
யொளிர்வதென உறுதி கொண்டு
பொய்,கயமை, சினம்,சோம்பர், கவலை,மயல்,
வீண்விருப்பம், புழுக்கம், அச்சம்,
ஐயுமெனும் பேயையெலாம் ஞானமெனும்
வாளாலே யறுத்துத் தள்ளி. 2

9-11-1919

* 'ஹிந்து மதாபிமான சங்கத்தார்' - (அர.)

1 'உபாயமிங்குச்' என்றிருத்தல் வேண்டும்

- பதிப்பாசிரியர்

**1813.** எப்போது மானந்தச் சுடர்நிலையில்
வாழ்ந்துயிர்கட் கினிது செய்வோர்
தப்பாதே யிவ்வுலகி லமரநிலை
பெற்றிடுவார் சதுர்வே தங்கள்
மெய்ப்பான சாத்திரங்க ளெனுமவற்றா[1]
லிவ்வுண்மை விளங்கக் கூறும்
துப்பான மதத்தினையே ஹிந்துமத
மெனப்புவியோர் சொல்லு வாரே. *3*

**1814.** அருமையுறு பொருளிலெலா மிகவரிதாய்த்
தனைச்சாரும் அன்பர்க் கிங்கு[2]
பெருமையுறு வாழ்வளிக்கு நற்றுணையாம்
ஹிந்துமதப் பெற்றி தன்னைக்
கருதியதன் சொற்படியிங் கொழுகாத
மக்களெலாங் கவலை யென்னும்
ஒருநரகக் குழியதனில் வீழ்ந்துதவித்
தழிகின்றா ரோய்வி லாமே. **4**

**1815.** இத்தகைய துயர்நீக்கிக் கிருதயுகந்
தனையுலகி லிசைக்க வல்ல
புத்தமுதாம் ஹிந்துமதப் பெருமைதனைப்
பாரறியப் புகட்டும் வண்ணம்
தத்துபுகழ் வளப்பாண்டி நாட்டினிற்கா
ரைக்குடியூர் தனிலே சால
உத்தமராந் தனவணிகர் குலத்துதித்த
இளைஞர்பலர் ஊக்க மிக்கார், **5**

---

*(பா-டு): 1 'மெய்ப்பான சாத்திரங்கள் எனுமிவற்றா' - (பா. ஆ., பா.பி., அர.)*
*2 'கிங்குப்' என்றிருத்தல் வேண்டும்.*

*- பதிப்பாசிரியர்*

**1816.** உண்மையே தாரகமென் றுணர்ந்திட்டார்,
அன்பொன்றே யுறுதி யென்பார்,
வண்மையே குலதர்ம மெனக்கொண்டார்,
தொண்டொன்றே வழியாக் கண்டார்,
ஒண்மையுயர் கடவுளிடத் தன்புடையார்,
அவ்வன்பின் ஊற்றத் தாலே
திண்மையுறும் ஹிந்துமத அபிமான
சங்கமொன்று சேர்த்திட் டாரே. 6

**1817.** பலநூல்கள் பதிப்பித்தும், பலபெரியோர்
பிரசங்கம் பண்ணு வித்தும்,
நலமுடைய கலாசாலை புத்தகசா
லைபலவு நாட்டி யுந்தங்
குலமுயர நகருயர நாடுயர
வுழைக்கின்றார். கோடி மேன்மை
நிலவுறவிச் சங்கத்தார் பல்லூழி
வாழ்ந்தொளிர்க நிலத்தின் மீதே. 7

## 133. காலனுக் குரைத்தல்

பல்லவி

1818. காலா, உனைநான் சிறுபுல்லென மதிக்கிறேன் - என்றன்
காலருகே வாடா, சற்றேஉனை மிதிக்கிறேன்! *1*

சரணங்கள்

1819. வேலாயுத விருதினை மனதிற் பதிக்கிறேன் – நல்ல
வேதாந்த முரைத்த ஞானியர் தமையெண்ணித்
துதிக்கிறேன் - ஆதி
மூலாவென்று கதறிய யானையைக் காக்கவே – நின்றன்
முதலைக்கு நேர்ந்ததை மறந்தாயோ கெட்ட மூடனே - அட
(காலா உனை) *2*

1820. ஆலால முண்டவனடி சரணென்ற மார்க்கண்டன் - தன
தாவி கவரப்போய் நீபட்ட பாட்டினை யறிகுவேன் - இங்கு
நாலாயிரம் காதம் விட்டகல்! உனை விதிக்கிறேன்! - ஹரி[1]
நாரா யணனாக நின்முன்னே உதிக்கிறேன்! - அட
(காலா உனை) *3*

.........................................

*டிசம்பர் 1919 (சுதேசமித்திரன் ஆண்டுமலர்)*

*1 பிற பதிப்புகளில் இவ்வரி விடுபட்டுள்ளது.*

*- பதிப்பாசிரியர்*

(பல்லவிக்கு ஸ்வர மாதிரி.

ஸரிகா ரிஸ ஸாஸஸ நீநிநி கமப மகா ரீஸா - பப

ஸாநித பாபா - மாகா காமப – கமபம கா – ரீஸா

சரணங்களுக்கும் ஏறக்குறைய இதே மாதிரிதான்)*

* தற்காலத்தில் வழக்கிலுள்ள பதிப்புக்களில் ஸ்வரக் குறிப்புக்கள் விடப் பட்டுள்ளன.

- பதிப்பாசிரியர்

## 134. அல்லா

பல்லவி

1821. அல்லா, அல்லா, அல்லா! 1

சரணங்கள்

1822. பல்லாயிரம் பல்லாயிரங் கோடிகோடி யண்டங்கள்
எல்லாத் திசையினுமோர்[1] எல்லையில்லா வெளிவானிலே
நில்லாது சுழன்றோட நியமஞ்செய்த தோர்நாயகன்
சொல்லாலு மனத்தாலுந் தொடரொணாத பரஞ்ஜோதி
(அல்லா) 2

1823. கல்லாதவ ராயினுமுண்மை சொல்லாதவ ராயினும்
பொல்லாதவ ராயினுந்தவ மில்லாதவ ராயினும்
நல்லாருரை நீதியின்படி நில்லாதவ ராயினும்
எல்லாரும்வந் தேத்துமளவில்யம பயங்கெடச் செய்பவன்

(அல்லா) 3

.........................................

*20-6-1920*

*ஆதாரம்: கதாரத்னாகரம் - ஜூலை 1920.*

*திருநெல்வேலி மாவட்டம், பொட்டல்புதூர், தெற்குப் புதுமனைத் தெருவில் முஸ்லிம் சபை ஒன்றில் 'இஸ்லாம்' மதத்தின் பெருமை' பற்றிப் பாரதியார் பேசியபோது இதனைப் பாடினார், 24-6-1920 'சுதேசமித்திர'னில் வெளியாயிற்று.*

*(பா-டு): 1 எல்லாத் திசையிலுமோர் - (பா.ஆ., பா.பி., அர.)*

**1824.** ஏழைகட்குஞ் செல்வர்கட்கும் இரங்கியருளும் ஓர்பிதா[1]
கோழைகட்கும் வீரருக்குங் குறைதவிர்த்திடும் ஓர்குரு
ஊழி,யூழி, அமரராயிவ் வுலகின்மீதி லின்புற்றே
வாழ்குவீர் பயத்தைநீக்கி வாழ்த்துவீர் அவன்பெயர்
(அல்லா) 4

*சங்கராபரண ராகம்* *திஸ்ர ஏக தாளம்*

ஸ்வர வரிசைகளின் மாதிரி பின்வருமாறு:

**பல்லவி**

*தந்நீ, நிந்நீ, ஸஸ்ஸா*

**சரணங்கள்**

*பஸாநிநி, நிநீநிதி, தாததாத, பாமகா,*
*பஸாநிநி, நிநீநித, தாததாத, பாமகா,*
*பஸாநிநி, நிநீநித, தாததாத, பாமகா,*
*பஸாநிநி, நிநீநித, தாததாத, ஸஸாஸாஸ-*
*(தந்நீ, நிந்நீ, ஸஸ்ஸா)*

---

1 பாரதி ஆச்ரம் வெளியிட்ட (1922) கவிதைத் தொகுதியில் வெளியிட்ட போது முதல் இரு சரணங்களே இடம்பெற்றன. அப்பதிப்பினைப் பின்பற்றிய பிற பதிப்புகள் மூன்றாவது சரணத்தை விட்டுவிட்டன. மற்ற இரு சரணங்களிலிருந்து இதன் சந்தம் மாறுவது நோக்கத் தக்கது.

– பதிப்பாசிரியர்

## 135. பாரத ஸமுதாயம்

பல்லவி

**1825.** பாரத ஸமுதாயம் வாழ்கவே – வாழ்க,வாழ்க
பாரத ஸமுதாயம் வாழ்கவே – ஜய ஜய ஜய ஜய ஜய ஜய[1]
பாரத ஸமுதாயம் வாழ்கவே.

அநுபல்லவி

**1826.** முப்பது கோடி ஜனங்களின் ஸங்க
முழுமைக்கும் பொது உடைமை.
ஒப்பி லாத ஸமுதாயம்
உலகத்துக் கொருபுதுமை – வாழ்க! 2
(பாரத ஸமுதாயம் வாழ்கவே
ஜய ஜய ......... )

சரணங்கள்

**1827.** மனித ருணவை மனிதர் பறிக்கும்
வழக்க மினியுண்டோ?

.............................................

*1920 (ஆதாரம்: கையெழுத்துப் படி)*

*இப்பாடல் சென்னைக் கடற்கரைக் கூட்டத்தில் பாடப்பட்டது. இப் பாடலுக்கான விளக்கம் வ. வெ.ஸு. ஐயரின் தேசபக்தன் இதழில் வெளிவந் துள்ளதாகப் பாரதியாரே ஓரிடத்தில் எழுதியுள்ளார். இதழ் எம் பார்வைக்குக் கிட்டவில்லை.*
*- பதிப்பாசிரியர்*

*(பா-டு): 1 'பாரத ஸமுதாயம் வாழ்கவே ஜய ஜய ஜய' (பா.ஆ., பா.பி., அர.)*

மனிதர் நோக மனிதர் பார்க்கும்
வாழ்க்கை யினியுண் டோ – (புலனில்
வாழ்க்கை யினியுண் டோ – நம்மிலந்த
வாழ்க்கை யினியுண் டோ?)

1828. இனிய பொழில்கள் நெடிய வயல்கள்
எண்ணரும் பெருநாடு -
கனியுங் கிழங்குந் தான்யங்களும்[1] –
கணக் கின்றித் தரு நாடு - (இது
கணக் கின்றித் தரு நாடு – நித்த நித்தம்
கணக் கின்றித் தரு நாடு.)
மனித ருணவை மனிதர் பறிக்கும்
வழக்க மினியுண் டோ?......

1829. இனி யொரு விதி செய்வோம் - அதை
எந்த நாளுங் காப்போம்.
தனி யொருவனுக் குணவில்லை யெனில்[2]
ஜகத்தினை யழித் திடுவோம். (வாழ்க! பாரத ஸமுதாயம்
வாழ்கவே!)

(ஜய... ...)

1830. "எல்லா உயிர்களிலு நானே யிருக்கிறேன்"
என்றுரைத்தான் கண்ண பெருமான்
எல்லாரு மமரநிலை யெய்துநன் முறையை
இந்தியா உலகிற் களிக்கும் – (ஆம்,
இந்தியா உலகிற் களிக்கும் - ஆம், ஆம்

---

(பா-டு 1 'கனியும் கிழங்கும் தானியங்களும்' - (கவிமணி, அர.)
2 'தனியொருவனுக் குணவிலை யெனில்' – (பா. பி., அர.)



77-35

இந்தியா உலகிற் களிக்கும்) - இங்கு –
(மனித ருணவை மனிதர் பறிக்கும் வழக்க மினி
யுண்டோ?)

1831. எல்லாரு மோர்குலம் எல்லாரு மோரினம்–
எல்லாரும் இந்தியா மக்கள்
எல்லாரு மோர்நிறை எல்லாரு மோர்விலை
எல்லாரும் இந்நாட்டு மன்னர்! – (நாம்
எல்லாரும் இந்நாட்டு மன்னர் - ஆம்!
எல்லாரும் இந்நாட்டு மன்னர்! - (வாழ்க–
பாரத ஸமுதாயம் வாழ்க வே!
(ஜய... ஜய .........)

மேற்கூறிய பாட்டைப் பின்வரும் ஸ்வர வரிசையை மாதிரியாகக் கொண்டு பாடவேண்டும்: (சங்கராபரண மேளம் – பியாக் (பேஹாக்) ராகம் - திஸ்ர ஏகதாளம்; தகிட, தகிட, என்ற கதி)

பல்லவி

பாரத ஸமுதாயம் வாழ்க வே
காரிக தப காரி காரி ஸா ... காரி காரி
காரிக தப காரி காரி ஸா – நீத – நீத
காரிக தப காரி காரி ஸா –

{ ஜய ஜய ஜய ஜய ஜய ஜய }
{ கப கப தஸ ரிக ஸரி தஸ }

அனுபல்லவி

ஸஸஸ ஸாஸ ஸஸஸ ஸாஸ
தநித பதப பபபா —

.............................................

பின்குறிப்பு: அனைத்துப் பதிப்புக்களிலும் ( ) இக்குறியீடு நீக்கப்பட்டுள்ளது.

கபத ஸாஸ - தபம காக -
மபதப மகரிரிரி - (பாப
மபதப மகரி - பாப -
கககக - ரிரிரி - ஸஸா) காரி (பாரத ஸமுதாயம் வாழ்க)

சரணங்கள்

(1) ஸஸஸ ஸாஸ ஸஸஸ ஸாஸ - (மனித் ருணவை
மனிதர் பறிக்கும்)

தநிதப தப பபபா -
தநிநி நீநி - தநித பாம
மப தப மக ரிரிரி - (பாப -
மப தப மக ரிரிரி - பப பபப
கககக - ரிரிரி - ஸஸா)

மனிதர் நோக மனிதர் பார்க்கும்
தநிநி நீநி - தநித பாம

வாழ்க்கை யினி யுண் டோ? நம்மிலந்த
மபதப மக ரீ - பப பப பப

வாழ்க்கை யினி யுண் டோ?
கககக ரிரிரி - ஸஸஸ

பபப பாப பப பாப - (இனிய பொழில்கள்)
காபதநித பபபா -
மநிநி நிநீநி தபமகமம
மபதப மக ரிரிரி - (பபப -
கககக ரிரிரி ஸஸஸ)
ஸஸஸ ஸஸஸ ஸாஸா - (இனி யொரு விதி செய்
வோம்) - ஸா -

தநித தபப தபபா -
ஸகரி பபப ஸகரி பபப
ககக - ரிரிரி - ஸஸஸா -)
(வாழ்க - பாரத ஸமுதாயம் வாழ்கவே
காரி - காரிக தப காரி காரி கா)

### இரண்டாம் சரணம்

(2) ஸாஸாஸ ஸாஸஸஸ - ஸாஸாஸ ஸாஸ ஸா
"எல்லாவு யிர்களிலு - நானேயி ருக்கிறேன்."
தநீத தாபாப - தபபா -
காகாக - கபதஸா - பாகாரி - ரிரிரீ -
காரிரீ - கதபா - கரீரீ - (பா - ஆம் -
காககா - ரிரிரீரி - ஸாஸா
இந்தியா - உலகிற்களி க்கும்)
பாபாப - பாபபா - பாபாப - பாபபா -
காபாத நீதாத பாபா -
நீநீநி - நீநிநீ - தாமாம மாமகா -
பாபாப - காரீரீ - ஸாஸா - பா
எல்லாரு - மிந்நாட்டு மன்னர் - ஆம் -
பாபாப - காரீரீ - ஸ - ஸா -
எல்லாரு மிந்நாட்டு மன்னர் - காரி வாழ்க

காரிக தப - காரி காரி - ஸா - காரி - காரி -
பாரத ஸமு - தாயம் வாழ்க வே - வாழ்க - வாழ்க -
காரிகதப - காரி காரி ஸா - பாப - பாப
பாரத ஸமு தாயம் வாழ்க வே - வாழ்க - வாழ்
காரிகதப - காரி காரி ஸா - ஸாஸ - ஸாஸ -
காரிகதப காரி காரி ஸா -

ஜய ஜய ஜய ஜய ஜய ஜய
ஜய ஜய ஜய ஜய ஜய ஜய
ஜய ஜயா!

பாரத ஸமுதாயம் வாழ்கவே.

## 136. இந்தியாவின் அழைப்பு

*(இஃது யுனைடெட் ஸ்டேட்ஸ், மிஷிகன் மாகாணம், தெத்ருவா நகரத்திலுள்ள ஸ்ரீமதி மாட் (d) ராஸ்ஸ்டன் ஷர்மன் என்ற ஸ்திரீ எழுதிய இங்கிலீஷ் கவிதையினின்றும் ஸ்ரீமான் சி. சுப்பிரமணிய பாரதியால் மொழிபெயர்க்கப்பட்டது).*

வேண்டுகோள்

**1832.** அன்பிற் கினிய இந்தியா! அகில
மதங்கள், நாடுகள், மாந்தருக் கெல்லாம்
தாயே! எங்கள் உணர்வினைத் தாண்டிய
சேய்நெடுங் காலத்தின் முன்னே சிறந்தொளிர்
குருக்களை யளித்துக் குவலயங் காத்தனை. 5
திருக்கிளர் தெய்வப் பிறப்பினர் பலரை
உலகினுக் களித்தாய்; உனதொளி ஞானம்
இலகிட நீயிங் கெழுந்தரு ளுகவே!
விடுதலை பெறநாம் வேண்டிநின் மறைவு
படுமணி முகத்தைத் திறந்தெம் பார்வைமுன், 10
வருக நீ! இங்குள மானுடச் சாதிகள்
பொருகளந் தவிர்ந்தமை வுற்றிடப் புரிக நீ!
மற்றவர் பகைமையை அன்பினால் வாட்டுக!

........................................

*19-7-1921 (சுதேசமித்திரன்)*
*ஆதாரம்: 'பாரதி தமிழ்'*

செற்றவர் படைகளை மனையிடந் திருப்புக!
தாயே, நின்றன் பண்டைத் தநயராம் 15
மாயக் கண்ணன், புத்தன், வலியசீர்
இராமனும், ஆங்கொரு மஹமது மிணையுற்ற
விராவுபுகழ் வீரரை வேண்டுதும் இந்நாள்!
''தோன்றினேன்'' ஒன்று சொல்லிவந் தருளும்
சான்றோன் ஒருமுனி தருகநீ எமக்கே! 20
மோசே, கிறிஸ்து, நானக் முதலியோர்
மாசற வணங்கி மக்கள் போற்றிடத்
தவித்திடுந் திறத்தினர் தமைப்போ லின்றொரு
பவித்திர மகனைப் பயந்தருள் புரிகநீ!
எம்முன் வந்து நீதியின் இயலைச்
செம்மையுற விளக்குமொரு சேவகனை அருளுகநீ.* 25

உத்தரம்

கேள்!விடை கூறினள் மாதா! நம்மிடை
யாவனே யிங்கு[1] தோன்றினன்? இவன்யார்?
உலகப் புரட்டர் தந்திர உரையெலாம்
விலகத் தாய்சொல் விதியினைக் காட்டுவான். 30
மலைவுசெய் யாமை; மனப்பகை யின்மை;
நலிவுறுத் தோரை நாம்எதிர்த் திடாமை;
தீச்செயல் செய்யும் அரசினைச்* சேராமை;
ஆச்சரி யப்பட உரைத்தனன் – அவையெலாம்.
வருக காந்தி! ஆசியா வாழ்வே! 35
தரும விதிதான் தழைத்திட உழைப்பாய்.

---

*அகவலோசை சிதைகிறது. - பதிப்பாசிரியர்
1 'யிங்குத்' என்றிருத்தல் வேண்டும். - பதிப்பாசிரியர்

ஆன்மா அதனால் ஜீவனை யாண்டு
மேனெறிப் படுத்தும் விதத்தினை யருளினாய்!
பாரத நாட்டின் பழம்பெருங் கடவுளர்
வீரவான் கொடியை விரித்துநீ நிறுத்தினாய்! 40
மானுடர் தம்மை வருத்திடும் தடைகள்
ஆனவை யுருகி அழிந்திடும் வண்ணம்
உளத்தினை நீகனல் உறுத்துவாய்! எங்கள்
காந்தி மஹாத்மா! நின்பாற் கண்டனம்!
மாந்தருட் காணநாம் விரும்பிய மனிதனை! 45
நின்வாய்ச் சொல்லில், நீதிசேர் அன்னை
தன்வாய்ச் சொல்லினைக் கேட்கின் றனம்யாம்
தொழுந்தா யழைப்பிற் கிணங்கிவந் தோம்யாம்
எழுந்தோம்; காந்திக் கீந்தோம் எமதுயிர்.
இங்கவன் ஆவிக் கொள்கைவென் றிடவே. 50
அன்றைக் குணவுதான் அகப்படு மாயின்
நன்றதில் மகிழ்வோம்; விடுதலை நாடி
எய்திடுஞ் செல்வ எழுச்சியிற் களிப்போம்;
மெய்திக ழொற்றுமை மேவுவோம்; உளத்தே
கட்டின்றி வாழ்வோம்; புறத்தளைக் கட்டினை 55
எட்டுணை மதியா தேறுவோம்; பழம்போர்க்
கொலைத்தொழிற் கருவிகள் கொள்ளா தென்றும்
நிலைத்தன ஆகிய நீதிக கருவியும்
அறிவுங் கொண்டே அரும்போர் புரிவோம்;
வறியபுன் சிறைகளில் வாடினும்; உடலை 60
மடிய விதிப்பினும்; "மீட்டுநாம் வாழ்வோம்"என்
றிடியுறக் கூறி வெற்றி யேறி,
ஒடிபடத் தளைகள், ஓங்குதும் யாஅமே 64

# 137. தீ

## அக்நி ஸ்தோமம்*

### சதுஸ்ர ஏகம்

ரிஷிகள்:-

1833. எங்கள்வேள்விக் கூடமீதில்
ஏறுதே தீ! தீ! - இந்நேரம்
பங்கமுற்றே பேய்களோடப்
பாயுதே தீ!தீ! - இந்நேரம் 1

அஸுரர்:-

1834. தோழரேநம் மாவிவேகச்[1]
சூழுதே தீ!தீ - ஐயோ! - நாம்
வாழவந்த காடுவேக[2]
வந்ததே தீ!தீ! - அம்மாவோ! 2

.....................................

* 'அக்நி ஸ்தோமம் (தீ)' - (பா. ஆ.), 'அக்நிதோமம் (தீ)' - (பா. பி.) 'வேள்வித்தீ' - (அர.)

பாரதி பிரசுராலய 1932ஆம் வருடப் பதிப்பில் "ராகம் - சதுஸ்ர; தாளம் - ஏகம்" என்று ராக - தாளக் குறிப்புத்தரப்பட, 1937ஆம் வருடப் பதிப்பில் "ராகம் - நாத நாமக்கிரியை" என்று காணப்படுகிறது.

- பதிப்பாசிரியர்

(பா-டு): 1 'தோழரே நம்மாவி வேவச்' (பா.ஆ. பா.பி, அர.)
2 'வாழ வந்த காடு வேவ' -(பா.பி, அர.)

ரிஷி:-

1835. பொன்னையொத்தோர் வண்ணமுற்றான்
போந்துவிட்டானே - இந்நேரம்
சின்னமாகிப் பொய்யரக்கர்
சிந்தி வீழ்வாரே - இந்நேரம். 3

அஸு:-

1836. இந்திராதி தேவர்தம்மை
ஏசி வாழ்ந்தோமே - ஐயோ! நாம்
வெந்துபோக மானிடர்க்கோர்
வேத முண்டாமோ! - அம்மாவோ! 4

ரிஷி:-

1837. வானைநோக்கிக் கைகள்தூக்கி
வளருதே தீ!தீ! - இந்நேரம்
ஞானமேனி, உதயகன்னி
நண்ணி விட்டாளே - இந்நேரம். 5

ரிஷி:-

1838. கோடிநாளாய் இவ்வனத்திற்
கூடி வாழ்ந்தோமே - ஐயோ! நாம்
பாடிவேள்வி மாந்தர்செய்யப்
பண்பிழந் தோமே - அம்மாவோ! 6

ரிஷி:-

1839. காட்டில்மேயுங் காளைபோன்றான்
காணுவீர் தீ!தீ! - இந்நேரம்
ஓட்டியோட்டிப் பகையையெல்லாம்
வாட்டு கின்றானே - இந்நேரம். 7

அஸு:-

1840. வலியிலாதார் மாந்தரென்று
மகிழ்ந்து வாழ்ந்தோமே - ஐயோ! நாம்
கலியைவென்றோர் வேதவுண்மை
கண்டு கொண்டாரே - அம்மாவோ! 8

ரிஷி:-

1841. வலிமைமைந்தன் வேள்வி முன்னோன்
வாய்திறந் தானே - இந்நேரம்
மலியுநெய்யுந் தேனுமுண்டு
மகிழ வந்தானே – இந்நேரம். 9

அஸு

1842. உயிரைவிட்டும் உணர்வை விட்டும்
ஓடி வந்தோமே - ஐயோ நாம்
துயிலுடம்பின் மீதிலுந்தீ
தோன்றி விட்டானே – அம்மாவோ! 10

ரிஷி:-

1843. அமரர் தூதன் சமரநாதன்
ஆர்த்தெ ழுந்தானே – இந்நேரம்
குமரிமைந்தன் எமதுவாழ்விற்
கோயில் கொண்டானே – இந்நேரம். 11

அஸு:-

1844. வருணன்மித்ரன் அர்யமானும்
மதுவை யுண்பாரோ! - ஐயோ நாம்!
பெருகுதீயின் புகையும்வெப்பும்
பின்னி மாய்வோமோ! – அம்மாவோ! 12

ரிஷி:-

1845. அமரரெல்லாம் வந்துநம்முன்
அவிகள் கொண்டாரே - இந்நேரம்
நமனுமில்லை பகையுமில்லை
நன்மை கண்டோமே - இந்நேரம். 13

அஸு:-

1846. பகனுமிங்கே யின்பமெய்திப்
பாடு கின்றானே - ஐயோ, நாம்
புகையில்வீழ இந்திரன்சீர்
பொங்கல் கண்டீரோ! – அம்மாவோ! 14

ரிஷி:-

1847. இளையும்வந்தாள் கவிதைவந்தாள்
இரவி வந்தானே - இந்நேரம்
விளையுமெங்கள் தீயினாலே
மேன்மை யுற்றோமே! – இந்நேரம். 15

ரிஷி:-

1848. அன்னமுண்பீர் பாலுநெய்யும்
அமுது முண்பீரே – இந்நேரம்
மின்னிநின்றீர் தேவரெங்கள்
வேள்வி கொள்வீரே – இந்நேரம். 16

ரிஷி:-

1849. ஸோமமுண்டு தேவர்நல்கும்
ஜோதி பெற்றோமே – இந்நேரம்
தீமைதீர்ந்தே வாழியின்பஞ்
சேர்ந்து விட்டோமே – இந்நேரம் 17

ரிஷி :-

1850. உடலுயிர்மே லுணர்விலுந்தீ
ஓங்கி விட்டானே – இந்நேரம்
கடவுளர்தாம் எம்மைவாழ்த்திக்
கைகொடுத் தாரே - இந்நேரம். 18

ரிஷி:-

1851. எங்கும்வேள்வி யமரரெங்கும்
யாங்கணுந் தீ!தீ! - இந்நேரம்
தங்குமின்பம் அமரவாழ்க்கை
சார்ந்து நின்றோமே – இந்நேரம். 19

ரிஷி:-

1852. வாழ்கதேவர், வாழ்கவேள்வி,
மாந்தர் வாழ்வாரே – இந்நேரம்
வாழ்கவையம், வாழ்கவானம்,[1]
வாழ்க தீ! தீ! தீ! – இந்நேரம். 20

(பா–டு): 1 'வாழ்க வையம், வாழ்க வேதம்' – (பா.ஆ., பா.பி., அர.)

## 138. லக்ஷ்மீ ப்ரார்த்தனை

### திரு வேட்கை

நாட ராகம்; சதுஸ்ர ஏகதாளம்

1853. மலரின் மேவு திருவே – உன்மேல்
மையல்பொங்கி நின்றேன்
நிலவு செய்யு முகமும் - காண்பார்
நினைவழிக்கும் விழியும்
கலகலென்ற மொழியும் – தெய்வக்
களிதுலங்கு நகையும்
இலகு செல்வ வடிவும் - கண்டுன்
இன்பம்வேண்டு கின்றேன். 1

1854. கமல மேவு திருவே - நின்மேல்
காதலாகி நின்றேன்
குமரி நின்னை யிங்கே - பெற்றார்[1]
கோடியின்ப முற்றார்

---

* லக்ஷிமி பிரார்த்தனை - திருவேட்கை – (பா.ஆ., பா.பி.)
திரு வேட்கை'- (அர.)

பாரதி ஆச்ரமப் பதிப்பில் "ராகம்-நாட்டை; தாளம். சதுஸ்ர ஏகம்" என்று ஸ்வரக் குறிப்புத் தரப்பெற்றதையொட்டி, பிறரும் இதனையே பின் பற்றினர். - பதிப்பாசிரியர்

(பா-டு): 1 'குமரி நின்னை யிங்கே - பெற்றோர்' - (பா.ஆ., பா.பி., அர.)

அமரர் போல வாழ்வேன் - என்மேல்
அன்புகொள்வை யாயின்
இமய வெற்பின் மோத - நின்மேல்
இசைகள்பாடி வாழ்வேன். 2

1855. வாணி தன்னை யென்றும் – நினது
வரிசைபாட வைப்பேன்
நாணி யேக லாமோ? – என்னை
நன்கறிந்தி லாயோ?
பேணி வைய மெல்லாம் – நன்மை
பெருகவைக்கும் விரதம்
பூணு மைந்த ரெல்லாம் – கண்ணன்
பொறிகளாவ ரன்றோ? 3

1856. பொன்னு நல்ல மணியும் – சுடர்செய்
பூண்களேந்தி வந்தாய்
மின்னு நின்றன் வடிவிற் – பணிகள்
மேவிநிற்கு மழகை
என்னுரைப்ப னேடீ – திருவே,
என்னுயிர்க்கொ ரமுதே,
நின்னை மார்பு சேரத் - தழுவி
நிகரிலாது வாழ்வேன். 4

1857. செல்வ மெட்டு மெய்தி - நின்னாற்
செம்மையேறி வாழ்வேன்.
இல்லை யென்ற கொடுமை - உலகில்
இல்லையாக வைப்பேன்.
முல்லை போன்ற முறுவல் – காட்டி
மோகவாதை நீக்கி

எல்லை யற்ற சுவையே – எனை நீ
என்றும்வாழ வைப்பாய்[1]. 5

---

1 பாரதியார் இப்பாடலின் இறுதி இரு வரியாகப்
"பல்வகைத் திற ஞ் சேர் - நினது
பயனனைத்துமருள்வாய்"
என எழுதியதை யடித்துவிட்டுப் "எல்லையத்ற......வைப்பாய்"
என்று எழுதியுள்ளார்.

- பதிப்பாசிரியர்

## 139. திருக்காதல்

1858. திருவேநினைக் காதல்கொண் டேனே – நினது திரு
வுருவே மறவாதிருந் தேனே – பலதிசையில்
தேடித் திரிந்திளைத் தேனே – நினக்கு மனம்
வாடித் தினங்களைத் தேனே - அடி நினது
பருவம் பொறுத்திருந் தேனே - மிகவு நம்பிக்
கருவம் படைத்திருந் தேனே - இடை நடுவில்
பையச் சதிகள்செய் தாயே – அதினிலு மென்
மையல் வளர்தல்கண் டாயே - அமுத மழை
பெய்யக் கடைக்கணல் காயே - நினதருளில்
உய்யக் கருணைசெய் வாயே – பெருமை கொண்டு
வையந் தழைக்கவைப் பேனே – அமர யுகஞ்
செய்யத் துணிந்துநிற் பேனே – அடியெனது
தேனேயெ னதிரு கண்ணே - எனையுகந்து
தானே வருந்திருப் பெண்ணே.

ஹநும தோடி*

*பஸஸ்ா - தபதாப – காரீஸா கமபதநி*
*பஸ ஸா - தபதாப - காரீஸா – கமபதநி*
*ஸமா மகரி நிரீஸா – கமபதநி*

---

* *கையெழுத்துப்படியில் உள்ள இந்த இசைக் குறிப்பு எந்தவொரு பதிப்பிலும் தரப்பெறவில்லை.* - *பதிப்பாசிரியர்*

ஸமா மகரி நிரீஸா - நிதபமக
ஸமா மகரி நிரீஸா - ஸரிககம
ஸமா மகரி நிரீஸா - மபதமப
காகா மநீதப மபா - நிநிஸநிஸ
நிநீ ஸகாரீ தாநிஸா - கமபதநி
ஸாநீ தப மகரி ஸா - மகரிஸநி
ஸகா கமாப ககஸா - கமபதத
பதா தநிஸ நீதஸா - ஸஸஸஸஸ
ரிரீ ஸரிஸ நரீஸா,

# 140. திருமகள்*

திஸ்ர ஏக தாளம்

1859. நித்தமுனை வேண்டிமன நினைப்பதெல்லா நீயாய்ப்
பித்தனைப்போல் வாழ்வதிலே பெருமையுண்டோ திருவே?
சித்தவுறுதி கொண்டிருந்தார் செய்கையெல்லாம் வெற்றி
கொண்டே[1]
உத்தமநிலை கொள்வரென்றே[2] உயர்ந்த வேத
முரைப்பதெல்லாம்
சுத்தவெறும் பொய்யோடி சுடர்மணியே திருவே[3]
மெத்தமயல் கொண்டுவிட்டேன் மேவிடுவாய் திருவே *1*

1860. உன்னையன்றி யின்பமுண்டோ யுலகமிசை வேறே?
பொன்னைவடி வென்றுடையாய், புத்தமுதே, திருவே!

.....................................

*திருவாசகத்திலுள்ள திருவம்மானைப் பாடல்கள் போல, இப்பாடல்கள் ஆறடித் தரவு கொச்சகக் கலிப்பாக்களாகும். - பதிப்பாசிரியர்*

**ஸ்ரீதேவி ஸ்துதி - திருமகள்' - (பா.ஆ., பா.பி.)*

*'திருமகள் துதி' - (அர.)*

*பாரதியார் 'திஸ்ர ஏக தாளம்' என்று தாளம் மட்டும் குறித்துள்ளார். பா. ஆ. பதிப்பில் 'ராகம் - சக்கரவாகம்; தாளம் - திஸ்ர ஏகம்' என இராகமும் குறிக்கப்பட்டுள்ளது - பிறபதிப்புக்களிலும் அவ்வாறே இராகமும் தாளமும் குறிக்கப்பட்டுள்ளன.*

*- பதிப்பாசிரியர்*

*(பா-டு): 1 'செய்கையெல்லாம் வெற்றிகண்டே' - கவிமணி*
*2 உத்தமநிலை சேர்வரென்றே' - (பா.ஆ., பா.பி., அர.)*
*3 சுத்தமுழுப் பொய்யோகாண் - கவிமணி*

மின்னொளிதரு நன்மணிகள் மேடையுயர்ந்த மாளிகைகள்
வன்னமுடைய தாமரைசேர்[1] மணிக்குளமுள்ள சோலைகளும்
அன்னநறு நெய்பாலும் அதிசயமாத் தருவாய்—
நின்னருளை வாழ்த்திநன்றா நிலமளிப்பேன் திருவே[2] 2

1861. ஆடுகளு மாடுகளு அழகுடைய பரியும்
வீடுகளு நெடுநிலமும் விரைவினிலே தருவாய்
ஈடுநினக்கொர் தெய்வமுண்டோ[3] எனக்குனையன்றிச்
சரணுமுண்டோ?[4]
வாடுநிலத்தைக் கண்டிரங்கா மழையினைப்போ
லுள்ளமுண்டோ?
நாடுமணிச் செல்வமெல்லா நன்கருள்வாய் திருவே
பீடுடைய வான்பொருளே பெருங்களியே திருவே 3

..........................................

(பா-டு): 1 'வன்னமுடைய தாமரைப்பூ - (பா.ஆ., பா.பி., அர.)
2 'நின்னருளை வாழ்த்தி என்றும் நிலத்திருப்பேன் திருவே - (பா.ஆ)
'நின்னருளை வாழ்த்தி என்றும் நிலைத்திருப்பேன் திருவே' - (பா.பி., அர.)
3 'ஈடு நினக்கோர் தெய்வமுண்டோ' - (அர.)
4 'எனக்குனை யன்றிச் சரணமுண்டோ? - (பா.பி., அர.)

# 141. காணி நிலம்*

திஸ்ர ஏகம் – ஆதிதாளம்

1862. காணி நிலம்வேண்டும் – பராசக்தி[1]
காணி நிலம்வேண்டும் – அடி[2]
தூணி லழகியதாய் - நன்மாடங்கள்
துய்ய நிறத்தினதாய் - அந்தக்
காணி நிலத்திடையே – யொர்மாளிகை[3]
கட்டித் தரவேண்டும் - அங்கு†
கேணி யருகினிலே - தென்னைமரம்
கீற்று மிள நீரும் 1

1863. பத்துப் பனிரண்டு - தென்னைமரம்[4]
பக்கத்தி லேவேணும் - நல்ல
முத்துச் சுடர்போலே – நிலாவொளி

..........................................

*பாரதி இப்பாடலுக்கு ''பராசக்திக்கு ஒரு புலவன் வேண்டுகோள்'' என்று தலைப்பை எழுதி, பின் என்ன காரணங் கருதியோ ''காணி நிலம்'' என்று தலைப்பை மாற்றிவிட்டார்.

- பதிப்பாசிரியர்

'காணி நிலம் வேண்டும்' - (அர.)

(பா-டு): 1 'காணி நிலம் வேண்டும் - அடி'
2 'காணி நிலம் வேண்டும் - அங்கு' - (பா.ஆ., பா.பி., அர.)
3 'காணி நிலத்திடையே – ஓர் மாளிகை' - (பா.பி., அர.)
4 'பத்துப் பன்னிரண்டு - தென்னைமரம்' - (அர.)

† 'அங்குக்' என்றிருத்தல் வேண்டும்.

-பதிப்பாசிரியர்

முன்பு வரவேணும் - அங்கு
கத்துங் குயிலோசை - சற்றேவந்து
காதிற் படவேணும் - என்றன்
சித்த மகிழ்ந்திடவே - நன்றாயிளந்
தென்றல் வரவேணும் 2

1864. பாட்டுக் கலந்திடவே - அங்கேயொரு
பத்தினிப் பெண்வேணும், - எங்கள்
கூட்டுக் களியினிலே - கவிதைகள்
கொண்டு தரவேணும் - அந்தக்
காட்டு வெளியினிலே - அம்மா,நின்றன்
காவலுற வேணும் - என்றன்
பாட்டுத் திறத்தாலே - இவ்வையத்தைப்
பாலித் திடவேணும். 3

# 142. புதுமைப் பெண்

1865. போற்றி! போற்றியொ ராயிரம்[1] போற்றி!நின்,
பொன்ன டிக்குப்பல் லாயிரம் போற்றிகாண்.
சேற்றி லேபுதி தாகமு ளைத்ததோர்
செய்ய தாமரைத் தேமலர் போலொளி
தோற்றி நின்றனை, பாரத நாட்டிலே
துன்ப நீக்குஞ் சுதந்திர பேரிகை
சாற்றி வந்தனை. மாதர சேயெங்கள்
சாதி செய்த தவப்பயன் வாழிநீ! *1*

1866. மாதர்க் குண்டு சுதந்திர மென்றுநின்
வண்ம லர்த்திரு வாயின் மொழிந்தசொல்
நாதந் தானது நாரதன் வீணையோ?
நம்பிரான் கண்ணன் வேய்ங்குழ லின்பமோ?
வேதம் பொன்னுருக் கன்னிகை யாகியே
மேன்மை செய்தெமைக் காத்திடச் சொல்வதோ?
சாதல் மூத்தல் கெடுக்கு மமிழ்தமோ?
தையல் வாழ்கபல் லாண்டுபல் லாண்டிங்கே! *2*

1867. அறிவு கொண்ட மனித வுயிர்களை
அடிமை யாக்க முயல்பவர் பித்தராம்;

---

*(பா-டு): 1 'போற்றி! போற்றியோ ராயிரம்' - (பா.ஆ., பா.பி., அர.)*

நெறிகள் யாவினு மேம்பட்டு மானிடர்
நேர்மை கொண்டுயர் தேவர்க ளாதற்கே
சிறிய தொண்டுகள் தீர்த்தடி மைச்சுருள்
தீயி லிட்டுப் பொசுக்கிட வேண்டுமாம்;
நறிய பொன்மலர் மென்சிறு வாயினால்
நங்கை கூறும் வியப்புக்கள் கேட்டிரோ![1] 3

1868. ஆணும் பெண்ணு நிகரெனக் கொள்வதால்
அறிவி லோங்கியிவ் வையந் தழைக்குமாம்;
பூணு நல்லறத் தோடிங்கு பெண்ணுருப்[2]
போந்து நிற்பது தாய்சிவ சக்தியாம்;
நாணு மச்சமும் நாய்கட்கு வேண்டுமாம்;
ஞான நல்லறம் வீர சுதந்திரம்
பேணு நற்குடிப் பெண்ணின் குணங்களாம்.
பெண்மைத் தெய்வத்தின் பேச்சுக்கள் கேட்டிரோ![3] 4

1869. நிலத்தின் தன்மை பயிர்க்குள தாகுமாம்;
நீசத் தொண்டு மடமையுங் கொண்டதாய்
தலத்தில் மாண்புயர் மக்களைப் பெற்றிடல்
சால வேயரி தாவதொர் செய்தியாம்;
குலத்து மாதர்க்குக் கற்பியல் பாகுமாம்;
கொடுமை செய்து மறிவை யழித்துமந்
நலத்தைக் காக்க விரும்புதல் தீமையாம்,-
நங்கை கூறு நவீனங்கள் கேட்டிரோ![4] 5

---

(பா-டு): 1 நங்கைகூறு நவீனங்கள் கேட்டிரோ? - (பாரதி திருத்தம்)
2 'பூணு நல்லறத் தோடிங்குப் பெண்ணுருப்' - (அர.)
இத்திருத்தம் பொருத்தம்
3 'பெண்மைத் தெய்வத்தின் பேச்சுகள் கேட்டிரோ?' - (பா. பி.)
4 நங்கை கூறும் வியப்புகள் கேட்டிரோ?' - (பா.பி.)
நங்கைகூறும் வியப்புக்கள் கேட்டிரோ? - (பாரதி திருத்தம்)
(பா. பி., அர.)

**1870.** புதுமைப் பெண்ணிவள் சொற்களுஞ் செய்கையும்
பொய்மை[1] கொண்ட கலிக்குப் புதிதன்றிச்
சதும றைப்படி மாந்த ரிருந்தநாள்
தன்னி லேபொது வான வழக்கமாம்;
மதுரத் தேமொழி மங்கைய ருண்மைதேர்
மாத வப்பெரி யோருட னொப்புற்றே
முதுமைக் காலத்தில் வேதங்கள் பேசிய
முறைமை மாறிடக் கேடு விளைந்ததாம். 6

**1871.** நிமிர்ந்த நன்னடை நேர்கொண்ட பார்வையும்
நிலத்தில் யார்க்குமஞ் சாத நெறிகளும்
திமிர்ந்த ஞானச் செருக்கு மிருப்பதால்
செம்மை மாதர் திறம்புவ தில்லையாம்;
அமிழ்ந்து பேரிரு ளாமறி யாமையில்
அவல மெய்திக் கலையின்றி வாழ்வதை
உமிழ்ந்து தள்ளுதல் பெண்ணற மாகுமாம்:-
உதய கன்னி யுரைப்பது கேட்டிரோ! 7

**1872.** உலக வாழ்க்கையி னுட்பங்கள் தேரவும்
ஓது பற்பல நூல்வகை கற்கவும்
இலகு சீருடை நாற்றிசை நாடுகள்
யாவுஞ் சென்று புதுமை கொணர்ந்திங்கே
திலக வாணுத லார்நங்கள் பாரத
தேச மோங்க வுழைத்திடல் வேண்டுமாம்;

........................................

1 'பொய்ம்மை' என்பது செவ்வடிவம்.

- பதிப்பாசிரியர்

விலகி வீட்டிலோர் பொந்தில் வளர்வதை[1]
வீரப் பெண்கள் விரைவி லொழிப்பராம்.[2] *8*

**1873.** சாத்தி ரங்கள் பலபல கற்பராம்;
சவுரி யங்கள் பலபல செய்வராம்;
மூத்த பொய்ம்மைகள்[3] யாவு மழிப்பராம்;
மூடக் கட்டுக்கள் யாவுந் தகர்ப்பராம்;
காத்து மானிடர் செய்கை யனைத்தையும்
கடவு ளர்க்கினி தாகச் சமைப்பராம்;
ஏத்தி யாண்மக்கள் போற்றிட வாழ்வராம்;
இளைய நங்கையி னெண்ணங்கள் கேட்டிரோ! *9*

**1874.** போற்றி, போற்றி, ஜயஜய போற்றியிப்
புதுமைப் பெண்ணொளி வாழிபல் லாண்டிங்கே!
மாற்றி வையம் புதுமை யுறச்செய்து
மனிதர் தம்மை யமரர்க ளாக்கவே
ஆற்றல் கொண்ட பராசக்தி யன்னைநல்
லருளி னாலொரு கன்னிகை யாகியே
தேற்றி யுண்மைகள் கூறிட வந்திட்டாள்,
செல்வம் யாவினு மேற்செல்வ மெய்தினோம். *10*

---

*(பா-டு): 1 'விலகி வீட்டிலோர் பொந்தில் வளர்வதை' - (பா.பி., அர.)*
*2 'வீரப் பெண்கள் விரைவி லொழிப்பாராம்' - (பா.பி.)*
*-இப்பாடத்தில் உரிய அளவில் ஓசை நீள்கிறது.*

*- பதிப்பாசிரியர்*

*3 'பொய்ம்மைகள்' என்பது சொல்லின் வடிவம்.*

*- பதிப்பாசிரியர்*

# 143. பகைவனுக் கருள்வாய்

**1875.** பகைவனுக் கருள்வாய் - நன்னெஞ்சே
பகைவனுக் கருள்வாய். *1*

**1876.** புகை நடுவினில் தீ யிருப்பதைப்
பூமியிற் கண்டோமே - நன்னெஞ்சே
(பூமியிற் கண்டோமே)
பகை நடுவினில் அன்புரு வானநம்
பரமன் வாழ்கின்றான் - நன்னெஞ்சே
(பரமன் வாழ்கின்றான்)
(பகைவனு) 2

**1877.** எவ்வுயிர் தன்னிலு மீசனுள் ளானென
எப்பொழு துங்க தைப்பாய் - நன்னெஞ்சே
தெவ்வுயிர் தன்னிலுஞ் சிவனி ருப்பதைச்
சிந்தனை செய்யாயோ? - நன்னெஞ்சே
(பகைவனு) *3*

..............................

*கைப்பிரதியைப் பரிசோதித்து, நூல் வடிவாக்கும் பொறுப்பை ஏற்றுக் கொண்டவர்கள் 3-ஆம் பாடலை விடுத்து வெளியிட்டனர். அதன் விளைவாகப் பிற்காலப் பதிப்புகளிலும் அப்பாடல் இடம்பெறமாற்போனது.*

*இரண்டாம் பாடலில் கண்டுள்ள நகவளைவுக்குறியீடுகள் பிற்காலப் பதிப்புக்களில் நீக்கப்பட்டுள்ளன.*

*- பதிப்பாசிரியர்*

**1878.** சிப்பியி லேநல்ல முத்து விளைந்திடுஞ்
செய்தி யறியாயோ? - நன்னெஞ்சே
குப்பையி லேமலர் கொஞ்சுங் குருக்கத்திக்
கொடி வளராதோ? - நன்னெஞ்சே
(பகைவனு) 4

**1879.** உள்ள நிறைவிலொர் கள்ளம் புகுந்திடில்[1]
உள்ள நிறைவாமோ? - நன்னெஞ்சே
தெள்ளிய தேனிலொர் சிறிது நஞ்சையும்[2]
சேர்த்தபின் தேனாமோ? - நன்னெஞ்சே (பகைவனு) 5

**1880.** வாழ்வை நினைந்தபின் தாழ்வை நினைப்பது[3]
வாழ்வுக்கு நேராமோ? – நன்னெஞ்சே
தாழ்வு பிறர்க்கெண்ணத் தானிழி வானென்ற[4]
சாத்திரங் கேளாயோ? - நன்னெஞ்சே (பகைவனு) 6

**1881.** போருக்கு வந்தங் கெதிர்த்த கவுரவர்
போலவந் தானுமவன் – நன்னெஞ்சே
நேருக் கருச்சுனன் தேரிற் கசைகொண்டு
நின்றதுங் கண்ணனன்றோ? - நன்னெஞ்சே (பகைவனு) 7

**1882.** தின்ன வரும்புலி தன்னையு மன்பொடு
சிந்தையிற் போற்றிடுவாய் - நன்னெஞ்சே
அன்னை பராசக்தி யவ்வுரு வாயினள்
அவளைக் கும்பிடுவாய் - நன்னெஞ்சே. (பகைவனு) 8

.......................................

(பா-டு): 1 'உள்ள நிறைவிலோர் கள்ளம் புகுந்திடில்' - (அர.)
2 'தெள்ளிய தேனிலோர் சிறிது நஞ்சையும்' - (அர.)
3 'வாழ்வை நினைத்தபின் தாழ்வை நினைப்பது' - (பா.பி , அர.)
4 'தாழ்வு பிறர்க்கெண்ணத் தானழிவானென்ற' - (பா.பி., அர.)

## 144. லக்ஷ்மிதேவி*

### சரண்புகுதல்

1883 .மாதவன் சக்தியினைச் – செய்ய
மலர்வளர் மணியினை வாழ்த்திடுவோம்
போதுமிவ் வறுமையெலாம் - எந்தப்
போதினுஞ்[1] சிறுமையின் புகைதனிலே
வேதனைப் படுமனமும் - உயர்
வேதமும் வெறுப்புறச் சோர்மதியும்
வாதனை பொறுக்கவில்லை - அன்னை
மாமக ளடியிணை சரண்புகுவோம். 1

1884. கீழ்களி னவமதிப்பும் - தொழில்
கெட்டவ ரிணக்கமுங் கிணற்றினுள்ளே
மூழ்கிய விளக்கினைப்போல் - செய்யு
முயற்சியெல் லாங்கெட்டு முடிவதுவும்[2]
ஏழ்கட லோடியுமோர் – பயன்
எய்திட வழியின்றி யிருப்பதுவும்

---

* "திருமகளைச் சரண்புகுதல்" - (அர.)

1 போதிலுந் - (பா.ஆ., பா.பி., அர.)

2 முயற்சியெல் லாங்கெட்டு முடிவதும் – (பா.ஆ.)

வீழ்கவிக்கொடு நோய்தான்[1] - வைய
மீதினில் வறுமையொர்[2] கொடுமையன்றோ? 2

1885. பாற்கட லிடைப்பிறந்தாள் – அது
பயந்தநல் லமுதத்தின் பான்மைகொண்டாள்
ஏற்குமொர் தாமரைப்பூ[3] – அதில்
இணைமலர்த் திருவடி யிசைந்திருப்பாள்
நாற்கரந் தானுடையாள் – அந்த
நான்கினும் பலவகைத் திருவுடையாள்
வேற்கரு விழியுடையாள் – செய்ய
மேனியள் பசுமையை விரும்பிடுவாள். 3

1886. நாரணன் மார்பினிலே – அன்பு
நலமுற நித்தமு மிணைந்திருப்பாள்.
தோரணப் பந்தரிலும் – பசுத்
தொழுவிலுஞ் சுடர்மணி மாடத்திலும்
வீரர்தந் தோளினிலும் - உடல்
வெயர்த்திட வுழைப்பவர் தொழில்களிலும்
பாரதி சிரத்தினிலும் - ஒளி
பரவிட வீற்றிருந் தருள்புரிவாள். 4

1887. பொன்னிலு மணிகளிலும் - நறும்
பூவிலுஞ் சாந்திலும் விளக்கினிலும்
கன்னியர் நகைப்பினிலும் - செழுங்
காட்டிலும் பொழிலிலும் கழனியிலும்
முன்னிய துணிவினிலும் - மன்னர்

.........................................

(பா-டு): 1 வீழ்கவிக்கொடு நோய்தான் - (பா.பி.)
வீழ்க வக்கொடு நோய்தான் – (தேசிக விநாயகம்பிள்ளை)
2 மீதினீல் வறுமையோர் – (பா.ஆ., பா.பி., அர.)
3 'ஏற்குமோர் தாமரைப்பூ' - (பா.ஆ., பா.பி., அர.)

முகத்திலும் வாழ்ந்திடுந் திருமகளைப்
பன்னிநற் புகழ்பாடி - அவள்
பதமலர் வாழ்த்திநற் பதம்பெறுவோம். 5

1888. மண்ணினுட் கனிகளிலும் - மலை
வாய்ப்பிலும் வார்கட லாழத்திலும்
புண்ணிய வேள்வியிலும் - உயர்
புகழிலு மதியிலும் புதுமையிலும்
பண்ணுநற் பாவையிலும் - நல்ல
பாட்டிலுங் கூத்திலும் படத்தினிலும்
நண்ணிய தேவிதனை - எங்கள்
நாவிலு மனத்திலு நாட்டிடுவோம். 6

1889. வெற்றிகொள் படையினிலும் - பல
விநயங்க ளறிந்தவர் கடையினிலும்
நற்றவ நடையினிலும் - நல்ல
நாவலர் தேமொழித் தொடையினிலும்[1]
உற்றசெந் திருத்தாயை - நித்தம்
உவகையிற் போற்றியிங் குயர்ந்திடுவோம்.
கற்றபல் கலைகளெல்லாம் - அவள்
கருணைநல் லொளிபெறக் கவிதவிர்ப்போம். 7

........................................

*(பா-டு): 1 'நாவலர் தேமொழித் தொடரினிலும்' — (அர.)*

## 145. பெண்மை*

1890. பெண்மை வாழ்கென்று கூத்திடு வோமடா-
பெண்மை வெல்கென்று கூத்திடு வோமடா
தண்மை, இன்பநற் புண்ணியஞ் சேர்ந்தன†
தாயின் பேரும் ஸதியென்ற நாமமும்[1]. 1

1891. அன்பு வாழ்கென் றமைதியி லாடுவோம்;
ஆசைக் காதலைக் கைகொட்டி வாழ்த்துவோம்.
துன்பந் தீர்வது பெண்மையி னாலடா,
சூரப் பிள்ளைகள் தாயென்று போற்றுவோம். 2

1892. வலிமை சேர்ப்பது தாய்முலைப பாலடா,
மானஞ் சேர்க்கு மனைவியின் வார்த்தைகள்,
கலி யழிப்பது பெண்க ளறமடா,
கைகள் கோத்துக் களித்துநின் றாடுவோம். 3

1893. பெண்ண றத்தினை யாண்மக்கள் வீரந்தான்
பேணு மாயிற் பிறகொரு தாழ்வில்லை.

---

*"பெண்கள் வாழ்க" - (அர.)

†தண்மை, இன்பம், நற்புண்ணியஞ் சார்ந்தன - பாரதி திருத்தம்

(பா-டு): 1 'தாயின் பெயரும் ஸதியென்ற நாமமும்' - (பா.பி.)
இப்பாடத்தில் ஓசை சிதைகிறது.

- பதிப்பாசிரியர்

கண்ணைக் காக்கு மிரண்டிமை போலவே
காத லின்பத்தைக் காத்திடு வோமடா. 4

1894. சக்தி யென்ற மதுவையுண் போமடா
தாளங் கொட்டித் திசைக ளதிரவே.
ஒத்தி யல்வதொர் பாட்டுங் குழல்களும்[1]
ஊர்வி யக்கக் களித்துநின் றாடுவோம். 5

1895. உயிரைச் சேர்க்கும் உயிரினைக் காத்திடும்[2]
உயிரினுக் குணவா யின்ப மாகிடும்;[3]
உயிரி னுமிந்தப் பெண்மை யினிதடா.
ஊது கொம்புகள்! ஆடு களிகொண்டே! 6

1896. போற்றி தாயென்று தோள்கொட்டி யாடுவீர்
புகழ்ச்சி கூறுவிர் காதற் கிளிகட்கே.
நூற்றி ரண்டு மலைகளைச் சாடுவோம்
நுண்ணி டைப்பெண் ணொருத்தி பணியிலே 7

1897. போற்றி தாயென்று தாளங்கள் கொட்டடா!
போற்றி தாயென்று பொற்குழ லூதடா!
காற்றி லேறியவ் விண்ணையுஞ் சாடுவோம்
காதற் பெண்கள் கடைக்கண் பணியிலே. 8

1898. அன்ன மூட்டிய தெய்வம ணிக்கையின்
ஆணை காட்டி லழலை விழுங்குவோம்.[4]

---

(பா-டு): 1 ஒத்தியல்வதோர் பாட்டுங் குழல்களும் (வானவில் பிரசுரம்)
2 உயிரைக் காக்கும்; உயிரினைச் சேர்த்திடும் (பாரதி திருத்தம்) (பா.ஆ., பா.பி., அர.)
3 உயிரினுக் குயிரா யின்ப மாகிடும் - (பாரதி திருத்தம்) - (பா.ஆ., பா.பி., அர.)
4 'ஆணை காட்டில் அனலை விழுங்குவோம்' - பாரதி திருத்தம் (பா.ஆ., பா.பி., அர.)

**கன்னத் தேமுத்தங் கொண்டு களிப்பினும்**
**கையைத் தன்னும்பொற் கைகளைப் பாடுவோம்** 9

**(பெண்மை வாழ்கென்று கூத்திடுவோமடா)**

................................................

பின்குறிப்பு:- இதேபாடல் ஓரிரு பிரதிபேதங்களுடன் நிறுத்தற்குறி, காற்புள்ளி, அரைப்புள்ளி முதலிய குறியீடுகளிட்டு, "பாட்டுக்கொத்து" என்ற கையெழுத்துத் தொகுதியிலும் இடம் பெற்றுள்ளது.

## 146. கேட்பன*

1899. நல்லதோர் வீணைசெய்தே[1] - அதை
நலங்கெடப் புழுதியி லெறிவதுண்டோ?
சொல்லடி சிவசக்தி – எனைச்
சுடரெனு மறிவுடன் சமைத்துவிட்டாய்,[2]
வல்லமை தாராயோ,– இந்த
மாநிலம் பயனுற வாழ்வதற்கே?
சொல்லடி சிவசக்தி – நிலச்
சுமையென வாழ்ந்திடப் புரிகுவையோ? *1*

1900. விசையுறு பந்தினைப்போல் – உள்ளம்
வேண்டிய படிசெல்லு முடல்கேட்டேன்[3]
நசையறு மனங் கேட்டேன் - நித்த
நவமெனச் சுடர்தரு முயிர்கேட்டேன்
தசையினைத் தீசுடினும் – சிவ

---

*'நல்லதோர் வீணை - (அர.)*

*'பாட்டுக் கொத்து' என்ற கையெழுத்துத் தொகுதியிலும் சந்தி பிரித்தும் பிரிக்காமலும் இடம் பெற்றுள்ளன. 'நொண்டிச் சிந்து' என இதனைப் பாரதி யார் குறித்துள்ளார்.* - பதிப்பாசிரியர்

*(பா–டு):* 1 'நல்லதோர் வீணை செய்தே' - (பா.பி., அர.)
2 'சுடர்மிகு மறிவுடன் படைத்துவிட்டாய்' - (பாரதி திருத்தம்)
3 வேண்டிய படிசெலும் உடல்கேட்டேன் – (பாரதி திருத்தம்)

சக்தியைப் பாடுதல் லகங்கேட்டேன்
அசைவறு மதிகேட்டேன் – இவை
அருள்வதி லுனக்கெதுந் தடையுளதோ? 2

## 147. சக்திக் கூத்து

(பியாக்)*

பல்லவி

1901. தகத்தகத்தகத் தகதகவென் றாடோமோ? - சிவ
சக்திசக்தி சக்தியென்று பாடோமோ? (தக) 1

சரணங்கள்

1902. அகத் தகத் தகத் தகத்தினிலே உள்நின்றாள் - அவள்
அம்மையம்மை யெம்மைநாடு பொய்வென்றாள்
தகத்தகநமக் கருள்புரிவாள் தாளொன்றே
சரணமென்று வாழ்ந்திடுவோம் நாமென்றே[1] (தக) 2

1903. புகப்புகப்புக வின்பமடா போதெல்லாம்
புறத்தினிலே தள்ளிடுவாய் சூதெல்லாம்
குகைக்குளங்கே யிருக்குதடா தீபோலே† - அது
குழந்தை யதன் தாயடிக்கீழ்ப் பேய்போலே[2] (தக) 3

---

* 'ராகம் - பியாக்' - இந்தக் குறிப்பு முதலில் பாரதி ஆச்ரமப் பதிப்பில் வந்தது; பின் வந்த பதிப்புகளும் அதைப் பின்பற்றின.

— பதிப்பாசிரியர்

(பா-டு): 1 'சரணமென்று வாழ்த்திடுவோம் நாமென்றே' - (அர.)
2 'குழந்தையதன் தாயடிக்கீழ் பேய்போலே' – (பா.ஆ.)
'குழந்தையதன் தாயடிக்கீழ் சேய்போலே' – (பா.பி., அர.)

† 'தீப்போலே' என்றிருத்தல் வேண்டும்.

- பதிப்பாசிரியர்

1904. மிகத்தகைப்படு களியினிலே மெய்சோர - உன
வீரம்வந்து சோர்வைவென்று கைதேர
சகத்தினிலுள்ள மனிதரெல்லாம் நன்றுநன்றென - நாம்
சதிருடனே தாளமிசை யிரண்டுமொன்றென (தக) 4

1905. இந்திரனா ருலகினிலே நல்லின்பம்
இருக்குதென்பார் அதனையிங்கே கொண்டெய்தி
மந்திரம்போல் வேண்டுமடா சொல்லின்பம் - நல்ல
மதமுறவே யமுதநிலை கண்டெய்தி[1] (தக) 5

........................................

(பாடு): 1 மதமுறவே யமுதநிலை கண்டெய்தித்' – (பா.பி., அர.)

## 148. விடுதலை*

நாட ராகம்†

பல்லவி

1906. வேண்டுமடி யெப்போதும் விடுதலை – அம்மா! 1

சரணங்கள்

1907. தூண்டுமின்ப வாடைவீசு துய்யதேன்கடல்
சூழநின்ற தீவிலங்கு சோதிவானவர்
ஈண்டுநமது தோழராகி எம்மொ டமுதமுண்டு[1] குலவ
நீண்டமகிழ்ச்சி மூண்டுவிளைய நினைத்திடுமின்ப
மனைத்தும்உதவ (வேண்டுமடி) 2

1908. விருத்திராதி தானவர்க்கு மெலிவதின்றியே
விண்ணுமண்ணும் வந்துபணிய மேன்மைதுன்றியே

---

* 'விடுதலை வேண்டும் – (அர.)

'பாட்டுக் கொத்து' என்ற கையெழுத்துப் படியிலும் இப்பாடல் இடம் பெற்றுள்ளது. அதில் ராகப் பெயர் இல்லை; சில இடங்களில் சந்தி பிரிக்கப் பட்டிருக்கிறது. – பதிப்பாசிரியர்

† பின்வந்த பதிப்புகளில் 'நாட்டை ராகம்' என்று திருத்தப்பட்டுள்ளது. பாரதி ஆச்ரமப் பதிப்பில் 'சரணங்க'ள் என்ற சொல் இல்லை. – பதிப்பாசிரியர்

(பா-டு): 1 ஈண்டு நமது தோழராகி எம்மோ டமுதமுண்டு (பா.பி.)

பொருத்தமுறநல் வேதமோர்ந்து பொய்மைதீர மெய்மைநேர்†
வருத்தமழிய வறுமையொழிய வையமுழுதும்
வண்மைபொழிய (வேண்டுமடி) 3

1909. பண்ணிலினிய பாடலோடு பாயுமொளியெலாம்[1]
பாரிலெம்மை யுரிமைகொண்டு பற்றிநிற்கவே
நண்ணியமரர் வெற்றிகூற நமதுபெண்க ளமரர்கொள்ள
வண்ணமினிய தேவமகளிர் மருவநாமும் உவகைதுள்ள
(வேண்டுமடி) 4

† பொய்ம்மை, மெய்ம்மை என்பது செம்மை வடிவம்.
(பா-டு): 1 பண்ணில் இனிய பாடலொடு பாயுமொளியெலா (பா.பி., அர.)

## 149. சொல்*

சொல் வேண்டும். தேவசக்திகளை நம்முள்ளே
நிலைபெறச் செய்யும் சொல்லொன்று வேண்டும் †

**1910.** "தேவர் வருக"வென்று சொல்வதோ? - ஒரு
செம்மைத் தமிழ்மொழியை நாட்டினால்,
ஆவ லறிந்துவரு வீர்கொலோ? - உம்மை
யன்றி யொருபுகலு மில்லையே. 1

**1911.** ஓமென் றுரைத்துவிடிற் போதுமோ? - அதில்
உண்மைப் பொருளறிய லாகுமோ?
தீமை யனைத்துமிறந் தோடுமோ?[1] - என்றன்
சித்தந் தெளிவுநிலை கூடுமோ? 2

**1912.** "உண்மை யொளிர்க"வென்று பாடுகோ?[2] - அதில்
உங்கள் மனம்பொருந்தக் கூடுமோ?[3]

---

*இதேபாடல் "பாட்டுக்கொத்து" என்ற கையெழுத்துத் தொகுதியிலும் இடம்பெற்றுள்ளது. பாடல் வரிகளில் பலவித பாடபேதங்கள் காணப்படுகின்றன.
- பதிப்பாசிரியர்

†சொல் ஒன்று வேண்டும். தேவசக்திகளை நம்முள்ளே நிலைபெறச் செய்யும் சொல் வேண்டும். — (பாரதி திருத்தம்)

1 தீமை யனைத்துமிறந் தேகுமோ?
2 "உண்மையொளிர்க"வென்று பாடவோ?
3 உங்க ளருள்பொருந்தக் கூடுமோ?

— இவை பாரதி திருத்தங்கள்

வண்மை யுடையதொரு சொல்லினால் - உங்கள்
வாழ்வு பெறவிரும்பி நிற்கின்றோம்.[1] 3

**1913.** "தீமை யகத்தினிடை மூட்டுவோம்" - என்று
செப்பு மொழிவலிய தாகுமோ?
ஈயைக் கருடநிலை யேற்றுவீர் - எம்மை
என்றுந் துயரமின்றி வாழ்த்துவீர். 4

**1914.** வான மழைபொழிதல் போலவே – நித்தம்
வந்து பொழியுமின்பங் கூட்டுவீர்;
கானை யழித்துமனை கட்டுவீர் - துன்பக்
கட்டுச் சிதறிவிழ வெட்டுவீர். 5

**1915.** விரியு மறிவுநிலை காட்டுவீர் - அங்கு
வீழுஞ் சிறுமைகளை யோட்டுவீர்
தெரியு மொளிவிழியை நாட்டுவீர்; - நல்ல
தீரப் பெருந்தொழிலிற் பூட்டுவீர். 6

**1916.** மின்ன லனையதிற லோங்குமே - உயிர்
வெள்ளங் கரையடங்கிப் பாயுமே.
தின்னும் பொருளமுத மாகுமே - இங்கு[2]
செய்கை யதனில்வெற்றி யேறுமே. 7

**1917.** தெய்வக் கனல்விளைந்து காக்குமே - எம்மைச்[3]
சேரு மிருளொழியத் தாக்குமே[4]

---

1 வாழ்வு பெறவிரும்பி நிற்கிறோம். - (பாரதி திருத்தம்)

2 'தின்னும் பொருளமுத மாகுமே - இங்குச்' - கவிமணி

3 தெய்வக் கனல்விளைந்து காக்குமே - நம்மைச் - (பாரதி திருத்தம்)

4 சேரு மிருளழியத் தாக்குமே. - (பாரதி திருத்தம்)

கைவைத் ததுபசும்பொன் னாகுமே - பின்பு
காலன் பயமொழிந்து போகுமே. 8

1918. "வலிமை, வலிமை"யென்று பாடுவோம் - என்றும்
வாழுஞ் சுடர்க்குலத்தை நாடுவோம்.
கலியைப் பிளந்திடக்கை யோங்கினோம் - நெஞ்சிற்
கவலை யிருளனைத்து நீங்கினோம். 9

1919. "அமிழ்தம், அமிழ்த"மென்று கூவுவோம்[1] - நித்தம்
அனலைப் பணிந்துமலர் தூவுவோம்.
தமிழிற் பழமறையைப் பாடுவோம் - என்றுந்
தலைமை, பெருமை,புகழ் கூடுவோம். 10

("தேவர்வருக" வென்று சொல்வதோ)

---

(பா—டு): 1 'அமிழ்தம், அமிழ்தம்' என்று கூறுவோம்' - (அர.)

## 150. நிலாவும் வான்மீனும் காற்றும்

### மனத்தை வாழ்த்துதல்

1920\. நிலாவையும் வானத்து மீனையுங் காற்றையும்
நேர்ப்பட வைத்தாங்கே
குலாவு மமுதக் குழம்பைக் குடித்தொரு
கோல வெறிபடைத்தோம்
உலாவு மனச்சிறு புள்ளினை யெங்கணும்
ஓட்டி மகிழ்ந்திடுவோம்
பலாவின் கனிச்சுளை வண்டியி லோர்வண்டு
பாடுவ தும்வியப்போ? 1

1921\. தாரகை யென்ற மணித்திரள் யாவையுஞ்
சார்ந்திடப் போமனமே!
ஈரச் சுவையதி லூறி வருமதில்
இன்புறு வாய்மனமே
சீரவி ருஞ்சுடர் மீனொடு வானத்துத்
திங்களை யுஞ்சமைத்தே
ஓரழ காக விழுங்கிடு முள்ளத்தை
யொப்பதி தார் செல்வ முண்டோ?

1922\. பன்றியைப் போலிங்கு மண்ணிடைச் சேற்றிற்
படுத்துப் புரளாதே

வென்றியை நாடியிவ் வானத்தி லோட
விரும்பி விரைந்திடுமே
முன்றிலி லோடுமொர் வண்டியைப் போலன்று
மூன்றுல குஞ்சூழ்ந்தே
நன்று திரியும் விமானத்தைப் போலொரு
நல்ல மனம்படைத்தோம். 3

**1923.** தென்னையின் கீற்றுச் சலசல வென்றிடச்
செய்து வருங்காற்றே
உன்னைக் குதிரைகொண் டேறித் திரியுமொ
ருள்ளம் படைத்துவிட்டோம்
சின்னப் பறவையின மெல்லொலி கொண்டிங்கு[1]
சேர்த்திடு நற்காற்றே[2]
மின்னல் விளக்கிற்கு வானகங் கொட்டுமிவ்
வெட்டொலி யேன்கொணர்ந்தாய்? 4

**1924.** மண்ணுல கத்துநல் லோசைகள் காற்றெனும்
வானவன் கொண்டுவந்தான்
பண்ணி லிசைத்தவ் வொலிக ளனைத்தையும்
பாடி மகிழ்ந்திடுவோம்.
நண்ணி வருமணி யோசையும் பின்னங்கு
நாய்கள் குலைப்பதுவும்
எண்ணுமுன் னே"யன்னக் காவடிப் பிச்சை"யென்
றேங்கிடு வான்குரலும். 5

.......................................

(பா-டு): 1 'சின்னப் பறவையின் மெல்லொலி கொண்டிங்கு' - (பா.பி., அர.)
'பறவையின' என்பது அச்சுப் பிழை
- பதிப்பாசிரியர்
'கொண்டிங்குச்' என்றிருத்தல் வேண்டும்.
சேர்ந்திடு நற்காற்றே - (பா.ஆ., பா.பி., அர.)

1925 வீதிக் கதவை யடைப்பதுங் கீழ்த்திசை
விம்மிடுஞ் சங்கொலியும்
வாதுகள் பேசிடு மாந்தர் குரலு
மதலை பழுங்குரலும்
ஏதெது கொண்டு வருகுது காற்றிலை
யெண்ணி லகப்படுமோ?
சீதக் கதிர்மதி மேற்சென்று பாய்ந்தங்கு[1]
தேனுண்ணு வாய்மனமே. 6

..........................................

1 'பாய்ந்தங்குத்' என்றிருத்தல் வேண்டும்.

- பதிப்பாசிரியர்

## 151. பராசக்தி

1926. கதைகள் சொல்லிக் கவிதை யெழுதென்பார்
காவி யம்பல நீண்டன காட்டென்பார்[1]
விதவி தப்படு மக்களின் சித்திரம்
மேவு நாடகச் செய்யுளை மேவென்பார்[2]
இதய மோவெனிற் காலையு மாலையும்
எந்த நேரமும் வாணியைக் கூவுங்கால்,
எதையும் வேண்டில தன்னை பராசத்தி
இன்ப மொன்றினைப் பாடுத லின்றியே.[3] 1

1927. நாட்டு மக்கள் பிணியும் வறுமையும்
நையப் பாடென் றொருதெய்வங் கூறுமே
கூட்டி மானுடச் சாதியை யொன்றெனக்
கொண்டு வைய முழுதும் பயனுறப்
பாட்டி லேயறங் காட்டெனு மோர்தெய்வம்
பண்ணி லின்பமுங் கற்பனை விந்தையும்

---

(பா-டு): 1 'காவியம்பல நீண்டன கட்டென்பார்' - (பா.ஆ., பா.பி.
2 'மேவி நாடகச் செய்யுளை மேவென்பார்' - (அர.)
3 'இன்ப மொன்றினைப் பாடுத லன்றியே'
- (பா.ஆ., பா.பி., அர.)

இப்பாடமே பொருந்துவது.

'இன்றியே' என்பது பிழை.

ஊட்டி யெங்கும் உவகை பெருகிட
ஓங்கு மின்கவி யோதெனும் வேறொன்றே. 2

1928. நாட்டு மக்கள் நலமுற்று வாழவும்
நானி லத்தவர் மேனிலை யெய்தவும்
பாட்டி லேதனி யின்பத்தை நாட்டவும்
பண்ணி லேகளி கூட்டவும் வேண்டிநான்
மூட்டு மன்புக் கனலொடு வாணியை[1]
முன்னு கின்ற பொழுதிலெல் லாங்குரல்[2]
காட்டி யன்னை பராசக்தி யேழையேன்
கவிதை யாவுந் தனக்கெனக் கேட்கின்றாள். 3

1929. மழைபொ ழிந்திடும் வண்ணத்தைக் கண்டுநான்
வானிருண்டு கரும்புயல் கூடியே
இழையு மின்னல் சரேலென்று பாயவும்
ஈர வாடை யிரைந்தொலி செய்யவும்
உழையெ லாமிடை யின்றியிவ் வானநீர்
ஊற்றுஞ் செய்தி யுரைத்திட வேண்டுங்கால்
மழையுங் காற்றும் பராசக்தி செய்கைகாண்
வாழ்க தாயென்று பாடுமென் வாணியே. 4

.......................................

(பா-டு): 1 'மூட்டு மன்புக் கனலோடு வாணியை' - (பா.ஆ., பா.பி.)
2 'முன்னுகின்ற பொழுதி லெலாங் குரல்' - (பா.ஆ., பா.பி., அர.)

**1930.** சொல்லி னுக்கெளி தாகவு நின்றிடாள்
சொல்லை வேறிடஞ் செல்ல வழிவிடாள்
அல்லி னுக்குட் பெருஞ்சுடர் காண்பவர்
அன்னை சக்தியின் மேனி நலங்கண்டார்
கல்லி னுக்கு ளறிவொளி காணுங்கால்
கால வெள்ளத் திலேநிலை காணுங்கால்
புல்லி னில்வயி ரப்படை காணுங்கால்[1]
பூத லத்திற் பராசக்தி தோன்றுமே. 5

(பா-டு): 1 'புல்லினில் வயிரப்படை தோன்றுங்கால்' (பா.ஆ., பா.பி.)

## 152. அழகுத் தெய்வம்*

**1931.** மங்கியதோர்[1] நிலவினிலே கனவிலிது கண்டேன்;
வயதுபதி னாறிருக்கும்; இளவயது மங்கை
பொங்கிவரும் பெருநிலவு போன்றவொளி முகமும்
புன்னகையின் புதுநிலவும் போற்றவருந் தோற்றம்!
துங்கமணி மின்போலும் வடிவத்தாள் வந்து
தூங்காதே யெழுந்தென்னைப் பாரென்று சொன்னாள்
அங்கதனிற் கண்விழித்தேன், அடடாவோ, அடடா!
அழகென்னுந் தெய்வந்தான் அதுவென்றே யறிந்தேன். *1*

**1932.** யோகந்தான் சிறந்ததுவோ[2] தவம்பெரிதோ வென்றேன்
யோகமே தவந்தவமே யோகமென வுரைத்தாள்
ஏகமோ பொருளன்றி யிரண்டாமோ வென்றேன்
இரண்டுமாம் ஒன்றுமாம் யாவுமா மென்றாள்
தாகமறிந் தீயுமருள் வான்மழைக்கே யுண்டோ?[3]
தாகத்தின் துயர்மழைதா னறிந்திடுமோ வென்றேன்

........ ....................

* பாடல் "பாட்டுக்கொத்து" கையெழுத்துப் படியாகவுள்ள தொகுதியிலும் தகுந்த நிறுத்தற் குறியீடுகளிட்டும், சந்தி சீர் பிரித்தும் இடம் பெற்றுள்ளது. - பதிப்பாசிரியர்

(பா-டு): 1 மங்கியதொர். - (பா.ஆ.)
2 யோகந்தான் சிறந்ததோ
3 வான் மழைக்கிங் குண்டோ? - பாரதி திருத்தங்கள்

வேகமுடன் அன்பினையே[1] வெளிப்படுத்தா மழைதான்
விருப்புடனே பெய்குவதோ[2]* வேறாமோ வென்றாள். 2

**1933.** காலத்தின் விதிமதியைக் கடந்திடுமோ வென்றேன்
காலமே மதியினுக்கோர் கருவியா மென்றாள்
ஞாலத்தில் விரும்பியது நண்ணுமோ வென்றேன்
நாலிலே யொன்றிரண்டு பலித்திடலா மென்றாள்
ஏலத்தில் விடுவதுண்டோ[3] எண்ணத்தை யென்றேன்
எண்ணினால் எண்ணியது நண்ணுங்கா ணென்றாள்
மூலத்தைச் சொல்லவோ வேண்டாமோ வென்றேன்[4]
முகத்திலருள் காட்டினாள் மோகமது தீர்ந்தேன்.[5] 3

1 வேகமுற விருப்பத்தை
2 விருப்புடனே பெய்வதோ
3 ஏலத்தில் விடுவதோ
4 வேண்டாவோ? என்றேன்
5 மோகவிடாய் தீர்ந்தேன்.

• பாரதி திருத்தங்கள்

(பா–டு): * விருப்புடனே பெய்குவது - (பா.பி., அர.)

## 153. ஆத்ம ஜயம்

1934. கண்ணில் தெரியும் பொருளினைக் கைகள்
கவர்ந்திட மாட்டாவோ? – அட*
மண்ணில் தெரியுது வான மதுநம்
வசப்பட லாகாதோ?
எண்ணியெண் ணிப்பல நாளு முயன்றிங்
கிறுதியிற் சோர்வோமோ?[1]
விண்ணிலு மண்ணிலுங் கண்ணிலு மெண்ணிலு 1
மேவு பராசக்தியே.

1935. என்ன வரங்கள், பெருமைகள் வெற்றிகள்
எத்தனை மேன்மைகளோ
தன்னைவென் றாலவை யாவும் பெறுவது
சத்திய மாகுமென்றே
முன்னை முனிவ ருரைத்த மறைப்பொருள்
முற்று முணர்ந்தபின்னும்

........................................

*'அட' என்ற இவ்வோரசைத் தனிச் சொல் இல்லாமலே அறுசீர் விருத்த இலக்கண யாப்பு அமைகிறது. ஆனால், 'அட' இந்தத் தனிச்சொல் கவிதைக்கு உணர்ச்சி முறுக்கு ஏற்றி நயப்படுத்துகிறது.

(பா-டு): 1 'கிறுதியிற் சோர்வோமோ – அட' (பா.ஆ., பா.பி., அர.)

தன்னைவென் றாளும் பெருமை பெறாதிங்கு[1]
தாழ்வுற் றிருப்போமோ?[2] 2

(பா-டு): 1 தன்னை வென்றாளும் திறமை பெறாதிங்கு - (பா.ஆ., பா.பி., அர.)

'பெறாதிங்குத்' என்றிருத்தல் வேண்டும். — பதிப்பாசிரியர்

2. தாழ்வுற்று நிற்போமோ?' - (பா.ஆ., பா.பி., அர.)

# 154. மூன்று காதல்*

### ஸரஸ்வதி

1936. பிள்ளைப் பிராயத்திலே – அவள்
பெண்மையைக் கண்டு மயங்கிவிட் டேனங்கு
பள்ளிப் படிப்பினிலே - மதி
பற்றிட வில்லை யெனினுந் தனிப்பட
வெள்ளை மலரணைமேல் - அவள்
வீணையுங் கையும் விரிந்த முகமலர்
விள்ளும் பொருளமுதும் - கண்டேன்[1]
வெள்ளை மனது பறிகொடுத் தேனம்மா! *1*

1937. ஆடி வருகையிலே - அவள்
அங்கொரு வீதி முனையினிற் பாள்கையில்
ஏடு தரித்திருப்பாள் – அதில்
இங்கித மாகப் பதம்படிப் பாளதை
நாடி யருகணைந்தால் - பல
ஞானங்கள் சொல்லி யினிமைசெய் வாளின்று

---

*இதேபாடல் ''பாட்டுக் கொத்து'' என்னும் கையெழுத்து வடிவிலுள்ள பாடபேதங்களுடன் காணப்படுகிறது. இப்பிரதியில் முதலாவது: 'ஸரஸ்வதி காதல்'; இரண்டாவது: 'லக்ஷ்மி காதல்'; மூன்றாவது: 'காளி காதல்' எனவும் பகுதித் தலைப்புக்கள் தரப்பட்டுள்ளன.

(பா-டு): 1 'விள்ளும் பொருளமுதும் - கண்டேன்' - (பா.ஆ., பா.பி.)

கூடி மகிழ்வமென்றால் - விழிக்
கோணத்தி லேநகை காட்டிச்செல் வாளம்மா! 2

1938. ஆற்றங் கரைதனிலே - தனி
யானதொர்[1] மண்டப மீதினிலே தென்றற்
காற்றை நுகர்ந்திருந்தேன் - அங்கு*
கன்னிக் கவிதை கொணர்ந்து தந்தாளதை
ஏற்று மனமகிழ்ந்தே - அடி
என்னொ டிணங்கி[2] மணம்புரி வாயென்று
போற்றிய போதினிலே - அவள்[3]
மறைந்து சென்றாளம்மா?[4] 3

1939. சித்தந் தளர்ந்ததுண்டோ? - கலைத்
தேவியின் மீது விருப்பம் வளர்ந்தொரு
பித்துப் பிடித்ததுபோல் - பகற்
பேச்சு மிரவிற் கனவு மவளிடை
வைத்த நினைவையல்லால் - பிற
வாஞ்சை யுண்டோ?வய தங்ஙன மேயிரு
பத்திரண் டாமளவும் - வெள்ளைப்
பண்மகள் காதலைப் பற்றிநின் றேனம்மா! 4

## ஸ்ரீ லக்ஷ்மி

1940. இந்த நிலையினிலே - அங்கொர்
இன்பப் பொழிலி னிடையினில் வேறொரு

* 'அங்குக்' என்றிருத்தல் வேண்டும்.

(பா-டு): 1 யானதோர் (அர.)
2 என்னோடிணங்கி (அர.)
3 போற்றிய போதினிலே - இளம் - (பாரதி திருத்தம்)
4 புன்னகை பூத்து மறைந்துவிட்டா ளடா - (பாரதி திருத்தம்)

இந்தத் திருத்தத்தின்படி பாடல் அமைந்தால்தான் ஓசையமைதி பொருத்தமாக உள்ளது. - பதிப்பாசிரியர்

சுந்தரி வந்துநின்றாள் – அவள்
சோதி முகத்தி னழகினைக் கண்டங்கு[1]
சிந்தை திறைகொடுத்தேன் - அவள்
செந்திரு வென்று பெயர்சொல்லி னாள்;மற்றும்
அந்தத் தினமுதலா - நெஞ்ச
மாரத் தழுவிட வேண்டுகின் றேனம்மா! 5

**1941.** புன்னகை செய்திடுவாள் - அற்றைப்
போது முழுது மகிழ்ந்திருப்பேன் சற்றென்
முன்னின்று பார்த்திடுவாள் - அந்த
மோகத்தி லேதலை சுற்றிடுங்காண் பின்னர்
என்ன பிழைகள்கண்டோ – அவள்
என்னைப் புறக்கணித் தேகிடுவா ளங்கு[2]
சின்னமும் பின்னமுமா - மனஞ்
சிந்தி யுளமிக நொந்திடு வேனம்மா? 6

**1942.** காட்டு வழிகளிலே – மலைக்
காட்சியி லேபுனல் வீழ்ச்சியி லேபல
நாட்டுப் புறங்களிலும் – நகர்[3]
நண்ணுஞ் சிலசுடர் மாளிகை தம்மிலும், சில[4]†
வேட்டுவர் சார்பினிலும் - சில[5]
வீர ரிடத்திலும், வேந்த ரிடத்திலும்

---

1 'சோதி முகத்தின் அழகினைக் கண்டென்றன்' - (பாரதி திருத்தம்)
'கண்டங்கு' என்பதை ஏற்பதாயின் 'கண்டங்குச்' என்றிருத்தல் வேண்டும். ஆயின், பாரதியார் செய்துள்ள திருத்தம் சீரிதாக அமைந்துள்ளது.
- பதிப்பாசிரியர்

2 'ளங்குச்' என்றிருத்தல் வேண்டும். - பதிப்பாசிரியர்

3 நாட்டுப்புறங்களிலே - நகர்

4 நண்ணு சில சுடர் மாடத்திலே - சில

5 வேட்டுவர் சார்பினிலே - சில

* இவை பாரதியார் திருத்தங்கள்

† பாரதியார் ஓசைச் செம்மையுறத் திருத்தியுள்ளார். இத்திருத்தமின்றேல் ஓசை நீளுகிறது
- பதிப்பாசிரியர்

மீட்டு மவள்வருவாள் கண்ட
விந்தையி லேயின்ப மேற்கொண்டு போமம்மா! 7

## பார்வதி

**1943.** பின்னொ ரிராவினிலே – கரும்
பெண்மை யழகொன்று வந்தது கண்முன்பு
கன்னி வடிவமென்றே - களி
கண்டு சற்றேயரு கிற்சென்று பார்க்கையில்
அன்னை வடிவமடா – இவள்
ஆதி பராசக்தி தேவிய டா,இவள்
இன்னருள் வேண்டுமடா – பின்பு[1]
யாவு முலகில் வசப்பட்டுப் போமடா! 8

**1944.** செல்வங்கள் பொங்கிவரும் - இங்கு[2]*
தெள்ளறி வெய்தி நலம்பல சேர்ந்திடும்[3]
அல்லும் பகலுமிங்கே - இவை
யத்தனை கோடி பொருளினுள் ளேநின்று[4]

.........................................

1 இன்னருள் வேண்டுமடா - பின்னர் - (பாரதி திருத்தம்)

''அம்மா'' என்று முடியும் பாடல்களின் இறுதியில் ''அடா'' என்று உள்ளது.

*'இங்குத்' என்றிருத்தல் வேண்டும்.

2 செல்வங்கள் பொங்கி வரும் - நல்ல - (பாரதி திருத்தம்)

3 தெள்ளறி வெய்தி நலப்பல சார்ந்திடும் - (பாரதி திருத்தம்)

(பா-டு): 4 'அத்தனை கோடிப் பொருளினுள் ளேநின்று' - (பா.பி.)
(திருத்தம் பொருத்தம்)

''பாட்டுக்கொத்தில் இடம்பெற்றுள்ள பாடல் முறையே அனைத்துப் பதிப்புக்களிலும் பின்பற்றப்படக் காணலாம்.

முதலாவது: ஸரஸ்வதி காதலுக்கு ''ராகம் - ஸரஸ்வதி மனோஹரி தாளம்-திஸ்ரஏகம்'' என்றும், இரண்டாவது. லட்சுமி காதல் பகுதிக்கு ''ஸ்ரீராகம் -திஸ்ரஏகம்'' என்றும், மூன்றாவது: காளி காதல் பகுதிக்கு ''ராகம் புன்னாக வராளி திஸ்ரஏகம்'', என்றும் பிற்காலப் பதிப்புகளில் ராக-தாளக் குறிப்புத் தரப் பெற்றுள்ளது.

வில்லை யசைப்பவனை - இந்த
வேலை யனைத்தையுஞ் செய்யும் வினைச்சியைத்
தொல்லை தவிர்ப்பவனை - நித்தந்
தோத்திரம் பாடித் தொழுதிடு வோமடா! 9

# 155. பொய்யோ? மெய்யோ?

**பாரதியார் முன்னுரை***

எல்லா சாஸ்திரங்களும் ஏறக்குறைய உண்மைதான். ஆனால், எல்லாருக்கும், எப்போதும், ஒரே சாஸ்திரம் ஒத்து வராது. சின்ன திருஷ்டாந்தம் சொல்லுகிறேன்:-

ஒரு செல்வர், கிழவனார்; ஒரு வேளை ஆஹாரம் செய்து கொண்டு, லௌகிக விஷயங்களை தான் கவனியாமல், பிள்ளைகள் கையிலே கொடுத்துவிட்டு, நியம, நிஷ்டைகள், ஜப, தபங்களுடன் சுந்தர காண்டத்தையும் கடோபநிஷத்தையும், பாராயணம் செய்து கொண்டு வீட்டை விட்டு வெளியேறாம லிருப்பதே மேலான வழியென்ற கொள்கை இந்தக் கிழவ னாருக்கு சரிப்பட்டு வரும்.

ஒரு 16 வயது ஏழைப்பிள்ளை; தகப்பனில்லை; வீட்டிலே தாயாருக்கும் தங்கைக்கும் தனக்குமாக எங்கேனும் போய் நாலு பணம் கொண்டு வந்தால்தான் அன்றன்று அடுப்பு மூட்டலாம்.

* 'பாடல் திரட்டு' என்ற பாரதியார் கையெழுத்துப் பிரதியில் இந்த முன்னுரையும், பாடல் இறுதியிலுள்ள பின்னுரையும் இல்லை: ஆனால், பாரதி யாரின் வாழ்க்கைத் துணைவியார் முயற்சியில் வெளிவந்த அச்சுநூலில் இவை இடம் பெற்றுள்ளன. தகுந்த ஆதாரமின்றி இந்த உரைநடை விளக்கத்தை அவர் சேர்த்திருக்க மாட்டார். நடையே பாரதியாரின் எழுத்து என்பதைத் தெளிவாகப் புலப்படுத்திவிடுகிறது.

இவன் மேற்படி சுந்தர காண்ட வழியைப்போய்ப் பிடித்தால் நியாயமாகுமா?

"இந்த உலகமே பொய்" என்று நமது தேசத்தில் ஒரு சாஸ்திரம் வழங்கிவருகிறது. ஸந்யாஸிகள் இதை ஓயாமல் சொல்லிக் கொண்டிருக்கட்டும். அதைப் பற்றி, இந்த நிமிஷம், எனக்கு வருத்தமில்லை. குடும்பத்தி லிருப்போருக்கு அந்த வார்த்தை பொருந்துமா? நடுவீட்டில் உச்சரிக்கலாமா? அவச் சொல் லன்றோ? நமக்குத் தந்தை வைத்துவிட்டுப் போன வீடும், வயலும் பொய்யா? தங்கச்சிலைபோலே நிற்கிறாள் மனைவி நமது துயரத்துக்கெல்லாம் கண்ணீர் விட்டுக் கரைந்தாள். நமது மகிழ்ச்சியின்போ தெல்லாம் உடல் பூரித்தாள். நமது குழந்தைகளை வளர்த்தாள். அவள் பொய்யா? குழந்தைகளும் பொய் தானா? பெற்றவரிடம் கேட்கிறேன். குழந்தைகள் பொய்யா? நமது வீட்டில் வைத்துக் கும்பிடும் குலதெய்வம் பொய்யா?

வீடுகட்டிக் குடித்தனம் பண்ணுவோருக்கு மேற்படி சாஸ்திரம் பயன்படாது. நமக்கு இவ்வுலகத்தில் வேண்டியது நீண்ட வயது, நோயில்லாமை, அறிவு, செல்வம் என்ற நான்கும். இவற்றைத் தரும்பட தத்தம் குலதெய்வங்களை மன்றாடிக் கேட்க வேண்டும். எல்லா தெய்வங்களும் ஒன்று. அறம், பொருள், இன்பம் என்ற மூன்றிலும் தெய்வ ஒளி காணவேண்டும். தெய்வத்தின் ஒளி கண்டால் நான்காம் நிலையாகிய வீடு தானே கிடைக்கும்.

1945. நிற்பதுவே, நடப்பதுவே, பறப்பதுவே, நீங்களெல்லாம்
சொற்பனந் தானோ?[1] - பல
தோற்ற மயக்கங்களோ?
கற்பதுவே, கேட்பதுவே, கருதுவதே, நீங்களெல்லாம்
அற்ப மாயைகளோ? - உம்முள்
ஆழ்ந்த பொருளில்லையோ? 1

1946. வானகமே, இளவெயிலே, மரச்செறிவே, நீங்களெல்லாம்
கானலி னீரோ? - வெறுங்
காட்சிப் பிழைதானோ?
போனதெல்லாங் கனவினைப்போற் புதைந்தழிந்தே
போனதனால்
நானுமோர் கனவோ?[2] - இந்த
ஞாலமும் பொய்தானோ? 2

1947. காலமென்றே யொருநினைவுங் காட்சியென்றே
பலநினைவும்
கோலமும் பொய்களோ? – அங்கு[3]
குணங்களும் பொய்களோ?
சோலையிலே மரங்களெல்லாம் தோன்றிய[4]தோர்
விதையிலென்றால்
சோலை பொய்யாமோ? - இதைச்
சொல்லொடு சேர்ப்பாரோ? 3

.......................................

*முதல் மூன்று பாடல்களுக்கும் உள்தலைப்பாக 'உலகத்தை நோக்கி வினவுதல்' என்று உள்ளது. – பதிப்பாசிரியர்

(பா-டு): 1 சொற்பனந்தானா? (பா.பி.)
2 'நானுமோர் கனவோ'? (பா.ஆ. பா.பி. அர.)
3 'கோலமும் பொய்களோ – அங்குக் - (பா.பி., அர.)
திருத்தம் பொருத்தமானது. - பதிப்பாசிரியர்
4 'சோலையிலே மரங்களெல்லாம் தோன்றுவ' - (பா.ஆ ,பா.பி.,அர.)

**1948.** **காண்பதெல்லா மறையுமென்றால், மறைந்ததெல்லாம்[1]**
**காண்பமன்றோ?**
**வீண்படும் பொய்யிலே - நித்தம்**
**விதிதொடர்ந் திடுமோ?**
**காண்பதுவே யுண்மை கண்டாய்,[2] காண்பதல்லா**
**லுறுதியில்லை.**
**காண்பது சக்தியாம் - இந்தக்**
**காட்சி நித்தியமாம்.** 4*

**பாரதியார் பின்னுரை**

முதற்பாட்டிலே, 'நிற்பது', 'நடப்பது' முதலியன உலகத்தில் தோன்றும் வடிவங்கள். கற்பது, கேட்பது முதலியன செய்கைகள். மூன்றாம் பாட்டிலே 'கோலமும் பொய்களோ, அங்குக் குணங்களும் பொய்களோ' என்பது தெளிவாகச் சொன்னால் 'தேளின் உருவம் மாத்திரம் பொய்யோ? அது கொட்டுவதும் பொய்தானோ?' என்ற கேள்வி.

---

* நான்காம் பாடலின் உள் தலைப்பாக 'இயற்கை சொல்லும் விடை' என்றுள்ளது.

(பா-டு): 1 காண்பவெல்லா மறையுமென்றால், மறைந்ததெல்லாம் (பா.பி.,அர.)
'காண்பதெல்லா மறையுமென்றால், மறைந்தவெல்லாம்' (கவிமணி)
'காண்பவெல்லா மறையுமென்றால், மறைந்தவெல்லாம்" (கவிமணி)
2 'காண்பதுவே யுறுதி கண்டாய்' (பா. ஆ.)
'காண்பதுவே யுறுதி கண்டோம்' – (பா.பி., அர.)
காண்பதுவே யுறுதி யென்னாய் (கவிமணி)

## 156. உப்பளம் கோயிலில் எழுந்தருளியிருக்கும் தேச முத்துமாரி

1949. தேடியுனைச் சரணடைந்தேன்
தேசமுத்து மாரி
கேடதனை நீக்கிடுவாய்
கேட்டவரந் தருவாய். 1

1950. பாடியுனைச் சரணடைந்தேன்
பாசமெல்லாங் களைவாய்
கோடிநலஞ் செய்திடுவாய்
குறைகளெல்லாந் தீர்ப்பாய். 2

1951. எப்பொழுதுங் கவலையிலே
இணங்கிநிற்பான் பாவி
ஒப்பியுன தேவல்செய்வேன்
உனதருளால் வாழ்வேன். 3

1952. சக்தியென்று நேரமெல்லாந்
தமிழ்க்கவிதை பாடி
பக்தியுடன் போற்றி நின்றால்
பயமனைத்துந் தீரும். 4

1953. ஆதாரம் சக்தியென்றே
அருமறைகள் கூறும்

யாதானுந் தொழில்புரிவோம்
யாதுமவள் தொழிலாம். 5

1954. துன்பமே யியற்கையெனும்
சொல்லைமறந் திடுவோம்
இன்பமே வேண்டிநிற்போம்
யாவுமவள் தருவாள். 6

1955. நம்பினார் கெடுவதில்லை
நான்குமறைத் தீர்ப்பு
அம்பிகையைச் சரண்புகுந்தால்
அதிகவரம் பெறலாம். 7

## 157. வேண்டும்*

1956. மனதி லுறுதி வேண்டும்
வாக்கினிலே யினிமை வேண்டும்
நினைவு நல்லது வேண்டும்
நெருங்கினபொருள் கைப்பட வேண்டும்
கனவு மெய்ப்பட வேண்டும்
கைவசமாவது விரைவில் வேண்டும்
தனமு மின்பமும் வேண்டும்
தரணியிலே பெருமை வேண்டும். 1

1957. கண்தி றந்திட வேண்டும்
காரியத்தி லுறுதி வேண்டும்
பெண்வி டுதலை வேண்டும்
பெரியகடவுள் காக்க வேண்டும்
மண்ப யனுற வேண்டும்[1]
வானகமிங்கு[2] தென்பட வேண்டும்

*இதேபாடல் 'பாட்டுக் கொத்து'' தொகுதியிலும் ''வேண்டுவன'' என்ற தலைப்பில் சிறுமாறுதலுடன் இடம்பெற்றுள்ளது. — பதிப்பாசிரியர்

1 'மண்வி ளைந்திட வேண்டும்' - (பாரதி திருத்தம்)

2 மிங்குத்' என்றிருத்தல் வேண்டும்.

**உண்மை நின்றிட வேண்டும்**

**ஓம், ஓம், ஓம், ஓம்**[1] **2**

.............................

1. யாப்பியல் முறையில் அலகிடல் இயலாது. 'வானகமிங்கு(த்) தென்பட வேண்டும்' என்ற முச்சீரமைப்புக்கு 'ஓம் ஓம் ஓம் ஓம்' என்னும் அமைப்பு இயைந்து வாராது. நீட்டொலி கொடுத்து - அளபெடையாக இசைவழியில் ஒலித்துக் கொள்ளலாம். யாப்பமைதியினும் இசையமைதியினையே பாரதியார் பெரிதும் போற்றியுள்ளார். இசைப்பாங்குள்ள பாடல்கள் இவ்வகையில் விதிவிலக்கானவை. திருமுறைப் பாடல்களிலும் யாப்பியல் முரண்கள் உண்டு என்பர்.

பார்க்க: பேரா. க. வெள்ளைவாரணரின் பன்னிரு திருமுறை வரலாறு'

-பதிப்பாசிரியர்

## 158. பக்தி*

**பிலஹரி**

**1958.** **தத்தன தானே - தந்தத்**
**தான தனந்தன தான தனந்தன**
**பக்தியி னாலே - தெய்வ**
**பக்தியி னாலே.**

**1959.** **பக்தியி னாலே – இந்தப்**
**பாரினி லெய்திடும் மேன்மைகள் கேளடி.**[1]
**சித்தந் தெளியும் - இங்கு†**
**செய்கை யனைத்திலுஞ் செம்மை பிறந்திடும்**
**வித்தைகள் சேரும் - நல்ல**
**வீர ருறவு கிடைக்கு மனத்திடைத்**

---

*இதேபாடல் ''பாட்டுக் கொத்து'' தொகுதியிலும் 'பக்தியினாலே' என்னும் தலைப்பெயரில் காணப்படுகின்றது.

பாடபேதங்களும் நிரம்ப உள்ளன.

'பக்தியினாலே' என்ற தலைப்போடு எழுதியபோது ராக, ஸ்வர வரிசைகள் குறிக்கப்பெறவில்லை.

பக்தியினாலே - இந்தப்
பாரினிலெய்திடும் மேன்மைகள் கேளடி

என்றவரிகள் ''பல்லவி'' யாகக் காணப்படுவதுடன், இவ்விரு வரிகளே 'சரண''த்திலும் இடம் பெற்றுள்ளன. - பதிப்பாசிரியர்

(பா-டு): 1 'பாரினிலெய்திடும் மேன்மைகள் கேளடீ – (பா.பி., அர.)

† 'இங்குச்' என்றிருத்தல் வேண்டும் - பதிப்பாசிரியர்

தத்துவ முண்டாம் - நெஞ்சில்
சஞ்சல நீங்கி யுறுதி விளங்கிடும்.* (பக்தியினாலே) 2

1960. காமப் பிசாசைக் - குதிக்
காலிட் டடித்து விழுத்திட[1] லாகுமித்
தாமஸப் பேயைக் - கண்டு
தாக்கி மடித்திட லாகுமெந் நேரமும்
தீமையை யெண்ணி - அஞ்சும்
தேம்பற் பிசாசைத் திருகியெ றிந்துபொய்[2]
நாம மில்லாதே – உண்மை[3]
நாமத்தி னாலிங்கு நன்மை விளைந்திடும்
(பக்தியினாலே) 3

1961. ஆசையைக் கொல்வோம் - புலை
யச்சத்தைக் கொன்று பொசுக்கிடு[4] வோங்கெட்ட
பாச மறுப்போம் - இங்கு‡
பார்வதி சக்தி விளங்குதல் கண்டதை
மோசஞ்செய் யாமல் - உண்மை
முற்றிலுங் கண்டு வணங்கி வணங்கியொர்†
ரீசனைப் போற்றி - இன்பம்
யாவையு முண்டு புகழ்கொண்டு வாழ்குவம்.
(பக்தியினாலே) 4

1 கால் கொண்டடித்து விழுத்திட
2 தேம்பற் பிசாசைத் திருகியெறிந்து பொய்ந்
3 நாமமிலாதே - உண்மை
4 யச்சத்தைச் சுட்டுப் பொசுக்கிடுவோம்

- பாரதி திருத்தங்கள்

(பா-டு): *சஞ்சலநீங்கி யுறுதி விளங்கும். (பா.ஆ., பா.பி., அர.)

† 'முற்றிலுங் கண்டு வணங்கி வணங்கியோ(ர்)' - (அர.)

‡ 'இங்குப்' என்றிருத்தல் வேண்டும்.

- பதிப்பாசிரியர்

1962. சோர்வுகள் போகும் - பொய்ச்
சுகத்தினைத் தள்ளிச் சுகம்பெற லாகுநற்[1]
பார்வைகள் தோன்றும் - மிடிப்
பாம்பு கடித்த விஷமகன்[2] றேநல்ல
சேர்வைகள் சேரும் - பல
செல்வங்கள் வந்து மகிழ்ச்சி விளைந்திடும்[3]
தீர்வைகள் தீரும் - பிணி
தீரும் பலபல இன்பங்கள் சேர்ந்திடும்.
(பக்தியினாலே) 5

1963. கல்வி வளரும் - பல
காரியங் கையுறும் வீரிய மோங்கிடும்
அல்ல லொழியும் நல்ல
ஆண்மையுண் டாகும் அறிவு தெளிந்திடும்
சொல்லுவ தெல்லாம் - மறைச்
சொல்லினைப் போலப் பயனுள தாகுமெய்
வல்லமை தோன்றும் – தெய்வ
வாழ்க்கையுற் றேயிங்கு வாழ்த்திட லாமுண்மை
(பக்தியினாலே) 6

1964. சோம்ப லழியும்[4] - உடல்
சொன்ன படிக்கு நடக்கு முடிசற்றுங்
கூம்புத லின்றி – நல்ல
கோபுரம் போல நிமிர்ந்த நிலைபெறும்
வீம்புகள் போகும் – நல்ல

---

1 சுகத்தைவிட் டேமெய்ச் சுகம்பெற
2 பாம்பு கடித்த விடமகன்
3 செல்வங்களெய்தி மகிழ்ச்சி பிறந்திடும்
4 சோம்ப ரழியும் - பாரதி திருத்தங்கள்

மேன்மையுண் டாகிப்[1] புயங்கள் பருக்கும்பொய்ப்
பாம்பு மடியும் - மெய்ப்
பரம்வென்று நல்ல நெறிகளுண் டாய்விடும்.
(பக்தியினாலே) 7

1965. சந்ததி வாழும்[2] – வெறுஞ்
சஞ்சலங் கெட்டு வலிமைகள் சேர்ந்திடும்
இந்தப் புவிக்கே - இங்கொ
ரீசனுண் டாயின் அறிக்கையிட் டேனுன்றன்
கந்த மலர்த்தாள் - துணை!
காதல், மகவு, வளர்ந்திட வேண்டுமென்
சிந்தை யறிந்தே - அருள்
செய்திட வேண்டுமென் றாலரு ளெய்திடும்.
(பக்தியினாலே) 8

1 வீர முண்டாகிப் புயங்கள்
2 ஸந்ததி வாழும் — பாரதி திருத்தங்கள்

அனைத்துப் பதிப்புக்களிலும் "பல்லவி", "சரணங்கள்" என்பன உரிய இடங்களில் இடம் பெற்றுள்ளன. - பதிப்பாசிரியர்

## 159. முருகன் பாட்டு

1966. வீரத் திருவிழிப் பார்வையும் - வெற்றி
வேலு மயிலுமென் முன்னின்றே - எந்த
நேரத் திலுமெனைக் காக்குமே[1] - அன்னை
நீலி பராசக்தி தண்ணருட் - கரை
யோரத் திலேபுணை கூடுதே – கந்தன்
ஊக்கத்தை யென்னுள நாடுதே - மலை
வாரத் திலேவிளை யாடுவான் - என்றும்
வானவர் துன்பத்தைச் சாடுவான். 1

1967. வேடர் கனியை விரும்பியே - தவ
வேடம் புனைந்து திரிகுவான் - தமிழ்
நாடு பெரும்புகழ் சேரவே – முனி
நாதனுக் கிம்மொழி கூறுவான் - சூரர்
பாடு விடிந்து மகிழ்ந்திட - இருட்
பார மலைகளைச் சீறுவான் - மறை
யேடு தரித்த முதல்வனும் - குரு
வென்றிட மெய்ப்புக ழேறுவான். 2

1968. தேவர் மகளை மணந்திடத் – தெற்குத்
தீவி லசுரனை மாய்த்திட்டான் – மக்கள்

---

(பா-டு): 1 'நேரத்திலும் என்னைக் காக்குமே' (அர.)

யாவருக் குந்தலை யாயினான் - மறை
யர்த்த முணர்த்துநல் வாயினான் – என்றும்[1]
பாவலர்க் கின்னருள் செய்குவான் - இந்தப்[2]
பாரி லறமழை பெய்குவான் – நெஞ்சின்
ஆவ லறிந்தருள் கூட்டுவான் - நித்தம்
ஆண்மையும் வீரமு மூட்டுவான் [illegible] 3

1969. தீவளர்த் தேபழ வேதியர் – நின்றன்
சேவகத் தின்புகழ் காட்டினார் - ஒளி
மீவள ருஞ்செம்பொ னாட்டினார் - நின்றன்
மேன்மையி னாலற நாட்டினார் - ஐய
நீவள ருங்குரு வெற்பிலே – வந்து
நின்று திருப்புகழ் பாடுவோம்[3] - வர
மீவள் பராசக்தி யன்னைதான் - உங்கள்
இன்னரு ளேயென்று நாடுவோம் - நின்றன் 4

வீரத் திருவிழிப் பார்வையும் - வெற்றி
வேலு மயிலுமென் முன்னின்றே

.........................................

*(பா-டு): 1 'யர்த்த முணர்த்துநல் வாயினான் - தமிழ்ப் - (பா.ஆ., பா.பி., அர.)*

*2 'பாவலர்க் கின்னருள் செய்குவான் - இந்த' - (பா.ஆ.)*

*3 'நின்றுநின் சேவகம் பாடுவோம்' - (பா.ஆ., பா.பி., அர.)*

## 160. நெஞ்சொடு சொல்வது*

**1970.** இன்னுமொரு முறைசொல்வேன், பேதை நெஞ்சே,
எதற்குமினி யுளையாதே, ஏக்கந் தீர்வாய்[1]
முன்னர்நம திச்சையினாற் பிறந்தோ மில்லை;
முதலிறுதி யிடைநமது வசத்தி லில்லை;
மன்னுமொரு தெய்வத்தின் சக்தி யாலே
வையகத்திற் பொருளெல்லாம் சலித்தல் கண்டாய்
பின்னையொரு கவலையுமிங் கில்லை நாளும்
பிரியாதே விடுதலையைப் பிடித்துக் கொள்வாய். 1

**1971.** நினையாத விளைவெல்லாம் விளைந்து கூடி
நினைத்தபயன் காண்பதவள் செய்கை யன்றோ?
மனமார வுண்மையினைப் புரட்ட லாமோ?[2]
மஹாசக்தி செய்நன்றி† மறக்கலாமோ?
எனையாளு மாதேவி வீரர் தேவி
இமையவருந் தொழுந்தேவி யெல்லைத் தேவி
மனைவாழ்வு பொருளெல்லாம் வகுக்குந் தேவி
மலரடியே துணையென்று வாழ்த்தாய் நெஞ்சே. 2

.......................................

* 'பேதை நெஞ்சே' - (அர.)

(பா-டு): 1 எதற்குமினி யுளைவதிலே பயனொன்றில்லை - (பா.ஆ., பா.பி., அர.)
2 மஹாசக்தி செய்தநன்றி மறக்கலாமோ? – (பா.பி.)

† 'செய்ந்நன்றி' என்பது உரிய வடிவம்.

\- பதிப்பாசிரியர்

1972. சக்தியென்று புகழ்ந்திடுவோம், முருக னென்போம்
சங்கரனென் றுரைத்திடுவோம் கண்ண னென்போம்
நித்தியமிங் கவள்சரணே நிலையென் றெண்ணி
நினக்குள்ள குறைகளெலாந் தீர்க்கச் சொல்லி,[1]
பத்தியினாற் பெருமையெலாங் கொடுக்கச் சொல்லிப்[2]
பசி,பிணிக ளில்லாமற் காக்கச் சொல்லி,
உத்தமநன் னெறிகளிலே சேர்க்கச் சொல்லி,
உலகளந்த நாயகிதா ளுரைப்பாய் நெஞ்சே. 3

1973. செல்வங்கள் கேட்டால்நீ கொடுக்க வேண்டும்,
சிறுமைகளென் னிடமிருந்தால் விடுக்க வேண்டும்,
கல்வியிலே-மதியினைநீ தொடுக்க வேண்டும்,
கருணையினா லையங்கள் கெடுக்க வேண்டும்,
தொல்லைதரு மகப்பேயைத் தொலைக்க வேண்டும்,
துணையென்று நின்னருளைத் தொடரச் செய்தே
நல்லவழி சேர்ப்பித்துக் காக்க வேண்டும்,
நமோநம,ஓம் சக்தியென நவிலாய் நெஞ்சே. 4

1974. பாட்டினிலே சொல்லுவது மவள்சொல் லாகும்,
பயனின்றி யுரைப்பாளோ? பாராய் நெஞ்சே.
கேட்டதுநீ பெற்றிடுவாய், ஐய மில்லை,
கேடில்லை, தெய்வமுண்டு வெற்றி யுண்டு;
மீட்டுமுனக் குரைத்திடுவேன், ஆதி சக்தி
வேதத்தின் முடியினிலே விளங்கும் சக்தி
நாட்டினிலே சனகனைப்போல் நமையுஞ் செய்தாள்,
நமோநமஓம் சக்தியென நவிலாய் நெஞ்சே 5

---

*(பா-டு): 1 'நினக்குள்ள குறைகளெல்லாந் தீர்க்கச் சொல்லி' - (அர.)*
*2 'பக்தியினாற் பெருமையெல்லாம் கொடுக்கச் சொல்லி' - (அர.)*
*'பக்தியினாற் பெருமையெலாங் கொடுக்கச் சொல்லி' - (பா.ஆ., பா.பி.)*

# 161. சிவசக்தி புகழ்

ராகம் - தன்யாஸி, சதுஸ்ர ஏகம்

ஓம்*

1975\. சக்திசக்தி சக்தியென்று சொல்லு - கெட்ட
சஞ்சலங்கள் யாவினையுங் கொல்லு -
சக்திசக்தி சக்தியென்று சொல்லி - அவள்
சந்நிதியி லேதொழுது நில்லு. 1

1976\. சக்திமிசை பாடல்பல பாடு - ஓம்
சக்திசக்தி யென்றுதாளம் போடு
சக்திதருஞ் செய்கைநிலந் தனிலே - சிவ
சக்திவெற்றி கொண்டுகளித் தாடு.[1] 2

1977\. சக்திதனை யேசரணங் கொள்ளு - என்றும்
சாவினுக்கொ ரச்சமில்லை தள்ளு -
சக்திபுக ழாமமுதை யள்ளு - மதி
தன்னிலினிப் பாகுமந்தக் கள்ளு. 3

1978\. சக்திசெயும் புதுமைகள் பேசு[2] - நல்ல
சக்தியற்ற பேடிகளை யேசு -

---

*அரசாங்க வெளியீட்டில் 'ஓம்' என்ற சொல் 10 பாடல்களிலும் இடம் பெற்றுள்ளது. பாரதி பிரசுராலயப் பதிப்பில் ஆறாம் பாட்டில் மட்டிலும் 'ஓம்' என்ற சொல் இடம் பெற்றுள்ளது.

(பா-டு): 1 'சக்தி வெறி கொண்டுகளித் தாடு' - கவிமணி
2 'சக்தி செய்யும் புதுமைகள் பேசு' - (பா.பி., அர.)

சக்திதிருக் கோயிலுள்ள மாக்கி – அவள்
தந்திடுநற் குங்குமத்தைப் பூசு. 4

1979. சக்தியினைச் சேர்ந்ததிந்தச் செய்கை - இதைச்
சார்ந்துநிற்ப தேநமக்கொ ருய்கை -
சக்தியெனு மின்பமுள்ள பொய்கை – அதில்
தண்ணமுத மாரிநித்தம் பெய்கை. 5

1980. சக்திசக்தி சக்தியென்று நாட்டு - சிவ
சக்தியருள் பூமிதனில் காட்டு
சக்திபெற்ற நல்லநிலை நிற்பார் – புவிச்
சாதிகளெல் லாமதனைக் கேட்டு. 6

1981. சக்திசக்தி சக்தியென்று முழங்கு - அவள்
தந்திரமெல் லாமுலகில் வழங்கு
சக்தியருள் கூடிவிடு மாயின் – உயிர்
சந்ததமும் வாழுநல்ல கிழங்கு. 7

1982. சக்திசெயுந் தொழில்களை யெண்ணு[1] – நித்தஞ்
சக்தியுள்ள தொழில்பல பண்ணு
சக்திதனை யேயிழந்து விட்டால் - இங்கு*
சாவினையும் நோவினையும் உண்ணு. 8

1983. சக்தியரு ளாலுலகி லேறு - ஒரு
சங்கடம்வந் தாலிரண்டு கூறு
சக்திசில சோதனைகள் செய்தால் - அவள்
தண்ணருளென் றேமனது தேறு. 9

---

(பா-டு): 1 சக்தி செய்யுந் தொழில்களை எண்ணு - (அர.)

* 'இங்குச்' என்றிருத்தல் வேண்டும். – பதிப்பாசிரியர்)

1984. சக்திதுணை யென்றுநம்பி வாழ்த்து - சிவ
சக்திதனை யேயகத்தி லாழ்த்து
சக்தியுஞ் சிறப்புமிகப் பெறுவாய் - சிவ
சக்தியருள் வாழ்கவென்று வாழ்த்து. 10

## 162. சக்தி திருப்புகழ்

திஸ்ர ராகம்*

1985. சக்தி சக்தி சக்தீ சக்தீ சக்தீ சக்தீ யென்றோது
சக்தி சக்தி சக்தீ யென்பார் சாகா ரென்றே நின்றோது. 1

1986. சக்தி சக்தி யென்றே வாழ்தல் சால்பா நம்மைச் சார்ந்தீரே
சக்தி சக்தி யென்றீ ராயில்[1] சாகா வுண்மை சேர்ந்தீரே. 2

1987. சக்தி சக்தி யென்றால் சக்தி தானே சேருங் கண்டீரே
சக்தி சக்தி யென்றால் வெற்றி தானே நேருங் கண்டீரே. 3

1988. சக்தி சக்தி யென்றே செய்தால் தானே செய்கை நேராகும்
சக்தி சக்தி யென்றா லஃது தானே முக்தி வேராகும். 4

1989. சக்தி சக்தி சக்தீ சக்தீ சக்தீ யென்றே யாடோமோ?
சக்தி சக்தி சக்தீ யென்றே தாளங் கொட்டிப் பாடோமோ.[2] 5

1990. சக்தி சக்தி யென்றால் துன்பந் தானே தீருங் கண்டீரே
சக்தி சக்தி யென்றா லின்பந் தானே சேருங் கண்டீரே. 6

1991. சக்தி சக்தி யென்றால் செல்வம் தானே யூறுங் கண்டீரோ?
சக்தி சக்தி யென்றால் கல்வி தானே தேறுங் கண்டீரோ? 7

---

* *தற்காலப் பதிப்புக்களில் தாளக் குறிப்பு விடப்பட்டுள்ளது. - பதிப்பாசிரியர்*
*(பா-டு): 1 'சக்தி சக்தி யென்றீ ராயின்' - (பா.பி., அர.)*
*'சக்தி சக்தி யென்றீ ராகில்' - (பா.பி., அர.)*

1992. சக்தி சக்தி சக்தீ சக்தீ சக்தீ[1] சக்தீ வாழிநீ.
சக்தி சக்தி சக்தீ சக்தீ, சக்தீ, சக்தீ வாழிநீ. 8

1993. சக்தி சக்தி வாழீ யென்றால் சம்பத் தெல்லாம் நேராகும்
சக்தி சக்தி யென்றால் சக்தி தாச னென்றே பேராகும். 9

........................................

(பா-டு): 1 சக்தி சக்தி சக்தி சக்தி சக்தி - (பா.ஆ.)

# 163. சக்திக்கு ஆத்ம ஸமர்ப்பணம்

பூபாளம், சதுஸ்ர ஏகம்

கையை,

1994. சக்திதனக் கேகருவி யாக்கு - அது
சாதனைகள் யாவினையுங் கூடும் – கையை
சக்திதனக் கேகருவி யாக்கு – அது
சக்தியுற்றுக் கல்லினையுஞ் சாடும். 1

கண்ணை,

1995. சக்திதனக் கேகருவி யாக்கு - சிவ[1]
சக்திவழி யினையது காணும் – கண்ணை[2]
சக்திதனக் கேகருவி யாக்கு – அது
சத்தியமு நல்லருளும் பூணும். 2

செவி,

1996. சக்திதனக் கேகருவி யாக்கு – சிவ
சக்திசொலு மொழியது கேட்கும் – செவி
சக்தி தனக்கே கருவி யாக்கு - அது
சக்திதிருப் பாடலினை வேட்கும். 3

---

(பா–டு): 1 சக்தி தனக்கே கருவியாக்கு - அது (பா.பி., அர.)
2 சக்தி வழியினை அது காணும் - கண்ணைச் – (பா.பி., அர.)

வாய்,

1997\. சக்திதனக் கேகருவி யாக்கு - சிவ
சக்திபுக ழினையது முழங்கும் – வாய்
சக்திதனக் கேகருவி யாக்கு - அது
சக்திநெறி யாவினையும் வழங்கும். 4

சிவ,

1998\. சக்திதனை நாசிநித்த முகரும் - அதைச்
சக்திதனக் கேகருவி யாக்கு - சிவ
சக்திதிருச் சுவையினை நுகரும் – சிவ
சக்திதனக் கேயெமது நாக்கு. 5

மெய்யை,

1999\. சக்திதனக் கேகருவி யாக்கு - சிவ
சக்திதருந் திறனதி லேறும் - மெய்யை
சக்திதனக் கேகருவி யாக்கு – அது
சாதலற்ற வழியினைத் தேறும். 6

கண்டம்,

2000\. சக்திதனக் கேகருவி யாக்கு – அது
சந்ததமு நல்லமுதைப் பாடும் - கண்டம்
சக்திதனக் கேகருவி யாக்கு - அது
சக்தியுட னென்றுமுற வாடும். 7

தோள்,

2001\. சக்திதனக் கேகருவி யாக்கு - அது
தாரணியு மேலுலகுந் தாங்கும் – தோள்
சக்திதனக் கேகருவி யாக்கு - அது
சக்திபெற்று மேருவென வோங்கும். 8

நெஞ்சம்,

2002. சக்திதனக் கேகருவி யாக்கு – அது
சக்தியுற நித்தம்விரி வாகும் - நெஞ்சம்
சக்திதனக் கேகருவி யாக்கு - அதைத்
தாக்கவரும் வாளொதுங்கிப் போகும். 9

சிவ,

2003. சக்திதனக் கேயெமது வயிறு – அது
சாம்பரையு நல்லவுண வாக்கும் - சிவ
சக்திதனக் கேயெமது வயிறு – அது
சக்திபெற வுடலினைக் காக்கும். 10

இடை,

2004. சக்திதனக் கேகருவி யாக்கு - நல்ல
சக்தியுள்ள சந்ததிகள் தோன்றும் - இடை
சக்திதனக் கேகருவி யாக்கு – நின்றன்
சாதிமுற்று நல்லறத்தி லூன்றும். 11

கால்,

2005. சக்திதனக் கேகருவி யாக்கு – அது
சாடியெழு கடலையுந் தாவும் - கால்
சக்திதனக் கேகருவி யாக்கு - அது
சஞ்சலமில் லாமலெங்கு மேவும்.[1] 12

மனம்,

2006. சக்திதனக் கேகருவி யாக்கு - அது
சஞ்சலங்கள் தீர்ந்தொருமை கூடும் - மனம்

.......................................

(பா-டு): 1 'சஞ்சல மில்லாம லெங்கு மோங்கும்' - (பா.ஆ., பா.பி.)

சக்திதனக் கேகருவி யாக்கு - அது
சாத்துவிகத் தன்மையினைச் சூடும். 13

மனம்,

2007. சக்திதனக் கேகருவி யாக்கு - அது
சக்தியற்ற சிந்தனைகள் தீரும் - மனம்
சக்திதனக் கேகருவி யாக்கு - அதில்
சாருநல்ல வுறுதியுஞ் சீரும். 14

மனம்,

2008. சக்திதனக் கேகருவி யாக்கு - அது
சக்திசக்தி சக்தியென்று பேசும் - மனம்
சக்திதனக் கேகருவி யாக்கு - அதில்
சார்ந்திருக்கும் நல்லுறவுந் தேசும். 15

மனம்.

2009. சக்திதனக் கேகருவி யாக்கு - அது
சக்திநுட்பம் யாவினையு நாடும் - மனம்
சக்திதனக் கேகருவி யாக்கு - அது
சக்திசக்தி யென்றுகுதித் தாடும். 16

மனம்,

2010. சக்திதனக் கேகருவி யாக்கு - அது
சக்தியினை யெத்திசையுஞ் சேர்க்கும் - மனம்
சக்திதனக் கேகருவி யாக்கு - அது
தான்விரும்பில் மாமலையைப் பேர்க்கும். 17

மனம்,

2011 சக்திதனக் கேகருவி யாக்கு – அது
சந்ததமுஞ் சக்திதனைச் சூழும் - மனம்

சக்திதனக் கேகருவி யாக்கு - அதில்
சாவுபெறுந் தீவினையும் ஊழும். 18

மனம்,

2012. சக்திதனக் கேயுரிமை யாக்கு - எதைத்
தான்விரும்பி னாலும்வந்து சேரும் - மனம்
சக்திதனக் கேயுரிமை யாக்கு - உடல்
தன்னிலுயர் சக்திவந்து நேரும். 19

மனம்,

2013. சக்திதனக் கேகருவி யாக்கு - இந்தத்
தாரணியில் நூறுவய தாகும் - மனம்
சக்திதனக் கேகருவி யாக்கு - உன்னைச்
சாரவந்த நோயிழிந்து போகும். 20

மனம்,

2014. சக்திதனக் கேகருவி யாக்கு - தோள்
சக்திபெற்று நல்லதொழில் செய்யும் – மனம்
சக்திதனக் கேகருவி யாக்கு - எங்கும்
சக்தியருள் மாரிவந்து பெய்யும். 21

மனம்,

2015. சக்திதனக் கேகருவி யாக்கு – சிவ
சக்திநடை யாவுநன்கு பழகும் - மனம்
சக்திதனக் கேகருவி யாக்கு - முகம்
சார்ந்திருக்கு நல்லருளு மழகும். 22

மனம்,

2016. சக்திதனக் கேகருவி யாக்கு - உயர்
சாத்திரங்கள் யாவுநன்கு தெரியும் - மனம்

சக்திதனக் கேகருவி யாக்கு - நல்ல
சத்திய விளக்குநித்த மெரியும். 23

சித்தம்,

2017. சக்திதனக் கேயுரிமை யாக்கு – நல்ல
தாளவகை சந்தவகை காட்டும் - சித்தம்
சக்திதனக் கேயுரிமை யாக்கு – அதில்
சாருநல்ல வார்த்தைகளும் பாட்டும். 24

சித்தம்,

2018. சக்திதனக் கேயுரிமை யாக்கு - அது
சக்தியையெல் லோர்க்குமுணர் வுறுத்தும் – சித்தம்
சக்திதனக் கேயுரிமையாக்கு – அது
சக்திபுகழ் திக்கனைத்து நிறுத்தும். 25

சித்தம்,

2019. சக்திதனக் கேயுரிமை யாக்கு - அது
சக்திசக்தி யென்றுகுழ லூதும் - சித்தம்
சக்திதனக் கேயுரிமை யாக்கு - அதில்
சார்வதில்லை யச்சமுடன் சூதும். 26

சித்தம்,

2020. சக்திதனக் கேயுரிமை யாக்கு - அது
சக்தியென்று வீணைதனில் பேசும் – சித்தம்
சக்திதனக்கேயுரிமை யாக்கு - அது
சக்திபரி மளமிங்கு வீசும். 27

சித்தம்,

2021. சக்திதனக் கேயுரிமை யாக்கு – அது
சக்தியென்று தாளமிட்டு முழக்கும் - சித்தம்

சக்திதனக் கேயுரிமை யாக்கு – அது
சஞ்சலங்கள் யாவினையு மழிக்கும். 28

சித்தம்,

2022. சக்திதனக் கேயுரிமை யாக்கு – அதில்[1]
சக்திவந்து கோட்டைகட்டி வாழும் – சித்தம்
சக்திதனக் கேயுரிமை யாக்கு – அது
சக்தி யருட் சித்திரத்தி லாழும். 29

மதி,

2023. சக்திதனக் கேயுடைமை யாக்கு - அது
சங்கடங்கள் யாவினையு முடைக்கும் – மதி
சக்திதனக் கேயுடைமை யாக்கு - அங்கு*
சத்தியமு நல்லறமுங் கிடைக்கும். 30

மதி,

2024. சக்திதனக் கேயுடைமை யாக்கு - அது
சாரவருந் தீமைகளை விலக்கும் – மதி
சக்திதனக் கேயுடைமை யாக்கு – அது
சஞ்சலப்பி சாசுகளைக் கலக்கும். 31

மதி,

2025. சக்திதனக் கேயுடைமை யாக்கு – அது
சக்திசெய்யும் விந்தைகளைத் தேடும் – மதி
சக்திதனக்கே யுடைமை யாக்கு – அது
சக்தியுறை விடங்களை நாடும். 32

.........................................

(பா-டு): 1 'சக்,நி தனக்கே யுரிமையாக்கு – அது' – (பா.பி.அர.)
*'அங்குச்' என்றிருத்தல் வேண்டும்.

– பதிப்பாசிரியர்

மதி,

2026. சக்திதனக் கேயுடைமை யாக்கு - அது
தர்க்கமெனுங் காட்டிலச்ச நீங்கும் - மதி
சக்திதனக் கேயுடைமை யாக்கு - அது[1]
தள்ளிவிடும் பொய்ந்நெறியுந் தீங்கும். 33

மதி,

2027. சக்திதனக் கேயுடைமை யாகக்கு - அதில்
சஞ்சலத்தின் தீயவிருள் விலகும் - மதி
சக்திதனக் கேயுடைமை யாக்கு - அதில்
சக்தியொளி நித்தமுநின் றிலகும். 34

மதி,

2028. சக்திதனக் கேயுடைமை யாக்கு - அதில்
சார்வதில்லை யையமெனும் பாம்பு - மதி
சக்திதனக் கேயுடைமை யாக்கு - அங்கு
தான்முளைக்கு முக்திவிதைக் காம்பு. 35

மதி,

2029. சக்திதனக் கேயடிமை யாக்கு - அது
தாரணியி லன்புநிலை நாட்டும் - மதி
சக்திதனக் கேயடிமை யாக்கு - அது
ஸர்வசிவ சக்தியினைக் காட்டும். 36

மதி,

2030. சக்திதனக் கேயடிமையாக்கு - அது
சக்திதிரு வருளினைச் சேர்க்கும் - மதி

---

(பா-டு): 1 'சக்தி தனக்கே யுடைமையாக்கு – அதில்' - (பாபி., அர.)
'அங்குத்' என்றிருத்தல் வேண்டும்.

- பதிப்பாசிரியர்

சக்திதனக் கேயடிமை யாக்கு – அது
தாமதப்பொய்த் தீமைகளைப் போக்கும். 37

மதி,

2031. சக்திதனக் கேயடிமை யாக்கு – அது
சத்தியத்தின் வெல்கொடியை நாட்டும் - மதி
சக்திதனக் கேயடிமை யாக்கு - அது
தாக்கவரும் பொய்ப்புலியை யோட்டும். 38

மதி,

2032. சக்திதனக் கேயடிமை யாக்கு - அது
சத்தியநல் லிரவியைக் காட்டும் - மதி
சக்திதனக் கேயடிமை யாக்கு - அதில்
சாரவரும் புயல்களை வாட்டும். 39

மதி,

2033. சக்திதனக் கேயடிமை யாக்கு – அது
சக்திவிர தத்தையென்றும் பூணும் - மதி
சக்திவிர தத்தையென்றுங் காத்தால் - சிவ
சக்திதரு மின்பமுநல் லூணும். 40

மதி,

2034. சக்திதனக் கேயடிமை யாக்கு - தெளி
தந்தமுதப் பொய்கையென வொளிரும் - மதி
சக்திதனக் கேயடிமை யாக்கு - அது
சந்ததமு மின்பமுற மிளிரும். 41

அகம்,

2035. சக்திதனக் கேயுடைமை யாக்கு – அது
தன்னையொரு சக்தியென்று தேரும் - அகம்

சக்திதனக் கேயுடைமை யாக்கு - அது
தாமதமு மாணவமும் தீரும். 42

அகம்,

2036. சக்திதனக் கேயுடைமை யாக்கு - அது
தன்னையவள் கோயிலென்று காணும் - அகம்
சக்திதனக் கேயுடைமை யாக்கு – அது
தன்னையெண்ணித் துன்பமுற நாணும். 43

அகம்,

2037. சக்திதனக் கேயுடைமை யாக்கு - அது
சக்தியெனுங் கடலிலோர் திவலை[1] – அகம்
சக்திதனக் கேயுடைமை யாக்கு - சிவ
சக்தியுண்டு நமக்கில்லை கவலை. 44

அகம்,

2038. சக்திதனக் கேயுடைமை யாக்கு – அதில்
சக்திசிவ நாதநித்த மொலிக்கும் – அஹம்
சக்திதனக் கேயுடைமை யாக்கு – அங்கு*
சக்திதிரு மேனியொளி ஜ்வலிக்கும். 45

சிவ,

2039. சக்தியென்றும் வாழியென்று பாடு – சிவ
சக்திசக்தி யென்றுகுதித் தாடு - சிவ
சக்தியென்றும் வாழியென்று பாடு – சிவ
சக்திசக்தி யென்றுவிளை யாடு. 46

........................................

(பா-டு): 1 'சக்தியெனுங் கடலிலோர் திவலை' – (அர.)
* 'அங்குச்' என்றிருத்தல் வேண்டும்.

ராகம்-பூபாளம், தாளம் - சதுஸ்ர ஏகம் என்று ராக, தாளக் குறிப்புக்கள் பாரதி பிரசுராலய, அரசாங்கப் பதிப்புக்களில் தரப்பெற்றுள்ளன.

கையை, கண்ணை, மெய்யை – இவற்றுக்கு முன் ஒற்றுகள் பிற்காலப் பதிப்புக்களில் சேர்க்கப்பட்டுள்ளன.

## 164. “வைய முழுதும்”

**கண்ணிகள்***

**2040.** வைய முழுதும் படைத்தளிக் கின்ற
மஹாசக்தி தன்புகழ் வாழ்த்து கின்றோம்;
செய்யும் வினைக ளனைத்திலுமே வெற்றி
சேர்ந்திட நல்லருள் செய்க வென்றே. *1*

**2041.** பூதங்க ளைந்தி லிருந்தெங்குங் கண்ணிற்
புலப்படும் சக்தியைப் போற்று கின்றோம்;
வேதங்கள் சொன்ன படிக்கு மனிதரை
மேன்மையுறச் செய்தல் வேண்டு மென்றே. *2*

**2042.** வேகம், கவர்ச்சி முதலிய பல்வினை
மேவிடும் சக்தியை மேவு கின்றோம்
ஏக நிலையி லிருக்கும் அமிர்தத்தை
யாங்க ளறிந்திட வேண்டு மென்றே. *3*

**2043.** உயிரெனத் தோன்றி யுணவுகொண் டேவளர்ந்
தோங்கிடும் சக்தியை ஓது கின்றோம்.

---

* *மூலக் கைப்பிரதியில் 5, 6, 7 ஆகிய மூன்று கண்ணிகளே காணப்படுகின்றன. 'பாட்டுக்கொத்து' என்ற பாடல் தொகுதியில் முதல் ஆறு கண்ணிகள் காணப்படுகின்றன. இரண்டையும் ஒன்றாக்கி, இங்கே ஏழு கண்ணிகள் பதிப்பிக்கப்பட்டுள்ளன.*

- *பதிப்பாசிரியர்*

பயிரினைக் காக்கும் மழையென எங்களைப்
பாலித்து நித்தம் வளர்க்க வென்றே. 4

2044. சித்தத்திலே நின்று சேர்வ துணரும்
சிவசக்தி தன்புகழ் செப்பு கின்றோம்;
இத்தரை மீதினில் இன்பங்கள் யாவும்
எமக்குத் தெரிந்திடல் வேண்டு மென்றே. 5

2045. மாறுத லின்றிப் பராசக்தி தன்புகழ்
வண்ணமுற நித்தம் பாடு கின்றோம்.[1]
நூறு வயது புகழுடன் வாழ்ந்துயர்
நோக்கங்கள் பெற்றிட வேண்டு மென்றே. 6

2046. ஓம்சக்தி ஓம்சக்தி ஓம்சக்தி ஓம்சக்தி
ஓம்சக்தி யென்றுரை செய்திடு வோம்[2]
ஓம்சக்தி யென்பவர் உண்மைகண் டார்சுடர்
ஒண்மைகொண் டார்,உயிர் வண்மை கொண்டார். 7

........................................

1 'வையமிசை நித்தம் பாடுகின்றோம்' – (பாரதி திருத்தம்)
2. ஓர் அசை குறைகின்றது.

– பதிப்பாசிரியர்

## 165. மஹாசக்தி வெண்பா*

2047. தன்னை மறந்து ஸகல வுலகினையும்
மன்னநிதங் காக்கு மஹாசக்தி - அன்னை
அவளே துணையென் றமைவெய்தி[1] நெஞ்சந்
துவளா திருத்தல் சுகம். *1*

2048. நெஞ்சிற் கவலை நிதமும் பயிராக்கி
அஞ்சியுயிர் வாழ்த லறியாமை - தஞ்சமென[2]
வையமெலாங் காக்கு மஹாசக்தி நல்லருளை
ஐயமறப் பற்ற லறிவு. *2*

2049. வையகத்துக் கில்லை மனமே நினக்குநலஞ்
செய்யக் கருதியிவை செப்புவேன் - பொய்யில்லை
எல்லா மளிக்கும் இறைநமையுங் காக்குமெனுஞ்[3]
சொல்லா லழியுந் துயர். *3*

---

* ''மகாசக்தி வெண்பா'' — (பா.ஆ., பா.பி.)

(பா-டு): 1 'அவளே துணையென் றனவரதம் — (பா.ஆ., பா.பி., அர.)

2 'அஞ்சியுயிர் வாழ்த லறியாமை — தஞ்சமென்றே' - (பா. ஆ.) பா.பி., அர.)

3 'எல்லாம் புரக்கும் இறைநமையுங் காக்குமென்ற'- (பா.ஆ., பா.பி, அர.)

2050. எண்ணிற் கடங்காமல் எங்கும் பரந்தனவாம்[1]
விண்ணிற் சுடர்கின்ற மீனையெலாம்[2] பண்ணியதோர்
சக்தியே நம்மைச் சமைத்ததுகாண், நூறாண்டு
பக்தியுடன் வாழும் படிக்கு. 4

(பா-டு): 1 'எண்ணிற் கடங்காமல் எங்கும் பரந்தனவாய்' - (பா.ஆ., பா.பி. அர.)
2 'விண்ணிற் சுடர்கின்ற மீனையெல்லாம்' - (பா.ஆ., பா.பி., அர.)

# 166. சக்தி விளக்கம்

சதுஸ்ர ஏகம்*

2051. ஆதிப் பரம்பொருளின் ஊக்கம் - அதை
அன்னை யெனப்பணிதல் ஆக்கம்.
சூதில்லை காணுமிந்த நாட்டீர் - மற்றத்
தொல்லை மதங்கள்செய்யுந் தூக்கம். 1

2052. மூலப் பழம்பொருளின் நாட்டம் - இந்த
மூன்று புவியுமதன் ஆட்டம்.
காலப் பெருங்களத்தின் மீதே - எங்கள்
காளி நடமுலகக் கூட்டம். 2

2053. காலை யிளவெயிலின் காட்சி - அவள்
கண்ணொளி காட்டுகின்ற மாட்சி.
நீல விசும்பினிடை யிரவிற் - சுடர்
நேமி யனைத்துமவ ளாட்சி. 3

2054. நாரண னென்றுபழ வேதம் - சொல்லும்
நாயகன் சக்திதிருப் பாதம்.

......................................

*அச்சிட்ட பதிப்பு எதிலும் தாளம் குறிக்கப்படவில்லை. பண் (இராகப்) பெயர் கையெழுத்துப் படியிலும் இல்லை. - பதிப்பாசிரியர்

சேரத் தவம்புரிந்து பெறுவார் – இங்கு*
செல்வ மறிவுசிவ போதம். 4

2055. ஆதி சிவனுடைய சக்தி – எங்க
ளன்னை யருள்பெறுதல் முக்தி
மீதி யுயிரிருக்கும் போதே - அதை
வெல்லல் சுகத்தினுக்கு யுக்தி. 5

2056. பண்டை விதியுடைய தேவி – வெள்ளைப்[1]
பாரதி யன்னையருள் மேவி
கண்ட பொருள்விளக்கு நூல்கள் - பல
கற்றலில் லாதவனோர் பாவி. 6

2057. மூர்த்திகள் மூன்று பொருளொன்று - அந்த
மூலப் பொருளொளியின் குன்று
நேர்த்தி திகழுமந்த வொளியை - எந்த
நேரமும் போற்றுசக்தி யென்று. 7

---

* 'இங்குச்' என்றிருத்தல் வேண்டும்.
- பதிப்பாசிரியர்

(பா-டு): 1 'பண்டை விதியுடைய தேவி - வெள்ளை' (பா.ஆ., பா.பி.)
இத்திருத்தம் தவறு. – பதிப்பாசிரியர்

## 167. வேள்விப் பாட்டு

2058. இயற்கையென் றுனையுரைப்பார் - சிலர்
இணங்குமைம் பூதங்க ளென்றிசைப்பார்.
செயற்கையின் சக்தியென்பார்[1] – உயிர்த்
தீயென்பர், அறிவென்பர், ஈசனென்பர்.
வியப்புறு தாய்நினக்கே – இங்கு
வேள்விசெய் திடுமெங்கள் "ஸோம" மெனும்[2]
நயப்படு மதுவுண்டே – சிவ
நாட்டியங் காட்டிநல் லருள்புரிவாய். 1

2059. அன்புறு சோதியென்பார் – சிலர்
ஆரிருட் காளியென் றுனைப்புகழ்வார்
இன்பமென் றுரைத்திடுவார் - சிலர்
எண்ணருந் துன்பமென் றுனையிசைப்பார்
புன்பலி கொண்டுவந்தோம் – அருள்
பூண்டெமைத் தேவர்தங் குலத்திடுவாய்
மின்படு சிவசக்தி – எங்கள்
வீரைநின் திருவடி சரண்புகுந்தோம். 2

---

''சிவசக்தி'' - (அர.)

(பா-டு): 1 'செயற்கையின் சக்தி யென்பர்' - (பா.ஆ.)
2 'வேள்விசெய்திடுமெங்கள் 'ஓம்' என்னும்' - (பா.ஆ., பா.பி., அர.)

**2060.** உண்மையி லமுதாவாய் - புண்க
ளொழித்திடு வாய்களி யுதவிடுவாய்
வண்மைகொ ளுயிர்ச்சுடராய்[1] - இங்கு
வளர்ந்திடு வாயென்று மாய்வதிலாய்
ஒண்மையும் ஊக்கமுந்தான் - என்றும்
ஊறிடுந் திருவருட் சுனையாவாய்
அண்மையி லென்றுநின்றே - எம்மை
ஆதரித் தருள்செயும் விரதமுற்றாய்.[2] 3

**2061.** தெளிவுறு மறிவினைநாம் - கொண்டு
சேர்த்தன நினக்கது ஸோமரஸம்
ஒளியுறு முயிர்ச்செடியில் - இதை
ஓங்கிடு மதிவலி தனிற்பிழிந்தோம்
களியுறக் குடித்திடுவாய் – நின்றன்
களிநடங் காண்பதற் குளங்கனிந்தோம்
குளிர்சுவைப் பாட்டிசைத்தே – சுரர்
குலத்தினிற் சேர்ந்திடல் விரும்புகின்றோம். 4

**2062.** அச்சமுந் துயருமென்றே - இரண்
டசுரர்வந் தெமையிங்கு* சூழ்ந்துநின்றார்
துச்சமிங் கிவர்படைகள் - பல
தொல்லைகள் கவலைகள் சாவுகளாம்.
இச்சையுற் றிவரடைந்தார் - எங்கள்
இன்னமு தினைக்கவர்ந் தேகிடவே[3].

........................................

(பா-டு): 1 'வன்மைகொ ளுயிர்ச்சுடராய்' - (பா.ஆ., பா.பி.)
2 'ஆதரித் தருள்செய்யும் விரதமுற்றாய்' – (அர.)
3 'இன்னமு தைக்கவர்ந் தேகிடவே' - (பா.ஆ., பா.பி., அர.)

* 'தெமையிங்குச்' என்றிருத்தல் வேண்டும்.

- பதிப்பாசிரியர்

பிச்சையிங் கெனக்களித்தாய்[1] - ஒரு
பெருநக ருடலெனும் பெயரினதாம். 5

**2063.** கோடிமண் டபந்திகழும் - திறற்
கோட்டையிங் கிதையவர் பொழுதனைத்தும்
நாடிநின் றிடர்புரிவார் – உயிர்
நதியினைத் தடுத்தெமை நலித்திடுவார்
சாடுபல் குண்டுகளால் - ஒளி
சார்மதிக் கூடங்கள் தகர்த்திடுவார்
பாடிநின் றுனைப்புகழ்வோம் - எங்கள்
பகைவரை யழித்தெமைக் காத்திடுவாய், 6

**2064.** நின்னருள் வேண்டுகின்றோம் - எங்கள்
நீதியுந் தருமமு நிலைப்பதற்கே
பொன்னவிர் கோயில்களும் - எங்கள்
பொற்புடை மாதரு மதலையரும்
அன்னநல் லணிவயல்கள் - எங்கள்
ஆடுகள் மாடுகள் குதிரைகளும்[2]
இன்னவை காத்திடவே - அன்னை
இணைமலர்த் திருவடி துணைபுகுந்தோம். 7

**2065.** எம்முயி ராசைகளும் - எங்கள்
இசைகளுஞ் செயல்களுந் துணிவுகளும்
செம்மையுற் றிடவருள்வாய் - நின்றன்
சேவடி யடைக்கலம் புகுந்துவிட்டோம்

---

(பா-டு): 1 'பிச்சை யிங்கெமக் களித்தாய்' - (பா பி., அர.)
2 'ஆடு மாடுகள் குதிரைகளும்' - (பா.பி.)
இப்பாடத்தை ஏற்றால் ஓசை குன்றும்.

- பதிப்பாசிரியர்

மும்மையி னுடைமைகளும் - திரு
முன்னரிட் டஞ்சலி செய்துநிற்போம்
அம்மைநற் சிவசக்தி - எமை
அமரர்தந் நிலையினி லாக்கிடுவாய். 8

## 168. போற்றி யகவல்

2066. போற்றி; உலகொரு மூன்றையும் புணர்ப்பாய்!
மாற்றுவாய் துடைப்பாய்; வளர்ப்பாய் காப்பாய்,
கனியிலே சுவையும் காற்றிலே யியக்கமும்
கலந்தாற் போலநீ யனைத்திலுங் கலந்தாய்.
உலகெலாந் தானா யொளிர்வாய், போற்றி! 5
அன்னை போற்றி! அமுதமே, போற்றி!
புதியதிற் புதுமையாய், முதியதில் முதுமையாய்,
உயிரிலே யுயிராய், இறப்பிலு முயிராய்
உண்டெனும் பொருளி லுண்மையாய், என்னுளே
நானெனும் பொருளாய், நானையே பெருக்கித் 10
தானென மாற்றுஞ் சாகாச் சுடராய்,
கவலைநோய் தீர்க்கு மருந்தின் கடலாய்,
பிணியிருள் கெடுக்கும் பேரொளி ஞாயிறாய்,
யானென தின்றி யிருக்குநல் யோகியர்
ஞானமா மகுட நடுத்திகழ் மணியாய், 15
செய்கையாய், ஊக்கமாய்ச், சித்தமாய், அறிவாய்,
நின்றிடுந் தாயே நித்தமும் போற்றி!
இன்பங் கேட்டேன் ஈவாய், போற்றி[1]!

1 இவ்வரியினை அடுத்துத் 'துன்பம் வேண்டேன் துடைப்பாய் போற்றி' என பாரதி ஆச்ரமப் பதிப்பில் முதலில் இடம் பெற்ற ஒரு வரி எல்லாப் பதிப்புகளிலும் காணப்படுகின்றது. பாரதியாரின் கையெழுத்துப் படியில் அவ்வரி இல்லை. பாரதி ஆச்ரமப் பதிப்பாளர்க்குக் கிடைத்த ஆதாரம் யாதெனப் புலப்படவில்லை.
- பதிப்பாசிரியர்

சாவினை வேண்டேன் தவிர்ப்பாய், போற்றி!
அமுதங் கேட்டேன் அளிப்பாய், போற்றி! 20
சக்தி போற்றி! தாயே போற்றி!
முக்தி போற்றி! மோனமே போற்றி!

## 169. சந்திரமதிப் பாட்டு*†

ஆனந்த பைரவி ராகம். ஆதி தாளம்.

2067. பச்சைக் குழந்தை யடி - கண்ணிற்
பாவை யடி சந்திரமதி.
இச்சைக் கினிய மது - என்றன்
இருவி ழிக்குத் தேநிலவு.
நச்சுத் தலைப் பாம்புக் குள்ளே - நல்ல
நாகமணி யுள்ள தென்பார்
துச்சப் படு நெஞ் சினிலே[1] - நின்றன்
சோதி வளரு தடீ 1

2068. பேச்சுக் கிடமே தடி – நீ
பெண்கு லத்தின் வெற்றியடி
ஆச்சர்ய மாயை யடி - என்றன்
ஆசைக் குமரி யடி[2]
நீச்சு நிலை கடந்த - வெள்ள
நீருக் குள்ளே வீழ்ந்தவர் போல்

---

* 'சந்திரமதி' - (அர.)

† 'சந்திரமதி என்பது காதல் கொண்டவளாகிய பெண்ணைக் குறிப்பது. சந்திரன் காதலுக்கு அதிதேவதையாதலால். - பாரதியார்

(பா-டு): 1 'துச்சப்படு நெஞ்சிலே' - (அர.)
2 'ஆசைக் குமாரியடி!' - (கவிமணி, அர.)

தீச் சுடரை வென்ற வொளி – கொண்ட
தேவி, நினை வீழ்ந்தே னடி.[1] 2

2069. நீலக் கடலினி லே - நின்றன்
நீண்ட குழல் தோன்று தடி;
கோல மதியி னிலே – நின்றன்
குளிர்ந்த முகங் காணு தடி;
ஞால வெளியினி லே - நின்றன்
ஞான வொளி வீசு தடி;
கால நடையினி லே - நின்றன்
காதல் விளங்கு தடி. (பச்சைக் குழந்தையடி) 3

பாட்டுக்கு ஸங்கீதம்:

*பா பா பா - பஸாநிதா - பம*
*பம பம பம கா – கமா மபா......*
*ரீகா கரி ஸநி – ஸகா கமா - கரி*
*கம கரி – ஸாஸா – ஸா ஸா ஸா ஸா*

---

*(பா-டு): 1 'தேவி, நினை விழந்தேனடி' - (பா.பி., அர.)*

'விரும்பினேன், அடி' என்ற பொருளில் 'விழைந்தேனடி' என்று மிருக்கலாம் - கவிமணி

## 170. வேலன் பாட்டு*

புன்னாகவராளி ராகம், திஸ்ர ஏக தாளம்

2070. வில்லினை யொத்த புருவம் வளைத்தனை
வேலவா – அங்கொர்
வெற்பு நொறுங்கிப் பொடிப்பொடி
யானது வேலவா
சொல்லினைத் தேனிற் குழைத்துரைப் பாள்சிறு
வள்ளியைக் – கண்டு
சொக்கி மரமென நின்றனை
தென்மலைக் காட்டிலே.
கல்லினை யொத்த வலிய மனங்கொண்ட
பாதகன் – சிங்கன்
கண்ணிரண் டாயிரங் காக்கைக்
கிரையிட்ட வேலவா!
பல்லினைக் காட்டிவெண் முத்தைப் பழித்திடும்
வள்ளியை - ஒரு
பார்ப்பனக் கோலங்[1] தரித்துக்
கரந்தொட்ட வேலவா! (க)† 1

---

*வேலன் அல்லது சுப்பிரமணியக் கடவுள் என்பது ஆத்மாவில் வீர்ய ரூபமாகிய அக்நி தேவனுக்குப் பெயர். இஃது வேதப் பொருள். - (பாரதியார்)

†பாரதியார் தமிழில் எண் குறித்துள்ளார்'

(பா-டு): 1 பார்ப்பன கோலந் (பா. ஆ.)
இது சந்திப் பிழையாகும் அச்சுப் பிழை — பதிப்பாசிரியர்

**2071.** வெள்ளலைக் கைகளைக் கொட்டி முழக்குங்
கடலினை - உடல்
வெம்பி மறுகிக்[1] கருகிப்
புகைய வெருட்டினாய்.
கிள்ளை மொழிச்சிறு வள்ளி யெனும்பெயர்ச்
செல்வத்தை - என்றும்
கேடற்ற வாழ்வினை யின்ப
விளக்கை மருவினாய்.
கொள்ளைகொண் டேயம ராவதி வாழ்வு
குலைத்தவன் - பானு
கோபன் தலைபத்துக் கோடி
துணுக்குறக் கோபித்தாய்!
துள்ளிக் குலாவித் திரியுஞ் சிறுவன
மானைப்போல் - தினைத்
தோட்டத்தி லேயொரு பெண்ணை
மணங்கொண்ட வேலவா. (உ) 2

**2072.** ஆறு சுடர்முகங் கண்டு விழிக்கின்ப
மாகுதே - கையில்
அஞ்ச லெனுங்குறி கண்டு
மகிழ்ச்சியுண் டாகுதே.
நீறு படக்கொடும் பாவம் பிணிபசி
யாவையும் - இங்கு
நீக்கி யடியரை நித்தமுங்
காத்திடும் வேலவா.
கூறு படப்பல கோடி யவுணரின்
கூட்டத்தைக் - கண்டு

(பா-டு): 1 'வெம்பி ,மருகிக்' - (பா.ஆ.)

கொக்கரித் தண்டங் குலுங்கச்
சிரித்திடுங் கோழியாய்[1]
மாறு படப்பல வேறு வடிவொடு
தோன்றுவாள்[2] - எங்கள்
வைரவி பெற்ற பெருங்கன
லேவடி வேலவா. (ரு) 3*

**பாட்டுக்கு ஸங்கீதம்:**

*ககக ககக - ஸமம - கரிஸ - ஸமமா......கம*
*பபப பபத - மமக ஸமகா - ரீ - ஸா*

........................................

(பா-டு): 1 'கொக்கரித் தண்டங் குலுங்க நகைத்திடுஞ் சேவலாய்' - (பா.பி., அர.)
2 தோன்றுவான் (பா.ஆ.) இந்தப் பாடம் அச்சுப் பிழையாதல் வேண்டும். - பதிப்பாசிரியர்

* இந்த மூன்று பாடல்களுக்கும் தத்துவச் செறிவுடைய விளக்கத்தினைச் சற்று விரிவாகப் பாரதியாரே எழுதியுள்ளார். அரிய அந்த விளக்கத்தினைப் பின்னிணைப்பில் காணலாம். - பதிப்பாசிரியர்

# 171. அந்திப் பொழுது (காதற் பாட்டு)*

**2073.** காவென்று கத்திடுங் காக்கை - என்றன்
கண்ணுக் கினிய கருநிறக் காக்கை
மேவிப் பலகிளை மீதில்[1] - இங்கு
விண்ணிடை யந்திப் பொழுதினைக் கண்டே
கூவித் திரியுஞ் சிலவே - சில[2]
கூட்டங்கள் கூடித் திசைதொறும் போகும்.
தேவி பராசக்தி யன்னை - விண்ணிற்[3]
செவ்வொளி காட்டிப் பிறைதலைக் கொண்டாள்[4] (க)† 1

**2074.** தென்னை மரக்கிளை மீதில் - அங்கொர்‡[5]
செல்வப் பசுங்கிளி கீச்சிட்டுப் பாயும்.[6]

---

* இதே பாடல் மற்றொரு கைப்பிரதியில் பிரதிபேதங்களுடன் காணப் படுகிறது. நகவளைவுக்குள் கொடுத்திருக்கும் "காதற்பாட்டு" என்னும் தலைப்பு அதில் இடம் பெறவில்லை.

— பதிப்பாசிரியர்

1 மேவிப் பல கிளை மீதே
2 கூவிப் பறந்து திரியும் - சில
3 தேவி பராசக்தி மேற்கே - நல்ல
4 செவ்வொளி வீசிப் பிறைதலைக் கொண்டாள்
5 தென்னை மரக்கிளை மீதில் - ஒரு
6 செல்வப் பசுங்கிளி கீச்சிட்டுப் போகும்

- பாரதி திருத்தங்கள்

† பாரதியார் தமிழில் எண்கள் குறித்துள்ளார்.

(பா-டு): ‡ 'தென்னை மரக்கிளை மீதில் - அங்கோர்' - (பா.ஆ. பா.பி., அர.)

சின்னஞ் சிறிய குருவி - அது
'ஜிவ்' வென்று விண்ணிடை யூசலிட் டேகும்.
மன்னப் பருந்தொ ரிரண்டு - மெல்ல
வட்டமிட் டுப்பின் னெடுந்தொலை போகும்.
பின்னர்த்[1] தெருவிலொர் சேவல் - அதன்
பேச்சினி லே"சக்தி வேல்"என்று கூவும். (உ) 2

2075. செவ்வொளி வானில் மறைந்தே - இளந்
தேநில* வெங்கும்பொழிந்தது கண்டீர்
இவ்வள வான பொழுதில் – அவள்
ஏறிவந் தேயுச்சி மாடத்தின்மீது[2]
கொவ்வை யிதழ்நகை வீச - விழிக்
கோணத்தைக் கொண்டு நிலவைப் பிடித்தாள்
செவ்விது, செவ்விது பெண்மை - ஆ![3]
செவ்விது, செவ்விது, செவ்விது காதல். (௩) 3

2076. காதலி னாலுயிர் தோன்றும்[4] - இங்கு‡
காதலி னாலுயிர் வீரத்தி லேறும்
காதலி னாலறி வெய்தும்[5] - இங்கு‡
காதல் கவிதைப் பயிரை வளர்க்கும்
ஆதலி னாலவள் கையைப் – பற்றி

---

1 பின்னர் - (பா.ஆ., பா.பி., அர.)
இத்திருத்தம் தவறு - பதிப்பாசிரியர்
2 ஏறிவந் தேயுச்சி மாடத்தின்மீதில்
3 செவ்விது செவ்விது பெண்மை! - ஓ!.
4 காதலி னாலுயிர் வாழும்
5 காதலி னாலறி வுண்டாம் - பாரதி திருத்தங்கள்
‡'இங்குக்' என்றிருத்தல் வேண்டும்
- பதிப்பாசிரியர்

(பா-டு): * 'தேன்நிலவு' (பா. பி.)

அற்புத மென்றிரு கண்ணிடை யொற்றி
வேதனை யின்றி யிருந்தேன் – அவள்
வீணைக் குரலிலொர்[1] பாட் டிசைத் திட்டாள். (ச) 4

## காதலியின் பாட்டு*

2077. கோல மிட்டு விளக்கினை யேற்றிக்
கூடி நின்று பராசக்தி முன்னே
ஓல மிட்டுப் புகழ்ச்சிகள் சொல்வார்
உண்மை கண்டிலர் வையத்து மாக்கள்
ஞால முற்றும் பராசக்தி தோற்றம்
ஞான மென்ற விளக்கினை யேற்றிக்
கால முற்றுந் தொழுதிடல் வேண்டும்
காத லென்பதோர் கோயிலின் கண்ணே. 5†

.......................................

(பா-டு): 1 வீணைக் குரலிலோர் - (பா.ஆ., பா.பி., அர.)

*'காதலியின் பாட்டு' என்ற கிளைத்தலைப்பு பாரதியாரின் கையெழுத்தி லில்லை. மற்றொரு கைப்பிரதியில் உள்ளது.

†ஐந்தாம் பாடல் முன்னைய நான்கினின்றும் வேறுபட்ட யாப்பு. முன்னவை சிந்து; இஃது எண்சீர் விருத்தம்.

- பதிப்பாசிரியர்

## 172. காற்றுவெளி (காதற்பாட்டு)*

2078. காற்று வெளியிடைக் கண்ணம்மா – நின்றன்
காதலை யெண்ணிக் களிக்கின்றேன் - அமு
தூற்றினை யொத்த இதழ்களும் - நில
வூறித் ததும்பும் விழிகளும் – பத்து
மாற்றுப்பொன் னொத்தநின் மேனியும் – இந்த
வையத்தில் யானுள்ள மட்டிலும் – எனை
வேற்று நினைவின்றித் தேற்றியே – இங்கொர்
விண்ணவ னாகப் புரியுமே - இந்தக் (காற்றுவெளி) (க) 1

2079. நீயென தின்னுயிர் கண்ணம்மா - எந்த
நேரமு நின்றனைப் போற்றுவேன் - துயர்
போயின, போயின, துன்பங்கள் - நினைப்
பொன்னெனக் கொண்ட பொழுதிலே - என்றன்
வாயினி லேயமு தூறுதே – கண்ணம்
மாவென்ற பேர்சொலும்[1] போழ்திலே - உயிர்த்
தீயினி லேவளர் சோதியே – என்றன்
சிந்தனை யேஎன்றன், சித்தமே! – இந்தக்
(காற்றுவெளி) (உ) 2

---

* "கண்ணம்மா" – (பா. ஆ., பா.பி.)
"கண்ணம்மாவின் காதல்" - (அர.)
(பா-டு): 1 'மாவென்ற பேர் சொல்லும்' - (அர.)

## 173. முத்துமாரி

2080. உலகத்து நாயகியே - எங்கள் முத்து
மாரியம்மா, எங்கள் முத்து மாரீ*;-
உன்பாதம் சரண்புகுந்தோம் - எங்கள் முத்து
மாரியம்மா, எங்கள் முத்து மாரீ-
கலகத் தரக்கர்பலர் - எங்கள் முத்து
மாரியம்மா, எங்கள் முத்து மாரீ-
கருத்தினுள்ளே புகுந்துவிட்டார் - எங்கள் முத்து
மாரியம்மா, எங்கள் முத்து மாரீ-
பலகற்றும் பலகேட்டும் - எங்கள் முத்து
மாரியம்மா, எங்கள் முத்து மாரீ-
பயனொன்று மில்லையடி - எங்கள் முத்து
மாரியம்மா, எங்கள் முத்து மாரீ-
நிலையெங்கும் காணவில்லை - எங்கள் முத்து
மாரியம்மா, எங்கள் முத்து மாரீ-
நின்பாதம் சரண்புகுந்தோம் - எங்கள் முத்து
மாரியம்மா, எங்கள் முத்து மாரீ- 1

2081. துணிவெளுக்க மண்ணுண்டு - எங்கள் முத்து
மாரியம்மா, எங்கள் முத்து மாரீ -

* இக்கவிதையில் "எங்கள் முத்துமாரி" என வருமிடங்கள் அரசாங்க வெளியீட்டில் "எங்கள் முத்து மாரி" என்று காணப்படுகிறது.

- பதிப்பாசிரியர்

தோல்வெளுக்கச் சாம்பருண்டு - எங்கள் முத்து
மாரியம்மா, எங்கள் முத்து மாரீ -
மணிவெளுக்கச் சாணையுண்டு - எங்கள் முத்து
மாரியம்மா, எங்கள் முத்து மாரீ -
மனம்வெளுக்க வழியில்லை - எங்கள் முத்து
மாரியம்மா, எங்கள் முத்து மாரீ
பிணிகளுக்கு மாற்றுண்டு - எங்கள் முத்து
மாரியம்மா, எங்கள் முத்து மாரீ
பேதைமைக்கு[1] மாற்றில்லை - எங்கள் முத்து
மாரியம்மா, எங்கள் முத்து மாரீ -
அணிகளுக்கொ ரெல்லையில்லாய் - எங்கள் முத்து
மாரியம்மா, எங்கள் முத்து மாரீ -
அடைக்கலமிங் குனைப்புகுந்தோம் - எங்கள் முத்து
மாரியம்மா, எங்கள் முத்து மாரீ! 2

---

*(பா-டு): 1 'பேதமைக்கு' - (பா.பி.)*

# 174. ஜயமுண்டு*

பல்லவி

2082. ஜயமுண்டு, பயமில்லை, மனமே - இந்த
ஜன்மத்திலே[1] விடுதலையுண்டு, நிலையுண்டு; (ஜய) *1*

அநுபல்லவி

2083. பயனுண்டு பக்தியினாலே - நெஞ்சிற்
பதிவுற்ற குலசக்தி சரணுண்டு; பகையில்லை (ஜய) *2*

சரணங்கள்

2084. புயமுண்டு குன்றத்தைப் போலே - சக்தி
பொற்பத முண்டதன்[2] மேலே
நியமமெல் லாம்சக்தி நினைவன்றிப் பிறிதில்லை;
நெறியுண்டு; குறியுண்டு; குலசக்தி வெறியுண்டு. (ஜய) *3*

---

**'ஜீவன் முக்தி' - (பா.ஆ., பா.பி.) - இப்பதிப்புகளில் 'ஜயமுண்டு' என்பது மறுதலைப்பாகத் தரப்பட்டுள்ளது. 'வேலன் பாட்டு' (168) மூன்றாவது செய்யுளின் விளக்கத்திலே "...... ஜீவன் முக்தி நிலைமையிலே சேர்ப்பவன். 'ஜீவன் முக்தி' என்ற மற்றொரு பாட்டில் இந்த விஷயம் விவரிக்கப்படும்" என்று பாரதியார் எழுதியுள்ளது இங்கு நினைவு கூரத்தக்கது.*

*- பதிப்பாசிரியர்*

*மேற்குறித்த பதிப்புகளில் ராகம் - கமாஸ், தாளம் - ஆதி என ராக, தாளக் குறிப்புகள் உள்ளன.* *- பதிப்பாசிரியர்*

*பா-டு): 1 'ஜன்மத்தில்' - (பா.பி.)*
*2 பொற்பாத முண்டு - (பா.பி., அர.)*

**2085.** மதியுண்டு செல்வங்கள் சேர்க்கும் - தெய்வ
வலியுண்டு தீமையைப் பேர்க்கும்
விதியுண்டு; தொழிலுக்கு விளைவுண்டு; குறைவில்லை;
விசனப்பொய்க் கடலுக்குக் குமரன்கைக் கணையுண்டு.
(ஜய) 4

**2086.** அலைபட்ட[1] கடலுக்கு மேலே - சக்தி
அருளென்னுந் தோணியி னாலே
தொலையெட்டிக் கரையுற்றுத் துயரற்று, விடுபட்டுத்
துணிவுற்ற குலசக்தி சரணத்தில் முடிதொட்டு (ஜய) 5

..........................................

*(பா-டு): 1 'அலைப்பட்ட' - (அர.)*

## 175. ஜய பேரிகை

பல்லவி

**2087.** ஜய பேரிகை கொட்டடா – கொட்டடா!
ஜய பேரிகை கொட்டடா!

சரணங்கள்

**2088.** பயமெனும் பேய்தனை யடித்தோம் - பொய்மைப்[1]*
பாம்பைப்[2] பிளந்துயிரைக் குடித்தோம்
வியனுல கனைத்தையு மமுதென நுகரும்
வேதவாழ் வினைக்கைப் பிடித்தோம் – (ஜய பேரிகை) 2

**2089.** இரவியி னொளியிடைக் குளித்தோம் – ஒளி
யின்னமு தினையுண்டு களித்தோம்.
கரவினில் வந்துயிர்க் குலத்தினை யழிக்கும்
காலன் நடுநடுங்க விழித்தோம் - (ஜய பேரிகை) 3

**2090.** காக்கை, குருவி யெங்கள் ஜாதி - நீள்
கடலு மலையு மெங்கள் கூட்டம்
நோக்குந் திசையெலாம் நாமன்றி வேறில்லை:
நோக்க,நோக் கக்களி யாட்டம் - (ஜய பேரிகை) 4

.......................................

* 'பொய்ம்மை' என்பது செவ்விய வடிவம்
(பா-டு): 1 'பயமெனும் பேய்தனை யடித்தோம் - துன்பப்' - (பா.பி.)
2 'பாம்பை' - (பா.ஆ.)

## 176. கிளித்தூது*

### (முருகக் கடவுள்மீது பாடியது)

பல்லவி

2091. சொல்ல வல்லா யோ? - கிளியே
சொல்ல நீ வல்லாயோ?
வல்ல வேல் முருகன் - தனை யிங்கு†
வந்து கலந்து மகிழ்ந்து குலா வென்று (சொல்ல) 1

சரணங்கள்

2092. தில்லை யம்பலத்தே - நடனம்
செய்யு மமரர்பிரான் - அவன்
செல்வத் திரு மகனை - இங்கு வந்து
சேர்ந்து கலந்து மகிழ்ந் திடுவா யென்று (சொல்ல) 2

2093. அல்லிக்[1] குளத்தருகே - ஒரு நாள்
அந்திப் பொழுதினிலே - அங்கொர்

---

* 'முருகக் கடவுள்மீது கிளித்தூது' - (பா.ஆ., பா.பி.) 'கிளிவிடுதூது - (அர.)

† 'வல்லவேல் முருகன் - தனையிங்கு
'வந்து கலந்து மகிழ்ந்து குலாவென்று' என்பது பா. ஆ. பதிப்பில் அனு பல்லவியாகக் குறிக்கப்பட்டுள்ளது.

- பதிப்பாசிரியர்

(பா-டு): 1 'அல்லி' (பா.ஆ.) - இத்திருத்தம் தவறு.

- பதிப்பாசிரியர்

முல்லைச் செடி யதன்பாற் – செய்த வினை
முற்று மறந்திடக் கற்ற தென்னே யென்று (சொல்ல) 3

2094. பாலை வனத்திடையே - தனைக் கைப்
பற்றி நடக்கையிலே - தன் கை
வேலின் மிசை யாணை - வைத்துச் சொன்ன
விந்தை மொழிகளைச் சிந்தை செய்வா யென்று
(சொல்ல) 4

## 177. வண்டிக்காரன் பாட்டு

### (அண்ணனுக்கும் தம்பிக்கும் ஸம்பாஷணை)*

**2095.** “காட்டு வழிதனிலே - அண்ணே!
கள்ளர் பயமிருந்தால்?” “எங்கள் -
வீட்டுக் குலதெய்வம் - தம்பி!
வீரம்மை காக்குமடா!” *1*

**2096.** “நிறுத்து வண்டியென்றே - கள்ளர்
நெருக்கிக் கேட்கையிலே?” - “எங்கள்
கறுத்த மாரியின்பேர் - சொன்னாற்
காலனு மஞ்சுமடா!” *2*

---

*உலக வாழ்க்கையே கானகம்; அங்கு கள்ளர் யமதூதர்; அண்ணன் - குரு; தம்பி – சீடன். வீரம்மை, காளி என்பன ஜகத்தின் மூலசக்திக்குரிய நாமங்கள்.
– பாரதியார் குறிப்பு

## 178. கற்பனை யூர்

(இங்கிலிஷ் பாஷையிலிருந்து மொழிபெயர்க்கப்பட்டது)*

2097. கற்பனையூ ரென்ற நகருண்டாம் - அங்கு[1]
கந்தர் வர்விளை யாடுவராம்.
சொப்பனநா டென்ற சுடர்நாடு - அங்கு[2]
சூழ்ந்தவர் யாவர்க்கும் பேருவகை! (க) 1

2098. திருமணையிது கொள்ளைப் போர்க்கப்பல் - இது
ஸ்பானியக் கடலில் யாத்திரைபோம்;
வெருவுற மாய்வார் பலர்கடலில் - நாம்
மீளவு நம்மூர் திரும்பு முன்னே! (உ) 2

2099. அந்நகர் தனிலோ ரிளவரசன் - நம்மை
அன்பொடு கண்டுரை செய்திடுவான்,

---

* இதே பாடல் மற்றொரு படியில் ஒருசில பிரதிபேதங்களுடன் கையெழுத்து வடிவில் உள்ளது. அப் பிரதியில், பாரதியார், "ஆங்கிலத்தில் ஜான் ஸ்கர் என்ற புலவன் "நக்ஷத்ர தூதன்" - Herald of the Star - என்ற பத்திரிகையில் ப்ரசுரித்த "The Town of Let's Pretend" என்ற பாட்டின் மொழி பெயர்ப்பு' என எழுதியுள்ளார்.

- பதிப்பாசிரியர்

1 'அங்குக்' என்றிருத்தல் வேண்டும்.

- பதிப்பாசிரியர்

2 'அங்குச்' என்றிருத்தல் வேண்டும்.

- பதிப்பாசிரியர்

மன்னவன் முத்தமிட் டெழுப்பிடவே - அவன்
மனைவியு மெழுந்தங்கு வந்திடுவாள். (௩) 3

2100. எக்கால மும்பெரு மகிழ்ச்சியங்கே[1] –
எவ்வகைக் கவலையும்[2] போருமில்லை;
பக்குவத் தேயிலை நீர்குடிப்போம் - அங்கு*
பதுமைகைக் கிண்ணத்தி[3] லளித்திடவே (௪) 4

2101. இன்னமு திற்கது நேராகும் – நம்மை
யோவான் விடுவிக்க வருமளவும்,
நன்னக ரதனிடை வாழ்ந்திடுவோம் - நம்மை
நலித்திடும் பேயங்கு வர்ராதே.[4] (௫) 5

2102. குழந்தைகள் வாழ்ந்திடும் பட்டணங்காண் - அங்கு†
கோல்,பந்து யாவிற்கு முயிருண்டாம்.
அழகிய பொன்முடி யரசிகளாம் - அன்றி
அரசிளங் குமரிகள் பொம்மையெலாம். (௬) 6

2103. செந்தோ லசுரனைக் கொன்றிடவே - அங்கு‡
சிறுவிற கெல்லாம் சுடர்மணிவாள்.
ஸந்தோ ஷத்துடன் செங்கலையும் - அட்டைத்
தாளையுங் கொண்டங்கு மனைகட்டுவோம். (௭) 7

---

*'அங்குப்' †'அங்குக்' ‡'அங்குச்' என்றிருத்தல் வேண்டும்.

1 எக்காலமும் பெரு மகிழ்ச்சி யங்கே – நமக்

2 கெவ்விதக் கவலையும்

3 பாவையின் கிண்ணத்தி

4 நலித்திடும் பேயங்கு வாராது!

—இவை நான்கும் பாரதியாரின் மற்றொரு பிரதியில் உள்ள பாடம்.

(பா-டு): 'நலிந்திடும் பேயங்கு வாராதே' - (அர.)

**2104.** கள்ளரவ் வீட்டினுட் புகுந்திடவே - வழி
காண்பதி லாவகை செய்திடுவோம் - ஓ[1]
பிள்ளைப் பிராயத்தை இழந்தீரே! - நீர்
பின்னுமங் நிலைபெற வேண்டீரோ? (அ) 8

**2105.** குழந்தைக ளாட்டத்தின்[2] கனவையெல்லாம் - அந்தக்
கோலநன் னாட்டிடைக்[3] காண்பீரே!
இழந்தநல் லின்பங்கள் மீட்குறலாம்[4] - நீர்
ஏகுதிர் கற்பனை நகரினுக்கே. (சு) 9

இதன் பொருள்:-

கற்பனை நகரமென்பது சித்தத்தில் குழந்தைநிலை பெறுவதை இங்கு குறிப்பிடுகிறது. யோவான் என்பது குமாரதேவனுடைய பெயர். அக்கடவுள் மனிதனுக்குள்ளே நிலைபெற்று, மனிதன் மோக்ஷமடைவதற்கு முன்னர்க் குழந்தைப் பருவத்தை அடைய வேண்டுமென்று யேசு கிறிஸ்து நாதர் சொல்லியிருக்கும் பொருளை இப்பாடல் குறிப்பிடுகிறது. கவலைகளை முற்றுந் துறந்துவிட்டு உலகத்தை வெறுமே லீலையாகக் கருதினாலன்றி மோக்ஷ மெய்தப்படாது.*

---

*இப்பாடலுக்கு எழுதப்பட்ட பொருள் குறிப்பு மற்றொரு கைப்பிரதியில் இடம் பெறவில்லை. ஆங்கில மூலத்தைப் பாரதி பிரசுராலயம் வெளியிட்டுள்ளது. இதைப் பின்இணைப்புப் பகுதியில் காணலாம். — பதிப்பாசிரியர்

1 காண்ப தில்லா வகை செய்திடுவோம்
2 குழந்தைக ளாட்டத்துக்
3 கோலநன் னாட்டினிற்
4 இழந்தநல் லின்பங்கள் மீட்டுறலாம்
- இந்நான்கும் பாரதியாரின் மற்றொரு கைப்பிரதியின் பாடங்கள்.

## 179. காளிப் பாட்டு

**2106.** யாது மாகி நின்றாய் – காளீ*
எங்கு நீநி றைந்தாய்;
தீது நன்மை யெல்லாம் - காளீ
தெய்வ லீலை யன்றோ?
பூத மைந்து மானாய் - காளீ
பொறிக ளைந்து மானாய்[1]
போத மாகி நின்றாய் - காளீ
பொறிக ளைக்க டந்தாய்[2] 1

**2107.** இன்ப மாகி விட்டாய் - காளீ
எண்ணு ளேபு[3] குந்தாய்;
பின்பு நின்னை யல்லால்
பிறிது நானு முண்டோ?
அன்பு தந்து விட்டாய்[4] - காளீ
ஆண்மை தந்து விட்டாய்
துன்ப நீக்கி விட்டாய் - காளீ
துயர ழித்து விட்டாய்[5] 2

---

* 'காளீ' என்ற சொல் தற்காலப் பதிப்புகளில் 'காளி' என்றே அச்சாகி யுள்ளது. - பதிப்பாசிரியர்

(பா-டு): 1 'பொறிக ளைக்க டந்தாய்' – (பா.ஆ., பா.பி., அர.)
2 'பொறியை விஞ்சி நின்றாய்' - (பா.ஆ., பா.பி., அர.)
பொறியை மிஞ்சி நின்றாய்' – (கவிமணி)
3 'என்னுளே (பா.ஆ., பா.பி., அர.)
4 'அன்ப ளித்து விட்டாய்'- (பா.,ஆ., பா.பி., அர.)
5 'தொல்லை போக்கி விட்டாய்'- (பா.ஆ., பா.பி., அர.)

# 180. ஓம் சக்தி*

2108. நெஞ்சுக்கு நீதியுந் தோளுக்கு வாளும்
நிறைந்த சுடர்மணிப்பூண்.
பஞ்சுக்கு நேர்பல துன்பங்க ளாமிவள்
பார்வைக்கு நேர்பெருந்தீ
வஞ்சனை யின்றிப் பகையின்றிச் சூதின்றி
வையக மாந்தரெல்லாம்
தஞ்சமென் றேயுரைப் பீர்:சக்தி ஓம்,சக்தி,[1]
ஓம்சக்தி, ஓம்சக்தி,ஓம்''[2] 1

2109. நல்லதுந் தீயதும் செய்திடும் சக்தி
நலத்தை நமக்கிழைப்பாள்.
அல்லது நீங்குமென் றேயுல கேழும்
அறைந்திடு வாய்முரசே!
சொல்லத் தகுந்த பொருளன்று காண்!இங்கு
சொல்லு மவர்தமையே
அல்லல் கெடுத்தம ரர்க்கிணை யாக்கிடும்;
ஆம்;சக்தி ஓம்,சக்திஓம்,[3]

........................

* முதல் மூன்று கவிகள் கையெழுத்துப் படியில் உள்ளன. அதில் கண்ட பாடங்களே இங்கே தரப்பெற்றுள்ளன. 'வேதரிஷிகளின் கதை'யில் பாரதியார் எழுதிச் சேர்த்தவை இந்தப் பாடல்கள்.

"தனத தனத தனத தனத தனத தனத தாம்"

என்று தாளம் போட்டுக்கொண்டு மேற்படி பாட்டை இஷ்டமான ராகத்தில் பாடலாம் – இது பாரதியாரின் அடிக்குறிப்பு.

(பா.பி. பதிப்பு - 1924 - பக். 53)

- பதிப்பாசிரியர்.

(பா-டு): 1 'தஞ்சமென்றே யுரைப்பீர்: அவள்பேர் சக்தி'– (பா.ஆ., பா.பி., அர.)

2 ஓம் சக்தி, ஓம் சக்தி, ஓம் (பா.ஆ., பா.பி., அர.)

3 ஓம்; சக்தி ஓம், சக்தி ஓம் (பா.ஆ., பா.பி., அர.)

2110. நம்புவ தேவழி யென்ற மறைதன்னை
நாமின்று நம்பி விட்டோம்.
கும்பிட்டெந் நேரமும், "சக்தி"யென் றால்உனைக்
கும்பிடு வேன்மன மே.
அம்புக்குந் தீக்கும் விடத்துக்கும் நோவுக்கும்
அச்சமில் லாதபடி,
உம்பர்க்கு மிம்பர்க்கும் வாழ்வுத ரும்பதம்
ஓம்சக்தி, ஓம்சக்தி,ஓம். 3

2111. பொன்னைப் பொழிந்திடு மின்னை வளர்த்திடு
போற்றி யுனக்கிசைத்தோம்
அன்னை பராசக்தி யென்றுரைத் தோந்தளை
யத்தனை யுங்களைந்தோம்;
சொன்ன படிக்கு நடந்திடு வாய்,மன
மேதொழில் வேறில்லை,காண்;
இன்னும தேயுரைப் போம்சக்தி ஓம்சக்தி
ஓம்சக்தி, ஓம்சக்தி,ஓம். 4

2112. வெள்ளை மலர்மிசை வேதக் கருப்பொரு
ளாக விளங்கிடுவாய்!
தெள்ளு கலைத்தமிழ் வாணி, நினக்கொரு
விண்ணப்பஞ் செய்திடுவேன்.
எள்ளத் தனை[1]பொழு தும்பய னின்றி
யிராதென்றன் நாவினிலே
வெள்ள மெனப்பொழி வாய்:சக்தி வேல்,சக்தி
வேல்சக்தி, வேல்,சக்திவேல்! 5

(பா·டு): 1 'எள்ளத்தனைப்' - (அர.)

## 181. ஊழிக் கூத்து*

2113. வெடிபடு மண்டத் திடிபல தாளம் போட - வெறும்
வெளியி லிரத்தக் களியொடு பூதம்பாடப்[1] - பாட்டின்
அடிபடுபொருளுன் அடிபடு மொலியிற் கூடக் – களித்
தாடுங்காளீ, சாமுண் டீ,கங் காளீ!
அன்னை, அன்னை,
ஆடுங் கூத்தை நாடச் செய்தா யென்னை. 1

2114. ஐந்துறு பூதம் சிந்திப்போயொன் றாகப் - பின்னர்
அதுவும் சக்திக் கதியில் மூழ்கிப் போக - அங்கே
முந்துறு மொளியிற் சிந்தைநழுவும் வேகத் - தோடே
முடியா நடனம் புரிவாய், அடு தீ சொரிவாய் –
அன்னை, அன்னை,
ஆடுங் கூத்தை நாடச் செய்தா யென்னை. 2

2115. பாழாம் வெளியும் பதறிப் போய்மெய் குலையச் - சலனம்
பயிலும் சக்திக் குலமும் வழிகள் கலைய - அங்கே
ஊழாம் பேய்தான்; "ஓஹோ ஹோ"வென் றலைய - வெறித்
துறுமித் திரிவாய், செறுவெங்[2] கூத்தே புரிவாய்

---

* கையெழுத்துப் படியில் முதல் மூன்று பாடல்களே உள்ளன.
– பதிப்பாசிரியர்

(பா–டு): 1 வெளியி லிரத்தக் களியொடு பூதம் பாட - (அர.)
2 'துறுமித் திரிவாய், செருவெங்' – (பா.பி., அர.)

அன்னை, அன்னை,
ஆடுங் கூத்தை நாடச் செய்தா யென்னை. 3

2116. சக்திப் பேய்தாங்[1] தலையொடு தலைகள் முட்டிச் - சட்டச்
சடசட சட்டென் றுடைபடு தாளங் கொட்டி - அங்கே
எத்திக் கினிலும் நின்விழி யனல்போ யெட்டித் - தானே
எரியுங் கோலங் கண்டே சாகுங் காலம்

அன்னை, அன்னை,
ஆடுங் கூத்தை நாடச் செய்தா யென்னை. 4

2117. காலத் தொடுநிர் மூலம் படுமூ வுலகும் – அங்கே
கடவுள் மோனத் தொளியே தனியா யிலகும் – சிவன்
கோலங் கண்டுன் கனல்செய் சினமும் விலகும் - கையைக்
கொஞ்சித் தொடுவாய், ஆநந் தக்கூத் திடுவாய்,[2]

அன்னை, அன்னை,
ஆடுங் கூத்தை நாடச் செய்தா யென்னை. 5

(பா-டு): 1 'சத்திப்பேய்தான்' – (பா.பி., அர.)
2 'கொஞ்சித் தொடுவாய், ஆனந்தக் கூத்திடுவாய்' - (பா.பி., அர.)

## 182. ஸோமதேவன் புகழ்

பல்லவி*

**2118.** ஜய ஸோம, ஜய ஸோம, ஜய ஸோம தேவா
ஜய ஜயா![1] 1

சரணம்

**2119.** நயமுடைய இந்திரனை நாயகத் திட்டாய்;
வயமிக்க அஸுரரின் மாயையைச் சுட்டாய்;
வியனுலகி லாநந்த விண்ணிலவு பெய்தாய்
துயர்நீங்கி யென்னுளஞ் சுடர்கொளச் செய்தாய்
மயல்கொண்ட காதலரை மண்மிசைக் காப்பாய்
உயவேண்டி யிருவருளம் ஒன்றுறக் கோப்பாய்.
புயலிருண் டேகுமுறி யிருள்வீசி வரல்போற்
பொய்த்திரள் வருமதைப் புன்னகையில் மாய்ப்பாய். 2

---

* *மகாகவி பாரதியார் இப்பாடலுக்குச் சங்கீதம் அமைக்கக் கருதி, "இதற்கு ஸங்கீதம்" என்று எழுதியிருக்கிறார்; ஆனால், இசைக்குறிப்பு ஏதும் தொடர்ந்து எழுதவில்லை.*

*- பதிப்பாசிரியர்*

*(பா-டு): 1 'ஜய ஜய' - (பா.ஆ., பா.பி., அர.)*

## 183. ஞாயிறு - (ஸூர்ய ஸ்துதி)

2120. கடலின் மீது கதிர்களை வீசிக்
கடுகி வான்மிசை ஏறுதி யையா,
படரும் வானொளி யின்பத்தைக் கண்டு
பாட்டுப் பாடி மகிழ்வன புட்கள்.
உடல்ப ரந்த கடலுந்த னுள்ளே
ஒவ்வொர் நுண்டுளி யும்விழி யாகச்
சுடரு நின்றன் வடிவையுட் கொண்டே
சுருதி பாடிப் புகழ்கின்ற திங்கே. 1

2121. என்ற னுள்ளங் கடலினைப் போலே
எந்த நேரமு நின்னடிக் கீழே
நின்று தன்னகத் தொவ்வொ ரணுவும்
நின்றன் ஜோதி நிறைந்தது வாகி
நன்று வாழ்ந்திடச் செய்குவை யையா,
ஞாயிற் றின்க ணொளிதருந் தேவா
மன்று வானிடைக் கொண்டுல கெல்லாம்
வாழ நோக்கிடும் வள்ளிய தேவா. 2

2122. காதல் கொண்டனை போலு மண்மீதே!
கண்பிறழ் வின்றி நோக்குகின் றாயே.

.......................................

* 'ஞாயிறு வணக்கம்' - (அர.)

மாதர்ப் பூமியு நின்மிசைக் காதல்
மண்டி னாளிதி லையமொன் றில்லை.
சோதி கண்டு முகத்தி லிவட்கே
தோன்று கின்ற புதுநகை யென்னே!
ஆதித் தாய்தந்தை நீவி ருமக்கே
ஆயி ரந்தரம் அஞ்சலி செய்வேன். 3

## 184. கிளிப் பாட்டு

2123. திருவைப் பணிந்துநித்தம்
செம்மைத் தொழில்புரிந்து
வருக வருவதென்றே - கிளியே
மகிழ்வுற் றிருப்போமடி[1] 1

2124. வெற்றி செயலுக்குண்டு
விதியி னியமமென்று
கற்றுத் தெளிந்தபின்னும் - கிளியே
கவலைப் படலாகுமோ? 2

2125. துன்ப நினைவுகளும்
சோர்வும் பயமுமெல்லாம்
அன்பி லழியுமடி - கிளியே
அன்புக்க ழிவில்லைகாண். 3

2126. ஞாயிற்றை யெண்ணியென்றும்
நடுமை நிலைபயின்று
ஆயிர மாண்டுலகில் - கிளியே
அழிவின்றி வாழ்வோமடி. 4

.......................................

(பா-டு): 1 மகிழ்வுற் றிருப்போமடி! (அர.)

**2127.** தூய பெருங்கனலைச்
சுப்பிர மண்ணியனை
நேயத் துடன்பணிந்தால் – கிளியே
நெருங்கித் துயர்வருமோ? 5

## 185. கோவிந்தன் பாட்டு

2128. கண்ணிரண்டும் இமையாமல் செந்நிறத்து
மெல்லிதழ்ப்பூங் கமலத் தெய்வப்[1]
பெண்ணிரண்டு விழிகளையு நோக்கிடுவாய்
கோவிந்தா பேணி னோர்க்கு
நண்ணிரண்டு பொற்பாத மளித்தருள்வாய்
சராசரத்து நாதா நாளும்
எண்ணிரண்டு கோடியினு மிகப்பலவாம்
வீண்கவலை யெளிய னேற்கே. 1

2129. எளியனேன் யானெனலை எப்போது
போக்கிடுவாய், இறைவ னேயிவ்
வளியிலே பறவையிலே மரத்தினிலே
முகிலினிலே வரம்பில் வான
வெளியிலே கடலிடையே மண்ணகத்தே
வீதியிலே வீட்டி லெல்லாம்
களியிலே கோவிந்தா நினைக்கண்டு
நின்னொடுநான் கலப்ப தென்றோ? 2

2130. என்கண்ணை மறந்துனிரு கண்களையே
யென்னகத்தில் இசைத்துக் கொண்டு

........................................

(பாடு): 1 'மெல்லிதழ்ப்பூங் கமலத் தெய்வம்' - (பா. ஆ.)

நின்கண்ணாற் புவியெல்லா நீயெனவே
நான்கண்டு நிறைவு கொண்டு
வன்கண்மை மறதியுடன் சோம்பர்முதற்
பாவமெலா மடித்து[1] நெஞ்சிற்
புன்கண்போய் வாழ்ந்திடவே கோவிந்தா,
எனக்கமுதம் புகட்டு வாயே. 3

(பா-டு): 1 'பாவமெலர் மடிந்து' – (பா.பி., அர.)

## 186. விடுதலைப் பாட்டு*

2131. இந்தப் புவிதனில் வாழும ரங்களும்
இன்ப நறுமலர்ப் பூஞ்செடிக் கூட்டமும்
அந்த மரங்களைச் சூழ்ந்த கொடிகளும்
ஔடத மூலிகை பூண்டுபுல் யாவையும்
எந்தத் தொழில்செய்து வாழ்வன வோ[1]

...... ...... ...... ...... ...... ......
...... ...... ...... ...... ...... ......
...... ...... ...... ...... ...... .....

2132. மானுடரு ழாவிடினும் வித்துநடா விடினும்
வரம்புகட்டா விடினுமன்றி நீர்பாய்ச்சா விடினும்
வானுலகு நீர்தருமேல் மண்மீது மரங்கள்
வகைவகையா நெற்கள்புற்கள் மலிந்திருக்கு மன்றே?

---

* 'விடுதலை - (பா. ஆ., பா. பி.). 'அன்பு செய்தல்' - (அர.)

1 மூன்றாம் அடியின் நான்காவது சீரில் ஓர் அசை குறைகிறது. இதன் பின் ஒன்றரை அடிகள் கிடைக்கவில்லை.

-பதிப்பாசிரியர்

இரண்டு பாடல்களும் எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தங்களே; ஆனால், சீர் அமைப்பிலே வேறுபடுவன.

- பதிப்பாசிரியர்

யானெதற்கு மஞ்சுகிலேன் மானுடரே நீவிர்
　　என்மதத்தைக் கைக்கொண்மின் பாடுபடல் வேண்டா
ஊனுடலை வருத்தாதீர் உணவியற்கை கொடுக்கும்
　　உங்களுக்குத் தொழிலிங்கே அன்புசெய்தல் கண்டீர்
2

## 187. அம்மாக்கண்ணு பாட்டு

2133. "பூட்டைத் திறப்பதுங் கையாலே – நல்ல
மனந்தி றப்பது மதியாலே".
பாட்டைத் திறப்பது பண்ணாலே - இன்ப
வீட்டைத் திறப்பது பெண்ணாலே. *1*

2134. ஏட்டைத் துடைப்பது கையாலே – மன
வீட்டைத் துடைப்பது மெய்யாலே
வேட்டை யடிப்பது வில்லாலே - அன்புக்
கோட்டை பிடிப்பது சொல்லாலே. *2*

2135. "காற்றை யடைப்பது மனதாலே" – இந்தக்
காயத்தைக் காப்பது செய்கையிலே.
சோற்றைப் புசிப்பது வாயாலே - உயிர்
துணிவுறுவது தாயா லே. *3*

## 188. கண்ணம்மா - அங்க வர்ணனை*

2136. எங்கள் கண்ணம்மா நகைபுது ரோஜாப்பூ.
எங்கள் கண்ணம்மா விழிஇந்த்ர நீலப்பூ.
எங்கள் கண்ணம்மா முகஞ்செந் தாமரைப்பூ.
எங்கள் கண்ணம்மா நுதல்பால ஸூர்யன்.

சரணங்கள்

2137. எங்கள் கண்ணம்மா எழில் மின்னலை நேர்க்கும்
எங்கள் கண்ணம்மா புருவங்கள் மதன் விற்கள்.
திங்களை மூடிய பாம்பினைப் போலே[1]
செறிகுழல்; இவள் நாசி எட்பூ. (எங்கள்) 1

2138. மங்கள வாக்கு நித்யானந்த ஊற்று
மதுர வாய் அமிர்தம் இதழமிர்தம்.
ஸங்கீத மென்குரல் ஸரஸ்வதி வீணை.
சாய லரம்பை; சதுர் அயிராணி. (எங்கள்) 2

2139. இங்கித நாத நிலய[2] மிருசெவி
சங்கு நிகர்த்த கண்டம் அமிர்த சங்கம்.
மங்களக் கைகள் மஹா சக்தி வாஸம்.
வயிறாலிலை இடை அமிர்த வீடு. (எங்கள்) 3

---

* 'கண்ணம்மாவின் எழில்' - (அர.)
(பா-டு): 1 'திங்களை மூடிய பாம்பினைப் போல' - (பா.பி.)
2 'இங்கித நாத நிலைய' - (பா.பி., அர.)

2140. சங்கரனைத் தாங்கு நந்தி பதசதுரம்
தாமரை யிருதாள்; லக்ஷ்மீ பீடம்
பொங்கித் ததும்பித் திசை யெங்கும் பாயும்
புத்தன்பும் ஞானமும் மெய்த்திருக் கோலம். (எங்கள்) 4

*ஸபாமக - ரிபாமக - ரிக மகா காகா -*
*ரிகரி - ஸாஸஸ - ஸாஸா ஸஸ - ஸாஸா*
*ரீமாப - பநீத - பதாப - பாபா -*
*ரிமாப - பதாப - மபாம – காரீ*

செஞ்சுருட்டி ராகம் - ரூபகம் "தத்தரிகிட தத்தரிகிட" என்ற கதி*.

*பிற பதிப்புகள் ராக, தாளங்கள் இவையென்மட்டுமே குறித்துள்ளன. பாரதியாரே தந்துள்ள சுரக் குறிப்பு வேறு பதிப்புகளில் இல்லை.
- பதிப்பாசிரியர்

## 189. விடுதலை! விடுதலை! விடுதலை!*

2141. பறைய ருக்கு மிங்கு தீயர் புலைய ருக்கும் விடுதலை:
பரவ ரோடு குறவ ருக்கு மறவ ருக்கும் விடுதலை!
திறமை கொண்ட தீமை யற்ற தொழில்பு ரிந்து யாவரும்,
தேர்ந்த கல்வி, ஞான மெய்தி வாழ்வ மிந்த நாட்டிலே. *1*

2142. ஏழை யென்றும் அடிமை யென்றும் எவனு மில்லை; ஜாதியில்
இழிவு கொண்ட மனித ரென்ப திந்தி யாவில் இல்லையே.
வாழி கல்வி செல்வ மெய்தி மனம கிழ்ந்து கூடியே,
மனிதர் யாரு மொருநிகர் - ஸமான மாக வாழ்வமே. *2*

2143. மாதர் தம்மை யிழிவுசெய்யு மடமையைக் கொளுத்து வோம்
வைய வாழ்வு தன்னிலெந்த வகையினும்[1] நமக்குள்ளே;
தாத ரென்ற நிலைமைமாறி யாண்களோடு பெண்களும்
சரி, நிகர்,[2] ஸமான மாக வாழ்வ மிந்த நாட்டி லே. *3*

*ரிகபதா - பமகரி - ஸநிரிஸா*
*ரிகப மாக - காரிரீரி – ரிகப பாப பாப பா -*
*ரிகப பாத - ஸாஸஸாஸ கபதஸாஸ் - ஸாஸஸா -*

.........................................

*'விடுதலை' — பிற பதிப்புகள்.

*(பா-டு): 1 'வையவாழ்வு தன்னிலெந்த வகையிலும்' - (பா.பி.)*
*2 'ஸரிநிகர்' - (பா.பி., அர.)*

ததஸஸாநி - பாமகாரி - ஸஸஸ ஸாஸ - ஸாநிதா -
ரீரிஸாஸ - ஸாநி தாத - பாமகாரீ - ரீகபா -
பாதஸா - தாஸரீ - ஸாரிகா - *

---

* பாரதி ஆச்ரமப் பதிப்பு முதலாக எப்பதிப்பிலும் பாரதியாரின் கரக் குறிப்பு இடம் பெறவில்லை. 'ராகம் - பிலகரி' என்றுமட்டுமே குறித்துள்ளனர்.
— பதிப்பாசிரியர்

# 190. வள்ளிப் பாட்டு

கரஹரப்பிரியை - ஆதிதாளம்

பல்லவி

2144. உனையே மயல் கொண்டேன் - வள்ளீ
உவமையி லரியாய், உயிரினு மினியாய்! (உனையே) 1

சரணம்

2145. எனை யாள்வாய், வள்ளீ, வள்ளீ
இள மயி லே, யென் இதய மலர் வாழ் வே
கனி யே சுவை யுறு தேனே,
கல்வியிலே அமுதனை யாய் - கலவியி லே யமுதனை யாய்
தனியே - ஞான விழியாய் - நிலவினில்
நினை மருவி, வள்ளீ, வள்ளீ -
நீ யாகிட வே வந்தேன். 2

பல்லவி

*ரீகாகரி ரீஸா ஸாநி – பநிஸரிகரிஸநி- பநி ஸரி காரீ*

சரணம்

*ஸம்மம்மா - கமாகமா - கபபதநீதா - கமபதநி பாப்பா - ஸாஸ நிதப - மாமா -*

---

*1920 (பின்னிணைப்புக் காண்க)*

கமபதநீ - மபதநிபா - கமபதநீ - மபதநிபா -
ஸாபா - ஸநிதபமா – கமா, கமா
கமபதநீ - ரீநீரீநீ - ஸரிகாகரி ஸாஸாஸா*

---

* இப்பாடலை முதலில் பதிப்பித்த பாரதி ஆச்ரமத்தார் பல்லவி - சரணம் - இவற்றிற்குரிய ஸ்வரவரிசைகளைப் பதிப்பிக்காததால், பிற பதிப்புகளிலும் ஸ்வரவரிசைகள் இடம்பெறவில்லை.

- பதிப்பாசிரியர்

## 191. சாகாவரம்

பல்லவி

2146. சாகா வர மருள்வாய், ராமா
சதுர் மறை நாதா - ஸரோஜ பாதா 1

சரணங்கள்

2147. ஆகாசந் தீ கால் நீர், மண்,
அத்தனை பூதமும் ஒத்து நிறைந்தாய்
ஏகாமிர்த மாகிய நின் தாள்
இணைசர ணென்றால் இதுமுடி யாதா? (சாகா) 2

2148 வாகார் தோள் வீரா, தீரா,
மன்மத ரூபா, வானவர் பூபா,
பாகார் மொழி ஸீதையின் மென் றோள்
பழகிய மார்பா! பதமலர் சார்பாச் (சாகா) 3

2149. நித்யா, நிர்மலா, ராமா
நிஷ் களங்கா, ஸர்வாதாரா,
ஸத்யா, ஸநாதனா, ராமா
சரணம், சரணம் சரண முதாரா. (சாகா) 4

பல்லவி

*ரீகா கரி ரீஸா ஸா நீ - பநி ஸரி கரி ஸநி பநி ஸரீகாரீ-*

**சரணம்**

ரிரீஸா ஸாஸாநீ - ஸாரி ஸகாகா - ஸாரி ஸரீகா-
மா பாபா - மாமம மாமா - பத பத தாதா - பத
பத தாநீ-

**சரணத்துக்கு ஸ்வரம்**

நீநீ – ஸாஸா – நீநீ
ஸாரி – ஸரீரிரி – ஸாரி ஸரீகா
ஸபாபம – ரீகரி - ஸாஸா
ஸரி ஸரி ரிரீ – ஸரி ஸரி ரீகா*

---

*பாரதி ஆச்ரமப் பதிப்பினை ஆதாரமாகக் கொண்டமையால் எந்தப் பதிப்பிலும் இந்த சுர வரிசைகள் இடம் பெறவில்லை இராக, தாளங்களின் பெயர் இல்லை.

— பதிப்பாசிரியர்

## 192. செல்லம்மா பாட்டு*

("நின்னையே")

பல்லவி

2150. நின்னை யே ரதி யென்று நினைக்கிறே னடி - செல்லம்மா
(நின்னையே)
தன்னை யே சசி யென்று சரண மெய்தினேன்
(நின்னையே) 1

சரணங்கள்

2151. பொன்னை யே நிகர்த்த மேனி
மின்னை யே நிகர்த்த சாயற்

..................................

* பாரதி ஆச்ரம - பாரதி பிரசுராலயப் பதிப்புக்களில் இப்பாடலின் தலைப்பு "கண்ணம்மா" என்று மாற்றப்பட்டுள்ளது. அரசாங்க வெளியீட்டில் "கண்ணம்மாவின் நினைப்பு" என்று காணப்படுகிறது. பாரதியார் தந்த ஸ்வர வரிசைகள் இப்பதிப்புகளில் தரப்படவில்லை.

பாடலின் தலைப்பு மாற்றம் பெற்றதன் காரணத்தைப் பாரதியாரின் இளைய மகள் சகுந்தலா "என் தந்தை" என்ற நூலில் (பக். 68-69) "......என்தந்தை, சில காதல் பாட்டுகள் தாமாகவே எழுதினார். 'செல்லம்மா பாட்டுக்கள்' என்று அதில் குறிப்பிட்டிருக்கும் 'செல்லம்மா' என்பது என் தாயாரின் பெயர். தம் மனைவியை யன்றி வேறொரு பெண்ணை மனத்தினாலும் நினைக்காத பரிசுத்த எண்ணமுடையவரானதால், காதல் பாட்டுக்கள் தாம் பாடுவது தம் மனைவிக்கு மட்டுமே என்று சொல்வார். 'நின்னையே ரதியென்று நினைக்கிறேனடி செல்லம்மா' என்று சிறிதும் சங்கோச மில்லாமல் பாடுவார். ஆனால், அந்தப் பாட்டுக்களைப் பின்னாளில் அச்சேற்றும்போது, அப்பாதுரை மாமா விருப்பப்படி, செல்லம்மா என்று குறிப்பிடாமல், கண்ணனைக் காதலியாக அவர் பலமுறை பாடியிருக்கும் முறைப்படி 'கண்ணம்மா' என்று குறிக்கப்பட்டிருக்கிறது" என்று குறிப்பிட்டுள்ளார்.

பின்னை யே - நித்ய
கன்னி யே - செல்லம்மா. (நின்னையே) 2

2152. மார னம்புக ளென் மீது
வாரி வாரி வீச நீ - கண்
பாராயோ - வந்து
சேராயோ - செல்லம்மா (நின்னையே) 3

2153. யாவு மே சுக முனிக் கொர்
ஈச னா மெனக் குன் தோற்றம்
மேவு மே – இங்கி
யாவுமே - செல்லம்மா. (நின்னையே) 4

பல்லவி

ஸஸ்ஸஸா – ஸரீ - நிந்நி - ததத பாமகா – ஸரிமா -
ஸக்ககா – பதா - பாத - மமம மாபகா – (நிநி)
ஸக்ககா – பதா – பாத - ரிரிரி ரீகஸா

சரணம்

கம ஸாஸ ஸாஸ ஸாஸ
ஸாரி காரி ஸாநி தாப
தாதரீ - நித்த - பாமகா - ஸர்ரிமா.

# 193. பூலோக குமாரி (ஸம்ஸ்க்ருதம்)

பல்லவி

2154. பூ...உலோ ...ஓ...க குமாரி
ஹே - அம்ருத நாரி. 1

அனுபல்லவி

2155. ஆ லோக ஸ்ருங்ஹாரி[1]
அம்ருத கலச குச பாரே
கால பய குடாரி காம வாரி
கனக லதா ரூப கர்வ திமிராரே. 2

சரணம்

2156. பாலே - ரஸ - ஜாலே
பகவதி ப்ரஸீத காலே
நீல ரத்ந மயநேத்ர விசாலே[2]
நித்ய யுவதி பத நீரஜ மாலே -
லீலா ஜ்வாலா நிர்மித வாணி[3]
நிரந்தரே நிகில லோ கேஸாநி[4]

........................................

(பா-டு): 1 'ஆலோக .ஸ்ருங்காரி' - (பா.பி., அர.)
2 'நீல ரத்ன மநேத்ர விசாலே' - (பா.ஆ.)
3 'லீலா ஜ்வாலா நிர்மித வாணீ' - (அர.)
4 நிரந்தரே நிகில லோகேசாநி' — (பா.பி., அர.)

**நிருபம ஸௌந்தரி நித்ய கல்யாணி**
**நிஜம் மாம் குரு ஹே மன்மத ராணி.**

**பல்லவி**

பாநி ஸகரி ஸரி - ஸாரி நிஸநிரீஸா - ஸாஸநி பநீப

**அனுபல்லவி**

நீ காரி ஸரி நீ ஸா -
நி ஸரி நி ஸரி ஸநி - ஸநிபநி -
பாப காரி ரீக ஸாரி நீஸா -
ஸஸ் ஸஸ்ஸ - ஸாஸாஸ - நிஸ் ஸரிஸ ஸாநி பா -

**சரணம்**

நீஸா நிஸ கரிஸா - ஸஸஸநி நிஸரிஸ ஸநிபநி
ரீரிரீரிரிக ஸாஸரி நீஸா - பஸ்ஸ ஸஸ்ஸ ஸஸஸஸ-
நிஸ்ஸரிஸ ஸநி பா -
ஸாஸா ஸாஸா - மாமா பாபா - பநி பபநீ -
மமப - காரீ நீஸா -
கரிரிரி - ரீரிம - நிநிஸரி - நீஸாஸ - பஸாநீபமகா -
காமபகரிஸ (பாநிஸ)*

---

*அச்சில் இப்பாடலை முதலில் வெளியாக்கிய பாரதி ஆச்ரமப் பதிப்பில் சுர வரிசை இல்லை; பிறரும் வெளியிடவில்லை. இராக, தாளப் பெயர்களும் இல்லை.

- பதிப்பாசிரியர்

# 194. வாழ்க திலகன் நாமம்

பல்லவி

2157. வாழ்க திலகன் நாமம் வாழ்க வாழ்கவே
வீழ்க கொடுங் கோன்மை வீழ்க வீழ்கவே. 1

சரணங்கள்

2158. நாலு திசையும் ஸ்வாதந்த்ர்ய[1] நாதம் எழுக வே
நரக மொத்த அடிமைவாழ்வு நைந்து கழிக வே
ஏலு மனிதர் அறிவையடர்க்கும் இருள் அழிக வே
எந்த நாளும் உலகமீதி லச்சம் ஒழிக வே. (வாழ்க) 2

2159. கல்வி யென்னும் வலிமை கொண்ட கோட்டை கட்டினான் - நல்ல
கருத்தினா லதனைச் சூழ்ந்தொ ரகழி வெட்டினான்
சொல் விளக்க மென்றதனிடைக் கோயி லாக்கினான்
ஸ்வாதந் த்ர்ய* மென்றதன்மேற் கொடியைத் தூக்கினான். (வாழ்க) 3

2160. துன்ப மெனுங்[2] கடலைக்கடக்குந் தோணி யவன்பெயர்
சோர் வெனும் பேயையோட்டுஞ் சூழ்ச்சி யவன்பெயர்

---

(பா-டு): 1 'ஸ்வாதந்தர்ய' - (பா.பி.,அர.) இப்பாடம் பொருத்தமெனத் தோன்றுகிறது. - பதிப்பாசிரியர்
2 மூன்றாம் சரணத்தில் வரும் 'எனும்' என்பது 'என்னும்' எனப் பா.பி., அர. பதிப்புகளில் உள்ளது.

அன் பெனுந் தேன் ஊறித்ததும்பும் புதுமலர் அவன்பேர்;
ஆண்மை யெனும் பொருளைக்காட்டும் அறிகுறி யவன் பேர்.
(வாழ்க) 4

பல்லவி

*தஸாரீக - ரிரிரி ஸாஸ - ஸாபதாநிஸா -*
*மாம்ம - மாம்ம மாம்ம மாம்ம - காரி காரிரீ*

சரணம்

*தஸாரிக - ரிரிரிஸாஸ - ஸாபதாநிஸா - ஸஸ*
*மாம்ம - மாம்ம மாம்ம மாம்ம - காரி காரிரீ*
*பாப்ப பாப்ப காபதநீ - தாத பாபபா - ப - காபதநீ -*
*ஸாஸ ஸாஸ ஸாஸ ஸஸ நிநிநி - தாததா**
*(தஸாரீக)*

---

* கையெழுத்துப் பிரதியில் உள்ளது இந்தச் சுர வரிசை - பா. ஆ. பதிப்பில் இல்லை; அதனை முன்னிட்டுக் கொண்ட பிற பதிப்புகளிலும் இல்லை.
- பதிப்பாசிரியர்

## 195. எந்த நேரமும்*

பல்லவி

2161. எந்த நேரமும் நின்மையல், ஏறுதடி
குற வள்ளி! சிறு கள்ளி!
(எந்த நேரமும்) *1*

சரணங்கள்

2162. (இந்த) நேரத்தி லேமலை வாரத்திலே நதி
யோரத்தி லேயுனைக் கூடி - நின்றன்
வீரத் தமிழ்ச் சொல்லின் ஸாரத்தி லேமன
மிக்க மகிழ்ச்சிகொண் டாடி – குழல்
பாரத்தி லே,இத ழீரத்தி லே,முலை யோரத்தி லே
யன்பு சூடி – நெஞ்சம்
ஆரத் தழுவி யமர பதம்[1]பெற் றதன்
பயனை யின்று காண்பேன்.
(எந்த நேரமும்) *2*

2163. வெள்ளை நிலா விங்கு வானத்தை மூடி
விரிந்து பொழிவது கண்டாய் - ஒளிக்

.......................................

*இந்தப் பாடலின் தலைப்பைப் பாரதி ஆச்ரமத்தார் "வள்ளிப்பாட்டு" என்று மாற்றினர்; இம்மாற்றுத் தலைப்பையே பிறரும் பின்பற்றினர்.

(பா-டு): 1 'ஆரத்தழுவி யமரநிலை' - (பா.ஆ., பா.பி., அர.)

கொள்ளையி லேயுனைக் கூடி முயங்கிக்
குறிப்பினி லேயொன்று பட்டு - நின்றன்
பிள்ளைக் கிளிமென் குதலையி லேமனம்
பின்ன மறச்செல்ல விட்டு - அடி
தெள்ளிய ஞானப் பெருஞ் செல்வ மே!நினைச்
சேர விரும்பினன் கண்டாய்.
(எந்த நேரமும்) 3

2164. வட்டங்க ளிட்டுங் குளமக லாத
மணிப்பெருந் தெப்பத்தைப் போலே - நினை
விட்டுவிட் டுப்பல லீலைகள் செய்துநின்
மேனி தனைவிட லின்றி –
எட்டுத் திசையு மொளிர்ந்திடுங் காலை யிரவியைப்
போன்ற முகத்தாய் – முத்த
மிட்டுப் பலமுத்த மிட்டுப் பலமுத்த மிட்டுனைச்
சேர்ந்திட வந்தேன்.
(எந்த நேரமும்) 4

# 196. ஸ்ரீ செல்லம்மா பாட்டு*

பல்லவி†

2165. பீடத்தி லேறிக் கொண்டாள் - மனப்
பீடத்தி லேறிக் கொண்டாள். 1

சரணங்கள்

2166. நாடித் தவம் புரிந்து - பீ டுற்ற முனிவரர்
கேடற்ற தென்று கண்டு - கூடக் கருது மொளி
மாடத்தி லேறி ஞானக் - கூடத்தில் விளையாடி
ஓடித் திரிந்து[1] கன்னி - வேடத் திரதியைப்போல்,
ஈடற்ற கற்பனைகள் - காடுற்ற சிந்தனைகள்
மூடிக் கிடக்கு நெஞ்சின் - ஊடுற் றதையமரர்
தேடித் தவிக்கு மின்ப - வீடொத் தினிமைசெய்து
வேடத்தி, சிறு வள்ளி, வித்தையென் செல்லம்மா!
(பீடத்தி) 2

2167. கண்ணன் திரு மார்பிற் - கலந்த கமலை யென்கோ?
விண்ணவர் தொழுதிடும் - வீர சிங்காதனத்தே,

---

* "கண்ணம்மா" (பா.ஆ., பா.பி.)
'மனப் பீடம்' - (அர.)
† நொண்டிச் சிந்து மாதிரி பல்லவி. எந்த ராகமும் (ஏற்றி, பிறக்கி) சரணங்களுக்குப் போடலாம்.

- பாரதியார்

நண்ணிச் சிவனுடலை - நாடுமவ னென்கோ?
எண்ணத் திதிக்குதடா - இவள்பொன் னுடலமுதம்.
பெண்ணி லரசியிவள் - பெரிய எழிலுடையாள்
கண்ணுன் மணியெனக்குக் – காத லிரதியிவள்.
பண்ணி லினியசுவை பரந்த மொழியினாள்,
உண்ணு மிதழமுத ஊற்றினள் – செல்லம்மா!
(பீடத்தி) 3

## 197. காளிப் பாட்டு*

2168. யாது மாகி நின்றாய் - காளீ!
எங்கும்நீ நிறைந்தாய்
தீது நன்மை யெல்லாம் – நின்றன்
செயல்களன்றி யில்லை,
போது மிங்கு மாந்தர் - வாழும்
பொய்மைவாழ்க்கை யெல்லாம்.
ஆதி சக்தி, தாயே - என்மீ
தருள்புரிந்து காப்பாய். 1

2169. எந்த நாளு நின்மேல் - தாயே
இசைகள்பாடி வாழ்வேன்
கந்த னைப்ப யந்தாய் – தாயே
கருணைவெள்ள மானாய்!
மந்த மாரு தத்தில் - வானில்
மலையினுச்சி மீதில்,
சிந்தை யெங்கு செல்லும் - அங்குன்
செம்மைதோன்று மன்றே! 2

2170. கர்ம யோக மொன்றே - உலகில்
காக்குமென்னும் வேதம்;

*கையெழுத்துப் பிரதியில்: 'ஸ்தோத்ரப் பாட்டுக்கள்' பா.ஆ., பா.பி. பதிப்புகளில்: 'காளி ஸ்தோத்ரம் அர. பதிப்பில்: 'காளி ஸ்தோத்திரம்'

தர்ம நீதி சிறிதும் - இங்கே
தவறலென்ப தின்றி -
மர்ம மான பொருளாம் - நின்றன்
மலரடிக்க ணெஞ்சம் -
செம்மை யுற்று நாளும் - சேர்ந்தே
தேசுகூட வேண்டும். 3

2171. என்ற னுள்ள வெளியில் - ஞானத்
திரவியேற வேண்டும்
குன்ற மொத்த தோளும் - மேருக்
கோலமொத்த வடிவும்
நன்றை நாடு மனமும் -
நாளுமீதல் வேண்டும்
ஒன்றை விட்டு மற்றோர் - துயரில்
உழலுநெஞ்சம் வேண்டா. 4

2172. வான கத்தி னொளியைக் - கண்டே
மனமகிழ்ச்சி பொங்கி
யானெ தற்கு மஞ்சேன் - ஆகி
எந்தநாளும் வாழ்வேன்
ஞான மொத்த தம்மா - உவமை
நானுரைக்கொ ணாதாம்-
வான கத்தி லொளியின்[1] - அழகை
வாழ்த்துமாறி யாதோ 5

2173. ஞாயி றென்ற கோளம் - தருமோர்
நல்லபேரொ ளிக்கே
தேயமீ தொருவமை[2] - எவரே

---

(பா-டு): 1 'வானகத்தி னொளியின்' - (அர.)
2 'தேய மீதோ ருவமை' - (பா.ஆ., பா.பி.)

தேடியோத வல்லார்?
வாயி னிக்கு மம்மா - அழகாம்
மதியினின்ப ஒளியை
நேய மோடு ரைத்தால் - ஆங்கே
நெஞ்சிளக்க மெய்தும். 6

2174. காளி மீது நெஞ்சம் - என்றும்
கலந்துநிற்க வேண்டும்.
வேளை யொத்த விறலும் - பாரில்
வேந்தரேத்து புகழும்-
யாளி யொத்த வலியும் - என்றும்
இன்பநிற்கு மனமும் -
வாழி யீதல் வேண்டும் – அன்னாய்,
வாழ்கநின்றன் அருளே. 7

## 198. காலைப் பொழுது*

(சகுந்தலா பாப்பாவும் சி. சுப்பிரமணிய பாரதியும் கூடி இயற்றியது)†

**2175.** காலைப் பொழுதினிலே, கண்விழித்து, மேனிலைமேல்
மேலைச் சுடர்வானை நோக்கிநின்றோம். விண்ணகத்தே *1*

**2176.** கீழ்த்திசையில் ஞாயிறுதான் கேடில் சுடர்விடுத்தான்;
பார்த்தவெளி யெல்லாம் பகலொளியாய் மின்னிற்றே. 2

**2177.** தென்னை மரத்தின் கிளையிடையே தென்றல்போய்
மன்னப் பருந்தினுக்கு மாலையிட்டுச் சென்றதுவே. *3*

**2178.** தென்னை மரக்கிளைமேற் சிந்தனையோ டோர்காகம்
வன்னமுற வீற்றிருந்து வானைமுத்த மிட்டதுவே. *4*

**2179.** தென்னைப் பசுங்கீற்றைக் கொத்திச் சிறுகாக்கை
மின்னுகின்ற தென்கடலை நோக்கி விழித்ததுவே 5

**2180.** வன்னச் சுடர்மிகுந்த வானகத்தே தென்றிசையில்
கன்னங் கருங்காகக் கூட்டம்வரக் கண்டதங்கே *6*

.....................................

*'காதற் பாட்டுக்கள் – காலைப் பொழுது' - (பா.ஆ., பா.பி.)
'காலைப் பொழுது' - (அர.)
† பாரதியாரின் இந்தக் குறிப்பினை எந்தப் பதிப்பும் வெளியிடவில்லை.

2181. கூட்டத்தைக் கண்டஃது கும்பிட்டே தன்னருகோர்
பாட்டுக் குருவிதனைப் பார்த்து நகைத்ததுவே; 7

2182. சின்னக் குருவி சிரிப்புடனே வந்தாங்கு
கன்னங் கருங்காக்கை கண்ணெதிரே யோர்கிளைமேல் 8

2183. வீற்றிருந்தே:- "கிக்கிக்கீ! காக்காய்நீ விண்ணிடையே
யோற்றியெதை நோக்குகிறாய்? கூட்ட[1]மங்கு
போவதென்னே?"[2] 9

2184. என்றவுட னேகாக்கை:- "என்தோழா, நீகேளாய்,
மன்றுதனைக் கண்டே மனமகிழ்ந்து போற்றுகிறேன்" 10

2185. என்றுசொல்லிக் காக்கை யிருக்கையிலே, ஆங்கணோர்
மின்றிகழும் பச்சைக் கிளிவந்து வீற்றிருந்தே:- 11

2186. "நட்புக் குருவியே, ஞாயிற் றிளவெயிலில்
கட்புலனுக் கெல்லாம் களியாகத் தோன்றுகையில், 12

2187. நும்மை மகிழ்ச்சியுடன் நோக்கியிங்கு வந்திட்டேன்.
அம்மவோ! காகப் பெருங்கூட்ட மஃதென்னே?" 13

2188. என்று வினவக் குருவிதா னிஃதுரைக்கும்:-
"நன்றுநீ கேட்டாய், பசுங்கிளியே, நானுமிங்கு 14

2189. மற்றதனை யோர்ந்திடவே காக்கையிடம் வந்திட்டேன்.
கற்றறிந்த காக்காய், கழறுகநீ" என்றதுவே. 15

2190. அப்போது காக்கை:- "அருமையுள்ள தோழர்களே,
செப்புவேன் கேளீர்; சிலநாளாக் காக்கையுள்ளே 16

---

(பா-டு): 1 'கூட்டங் குறி போவ தென்னே?' - (பா. பி.)
2 'மங்குப் போவதென்னே' - (அர.)

2191. நேர்ந்த புதுமைகளை நீர்கேட் டறியீரோ?
சார்ந்துநின்ற கூட்டமங்கு* சாலையின்மேற் கண்டீரே? 17

2192. மற்றந்தக் கூட்டத்து மன்னவனைக் காணீரே?
கற்றறிந்த ஞானி கடவுளையே நேராவான்; 18

2193 ஏழுநாள் முன்னே இறைமகுடந் தான்புனைந்தான்.
வாழியவன் எங்கள் வருத்தமெலாம் போக்கிவிட்டான். 19

2194. சோற்றுக்குப் பஞ்சமில்லை; போரில்லை; துன்பமில்லை;
போற்றற் குரியான் புதுமன்னன் காணீரோ?'' 20

2195. என்றுரைத்துக் காக்கை யிருக்கையிலே அன்னமொன்று
தென்றிசையி னின்று சிரிப்புடனே வந்தாங்கே,[1] 21

2196. அன்னமந்தத் தென்னை யருகினி லோர் மாடமிசை
வன்னமுற வீற்றிருந்து:- ''வாழ்க, துணைவரே, 22

2197. காலை யிளவெயிலிற் காண்பதெலா மின்பமன்றோ?
சாலநுமைக் கண்டு களித்தேன் சருவிநீர் 23

2198. ஏதுரைகள் பேசி யிருக்கின்றீர்?'' என்றிடவே
போதமுள்ள காக்கை புகன்றதந்தச் செய்தியெல்லாம் 24

2199. அன்னமிது கேட்டு மகிழ்ந்துரைக்கும்:- ''ஆங்காணும்!
மன்னர் அறம்புரிந்தால் வையமெல்லா மாண்புபெறும். 25

.........................................

* 'கூட்டமங்குச்' என்றிருத்தல் வேண்டும்

- பதிப்பாசிரியர்

(பா–டு): 1 'வந்தங்கே' – (பா.பி., அர.)

**2200.** ஒற்றுமையால் மேன்மையுண்டாம் ஒன்றையொன்று துன்பிழைத்தல்
குற்றமென்று கண்டால் குறைவுண்டோ வாழ்வினுக்கே?" 26

**2201.** என்றுசொல்லி யன்னம் பறந்தாங்கே ஏகிற்றால்.
மன்று கலைத்து[1] மறைந்தனவப் புட்களெல்லாம். 27

**2202.** காலைப் பொழுதினிலே கண்டிருந்தோம் நாங்களிதை
ஞால மறிந்திடவே நாங்களிதைப் பாட்டிசைத்தோம். 28

(பா-டு): 1 மன்று கலைந்து - (அர.)

## 199. பாரத நாடு

ராகம் - ஹிந்துஸ்தானி தோடி

பல்லவி

2203. பாருக்குள்ளே நல்ல நாடு - எங்கள்
பாரத நாடு. 1

சரணங்கள்

2204. ஞானத்திலே பர மோனத்திலே - உயர்
மானத்திலே அன்ன தானத்திலே,
கானத்திலே அமுதாக நிறைந்த
கவிதையிலே யுயர் நாடு - இந்தப் (பாரு) 2

2205. தீரத்திலே படை வீரத்திலே - நெஞ்சில்
ஈரத்திலே யுப காரத்திலே,
சாரத்திலே மிகு சாத்திரங் கண்டு
தருவதிலே யுயர் நாடு - இந்தப் (பாரு) 3

2206. நன்மையிலே யுடல் வன்மையிலே - செல்வப்
பன்மையிலே மறத் தன்மையிலே,
பொன்மயி லொத்திடு மாதர்தங் கற்பின்
புகழினிலே யுயர் நாடு - இந்தப் (பாரு) 4

**2207.** ஆக்கத்திலே தொழி லூக்கத்திலே - புய
வீக்கத்திலே யுயர் நோக்கத்திலே,
காக்கத் திறல் கொண்ட மல்லர்தஞ் சேனைக்
கடலினிலே யுயர் நாடு - இந்தப் (பாரு) 5

**2208.** வண்மையிலே யுளத் திண்மையிலே - மனத்
தண்மையிலே மதி நுண்மையிலே,
உண்மையிலே தவறாத புலவர்
உணர்வினிலே யுயர் நாடு - இந்தப் (பாரு) 6

**2209.** யாகத்திலே தவ வேகத்திலே - தனி
யோகத்திலே பல போகத்திலே
ஆகத்திலே தெய்வ பக்தி கொண்டார்தம்
அருளினிலே யுயர் நாடு - இந்தப் (பாரு) 7

**2210.** ஆற்றினிலே சுனை யூற்றினிலே - தென்றற்
காற்றினிலே மலைப் பேற்றினிலே
ஏற்றினிலே பய னீந்திடுங் காலி
யினத்தினிலே யுயர் நாடு - இந்தப் (பாரு) 8

**2211.** தோட்டத்திலே மரக் கூட்டத்திலே - கனி
யீட்டத்திலே பயி ரூட்டத்திலே
தேட்டத்திலே யடங்காத நிதியின்
சிறப்பினிலே யுயர் நாடு - இந்தப் (பாரு) 9

## 200. நவராத்திரிப் பாட்டு*

2212. உஜ்ஜயினீ! நித்திய கல்யாணி!
ஓம்சக்தி ஓம்சக்தி ஓம்சக்தி ஓம்சக்தி (உஜ்ஜயினீ!) *1*

2213. உஜ்ஜிய காரண[1] சங்கர தேவி[2]
உமா ஸரஸ்வதி[3] ஸ்ரீ மாதாஸா (உஜ்ஜயினீ!) *2*

2214. வாழி புனைந்து மஹேசுவர தேவன்
தோழி பதங்கள் பணிந்து துணிந்தனம் (உஜ்ஜயினீ!) *3*

2215. ஸத்ய யுகத்தை அகத்தி லிருத்தி[4]
திறத் தைநமக்கருளிச் செய்யும் உத்தமி (உஜ்ஜயினீ!) *4*

---

*அரசாங்க வெளியீட்டில் 'நவராத்திரிப் பாட்டு' என்பதன்பின் உள் தலைப்பாக "உஜ்ஜயினீ" என்பதும் நக வளைவுக்குள் தரப்பெற் றுள்ளது.

(பா–டு): *1* 'உஜ்ஜய காரண' - (பா.பி)
*2* 'சங்கர தேவீ' – (பா.பி.)
*3* 'உமா ஸரஸ்வதீ' – (பா.பி.)
*4* 'ஸத்ய யுகத்தை அகத்திலிருத்தித்" (அர.)
'ஸத்ய யுகத்தை அகத்திலிருத்தித் – (பா.பி., அர.)

## 201. நவராத்திரிப் பாட்டு*

### பராசக்தி (மூன்றும் ஒன்றாகிய மூர்த்தி)

2216. மாதா பராசக்தி வையமெலா நீநிறைந்தாய்
ஆதார முன்னையல்லால் ஆரெமக்குப் பாரினிலே?
ஏதா யினும்வழிநீ சொல்வாய்; எமதுயிரே,
வேதாவின் தாயே மிகப்பணிந்து வாழ்வோமே. 1

### வாணி

2217. வாணி கலைத்தெய்வம், மணிவா.க் குதவிடுவாள்
ஆணிமுத்தைப் போலே அறிவுமுத்து மாலையினாள்
காணுகின்ற காட்சியாய்க் காண்பதெல்லாங் காட்டுவதாய்
மாணுயர்ந்து நிற்பாள் மலரடியே சூழ்வோமே. 2

### ஸ்ரீதேவி

2218. பொன்னரசி, நாரணனார் தேவி, புகழரசி
மின்னுநவ ரத்தினம்போல் மேனி யழகுடையாள்
அன்னையவள் வையமெலாம் ஆதரிப்பாள் ஸ்ரீதேவி
தன்னிருபொற் றாளே சரண்புகுந்து வாழ்வோமே. 3

*அரசாங்கப் பதிப்பில் 'மாதா பராசக்தி' என்ற உள்தலைப்பு நகவளைவில் தரப்பட்டுள்ளது. - பதிப்பாசிரியர்

## பார்வதி

2219. மலையிலே தான்பிறந்தாள், சங்கரனை மாலையிட்டாள்
உலையிலே யூதி யுலகக் கனல்வளர்ப்பாள்
நிலையி லுயர்த்திடுவாள், நேரே யவள்பாதந்
தலையிலே தாங்கித் தரணிமிசை வாழ்வோமே. 4

## 202. ஸரஸ்வதி ஸ்தோத்திரம்*

நொண்டிச் சிந்து

2220. எங்ஙனம் சென்றிருந்தீர் - என
தின்னுயிரே யென்றன் இசையமுதே,
திங்களைக் கண்டவுடன் - கடல்
திரையினைக் காற்றினைக் கேட்டவுடன்
கங்குலைப் பார்த்தவுடன் - இங்கு[1]
காலையி லிரவியைத் தொழுதவுடன்
பொங்குவீர் அமிழ்தெனவே - அந்தப்
புதுமையிலே துயர் மறந்திருப்பேன். 1

2221. மாதமொர் நான்காமீர் - அன்பு
வறுமையி லேயெனை வீழ்த்திவிட்டீர்.
பாதங்கள் போற்றுகின்றேன் - என்றன்
பாவமெ லாங்கெட்டு ஞானகங்கை
நாதமொ டெப்பொழுதும் - என்றன்
நாவினி லேபொழிந் திடவேண்டும்
வேதங்க ளாக்கிடுவீர் - அந்த
விண்ணவர் கண்ணிடை விளங்கிடுவீர். 2

* 'கலைமகளை வேண்டுதல்' - (அர.)

(பா-டு): 1 'கங்குலைப் பார்த்தவுடன் கடல்' - (பா.பி., அர.)

2222. கண்மணி போன்றவரே - இங்கு[1]
காலையு மாலையுந் திருமகளாம்
பெண்மணி யின்பத்தையும் - சக்திப்
பெருமகள் திருவடிப் பெருமையையும்
வண்மையி லோதிடுவீர் - என்றன்
வாயிலு மதியிலும் வளர்ந்திடுவீர்
அண்மையி லிருந்திடுவீர் - இனி
அடியனைப் பிரிந்திடில்[2] ஆற்றுவனோ? 3

2223. தானெனும் பேய்கெடவே - பல
சஞ்சலக் குரங்குகள் தளைப்படவே
வானெனும் ஒளிபெறவே - நல்ல
வாய்மையி லேமதி நிலைத்திடவே
தேனெனப் பொழிந்திடுவீர்[3] - அந்தத்
திருமகள் சினங்களைத் தீர்த்திடுவீர்
ஊனங்கள் போக்கிடுவீர் - நல்ல
ஊக்கமும் பெருமையும் உதவிடுவீர். 4

2224. தீயினை நிறுத்திடுவீர் - நல்ல
தீரமுந் தெளிவுமிங் கருள்புரிவீர்
மாயையி லறிவிழந்தே - உம்மை
மதிப்பது மறந்தன[4] பிழைகளெல்லாம்
தாயென வுமைப்பணிந்தேன் - பொறை
சார்த்திநல் லருள்செய வேண்டுகின்றேன்
வாயினிற் சபதமிட்டேன் - இனி
மறக்கி லேன்[5]எனை மறக்ககிலீர்! 5

---

(பா-டு) 1 'கண்மணி போன்றவரே - இங்குக்' - (பா.பி., அர.)
2 'அடியனைப் பிரிந்திடல்' - (பா.பி., அர.)
3 'வானெனப் பொழிந்திடுவீர்' - (பா.பி., அர.)
4 'மதிப்பது மறந்தனன்' - (பா பி., அர.)
5 'மறக்கிலேன்' - (பா.பி., அர.)

## 203. ஸ்ரீகிருஷ்ணன்மீது ஸ்துதி*

2225. வேத வானில் விளங்கி "அறஞ்செய்மின்[1]
சாதல் நேரினுஞ் சத்தியம் பூணுமின்.
தீத கற்றுமின்" என்று திசையெலாம்,
மோத நித்தம் இடித்து முழங்கியே. 1

2226. உண்ணுஞ் சாதிக் குறக்கமும் சாவுமே
நண்ணு றாவண நன்கு புரந்திடும்
எண்ண ரும்புகழ்க் கீதையெனச் சொலும்
பண்ண மிழ்தத் தருள்மழை பாலித்தே. 2

2227. எங்க ளாரிய பூமியெ னும்பயிர்
மங்க ளம்பெற நித்தலும் வாழ்விக்கும்
துங்க முற்ற துணைமுகி லேமலர்ச்
செங்க ணாய்நின் பதமலர் சிந்திப்பாம். 3

2228. வீரர் தெய்வதம், கர்ம விளக்குநல்
பார தர்செய் தவத்தின் பயனெனுந்
தார விர்ந்த தடம்புயப் பார்த்தனோர்
கார ணம்மெனக் கொண்டு கடவுணீ 4

---

* 'கண்ணனை வேண்டுதல்' – (அர.)

1 'செய்ம்மின்' என்றிருத்தல் வேண்டும்.

– பதிப்பாசிரியர்

2229. நின்னை நம்பி நிலத்திடை யென்றுமே
மன்னு பாரத மாண்குலம் யாவிற்கும்
உன்னுங் காலை உயர்துணை யாகவே
சொன்ன சொல்லை யுயிரிடைச் சூடுவாம்.[1] 5

2230. ஐய கேளினி யோர்சொல், அடியர்யாம்
உய்ய நின்மொழி பற்றி யொழுகியே,
மைய றும்புகழ் வாழ்க்கை பெறற்கெனச்
செய்யுஞ் செய்கையி னின்னருள் சேர்ப்பையால். 6

2231. ஒப்பி லாத உயர்வொடு கல்வியும்
எய்ப்பில் வீரமும், இப்புவி யாட்சியும்
தப்பி லாத தருமமுங் கொண்டுயாம்
அப்ப னேநின் னடிபணிந் துய்வமால். 7

2232. மற்று நீயிந்த வாழ்வு மறுப்பையேல்
சற்று நேரத்து ளெம்முயிர் சாய்த்தருள்
கொற்ற வாநின் குவலய மீதினில்
வெற்று வாழ்க்கை விரும்பி யழிகலேம்[2] 8

2233. நின்றன் மாமர பில்வந்து நீசராய்ப்
பொன்றல் வேண்டிலம் பொற்கழ லாணைகாண்
இன்றிங் கெம்மை யதம்புரி யில்லையேல்
வென்றி யும்புக ழுந்தரல் வேண்டுமே. 9

---

(பா-டு): 1 'சொன்ன சொல்லை யுயிரிடைச் சூடுவோம்' - (அர.)
2 'வெற்று வாழ்க்கை விரும்பி யழிகிலேம்' - (அர.)

## 204. யேசு கிறிஸ்து

(தீய ஒழுக்கத்தில் நின்ற மேரி மக்தலேன் என்பாள் யேசு கிறிஸ்துவை அடைந்து, தனது ஒழுக்கத்திற்காகப் பரிதவித்துத் தன்னைக் கடையேற்ற வேண்டுமென்று வேண்டினாள். யேசுவும் அவளுக்கு அருள்புரிந்தார். யேசு புதைக்கப்பட்ட மூன்றா நாள் அவருடம்புடன் எழுந்து விண்ணேகினதை மேரி மக்தலேன் கண்ணால் கண்டு பிறருக் கறிவித்ததாகக் கிறிஸ்தவ புராணம் கூறியிருப்பதை இங்குக் கவி வருணித்திருக்கிறார்.)

2234. 'ஈசன் வந்து சிலுவையில் மாண்டான்;
எழுந்து யிர்த்தனன் நாள்ஒரு மூன்றில்;
நேச மாமரி யாமக்த லேநா
நேரிலே யிந்தச் செய்தியைக் கண்டாள்'.
தேசத் தீர்;இதன் உட்பொருள் கேளீர்:-
தேவர் வந்து நமக்குட் புகுந்தே
நாச மின்றி நமைநித்தங் காப்பார்,
நம்அஹங் தையை[1] நாம்கொன்று விட்டால்.

2235. அன்பு காண்மரி யாமக்த லேநா,
ஆவி காணுதிர் யேசு கிறிஸ்து

---

(பா-டு): 1 'நம் அகந்தையை'- (பா.பி., அர.)

முன்பு தீமை வடிவினைக் கொன்றால்
மூன்று நாளினில் நல்லுயிர் தோன்றும்.
பொன்பொ லிந்த முகத்தினிற் கண்டே,
போற்று வாள்அந்த நல்லுயிர் தன்னை,
அன்பெ னும்மரியா மக்த லேநா;
ஆஹா! சாலப் பெருங்களி யி்:தே, 2

2236. உண்மை யென்ற சிலுவையிற் கட்டி,
உணர்வை ஆணித் தவங்கொண் டடித்தால்
வண்மைப் பேருயிர் யேசு கிறிஸ்து
வான மேனியில் அங்கு விளங்கும்.
பெண்மை காண்மரி யாமக்த லேநா,
பேணும் நல்லறம் யேசு கிறிஸ்து.
நுண்மை கொண்ட பொருளிது கண்டீர்
நொடியி லி்:து பயின்றிட லாகும். 3

ஓம்சக்தி*

---

* 'சக்திதாசன்' என்ற புனைபெயர் கொண்ட இந்துவாகிய பாரதியார், கிறித்தவ சமயச் சிறப்பினைச் சுட்டும் இந்தக் கவிதையின் இறுதியிலே 'ஓம் சக்தி' என வரைந்திருப்பது மனங்கொள்ளத் தக்கது. நல்ல சமயவாதி எவருக்கும் வெறுப்போ பகையோ இராது; மேலும் 'ஒன்றாகக் காண்பதே காட்சி' என்ற ஞானத் தெளிவும் இருக்கும்.

- பதிப்பாசிரியர்

## 205. "பெல்ஜியம்" நாட்டிற்கு வாழ்த்து*

2237. அறத்தினால் வீழ்ந்து விட்டாய், அன்னியன் வலிய னாகி
மறத்தினால் வந்து செய்த வன்மையைப் பொறுத்தல் செய்யாய்
முறத்தினாற் புலியைக் காக்கு[1] மொய்வரைக் குறப்பெண் போல[2]
திறத்தினால் எளியை யாகிச் செய்கையால் உயர்ந்து நின்றாய். *1*

2238. வண்மையால் வீழ்ந்து விட்டாய், வாரிபோற் பகைவன் சேனை
திண்மையோ டடர்க்கும் போதில் சிந்தனை மெலித லின்றி
ஒண்மைசேர் புகழே மேலென் றுளத்திலே யுறுதி கொண்டாய்
உண்மைதேர் கோல நாட்டார் உரிமையைக் காத்து நின்றாய். *2*

2239. மானத்தால் வீழ்ந்து விட்டாய், மதிப்பிலாப் பகைவர் வேந்தன்
வானத்தாற் பெருமை கொண்ட வலிமைதான் உடைய னேனும்
ஊனத்தால் உள்ள மஞ்சி ஒதுங்கிட மனமொவ் வாமல்
ஆனத்தைச் செய்வோ மென்றே அவன்வழி யெதிர்த்து நின்றாய். *3*

---

* "பெல்ஜியத்திற்கு வாழ்த்து" – (அர.)

(பா-டு): 1 'முறத்தினாற் புலியைத் தாக்கு' (திருலோக சீதாராம்)
2 குறப்பெண்போலத் - (பா.பி., அர.)

**2240.** வீரத்தால் வீழ்ந்து விட்டாய், மேல்தரை யுருளுங் காலை
ஓரத்தே யொதுங்கித் தன்னை யொளித்திட மனமொவ்
வாமல்
பாரத்தை யெளிதாக் கொண்டாய், பாம்பினைப் புழுவே
யென்றாய்
நேரத்தே பகைவன் றன்னை "நில்"லென முனைந்து
நின்றாய் 4

**2241.** துணிவினால் வீழ்ந்து விட்டாய், தொகையிலாப் படைக
ளோடும்
பிணிவளர் செருக்கி னோடும் பெரும்பகை யெதிர்த்தபோது
பணிவது கருத மாட்டாய், பதுங்குதல் பயனென்
றெண்ணாய்
தணிவதை நினைக்க மாட்டாய் "நில்"லெனத் தடுத்தல்
செய்தாய். 5

**2242.** வெருளுத லறிவென் றெண்ணாய், விபத்தையோர்
பொருட்டாக் கொள்ளாய்
சுருளலை வெள்ளம் போலத் தொகையிலாப் படைகள்
கொண்டே
மருளுறு பகைவர் வேந்தன் வலிமையாற் புகுந்த வேளை
"உருளுக தலைகள் மான மோங்குகெ"ன் றெதிர்த்து
நின்றாய். 6

**2243.** யாருக்கே பகையென் றாலும் யார்மிசை யிவன் சென்றாலும்
ஊருக்கு ளெல்லை தாண்டி யுத்தர வெண்ணி டாமல்
போருக்குக் கோலம் பூண்டு புகுந்தவன் செருக்குக்
காட்டை
வேருக்கு மிடமில் லாமல் வெட்டுவே னென்று நின்றாய். 7

**2244.** வேள்வியில் வீழ்வ தெல்லாம் வீரமும் புகழு மிக்கு
மீள்வதுண் டுலகிற் கென்றே வேதங்கள் விதிக்கு மென்பர்

ஆள்வினை செய்யும் போதில், அறத்தி லேயிலைத்து
வீழ்ந்தார்
கேள்வியுண் டுடனே மீளக் கிளர்ச்சிகொண் டுயிர்த்து
வாழ்தல். 8

2245. விளக்கொளி மழுங்கிப் போக வெயிலொளி தோன்று
மட்டும்
களக்கமா ரிருளின் மூழ்குங் கணகமா ளிலகயு முண்டாம்
அளக்கருந் தீதுற்றாலும் அச்சமே யுளத்துக் கொள்ளார்
துளக்கற வோங்கி நிற்பர் துயருண்டோ துணிவுள்
ளோர்க்கே? 9

## 206. இறைவனை வேண்டுதல்*

ராகம் - தன்யாசி

பல்லவி

2246. எத்தனை கோடி இன்பம் வைத்தாய் – எங்கள்
இறைவா! இறைவா! இறைவா! (ஓ – எத்தனை) 1

சரணங்கள்

2247. சித்தினை அசித்துடன் இணைத்தாய் – அங்கு[1]
சேருமைம் பூதத்து வியனுல கமைத்தாய்
அத்தனை யுலகமும் வர்ணக் களஞ்சிய
மாகப் பலபலநல் லழகுகள் சமைத்தாய் (எத்தனை) 2

2248. முக்தியென் றொருநிலை சமைத்தாய் – அங்கு
முழுதினை யுமுணரு முணர்வ மைத்தாய்
பக்தியென் றொருநிலை வகுத்தாய் எங்கள்
பரமா, பரமா, பரமா, (ஓ – எத்தனை) 3

* ''இறைவா! இறைவா!'' – (அர.)

1 'அங்குச்' என்றிருத்தல் வேண்டும் - பதிப்பாசிரியர்

## 207. மனைத் தலைவிக்கு வாழ்த்து*

2249. வாழ்க மனைவியாங் கவிதைத் தலைவி!
தினமுமிவ் வுலகில் சிதறியே நிகழும்
பலபல பொருளிலாப் பாழ்படு செய்தியை
வாழ்க்கைப் பாலையில் வளர்பல முட்கள்போல்
பேதை யுலகைப் பேதைமைப் படுத்தும் 5
வெறுங்கதைத் திரளை, வெள்ளறி வுடைய
மாயா சக்தியின் மகளே, மனைக்கண்
வாழ்வினை வகுப்பாய், வருடம் பலவினும்
ஓர்நாட் போலமற் றோர்நாள் தோன்றாது
பலவித வண்ணம் வீட்டிடைப் பரவ 10
நடத்திடுஞ் சத்தி[1] நிலையமே, நன்மனைத்
தலைவீ, ஆங்கத் தனிப்பதர்ச் செய்திகள்
அனைத்தையும் பயனிறை யனுபவ மாக்கி,
உயிரிலாச் செய்திகட் குயிர்மிகக் கொடுத்து
ஒளியிலாச் செய்திக்[2] கொளியருள் புரிந்து 15
வான சாத்திரம் மகமது வீழ்ச்சி
சின்னப் பையல் சேவகத் திறமை
எனவரு நிகழ்ச்சி யாவே யாயினும்

---

* 'கவிதைத் தலைவி' - (அர.)

(பா-டு): 1 'நடத்திடுஞ் சக்தி' - (பா.பி., அர.)
2 'ஒளியிலாச் செய்திகட்' - (அர.)

அனைத்தையு மாங்கே யழகுறச் செய்து
இலௌகிக வாழ்க்கையிற் பொருளினை யிணைக்கும் 20
பேதைமா சத்தியின் பெண்ணே, வாழ்க!
காளியின் குமாரி அறங்காத் திடுக!
வாழ்க! மனையகத் தலைவி வாழ்க!

## 208. கடமை*

2250. கடமை புரிவா ரின்புறுவார் என்னும்
பண்டைக் கதைபேணோம்
கடமை யறியோம் தொழிலறியோம் கட்டென்
பதனை வெட்டென்போம்
மடமை சிறுமை துன்பம்பொய் வருத்தம்
நோவு மற்றிவைபோல்
கடமை நினைவுந் தொலைத்திங்கு[1] களியுற்
றென்றும் வாழ்குவமே

---

* "கடமை அறிவோம்" - (அர.)

1 'தொலைத்திங்குக்' என்றிருத்தல் வேண்டும்

- பதிப்பாசிரியர்

## 209. மனப்பெண்

2251. மனமெனும் பெண்ணே! வாழிநீ கேளாய்!
ஒன்றையே பற்றி யூச லாடுவாய்
அடுத்ததை நோக்கி யடுத்தடுத் துலவுவாய்
நன்றையே கொள்ளெனிற் சோர்ந்துகை நழுவுவாய்
விட்டுவி டென்றதை விடாதுபோய் விழுவாய் 5
தொட்டதை மீள மீளவுந் தொடுவாய்
புதியது காணிற் புலனழிந் திடுவாய்
புதியதை விரும்புவாய்[1] புதியதை யஞ்சுவாய்
அடிக்கடி மதுவினை யணுகிடும் வண்டுபோல்
பழமையாம் பொருளிற் பரிந்துபோய் வீழ்வாய் 10
பழமையே யன்றிப் பார்மிசை யேதும்
புதுமைகா ணோமெனப் பொருமுவாய், *சீச்சீ!*
பிணத்தினை விரும்புங் காக்கையே போல[2]
அழுகுதல், சாதல், அஞ்சுதல், முதலிய
இழிபொருள் காணில் விரைந்ததி லிசைவாய். 15
அங்ஙனே:
என்னிடத் தென்று மாறுத லில்லா
அன்புகொண் டிருப்பாய் ஆவிகாத் திடுவாய்,

---

*(பா–டு): 1 'புதியது விரும்புவாய' - (பா.பி., அர.)*
*2 'பிணத்தினை விரும்புங் காக்கையே போலே' - (அர.)*

கண்ணினோர் கண்ணாய்க்[1] காதின் காதாய்ப்
புலன்புலப் படுத்தும் புலனா யென்னை 20
உலக வுருளையில் ஒட்டுற வகுப்பாய்
இன்பெலாந் தருவாய் இன்பத்து மயங்குவாய்
இன்பமே நாடி யெண்ணிலாப் பிழைசெய்வாய்,
இன்பங் காத்துத் துன்பமே யுழப்பாய்[2]
இன்பமென் றெண்ணித் துன்பத்து வீழ்வாய் 25
தன்னை யறியாய் சகத்தெலாந் தொளைப்பாய்
தன்பின் னிற்குந் தனிப்பரம் பொருளைக்
காணவே வருந்துவாய் காணெனிற் காணாய்
சகத்தின் விதிகளைத் தனித்தனி யறிவாய்
பொதுநிலை யறியாய் பொருளையுங் காணாய், 30
(மனமெனும் பெண்ணே! வாழி நீ கேளாய்!)
நின்னொடு வாழு நெறியுநன் கறிந்திடேன்
இத்தனை நாட்போல் இனியுநின் னின்பமே
விரும்புவேன்[3] நின்னை மேம்படுத் திடவே
முயற்சிகள் புரிவேன் முத்தியுந் தேடுவேன், 35
உன்விழிப் படாமல் என்விழிப் பட்ட
சிவமெனும் பொருளைத் தினமும் போற்றி
உன்றனுக்[4] கின்ப மோங்கிடச் செய்வேன்.

பா-டு): 1 'கண்ணினோர் கண்ணாய்' - (அர.)
2 'இன்பங்காத்துத் துன்பமே யழிப்பாய்' - (பா.பி., அர.)
3 'விரும்புவன்' - (பா. பி., அர.)
4 'உன்றனக்' - (பா.பி., அர.)

## 210. மனமே*

2252. கண்ணன் திருவடி
எண்ணுக மனமே
திண்ணம் அழியா
வண்ணந் தருமே. 1

2253. தருமே நிதியும்
பெருமை புகழும்
கருமா மேனிப்
பெருமா னிங்கே. 2

2254. இங்கே யமரர்
சங்கந் தோன்றும்
மங்குந் தீமை
பொங்கும் நலமே. 3

2255. நலமே நாடிற்
புலவீர் பாடீர்
நிலமா மகளின்
தலைவன் புகழே. 4

---

* *''கண்ணன் திருவடி.'' – (அர.)*

*'இப்பாடல் அந்தாதித் தொடையாக அமைந்துள்ளது' – (பா.பி., அர. பதிப்புகளின் குறிப்பு)*

2256. புகழ்வீர் கண்ணன்
தகைசே ரமரர்
தொகையோ டசுரப்
பகைதீர்ப் பதையே- 5

2257. தீர்ப்பான் இருளைப்
பேர்ப்பான் கலியை
ஆர்ப்பா ரமரர்
பார்ப்பார் தவமே! 6

2258. தவறா துணர்வீர்
புவியீர் மாலும்
சிவனும் வானோர்
எவரும் ஒன்றே. 7

2259. ஒன்றே பலவாய்
நின்றோர் சக்தி
என்றுந் திகழும்
குன்றா வொளியே! 8

# 211. விடுதலை வெண்பா*

2260. சக்தி பதமே சரணென்று நாம்புகுந்து
பக்தியினாற் பாடிப் பலகாலும் - முக்திநிலை
காண்போ மதனாற் கவலைப் பிணிதீர்ந்து
பூண்போம் அமரப் பொறி. 1

2261. பொறிசிந்தும் வெங்கனல்போற் பொய்தீர்ந்து தெய்வ
வெறிகொண்டா லாங்கதுவே வீடாம் - நெறிகொண்ட
வையமெலாந் தெய்வ வலியன்றி வேறில்லை
ஐயமெலாந் தீர்ந்த தறிவு. 2

2262. அறிவிலே தோன்றில் அவனியிலே தோன்றும்
வறிஞராய்ப் பூமியிலே வாழ்வீர் – குறிகண்டு
செல்வமெலாம் பெற்றுச் சிறப்புறவே சக்திதரும்
வெல்வயிரச் சீர்மிகுந்த வேல். 3

2263. வேலைப் பணிந்தால் விடுதலையாம் வேன்முருகன்
காலைப் பணிந்தாற் கவலைபோம் - மேலறிவு
தன்னாலே தான்பெற்று சக்திசக்தி சக்தியென்று
சொன்னா லதுவே சுகம். 4

.......................................

* பாடல் அந்தாதித் தொடையாய் அமைந்துள்ளது - (பா.பி., அர. பதிப்புகளின் குறிப்பு)

2264. சுகத்தினை நான்வேண்டித் தொழுதேன்எப் போதும்
அகத்தினிலே துன்புற் றழுதேன் - யுகத்தினிலோர்
மாறுதலைக் காட்டி வலிமை நெறிகாட்டி
ஆறுதலைத் தந்தா ளவள். 5

## 212. விடுதலை
## சிட்டுக்குருவி*

பல்லவி

2265. விட்டு விடுதலை யாகிநிற்பா யிந்தச்
சிட்டுக் குருவியைப் போல. (விட்டு) 1

சரணங்கள்

2266. எட்டுத் திசையும் பறந்து திரிகுவை
ஏறியக் காற்றில் விரைவொடு நீந்துவை
மட்டுப் படாதெங்கும் கொட்டிக் கிடக்குமிவ்
வானொளி யென்னு மதுவின் சுவையுண்டு (விட்டு) 2

2267. பெட்டையி னோடின்பம் பேசிக் களிப்புற்று
பீடையி லாதொர்[1] கூடுகட்டிக் கொண்டு
முட்டைதருங் குஞ்சைக் காத்துமகிழ் வெய்தி
முந்த வுணவு கொடுத்தன்பு செய்திங்கு (விட்டு) 3

2268. முற்றத்தி லேயுங் கழனி வெளியிலு
முன்கண்ட தானியம் தன்னைக் கொணர்ந்துண்டு
மற்றப் பொழுது கதைசொல்லித் தூங்கிப்பின்
வைகறை யாகுமுன் பாடி விழிப்புற்று (விட்டு) 4

* "சிட்டுக் குருவியைப் போலே" – (அர.)

(பா-டு): 1 'பீடையிலாததொர்' – (பா.பி., அர.)
'பீடையிலாதவோர்' – (கவிமணி)

# 213. பெண்கள் விடுதலைக் கும்மி

காப்பு

2269. பெண்கள் விடுதலை பெற்ற மகிழ்ச்சிகள்
பேசிக்க ளிப்பொடு நாம்பாடக்
கண்களி லேயொளி போல வுயிரில்
கலந்தொளிர் தெய்வநற் காப்பாமே. 1

2270. கும்மி யடிதமிழ் நாடு முழுதுங்
குலுங்கிடக் கைகொட்டிக் கும்மியடி
நம்மைப் பிடித்த பிசாசுகள் போயின
நன்மைகண் டோமென்று கும்மியடி. (கும்மி) 2

2271. ஏட்டையும் பெண்கள் தொடுவது தீமையென்
றெண்ணி யிருந்தவர் மாய்ந்து விட்டார்
வீட்டுக்குள் ளேபெண்ணைப் பூட்டிவைப் போமென்ற
விந்தை மனிதர் தலைகவிழ்ந்தார். (கும்மி) 3

2272. மாட்டை யடித்து வசக்கித் தொழுவினில்
மாட்டும் வழக்கத்தைக் கொண்டுவந்தே
வீட்டினி லெம்மிடங் காட்டவந் தாரதை
வெட்டிவிட் டோமென்று கும்மியடி. (கும்மி) 4

**2273.** நல்ல விலைகொண்டு நாயை விற்பாரந்த
நாயிடம் யோசனை கேட்பதுண்டோ?
கொல்லத் துணிவின்றி நம்மையு மந்நிலை
கூட்டிவைத் தார்பழி கூட்டிவிட்டார். (கும்மி) 5

**2274.** கற்பு நிலையென்று சொல்லவந் தாரிரு
கக்ஷிக்கு மஃது பொதுவில் வைப்போம்
வற்புறுத் திப்பெண்ணைக் கட்டிக் கொடுக்கும்
வழக்கத்தைத் தள்ளி மிதித்திடுவோம். (கும்மி) 6

**2275.** பட்டங்க ளாள்வதுஞ் சட்டங்கள் செய்வதும்
பாரினிற் பெண்கள் நடத்தவந்தோம்
எட்டு மறிவினி லாணுக்கிங் கேபெண்
இளைப்பில்லை காணென்று கும்மியடி. (கும்மி) 7

**2276.** வேதம் படைக்கவும் நீதிகள் செய்யவும்
வேண்டிவந் தோமென்று கும்மியடி
சாதம் படைக்கவுஞ் செய்திடு வோந்தெய்வச்
சாதி படைக்கவுஞ் செய்திடுவோம். (கும்மி) 8

**2277.** காத லொருவனைக் கைப்பிடித் தேயவன்
காரியம் யாவிலுங்[1] கைகொடுத்து
மாதர றங்கள் பழமையைக் காட்டிலும்
மாட்சி பெறச்செய்து வாழ்வமடி. (கும்மி) 9

---

*(பா-ு): 1 'யாவினுங் - (பா.பி., அர.)*

## 214. பாரத மாதா

*தான தனந்தன தான தனந்தன*
*தானனத் தானானே.*

2278. முன்னை யிலங்கை அரக்கர் அழிய
முடித்தவில் யாருடைவில்? – எங்கள்
அன்னை பயங்கரி பாரத தேவிநல்
ஆரிய ராணியின் வில். *1*

2279. இந்திர சித்தன் இரண்டுதுண் டாக
எடுத்தவில் யாருடைவில்? – எங்கள்
மந்திரத் தெய்வதம் பாரத ராணி
வயிரவி தன்னுடை வில். *2*

2280. ஒன்று பரம்பொருள் நாமதன் மக்கள்
உலகின்பக் கேளி[1] யென்றே – மிக
நன்றுபல் வேதம் வரைந்தகை பாரத
நாயகி தன்திருக் கை. *3*

2281. சித்த மயமிவ் வுலகம் உறுதிநம்
சித்தத்தில் ஓங்கிவிட்டால் – துன்பம்
அத்தனையும் வெல்ல லாமென்று சொன்னசொல்
ஆரிய ராணியின் சொல். *4*

---

*(பா-டு): 1 'உலகின்பக் கேணி' - (அர.)*

**2282.** சகுந்தலை பெற்றதோர் பிள்ளைசிங் கத்தினைத்
தட்டி விளையாடி – நன்
றுகந்ததோர் பிள்ளைமுன் பாரத ராணி
ஒளியுறப் பெற்றபிள் ளை. 5

**2283.** காண்டிவ மேந்தி உலகினை வென்றது
கல்லொத்த தோளெவர்தோள்? - மை
ஆண்டருள் செய்பவள், பெற்று வ பவள்
ஆரியர் தேவியின்[1] தோள். 6

**2284.** சாகும் பொழுதில் இருசெவிக் குண்டலம்
தந்ததெ வர்கொடைக்கை? – சுவைப்
பாகு மொழியிற் புலவர்கள் போற்றிடும்
பாரத ராணியின் கை. 7

**2285.** போர்க்களத் தேபர ஞானமெய்க் கீதை
புகன்ற தெவருடை வாய்? – பகை
தீர்க்கத் திறந்தரு பேரினள் பாரத
தேவி மலர்த்திரு வாய். 8

**2286.** தந்தை யினிதுறத் தானர சாட்சியும்
தையலர் தம்முறவும் - இனி
இந்த உலகில் விரும்புகி லேனென்ற
தெம்மனை செய்த வுள்ளம். 9

**2287.** அன்பு சிவம்உல கத்துயர் யாவையும்
அன்பினிற் போகுமென்றே - இங்கு
முன்பு மொழிந்துல காண்டதோர் புத்தன்
மொழியெங்கள் அன்னை மொழி. 10

..................................

(பா-டு): 1 ஆரியதேவியின் - (அர.)

2288. மிதிலை எரிந்திட வேதப் பொருளை
வினவும் சனகன் மதி - தன்
மதியினிற் கொண்டதை நின்று முடித்தது[1]
வல்லநம் அன்னை மதி. 11

2289. தெய்விகச் சாகுந் தலமெனும் நாடகம்
செய்த தெவர்கவிதை?[2] - அயன்
செய்வத னைத்தின் குறிப்புணர் பாரத
தேவிய ருட்க விதை.[3] 12

........................................

(பா-டு): 1 'நின்று முடிப்பது' - (பா.பி., அர.)
2 'செய்ததெவர் சரிதை' - (அர.)
3 'தேவி அருட் சரிதை' - (அர.)

## 215. பாரத மாதா நவரத்ந மாலை

(இந்நூலில் ஒன்பது பாடலிலும் முறையே ஒன்பது இரத்தினங்களின் பெயர்கள் இயற்கைப் பொருளிலேனும் சிலேடைப் பொருளிலேனும் வழங்கப்பட்டிருத்தல் காண்க.)

காப்பு

2290. வீரர்முப் பத்திரண்டு கோடி விளைவித்த
பாரதமா தாவின் பதமலர்க்கே - சீரார்
நவரத்ன மாலையிங்கு நான்சூட்டக் காப்பாம்;
சிவரத்ந[1] மைந்தன்* திறம்.

வெண்பா

2291. திறமிக்க நல்வயிரச் சீர்திகழு மேனி
அறமிக்க சிந்தை; அறிவு - பிறநலங்கள்
எண்ணற் றனபெறுவார் "இந்தியா" என்றநின்றன்
கண்ணொத்த பேருரைத்தக் கால். 1

கட்டளைக் கலித்துறை

2292. காலன் எதிர்ப்படிற் கைகூப்பிக்
கும்பிட்டுக் கம்பனமுற்

---

*சிவரத்ந மைந்தன் -சிவமாகிய ரத்னத்திற்குப் பிறந்த மைந்தன்; விநாயகன்.
(பா-டு): 1 'சிவரத்ன' - (அர.)

றோலமிட் டோடி மறைந்தொழி
வான்பகை யொன்றுளதோ?
நீலக் கடலொத்த கோலத்தி
னாள்;மூன்று நேத்திரத்தாள்*
காலக் கடலுக்கொர்[1] பாலமிட்
டாள்அன்னை காற்பதமே 2

எண்சீர்க்கழிநெடி லாசிரிய விருத்தம்

2293. அன்னையே, அந்நாளில் அவனிக் கெல்லாம்
ஆணிமுத்துப் போன்றமணி மொழிக ளாலே
பன்னிநீ வேதங்கள், உபநிட தங்கள்,
பரவுபுகழ்ப் புராணங்கள், இதிஹா ஸங்கள்
இன்னும்பன் னூல்களிலே யிசைத்த ஞானம் -
என்னென்று புகழ்ந்துரைப்போம் அதனை யிந்நாள்?
மின்னுகின்ற பேரொளிகாண்! காலங் கொன்ற
விருந்துகாண்! கடவுளுக்கோர் வெற்றி காணே. 3

ஆசிரியப்பா

2294. வெற்றி கூறுமின் வெண்சங் கூதுமின்!
கற்றவ ராலே உலகுகாப் புற்ற
துற்றதிங் கிந்நாள்! உலகினுக் கெல்லாம்
இற்றைநாள் வரையினும், அறமிலா மறவர்,
குற்றமே தமது மகுடமாக் கொண்டோர் 5
மற்றை மனிதரை யடிமைப் படுத்தலே
முற்றிய அறிவின் முறையென் றெண்ணுவார்;

* மூன்று நேத்திரத்தாள் - இங்குப் பாரதமாதாவை லோக மாதாவாகிய உமாதேவியாகப் பாவனை செய்யப்பட்டிருக்கின்றது.

(பா-டு): 1 'காலக்கடலுக்கோர்' – (பா.பி., அர.)

பற்றை யரசர்தம் பழிபடு படையுடன்[1]
சொற்றை நீதி தொகுத்துவைத் திருந்தார்.
இற்றைநாள்; 10
பாரி லுள்ள பலநாட் டினர்க்கும்
பாரத நாடு புதுநெறி பழக்க
லுற்றதிங் கிந்நாள் - உலகெலாம் புகழ
இன்ப வளஞ்*செறி பண்பல பயிற்றுங்
கவீந்திர னாகிய ரவீந்திர நாதன் 15
சொற்றது கேளீர் – "புவிமிசை யின்று
மனிதர்க் கெல்லாந் தலைப்படு மனிதன்,
தர்மமே யுருவாம், மோஹன தாஸ
கர்ம சந்த்ர காந்தி"[2]யென் றுரைத்தான்.
அந்தகைய காந்தியை அரசியல் நெறியிலே 20
தலைவனாக் கொண்டு புவிமிசைத் தருமமே
அரசிய லதனிலும், பிறஇய லனைத்திலும்
வெற்றி தருமென வேதஞ் சொன்னதை
முற்றும் பேண முற்பட்டு நின்றார்,
பாரத மக்கள். இதனாற் படைஞர்தஞ் 25
செருக்கொழிந் துலகி லறந்திறம் பாத
கற்றோர் தலைப்படக் காண்போம் – விரைவிலே.
(வெற்றி கூறுமின்; வெண்சங் கூதுமின்!)

தரவு கொச்சகக்கலிப்பா

**2295.** ஊதுமினோ வெற்றி!
ஒலிமினோ வாழ்த்தொலிகள்!

---

* "இன்பவளம்" என்பதில் பவளம் எனற மணியின் பெயர் அமைந்திருப்பது காண்க.

(பா-டு): 1 'பற்றையரசர் பழிபடுபடையுடன்' - (பா.பி., அர.)
2 'கர்மசந்திர காந்தி' – (பா.பி., அர.)

ஓதுமினோ வேதங்கள்!
ஓங்குமினோ! ஓங்குமினோ!
தீதுசிறி தும்பயிலாச்
செம்மணிமா நெறி*கண்டோம்
வேதனைக ளினிவேண்டா;
விடுதலையோ திண்ணமே. 5

வஞ்சி விருத்தம்

2296. திண்ணங் காணீர்! பச்சை
வண்ணன் பாதத் தாணை;
எண்ணங் கெடுதல் வேண்டா,
திண்ணம் விடுதலை திண்ணம் 6

கலிப்பா†

2297. 'விடுத லைபெறு வீர்விரை வாநீர்
வெற்றி கொள்ளுவீர்'[1] என்றுரைத் தெங்கும்
கெடுத லின்றிநந் தாய்த்திரு நாட்டின்
கிளர்ச்சி தன்னை வளர்ச்சிசெய் கின்றான்.
'சுடுத லுங்குளி ரும்உயிர்க் கில்லை;
சோர்வு, வீழ்ச்சிகள் தொண்டருக் கில்லை;
எடுமி னோஅறப் போரினை' யென்றான்
எங்கோ மேதக மேந்திய காந்தி 7

---

* செம்மணி மா நெறி – செவ்விய, அழகிய, பெரிய நெறி; அஃது ஒத்துழையாமை. செம்மணி - மாணிக்கம்.
† விவரம் பின்னிணைப்பில் காண்க

குறிப்பு: கோமேதகம் என்ற ரத்நப் பெயர் தொனித்தல் காண்க.

(பா-டு): 1 'வெற்றி கொள்வீர்' - (பா.பி.)
2 'உயிருக் கில்லை' - (அர.)

அறுசீர் விருத்தம்

2298. காந்திசேர் பதும ராகக்
கடிமலர் வாழ்ஸ்ரீ தேவி,
போந்துநிற் கின்றா ளின்று
பாரதப் பொன்னா டெங்கும்.
மாந்தரெல் லாருஞ்[1] சோர்வை
அச்சத்தை மறந்து விட்டார்;
காந்திசொற் கேட்டார், காண்பார்
விடுதலை கணத்தி னுள்ளே. 8

எழுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்

2299. கணமெனு மென்றன் கண்முனே வருவாய்,
பாரத தேவியே, கனல்கால்
இணைவிழி, வால வாய*மாஞ் சிங்க
முதுகினி லேறிவீற் றிருந்தே.
துணைநினை வேண்டு, நாட்டினர்க் கெல்லாந்
துயர்கெட விடுதலை யருளி
மணிநகை புரிந்து திகழ்திருக் கோலங்
கண்டுநான் மகிழ்ந்திடு மாறே. 9

*வால் அவாயமாம் சிங்கம் - பயங்கரமான வாலினை யுடைய சிங்கம். வாலவாயம் என்பது வைடூர்யத்தின் பெயர்.

(பா-டு): 1 'மாந்தரெல்லோரும்' – (அர.)

## 216. மஹாத்மா காந்தி பஞ்சகம்

2300. வாழ்கநீ! எம்மான், இந்த
வையத்து நாட்டி லெல்லாந்
தாழ்வுற்று வறுமை மிஞ்சி,
விடுதலை தவறிக் கெட்டுப்
பாழ்பட்டு நின்ற தாமோர்
பாரத தேசந் தன்னை
வாழ்விக்க வந்த காந்தி
மஹாத்ம![1] நீ வாழ்க, வாழ்க! 1

2301. அடிமைவாழ் வகன்றிந் நாட்டார்
விடுதலை யார்ந்து செல்வம்,
குடிமையி லுயர்வு, கல்வி,
ஞானமுங் கூடி யோங்கிப்
படிமிசைத் தலைமை யெய்தும்
படிக்கொரு சூழ்ச்சி செய்தாய்
முடிவிலாக் கீர்த்தி பெற்றாய்
புவிக்குளே முதன்மை யுற்றாய். 2

(வேறு)

2302. கொடியவெங் நாக பாசத்தை மாற்ற
மூலிகை கொணர்ந்தவ னென்கோ?

.............................................

(பா-டு): 1 'மஹாத்மா' - (பா.பி., அர.)

இடிமின்னல் காக்கும்[1] குடைசெய்தா னென்கோ?
என்சொலிப் புகழ்வதிங் குனையே?
விடிவிலாத் துன்பஞ் செயும்பரா தீன
வெம்பிணி யகற்றிடும் வண்ணம்
படிமிசைப் புதிதாச் சாலவு மெளிதாம்
படிக்கொரு சூழ்ச்சிநீ படைத்தாய்! 3

2303. தன்னுயிர் போலே தனக்கழி வெண்ணும்
பிறனுயிர் தன்னையுங் கணித்தல்;
மன்னுயி ரெல்லாங் கடவுளின் வடிவம்
கடவுளின் மக்களென் றுணர்தல்;
இன்னமெய்ஞ் ஞானத் துணிவினை மற்றாங்
கிழிபடு, போர்,கொலை, தண்டம்
பின்னியே கிடக்கும் அரசிய லதனிற்
பிணைத்திடத் துணிந்தனை பெருமான்! 4

2304. பெருங்கொலை வழியாம் போர்வழி யிகழ்ந்தாய்;
அதனிலுந் திறன்பெரி துடைத்தாம்
அருங்கலை வாணர் மெய்த்தொண்டர் தங்கள்
அறவழி யென்றுநீ யறிந்தாய்;
நெருங்கிய பயன்சேர் ''ஒத்துழை யாமை''
நெறியினால் இந்தியா விற்கு
வருங்கதி கண்டு பகைத்தொழில் மறந்து
வையகம் வாழ்கநல் லறத்தே. 5

............................................

*(பா-டு): 1 'இடிமின்னல் தாங்கும்' – (அர.)*

## 217. நாட்டுக் கல்வி

(ஆங்கிலத்தில் ரவீந்திரநாதர் எழுதிய பாடலின் மொழிபெயர்ப்பு)

2305. விளக்கி லேதிரி நன்கு சமைந்தது
மேவுவீர் இங்கு தீக்கொண்டு தோழரே!
களக்க முற்ற இருள்கடந் தேகுவார்
காலைச் சோதிக் கதிரவன் கோவிற்கே;
துளக்க முற்றவிண் மீனிடம் செல்லுவார்
தொகையில் சேர்ந்திட உம்மையும் கூவினார்;
களிப்பு மிஞ்சி ஒளியினைப் பண்டொரு
காலம் நீர்சென்று தேடிய தில்லையோ? 1

2306. அன்று நுங்கள் கொடியினை முத்திட்டே
ஆசை யென்றவிண் மீன்ஒளிர் செய்ததே;
துன்று நள்ளிருள் மாலை மயக்கத்தால்
சோம்பி நீரும் வழிநடை பிந்தினீர்;
நின்ற விந்தன நுங்கள் விளக்கெலாம்;
நீங்கள் கண்ட கனாக்களெல் லாம்இசை
குன்றித் தீக்குறி தோற்றும்;[1] இராப்புட்கள்
கூவு மாறொத் திருந்தன காண்டிரோ? 2

..............................

(பா-டு): 1 'தோன்றும்' – (அர.)

2307. இன்னு மிங்கிருள் கூடி யிருப்பினும்
ஏங்கு கின்ற நரகத் துயிர்கள்போல்
இன்னு மிங்கு வனத்திடைக் காற்றுத்தான்[1]
ஏங்கும் ஓதை[2] இருந்திடும் ஆயினும்
முன்னைக் காலத்தி னின்றெழும் பேரொலி
முறைமு றைபல ஊழியின் ஊடுற்றே
பின்னை இங்குவந் தெய்திய பேரொலி
போல மந்திர வேதத்தின் பேரொலி. 3

2308. "இருளை நீக்கி ஒளியினைக் காட்டுவாய்,
இறப்பை நீக்கி, அமிர்தத்தை ஊட்டுவாய்"
அருளும் இந்த மறையொலி வந்திங்கே
ஆழ்ந்த தூக்கத்தில் வீழ்ந்திருப் பீர்தமைத்
தெருள்உ றுத்தவும் நீர்எழு கில்லிரோ?
தீயநாச உறக்கத்தில் வீழ்ந்தநீர்
மருளை நீக்கி அறிதிர் அறிதிரோ
வான்ஒ ளிக்கு மகாஅர்இ யாம்என்றே. 4

(பா-டு): 1 'வனத்திடை காற்றுத்தான்' – (பா.பி., அர.)
2 'ஓங்கும் ஓதை' – (பா.பி., அர.)

## 218. தமிழ் மொழி வாழ்த்து*

*தான தனத்தன தான தனத்தன*
*தான தந்தா னே.*

**2309.** வாழ்க நிரந்தரம் வாழ்க தமிழ்மொழி
வாழிய வாழியவே.
வான மளந்த தனைத்து மளந்திடும்[1]
வண்மொழி வாழியவே.
ஏழ்கடல் வைப்பினுந் தன்மணம் வீசி
யிசைகொண்டு வாழியவே.
எங்கள் தமிழ்மொழி எங்கள் தமிழ்மொழி
என்றென்றும் வாழியவே.
சூழ்கலி நீங்கத் தமிழ்மொழி யோங்கத்
துலங்குக வையகமே.

.......................................

* 'தமிழ் மொழி வாழ்த்து' என்ற இந்தப் பாடல் பன்னிருசீர்க் கழி நெடிலடி ஆசிரிய விருத்தம். பாடுதற்கு உரிய சந்தக் குழிப்பே 'தான தனத்தன' என்று அமைவது. இதனை ஒரே விருத்தப் பாடல் என உணராமல் சந்தக் குறிப்பைக் கட்டளை யடியாக நினைத்து 1 முதல் 8 வரை எண்குறித்துள்ளனர். மேலும், இதன் சில வரிகள் முன்பின்னாகக் குழம்பி, சுதேச கீதங்கள் முதற் பகுதியிலும் வெளியிடப்பட்டுள்ளன. யாப்பியல் மரபு அறியாமையாற் போலும் இப்படி ஒரு பிழையினைப் பதிப்பாளர்கள் செய்தனர். - மேலும் விவரங்கள் பின்னிணைப்பில்.

- பதிப்பாசிரியர்

(பா-டு): 1 வான மளந்த தனைத்து மளந்திடு -
(சுதேச கீதங்கள் - முதற்பாகம்)

தொல்லை வினைதரு தொல்லை யகன்று
சுடர்க தமிழ்நாடே.
வாழ்க தமிழ்மொழி வாழ்க தமிழ்மொழி
வாழ்க தமிழ்மொழியே.
வானம் அறிந்த தனைத்தும் அறிந்து
வளர்மொழி வாழியவே.

# 219. பிஜித் தீவிலே ஹிந்து ஸ்திரீகள்

ஹரிகாம்போதிஜன்யம் – ராகம் – ஸைந்தவி –
திஸ்ரசாப்புதாளம்

பல்லவி

2310. கரும்புத் தோட்டத்திலே - ஆ
கரும்புத் தோட்டத்திலே. 1

சரணங்கள்

2311. கரும்புத் தோட்டத்திலே - அவர்
கால்களும் கைகளும் சோர்ந்து விழும்படி
வருந்து கின்றனரே – ஹிந்து
மாதர்தன் னெஞ்சு[1] கொதித்துக் கொதித்துமெய்
சுருங்கு கின்றனரே - அவர்
துன்பத்தை நீக்க வழியில்லை யோவொரு
மருந்திதற் கிலையோ – செக்கு
மாடுகள் போலுழைத் தேங்குகின் றாரந்தக்
(கரும்புத் தோட்டத்திலே) 2

---

* 'கரும்புத் தோட்டத்திலே' - (அர.)

(பா-டு): 1 'மாதர்தம் நெஞ்சு' (கவிமணி, அர.)

**2312.** பெண்ணென்று சொல்லிடிலோ - ஒரு
பேயுமிரங்கு மென்பார் தெய்வமே - நின
தெண்ண மிரங்காதோ - அந்த
ஏழைக ளங்கு சொரியுங் கண்ணீர் வெறும்
மண்ணிற் கலந்திடுமோ - தெற்கு
மாகடலுக்கு நடுவினிலே யங்கோர்[1]
கண்ணற்ற தீவினிலே - தனிக்
காட்டினிற் பெண்கள் புழுங்குகின்றா ரந்தக்
(கரும்புத் தோட்டத்திலே) 3

**2313.** நாட்டை நினைப்பாரோ – எந்த
நாளினிப் போயதைக் காண்பதென்றே யன்னை
வீட்டை நினைப்பாரோ - அவர்
விம்மி விம்மிவிம்மி விம்மி யழுங்குரல்
கேட்டிருப்பாய் காற்றே - துன்பக்
கேணியிலே யெங்கள் பெண்க ளழுதசொல்
கேட்டிருப்பாய் காற்றே[2] - அவர்
விம்மி யழவுந் திறங்கெட்டுப் போயினர்.
(கரும்புத் தோட்டத்திலே) 4

**2314.** நெஞ்சங் குமுறுகிறார் – கற்பு
நீங்கிடச் செய்யுங் கொடுமையி லேயந்தப்
பஞ்சை மகளிரெல்லாம் - துன்பப்
பட்டு மடிந்து மடிந்து மடிந்தொரு
தஞ்சமு மில்லாதே – அவர்
சாகும் வழக்கத்தை இந்தக் கணத்தினில்

---

*(பா-டு): 1 'அங்கோர்' - (கவிமணி, அர.)*
*2 'மீட்டு முரையாயோ' - (பா.பி. அர.)*

மிஞ்ச விடலாமோ – ஹே
வீர கராளி, சாமுண்டி காளீ.[1]
(கரும்புத் தோட்டத்திலே) 5

(பா-டு): 1 'காளி' - (பா.பி.)

## 220. சித்தாந்தச்சாமி கோயில்

2315 சித்தாந்தச் சாமி திருக்கோயில் வாயிலில்
தீப வொளி யுண்டாம் – பெண்ணே
முத்தாந்த வீதி முழுதையுங் காட்டிட
மூண்ட திருச் சுடராம் - பெண்ணே. 1

2316. உள்ளத் தழுக்கும் உடலிற் குறைகளும்
ஓட்ட வருஞ் சுடராம் – பெண்ணே
கள்ளத் தனங்க ளனைத்தும் வெளிப்படக்
காட்ட வருஞ்சுடராம் - பெண்ணே. 2

2317. தோன்று முயிர்க ளனைத்துநன் றென்பது
தோற்ற முறுஞ்சுடராம் – பெண்ணே
மூன்று வகைப்படு காலநன் றென்பதை
முன்ன ரிடுஞ்சுடராம் – பெண்ணே. 3

2318. பட்டினந் தன்னிலும் பாக்க[1] நன்றென்பதை
பார்க்க வொளிர்சுடராம்[2] – பெண்ணே
கட்டு மனையிலுங் கோயில்நன் றென்பதைக்
காண வொளிர்சுடராம்[3] – பெண்ணே. 4

........................................

(பா-டு): 1 'பட்டினந்தன்னிலும் பார்க்க' - (அர.)
'பாக்க' என்பது பிழை - பதிப்பாசிரியர்
2 'பார்க்க வொளிர்ச் சுடராம்' - (பா.பி.)
3 'காண வொளிர்ச் சுடராம்' - (பா.பி.)
இரண்டிடத்தும் சகரம் மிக்கது பிழையாகும். - பதிப்பாசிரியர்

## 221. கண்ணன் பிறப்பு*

**2319.** கண்ணன் பிறந்தான் - எங்கள்
கண்ணன் பிறந்தான் - இந்தக்
காற்றதை யெட்டுத் திசையிலுங் கூறிடும்
திண்ண முடையான் - மணி
வண்ண முடையான் - உயர்
தேவர் தலைவன் புவிமிசைத் தோன்றினன். 1

**2320.** பண்ணை யிசைப்பீர் - நெஞ்சிற்
புண்ணை யொழிப்பீர் - இந்தப்
பாரினி லேதுயர் நீங்கிடு மென்றிதை
எண்ணிடைக் கொள்வீர் - நன்கு
கண்ணை விழிப்பீர் - இனி
ஏதுங் குறைவில்லை; வேதந் துணையுண்டு. 2

**2321.** அக்னி[1] வந்தான் - அவன்
திக்கை வளைத்தான் - புவி

---

*எதுகையமைப்பினை அடிப்படையாகக் கொண்டு மொத்தம் மூன்று பாடலாக அரசாங்கப் பதிப்பு அச்சிட்டுள்ளது. அதன்படி இங்குள்ள இரண்டிரண்டு 'பாடல்'களை ஒன்றிணைக்க வேண்டும். அதுவே பொருத்தம் எனத் தோன்றுகிறது. அவ்வாறாயின், இடையிடையே தனியசை அல்லது சீர் பெற்ற அறுசீர் விருத்தங்களாகும். இசைப்பாடலாக இசைக்கப்படும் யாப்பு வடிவங்களில் இவ்வாறு வரும் மரபுண்டு.
- பதிப்பாசிரியர்

(பா-டு): 1 'அக்கினி' – (பா.பி., அர.)
இத்திருத்தமே பொருத்தமான பாடம்.
- பதிப்பாசிரியர்

யாரிருட் பொய்மைக் கலியை மடித்தனன்
துக்கங் கெடுத்தான் - சுரர்
ஒக்க லும்வந்தார் - சுடர்ச்
சூரியன், இந்திரன், வாயு, மருத்துக்கள் 3

2322. மிக்க திரளாய் - சுரர்
இக்கணந் தன்னில் - இங்கு
மேவி நிறைந்தனர் பாவி யசுரர்கள்
பொக்கென வீழ்ந்தார் - உயிர்
கக்கி முடிந்தார் - கடல்
போல ஒலிக்குது வேதம் புவியிசை. 4

2323. சங்கரன் வந்தான் - இங்கு
மங்கல மென்றான் நல்ல
சந்திரன் வந்தின் னமுதைப் பொழிந்தனன்;
பங்கமொன் றில்லை - ஒளி
மங்குவ தில்லை - இந்தப்
பாரினர் கண்[1]முன்பு வானத்தி லேநின்று 5
(கண்ணன் பிறந்தான்)

2324. கங்கையும் வந்தாள் - கலை
மங்கையும் வந்தாள் - இன்பக்
காளி, பராசக்தி அன்புட னெய்தினள்
செங்கம லத்தாள் - எழில்
பொங்கு முகத்தாள் - திருத்
தேவியும் வந்து சிறப்புற நின்றனள் 6
(கண்ணன் பிறந்தான்)

---

(பா-bு): 1 'பாரின்கண்' - (பா.பி., அர.)

## 222. கண்ணன் வரவு*

பல்லவி

**2325.** வருவாய், வருவாய், வருவாய் - **கண்ணா**
வருவாய், வருவாய், வருவாய். *1*

சரணங்கள்†

**2326.** உருவாய் அறிவில் ஒளிர்வாய் - கண்ணா
உயிரின் னமுதாய்ப் பொழிவாய் - கண்ணா
கருவாய் என்னுள் வளர்வாய் - கண்ணா
கமலத் திருவோ டிணைவாய் – கண்ணா. (வருவாய்) 2

**2327.** இணைவாய் எனதா வியிலே - கண்ணா
இதயத் தினிலே யமர்வாய் - கண்ணா
கணைவா யசுரர் தலைகள் – சிதறக்
கடை யூழியிலே படையோ டெழுவாய். (வருவாய்) *3*

**2328.** எழுவாய் கடல்மீ தினிலே – யெழுமோர்
இரவிக் கிணையா உளமீதினிலே
தொழுவேன் சிவனாம் நினையே - கண்ணா
துணையே அமரர் தொழும்வா னவனே. (வருவாய்) 4

---

* *''வருவாய் கண்ணா'' - (அர.)*
† *'சரணங்கள் அந்தாதியாய் அமைந்துள்ளன' - (பா. பி.)*

## 223. கண்ணன் துதி*

**2329.** காயிலே புளிப்பதென்னே?
கண்ண பெருமானே! - நீ
கனியிலே இனிப்பதென்னே?
கண்ண பெருமானே!
நோயிலே படுப்பதென்னே?
கண்ண பெருமானே! - நீ
நோன்பிலே உயிர்ப்பதென்னே?
கண்ண பெருமானே! 1

**2330.** காற்றிலே குளிர்ந்த தென்னே?
கண்ண பெருமானே! - நீ
கனலிலே சுடுவதென்னே?
கண்ண பெருமானே!
சேற்றிலே குழம்பலென்னே?
கண்ண பெருமானே![1]
திக்கிலே தெளிந்ததென்னே?
கண்ண பெருமானே? 2

**2331.** ஏற்றிநின்னைத் தொழுவதென்னே?
கண்ண பெருமானே![2]

---

* 'கண்ண பெருமானே' - (அர.)

(பா-டு): 1, 2 குறிப்பிட்ட இடங்களில் ''நீ'' என்ற சொல் வருவித்து உரைக்கப்பட்டுள்ளது. - (பா.பி., அர.)

எளியர் தன்னைக்[1] காப்பதென்னே?
கண்ண பெருமானே!
போற்றினோரைக் காப்பதென்னே?
கண்ண பெருமானே! - நீ
பொய்யர் தன்னை[2] மாய்ப்பதென்னே?
கண்ண பெருமானே! - நீ[3] 3

2332. போற்றி! போற்றி! போற்றி! போற்றி!
கண்ண பெருமானே! - நின்
பொன்னடிகள்[4] போற்றி நின்றேன்
கண்ண பெருமானே! 4

---

(பா-டு): 1 எளியர் தம்மைக் - (அர.)
2 பொய்யர் தம்மை - (அர.)
3 'நீ' என்ற சொல் பாரதி பிரசுராலய, அரசாங்க வெளியீடுகளில் நீக்கப்பட்டுள்ளது.
4 பொன்னடி - பா.பி., அர.)

## 224. ஆறு துணை

2333. ஓம்சக்தி ஓம்சக்தி ஓம் - பராசக்தி
ஓம்சக்தி ஓம்சக்தி ஓம்.
ஓம்சக்தி ஓம்சக்தி ஓம்சக்தி - ஓம்சக்தி
ஓம்சக்தி ஓம்சக்தி ஓம்.

2334. கணபதி ராயன் - அவனிரு
காலைப் பிடித்திடுவோம்
குணமுயர்ந் திடவே - விடுதலை
கூடி மகிழ்ந்திடவே.
(ஓம்சக்தி ஓம்சக்தி ஓம்) 1

2335. சொல்லுக் கடங்காவே - பராசக்தி
சூரத் தனங்களெல்லாம்
வல்லமை தந்திடுவாள் - பராசக்தி
வாழியென் றேதுதிப்போம்.
(ஓம்சக்தி ஓம்சக்தி ஓம்) 2

2336. வெற்றி வடிவேலன் - அவனுடை
வீரத்தி னைப்புகழ்வோம்
சுற்றிநில் லாதேபோ! – பகையே!
துள்ளி வருகுதுவேல்.
(ஓம்சக்தி ஓம்சக்தி ஓம்) 3

2337. தாமரைப் பூவினிலே - சுருதியைத்
தனியி ருந்துரைப்பாள்
பூமணித் தாளினையே - கண்ணிலொற்றிப்
புண்ணிய மெய்திடுவோம்.
(ஓம்சக்தி ஓம்சக்தி ஓம்) 4

2338. பாம்புத் தலைமேலே - நடஞ்செயும்
பாதத்தி னைப்புகழ்வோம்
மாம்பழ வாயினிலே - குழலிசை
வண்மை புகழ்ந்திடுவோம்.
(ஓம்சக்தி ஓம்சக்தி ஓம்) 5

2339. செல்வத் திருமகளைத் - திடங்கொண்டு
சிந்தனை செய்திடுவோம்
செல்வமெல் லாந்தருவாள் - நமதொளி
திக்கனைத் தும்பரவும்.
(ஓம்சக்தி ஓம்சக்தி ஓம்) 6

## 225. மனத்திற்கு*

2340. சென்றதினி மீளாது மூட ரேநீர்
எப்போதும் சென்றதையே சிந்தை செய்து
கொன்றழிக்கும் கவலையெனும் குழியில் வீழ்ந்து
குமையாதீர்; சென்றதனைக் குறித்தல் வேண்டாம்.[1]
இன்றுபுதி தாய்ப்[2]பிறந்தோம் என்று நீவிர்
எண்ணமதைத் திண்ணமுற இசைத்துக் கொண்டு
தின்றுவிளை யாடியின்புற் றிருந்து வாழ்வீர்;
தீமையெலாம் அழிந்துபோம் திரும்பி வாரா[3].

---

*'சென்றது மீளாது' - (அர.)

இப்பாடலின் இறுதி நான்கு சீர்கள் மட்டும் மாறிய நிலையில் பாரதி அறுபத்தாறு என்னும் நூலின் 32ஆம் பாடலாக இடம் பெற்றிருக்கிறது.

- பதிப்பாசிரியர்

(பா-டு): 1 'சென்றதனைக் குறித்தல் வேண்டா' - (பாரதி அறுபத்தாறு)
2 'இன்று புதிதாய்' - (பாரதி அறுபத்தாறு)
3 'அஃதின்றிச் சென்றதையே மீட்டு மீட்டும்' - (பாரதி அறுபத்தாறு) பாரதி அறுபத்தாறில் இது குளகச் செய்யுள்.

- பதிப்பாசிரியர்

# 226. நிகழ்கின்ற ஹிந்துஸ்தானமும் வருகின்ற ஹிந்துஸ்தானமும்

## போகின்ற பாரதத்தை சபித்தல்*

**2341.** வலிமை யற்ற தோளினாய் போபோபோ
மார்பி லேஒ டுங்கினாய் போபோபோ
பொலிவி லாமு கத்தினாய் போபோபோ
பொறியி ழந்த விழியினாய் போபோபோ
ஒலியி ழந்த குரலினாய் போபோபோ
ஒளியி ழந்த மேனியாய் போபோபோ
கிலிபி டித்த நெஞ்சினாய் போபோபோ
கீழ்மை யென்றும் வேண்டுவாய் போபோபோ 1

**2342.** இன்று பார தத்திடை நாய்போலே
ஏற்ற மின்றி வாழுவாய் போபோபோ
நன்று கூறி லஞ்சுவாய் போபோபோ
நாணி லாது கெஞ்சுவாய் போபோபோ
சென்று போன பொய்யெலாம் மெய்யாகச்
சிந்தை கொண்டு போற்றுவாய் போபோபோ
வென்று நிற்கு மெய்யெலாம் பொய்யாக
விழிம யங்கி நோக்குவாய் போபோபோ. 2

---

* 'போகின்ற பாரதமும் - வருகின்ற பாரதமும்' - (அர.)

2343. வேறு வேறு பாஷைகள் - கற்பாய்நீ
வீட்டு வார்த்தை கற்கிலாய் போபோபோ
நூறு நூல்கள் போற்றுவாய் - மெய்கூறும்
நூலி லொத்தி யல்கிலாய் போபோபோ
மாறு பட்ட வாதமே - ஐந்நூறு
வாயில் நீள ஓதுவாய் போபோபோ
சேறு பட்ட நாற்றமும் - தூறுஞ்சேர்
சிறிய வீடு கட்டுவாய் போபோபோ. 3

2344. ஜாதி நூறு சொல்லுவாய் போபோபோ
தரும மொன்றி யற்றிலாய் போபோபோ
நீதி நூறு சொல்லுவாய் - காசொன்று
நீட்டி னால்வ ணங்குவாய் போபோபோ
தீது செய்வ தஞ்சிலாய் - நின்முன்னே
தீமை நிற்கி லோடுவாய் போபோபோ
சோதி மிக்க மணியிலே - காலத்தால்
சூழ்ந்த மாசு போன்றனை போபோபோ. 4

## வருகின்ற பாரதத்தை வாழ்த்தல்

2345. ஒளிப டைத்த கண்ணினாய் வாவாவா
உறுதி கொண்ட நெஞ்சினாய் வாவாவா
களிப டைத்த மொழியினாய் வாவாவா
கடுமை கொண்ட தோளினாய் வாவாவா
தெளிவு பெற்ற மதியினாய் வாவாவா
சிறுமை கண்டு பொங்குவாய் வாவாவா
எளிமை கண்டி ரங்குவாய் வாவாவா
ஏறு போல்ந டையினாய் வாவாவா. 1

2346. மெய்மை* கொண்ட நூலையே - அன்போடு
வேத மென்று போற்றுவாய் வாவாவா
பொய்மை கூற லஞ்சுவாய் வாவாவா
பொய்மை நூல்க ளெற்றுவாய் வாவாவா
நொய்மை யற்ற சிந்தையாய் வாவாவா
நோய்க ளற்ற உடலினாய் வாவாவா
தெய்வ சாப நீங்கவே - நங்கள்சீர்த்
தேச மீது தோன்றுவாய் வாவாவா. 2

2347. இளைய பார தத்தினாய் வாவாவா
எதிரி லாவ லத்தினாய் வாவாவா
ஒளியி ழந்த வானிலே[1] - நின்றேறும்
உதய ஞாயி றொப்பவே வாவாவா
களையி ழந்த நாட்டிலே - முன்போலே
களைசி றக்க வந்தனை வாவாவா
விளையு மாண்பு யாவையும் – பார்த்தன்போல்
விழியி னால்வி ளக்குவாய் வாவாவா. 3

2348. வெற்றி கொண்ட கையினாய் வாவாவா
விநய நின்ற நாவினாய் வாவாவா
முற்றி நின்ற வடிவினாய் வாவாவா
முழுமை சேர்மு கத்தினாய் வாவாவா
கற்ற லென்று[2] பொய்கிலாய் வாவாவா
...... ...... ...... ...... ...... ......[3]

---

* மெய்ம்மை, பொய்ம்மை, நொய்ம்மை என்பன செம்மை வடிவங்கள்
- பதிப்பாசிரியர்

(பா-டு): 1 'ஒளியிழந்த நாட்டிலே' – (பா.பி., அர.)
2 'கற்றலொன்று' - (பா.பி., அர.)
3 'கருதி யதி யற்றுவாய் வாவாவா - (பா.பி., அர.)

ஒற்று மைக்கு ழுய்யவே[1] - நாடெல்லாம்
ஒருபெ ருஞ்செ யல்செய்வாய் வாவாவா 4

............................................................

(பா-டு): 1 ஒற்றுமைகளுய்யவே - (அர.)

# 227. அக்னி பகவான்*

## (யாகப் பாட்டு)

இராகம் - புன்னாகவராளி

பல்லவி

2349. தீ வளர்த்திடுவோம் – பெருந்
தீ வளர்த்திடுவோம். 1

2350. ஆவியி னுள்ளும் அறிவி னிடையிலும்
அன்பை வளர்த்திடுவோம் – விண்ணின்
ஆசை வளர்த்திடுவோம் – களி
யாவல் வளர்த்திடுவோம் – ஒரு
தேவி மகனைத் திறமைக் கடவுளைச்
செங்கதிர் வானவனை – விண்ணோர் தமைத்
தேனுக் கழைப்பவனைப் - பெருந்திரள்
சேர்ந்து பணிந்திடுவோம் - வாரீர். (தீ) 2

2351. சித்தத் துணிவினை மானுடர் கேள்வனைத்
தீமை யழிப்பவனை - நன்மை
சேர்த்துக் கொடுப்பவனைப்[1] - பல
சீர்க ளுடையவனை[2] – புவி

---

* "தீ வளர்ந்திடுவோம்" - (அர.)

(பா-டு): 1 சேர்த்துக் கொடுப்பவனை - (பா.பி., அர.)
2 சீர்களுடையவனைப் - (பா.பி., அர.)

அத்தனை யுஞ்சுட ரேறத் திகழ்ந்திடும்
ஆரியர் நாயகனை - உருத்திரன்
அன்புத் திருமகனை - பெருந்திர
ளாகிப் பணிந்திடுவோம் - வாரீர். (தீ) 3

2352. கட்டுக்கள் போக்கி விடுதலை தந்திடுங்
கண்மணி போன்றவனை - எம்மைக்
காவல் புரிபவனைத் - தொல்லைக்
காட்டை யழிப்பவனைத் - திசை
எட்டும் புகழ்வளர்ந் தோங்கிட வித்தைகள்
யாவும் பழகிடவே – புவிமிசை
இன்பம் பெருகிடவே - பெருந்திரள்
எய்திப் பணிந்திடுவோம் - வாரீர். (தீ) 4

2353. நெஞ்சிற் கவலைகள் நோவுகள் யாவையு
நீக்கிக் கொடுப்பவனை - உயிர்
நீளத் தருபவனை - ஒளிர்
நேர்மைப் பெருங்கனலை – நித்தம்
அஞ்சலஞ் சேலென்று கூறி யெமக்குநல்
லாண்மை சமைப்பவனைப் - பல்வெற்றிகள்
ஆக்கிக் கொடுப்பவனைப் - பெருந்திரள்
ஆகிப் பணிந்திடுவோம் - வாரீர். (தீ) 5

2354. அச்சத்தைச் சுட்டங்கு[1] சாம்பரு மின்றி
அழித்திடும் வானவனைச் – செய்கை
ஆற்றுமதிச் சுடரைத் - தடை
யற்றபெ ருந்திறலை – எம்முள்
இச்சையும் வேட்கையும் ஆசையுங் காதலும்

1 'சுட்டங்குச்' என்றிருத்தல் வேண்டும். - பதிப்பாசிரியர்

ஏற்றதோர் நல்லறமும் - கலந்தொளி
ஏறுந் தவக்கனலைப் - பெருந்திரள்
எய்திப் பணிந்திடுவோம் - வாரீர். (தீ) 6

**2355.** வானகத் தைச்சென்று தீண்டுவ னிங்கென்று
மண்டி யெழுந்தழலைக் - கவி
வாணர்க்கு நல்லமுதைத் - தொழில்
வண்ணந் தெரிந்தவனை - நல்ல
தேனையும் பாலையு நெய்யையுஞ் சோற்றையுந்
தீம்பழம் யாவினையும் - இங்கேயுண்டு
தேக்கிக் களிப்பவனைப் - பெருந்திரள்
சேர்ந்து பணிந்திடுவோம் - வாரீர். (தீ) 7

**2356.** சித்திர மாளிகை பொன்னொளிர் மாடங்கள்
தேவத் திருமகளிர் - இன்பந்
தேக்கிடுந் தேனிசைகள் - சுவை
தேறிடு நல்லிளமை - நல்ல
முத்து மணிகளும் பொன்னு நிறைந்த
முழுக்குடம் பற்பலவும் - இங்கேதர
முற்பட்டு நிற்பவனைப் - பெருந்திரள்
மொய்த்துப் பணிந்திடுவோம் - வாரீர். (தீ) 8

## 228. சக்தி*

2357. துன்ப மிலாத நிலையே சக்தி
தூக்க மிலாக்கண் விழிப்பே சக்தி
அன்பு கனிந்த கனிவே சக்தி
ஆண்மை நிறைந்த நிறைவே சக்தி
இன்ப முதிர்ந்த முதிர்வே சக்தி
எண்ணத் திருக்கு மெரியே சக்தி
முன்புநிற் கின்ற தொழிலே சக்தி
முக்தி நிலையின் முடிவே சக்தி. 1

2358. சோம்பர் கெடுக்கும் துணிவே சக்தி
சொல்லில் விளங்கும் சுடரே சக்தி
தீம்பழந் தன்னில் சுவையே சக்தி
தெய்வத்தை யெண்ணும் நினைவே சக்தி
பாம்பை யடிக்கும் படையே சக்தி
பாட்டினில் வந்த களியே சக்தி
சாம்ப ரைப்பூசி மலைமிசை வாழும்
சங்கர னன்புத் தழலே சக்தி. 2

---

* எண்சீர் விருத்தமாக அமைந்துள்ள இப்பாக்களில் ஒவ்வோர் அரையடியும் நேரசையில் தொடங்கி, ஒற்று நீக்கிப் பத்து எழுத்துக்கள் பெற்றுள்ளன - ஒரே ஓர் இடம் தவிர; அங்கும் 'சாம்பர் பூசி' எனத் திருத்தினால் பத்தெழுத்தே. இவ்வாறு கொண்டால், கட்டளைக் கலிப்பாவில் புதுவகை எனலாம்.

- பதிப்பாசிரியர்

2359. வாழ்வு பெருக்கு மதியே சக்தி
மாநிலங் காக்கும் வலியே சக்தி
தாழ்வு தடுக்குஞ் சதிரே சக்தி
சஞ்சல நீக்குந் தவமே சக்தி
வீழ்வு தடுக்கும் விறலே சக்தி
விண்ணை யளக்கும் விரிவே சக்தி
ஊழ்வினை நீக்கும் உயர்வே சக்தி
உள்ளத் தொளிரும் விளக்கே சக்தி. 3

## 229. சமர்ப்பணம்*

2360. இந்த மெய்யும் கரணமும் பொறியும்
இருபத் தேழு வருடங்கள் காத்தனன்[1]
வந்த னம்மடி பேரரு ளன்னாய்!
வைர வீ!திறற் சாமுண்டி! காளி!
சிந்த னைதெளிந் தேனிதை யுந்தன்[2]
திருவ ருட்கென அர்ப்பணஞ் செய்தேன்
வந்தி ருந்து பலபய னாகும்
வகைதெ ரிந்துகொள்[3] வாழி யடிநீ

* "காளிக்கு ஸமர்ப்பணம்" - பிறபதிப்புகள்

(பா-டு): 1 இருபத்தேழு வருடங்கள் காத்தேன் - (பா.பி.)
2 'சிந்தனை தெளிந்தேனிதையின்று' - (பா.பி.)
'சிந்தனை தெளிந்தேனினியுன்றன்' - (அர.)
3 'வந்திருந்து பல பயனாகும் வகைபுரிந்துகொள்' - (பா.பி., அர.)

## 230. நந்தலாலா*

2361. காக்கைச் சிறகினிலே நந்தலாலா - நின்றன்
கரியநிறந் தோன்று தையே நந்தலாலா.
பார்க்கும் மரங்களெல்லாம் நந்தலாலா - நின்றன்
பச்சைநிறந் தோன்று தையே நந்தலாலா.
கேட்கு மொலியிலெல்லாம் நந்தலாலா – நின்றன்
கீதமி சைக்குதடா நந்த லாலா.

.......................................

* பாடலின் நான்காவது அடி இங்கே இல்லை, முழுவடிவத்தையும் பிற விளக்கங்களையும் பின்னிணைப்பில் காண்க.

பாரதி பிரசுராலயத்தார் பிரசுரித்த தொகுதியில்

தீக்குள் விரலை வைத்தால் நந்தலாலா - நின்னைத்
தீண்டு மின்பந் தோன்றுதடா நந்தலாலா.

என்ற பகுதி நான்தாம் பாடலாகக் காணப்படுகின்றது.

ராகம்: யதுகுல காம்போதி - தாளம்: ஆதி - எனவும் பதிப்பிக்கப்பட்டுள்ளது, மற்றுள்ள விவரங்களைப் பின்னிணைப்பில் காண்க.

— பதிப்பாசிரியர்

## 231. மறவன் பாட்டு*

2362. மண்வெட்டிக் கூலிதின லாச்சே - எங்கள்
வாள்வலியும் வேல்வலியும் போச்சே!
விண்முட்டிச் சென்றபுகழ் போச்சே - இந்த
மேதினியில் கெட்டபெய ராச்சே! *1*

2363. நாணிலகு வில்லினொடு தூணி - நல்ல
நாதமிகு சங்கொலியும் பேணி
பூணிலகு திண்கதையும் கொண்டு - நாங்கள்
போர்செய்த காலமெலாம் பண்டு. *2*

2364. கன்னங் கரியவிருள் நேரம் - அதிற்
காற்றும் பெருமழையும் சேரும்
சின்னக் கரியதுணி யாலே - எங்கள்
தேகமெலாம் மூடிநரி போலே. *3*

2365. ஏழை யெளியவர்கள் வீட்டில் - இந்த
ஈன வயிறுபடும் பாட்டில்

........................................

* இயைபுத் தொடை (இறுதி எழுத்துகள் ஒன்றிவருதல்) இதன் இசைப் பாங்குக்குப் பொலிவு தருவது; இப்பாடலின் சிறப்பு அது.

வெளிவந்த பல பதிப்புகளிலும் 'மறவன் பாட்டு'ச் சிதைவுற்ற நிலையிலேயே வெளியாகியிருக்கிறது. 'பாரதி புதையலில்' முழுப் பாடலைக் காணலாம். அந்த முழுமைப் பாடல் பின்னிணைப்பில் உள்ளது.

- பதிப்பாசிரியர்

கோழை யெலிக ளெனவே - பொருள்
கொண்டு வந்து ... ... ... 4

**2366.** முன்னாளில் ஐயரெலாம்[1] வேதம் - ஓதுவார்
மூன்றுமழை பெய்யுமடா மாதம்
இன்னாளி[2] லேபொய்மைப் பார்ப்பார் - இவர்
ஏதுசெய்துங் காசுபெறப் பார்ப்பார். 5

**2367.** பேராசைக் காரனடா பார்ப்பான் - ஆனால்
பெரியதுரை என்னிலுடல் வேர்ப்பான்
யாரானா லுங்கொடுமை ... ...
... ... ... ... ... 6

**2368.** பிள்ளைக்குப் பூணூலா மென்பான் – நம்மைப்
பிச்சுப் பணங்கொடெனத் தின்பான்
கொள்ளைக் கேசென் ... ...
... ... ... ... 7

**2369.** சொல்லக் கொதிக்குதடா நெஞ்சம் - வெறுஞ்
சோற்றுக்கோ வந்ததிந்தப் பஞ்சம்?
... ... ... ... ...
... ... ... ... ... 8

**2370.** நாயும் பிழைக்கு மிந்தப் – பிழைப்பு
நாளெல்லாம் மற்றிதிலே உழைப்பு
பாயும் கடிநாய்ப்போ லீசுக் – காரப்
பார்ப்பானுக் குண்டிதிலே பீசு. 9

---

*(பா-டு): 1 'முன்னாளில் ஐயரெல்லாம்' - (அர.)*
*2 'இந்நாளி' - (அர.)*

2371. சோரந் தொழிலாக்கொள் வோமோ? - முந்தைச்
சூரர் பெயரைஅழிப் போமோ?
வீர மறவர்நா மன்றோ? - இந்த
வீண்வாழ்க்கை வாழ்வதினி நன்றோ? 10

## 232. மனத்திற்குக் கட்டளை

2372. பேயா உழலுஞ்[1] சிறுமனமே
பேணா யென்சொல் இன்றுமுதல்
நீயா ஒன்றும்[2] நாடாதே
நினது தலைவன் யானேகாண்
தாயாம் சக்தி தாளினிலும்
தருமம் எனயான் குறிப்பதிலும்
ஓயா தேநின் றுழைத்திடுதி[3]
உரைத்தேன் அடங்கி உய்யுதியால்.

---

*(பா - டு): 1 'பேயா யுழலுஞ்' (பா.பி., அர.)*
*2 'நீயா யொன்றை' (பா.பி., அர.)*
*3 'ஓயா தேநின் றுழைத்திடுவாய்' (பா.பி., அர.)*

## 233. அக்கினிக் குஞ்சு

2373. அக்கினிக் குஞ்சொன்று கண்டேன் – அதை
அங்கொரு காட்டிலோர் பொந்திடை வைத்தேன்
வெந்து தணிந்தது காடு - தழல்
வீரத்திற் குஞ்சென்று மூப்பென்று முண்டோ?
தத்தரிகிட தத்தரிகிட தித்தோம்.

# 234. கோமதி மஹிமை

(என்னும் சங்கரநயினார் கோயில் ஆவுடையம்மையின் புகழ்)

·இரண்டாவது சங்கரநாராயணச் சருக்கம்*

(சிவபிரான் தானும் திருமாலும் ஒரு பொருளென்றுணர்த்தி ஒருவடிவங் காட்டிய சரித்திரம்)

**2374.** தாருக வனத்தினிலே[1] - சிவன்
சரணநன் மலரிடை யுளம்பதித்துச்
சீருறத் தவம்புரிவார் – பர
சிவன்புக ழமுதினை யருந்திடுவார்
பேருயர் முனிவர்முன்னே - கல்விப்
பெருங்கடல் பருகிய சூதனென்பான்
தேருமெய்ஞ் ஞானத்தினால் - உயர்
சிவனிகர் முனிவரன் செப்புகின்றான்:- 1

**2375.** வாழிய முனிவர்களே - புகழ்
வளர்ந்திடுஞ் சங்கரன் கோயிலிலே

.........................................

* *பிற்காலப் பதிப்புக்களில் பாரதி குறித்த "இரண்டாவது சங்கர நாராயணச் சருக்கம்" என்பது விடப்பட்டுள்ளது. இந்தத் தலைப்பினை நோக்கு மிடத்துச் சங்கரநயினார் கோயில் தொடர்பான (புராணம் போன்ற) ஒரு பிரபந்தம் பாடியிருக்கக் கூடுமோ என்று எண்ணத் தோன்றுகிறது. முதற் சருக்கக் கையெழுத்துப் படி கிடைக்கவில்லை. இந்த இரண்டாம் சருக்கமும் முற்றுப்பெற வில்லை.*

*- பதிப்பாசிரியர்*

*(பா-டு): 1 'தாருக வனத்திலே' - (அர.)*

ஊழியைச் சமைத்தபிரான் – இந்த
உலக மெலாமுருக் கொண்டபிரான்
ஏழிரு புவனத்திலும் - என்றும்
இயல்பெறும் உயிர்களுக் குயிராவான்
ஆழுநல் லறிவாவான் – ஒளி
யறிவினைக் கடந்தமெய்ப் பொருளாவான். 2

2376. தேவர்க்கெ லாந்தேவன் - உயர்
சிவபெரு மான்பண்டோர் காலத்திலே
காவலி னுலகளிக்கும் - அந்தக்
கண்ணனுந் தானுமிங் கோருருவாய்
ஆவலொ டருந்தவங்கள் - பல
ஆற்றிய நாகர்க ளிருவர்முன்னே
மேனிநின் றருள்புரிந்தான் - அந்த
வியப்புறு சரிதையை விளம்புகின்றேன். 3

2377. கேளீர் முனிவர்களே - இந்தக்
கீர்த்திகொள் சரிதையைக் கேட்டவர்க்கே
வேள்விகள் கோடிசெய்தால் - சதுர்
வேதங்க ளாயிர முறைபடித்தால்
மூளுநற் புண்ணியந்தான் - வந்து
மொய்த்திடுஞ் சிவனியல் விளங்கிநிற்கும்;
நாளுநற் செல்வங்கள் - பல
நணுகிடும் சரதமெய் வாழ்வுண்டாம். 4

2378. இக்கதை யுரைத்திடுவேன் – உளம்
இன்புறக் கேட்பீர் முனிவர்களே!
நக்கபி ரானருளால் – இங்கு
நடைபெறு முலகங்கள் கணக்கிலவாம்!

தொக்கன அண்டங்கள் - வளர்
தொகைபல கோடிபல் கோடிகளாம்!
இக்கணக் கெவரறிவார்? - புவி
எத்தனை யுளதென்ப தியாரறிவார்? 5

2379. நக்கபி ரானறிவான் - மற்று
நானறி யேன்பிற நரரறியார்
தொக்கன அண்டங்கள்[1] - கொண்ட
தொகைக்கெல்லை யில்லையென்று சொல்லுகின்றார்[2]
தக்கபல் சாத்திரிகள் - வெளி[3]
தருகின்ற வானமொர் கடல்போலாம்
அக்கட லதனுக்கே - எங்கும்
அக்கரை யிக்கரை யொன்றிலையாம்.[4] 6

2380. இக்கட லதனகத்தே - அங்கங்
கிடையிடை தோன்றும்புன் குமிழிகள்போல்
தொக்கன உலகங்கள் - திசைத்
தூவெளி யதனிடை விரைந்தோடும்
மிக்கதொர் வியப்புடைத்தாம் - இந்த
வியன்பெரு வையத்தின் காட்சிகண்டீர்
மெய்க்கலை முனிவர்களே - இதன்
மெய்ப்பொருள் பரசிவன் சக்திகண்டீர். 7

2381. எல்லையுண் டோஇலையோ – இங்
கியாவர் கண்டார்திசை வெளியினுக்கே?

.................................

(பா-டு): 1 'தொக்க பேரண்டங்கள்' – (பா.பி , அர.)
2 'தொகைக் கெல்லையில்லையென்று சொல்லுகின்ற' - (பா. பி., அர.)
3 'தக்க பல் சாத்திரங்கள் - வெளி' - (பா. ஆ.)
'தக்க பல் சாத்திரங்கள் - வொளி' - (பா.பி,, அர.)
4 'அக்கரை யிக்கரை யொன்றில்லையாம்' - (அர.)

# 235. பாரதி அறுபத்தாறு*

## முதற் காண்டம்

### கடவுள் வாழ்த்து - பராசக்தி துதி

2382. எனக்குமுன்னே சித்தர்பல ரிருந்தா ரப்பா
யானும்வந்தே னொருசித்த னிந்த நாட்டில்!
மனத்தினிலே நின்றிதனை யெழுது கின்றாள்
மனோன்மணியென் மாசக்தி வையத் தேவி;
தினத்தினிலே புதிதாகப் பூத்து நிற்கும்
செய்யமணித் தாமரைநேர் முகத்தாள்; காதல்
வனத்தினிலே தன்னையொரு மலரைப் போலும்
வண்டினைப்போ லெனையுமுரு மாற்றி விட்டாள். *1*

2383. தீராத காலமெலாந் தானு நிற்பாள்
தெவிட்டாத இன்னமுதின் செவ்வி தழ்ச்சி

---

*ஆதாரம்: பாரதி பிரசுராலயத்தாரின் 1923ஆம் ஆண்டு வெளியீடு. அப்பிரசுரா லயம் பின் வெளியிட்ட பதிப்புகளில் பாடபேதங்கள் உண்டு: நிறுத்தற் குறிகளும் உண்டு.*

**'முதற் காண்டம்' எனக் குறித்திருப்பதால் கவிதை வடிவி லமைந்த பாரதியாரின் தன் - வரலாறு தொடர்ந்து எழுதப்பட விருந்ததோ என்று எண்ண இடமுண்டு.*

*1923-ஆம் ஆண்டுக்குப்பின் பாரதி பிரசுராலயத்தார் பதிப்பித்த மறு அச்சுக்களில் ஒருசில பாடபேதங்கள் காணப்படுகின்றன. சந்தி பிரித்தும் பிரியாமலும் உள்ள பலவடிவங்கள் பாடபேதங்களாக அப்பதிப்புக்களில் காணப்படுகின்றன. தகுந்த நிறுத்தற் குறியீடுகளும் பாடல்களுக்கு இடப்பெற்றுள்ளன.*

*— பதிப்பாசிரியர்*

நீராகக் கனலாக வானாக் காற்றா
நிலமாக வடிவெடுத்தாள்; நிலத்தின் மீது
போராக நோயாக மரண மாகப்
போந்திதனை யழித்திடுவாள்; புணர்ச்சி கொண்டால்
நேராக மோனமஹா நந்த வாழ்வை[1]
நிலத்தின்மிசை யளித்தமரத் தன்மை யீவாள். 2

**2384.** மாகாளி பராசக்தி உமையா ளன்னை
வைரவிகங் காளிமனோன் மணிமா மாயி
பாகார்ந்த தேமொழியாள் படருஞ் செந்தீ
பாய்ந்திடுமோர் விழியுடையாள் பரம சக்தி
ஆகார மளித்திடுவாள், அறிவு தந்தாள்
ஆதிபரா சக்தியென தமிர்தப் பொய்கை,
சோகாட விக்குளெனைப் புகவொட் டாமல்
துய்யசெழுந் தேன்போலே கவிதை சொல்வாள். 3

## மரணத்தை வெல்லும் வழி

**2385.** பொன்னார்ந்த திருவடியைப் போற்றி யிங்கு[2]
புகலுவேன் யானறியு முண்மை யெல்லாம்
முன்னோர்க ளெவ்வுயிருங் கடவு ளென்றார்
முடிவாக அவ்வுரையை நான்மேற் கொண்டேன்;
அன்னோர்க ளுரைத்ததன்றிச் செய்கை யில்லை.
அத்வைத நிலைகண்டால் மரண முண்டோ?
முன்னோர்க ளுரைத்தபல சித்த ரெல்லாம்
முடிந்திட்டார், மடிந்திட்டார், மண்ணாய் விட்டார். 4

**2386.** பொந்திலே யுள்ளாராம், வனத்தி லெங்கோ,
புதர்களிலே யிருப்பாராம் பொதியை மீதே

(பா - டு): 1 நேராக மோன மஹானந்த வாழ்வை - ('பா. பி. 1937, அர.)

2 'யிங்குப்' என்றிருத்தல் வேண்டும். - பதிப்பாசிரியர்

சந்திலே சவுத்தியிலே நிழலைப் போலே
சற்றேயங் கங்கேதென் படுகின்றா ராம்,
நொந்தபுண்ணைக் குத்துவதிற் பயனொன் றில்லை
நோவாலே மடிந்திட்டான் புத்தன் கண்டீர்
அந்தணனாம் சங்கரா சார்யன் மாண்டான்
அதற்கடுத்த விராமாஅ[1] நுஜனும் போனான்; 5

2387. சிலுவையிலே யடியுண்டு யேசு செத்தான்,
தீயதொரு கணையாலே கண்ணன் மாண்டான்
பலர்புகழு மிராமனுமே யாற்றில் வீழ்ந்தான்
பார்மீது நான்சாகா திருப்பேன், காண்பீர்-
மலிவுகண்டீ ரிவ்வுண்மை பொய்கூ றேன்யான்
மடிந்தாலும் பொய்கூறேன் மானு டர்க்கே,
நலிவுமில்லை, சாவுமில்லை, கேளீர், கேளீர்
நாணத்தைக் கவலையினைச் சினத்தைப் பொய்யை; 6

## அஸுரர்களின் பெயர்

2388. அச்சத்தை வேட்கைதனை அழித்து விட்டால்
அப்போது சாவுமங்கே யழிந்து போகும்
மிச்சத்தைப் பின்சொல்வேன்; சினத்தை முன்னே
வென்றிடுவீர், மேதினியில் மரண மில்லை
துச்சமெனப் பிறர்பொருளைக் கருத லாலே
சூழ்ந்ததெலாங் கடவுளெனச் சுருதி சொல்லும்
நிச்சயமா ஞானத்தை மறத்த லாலே
நேர்வதே மானுடர்க்குச் சினத்தீ நெஞ்சில். 7

---

*(பா-டு): 1 'அதற்கடுத்த விராமா நுஜனும் போனான்' - (பா.பி., 1937, அர.)*

*முதற் பதிப்பிலே 'விராமாஅ' என்றிருப்பது குறிக்கத்தக்கது. ஓசைச் செம்மைக்காக உயிரளபெடை அமைத்துள்ளார் பாரதியார். பின் பதிப்பாளர்கள் புலமைக் கடுநடை யெனக் கருதி நீக்கினர் போலும். — பதிப்பாசிரியர்*

## சினத்தின் கேடு

2389. சினங்கொள்வார் தமைத்தாமே தீயாற் சுட்டுச்
செத்திடுவா ரொப்பாவார்; சினங்கொள் வார்தாம்
மனங்கொண்டு தங்கழுத்தைத் தாமே வெய்ய
வாள்கொண்டு கிழித்திடுவார் மானு வாராம்.
தினங்கோடி முறைமனிதர் சினத்தில் வீழ்வார்
சினம்பிறர்மேற் றாங்கொண்டு கவலை யாகச்
செய்ததனைத்[1] துயர்க்கடலில் வீழ்ந்து சாவார் 8

2390. மாகாளி பராசக்தி துணையே வேண்டும்.
வையகத்தி லெதற்குமினிக் கவலை வேண்டா,
சாகாம லிருப்பதுநஞ் சதுரா லன்று;
சக்தியரு ளாலன்றோ பிறந்தோம் பார்மேல்?
பாகான தமிழினிலே பொருளைச் சொல்வேன்
பாரீர்நீர் கேளீரோ, படைத்தோன் காப்பான்
வேகாத மனங்கொண்டு களித்து வாழ்வீர்
மேதினியி லேதுவந்தா லெமக்கென் னென்றே. 9

## தேம்பாமை

2391. "வடகோடிங் குயர்ந்தென்னே, சாய்ந்தா லென்னே
வான்பிறைக்குத் தென்கோடு"[2] பார்மீ திங்கே
விடமுண்டுஞ் சாகாம லிருக்கக் கற்றால்
வேறெதுதான் யாதாயி னெமக்கிங் கென்னே?
திடங்கொண்டு வாழ்ந்திடுவோம் தேம்பல் வேண்டா
தேம்புவதிற் பயனில்லை, தேம்பித் தேம்பி
இடருற்று மடிந்தவர்கள் கோடி கோடி
எதற்குமினி யஞ்சாதீர் புவியி லுள்ளீர். 10

---

(பா-டு): 1 'செய்ததெண்ணி' – (அர.)
2 பட்டினத்தார் தொடர்கள்

## பொறுமையின் பெருமை

2392. திருத்தணிகை மலைமேலே குமார தேவன்
திருக்கொலுவீற் றிருக்குமதன் பொருளைக் கேளீர்
திருத்தணிகை யென்பதிங்கு[1] பொறுமை யின்பேர்,
செந்தமிழ்கண் டீர்,பகுதி: 'தணி'யெ னுஞ்சொல்,
பொருத்தமுறுந் தணிகையினாற் புலமை சேரும்,
பொறுத்தவரே பூமியினை யாள்வா ரென்னும்[2]
அருத்தமிக்க பழமொழியுந் தமிழி லுண்டாம்,
அவனியிலே பொறையுடையான் அவனே தேவன். *11*

2393. பொறுமையினை அறக்கடவுள் புதல்வ னென்னும்
யுதிட்டிரனு நெடுநாளிப் புவிமேற் காத்தான்
இறுதியிலே பொறுமைநெறி தவறி விட்டான்
ஆதலாற் போர்புரிந்தா னிளையா ரோடே
பொறுமையின்றிப் போர்செய்து பரத நாட்டைப்
போர்க்களத்தே யழித்துவிட்டுப் புவியின் மீது
வறுமையையுங் கலியினையு நிறுத்தி விட்டு
மலைமீது சென்றான்பின் வானஞ் சென்றான். *12*

2394. ஆனாலும் புவியின்மிசை உயிர்க ளெல்லாம்
அநியாய மரணமெய்தல் கொடுமை யன்றோ?
தேனான உயிரைவிட்டுச் சாக லாமோ?
செத்திடற்குக் காரணந்தான் யாதென் பீரேல்
கோனாகிச் சாத்திரத்தை யாளு மாண்பார்
ஜகதீச சந்த்ரவஸு கூறு கின்றான்:-

........................................

*(பா-டு):* 1 'யென்பதிங்குப்' என்றிருத்தல் வேண்டும். - பதிப்பாசிரியர்
2 'பொறுத்தவரே பூமியினை ஆள்வர் என்னும்' - (அர.)

(ஞானானு பவத்திலிது முடிவாங் கண்டீர்)
"நாடியிலே யதிர்ச்சியினால் மரண" மென்றான். 13

2395. கோபத்தால் நாடியிலே யதிர்ச்சி யுண்டாம்;
கொடுங்கோபம் பேரதிர்ச்சி; சிறிய கோபம்
ஆபத்தா மதிர்ச்சியிலே சிறிய தாகும்;
அச்சத்தால் நாடியெலா மவிந்து போகும்;
தாபத்தால் நாடியெலாம் சிதைந்து போகும்;
கவலையினால் நாடியெலாந் தழலாய் வேகும்
கோபத்தை வென்றிடலே பிறவற் றைத்தான்
கொல்வதற்கு வழியெனநான் குறித்திட் டேனே. 14

## கடவுள் எங்கே இருக்கிறார்?

2396. "சொல்லடா ஹரியென்ற கடவு ளெங்கே?
சொல்"லென்று ஹிரணியன்தா னுறுமிக் கேட்க,
நல்லதொரு மகன்சொல்வான்:-" தூணிலுள்ளான்,
நாரா யணன்,துரும்பி லுள்ளான்" என்றான்.
வல்லபெருங் கடவுளிலா அணுவொன் றில்லை
மஹாசக்தி யில்லாத வஸ்து வில்லை
அல்லலில்லை, அல்லலில்லை, அல்ல லில்லை
அனைத்துமே தெய்வமென்றா லல்ல லுண்டோ? 15

2397. கேளப்பா சீடனே, கழுதை யொன்றைக்
"கீழான" பன்றியினைத் தேளைக் கண்டு
தாளைப்பார்த் திருகரமுஞ் சிரமேற் கூப்பிச்
சங்கர,சங் கரவென்று பணிதல் வேண்டும்;
கூளத்தை மலத்தினையும் வணங்கல் வேண்டும்;
கூடிநின்ற பொருளனைத்தின் கூட்டந் தெய்வம்.

மீளத்தா னிலைத்தெளிவா விரித்துச் சொல்வேன்
விண்மட்டுங் கடவுளன்று மண்ணு மஃதே. 16

2398. சுத்தஅறி வேசிவமென் றுரைத்தார் மேலோர்;
சுத்த மண்ணும் சிவமென்றே யுரைக்கும் வேதம்;
வித்தகனாங் குருசிவமென் றுரைத்தார் மேலோர்;
வித்தையிலாப் புலையனுமஃ தென்னும் வேதம்.
பித்தரே அனைத்துயிருங் கடவு ளென்று
பேசுவது மெய்யானாற் பெண்டி ரென்றும்
நித்தநும தருகினிலே குழந்தை யென்றும்
நிற்பனவுந் தெய்வமன்றோ, நிகழ்த்து வீரே. 17

2399. உயிர்களெலாந் தெய்வமன்றிப் பிறவொன் றில்லை;
ஊர்வனவும் பரப்பனவு நேரே தெய்வம்!
பயிலுமுயிர் வகைமட்டு மன்றி யிங்கு[1]
பார்க்கின்ற பொருளெல்லாந் தெய்வங் கண்டீர்,
வெயிலளிக்கு மிரவி,மதி, விண்மீன், மேகம்
மேலுமிங்கு[2] பலபலவாந் தோற்றங் கொண்டே
இயலுகின்ற ஜடப்பொருள்க ளனைத்துந் தெய்வம்
எழுதுகோல் தெய்வமிந்த எழுத்துந் தெய்வம். 18

## குருக்கள் ஸ்துதி (குள்ளச்சாமி புகழ்)

2400. ஞானகுரு தேசிகனைப் போற்று கின்றேன்
நாடனைத்துந் தானாவான், நலிவி லாதான்,
மோனகுரு திருவருளாற் பிறப்பு மாறி
முற்றிலுநா மமரநிலை சூழ்ந்து விட்டோம்;
தேனனைய பராசக்தி திறத்தைக் காட்டிச்

---

(பா-டு): 1 'பயிலுமுயிர் வகை மட்டுமன்றியிங்குப்' - (அர.)
இத்திருத்தம் பொருத்தம்
2 'மேலுமிங்குப்' - (அர.) பொருத்தமான திருத்தம்.

சித்தினியல் காட்டிமனத் தெளிவு தந்தான்.
வானகத்தை யிவ்வுலகி லிருந்து தீண்டும்
வகையுணர்த்திக் காத்தபிரான் பதங்கள் போற்றி. 19

**2401.** எப்போதுங் குருசரண நினைவாய் நெஞ்சே
எம்பெருமான் சிதம்பரதே சிகன்றா ளெண்ணாய்,
முப்பாழுங் கடந்தபெரு வெளியைக் கண்டான்
முக்தியெனும் வானகத்தே பரிதி யாவான்
தப்பாத சாந்தநிலை யளித்த கோமான்
தவநிறைந்த மாங்கொட்டைச் சாமித் தேவன்
குப்பாய ஞானத்தால் மரண மென்ற
குளிர்நீக்கி யெனைக்காத்தான் குமார தேவன். 20

**2402.** தேசத்தா ரிவன்பெயரைக் குள்ளச் சாமி,
தேவர்பிரா னென்றுரைப்பார் தெளிந்த ஞானி
பாசத்தை யறுத்துவிட்டான், பயத்தைச் சுட்டான்;
பாவனையாற் பரவெளிக்கு மேலே தொட்டான்
நாசத்தை யழித்துவிட்டான், யமனைக் கொன்றான்
ஞானகங்கை தனைமுடிமீ தேந்தி நின்றான்,
ஆசையெனுங் கொடிக்கொருதாழ் மரமே பொன்றான்[1]
ஆதியவன் சுடர்பாதம் புகழ்கின் றேனே. 21

**2403.** வாயினாற் சொல்லிடவு மடங்கா தப்பா;
வரிசையுட னெழுதிவைக்க வகையு மில்லை.
ஞாயிற்றைச் சங்கிலியா லளக்க லாமோ?
ஞானகுரு புகழினைநாம் வகுக்க லாமோ?

---

*(பா-டு): 1 ஆசையெனுங் கொடிக்கொருதாழ் மரமே போன்றான் —*
*(பா.பி. 1937)*
*'பொன்றான்' என்பது அச்சுப்பிழை.*
*- பதிப்பாசிரியர்*

ஆயிரநூ லெழுதிடினு முடிவு றாதாம்
ஐயனவன் பெருமையைநான் சுருக்கிச் சொல்வேன்,
காயகற்பஞ் செய்துவிட்டா னவன்வாழ் நாளைக்
கணக்கிட்டு வயதுரைப்பார் யாரு மில்லை. 22

குரு தர்சனம்

**2404.** அன்றொருநாட் புதுவைநகர் தனிலே கீர்த்தி
அடைக்கலஞ்சே ரீசுவரன் தர்ம ராஜா
என்றபெயர் வீதியிலோர் சிறிய வீட்டில்
ராஜாரா மையனென்ற நாகைப் பார்ப்பான்
முன்றனது பிதாதமிழி லுபநி டத்தை
மொழிபெயர்த்து வைத்ததனைத் திருத்தச் சொல்லி
என்றனைவேண் டிக்கொள்ள, யான்சென் றாங்கண்
இருக்கையிலே யங்கு வந்தான் குள்ளச் சாமி. 23

**2405.** அப்போது நான்குள்ளச் சாமி கையை
அன்புடனே பற்றியிது பேச லுற்றேன்:-
'அப்பனே' தேசிகனே ஞானி யென்பார்
அவனியிலே சிலர்நின்னைப் பித்த னென்பார்
செப்புறுநல் லஷ்டாங்க யோக சித்தி
சேர்ந்தவனென் றுனைப்புகழ்வார் சிலரென்முன்னே
ஒப்பனைகள் காட்டாம லுண்மை சொல்வாய்,
உத்தமனே, எனக்குநினை உணர்த்து வாயே. 24

**2406.** யாவனீ? நினக்குள்ள திறமை யென்னே?
யாதுணர்வாய்? கந்தைசுற்றித் திரிவ தென்னே?
தேவனைப்போல் விழிப்ப தென்னே? சிறியா ரோடும்
தெருவிலே நாய்களொடும் விளையாட் டென்னே?
பாவனையிற் பித்தரைப்போ லலைவ தென்னே?

பரமசிவன் போலுருவம் படைத்த தென்னே?
ஆவலற்று நின்றதென்னே? அறிந்த தெல்லாம்
ஆரியனே, யெனக்குணர்த்த வேண்டுமென்றேன். 25

2407. பற்றிபகை திருகியந்தக் குள்ளச் சாமி
பரிந்தோடப் பார்த்தான்;யான் விடவே யில்லை
சுற்றுமுற்றும் பார்த்துப்புன் முறுவல் பூத்தான்;
தூயதிருக் கமலபதத் துணையைப் பார்த்தேன்;
குற்றமற்ற தேசிகனுந் திமிறிக் கொண்டு
குதித்தோடி யவ்வீட்டுக் கொல்லை சேர்ந்தான்;
மற்றவன்பின் யானோடி விரைந்து சென்று
வானவனைக் கொல்லையிலே மறித்துக் கொண்டேன். 26

## உபதேசம்

2408. பக்கத்து வீடிடிந்து சுவர்கள் வீழ்ந்த
பாழ்மனையொன் றிருந்ததங்கே; பரம யோகி
ஒக்கத்தன் னருள்விழியா லென்னை நோக்கி
ஒருகுட்டிச் சுவர்காட்டிப் பரிதி காட்டி
அக்கணமே கிணற்று ளதன் விம்பங் காட்டி
"அறிதிகொலோ?" எனக்கேட்டான் "அறிந்தேன்" என்றேன்.
மிக்கமகிழ் கொண்டவனுஞ் சென்றான்; யானும்
வேதாந்த மரத்திலொரு வேரைக் கண்டேன். 27

2409. தேசிகன்கை காட்டியெனக் குரைத்த செய்தி
செந்தமிழி லுலகத்தார்க் குணர்த்து கின்றேன்;
வாசியைநீ கும்பகத்தால் வலியக் கட்டி
மண்போலே சுவர்போலே வாழ்தல் வேண்டும்;
தேசுடைய பரிதியுருக் கிணற்றி னுள்ளே

தெரிவதுபோ லுனக்குள்ளே சிவனைக் காண்பாய்;
பேசுவதிற் பயனில்லை, அனுப வத்தாற்
பேரின்ப மெய்துவதே ஞான மென்றான். 28

2410. கையிலொரு நூலிருந்தால் விரிக்கச் சொல்வேன்,
கருத்தையதிற் காட்டுவான்;[1] வானைக் காட்டி,
மையிலகு விழியாளின் காத லொன்றே
வையகத்தில் வாழுநெறி யென்று காட்டி,
ஐயனெனக் குணர்த்தியன பலவா ஞானம்,
அதற்கவன்காட் டியகுறிப்போ அநந்த மாகும்,
பொய்யறியா ஞானகுரு சிதம்ப ரேசன்
பூமிவிநா யகன்குள்ளச் சாமி யங்கே. 29

2411. மற்றொருநாட் பழங்கந்தை யழுக்கு மூட்டை
வளமுறவே கட்டியவன் முதுகின் மீது
கற்றவர்கள் பணிந்தேத்துங் கமலப் பாதக்
கருணைமுன் சுமந்துகொண்டென் னெதிரே வந்தான்
சற்றுநகை புரிந்தவன்பாற் கேட்க லானேன்:-
''தம்பிரா னே,யிந்தத் தகைமை யென்னே?
முற்றுமிது பித்தருடைச் செய்கை யன்றோ?
மூட்டைசுமந் திடுவதென்னே? மொழிவாய்'' என்றேன் 30

2412. புன்னகைபூத் தாரியனும் புகலு கின்றான்:-
''புறத்தேநான் சுமக்கின்றேன்; அகத்தி னுள்ளே,
இன்னதொரு பழங்குப்பை சுமக்கி றாய்நீ''
என்றுரைத்து விரைந்தவனு மேகி விட்டான்.
மன்னவன்சொற் பொருளினையான் கண்டு கொண்டேன்
மனத்தினுள்ளே பழம்பொய்கள் வளர்ப்ப தாலே

(பா-டு): 1 'கருத்தை யதிற் காட்டுவேன்' - (பா.பி. 1932, அர.)

இன்னலுற்று மாந்தரெலா மடிவார் வீணே,
இருதயத்தில் விடுதலையை இசைத்தல் வேண்டும். 31

2413. சென்றதினி மீளாது மூடரே, நீர்
எப்போதுஞ் சென்றதையே சிந்தை செய்து
கொன்றழிக்குங் கவலையெனுங் குழியில் வீழ்ந்து
குமையாதீர்; சென்றதனைக் குறித்தல் வேண்டா.
இன்றுபுதி தாப்பிறந்தோ மென்று நெஞ்சில்
எண்ணமதைத் திண்ணமுற இசைத்துக் கொண்டு
தின்றுவிளை யாடியின்புற் றிருந்து வாழ்வீர்.
அஃதின்றிச் சென்றதையே மீட்டு மீட்டும் 32

2414. மேன்மேலு நினைந்தழுதல் வேண்டா - அந்தோ!
மேதையில்லா மானுடரே மேலு மேலும்
மேன்மேலும் புதியகாற் றெம்முள் வந்து
மேன்மேலும் புதிய வுயிர் விளைத்தல் கண்டீர்,
ஆன்மாவென் றேகருமத் தொடர்பை யெண்ணி
அறிவுமயக் கங்கொண்டு கெடுகின் றீரே
மான்மானும் விழியுடையாள் சக்தி தேவி
வசப்பட்டுத் தனைமறந்து வாழ்தல் வேண்டும். 33

2415. சென்றவினைப் பயன்களெனைத் தீண்ட மாட்டா
ஸ்ரீதரன்யான் சிவகுமா ரன்யா னன்றோ?
நன்றிந்தக் கணம்புதிதாகப் பிறந்து விட்டேன்
நான்புதியன், நான்கடவுள், நலிவி லாதோன்
என்றிந்த வுலகின்மிசை வானோர் போலே
இயன்றிடுவார் சித்தரென்பார்; பரம தர்மக்
குன்றின்மிசை யொருபாய்ச்ச லாகப் பாய்ந்து,
குறிப்பற்றார் கேடற்றார் குலைத லற்றார். 34

2416. குறியனந்த முடையோராய்க் கோடி செய்தும்
குவலயத்தில் வினைக்கடிமைப் படாதா ராகி
வெறியுடையோன் உமையாளை யிடத்தி லேற்றோன்
வேதகுரு பரமசிவன் வித்தை பெற்றுச்
செறிவுடைய பழவினையா மிருளைச் செற்றுத்
தீயினைப்போல் மண்மீது திரிவார் மேலோர்,
அறிவுடைய சீடா,நீ குறிப்பை நீக்கி
அநந்தமாந் தொழில்செய்தா லமர னாவாய். 35

2417. கேளப்பா, மேற்சொன்ன உண்மை யெல்லாம்
கேடற்ற மதியுடையான் குள்ளச் சாமி
நாளும்பல் காட்டாலும் குறிப்பி னாலும்
நலமுடைய மொழியாலும் விளக்கித் தந்தான்
தோளைப்பார்த் துக்களித்தல் போலே யன்னான்
துணையடிகள் பார்த்துமனங் களிப்பேன் யானே
வாளைப்பார்த் தின்பமுறு மன்னர் போற்று
மலர்த்தாளான் மாங்கொட்டைச் சாமி வாழ்க. 36

## கோவிந்த ஸ்வாமி புகழ்

2418. மாங்கொட்டைச் சாமிபுகழ் சிறிது சொன்னோம்;
வண்மைதிகழ் கோவிந்த ஞானி, பார்மேல்
யாங்கற்ற கல்வியெலாம் பலிக்கச் செய்தான்;
எம்பெருமான் பெருமையையிங் கிசைக்கக் கேளீர்,
தீங்கற்ற குணமுடையான் புதுவை யூரார்
செய்தபெருந் தவத்தாலே யுதித்த தேவன்,
பாங்குற்ற மாங்கொட்டைச் சாமி போலே
பயிலுமதி வர்ணாசி ரமத்தே நிற்போன். 37

2419. அன்பினால் முக்தியென்றான் புத்த னந்நாள்;
அதனையிந்நாட் கோவிந்த ஸாமி செய்தான்;

துன்பமுறு முயிர்க்கெல்லாந் தாயைப் போலே
சுரக்குமரு ளுடையபிரான் துணிந்த யோகி;
அன்பினுக்குக் கடலையுந்தான் விழுங்க வல்லான்,
அன்பினையே தெய்வமென்பா னன்பே யாவான்;
மன்பதைகள் யாவுமிங்கே தெய்வ மென்ற
மதியுடையான் கவலையெனு மயக்கந் தீர்த்தான். 38

2420. பொன்னடியா லென்மனையைப் புனித மாக்கப்
போந்தானிம் முனியொருநாள் இறந்த வெந்தை
தன்னுருவங் காட்டினான்; பின்ன ரென்னைத்
தரணிமிசைப் பெற்றவளின் வடிவ முற்றான்;
அன்னவன்மா யோகியென்றும் பரம ஞானத்
தனுபூதி யுடையனென்று மறிந்து கொண்டேன்;
மன்னவனைக் குருவெனநான் சரண டைந்தேன்
மரணபய நீங்கினேன்; வலிமை பெற்றேன். 39

## யாழ்ப்பாணத்துச் சுவாமியின் புகழ்

2421. கோவிந்த ஸாமிபுகழ் சிறிது சொன்னேன்
குவலயத்தின் விழிபோன்ற யாழ்ப்பா ணத்தான்;
தேவிபத மறவாத தீர ஞானி
சிதம்பரத்து நடராஜ மூர்த்தி யாவான்,
பாவியரைக் கரையேற்று ஞானத் தோணி
பரமபத வாயிலெனும் பார்வை யாளன்
காவிவளர் தடங்களிலே மீன்கள் பாயுங்
கழனிகள்சூழ் புதுவையிலே யவனைக் கண்டேன். 40

2422. தங்கத்தாற் பதுமைசெய்து மிரத லிங்கஞ்
சமைத்துமவற் றினிலீசன் தாளைப் போற்றுங்

துங்கமுறு பக்தர்பலர் புவிமீ துள்ளார்,
தோழரே, யென்னாளு* மெனக்குப் பார்மேல்,
மங்களஞ்சேர் திருவிழியா லருளைப் பெய்யும்
வானவர்கோன், யாழ்ப்பாணத் தீசன் றன்னைச்
சங்கரனென் றெப்போது முன்னே கொண்டு
சரணடைந்தா லதுகண்டீர் சர்வ சித்தி. 41

## குவளைக் கண்ணன் புகழ்

2423. யாழ்பாணத்[1] தையனையென் னிடங்கொ ணர்ந்தான்
இணையடியை நந்திபிரான் முதுகில் வைத்துக்
காழ்ப்பாண[2] கயிலைமிசை வாழ்வான் பார்மேற்
கனத்தபுகழ்க் குவளையூர்க் கண்ண னென்பான்
பார்ப்பாரக் குலத்தினிலே பிறந்தான் கண்ணன்
பறையரையும் மறவரையு நிகராக் கொண்டான்
தீர்ப்பான சுருதிவழி தன்னிற் சேர்ந்தான்
சிவனடியா ரிவன்மீது கருணை கொண்டார். 42

2424. மஹத்தான முனிவரெலாங் கண்ணன் தோழர்
வானவரெல் லாங்கண்ண னடியா ராவார்,
மிகத்தானு முயர்ந்ததுணி வுடைய நெஞ்சின்
வீரர்பிரான் குவளையூர்க் கண்ண னென்பான்
ஜகத்தினிலோ ருவமையிலா யாழ்ப்பா ணத்து
ஸாமிதனை யிவனென்றன் மனைக்கொ ணர்ந்தான்
அகத்தினிலே யவன்பாத மலரைப் பூண்டேன்
அன்றேயப் போதேவீ டதுவே வீடு"† 43

(பா-டு): *தோழரே யென்நாளு - (பா.பி, 1937)
இத்திருத்தமே பொருத்தமானது. – பதிப்பாசிரியர்
1, 2 அச்சுப்பிழை:-
சரியான சொல்: 1 யாழ்ப்பாணத் (பா.பி. 1937)
2 காழ்ப்பான (பா.பி. 1937)
† நம்மாழ்வார் தொடர்

2425. பாங்கான குருக்களைநாம் போற்றிக் கொண்டோம்
பாரினிலே பயந்தெளிந்தோம்; பாச மற்றோம்
நீங்காத சிவசக்தி யருளைப் பெற்றோம்
நிலத்தின்மிசை யமரநிலை யுற்றோ மப்பா
தாங்காமல் வையகத்தை யழிக்கும் வேந்தர்
தாரணியிற் பலருள்ளார் தருக்கி வீழ்வார்
ஏங்காம லஞ்சாம லிடர்செய் யாமல்
என்றுமருள் ஞானியரே யெமக்கு வேந்தர். 44

## பெண் விடுதலை

2426. பெண்ணுக்கு விடுதலையென் றிங்கோர் நீதி
பிறப்பித்தே னதற்குரிய பெற்றி கேளீர்
மண்ணுக்குள் ளெவ்வுயிருந் தெய்வ மென்றால்
மனையாளுந் தெய்வமன்றோ? மதிகெட் டீரே,
விண்ணுக்குப் பறப்பதுபோற் கதைகள் சொல்வீர்,
விடுதலையென் பீர்,கருணை வெள்ள மென்பீர்,
பெண்ணுக்கு விடுதலைநீ ரில்லை யென்றால்
பின்னிந்த வுலகினிலே வாழ்க்கை யில்லை. 45

2427. பெண்டாட்டி தனையடிமைப் படுத்த வேண்டிப்
பெண்குலத்தை முழுதடிமைப் படுத்த லாமோ?
கண்டார்க்கு நகைப்பென்னு முலக வாழ்க்கை
காதலெனுங் கதையினுடைக் குழப்ப மன்றோ?

## தாய் மாண்பு*

உண்டாக்கிப் பாலூட்டி வளர்த்த தாயை
உமையவளென் றறியீரோ, உணர்ச்சி கெட்டீர்?

* பிற்காலப் 'பதிப்புக்களில் ''தாய்மாண்பு என்ற தலைப்பு பாடலின் துவக்கத்திலேயே இடம்பெற்றுள்ளது.

- பதிப்பாசிரியர்

பண்டாய்ச்சி, ஔவை:—அன் னையும் பிதாவும்''
பாரிடை''முன் னறிதெய்வ'' மென்றா னன்றோ? 46

2428. தாய்க்குமே லிங்கேயோர் தெய்வ முண்டோ?
தாய்பெண்ணே யல்லளோ? தமக்கை, தங்கை
வாய்க்கும்பெண் மகவெல்லாம் பெண்ணே யன்றோ?
மனைவியொருத் தியையடிமைப் படுத்த வேண்டித்
தாய்க்குலத்தை முழுதடிமைப் படுத்த லாமோ?
தாயைப்போ லேபிள்ளை யென்று முன்னோர்
வாக்குளதன் றோ?பெண்மை யடிமை யுற்றால்
மக்களெலா மடிமையுறல் வியப்போன் றாமோ? 47

2429. வீட்டிலுள்ள பழக்கமே நாட்டி லுண்டாம்
வீட்டினிலே தனக்கடிமை பிறரா மென்பான்;
நாட்டினிலே.........................
நாடோறு முயன்றிடுவா னலிந்து சாவான்;
காட்டிலுள்ள பறவைகள்போல் வாழ்வோ மப்பா;
காதலிங்கே யுண்டாயிற் கவலை யில்லை;
பாட்டினிலே காதலைநான் பாட வேண்டிப்
பரமசிவன் பாதமலர் பணிகின் றேனே. 48

## காதலின் புகழ்

2430. காதலினால் மானுடர்க்குக் கலவி யுண்டாம்
கலவியிலே மானுடர்க்குக் கவலை தீரும்;
காதலினால் மானுடர்க்குக் கவிதை யுண்டாம்;
கானமுண்டாஞ் சிற்பமுதற் கலைக ளுண்டாம்;
ஆதலினாற் காதல் செய்வீர் உலகத் தீரே!
அஃதன்றோ இவ்வுலகத் தலைமை யின்பம்!
காதலினாற் சாகாம லிருத்தல் கூடும்;
கவலைபோம், அதனாலே மரணம் பொய்யாம். 49

**2431.** ஆதிசக்தி தனையுடம்பி லரனுங் கோத்தான்
அயன்வாணி தனைநாவி லமர்த்திக் கொண்டான்
சோதிமணி முகத்தினளைச் செல்வ மெல்லாஞ்
சுரந்தருளும் விழியாளைத் திருவை மார்பில்
மாதவனு மேந்தினான்! வானோர்க் கேனு
மாதரின்பம் போற்பிறிதோ ரின்ப முண்டோ?
காதல்செயு மனைவியே சக்தி கண்டீர்
கடவுணிலை யவளாலே யெய்த வேண்டும். 50

**2432.** கொங்கைகளே சிவலிங்க மென்று கூறிக்
கோக்கவிஞன் காளிதா ஸனும்பூ ஜித்தான்
மங்கைதனைக் காட்டினிலு முடன்கொண் டேகி
மற்றவட்கா மதிமயங்கிப் பொன்மான் பின்னே
சிங்கநிகர் வீரர்பிரான் தெளிவின் மிக்க
ஸ்ரீதரனுஞ் சென்றுபல துன்ப முற்றான்.
இங்குபுவி[1] மிசைக்காவி யங்க ளெல்லாம்.
இலக்கியமெல் லாங்காதற் புகழ்ச்சி யன்றோ? 51

**2433.** நாடகத்திற் காவியத்திற் காத லென்றால்
நாட்டினர்தாம் வியப்பெய்தி நன்றா மென்பர்;
ஊடகத்தே வீட்டிலுள்ளே கிணற்றோ ரத்தே
ஊரினிலே காதலென்றா லுறுமு கின்றார்
பாடைகட்டி யதைக்கொல்ல வழிசெய் கின்றார்
பாரினிலே காதலெனும் பயிரை மாய்க்க
மூடரெலாம் பொறாமையினால் விதிகள் செய்து
முறைதவறி யிடரெய்திக் கெடுகின் றாரே. 52

1 'இங்குப்' என்றிருத்தல் வேண்டும். இலக்கண விதிப்படி 'இங்குப்புவி' என்றாயின், கனிச்சீராகி ஓசை கெடுகின்றது. - பதிப்பாசிரியர்

2434. காதலிலே யின்பமெய்திக் களித்து நின்றால்
கனமான மன்னவர்போ ரெண்ணு வாரோ?
மாதருடன் மனமொன்றி மயங்கி விட்டால்
மந்திரிமார் போர்த்தொழிலை மனங்கொள் வாரோ?
பாதிநடுக் கலவியிலே காதல் பேசிப்
பகலெல்லா மிரவெல்லாங் குருவி போலே
காதலிலே மாதருடன் களித்து வாழ்ந்தால்
படைத்தலைவர் போர்த்தொழிலைக் கருது வாரோ? 53

## விடுதலைக் காதல்

2435. காதலிலே விடுதலையென் றாங்கோர் கொள்கை
கடுகிவளர்ந் திடுமென்பார் யூரோப் பாவில்
மாதரெலாந் தம்முடைய விருப்பின் வண்ணம்
மனிதருடன் வாழ்ந்திடலா மென்பார் அன்னோர்;
பேதமின்றி மிருகங்கள் கலத்தல் போலே
பிரியம்வந்தாற் கலந்தன்பு பிரிந்து விட்டால்
வேதனையொன் றில்லாதே பிரிந்து சென்று
வேறொருவன் றனைக்கூட வேண்டு மென்பார் 54

2436. வீரமிலா மனிதர்சொலும் வார்த்தை கண்டீர்;
விடுதலையாங் காதலெனிற் பொய்மைக் காதல்!
சோரரைப்போ லாண்மக்கள் புவியின் மீது
சுவைமிக்க பெண்மைநல முண்ணு கின்றார்.
காரணந்தான் யாதெனிலோ - ஆண்க ளெல்லாம்
களவின்பம் விரும்புகின்றார். கற்பே மேலென்
றீரமின்றி யெப்போது முபதே சங்கள்
எடுத்தெடுத்துப் பெண்களிட மியம்பு வாரே! 55

**2437.** ஆணெல்லாங் கற்பைவிட்டுத் தவறு செய்தால்
அப்போது பெண்மையுங்கற் பழிந்தி டாதோ?
நாணற்ற வார்த்தையன்றோ? வீட்டைச் சுட்டால்
நலமான கூரையுந்தா னெரிந்தி டாதோ?
பேணுமொரு காதலினை வேண்டி யன்றே[1]
பெண்மக்கள் கற்புநிலை பிறழு கின்றார்?
காணுகின்ற காட்சியெலா மறைத்து வைத்துக்
கற்புக்கற் பென்றுலகோர் கதைக்கின் றாரே! 56

## ஸர்வ மத ஸமரஸம்

### கோவிந்த ஸ்வாமியுடன் ஸம்பாஷணை

**2438.** மீளவுமங் கொருபகலில் வந்தா னென்றன்
மனையிடத்தே கோவிந்த வீர ஞானி,
ஆளவந்தான் பூமியினை யவனி வேந்தர்
அனைவருக்கு மேலானோன் அன்பு வேந்தன்;
நாளைப்பார்த் தொளிர்தருநன் மலரைப் போலே
நம்பிரான் வரவுகண்டு மன மலர்ந்தேன்:-
'வேளையிலே நமதுதொழில் முடித்துக் கொள்வோம்;
வெயிலுள்ள போதினிலே யுலர்த்திக் கொள்வோம்; 57

**2439.** காற்றுள்ள போதேநாக் தூற்றிக் கொள்வோம்;
கனமான குருவையெதிர் கண்ட போதே
மாற்றான அஹங்தையினைத் துடைத்துக் கொள்வோம்;
மலமான மறதியினை மடித்துக் கொள்வோம்;
கூற்றான அரக்கருயிர் முடித்துக் கொள்வோம்;
குலைவான மாயைதனை யடித்துக் கொள்வோம்;
பேற்றாலே குருவந்தான் இவன்பால் ஞானப்
பேற்றையெல்லாம் பெறுவோம்யாம்'' என்றெனுள்ளே 58

---

*(பா-டு): 1 பேணுமொரு காதலனை - (அர.)*

**2440.** சிந்தித்து:-" மெய்ப்பொருளை யுணர்த்தா யையே!
தேய்வென்ற மரணத்தைத் தேய்க்கும் வண்ணம்
வந்தித்து நினைக்கேட்டேன் கூறாய்" என்றேன்.
வானவனாங் கோவிந்த ஸாமி சொல்வான்:-
"அந்தமிலா மாதேவன் கயிலை வேந்தன்
அரவிந்த சரணங்கள் முடிமேற் கொள்வோம்;
பந்தமில்லை; பந்தமில்லை; பந்த மில்லை;
பயமில்லை; பயமில்லை; பயமே யில்லை; 59

**2441.** அதுவேநீ யென்பதுமுன் வேத வோத்தாம்;
அதுவென்றா லெதுவெனநா னறையக் கேளாய்
அதுவென்றால் முன்னிற்கும் பொருளி னாமம்;
அவனியிலே பொருளெல்லா மதுவாம்; - நீயும்
அதுவன்றிப் பிறிதில்லை; ஆத லாலே
அவனியின்மீ தெதுவரினு மசைவு றாமல்;
மதுவுண்ட மலர்மாலை யிராமன் தாளை
மனத்தினிலே நிறுத்தியிங்கு வாழ்வாய் சீடா; 60

**2442.** பாரான உடம்பினிலே மயிர்க ளைப்போற்
பலப்பலவாம் பூண்டுவரு மியற்கை யாலே;
நேராக மானுடர்தாம் பிறரைக் கொல்ல
நினையாமல் வாழ்ந்திட்டா லுழுதல் வேண்டா;
காரான நிலத்தைப்போய்த் திருத்த வேண்டா;
கால்வாய்கள் பாய்ச்சுவதிற் கலகம் வேண்டா;
சீரான மழைபெய்யுந் தெய்வ முண்டு;
சிவன்செத்தா லன்றிமண்மேற் செழுமை யுண்டு. 61

**2443.** ஆதலால் மானிடர்கள் களவை விட்டால்
அனைவருக்கு முழைப்பின்றி யுணவுண் டாகும்;
பேதமிட்டுக் கலகமிட்டு வேலி கட்டிப்

பின்னதற்குக் காவலென்று பேரு மிட்டு
நீதமில்லாக் கள்வர்நெறி யாயிற் றப்பா!
நினைக்குங்கா லிதுகொடிய நிகழ்ச்சி யன்றோ?
பாதமலர் காட்டிநினை யன்னை காத்தாள்
பாரினிலித் தருமநீ பகரு வாயே. 62

2444. ஒருமொழியே பலமொழிக்கு மிடங்கொ டுக்கும்;
ஒருமொழியே மலமொழிக்கு மொழிக்கு மென்ற
ஒருமொழியைக் கருத்தினிலே நிறுத்தும் வண்ணம்
ஒருமொழி"ஓம்நமச் சிவாய" வென்பர்
"ஹரி ஹரி"யென் றிடினுமதே; "ராம, ராம"
"சிவ,சிவ"வென் றிட்டாலு மஃதே யாகும்;
தெரிவுறவே "ஓம் சக்தி" யென்று மேலோர்
ஜெபம்புரிவ தப்பொருளின் பெயரே யாகும். 63

2445. ஸாரமுள்ள பொருளினைநான் சொல்லி விட்டேன்;
சஞ்சலங்க ளினிவேண்டா, சரதந் தெய்வம்
ஈரமிலா நெஞ்சுடையார் சிவனைக் காணார்;
எப்போது மருளைமனத் திசைத்துக் கொள்வாய்;
வீரமிலா நெஞ்சுடையார் சிவனைக் காணார்;
எப்போதும் வீரமிக்க வினைகள் செய்வாய்
பேருயர்ந்த ஏஹோவா, அல்லா நாமம்
பேணுமவர் பதமலரும் பேணல் வேண்டும். 64

2446. பூமியிலே கண்டமைந்து, மதங்கள் கோடி!
புத்தமதம், சமணமதம், பார்ஸி மார்க்கம்
சாமியென யேசுபதம் போற்று மார்க்கம்,
ஸநாதனமாம் ஹிந்துமதம்; இஸ்லாம்; யூதம்;
நாமமுயர் சீனத்துத் "தாவு" மார்க்கம்;
நல்லகன் பூசிமத முதலாப் பார்மேல்;

யாமறிந்த மதங்கள்பல வுளவா மன்றே;
யாவினுக்கு முட்புதைந்த கருத்திங் கொன்றே. 65

2447. பூமியிலே வழங்கிவரு மதத்துக் கெல்லாம்
பொருளினைநா மிங்கெடுத்துப் புகலக் கேளாய்;
சாமிநீ; சாமிநீ; கடவுள் நீயே;
தத்வமஸி; தத்வமஸி; நீயே யஃதாம்;
பூமியிலே நீகடவு ளில்லை யென்று
புகல்வதுநின் மனத்துள்ளே புகுந்த மாயை
சாமிநீ அம்மாயை தன்னை நீக்கி
ஸதாகாலம் "சிவோஹ"மென்று ஸாதிப் பாயே. 56

## 236. அகவிழியிற் காண்பது

2448. "கனவென்று நனவென்று முண்டோ?
காண்பது காட்சியல் லாற்பிறிதாமோ? இங்கு
மனையி லிருப்பது வானம் - அந்த
வானத்தின் வந்தவர் தேவர்முனிவர்,
நினைவது செய்கை யறிவீர் - எந்த
நேரத்துந் தேவர்கள் காப்பது வையம்,
வினவிற் பொருள்விளங் காது - அக
விழியைத் திறந்திடில் விண்ணிங்கு தோன்றும்
தத்தரிகிட தத்தரிகிட தித்தோம்."

---

* 'வேணுமுதலி' என்ற பாரதியார் கதையில் உள்ளது இந்தப் பாடல், 'சுதேச மித்திரன்' அலுவலகத்தார் வெளியிட்ட 'கதா மாலிகா'வில் முன்னே வெளிவந்தது. அதற்குமுன் 'காளிதாசன்' என்ற புனைபெயரில் 'சுதேசமித்திர'னில் வெளிவந்தது. – தகவல்: 'பாரதி புதையல் – 1' – பக். 46.

– பதிப்பாசிரியர்

## 237. ஆனந்தம்*

2449. உலகைத் துறந்தீர் உருவைத் துறந்தீர்,
மலையைப் பிளந்துவிட வல்லீர் - இலகுபுகழ்
ஞானம் தவம்கல்வி நான்குந் துறக்கலீர்,
ஆனந்த மையா ஹரீ.

---

* 'நவதந்திரக்கதை' யில் (பக். ௪0) இப்பாடல் உள்ளது.

- பதிப்பாசிரியர்

## 238. பண்டாரப் பாட்டு*

2450. வையகத் தேசட வஸ்துவில்லை.
மண்ணும் கல்லும் சடமில்லை.
மெய்யுரைப்பேன் பேய்மனமே
மேலுங் கீழும் பயமில்லை!- 1

2451. பையப் பையத் தேரடா.
படையும் விஷமுங் கடவுளடா
பொய்யு மெய்யுஞ் சிவனடா.
பூமண் டலத்தே பயமில்லை!- 2

2452. சாவு நோவுஞ் சிவனடா!
சண்டையும் வாளுஞ் சிவனடா!
பாவியு மேழையும் பாம்பும்பசுவும்
பண்ணுந் தானமுந் தெய்வமடா! 3

2453. எங்குஞ் சிவனைக் காணடா!
ஈனப் பயத்தைத் துரத்தடா!
கங்கைச் சடையா, காலன்கூற்றே
காமன் பகையே வாழ்கநீ!- 4

2454. பாழுந் தெய்வம் பதியுந்தெய்வம்
பாலை வனமுங் கடலுந்தெய்வம்

---

* ''கதைக்கொத்து'' நூலில் இப்பாடல் காணப்படுகிறது.

ஏழு புவியும் தெய்வம்தெய்வம்
எங்குந் தெய்வம் எதுவுந்தெய்வம் 5

**2455. வையகத் தேசட மில்லை.**
**மண்ணுங் கல்லுந் தெய்வம்**
**மெய்யுரைப்பேன் பாழ்மனமே**
**மேலுங் கீழும் பயமில்லை!- 6**

..........................

'பேய்க்கூட்டம்'[1] என்ற கதையில் பாரதியார் எழுதிச் சேர்த்தது இந்தப் பாடல். "....... பண்டாரங்கள் அத்தனை பேரும் சேர்ந்து பின்வரும் பாட்டைப் பாடினார்கள்" என்று குறித்தபின் இந்தப் பாடலைத் தருகிறார், பாரதியார்.

- பதிப்பாசிரியர்.

## 239. நிவேதிதா தேவி துதி*

2456. அருளுக்கு நிவேதனமாய் அன்பினுக்கோர்
கோயிலாய் அடியேன் நெஞ்சில்
இருளுக்கு ஞாயிறா யெமதுயர்நா
டாம்பயிர்க்கு மழையா யிங்கு[1]
பொருளுக்கு வழியறியா வறிஞர்க்குப்
பெரும்பொருளாய்ப் புன்மைத் தாதச்
சுருளுக்கு நெருப்பாகி விளங்கியதாய்
நிவேதிதையைத் தொழுது நிற்பேன்.

இப்பாடல் முதன் முதலாகப் பாரதி பிரசுராலயத்தார் 1937ஆம் ஆண்டில் வெளியிட்ட ''ஸ்வசரிதையும் பிறபாடல்களும்'' என்ற நூலில் பாரதியாரின் ஞானாசிரியர் நிவேதிதா தேவியாருக்குப் படையலாக அமைகிறது.

* அரசாங்க வெளியீட்டில் இப்பாடலின் தலைப்பு ''நிவேதிதா'' என்று குறிக்கப்பெற்றுள்ளது.

- பதிப்பாசிரியர்

1 'யிங்குப்' என்றிருத்தல் வேண்டும்.

– பதிப்பாசிரியர்

## 240. நான்

இரட்டைக் குறள் வெண் செந்துறை

2457. வானிற் பறக்கின்ற புள்ளெலாநான்
மண்ணிற் றிரியும் விலங்கெலாநான்
கானிழல் வளரு மரமெலாநான்
காற்றும் புனலுங் கடலுமேநான். 1

2458. விண்ணிற் றெரிகின்ற மீனெலாநான்
வெட்ட வெளியின் விரிவெலாநான்
மண்ணிற் கிடக்கும் புழுவெலாநான்
வாரியி லுள்ள வுயிரெலாநான். 2

2459. கம்பனிசைத்த கவியெலாநான்
காருகர் தீட்டு முருவெலாநான்
இம்பர் வியக்கின்ற மாடகூடம்
எழினகர் கோபுரம் யாவுமேநான். 3

2460. இன்னிசை மாத ரிசையுளேனான்
இன்பத் திரள்க ளனைத்துமேநான்
புன்னிலை மாந்தர்தம் பொய்யெலாநான்
பொறையருந் துன்பப் புணர்ப்பெலாநான். 4

2461. மந்திரங் கோடி யியக்குவோ – னான்
இயங்கு பொருளி னியல்பெலாநான்

தந்திரங் கோடி சமைத்துவோனான்
சாத்திர வேதங்கள் சாற்றினோனான். 5

2462. அண்டங்கள் யாவையு மாக்கினோனான்
அவைபிழை யாமே சுழற்றுவோனான்
கண்டநற்[1] சக்திக் கணமெலாநான்
காரண மாகிக் கதித்துளோனான். 6

2463. நானெனும் பொய்யை நடத்துவோனான்
ஞானச் சுடர்வானிற் செல்லுவோனான்
ஆனபொருள்க ளனைத்தினு மொன்றாய்
அறிவாய் விளங்குமுதற் சோதிநான். 7

..........................................

(பா-டு): 1 கண்டபல் - (அர.)

## 241. இருதலைக் கொள்ளியினிடையே*

**2464.** எனப்பல பேசி யிறைஞ்சிடப் படுவதாய்
நாட்பட நாட்பட நாற்றமுஞ் சேறும்
பாசியும் புதைந்து பயனீ ரிலதாய்
நோய்க்கள மாகி யழிகெனு நோக்கமோ?
விதியே, விதியே, தமிழச் சாதியை 5
என்செய நினைத்தா யெனக்குரை யாயோ?
சார்வினுக் கெல்லாந் தகத்தக மாறித்
தன்மையுந் தனது தருமமு மாயா[1]
தென்றுமோர் நிலையா யிருந்துநின் னருளால்
வாழ்ந்திடும் பொருளொடு வகுத்திடு வாயோ? 10

---

* பாரதியார் எழுதியுள்ள "My Journal of Thoughts and Deeds" என்னும் குறிப்பில் 92ஆம் பக்கம் "விதியே எனும் தமிழ்ப்பாட்டு" எனக் குறித்துள்ளார். அந்தப் பாட்டு இதுவாகத்தான் இருக்கவேண்டும். இந்தப் பாடலை முதன்முதலாகப் பாரதி பிரசுராலயத்தார் 1937ஆம் வருடப்பதிப்பில், "இரு தலைக் கொள்ளியி னிடையே" என்று தலைப்பிட்டு வெளியிட்டுக் குறிப்பொன் றும் தந்திருந்தனர்.

பாரதி பிரசுராலயத்தார் குறித்திருந்த குறிப்பு வருமாறு:

"இந்நூல் எண்ணிடப்படாத, மிகவுஞ் சிதைவுற்ற கைப்பிரதித் துணுக்கு களினின்றும் சேகரிக்கப்பட்டது. ஆரம்பத்திலும் முடிவிலும் உள்ள வரிகள் கிடைக்கவில்லை. நூலின்பெயர் எங்களால் கொடுக்கப்பட்டதே."

அரசாங்க வெளியீட்டில் இப்பாடலின் தலைப்பு "தமிழ்ச்சாதி" என்று காணப்படுகிறது. - பதிப்பாசிரியர்

பா-டு): 1 தருமமு மழியா - (பா.பி.)

தோற்றமும் புறத்துத் தொழிலுமே காத்துமற்
றுள்ளுறு தருமமு முண்மையு மாறிச்
சிதைவுற் றழியும் பொருள்களிற் சேர்ப்பையோ?
'அழியாக் கடலோ? அணிமலர்த் தடமோ?
வானுறு மீனோ? மாளிகை விளக்கோ? 15
கற்பகத் தருவோ? காட்டிடை மரமோ?
விதியே, தமிழச் சாதியை யெவ்வகை
விதித்தா' யென்பதன் மெய்யெனக் குணர்த்துவாய்.
ஏனெனில்,
'சிலப்பதி காரச் செய்யுளைக் கருதியும் 20
திருக்குற ளுறுதியும் தெளிவும் பொருளின்
ஆழமும் விரிவு மழகுங் கருதியும்,
''எல்லையொன் றின்மை'' யெனும்பொரு ளதனைக்
கம்பன் குறிகளாற் காட்டிட முயலு
முயற்சியைக் கருதியும், முன்புநான் தமிழச் 25
சாதியை யமரத் தன்மைவாய்ந் ததுவென்'
றுறுதிகொண் டிருந்தேன். ஒருபதி னாயிரஞ்
சனிவாய்ப் பட்டுந் தமிழச் சாதிதான்
உள்ளுடை வின்றி யுழைத்திடு நெறிகளைக்
கண்டெனது துள்ளங் கலங்கிடா திருந்தேன். 30
ஆப்பிரிக் கத்துக் காப்பிரி நாட்டிலுந்
தென்முனை யடுத்த தீவுகள் பலவினும்
பூமிப் பந்தின் கீழ்ப்புறத் துள்ள
பற்பல தீவினும் பரவியிவ் வெளிய
தமிழச் சாதி தடியுதை யுண்டும் 35
காலுதை யுண்டும் கயிற்றடி யுண்டும்
வருந்திடுஞ் செய்தியும் மாய்ந்திடுஞ் செய்தியும்
பெண்டிரை மிலேச்சர் பிரித்திடல் பொறாது
செத்திடுஞ் செய்தியும் பசியாற் சாதலும்

பிணிகளாற் சாதலும் பெருந்தொலை யுள்ளதந் 40
நாட்டினைப் பிரிந்த நலிவினாற் சாதலும்
இஃதெலாங் கேட்டு மெனதுள மழிந்திலேன்;
'தெய்வ மறவார், செயுங்கடன் பிழையார்,
ஏதுதாஞ் செய்யினு[1] மேதுதான் வருந்தினும்
இறுதியில் பெருமையு மின்பமும் பெறுவார்' 45
என்பதென் னுளத்து வேரகழ்ந் திருத்தலால்.
எனினும்,

இப்பெருங் கொள்கை யிதயமேற் கொண்டு
கலங்கிடா திருந்த வெனைக்கலக் குறுத்தும்
செய்தியொன் றதனைத் தெளிவுறக் கேட்பாய்:– 50
ஊனமற் றெவைதாம் உறினுமே பொறுத்து,
வானம் பொய்க்கின் மடிந்திடு முலகுபோல்,
தானமும் தவமுந் தாழ்ந்திடல் பொறுத்து
ஞானம் பொய்க்க[2] நசிக்குமோர் சாதி.
சாத்திரங் கண்டாய் சாதியி னுயிர்த்தலம்; 55
சாத்திர மின்றேற் சாதி யில்லை.
பொய்மைச்[3] சாத்திரம் புகுந்திடின் மக்கள்
பொய்மை[3] யாகிப் புழுவென மடிவர்.
நால்வகைக் குலத்தார் நண்ணுமோர் சாதியில்,
அறிவுத் தலைமை யாற்றிடுந் தலைவர்– 60
மற்றிவர் வகுப்பதே சாத்திர மாகும்.
இவர்தாம்–
உடலு முள்ளமுந் தம்வச மிலராய்
நெறிபிழைத் திகழ்வுறு நிலைமையில் வீழினும்,

---

(பா-டு): 1 ஏது தான் செய்யினு – (அர.)
2 ஞானமும் பொய்க்க * (அர.)
3 'பொய்ம்மை' என்பது உரிய வடிவம்.

* பதிப்பாசிரியர்

பெரிதிலை, பின்னும் மருந்திதற் குண்டு. 65
செய்கையுஞ் சீலமுங் குன்றிய பின்னரும்
உய்கைக் குரிய வழிசில வுளவாம்.
மற்றிவர்,
சாத்திரம் - (அதாவது, மதியிலே தழுவிய
கொள்கை, கருத்து, குளிர்ந்திடு நோக்கம்) - 70
ஈங்கிதிற் கலக்க மெய்திடு மாயின்
மற்றதன் பின்னர் மருந்தொன் றில்லை.
இந்தநா ளெமது தமிழ்நாட் டிடையே
அறிவுந் தலைமை தமதெனக் கொண்டார்
தம்மிலே யிருவகை தலைப்படக் கண்டேன். 75
ஒருசார்,
'மேற்றிசை வாழும் வெண்ணிற மாக்களின்
செய்கையு நடையுந் தீனியு முடையும்
கொள்கையு மதமுங் குறிகளு நம்முடை
யவற்றினுஞ் சிறந்தன; ஆதலி னவற்றை 80
முழுதுமே தழுவி மூழ்கிடி னல்லால்,
தமிழச் சாதி தரணிமீ திராது.
பொய்த்தரு வெய்தல்[1] முடி'பெனப் புகலும்.
நன்றடா! நன்று! நாமினி மேற்றிசை
வழியெலாந் தழுவி வாழ்குவ மெனிலோ, 85
'ஏஏ! அஃதுமக் கிசையா' தென்பர்.
'உயிர்தரு மேற்றிசை நெறிகளை யுவந்துநீர்
தழுவிடா வண்ணந் தடுத்திடும் பெருந்தடை
பல,அவை நீங்கும் பான்மைய வல்ல'
என்றருள் புரிவர். இதன்பொருள் 'சீமை 90
மருந்துகள் கற்ற மருத்துவர் தமிழச்

(பா-டு): 1 'பொய்த்தழி வெய்தல்' - (அர.)

சாதியின் நோய்க்குத் தலையசைத் தேகினர்'
என்பதே யாகும். இஃதொரு சார்பாம்.
பின்னொரு சார்பினர் வைதிகப் பெயரொடு
'நமதுமூ தாதையர் (நாற்பதிற் றாண்டின் 95
முன்னிருந் தவரோ, முந்நூற் றாண்டிற்
கப்பால் வாழ்ந்தவர் கொல்லோ, ஆயிரம்
ஆண்டின்முன் னவரோ, ஐயா யிரமோ?
பவுத்தரே நாடெலாம் பல்கிய காலத்
தவரோ? புராண மாக்கிய காலமோ? 100
சைவரோ? வைணவ சமயத் தாரோ?
இந்திரன் றானே தனிமுதற் கடவுள்
என்றுநம் முன்னோ ரேத்திய வைதிகக்
காலத் தவரோ? கருத்திலா தவர்தாம்
எமது மூதாதைய ரென்பதிங் கெவர்கொல்?) 105
நமதுமூ தாதையர் நயமுறக் காட்டிய
ஒழுக்கமு நடையுங் கிரியையுங் கொள்கையும்
ஆங்கவர் காட்டிய வவ்வப் படியே
தழுவிடின் வாழ்வு தமிழர்க் குண்டு.
எனிலது தழுவ லியன்றிடா வண்ணம் 110
கலிதடை புரிவன். கலியின் வலியை
வெல்லலா கா'தென விளம்புகின் றனரால்.
நாசங் கூறு 'நாட்டு வயித்தியர்'
இவராம். இங்கிவ் விருதலைக் கொள்ளியி
னிடையே நம்மவ ரெப்படி யுய்வர்? 115
விதியே! விதியே! தமிழச் சாதியை
யென்செயக் கருதி யிருக்கின் றாயடா?

விதி

மேலைநீ[1] கூறிய விநாசப் புலவரை

(பா-டு): 1 'மேலே நீ' - (அர.)

நம்மவ ரிகழ்ந்து நன்மையு மறிவும்
எத்திசைத் தெனினும் யாவரே காட்டினும் 120
மற்றவை தழுவி வாழ்வீ ராயின்,
அச்சமொன் றில்லை. ஆரிய நாட்டின்
அறிவும் பெருமையும் ........................

## 242. புதிய கோணங்கி*

2465. குடுகுடு குடுகுடு குடுகுடு குடுகுடு;
நல்லகாலம் வருகுது; நல்லகாலம் வருகுது;
சாதிகள் சேருது; சண்டைகள் தொலையுது
சொல்லடி, சொல்லடி, சக்தி,மா காளி,
வேதபுரத் தாருக்கு நல்லகுறி சொல்லு! 5†
தரித்திரம் போகுது; செல்வம் வருகுது;
படிப்பு வளருது; பாவம் தொலையுது;
படிச்சவன் சூதும் பாவமும் பண்ணினால்,
போவான் போவான், ஐயோவென்று போவான்.
வேத புரத்திலே வியாபாரம் பெருகுது; 10
தொழில் பெருகுது; தொழிலாளி வாழ்வான்;
சாத்திரம் வளருது; சூத்திரந் தெரியுது;
யந்திரம் பெருகுது; தந்திரம் வளருது;
மந்திர மெல்லாம் வளருது, வளருது!

.........................................

* 'கதைக்கொத்து' என்ற பகுதியில் காணப்பெறும் "புதிய கோணங்கி" என்ற கதையினூடே இப்பாடல் இடம் பெற்றுள்ளது.

- பதிப்பாசிரியர்

† 5ஆம்வரி முடியவும், 9ஆம் வரி முடியவும், 14ஆம் வரி முடியவும், 18ஆம் வரி முடியவும், 26ஆம்வரி முடியவும், 29ஆம்வரி முடியவும் தனித்தனிப் பாடல்களாகக் கொண்டு ஐந்து பாடல்களாக எண் குறித்துள்ளன முந்தைய பதிப்புகள்.

இது தவறு; இஃது ஒரே ஆசிரியப்பா.

— பதிப்பாசிரியர்

குடுகுடு குடுகுடு குடுகுடு குடுகுடு, 15
சொல்லடீ சொல்லடீ, மலையாள பகவதீ.
அந்தரி, வீரி, சண்டிகை; சூலி!
குடுகுடு குடுகுடு,
குடுகுடு, குடுகுடு, குடுகுடு, குடுகுடு,
சாமிமார்க் கெல்லாம் தைரியம் வளருது 20
தொப்பை சுருங்குது; சுறுசுறுப்பு விளையுது,
எட்டுலச் சுமியும்[1] ஏறி வளருது,
பயந்தொ லையுது, பாவந் தொலையுது,
சாத்திரம் வளருது, சாதி குறையுது,
நேத்திரம் திறக்குது, நியாயந் தெரியுது, 25
பழைய பயித்தியம் படீலென்று தெளியுது,
வீரம் வருகுது, மேன்மை கிடைக்குது,
சொல்லடீ சக்தி, மலையாள பகவதி,
தர்மம் பெருகுது, தர்மம் பெருகுது.

---

(பா–டு): 1 'எட்டு லட்சுமியும்' - (அர.)

## 243. பெண் விடுதலை*

**2466.** விடுத லைக்கு மகளிரெல் லோரும்
வேட்கை கொண்டனம்; வெல்லுவ மென்றே
திடம னத்தின் மதுக்கிண்ண மீது
சேர்ந்து நாம்பிர திக்கினை செய்வோம்.
உடையவள் சக்தி யாண்பெண் ணிரண்டும்
ஒருநி கர்செய் துரிமை சமைத்தாள்.
இடையி லேபட்ட கீழ்நிலை கண்டீர்,
இதற்கு நாமொருப் பட்டிருப் போமோ? 1

**2467.** திறமையா லிங்கு மேனிலை சேர்வோம்;
தீய பண்டை யிகழ்ச்சிகள் தேய்ப்போம்;
குறைவி லாது முழுநிகர் நம்மைக்
கொள்வ ராண்க ளெனில வரோடும்
சிறுமை தீரநந் தாய்த்திரு நாட்டைத்
திரும்ப வெல்வதிற் சேர்ந்திங் குழைப்போம்;

---

* 'சியூசின் செய்த பிரசங்கம்' என்ற கட்டுரைப் பகுதியில் இப்பாடல் உள்ளது. 'சியூசின்' என்பாள் சீனமொழியில் பாடிய பாட்டின் மொழிபெயர்ப்பு இதுவாகும். பாடலுக்கான தலைப்பைப் பாரதி பிரசுராலயத்தார் சூட்டினர்.

கட்டளைக் கலிப்பாவாக — அதில் ஒரு புதுவகையாகக் கொள்ளத்தக்கது. நேரசையில் தொடங்கும் அரையடிக்குப் பத்து எழுத்தும் நிரையசையில் தொடங்கும் அரையடிக்குப் பதினோரெழுத்தும் வருகின்றன

- பதிப்பாசிரியர்

அறவி ழுந்தது பண்டை வழக்கம்;
ஆணுக் குப்பெண் விலங்கெனு மஃதே. 2

2468. விடியு நல்லொளி காணுதி நின்றே,
மேவு நாக ரிகம்புதி தொன்றே
கொடியர் நம்மை யடிமைக ளென்றே
கொண்டு, தாமுத லென்றன ரன்றே.
அடியொ டந்த[1] வழக்கத்தைக் கொன்றே
அறிவு யாவும் பயிற்சியில் வென்றே
கடமை செய்விர்,நந் தேசத்து வீரக்
காரி கைக்கணத் தீர்,துணி வுற்றே. 3

(பா-டு): 1 அடியோடந்த - (அர.)

## 244. எங்கள் மதம்

### (உயிர்பெற்ற தமிழர் பாட்டு)

பல்லவி

2469. இனிஒரு தொல்லையும் இல்லை - பிரி
வில்லை, குறையும் கவலையும் இல்லை - இனி 1

ஜாதி

2470. மனிதரில் ஆயிரம் சாதி – என்ற
வஞ்சக வார்த்தையை ஒப்புவ தில்லை
கனிதரு மாமரம் ஒன்று - அதில்
காய்களும் பிஞ்சுக் கனிகளும் உண்டு 2

2471. பூவில் உதிர்வதும் உண்டு - பிஞ்சைப்
பூச்சி அரித்துக் கெடுவதும் உண்டு
நாவிற் கினியதைத் தின்பார் – அதில்
நாற்பதி னாயிரம் சாதிகள் சொல்லார் 3

2472. ஒன்றுண்டு மானிடச் சாதி - பயின்(று)
உண்மைகள் கண்டவர் இன்பங்கள் சேர்வார்
இன்று படித்தது நாளை - உயர்ந்
தேற்றம் அடையும் உயர்ந்த திழியும் 4

**2473.** நந்தனைப் போல்ஒரு பார்ப்பான் - இந்த
நாட்டினில் இல்லை குணம்நல்ல தாயின்
எந்தக் குலத்தின ரேனும் - உணர்
வின்பம் அடைதல் எளிதெனக் கண்டோம் 5

## இன்பத்திற்கு வழி

**2474.** ஐந்து புலனை அடக்கி - அர(சு)
ஆண்டு மதியைப் பழகித் தெளிந்து
நொந்து சலிக்கும் மனதை - மதி
நோக்கத்திற் செல்ல விடும்வகை கண்டோம் 6

## புராணங்கள்

**2475.** உண்மையின் பேர்தெய்வம் என்போம் - அன்றி
ஓதிடும் தெய்வங்கள் பொய்யெனக் கண்டோம்
உண்மைகள் வேதங்கள் என்போம் - பிறி(து)
உள்ள மறைகள் கதையெனக் கண்டோம் 7

**2476.** கடலினைத் தாவும் குரங்கும் - வெங்
கனலிற் பிறந்ததோர் செவ்விதழ்ப் பெண்ணும்
வடமலை தாழ்ந்தத னாலே - தெற்கில்
வந்து சமன்செயும் குட்டை முனியும் 8

**2477.** நதியினுள் ளேமுழு கிப்போய் - அந்த
நாகர் உலகில்ஓர் பாம்பின் மகளை
விதியுற வேமணம் செய்த - திறல்
வீமனும் கற்பனை என்பது கண்டோம் 9

---

*ஒரே பாடல்போல இதுவரை அச்சிட்டது தவறு. 23 சிந்துக் கண்ணிகள் கொண்டது இது. (பல்லவிதனி).*

*— பதிப்பாசிரியர்*

2478. ஒன்றுமற் றொன்றைப் பழிக்கும் - ஒன்றில்
உண்மையென் றோதிமற் றொன்றுபொய் யென்னும்
நன்றுபு ராணங்கள் செய்தார் – அதில்
நல்ல கவிதை பலபல தந்தார் 10

2479. கவிதை மிகநல்ல தேனும் – அக்
கதைகள்பொய் யென்று தெளிவுறக் கண்டோம்
புவிதனில் வாழ்நெறி காட்டி – நன்மை
போதிக்கும் கட்டுக் கதைகள் அவைதாம் 11

## ஸ்மிருதிகள்

2480. பின்னும் (ஸ்)மிருதிகள் செய்தார் – அவை
பேணும் மனிதர் உலகினில் இல்லை
மன்னும் இயல்பின வல்ல – இவை
மாறிப் பயிலும் இயல்பின ஆகும் 12

2481. காலத்திற் கேற்ற ஒழுக்கமும் நூலும்
ஞாலம் முழுமைக்கும் ஒன்றாய் – எந்த
நாளும் நிலைத்திடும் நூலொன்றும் இல்லை
சூத்திர னுக்கொரு நீதி - தண்டச் 13

2482. சோறுண்ணும் பார்ப்புக்கு வேறொரு நீதி
சாத்திரம் சொல்லிடு மாயின் - அது
சாத்திரம் அன்று சதியென்று கண்டோம்.† 14

---

* "காலத்திற் கேற்ற வகைகள் - அவ்வக்" என்ற ஒரு வரி 'காலத்திற் கேற்ற ......... நூலும்' என்ற வரிக்குமுன் சக்தி காரியாலயப் பதிப்பில் காணப்படுகிறது; ஆனால் அது தேவையில்லை.

† இதற்கடுத்து ஒரு வரி விடுபட்டிருக்க வேண்டும்.

-பதிப்பாசிரியர்

## மேற்குலத்தார் எவர்?

2483. வையகம் காப்பவ ரேனும் – சிறு
வாழைப் பழக்கடை வைப்பவ ரேனும்
பொய்யக லத்தொழில் செய்தே – பிறர்
போற்றிட வாழ்பவர் எங்கணும் மேலோர் 15

## தவமும் யோகமும்

2484. உற்றவர் நட்டவர்[1] ஊரார் - இவர்க் (கு)
உண்மைகள் கூறி இனியன செய்தல்
நற்றவம் ஆவது கண்டோம் – இதில்
நல்லபெ ருந்தவம் யாதொன்றும் இல்லை 16

2485. பக்கத் திருப்பவர் துன்பம் - தனைப்[2]
பார்க்கப் பொறாதவன் புண்ணிய மூர்த்தி
ஒக்கத் திருந்தி உலகோர் - நலம்
உற்றிடும் வண்ணம் உழைப்பவன் யோகி 17

## யோகம் ஞானம்

2486. ஊருக் குழைத்திடல் யோகம் - நலம்
ஓங்கிடு மாறு வருந்துதல் யாகம்
போருக்கு நின்றிடும் போதும் - உளம்
பொங்கல்இல் லாத அமைதிமெய்ஞ் ஞானம் 18

## பரம்பொருள்

2487. எல்லையில் லாத உலகில் – இருந்
தெல்லையில் காலம் இயங்கிடும் தோற்றம்

(பா-டு): 1 'நாட்டவர்' - (சக்தி காரியாலயம்)
2 'பக்கத்திருப்பவர் துன்பம் - தன்னைப்' - (சக்தி காரியாலயம்)

எல்லையில் லாதன வாகும் - இவை
யாவையும் ஆயிவற் றுள்ளுயி ராகி 19

2488. எல்லையில் லாப்பொருள் ஒன்று - தான்
இயல்பறி வாகி இருப்பதுண் டென்றே
சொல்லுவர் உண்மை தெளிந்தார் - இதைத்
தூவெளி என்று தொழுவர் பெரியோர் 20

2489. நீயும் அதனுடைத் தோற்றம் - இந்த
நீல நிறங்கொண்ட வானமும் ஆங்கே
ஓயுதல் இன்றிச் சுழலும் – ஒளி
ஓங்குபல் கோடிக் கதிர்களும் அஃதே 21

2490. சக்திகள் யாவும் அதுவே - பல
சலனம் இறத்தல் பிறத்தலும் அஃதே
நித்தியம் ஆமிவ் வுலகில் - கடல்
நீரில் சிறுதுளி போலும்இப் பூமி 22

2491. இன்பமும் ஓர்கணத் தோற்றம் – இங்கு
இளமையும் செல்வமும் ஓர்கணத் தோற்றம்
துன்பமும் ஓர்கணத் தோற்றம் - இங்கு[1]
தோல்வி முதுமை ஒருகணத் தோற்றம் 23

## முக்தி

2492. தோன்றி அழிவது வாழ்க்கை - இதில்
துன்பத்தோ டின்பம் வெறுமையென் றோதும்
மூன்றில் எதுவரு மேனும் – களி
மூழ்கி நடத்தல் பரசிவ முக்தி. 24

---

1 'இங்குத்' என்றிருத்தல் வேண்டும்,

– பதிப்பாசிரியர்

## 245. வ.உ.சி. க்கு வாழ்த்து*

2493. வேளாளன் சிறைபுகுந்தான், தமிழகத்தார்
மன்னனென மீண்டான் என்றே
கேளாத கதைவிரைவில் கேட்பாய் நீ,
வருந்தலையென் கேண்மைக் கோவே
தாளாண்மை சிறிதுகொலோ யாம்புரிவேம்?
நீஇறைக்குத் தவங்கள் ஆற்றி
வாளாண்மை நின்துணைவர் பெறுகெனவே
வாழ்த்துதிநீ வாழ்தி வாழ்தி.

---

* பரலி சு.நெல்லையப்பர் அவர்கள் எழுதிய "வ.உ. சிதம்பரம்பிள்ளை சரித்திரம்" என்ற நூலில் (பக்.45) இப்பாடல் காணப்படுகின்றது.
- பதிப்பாசிரியர்

# 246. ராதைப் பாட்டு

ராகம்-கமாஸ், தாளம்-ஆதி

பல்லவி

2494. தேகி முதம் தேகி ஸ்ரீ ராதே, ராதே. 1

சரணங்கள்

2495. ராக ஸமுத்ர ஜாம்ருதே ராதே, ராதே.
ராஜ்ஞீமண் டலரத்ந ராதே, ராதே.
போகரதி கோடி துல்ய ராதே, ராதே (ஜய, ஜய)
பூதேவி தப: பல ராதே, ராதே. (தேகி) 2

2496. வேதமஹா மந்த்ரரஸ ராதே, ராதே!
வேதவித்யா விலாஸினிஸ்ரீ ராதே, ராதே!
ஆதிபரா சக்திரூப ராதே, ராதே!
அத்யத்புத சிருங்காரமய ராதே, ராதே. (தேகி) 3

தமிழ்க் கண்ணிகள்*

2497. காதலெனுந் தீவினிலே, ராதே, ராதே! (அன்று)
கண்டெடுத்த பெண்மணியே, ராதே, ராதே.

---

* இந்த வரிகளைக் கண்ணிகள் என்று குறித்தது எப்படி என்பது விளங்க வில்லை, எதுகைப் பொருத்தத்தோடு அளவொத்த இரண்டடிகள் வருவது கண்ணியின் இயல்பு. இந்த வரிகளை ஒரு சரணமாகவே கொள்ள வேண்டும்.
- பதிப்பாசிரியர்

காதலெனுஞ் சோலையிலே ராதே, ராதே (நின்ற)
கற்பகமாம் பூந்தருவே ராதே, ராதே,
மாதரசே! செல்வப்பெண்ணே, ராதே, ராதே (உயர்)
வானவர்க ளின்பவாழ்வே, ராதே, ராதே (தேகி) 4

# மேலும் சில

இனி வரும் பாடல்களில் சில பாரதியார் பாடிய பாடல்கள்தாமா என்று உறுதி செய்ய முடியவில்லை. ஆயினும், பாரதி வாழ்வோடு ஏதேனும் ஒருவகையில் தொடர்பு கொண்டவர்களின் ஆதாரச் செய்திகளால் இவற்றைப் புறக்கணிக்க விரும்புவில்லை. திட்டமாகத் தெரியாத நிலையில், இவற்றையும் வெளியிடுவதே முறை என்ற கருத்தால் வெளியிடுகிறோம்.

## 247. மயில் வீரன்

2498. பச்சைத் திருமயில் வீரன்
அலங் காரன் கௌமாரன் - ஒளிர்
பன்னிரு திண்புயப் பாரன், அடி
பணிசுப்பிர மணியர்க்கருள்
அணிமிக்குயர் தமிழைத்தரு
பக்தர்க்கெ ளியசிங் காரன் - எழில்
பண்ணு மருணாசலத் தூரன்.

---

ஆதாரம்: Bharati and his Works (1929) - பக். 6.

## 248. செல்வத்துட் பிறந்தனமா?

2499. செல்வத்துட் பிறந்தனமா? அதுபெறுவா(ன்)
சிறுதொழில்கள் பயிலவல் லேமா?
வில்வைத்த நுதல்விழியார் கண்டுமயல்
உறவடிவ மேவி னேமா?
பல்வித்தை யினுமினிய தீங்கானப்
பெருவித்தை பயின்றிட் டேமா?
கொல்வித்தை இருள்வித்தை மருள்வித்தை
பயின்றுமனம் குறைகின் றோமே!

---

ஆதாரம்: Bharati and his Works (பக். ௭)

## 249. உலகை நோக்கி ஒரு வினா

2500. காவித் திருவிழி மானார்தம் மையல் கடுவிஷமாம்
கூவிச் சமயர்க் குரைப்பன பொய்இக் குவலயத்தில்
ஆவிச் சுகமென் றறிந்ததெல் லாம்துன்பம் அன்றியில்லை
பாவிச் சிறுஉல கேஉன்னை யாவன்கொல் பண்ணியதே.

---

ஆதாரம்: *'கல்கி' (13-4-1958)*

## 250. காதலும் துறவும்

மலர்

2501. வண்டுதேன் உண்ண வரில்இதழ் திறவேன்!

காந்தம்

இரும்பெனை அணுகினால் யான்அதைத் தீண்டேன்!

இயற்கைத் தெய்வம்

மலரிலே வைத்ததேன் மலர்க்குரித் தன்று;
மலரிலே வைத்ததேன் வண்டினுக் குரியது!
இரும்பினை அணுகா திருப்பது காணின்
காந்தம் அன்று கருங்கல் அஃதே!
தீயிலே எரியா மரம்ஒன் றில்லை;
காதலில் இளகாக் கன்னிநெஞ் சில்லை;
துறத்தலே பெரிது, துறத்தலே பெரிது:
மறத்தலும் இறத்தலும் கடந்தநற் காதல்
தோன்றுநாள் வரையில் துறத்தலே பெரிது.

.........................................

*ஆதாரம்: சி. விசுவநாத ஐயர் கட்டுரை (கலைமகள் - 1966 தீபாவளி மலர்)*

# 251. அபிமன்யு இறந்தபோது அர்ஜுனன் சொன்னது

2502. இன்றலவோ கண்ணன் இளையாள் மணிவயிறு
பொன்திகழும் புனிதமுடைத் தாயினதே* 1

2503. இன்றலவோ பண்டை இரவிகுலந் தனிலும்
நன்று நமதென்று நளிர்மதியம் பொங்குவதே. 2

2504. மண்ணகத்தார் இன்பமெலாம் வாய்க்கும் எனக்கேள்மின்
விண்ணகத்தார் இன்பமலால் வேறொவ்வா மஞ்சனுக்கே 3

2505. ஆர்புரிந்தார் என்போல் அருந்தவமே மைந்தனொடு
போர்புரிந்தார் பேர்கேட்டார் பொன்னாட்டார்
அஞ்சாரோ? 4

.............................................

*ஆதாரம்: பாரதி புதையல்*

* *இவ்வடியில் ஒரு சீர் குறைகிறது*

## 252. அரவிந்தப் பாம்பு

**2506.** உண்மைநிலை கண்டுறங்கும் யோகப் பாம்பே!
உலகத்தைச் சமன்செய்ய எண்ணு பாம்பே!
திண்மைநிலை கொண்டிருக்கும் தெய்வப் பாம்பே,
தெய்விகத்தைக் காட்டுவதற்குத் தீவிரங் கொள்வாய்!

**2507.** ஆதிசிவன் மேலிருக்கும் நாகப் பாம்பே - எங்கள்
அரவிந்தப் பேர்புனைந்த அன்புப் பாம்பே!
சோதிப்படந் தூக்கிநட மாடிவருவாய் - அந்தச்
சோலைநிழ லாலெமது துன்ப மொழிவோம்!

.......................................

*ஆதாரம்: 'கவிக்குயில் பாரதியார்' (1946). இந்நூலில் (பக். 50-51) அரவிந்தரைப் பற்றிய பாடல் என்று சுத்தானந்த பாரதியார் இதனைப் பற்றித் தகவல் தந்துள்ளார்.*

## 253. பெரியோர் பெருமை

2508. கண்ணிலான் காலிற்
கவின்மணியை யெற்றிவிட்டால்
மண்ணி லதுதான்
மதிப்பகன்ற தாய்விடுமோ?

2509. பொய்த் தொழிலோன் மைதிலியாம்
பூவைதனைப் புன்காவல்
வைத்ததனா லன்னை
மதிப்பிழந்து போயினளோ?

2510. ஐவர்முன்னே பாஞ்சாலி
யாடையுரிந் தார்கயவர்;
மைவளர்த்த கண்ணாளின்
மாண்பகன்று போயினதோ?

---

*ஆதாரம்: பாரதியார் கவிதைகள் - (வானவில் பிரசுரம்)*

## 254. இந்தத் தெய்வம்

2511. இந்தத் தெய்வம் நமக்கநுகூலம்
இனிமனக் கவலைக் கிடமில்லை (இந்த) *1*

2512. மந்திரங்களைச் சோதனை செய்தால்
வையகத்தினை ஆள்வது தெய்வம்
இந்தத் தெய்வம் கதியென்றிருப்பீர்
ஆக்க முண்டென் றனைத்து முரைக்கும் (இந்த) *2*

2513. மரத்தின் வேரில் அதற்குணவுண்டு
வயிற்றினிலே கருவுக் குணவுண்டு
தரத்தி லொத்த தருமங்களுண்டு
சக்தி யென்றிடிலோ முக்தியுண்டு (இந்த) *3*

2514. உலகமே உடலாய் அதற்குள்ளே
உயிரதாகி விளங்கிடுந் தெய்வம்
இலகும் வானொளி போலறிவாகி
எங்கணும் பரந்திடும் தெய்வம் (இந்த) *4*

---

*ஆதாரம்: யதுகிரி அம்மாள் எழுதிய 'பாரதி நினைவுகள்' (பக். 137-138) பாரதியாரின் மூத்த மகள் தங்கம்மாள் ருதுவான நாளில் இதைப் பாடியதாக யதுகிரி அம்மாள் குறித்திருக்கிறார்.*

*- பதிப்பாசிரியர்*

**2515.** செய்கை யாவும் தெய்வத்தின் செய்கை
சிந்தை யாவும் தெய்வத்தின் சிந்தை
உய்கை கொண்டதன் நாமத்தைக் கூறின்
உணர்வு கொண்டவர் தேவர்க ளாவர் (இந்த) 5

**2516.** நோயில்லை வறுமையில்லை
நோன்பிழைப் பதிலே துன்பமில்லை
தாயுந் தந்தையும் தோழனு மாகித்
தகுதியும் பயனும் தரும் தெய்வம் (இந்த) 6

**2517.** அச்சமில்லை மயங்குவதில்லை
அன்பும் இன்பமும் மேன்மையும் உண்டு
மிச்சமில்லை பழந்துயர் குப்பை
வெற்றியுண்டு விரைவினில் உண்டு. 7

இந்தத் தெய்வம் நமக்கநு கூலம்
இனி மனக்கவலைக் கிடமில்லை.

## 255. விஷ்ணு சரணம்

இங்கிலீஷ் பாண்டு நோட்டு மெட்டு - ஆதிதாளம்

பல்லவி

2518. விஷ்ணும் பிதரம் சரணம்
கச்சாமி ஸதா – ஸதா – ஸதா

அநுபல்லவி

2519. ஜிஷ்ணும் திரிலோக நாயகம்
ஸ்ரீபர்த்தாரம் மமகர்த்தாரம்

சரணம்

2520. கிருஷ்ணம் நித்தியாநந்தபோத
கிரணகோடி ஆதித்யம்
ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹார காரகம்
சிவம் – தமம் - பரம் நித்யம்.

---

*ஆதாரம்: ஆனந்த விகடன்: தீபாவளி மலர் 1937.*

## 256. கிருஷ்ண, ராதே

சமஸ்க்ருத பாட்டுக்கள்

2521. கீர்த்தி ஸ்ரீ காந்தா கிருஷ்ண கிருஷ்ண கிருஷ்ண ஹோ,
தீர்த்தாமர கணவந்தித திவ்யாம்ருத ஸ்ரீராதாபி நந்தித
(கீர்த்தி ஸ்ரீ)
மூர்த்தி ஹ்ருத பரப் பிரும்ம முத்ரிபூத நித்யாநந்த
(கீர்த்தி ஸ்ரீ)

2522. ''ராதே, ராதே, த்வமஹமஹம்த்வம், ராதே ஸ்ரீ ராதே
நாதஸ்வரூபிணி நரலோக ப்ரதிஷ்டிதரமே
பாத கமல விஸ்ருதாகிட பாக்யே
பத்ம குசே மத்ஸமே - ராதே ராதே''

.............................................

*ஆதாரம்: 'என் தந்தை (பக். 81): சகுந்தலா பாரதி*

## 257. தலைவர்கள் வாழ்க!

**2523.** 'தொலைப்பேன் கொடுங்கோன்மையை' யென்ற ட்ராட்ஸ்கி
வாழ்கவே
'நிலைப்பேரானந்தமுற என்னாளும் மண்மிசை
நிறுத்துவேன் இங்குயிரை' என்றவசு ஒளிர்கவே;
'மரணபயத்தை ஒழிப்பேன்! என்ற மகம்மதலி வாழ்கவே,
சரணம், அல்லா ஒன்றே' யென்ற ஷவுக்கத்தலி வாழ்கவே

.................................

*ஆதாரம்: 'என் தந்தை' (பக். 82): சகுந்தலா பாரதி.*
*இதனைப் பாடல் என்று கருதுவதே கடினமாக உள்ளது.*
*- பதிப்பாசிரியர்*

## 258. பிறந்தேன்

**2524.** நித்த நித்தம் துயின்றெழுந்து
புத்தி யில்லாப் புல்லருடன் போக்கி
அத்த மித்தவுடன் விழு பணத்தை
மண்ணைக் கல்லைத் தொழுதற்கோ
யான் பிறந்தேன்?

........................................

*ஆதாரம்: பாரதி புதையல் — பெருந்திரட்டு (பக்.6)*

*இது யாப்பு வகைக்குஇயையாதது மட்டு மன்றி, வாக்கிய அமைப்புக்கும் இயையாத ஒன்று.*
*— பதிப்பாசிரியர்*

## 259. பிரெஞ்சு நாட்டுப் பாடல்

*('லா மார்ஸெலேஸ்' என்னும் பிரெஞ்சு தேசிய கீதத்தைத் தமிழ்ப்படுத்தி, பள்ளி நாடகத்தில் பாடுவதற்காகப் பள்ளி மாணவர்களுக்காகக் கொடுக்கப்பட்ட பாடல் இது)*

**2525.** அன்னை நன்னாட்டின் மக்காள் ஏகுவம்
மன்னு புகழ் நாளிதுவே!
நம்மேல் கொடுங்கோல் செலுத்துவோர்
நாட்டினார் உதிரக் கொடி தனை!

**2526.** கேட்டீர்களா! கிராமங்களில்
வீரிடும் அரக்கப் படைகள்
அணுகி நம் மடிகளிலேயே
நம் மக்கள் பெண்டிரைக் கொல்லத் துணிவார்.

**2527.** போர்க் கோலம் பூணுவீர்! வகுப்பீர் அணிகளை!
செல்வோம் செல்வோம்!
நாம் போம் பாதையில்
பாய்ச்சுவோம் அவரிரத்தத்தை!

**2528.** அன்னை நாட்டு மக்காள் ஏகுவீர் போய்
மன்னுபுகழ் நாளிதுவே! செல்வோம், செல்வோம்!

---

*ஆதாரம்: பாரதி புதையல் - 1; (பக்.20)*

நமக் கெதிரில் நாணாக் கொடுங்கோல்
செந்நீர் தோய்ந்த உதிரக் கொடி ஓங்குது!

2529. கேளீர், தொலை கிராமங்களிலே
உருமும் படையாட்கள் ஒலியை!
நம்மை யணுகி நம்தோள் காக்கும்
மக்கள் மனையார் கொல்லத் துணிவர்.

2530. வாள் பிடித் தொன்றாய் அணி வகுப்பீர்!
மலச் செந்நீராற் தரைதணிக்கச்
செல்வோம், செல்வோம்! (அன்னை)

## 260. குருவிப்பாட்டு

2531. அருவிபோலக் கவிபொழிய - எங்கள்
அன்னை பாதம் பணிவேனே.
குருவிப் பாட்டை யான்பாடி - அந்தக்
கோதை பாதம் அணிவேனே. 1

கேள்வி

2532. சின்னஞ் சிறுகுருவி - நீ
செய்கிற வேலை யென்ன?
வன்னக் குருவி - நீ
வாழும் முறை - கூறாய்! 2

குருவியின் விடை

2533. கேளடா மானிடவா - எம்மில்
கீழோர் மேலோர் இல்லை.
மீளா அடிமை யில்லை - எல்லோரும்
வேந்தரெனத் திரிவோம் 3

2534. உணவுக்குக் கவலையில்லை - எங்கும்
உணவு கிடைக்குமடா
பணமும் காசுமில்லை - எங்குப்
பார்க்கினும் உணவேயடா. 4

---

*ஆதாரம்: பாரதி புதையல் - 1 (பக். 5-8)*

2535. சிறியதோர் வயிற்றினுக்காய் - நாங்கள்
ஜன்ம மெல்லாம் வீணாய்
மறிகள் இருப்பதுபோல் - பிறர்
வசந்தனில் உழல்வதில்லை 5

2536. காற்றும் ஒளியுமிகு – ஆ
காயமே எங்களுக்கு
ஏற்றதொரு வீடு - இதற்
கெல்லையொன் றில்லையடா 6

2537. வையகம் எங்குமுளது – உயர்
வான பொருளெல்லாம்
ஐயமின் றெங்கள் பொருள் - இவைஎம்
ஆகார மாகுமடா 7

2538. ஏழைகள் யாருமில்லை - செல்வம்
ஏறியோர் என்றுமில்லை
வாழ்வுகள் தாழ்வுமில்லை - என்றும்
மாண்புடன் வாழ்வமடா. 8

2539. கள்ளம் கபடமில்லை - வெறும்
கர்வங்கள் சிறுமையில்லை
எள்ளற்குரிய குணம் - இவை
யாவும்உம் குலத்திலடா 9

2540. களவுகள் கொலைகளில்லை - பெருங்
காமுகர் சிறுமையில்லை.
இளைத்தவர்க்கே வலியர் - துன்பம்
இழைத்துமே கொல்லவில்லை 10

2541. சின்னஞ்சிறு குடிலிலே - மிகச்
சீரழி வீடுகளில்
இன்னலில் வாழ்ந்திடுவீர் - இது
எங்களுக்கு இல்லையடா. 11

2542. பூநிறை தருக்களிலும் - மிகப்
பொலிவுடைச் சோலையிலும்
தேனிறை மலர்களிலும் - நாங்கள்
திரிந்து விளையாடுவோம் 12

2543. குளத்திலும் ஏரியிலும் - சிறு
குன்றிலும் மலையினிலும்
புலத்திலும் வீட்டினிலும் – எப்
பொழுதும் விளையாடுவோம் 13

2544. கட்டுகள் ஒன்றுமில்லை – பொய்க்
கதைகளும் ஒன்றுமில்லை
திட்டுகள் தீதங்கள் – முதற்
சிறுமைகள் ஒன்றுமில்லை 14

2545. குடும்பக் கவலையில்லை - சிறு
கும்பித்துயரு மில்லை
இடும்பைகள் ஒன்றுமில்லை - எங்கட்
கின்பமே என்றுமடா. 15

2546. துன்பமென் றில்லையடா – ஒரு
துயரமும் இல்லையடா.
இன்பமே எம்வாழ்க்கை - இதற்கு
ஏற்றமொன் றில்லையடா 16

2547. காலையில் எழுந்திடுவோம் - பெருங்
கடவுளைப் பாடிடுவோம்
மாலையும் தொழுதிடுவோம் - நாங்கள்
மகிழ்ச்சியில் ஆடிடுவோம் 17

2548. தானே தளைப்பட்டு – மிகச்
சஞ்சலப்படும் மனிதா.
நானோர் வார்த்தை சொல்வேன் - நீமெய்ஞ்
ஞானத்தைக் கைக்கொள்ளடா. 18

2549. விடுதலையைப் பெறடா - நீ
விண்ணவர் நிலைபெறடா
கெடுதலை ஒன்றுமில்லை - உன்
கீழ்மைகள் உதறிடடா, 19

2550. இன்பநிலை பெறடா - உன்
இன்னல்கள் ஒழிந்ததடா
துன்பம் இனியில்லை - பெருஞ்
சோதி துணையடா 20

2551. அன்பினைக் கைக்கொள்ளடா - இதை
அவனிக்கிங்கு ஓதிடடா
துன்பம் இனியில்லை - உன்
துயரங்கள் ஒழிந்ததடா. 21

2552. சத்தியம் கைக்கொள்ளடா - இனிச்
சஞ்சலம் இல்லையடா.
மித்தைகள் தள்ளிடடா – வெறும்
வேஷங்கள் தள்ளிடடா. 22

2553. தர்மத்தைக் கைக்கொள்ளடா – இனிச்
சங்கடம் இல்லையடா.
கர்மங்கள் ஒன்றுமில்லை – இதில் உன்
கருத்தினை காட்டிடடா. 23

2554. அச்சத்தை விட்டிடடா – நல்
ஆண்மையைக் கைக் கொள்ளடா.
இச்சகத் தினிமேலே நீ - என்றும்
இன்பமே பெறுவையடா. 24

## 261. மணிமுத்து நாவலர்

2555. பந்தைத் தெறுமுலைமாப் பான்மொழியி னுங்கரிய
எந்தைக்குச் சால இனிக்குமே – விந்தை
அணிமுத்துக் கோவையென அஞ்சொலிசை சேர்க்கும்
மணிமுத்து நாவலர் வாக்கு.

........................................

*1935ஆம் வருடம் எட்டயபுரத்தில் வெளியான "மணிமுத்துப்புலவர்" என்ற நூலில் இப்பாடல் வெளியாகியுள்ளதாகப் பாரதி புதையல் 1 (பக்: 22) தகவல் தருகிறது.*

## 262. தொழில் முறை: கர்ம யோகம்

(நொண்டிச்சிந்து)

2556. ஏது மறந்துவிட லாமோ? - ஒன்றில்
எண்ணமிட எண்ணமிட வெற்றி விலையும்
பாதி தொழில்புரிய லாமோ? -தொடப்
பட்டதனைத் தும்வெல்லப் பட்டதெனவே
மோதிமுன் னேறுவது மேன்மை - சித்தம்
முன்னிமுன்னித் துளைத்திட நன்மை தெளிவாம்
மீதித் தொழில் நிறுத்தலாமோ? - வெறும்
வேகத்தை நாடி நலம் விடுவதுண்டோ? 1

2557. அஞ்சித் தொழில்புரிய லாமோ? -நெஞ்சில்
அன்பு கனியாவிடில் கைகள் செய்யுமோ?
மிஞ்சி இடுக்கண் வருமென்றே - தங்கம்
வெட்டுவதற் கஞ்சிடிற்பின் செல்வமுண்டோ?
கொஞ்சி நமக்கினிமை யாதல் - நாம்
குழந்தைகளோ? தெய்வம் கிழத்தாயோ?
நெஞ்சி லுறுதி மதிநினைப்பு - இவை
நேரி லன்றோ தொழில் நேர்கொண்டுபோம்? 2

2558. எண்ணித் துணிகுவது கருமம் - துணிந்
தேற்றபினர் எண்ணுவ திழுக்கெனவே

புண்ணியத் தமிழ்க்குறள் முனிவன் - சொன்ன
புத்தியை மறந்துவிடு மந்தமதியோர்
மண்ணிற் கெடுவர்மிக விரைவில் கொண்ட
மதியினிலே மதி செல்ல விடுவோர்
விண்ணிற் புடைக்கு மிசை பெறுவார் - இங்கு
வெற்றி பெறுவார், பரமுத்தி பெறுவார். 3

2559. கூடித் தொழில்புரிதல் வேண்டும் - நெஞ்சக்
குடைச்ச லெல்லாமெல்லச் சரிப்படுத்தி
நீடித்த நன்மையினைக் கருதி - நல்ல
நீதி தவறாதபடி பாக மியற்றிப்
பேடிப் பதர்களைப்பின் விலக்கிப் - பொதுப்
பெரும்பயன் கருதித்தஞ் சிறுபயனை
வேடிக்கை போலுதறித் தள்ளிப் - பொது
வெற்றியினை நாடுபவர் மேன்மை பெறுவார். 4

..............................

ஆதாரம்: 'தாமரை' (செப். 1973) - தொ.மு.சி. ரகுநாதன்

இதுவரை வெளிவந்துள்ள பாரதியின் கவிதைத் தொகுப்பு எதிலும் இடம் பெறாத பாரதியின் கவிதை இது. பாரதி வாழ்ந்த காலத்திலேயே பாரதியின் கவிதைகளைத் தேனீப்போல் சேகரித்து எழுதிவைத்துவந்த பாரதி பக்தர்களில் ஒருவரும் தேச பக்தருமான காலஞ்சென்ற திருநெல்வேலி எஸ். முத்தையா பிள்ளையவர்கள் எழுதிவைத்திருந்த பாரதி கவிதைகளிலிருந்து கண்டெடுத்த கவிதை இது. இதனைத் தேடியெடுத்து வெளியிட்டவர் திரு. தொ.மு.சி. ரகுநாதன் (தாமரை: செப். 1973)

## 263. ஸ்ரீ கபிலர் அகவல்*

(ஸ்ரீமான் சி. சுப்பிரமணிய பாரதியால் நொண்டிச் சிந்துகளாகப் பாடப் பட்டது.)

2560. நான்முகன் படைத்ததுவாம் - இந்த
நானா வகைப்படு முலகினிலே
மேன்மைகொள் பொருள்சிலநான் – இங்கு
விரித்துரைப் பேன்கே ளீர்புவியீர்!
ஆன்ம வருக்கத்திலே - விற
லாண்முதி தோ?அன்றிப் பெண்முதிதோ?
பான்மையி லலிமுதிதோ - இதைப்
பகுத்துரைப் பார்பார் மீதுளரோ? 1

2561. செல்வஞ் சிறப்பாமோ - கல்வி
சிறந்தது வோ,அறி வுயர்ந்ததுவோ?
தொல்புவிக் கூட்ட மெல்லாம் - தன்னில்
தோன்றிய தோ,பிறர் படைத்ததுவோ?
எல்லா வகைப்பி றப்பும் - வெறும்
இயற்கைகொ லோ?தெய்வச் செயலாமோ?
சொல்லீர் புவியிரே - இந்தச்
சூழ்ச்சி யெலாமிங்கு யாருணர்வார்? 2

---

ஆதாரம்: சீனி. விசுவநாதனிடம் உள்ள கையெழுத்துப் படி.

* 'அகவல்' எனப் பெயரிட்டுவிட்டு, 'நொண்டிச் சிந்து' எனப் பா வகை குறிப்பது வியப்பாக உள்ளது. இஃது அகவற்பா அன்று; சிந்துவகையே யாகும்.

2562. விதியிட்ட காலத்திலே - உடல்
விழுந்திடு மோ,அன்றி மரணமிங்கோர்
விதியற்ற விளையாட்டோ? - கெட்ட
வினைப்பயன் சாமோ, சாகாதோ?
பதிவுற்ற புலனைந்தும் – உயிர்
படும்போ தென்செயும்? எங்குசெல்லும்?
மதியிட்டிங் கிதனையெலாம் - கண்டு
வகுத்துரைப் பார்பார் மீதுளரோ? 3

2563. ஆற்றல்கொ ளருந்தவத்தால் - புதி
தாகுமிவ் வுடம்பெனில், அங்குமக் கே
வேற்றுடம் பெய்திடுமோ? – புது
விதத்திலிவ் வுடம்பே மாறுவதோ?
சோற்றினை யுண்பதுதான் – இந்தத்
தோலுடம் போ?உயிர் தான்உண்ணுமோ?
தோற்றிய பொருள்கண்டே - இன்பந்
துய்ப்பது விழியோ, உட்கருத்தோ? 4

2564. வையத்து மானுடரே – என்றன்
வாய்ப்பறை நாக்கோல் கொண்டடிப்பேன்
வையத்து மானுடரே - என்றன்
வாய்ப்பறை சாற்றிடக் கேண்மினிங்கே!
வையத்து மானுடர்க்கே – இங்கு
வயதொரு நூறன்றி யதிகமில்லை,
உய்யுமிந் நூற்றாண்டில் - நீர்
உறக்கத்தி லைம்பது கழித்திடுவீர் - 5

2565. குழவிப் பிராயமைந்து - பின்பு
கூடுமொ ரிளமையிற் பதினைந்துபோம்.

எழுபதிங் ஙனம்போக — மிஞ்சி
யிருப்பன ஆண்டுகள் முப்பதுள்ளே
பழுதறு மின்பமுற்றே - சில
பகல்கழிப் பீர்,அன்றித் துன்பமுற்றும்
அழுதுஞ்சில் பகல்கழிப்பீர் - இங்கு
னழிந்திடும் பொய்ச்சிறு வாழ்வினுள்ளே 6

2566. ஆற்றிடை வெள்ளமொப்பாம் - செல்வம்;
அதனிடி கரையொக்கு மிளமைகண்டீர்,
தோற்றங்கொ ளிடிகரைமேல் - மரந்
தோன்றுதல் போன்றது வாழ்நாளும்
தேற்றங்கொண் டிதனிடையே — நீர்
செயத்தக்க செய்கையும் ஒன்றேதான்
வேற்றுளங் கொள்ளாமே — செய்ய
வேண்டிய தாவது நன்றேதான். 7

2567. நன்றே செயல்வேண்டும் - அதை
நாளைச்செய் வோமென்று போக்காமே
இன்றே செயல்வேண்டும் - அதை
இப்பொழு தேசெய் திடல்வேண்டும்
அன்றிப்புன் சோம்பரினால் — இதை
ஆற்றுவம் நாளையென் றிருப்பீரேல் -
கொன்றுமை நாளைக்கே - நமன்
கொண்டுசென் றாற்பின்ன ரேதுசெய்வீர். 8

2568. நாளைக்கு, நாளைக்கென்றால் - அது
நம்முடை நாளோ, நமனுடைத்தோ?
வேளைக்கு அறஞ்செய்வீர் - எந்த
வேளையுங் கூற்றுவன் மேவிடுவான்.

ஆளைக்கொண் டேபோவான் - அன்றி
அடியிணை போற்றினுந் தான்போகான்
மீளப்பொன் கொடுத்தாலும் – பல
விதம்படச் சாற்றினு மீண்டுசெல்லான் – 9

2569. நல்லா ரெனக்கருதான் – மிக
நைந்தவ ரென்றெண்ணி விட்டகலான்
பொல்லா ரெனக்கருதான் - மிகப்
பொருளுடை யோரென மதித்தகலான் –
நில்லா னொருகணமும் - கொடு
நெஞ்சினன் கூற்றுவன் வந்தெய்தின்
எல்லா ரையுமொன்றுபோல் – உயி
ரெடுத்தகல் வான்-உடல் கொண்டுசெல்லான் 10

2570. மாண்டார்க் கழுவதென்னே - ஏழை
மாந்தர்க ளே?உயி ரிழந்ததற்கோ?
பூண்டமெய் யிழந்ததற்கோ? - எதன்
பொருட்டழு வீர்சற்றுப் புகலுவீரோ?
ஈண்டுயிர் காண்கிலமே - அதற்
கிரங்குகின் றோமெனில், அவ்வுயிர்தான்
காண்டகு பொருளன்றே - பண்டுங்
கண்டறி யீரின்று மதைக்காணீர் - 11

2571. உடலினை யன்றுங்கண்டீர்! - இன்றும்
உடலி னைக்கண்டீர்! அழுவதினால்
இடரன்றிப் பயனுளதோ? - கள
விழைத்ததோர் கள்வனைப் பிணிப்பதுபோல்,
விடுமுயிர் விட்டதன்பின் - அந்த
வெற்றுட லதைக்கையுங் காலுங்கட்டி

உடைகளைக் ததனரையில் - நீர்ஒரு
கோவணங் கட்டி யிடுகாட்டில். 12

2572. ஈமக் கனல்மூட்டி - உடல்
எரிபட்டுச் சாம்பருறச் சுட்டதன்பின்னர்
தாமுந் தமர்களுமா - நீர்
தனில்முழுக் கிட்டுமதி லைந்தழுகின்றீர்
நாமிதை வஞ்ச மென்பமோ? - அன்றி
நல்லதொர் சதுரென்று நகைப்போமோ?
நேமங்கொள் பார்ப்பனர் - ஒன்று
நிகழ்த்திடக் கேட்பீர் நுமக்குமிங் கே.* 13

*இது முடிவுற வில்லை.

## 264. யாவரும் வருவீரே

2573. தோதக மெத்தனை யத்தனை கற்றவர்
சூதர மொத்தவர் கொக்குநி கர்ப்பவர்
சூதுபெ ருத்தவர் உக்ரம னத்தவர் - சதியோடே

பாதக நித்தமு மெத்தவி ழைப்பவர்
பாரக முற்றவு நத்துசி னத்தவர்
பாவமி யற்றிடு மத்துறை மிக்கவர் - விரகாலே

வேதனை பற்பல உற்றன நற்றிறல்
வீரம ழித்துஅதி துக்கமி குத்தி[1]
மேதகு நற்கலை முற்றஒ ழித்தனம் - இனியேனும்

ஆதர முற்றொரு பக்கநி லைத்தவர்
ஆணவ முற்றவ ரீற்றும ரித்திட
யாருவ மித்ததி நட்பொடு சட்டென - வருவீரே

---

*ஆதாரம்: பாரதி புதையல் II (பின்னிணைப்பைப் பார்க்க)*

*1 ஒரெழுத்துக் குறைவதாகத் தோன்றுகிறது*

*— பதிப்பாசிரியர்*

## 265. மெலிவாகி நிற்றல் அழகோ?

2574. மறமே வளர்த்த கொடியார் ஒழுக்க
வழியே தகர்த்த சதியாளர்
மதமேவு மிக்க குடிகேடர் உக்(கி)ர
மனமேவும் அற்பர் நசையாலே

அறமே யழித்து வசையே தழைத்த
அதிநீசர் மிக்க அகமேவி
அறிவே சிறுத்த முழுமூடர் வெற்றி
அதியா ணவத்தர் முறையாலே

விறலே மறுக்க உணவேது மற்று
விதியோ எனக்கை தலைமோதி
விழிநீர் சுரக்க வெகுவாதை யுற்று
மெலிவாகி நிற்றல் அழகாமோ?

புறம்மேவு பக்தர் மனமா சறுத்த
புனிதா குறப்பெண் மணவாளா
புகலேது மற்ற தமியேமை ரட்சி
பொருவேல் பிடித்த பெருமானே!

## 266. செந்திரு தழுவிய பெருமாளே

2575. செயிர்த்த சிந்தையர் பணநகை மிகமிக
வருத்த வந்தவல் வினைபுரி முகடிகள்
சிறக்கு மன்பதை யுயிர்கவர் எமபடர் - எனவாகி
சினத்தின் வஞ்சக மதியொடு நிகரறு
நலச்சு தந்திர வழிதெரி கரிசகல்
திருத்த கும்பெரி யவர்களை யகமொடு -
சிறையூடே

வயிர்த்த கொள்கையின் வசைசொலி யுணவற
வருத்தி வெந்துயர் புரிபவர் சுயநல
மனத்து வன்கணர் அறநெறி தவறிய - சதியாளர்
மதர்த்தெ ழுந்தஇன் புளகித இளமுலை
மருட்டு மங்கையர் அழகினில் நிதியினில்
வசப்ப டும்படி சிலர்களை மயல்புரி - அதிநீசர்

மயிர்த்த லந்தொறும் வினைகிளர் மறமொடு
மறப்ப ரும்பல கொலைபுரி கொடியவல்
வனக்கு ரும்பர்வெவ் விடநிகர் தகவினர்
- முறையாலே
வருத்த ரும்பல பவிஷுகள் ஒழிதர

வகைப்பெ ருங்கலை நெறிபறம் அழிபட
மனத்து விஞ்சிய தளர்வொடும் அனுதினம்
- உழல்வோமே

அயிர்த்த வஞ்சக அரவுயர் கொடியவன்
அமர்க்க ளந்தனில் இனமுடன் மடிதர
அமர்த்த வெம்பரி பணிரத மதைவிடும் - மறைகாதா
அகத்தெ ழும்படர் அலரிமுன் பனியென
அகற்று செந்திரு மடமயில் தழுவிய பெருமானே

## 267. நீசர் ஓட வருவாய்

2576. அதியாசை விஞ்சி நெறியேது மின்றி
அவமான வஞ்ச மிகவே
துதிமேவு மெங்கள் பழநாடு கொண்டு
தொலையாத வஞ்சமை யறநீள்
சதியேபு ரிந்த படுநீசர் நைந்து
தனியோட நன்கு வருவாய்
நதியேறு கொன்றை முடிமீதி லிந்து
நகையாடு செம்பொன் மணியே!

## "காட்சி" முதலியன பற்றி

'காட்சி' என்ற தலைப்பில் இங்கே வெளியாகும் பகுதி கவிதை அன்று, பின்வந்தோர் தாம் எழுதிய ஒரு புதுவகை எழுத்தோவியத்துக்கு 'வசன கவிதை' என்று பெயரிட்டுக்கொண்டு, அந்த வகையான இலக்கிய வடிவத்துக்கு முன்னோடி பாரதியாரே என்று சாதிக்கலாயினர். கவிதை கவிதைதான்; வசனம் வசனம் தான். 'ஒட்டு' வேலை செய்வது சரி எனக் கூற இயலவில்லை.

வால்ட் விட்மனைப் பற்றிப் பாரதியார் எழுதியுள்ள கருத்து இங்கே எடுத்துக்காட்டத்தக்கது; "வால்ட் விட்மான் என்பவர் சமீப காலத்தில் வாழ்ந்த அமெரிக்கா (யுனைட்டெட் ஸ்டேட்ஸ்) தேசத்துக் கவி. இவருடைய பாட்டில் ஒரு புதுமை என்னவென்றால், அது வசன நடை போலேதான் இருக்கும். எதுகை மோனை; தளை ஒன்றுமே கிடையாது. எதுகை மோனையில்லாத கவிதைதான் உலகத்திலே பெரிய பாஷைகளில் பெரும் பகுதியாகும். ஆனால், தளையும் சந்தமும் இல்லாத கவிதை வழக்கமில்லை"

'தளையும் சந்தமும் இல்லாத கவிதை வழக்கமில்லை' என்ற வாக்கியம் பெரிதும் கருதத்தக்கது.

கற்பனை நயம் மிகுந்திருந்தாலும், உரைநடை கவிதையாகி விடாது; எதுகை மோனைகளை அடுக்கிக் கொடுத்துவிட்டாலும்

உரைநடை கவிதையாகிவிடாது. கவிதைக்குக் கற்பனை முதலான பண்புகள் போலவே தளையும் சந்தமும் இன்றியமையாதவையாகும்.

மாலைக் கால வருணனையை உரைநடையில் எழுதிய பாரதியார், அதே காட்சியைப் 'பாஞ்சாலி சபத'த்தில் கவிதையாக்கித் தந்திருப்பதைக் கருதிப் பார்த்தல் வேண்டும்.

பிற பதிப்புகளிலே 'காட்சி' முதலியன கவிதைத் தொகுப்புகளில் சேர்க்கப்பட்டிருப்பதால், இங்கும் தரப்படுகின்றன. ஆயினும், கவிதை வடிவாராய்ச்சி செய்வோர் மேலும் இதுபற்றி எண்ணிப் பார்க்க வேண்டும். தளை, ஓசையொழுங்கு என்ற சந்தம்... இவை கொண்ட செய்யுள், 'வசன கவிதை' எனப்படும் ஒட்டுவகை, விடுதலைக் கவிதை எனப்படும் புதுக்கவிதை... இவை நெடிய ஆராய்ச்சிக்கு உரியவை.

— பதிப்பாசிரியர்

## 'காட்சி'க்குப் பாரதி பிரசுராலயத்தார் எழுதிய முன்னுரை:

இயற்கையில் ஸதாகாலமும் நம்மைச் சூழ்ந்து நம்முடன் பழகிக்கொண்டிருக்கும் பொருள்களைப்பற்றி நாம் கவனிப்பது கூடக் கிடையாது. ஆனால், கவிகள் பெரும்பாலும் அவைகளைப் பற்றித்தான் வர்ணிக்கிறார்கள். ஏனெனில், கவிகளின் கண் களுக்கு அவற்றில் விசேஷகுணங்கள் தென்படுகின்றன. இது தான் கவிகளுக்கும் மற்றவர்களுக்கும் உள்ள வித்தியாசம். இந் நூலில் சூரியன், சந்திரன், வீண்மீன், கடல், காற்று – இவை களைப்பற்றிப் பாரதியார் எவ்வளவு நேர்த்தியாக வர்ணிக் கிறார் என்பதைக் கவனித்தால் இந்த உண்மை நன்றாகப் புலப் படும். இவைகளைப் புகழ்ந்து பாடாத கவிகள் இருக்கமாட் டார்கள். என்றாலும், பாரதியார் இவைகளை எவ்விதம் காண் கின்றார், அவர் இவற்றிற்குக் கொடுக்கக்கூடிய உட்பொருள் - வெளிப்பொருள் என்ன, இவை மூலமாகத் தம்முடைய வேதாந் தத்தை எவ்விதம் வெளிப்படுத்துகிறாரென்பது இந்நூலில் நன்கு விளங்குகின்றது. உதாரணமாக, ஞாயிற்றை-

ஒளி தருவது யாது? தீராத இளமை யுடையது யாது?
வெய்யவன் யாவன்? இன்பம் எவனுடையது?
மழை எவன் தருகிறான்? கண் எவனுடையது?
உயிர் எவன் தருகிறான்? புகழ் எவன் தருகிறான்?

**புகழ் எவனுக்குரியது?**
**அறிவு எதுபோல் சுடரும்?**
**அறிவுத் தெய்வத்தின் கோயில் எது?**
**ஞாயிறு - அது நன்று -**

என்றும், வெண்ணிலாவை –

**காதலர் நெஞ்சை வெதுப்புவை நீயென்பர்**
**வெண்ணிலாவே! – நினைக்**
**காதல் செய்வார் நெஞ்சிற் கின்னமு தாகுவை**
**வெண்ணிலாவே!**
**சீத மணி நெடு வானக் குளத்திடை**
**வெண்ணிலாவே! – நீ**
**தேசு மிகுந்தவெண் தாமரை போன்றனை**
**வெண்ணிலாவே!**
**மோத வருங்கரு மேகத் திரளினை**
**வெண்ணிலாவே - நீ!**
**முத்தி னொளிதந் தழகுறச் செய்குவை**
**வெண்ணிலாவே!**
**தீது புரிந்திட வந்திடும் தீயர்க்கும்**
**வெண்ணிலாவே! - நலம்**
**செய்தொளி நல்குவர் மேலவ ராமன்றோ?**
**வெண்ணிலாவே!**

என்றும் வர்ணிக்கிறார்.

இவ்வளவு அழகாகப் பாடியிருக்கும் கவிகளை ஒவ்வொரு வரும் தாமே படித்து அனுபவிக்க வேண்டியதே யொழிய அவற்றின் பெருமையை எவ்வளவு கூறியும் பயனில்லை; எளிதில் எடுத்துரைக்கவும் முடியாது.

**பின்குறிப்பு:**

*1930ஆம் வருடம் பாரதி பிரசுராலயத்தார் இதை நூலாகப் பதிப்பித்தனர். இந்நூலுள் நிலாவும் வான்மீனும் காற்றும், வெண்ணிலா - ஆகிய இரு பாடல்களும் காட்சி, சக்தி, காற்று. கடல் - ஆகியனவும் தரப்பட்டுள்ளன.*

# 1. காட்சி

## முதற்கிளை: இன்பம்

### 1

இவ்வுலகம் இனியது. இதிலுள்ள வான் இனிமை
யுடைத்து. காற்றும் இனிது.
தீ இனிது. நீர் இனிது. நிலம் இனிது.
ஞாயிறு நன்று. திங்களும் நன்று.
வானத்துச் சுடர்களெல்லாம் மிக இனியன.
மழை இனிது. மின்னல் இனிது. இடி இனிது.
கடல் இனிது. மலை இனிது. காடு நன்று.
ஆறுகள் இனியன.
உலோஹமும், மரமும், செடியும், கொடியும், மலரும்
காயும், கனியும் இனியன.
பறவைகள் இனிய ஊர்வனவும் நல்லன. விலங்குகளெல்லாம்
இனியவை. நீர்வாழ்வனவும் நல்லன.
மனிதர் மிகவும் இனியர்.
ஆண் நன்று. பெண் இனிது.

---

*முதற் பதிப்பு 1930இல் (பா.பி.)*

*பாரதியாரின் கையெழுத்துப் படியில் உள்ளவாறு இங்கே வெளியிடப்படுகிறது. வசன கவிதை என்று பிற பதிப்புகளில் குறிப்பிடப்பட்டிருப்பது தவறு. இது உரைநடையே.*

*பின்னிணைப்பில் குறிப்புக் காண்க.*

குழந்தை இன்பம். இளமை இனிது. முதுமை நன்று.
உயிர் நன்று. சாதல் இனிது.

## 2

உடல் நன்று. புலன்கள் மிகவும் இனியன. உயிர் சுவை
யுடையது.
மனம் தேன். அறிவு தேன், உணர்வு அமுதம்.
உணர்வே அமுதம்.
உணர்வு தெய்வம்.

## 3

மனம் தெய்வம், சித்தம் தெய்வம், உயிர் தெய்வம்.
காடு, மலை, அருவி, ஆறு,
கடல், நிலம், நீர், காற்று,
தீ, வான்,
ஞாயிறு, திங்கள், வானத்துச் சுடர்கள் - எல்லாம்
தெய்வங்கள்.
உலோஹங்கள், மரங்கள், செடிகள்,
விலங்குகள், பறவைகள், ஊர்வன, நீந்துவன,
மனிதர் – இவை அமுதங்கள்.

## 4

இவ்வுலகம் ஒன்று.
ஆண், பெண், மனிதர், தேவர்,
பாம்பு, பறவை, காற்று, கடல்,
உயிர், இறப்பு - இவை யனைத்தும் ஒன்றே.

ஞாயிறு, வீட்டுச் சுவர், ஈ, மலையருவி,
குழல், கோமேதகம் – இவ் வனைத்தும் ஒன்றே.
இன்பம், துன்பம், பாட்டு,
வண்ணான், குருவி,
மின்னல், பருத்தி - இஃதெல்லாம் ஒன்று.
மூடன், புலவன், இரும்பு, வெட்டுக்கிளி - இவை ஒருபொருள்
வேதம், கடல்மீன், புயற்காற்று, மல்லிகை மலர் -
இவை ஒரு பொருளின் பல தோற்றம்.
உள்ள தெல்லாம் ஒரே பொருள். ஒன்று.
இந்த ஒன்றின் பெயர் "தான்" (ஆத்மா).
தானே தெய்வம்.
தான் அமுதம், இறவாதது.

5

எல்லா உயிரும் இன்ப மெய்துக.
எல்லா உடலும் நோய் தீர்க.
எல்லா உணர்வும் ஒன்றாத லுணர்க.
"தான்" வாழ்க.
அமுதம் எப்போதும் இன்ப மாகுக.

6

தெய்வங்களை வாழ்த்துகின்றோம்.
தெய்வங்கள் இன்ப மெய்துக. அவை வாழ்க.
அவை வெல்க.
தெய்வங்களே,

என்றும் விளங்குவீர், என்றும் இன்ப மெய்துவீர்,

என்றும் வாழ்வீர், என்றும் அருள் புரிவீர்,
எவற்றையும் காப்பீர்.
உமக்கு நன்று.

தெய்வங்களே,

எம்மை உண்பீர், எமக்கு உணவாவீர்,
உலகத்தை உண்பீர், உலகத்துக்கு உணவாவீர்,
உமக்கு நன்று.

தெய்வங்களே,

காத்தல் இனிது, காக்கப்படுதலும் இனிது.
அழித்தல் நன்று. அழிக்கப்படுதலும் நன்று.
உண்பது நன்று. உண்ணப்படுதலும் நன்று.
சுவை நன்று, உயிர் நன்று, நன்று, நன்று.

## 7

உணர்வே, நீ வாழ்க. நீ ஒன்று. நீ ஒளி.

நீ ஒன்று. நீ பல.
நீ நட்பு. நீ பகை.
உள்ளதும் இல்லாததும் நீ.
அறிவதும், அறியாததும் நீ.
நன்றும், தீதும் நீ.
நீ அமுதம், நீ சுவை, நீ நன்று. நீ இன்பம்.

## இரண்டாங் கிளை : புகழ்

### ஞாயிறு

#### 1

ஒளி தருவது யாது? தீராத இளமை யுடையது யாது?
வெய்யவன் யாவன்? இன்பம் எவனுடையது?
மழை எவன் தருகின்றான்? கண் எவனுடையது?
உயிர் எவன் தருகின்றான்? புகழ் எவன் தருகின்றான்?
புகழ் எவனுக்குரியது?
அறிவு எதுபோல் சுடரும்?
அறிவுத் தெய்வத்தின் கோயில் எது?
ஞாயிறு. அது நன்று.

#### 2

நீ ஒளி, நீ சுடர், நீ விளக்கம், நீ காட்சி.
மின்னல், இரத்தினம், கனல், தீக் கொழுந்து
- இவையெல்லாம்
நினது திகழ்ச்சி.
கண் நினது வீடு.
புகழ், வீரம் - இவை நினது லீலை.
அறிவு நின் குறி. அறிவின் குறி நீ.
நீ சுடுகின்றாய், வாழ்க. நீ காட்டுகின்றாய், வாழ்க.

உயிர் தருகின்றாய், உடல் தருகின்றாய்,
வளர்க்கின்றாய், மாய்க்கின்றாய்,
நீர் தருகின்றாய், காற்றை வீசுகின்றாய், வாழ்க.

3

வைகறையின் செம்மை இனிது.
மலர்கள் போல நகைக்கும் உஷை வாழ்க.
உஷையை நாங்கள் தொழுகின்றோம்.
அவள் திரு.
அவள் விழிப்புத் தருகின்றாள், தெளிவு தருகின்றாள்.
உயிர் தருகின்றாள், ஊக்கந் தருகின்றாள்.
அழகு தருகின்றாள், கவிதை தருகின்றாள்.
அவள் வாழ்க.
அவள் தேன். சித்த வண்டு அவளை விரும்புகின்றது.
அவள் அமுதம்.
அவள் இறப்ப தில்லை. வலிமையுடன் கலக்கின்றாள்.
வலிமைதான் அழகுடன் கலக்கும்.
இனிமை மிகவும்பெரிது.
வட மேருவிலே பலவாகத் தொடர்ந்து வருவாள். வானடி
யைச் சூழ நகைத்துத் திரிவாள்.
அவளுடைய நகைப்புக்கள் வாழ்க.
தெற்கே நமக்கு ஒருத்தியாக வருகின்றாள்,
அன்பு மிகுதியால்.
ஒன்று பலவினும் இனிதன்றோ?
வைகறை நன்று. அதனை வாழ்த்துகின்றோம்.

4

நீ சுடுகின்றாய், நீ வருத்தந் தருகின்றாய்.

நீ விடாய் தருகின்றாய், சோர்வு தருகின்றாய்,
பசி தருகின்றாய்.
இவை இனியன.
நீ கடல் நீரை வற்றடிக்கிறாய், இனிய மழை தருகின்றாய்.
வானவெளியிலே விளக் கேற்றுகிறாய்.
இருளைத் தின்று விடுகின்றாய்.
நீ வாழ்க.

## 5

ஞாயிறே, இருளை என்ன செய்து விட்டாய்?
ஓட்டினாயா? கொன்றாயா? விழுங்கி விட்டாயா?
கட்டி முத்தமிட்டு நின் கதிர்களாகிய கைகளால்
மறைத்துவிட்டாயா?
இருள் நினக்குப் பகையா?
இருள் நின் உணவுப் பொருளா?
அது நின் காதலியா?
இரவெல்லாம் நின்னைக் காணாத மயக்கத்தால் இருண்
டிருந்ததா? நின்னைக் கண்டவுடன் நின்னொளி
தானுங் கொண்டு நின்னைக் கலந்து விட்டதா?
நீங்கள் இருவரும் ஒரு தாய் வயிற்றுக் குழந்தைகளா?
முன்னும் பின்னுமாக வந்து உலகத்தைக் காக்கும்படி உங்கள்
தாய் ஏவி யிருக்கிறாளா?
உங்களுக்கு மரண மில்லையா? நீங்கள் அமுதமா?
உங்களைப் புகழ்கின்றேன்.
ஞாயிறே, உன்னைப் புகழ்கின்றேன்,

## 6

ஒளியே, நீ யார்?
ஞாயிற்றின் மகளா?
அன்று. நீ ஞாயிற்றின் உயிர். அதன் தெய்வம்.
ஞாயிற்றினிடத்தே நின்னைத்தான் புகழ்கின்றோம்.
ஞாயிற்றின் வடிவம் உடல். நீ உயிர்.
ஒளியே, நீ எப்போது தோன்றினாய்?
நின்னை யாவர் படைத்தனர்?
ஒளியே, நீ யார்?
உனதியல்பு யாது?
நீ அறிவின் மகள் போலும். அறிவுதான் தூங்கிக்கிடக்கும்.
    தெளிவு நீ போலும்
அறிவின் உடல் போலும்?
ஒளியே, நினக்கு வான வெளி எத்தனை நாட் பழக்கம்?
உனக்கு அதனிடத்தே இவ்வகைப்பட்ட அன்பு
    யாது பற்றியது?
அதனுடன் நீ எப்படி இரண்டறக் கலக்கிறாய்?
உங்களை யெல்லாம் படைத்தவள் வித்தைக்காரி. அவள்
    மோஹினி, மாயைக்காரி. அவளைத் தொழுகின்றோம்.
ஒளியே, வாழ்க.

## 7

ஞாயிறே,
    நின்னிடத்து ஒளி எங்ஙனம் நிற்கின்றது?
    நீ அதனை உமிழ்கின்றயா?
    அது நின்னைத் தின்னுகிறதா?
    அன்றி, ஒளிதவிர நீ வேறொன்று மில்லையா?

விளக்குத் திரி காற்றாகிச் சுடர் தருகின்றது.
காற்றுக்கும் சுடருக்கும் எவ்வகை உறவு?
காற்றின் வடிவே திரியென் றறிவோம்.
ஒளியின் வடிவே காற்றுப் போலும்.
ஒளியே, நீ இனியை.

## 8

ஒளிக்கும் வெம்மைக்கும் எவ்வகை உறவு?
வெம்மை யேற ஒளி தோன்றும்.
வெம்மையைத் தொழுகின்றோம்.
வெம்மை ஒளியின் தாய். ஒளியின் முன்னுருவம்.
வெம்மையே, நீ தீ,

தீ தான் வீரத் தெய்வம்.
தீ தான் ஞாயிறு.
தீயின் இயல்பே ஒளி.
தீ எரிக.
அதனிடத்தே நெய் பொழிகின்றோம்.
தீ எரிக.
அதனிடத்தே தசை பொழிகின்றோம்.
தீ எரிக.
அதனிடத்தே செந்நீர் பொழிகின்றோம்.
தீ எரிக.
அதற்கு வேள்வி செய்கின்றோம்.
தீ எரிக.
அறத்தீ, அறிவுத்தீ, உயிர்த்தீ, விரதத்தீ, வேள்வித்தீ,
சினத்தீ, பகைத்தீ, கொடுமைத்தீ - இவை
யனைத்தையும் தொழுகின்றோம்.

இவற்றைக் காக்கின்றோம்.
இவற்றை ஆளுகின்றோம்.
தீயே, நீ எமது உயிரின் தோழன்.
உன்னை வாழ்த்துகின்றோம்.
நின்னைப்போல, எமதுயிர் நூறாண்டு வெம்மையும்
சுடரும் தருக.
தீயே, நின்னைப்போல, எமதுள்ளம் சுடர்விடுக.
தீயே, நின்னைப்போல, எம தறிவு கனலுக.
ஞாயிற்றினிடத்தே, தீயே, நின்னைத்தான்
போற்றுகின்றோம்.
ஞாயிற்றுத் தெய்வமே, நின்னைப் புகழ்கின்றோம்.
நினதொளி நன்று. நின் செயல் நன்று, நீ நன்று.

9

வானவெளி என்னும் பெண்ணை ஒளியென்னும்
தேவன் மணந்திருக்கின்றான்.
அவர்களுடைய கூட்டம் இனிது.
இதனைக் காற்றுத் தேவன் கண்டான்.
காற்று வலிமை யுடையவன்.
இவன் வானவெளியைக் கலக்க விரும்பினான்.
ஒளியை விரும்புவதுபோல வானவெளி இவனை
விரும்பவில்லை.
இவன் தனது பெருமையை ஊதிப் பறை யடிக்கின்றான்.
வெளியும் ஒளியும் இரண்டு உயிர்கள்
கலப்பதுபோல் கலந்தன.
காற்றுத் தேவன் பொறாமை கொண்டான்.
அவன் அமைதியின்றி உழலுகிறான்.
அவன் சீறுகின்றான், புடைக்கின்றான், குமுறுகின்றான்,

ஓலமிடுகின்றான், சுழலுகின்றான், துடிக்கின்றான்;
ஓடுகின்றான், எழுகின்றான், நிலையின்றிக்
கலங்குகின்றான்.
வெளியும் ஒளியும் மோனத்திலே கலந்து
நகை செய்கின்றன.
காற்றுத் தேவன் வலிமை யுடையவன்.
அவன் புகழ் பெரிது. அப் புகழ் நன்று.
ஆனால் வானவெளியும் ஒளியும் அவனிலும் சிறந்தன.
அவை மோனத்திலே கலந்து நித்தம் இன்புறுவன.
அவை வெற்றி யுடையன.
ஞாயிறே, நீதான் ஒளித் தெய்வம்.
நின்னையே வெளிப் பெண் நன்கு காதல் செய்கின்றாள்.
நீவிர் வாழ்க.

10

ஞாயிறே, நின் முகத்தைப் பார்த்த பொருளெல்லாம்
ஒளிபெறுகின்றது.
பூமி, சந்திரன், செவ்வாய், புதன், சனி, வெள்ளி, வியாழன்,
யுரேனஸ், நெப்த்யூன் முதலிய பல நூறு வீடுகள்.
இவை யெல்லாம் நின் கதிர்கள் பட்ட மாத்திரத்திலே
ஒளியுற நகை செய்கின்றன.
தீப்பந்திலிருந்து பொறிகள் வீசுவது போல, இவையெல்லாம்
ஞாயிற்றிலிருந்து வெடித்து வெளிப்பட்டன வென்பர்.
இவற்றைக் காலம் என்னும் கள்வன் மருவினான்.
இவை ஒளி குன்றிப் போயின.
ஒளி யிழந்தன வல்ல. குறைந்த ஒளி யுடையன.
ஒளியற்ற பொருள் சகத்திலே யில்லை.

இருளென்பது குறைந்த ஒளி.

செவ்வாய், புதன் முதலிய பெண்கள் ஞாயிற்றை
வட்டமிடுகின்றன.

இவை தமது தந்தைமீது காதல் செலுத்துகின்றன.

அவன் மந்திரத்திலே கட்டுண்டு வரைகடவாது
சுழல்கின்றன.

அவனுடைய சக்தி யெல்லையை என்றும் கடந்து
செல்ல மாட்டா.

அவன் எப்போதும் இவற்றை நோக்கி யிருக்கின்றான்.

அவனுடைய ஒளி யமுதத்தில் உடல் முழுதும் நனையும்
பொருட்டாகவே இவை உருளுகின்றன.

அவனொளியை இவை மலரிலும், நீரிலும், காற்றிலும்
பிடித்து வைத்துக்கொள்ளும்.

ஞாயிறு மிகச் சிறந்த தேவன். அவன் கைபட்ட
விடமெல்லாம் உயிருண்டாகும்.

அவனையே மலர் விரும்புகின்றது.

இலைகள் அவனுடைய அழகிலே யோகமெய்தி
யிருக்கின்றன.

அவனை நீரும் நிலமும் காற்றும் உகந்து களியுறும்.

அவனை வான் கவ்விக்கொள்ளும்.

அவனுக்கு மற்றெல்லாத் தேவரும் பணி செய்வர்.

அவன் புகழைப் பாடுவோம்.

அவன் புகழ் இனிது.

## 11

புலவர்களே, அறிவுப் பொருள்களே, உயிர்களே,
பூதங்களே, சக்திகளே, எல்லோரும் வருவீர்.

ஞாயிற்றைத் துதிப்போம், வாருங்கள்.
அவன் நமக்கெல்லாம் தலைவன்.
அவன் மழை தருகின்றான்.
மழை நன்று.
மழைத் தெய்வத்தை வாழ்த்துகின்றோம்.
ஞாயிறு வித்தை காட்டுகிறான்.
கடல் நீரைக் காற்றாக்கி மேலே கொண்டு போகிறான்.
அதனை மீளவும் நீராக்கும்படி காற்றை ஏவுகின்றான்.
மழை இனிமையுறப் பெய்கின்றது.
மழை பாடுகின்றது.
அது பல கோடித் தந்திகளுடையதோர் இசைக்கருவி.
வானத்திலிருந்து அமுத - வயிரக்கோல்கள் விழுகின்றன.
பூமிப்பெண் விடாய் தீர்கிறாள். குளிர்ச்சி பெறுகின்றாள்.
வெப்பத்தால் தண்மையும், தண்மையால் வெப்பமும் விளைகின்றன.
அனைத்தும் ஒன்றாதலால்.
வெப்பம் தவம். தண்மை யோகம்.
வெப்பம் ஆண். தண்மை பெண்.
வெப்பம் வலியது. தண்மை இனிது.
ஆணினும் பெண் சிறந்த தன்றோ?
நாம் வெம்மைத் தெய்வத்தைப் புகழ்கின்றோம்.
அது வாழ்க.

## 12

நாம் வெம்மையைப் புகழ்கின்றோம்.
வெம்மைத் தெய்வமே, ஞாயிறே, ஒளிக்குன்றே,

அமுதமாகிய உயிரின் உலகமாகிய உடலிலே மீன்களாகத்
தோன்றும் விழிகளின் நாயகமே,
பூமியாகிய பெண்ணின் தந்தையாகிய காதலே,
வலிமையின் ஊற்றே, ஒளி மழையே, உயிர்க்கடலே,
சிவனென்னும் வேடன் சக்தியென்னும் குறத்தியை உலக
மென்னும் புனங் காக்கச் சொல்லிவைத்து விட்டுப்
போன விளக்கே,
கண்ணனென்னும் கள்வன் அறிவென்னும் தன் முகத்தை
மூடிவைத்திருக்கும் ஒளியென்னும் திரையே,
ஞாயிறே, நின்னைப் பரவுகின்றோம்,
மழையும் நின் மகள், மண்ணும் நின் மகள்;
காற்றும் கடலும் கனலும் நின் மக்கள்;
வெளி நின் காதலி;
இடியும் மின்னலும் நினது வேடிக்கை.
நீ தேவர்களுக்குத் தலைவன்.
நின்னைப் புகழ்கின்றோம்
தேவர்களெல்லாம் ஒன்றே.
காண்பன வெல்லாம் அவருடல்.
கருதுவன அவருயிர்.
அவர்களுடைய தாய் அமுதம்.
அமுதமே தெய்வம். அமுதமே மெய்யொளி.
அஃது ஆத்மா.
அதனைப் புகழ்கின்றோம்.
அதன் வீடாகிய ஞாயிற்றைப் புகழ்கின்றோம்.
ஞாயிற்றின் புகழ் பேசுதல் நன்று.

## 13

மழை பெய்கிறது. காற்றடிக்கின்றது. இடி குமுறுகின்றது.
மின்னல் வெட்டுகின்றது.

புலவர்களே, மின்னலைப் பாடுவோம், வாருங்கள்.
மின்னல் ஒளித் தெய்வத்தின் ஒரு லீலை – ஒளித்
தெய்வத்தின் ஒரு தோற்றம்.
அதனை யவனர் வணங்கி ஒளி பெற்றனர்.
மின்னலைத் தொழுகின்றோம்.
அது நம்மறிவை ஒளியுறச் செய்க.
மேகக் குழந்தைகள் மின்னற் பூச் சொரிகின்றன.
மின் சக்தி இல்லாத இடமில்லை.
எல்லாத் தெய்வங்களும் அங்ஙனமே.
கருங்கல்லிலே, வெண்மணலிலே. பச்சை இலையிலே,
செம்மலரிலே, நீல மேகத்திலே,
காற்றிலே, வரையிலே - எங்கும் மின்சத்தி
உறங்கிக் கிடக்கின்றது.
அதனைப் போற்றுகின்றோம்.
நமது விழிகளிலே மின்னல் பிறந்திடுக.
நமது நெஞ்சிலே மின்னல் விசிறிப் பாய்க.
நமது வலக்கையிலே மின்னல் தோன்றுக.
நமது பாட்டு மின்னலுடைத் தாகுக.
நமது வாக்கு மின்போல் அடித்திடுக.
மின் மெலியதைக் கொல்லும்.
வலியதிலே வலிமை சேர்க்கும்.
அது நம் வலிமையை வளர்த்திடுக.
ஒளியை, மின்னலை, சுடரை, மணியை,
ஞாயிற்றை, திங்களை, வானத்து வீடுகளை, மீன்களை -
ஒளியுடைய தனைத்தையும் வாழ்த்துகின்றோம்.
அனைத்தையும் வாழ்த்துகின்றோம்.
ஞாயிற்றை வாழ்த்துகின்றோம்.

## 2. சக்தி

### 1

சக்தி வெள்ளத்திலே ஞாயிறு ஓர் குமிழியாம்.
சக்திப் பொய்கையிலே ஞாயிறு ஒரு மலர்.
சக்தி அநந்தம் - எல்லையற்றது, முடிவற்றது.
அசையாமையில் அசைவு காட்டுவது.
சக்தி அடிப்பது. துரத்துவது, கூட்டுவது,
பிணைப்பது, கலப்பது, உதறுவது,
புடைப்பது, வீசுவது, சுழற்றுவது,
கட்டுவது, சிதறடிப்பது, தூற்றுவது,
ஊதிவிடுவது, நிறுத்துவது, ஓட்டுவது,
ஒன்றாக்குவது, பலவாக்குவது.
சக்தி குளிர் செய்வது, அனல் தருவது,
குதுகுதுப்புத் தருவது,
குதூஹலந் தருவது, நோவு தருவது, நோவு தீர்ப்பது,
இயல்பு தருவது, இயல்பு மாற்றுவது,
சோர்வு தருவது, ஊக்கந் தருவது. எழுச்சி தருவது,
கிளர்ச்சி தருவது, மலர்விப்பது, புளகஞ் செய்வது,
கொல்வது, உயிர் தருவது.
சக்தி மகிழ்ச்சி தருவது, சினந்தருவது,
வெறுப்புத் தருவது, உவப்புத் தருவது,

பகைமை தருவது, காதல் மூட்டுவது,
உறுதி தருவது, அச்சந் தருவது,
கொதிப்புத் தருவது, ஆற்றுவது.
சக்தி முகர்வது, சுவைப்பது, தீண்டுவது, கேட்பது,
காண்பது.
சக்தி நினைப்பது, ஆராய்வது, கணிப்பது, தீர்மானஞ்
செய்வது,
கனாக் காண்பது, கற்பனை புரிவது, தேடுவது, சுழல்வது
பற்றிநிற்பது, எண்ணமிடுவது, பகுத்தறிவது.
சக்தி மயக்கந் தருவது, தெளிவு தருவது.
சக்தி உணர்வது.
பிரமன் மகள், கண்ணன் தங்கை, சிவன் மனைவி.
கண்ணன் மனைவி, சிவன் மகள், பிரமன் தங்கை.
பிரமனுக்கும் கண்ணனுக்கும் சிவனுக்கும் தாய்.
சக்தி முதற் பொருள்.
பொருளில்லாப் பொருளின் விளைவில்லா விளைவு.
சக்திக் கடலிலே ஞாயிறு ஓர் நுரை;
சக்தி வீணையிலே ஞாயிறு ஒரு வீடு; ஒரு ஸ்வர ஸ்தானம்.
சக்திக் கூத்திலே ஒளி ஒரு தாளம்.
சக்தியின் கலைகளிலே ஒளி யொன்று.
சக்தி வாழ்க.

## 2

காக்கை கத்துகிறது.
ஞாயிறு வையகமாகிய கழனியில் வயிர வொளியாகிய நீர்
பாய்ச்சுகிறது.
அதனை மேகங்கள் வந்து மறைக்கின்றன.

அஃது மேகங்களை ஊடுருவிச் செல்லுகின்றது.
மேகமாகிய சல்லடையில் ஒளியாகிய புனலை வடிகட்டும்
போது, மண்டி கீழும் தெளிவு மேலுமாக நிற்கின்றன.
கோழி கூவுகின்றது.
எறும்பு ஊர்ந்து செல்கின்றது.
ஈ பறக்கிறது.
இளைஞன் சித்திரத்திலே கருத்துச் செலுத்துகிறான்.
இவையனைத்தும் மஹாசக்தியின் தொழில்.
அவள் நம்மைக் கர்ம யோகத்திலே நாட்டுக.
நமக்குச் செய்கை இயல்பாகுக.
ரஸமுள்ள செய்கை, இன்பமுடைய செய்கை, வலிய செய்கை,
சலிப்பில்லாத செய்கை, விளையும் செய்கை, பரவும்
செய்கை. கூடிவரும் செய்கை, இறுதியற்ற செய்கை,
நமக்கு மஹாசக்தி அருள்செய்க.
கவிதை, காவல் ஊட்டுதல், வளர்த்தல்,
மாசெடுத்தல், நலந்தருதல், ஒளி பெய்தல்
இச்செயல்கள் நமக்கு மஹாசக்தி அருள் புரிக.
அன்புநீர் பாய்ச்சி, அறிவென்னும் ஏருழுது,
சாத்திரக் களைபோக்கி, வேதப் பயிர் செய்து,
இன்பப் பயனறிந்து தின்பதற்கு மஹாசக்தியின் துணை
வேண்டுகின்றோம்.
அதனை அவள் தருக.

## 3

இருள் வந்தது. ஆந்தைகள் மகிழ்ந்தன.
காட்டிலே காதலனை நாடிச் சென்ற ஒரு பெண் தனியே
கலங்கிப் புலம்பினாள்.

ஒளி வந்தது: காதலன் வந்தான். பெண் மகிழ்ந்தாள்.

பேயுண்டு, மந்திர முண்டு.

பேயில்லை, மந்திர முண்டு.

நோயுண்டு, மருந்துண்டு.

அயர்வு கொல்லும். அதனை ஊக்கம் கொல்லும்.

அவித்தை கொல்லும். அதனை வித்தை கொல்லும்.

நாம் அச்சங் கொண்டோம். தாய் அதனை நீக்கி உறுதி
தந்தாள்.

நாம் துயர் கொண்டோம், தாய் அதை மாற்றிக் களிப்புத்
தந்தாள்:

குனிந்த தலையை நிமிர்த்தினாள்.

சோர்ந்த விழியில் ஒளி சேர்த்தாள்.

கலங்கிய நெஞ்சிலே தெளிவு வைத்தாள்.

இருண்ட மதியிலே ஒளி கொடுத்தாள்.

மஹாசக்தி வாழ்க.

## 4

"மண்ணிலே வேலி போடலாம்.

வானத்திலே வேலி போடலாமோ?" என்றான்
ராமகிருஷ்ணன் முனி.

ஜடத்தைக் கட்டலாம். சக்தியைக் கட்டலாமா?

உடலைக் கட்டலாம். உயிரைக் கட்டலாமா?

என்னிடத்தே சக்தி எனதுயிரிலும் உள்ளத்திலும்
நிற்கின்றாள்.

சக்திக்கு அநந்தமான கோயில்கள் வேண்டும்.

தொடக்கமும் முடிவுமில்லாத காலத்திலே நிமிஷந்தோறும்
அவளுக்குப் புதிய கோயில்கள் வேண்டும்.

இந்த அநந்தமான கோயில்களிலே ஒன்றுக்கு 'நான்'
என்று பெயர்.

இதனை ஓயாமல் புதுப்பித்துக் கொண்டிருந்தால் சக்தி
இதிலிருப்பாள்

இது பழமைப்பட்டுப் போனவுடன், இதை விட்டு விடுவாள்.

இப்போது அவள் என்னுள்ளே நிறைந்திருக்கின்றாள்.

இப்போது எனதுயிரிலே வேகமும் நிறைவும் பொருந்தி
யிருக்கின்றன

இப்போது எனதுடலிலே சுகமும் வலிமையும் அமைந்திருக்
கின்றன.

இப்போது என்னுள்ளத்திலே தெளிவு நிலவிடுகின்றது.

இது எனக்குப் போதும்.

"சென்றது கருத"மாட்டேன். "நாளைச் சேர்வது நினைக்க"
மாட்டேன்.

இப்போது என்னுள்ளே சக்தி கொலு வீற்றிருக்கின்றாள்.
அவள் நீடுழி வாழ்க.

அவளைப் போற்றுகின்றேன். புகழ்கின்றேன், வாயோயாமல்
வாழ்த்துகின்றேன்.

## 5

"மண்ணிலே வேலி போடலாம். வானத்திலே வேலி
போடலாமா?"

போடலாம்.

மண்ணிலும் வானந்தானே நிரம்பி யிருக்கின்றது?

மண்ணைக் கட்டினால் அதிலுள்ள வானத்தைக் கட்டிய
தாகாதா?

உடலைக் கட்டு. உயிரைக் கட்டலாம்.

உயிரைக் கட்டு. உள்ளத்தைக் கட்டலாம்.

உள்ளத்தைக் கட்டு. சக்தியைக் கட்டலாம்.

அநந்த சக்திக்குக் கட்டுப்படுவதிலே வருத்த மில்லை.

என் முன்னே பஞ்சுத் தலையணை கிடக்கிறது.
அதற்கு ஒரு வடிவம், ஓரளவு, ஒரு நியமம் ஏற்பட்டிருக்கின்றது.
இந்த நியமத்தை, அழியாதபடி, சக்தி பின்னே நின்று காத்துக் கொண்டிருக்கிறாள்.
மனித ஜாதி இருக்குமளவும் இதே தலையணை அழிவெய்தாதபடி காக்கலாம்:
அதனை அடிக்கடி புதுப்பித்துக் கொண்டிருந்தால், அந்த ''வடிவ''த்திலே சக்தி நீடித்து நிற்கும்.
புதுப்பிக்கா விட்டால் அவ் ''வடிவம்'' மாறும்.
அழுக்குத் தலையணை, ஓட்டைத் தலையணை, பழைய தலையணை, அதிலுள்ள பஞ்சை யெடுத்துப் புதிய மெத்தையிலே போடு, மேலுறையைக் கந்தையென்று வெளியே எறி.

அந்த ''வடிவம்'' அழிந்து விட்டது.

வடிவத்தைக் காத்தால், சக்தியைக் காக்கலாம்.
அதாவது சக்தியை அவ்வடிவத்திலே காக்கலாம்.
வடிவம் மாறினும் சக்தி மாறுவதில்லை.
எங்கும், எதனிலும், எப்போதும், எல்லாவிதத் தொழில்களும் காட்டுவது சக்தி.
வடிவத்தைக் காப்பது நன்று; சக்தியின் பொருட்டாக.
சக்தியைப் போற்றுதல் நன்று, வடிவத்தைக் காக்குமாறு.
ஆனால் வடிவத்தை மாத்திரம் போற்றுவோர் சக்தியை இழந்து விடுவர்.

## 6

பாம்புப் பிடாரன் குழ லூதுகின்றான்.

"இனிய இசை சோக முடையது" என்பது
கேட்டுள்ளோம்.

ஆனால், இப் பிடாரன் ஒலிக்கும் இசை மிகவும் இனிய
தாயினும் சோக ரஸந் தவிர்ந்தது.

இஃதோர் பண்டிதன் தர்க்கிப்பது போலிருக்கின்றது.

ஒரு நாவலன் பொருள் நிறைந்த சிறிய சிறிய வாக்கியங்
களை அடுக்கிக் கொண்டு போவது போலிருக்கிறது.

இந்தப் பிடாரன் என்ன வாதாடுகிறான்?

"தானதந்தத் தானதந்தத் தா - தனத்
தானதந்தன தானதந்தன தா -
தந்தனத்தன தந்தனத்தன தா"

இவ்விதமாகப் பல வகைகளில் மாற்றிச் சுருள் சுருளாக
வாசித்துக் கொண்டு போகிறான். இதற்குப்
பொருளென்ன?

ஒரு குழந்தை இதற்குப் பின்வருமாறு பொருள்
சொல்ல லாயிற்று:-

"காளிக்குப் பூச்சூட்டினேன். அதைக்
கழுதை யொன்று தின்ன வந்ததே."

பராசக்தியின் பொருட்டு இவ்வுடல் கட்டினேன்.

அதைப் பாவத்தால் விளைந்த நோய் தின்ன வந்தது.

பராசக்தியைச் சரணடைந்தேன்.

நோய் மறைந்து விட்டது.

பராசக்தி ஒளியேறி என் அகத்திலே விளங்கலாயினள்,

அவள் வாழ்க.

## 7

பாம்புப் பிடாரன் குழலூதுகின்றான்.

குழலிலே இசை பிறந்ததா? தொளையிலே பிறந்ததா?

பாம்புப் பிடாரன் மூச்சிலே பிறந்ததா?
அவனுள்ளத்திலே பிறந்தது, குழலிலே வெளிப்பட்டது,
உள்ளம் தனியே ஒலிக்காது. குழல் தனியே
இசை புரியாது. உள்ளம் குழலிலே ஒட்டாது.
உள்ளம் மூச்சிலே ஒட்டும் மூச்சுக் குழலிலே ஒட்டும்.
குழல் பாடும்.
இஃது சக்தியின் லீலை.
அவள் உள்ளத்திலே பாடுகிறாள். அது குழலின்
தொளையிலே கேட்கிறது.
பொருந்தாத பொருள்களைப் பொருத்தி வைத்து அதிலே
இசை யுண்டாக்குதல் - சக்தி.
தொம்பப் பிள்ளைகள் பிச்சைக்குக் கத்துகின்றன.
பிடாரன் குழலையும் தொம்பக் குழந்தைகளின் குரலையும்
யார் சுருதி சேர்த்து விட்டது? சக்தி.
"ஜரிகை வேணும்; ஜரிகை!" என்றொருவன் கத்திக்கொண்டு
போகிறான், அதே சுருதியில்.
ஆ! பொருள் கண்டு கொண்டேன்,
பிடாரன் உயிரிலும், தொம்பக் குழந்தைகளின் உயிரிலும்,
ஜரிகைக்காரன் உயிரிலும் ஒரே சக்தி விளையாடு
கின்றது.
கருவி பல. பாணன் ஒருவன்.
தோற்றம் பல. சக்தி ஒன்று.
அஃது வாழ்க.

## 8

பராசக்தியைப் பாடுகின்றோம்.
இவள் எப்படி உண்டாயினாள்? - அதுதான் தெரியவில்லை,

இவள் தானே பிறந்த தாய்; "தான்" என்ற பரம்பொருளி
னிடத்தே.

இவள் எதிலிருந்து தோன்றினாள்? 'தான்' என்ற பரம்
பொருளிலிருந்து எப்படித் தோன்றினாள்? தெரியாது.

படைப்பு நமது கண்ணுக்குத் தெரியாது; அறிவுக்கும்
தெரியாது.

சாவு நமது கண்ணுக்குத் தெரியும்; அறிவுக்குத் தெரியாது

வாழ்க்கை நமது கண்ணுக்குத் தெரியும்; அறிவுக்கும்
தெரியும்.

வாழ்க்கையாவது சக்தியைப் போற்றுதல்; இதன் பயன்
இன்பமெய்தல்.

உள்ளம் தெளிந்திருக்க; உயிர் வேகமும் சூடும் உடையதாக;
உடல் அமைதியும் வலிமையும் பெற்றிருக்க மஹா
சக்தியின் அருள் பெறுதலே வாழ்தல்.

நாம் வாழ்கின்றோம்.

எம்மை வாழ்வுறச் செய்த மஹா சக்தியை மீட்டும்
வாழ்த்துகின்றோம்.

## 3. காற்று

1

ஒரு வீட்டு மேடையிலே ஒரு பந்தல். ஓலைப் பந்தல்.
தென்னோலை.

குறுக்கும் நெடுக்குமாக ஏழெட்டு மூங்கிற் கழிகளை
சாதாரணக் கயிற்றால் கட்டி மேலே தென்னங்
கிடுகுகளை விரித்திருக்கிறது.

ஒரு மூங்கிற் கழியிலே கொஞ்சம் மிச்சக் கயிறு
தொங்குகிறது.

ஒரு சாண் கயிறு.

இந்தக் கயிறு, ஒருநாள் சுகமாக ஊசலாடிக்
கொண்டிருந்தது.

பார்த்தால் துளிகூடக் கவலை இருப்பதாகத் தெரியவில்லை.

சில சமயங்களில் அசையாமல் 'உம்' மென்றிருக்கும்.
கூப்பிட்டால்கூட ஏனென்று கேட்காது.

இன்று அப்படியில்லை. 'குஷால்' வழியி லிருந்தது.

எனக்கும் இந்தக் கயிற்றுக்கும் ஸ்நேஹம். நாங்கள்
அடிக்கடி வார்த்தை சொல்லிக்கொள்வதுண்டு.

"கயிற்றினிடத்தில் பேசினால், அது மறுமொழி
சொல்லுமா?''

பேசிப்பார், மறுமொழி கிடைக்கிறதா இல்லையா என்பதை.

ஆனால் அது ஸந்தோஷமாக இருக்கும் ஸமயம் பார்த்து
வார்த்தை சொல்லவேண்டும். இல்லாவிட்டால்,
முகத்தைத் தூக்கிக்கொண்டு சும்மா இருந்து விடும்
பெண்களைப் போல.

எது எப்படி யிருந்தாலும், இந்த வீட்டுக் கயிறு பேசும்.
அதில் ஸந்தேஹமே யில்லை.

ஒரு கயிறா சொன்னேன்? இரண்டு கயிறுண்டு.

ஒன்று ஒரு சாண். மற்றொன்று முக்கால் சாண்.

ஒன்று ஆண்; மற்றொன்று பெண். கணவனும், மனைவியும்.

அவை யிரண்டும் ஒன்றை யொன்று காமப் பார்வைகள்
பார்த்துக் கொண்டும், புன்சிரிப்புச் சிரித்துக்
கொண்டும், வேடிக்கைப் பேச்சுப் பேசிக் கொண்டும்
ரஸப் போக்கிலே யிருந்தன.

அத்தருணத்திலே நான் போய்ச் சேர்ந்தேன்.

ஆண் கயிற்றுக்குக் 'கந்தன்' என்று பெயர்.

பெண் கயிற்றுக்குப் பெயர் 'வள்ளியம்மை'

(மனிதர்களைப் போலவே துண்டுக் கயிறுகளுக்கும் பெயர்
வைக்கலாம்.)

கந்தன் வள்ளியம்மைமீது கையைப் போட வருகிறது. வள்ளி
யம்மை சிறிது பின்வாங்குகிறது. அந்த சந்தர்ப்
பத்திலே நான் போய்ச் சேர்ந்தேன்.

"என்ன, கந்தா, ஸெளக்கியந்தானா? ஒரு வேளை, நான்
சந்தர்ப்பங் தவறி வந்துவிட்டேனோ, என்னவோ?
போய், மற்றொரு முறை வரலாமா?" என்று கேட்டேன்.

அதற்குக் கந்தன்:- "அட போடா, வைதிக மனுஷன்!
உன் முன்னே கூட லஜ்ஜையா? என்னடி, வள்ளி, நமது
ஸல்லாபத்தை ஐயர் பார்த்ததிலே உனக்குக் கோபமா?"
என்றது.

''சரி, சரி, என்னிடத்தில் ஒன்றும் கேட்க வேண்டாம்''
என்றது வள்ளியம்மை.

அதற்குக் கந்தன், கடகட வென்று சிரித்துக் கைதட்டிக் குதித்து, நான் பக்கத்திலிருக்கும்போதே வள்ளியம்மையைக் கட்டிக் கொண்டது.

வள்ளியம்மை கீச்சுக் கீச்சென்று கத்தலாயிற்று. ஆனால், மனதுக்குள்ளே வள்ளியம்மைக்கு ஸந்தோஷம். நாம் சுகப்படுவதைப் பிறர் பார்ப்பதிலே நமக்கு ஸந்தோஷ தானே?

இந்த வேடிக்கை பார்ப்பதிலே எனக்கும் மிகவும் திருப்தி தான். உள்ளதைச் சொல்லி விடுவதிலே என்ன குற்றம்? இளமையின் ஸல்லாபம் கண்ணுக்குப் பெரியதோர் இன்பமன்றோ?

வள்ளியம்மை அதிகக் கூச்சலிடவே, கந்தன் அதைவிட்டு விட்டது.

சில க்ஷணங்களுக்குப் பின், மறுபடி போய்த் தழுவிக் கொண்டது.

மறுபடியும் கூச்சல், மறுபடியும் விடுதல், மறுபடியும் தழுவல், மறுபடியும் கூச்சல் – இப்படியாக நடந்துகொண்டே வந்தது.

"என்ன, கந்தா, வந்தவனிடத்தில் ஒரு வார்த்தை கூடச் செல்லா மாட்டேனென்கிறாயே? வேறொரு சமயம் வருகிறேன், போகட்டுமா?'' என்றேன்.

"அட போடா! வைதிகம்! வேடிக்கை தானே பார்த்துக் கொண்டிருக்கிறாய். இன்னும் சிறிதுநேரம் நின்று கொண்டிரு. இவளிடம் சில வ்யவஹாரங்கள் தீர்க்க வேண்டி யிருக்கிறது. தீர்ந்தவுடன் நீயும் நானும் சில விஷயங்கள் பேசலாம் என்றிருக்கிறேன், போய்

விடாதே, இரு'' என்றது.

நின்று மேன்மேலும் பார்த்துக் கொண்டிருந்தேன்.

சிறிது நேரம் கழிந்தவுடன், பெண்ணும் இன்ப
மயக்கத்திலே நான் நிற்பதை மறந்து நாணத்தை
விட்டுவிட்டது.

உடனே பாட்டு. நேர்த்தியான துக்கடாக்கள். ஒரு வரிக்கு
ஒரு வர்ணமெட்டு.

இரண்டே 'ஸங்கதி'. பின்பு மற்றொரு பாட்டு.

கந்தன் பாடி முடிந்தவுடன், வள்ளி. இது முடிந்தவுடன்,
அது. மாற்றி மாற்றிப் பாடி – கோலாஹலம்!

சற்றுநேரம் ஒன்றை யொன்று தொடாமல் விலகி நின்று
பாடிக்கொண்டு யிருக்கும். அப்போது வள்ளியம்மை
தானாகவே போய்க் கந்தனைத் தீண்டும்.

அது தழுவிக் கொள்ளவரும். இது ஓடும். கோலாஹலம்!

இங்ஙனம் நெடும்பொழுது சென்றபின் வள்ளியம்மைக்குக்
களியேறி விட்டது.

நான் பக்கத்து வீட்டிலே தாகத்துக்கு ஜலம் குடித்துவிட்டு
வரப் போனேன்.

நான் போவதை அவ்விரண்டு கயிறுகளும் கவனிக்கவில்லை

நான் திரும்பிவந்து பார்க்கும்போது வள்ளியம்மை தூங்கிக்
கொண்டிருந்தது.

கந்தன் என் வரவை எதிர்நோக்கி யிருந்தது.

என்னைக் கண்டவுடன், "எங்கடா போயிருந்தாய்,
வைதிகம்! சொல்லிக் கொள்ளாமல் போய் விட்டாயே''
என்றது.

"அம்மா நல்ல நித்திரை போலிருக்கிறதே?'' என்று
கேட்டேன்.

ஆஹா! அந்த க்ஷணத்திலே கயிற்றிலிருந்து வெடித்து
வெளிப்பட்டு என் முன்னே நின்ற தேவனுடைய

மஹிமையை என்னென்று சொல்வேன்!
காற்றுத் தேவன் தோன்றினான்.
அவனுடல் விம்மி விசாலமாக இருக்குமென்று
நினைத்திருந்தேன்.
வயிர வூசிபோல் ஒளி வடிவமாக இருந்தது.
"நமஸ்தே வாயோ, த்வமேவ ப்ரத்யக்ஷம் ப்ரஹ்மாஸி."
காற்றே, போற்றி. நீயே கண்கண்ட பிரமம்.
அவன் தோன்றிய பொழுதிலே வான முழுதும் ப்ராணசக்தி
நிரம்பிக் கனல்வீசிக் கொண்டிருந்தது.
ஆயிர முறை அஞ்சலி செய்து வணங்கினேன்.
காற்றுத் தேவன் சொல்வதாயினன்:- "மகனே, ஏதடா
கேட்டாய்? அந்தச் சிறிய கயிறு உறங்குகிறதா என்று
கேட்கிறாயா? இல்லை. அது செத்துப்போய்
விட்டது. நான் ப்ராண சக்தி. என்னுடனே உறவு
கொண்ட உடல் இயங்கும். என்னுறவில்லாதது சவம்.
நான் ப்ராணன். என்னாலேதான் அச்சிறு கயிறு
உயிர்த்திருந்து சுகம் பெற்றது. சிறிது களைப்பெய்திய
வுடனே அதை உறங்க-இறக்க-விட்டு விட்டேன்.
துயிலும் சாவுதான். சாவும் துயிலே. நான் விளங்கு
மிடத்தே அவ்விரண்டும் இல்லை. மாலையில் வந்து
ஊதுவேன். அது மறுபடி பிழைத்துவிடும்.
நான் விழிக்கச் செய்கிறேன். அசையச் செய்கிறேன். நான்
சக்திகுமாரன். என்னை வணங்கி வாழ்க." என்றான்.
"நமஸ்தே வாயோ, த்வமேவ ப்ரத்யக்ஷம் ப்ரஹ்மாஸி.
த்வாமேவ ப்ரத்யக்ஷம் ப்ரஹ்ம வதிஷ்யாமி."
நடுக் கடல். தனிக் கப்பல்.
வானமே சினந்து வருவதுபோன்ற புயற் காற்று.
அலைகள் சாரி வீசுகின்றன. நீர்த்தூளி படுகின்றன.
அவை மோதி வெடிக்கின்றன.

சூறை யாடுகின்றன.

கப்பல் நிர்த்தனஞ் செய்கிறது.

மின் வேகத்திலே எற்றப்படுகின்றது.

பாறையில் மோதிவிட்டது.

ஹதம்!

இருநூறு உயிர்கள் அழிந்தன.

அழியுமுன், அவை, யுக முடிவின் அனுபவம்
எங்ஙனமிருக்கு மென்பதை அறிந்து கொண்டு
போயின.

ஊழி முடிவும் இப்படியே தானிருக்கும்.

உலகம் ஓடுநீராகிவிடும்; தீ நீர்!

சக்தி காற்றாகி விடுவாள்.

சிவன் வெறியிலே யிருப்பான்.

இவ்வுலகம் ஒன்றென்பது தோன்றும்.

அஃது சக்தி யென்பது தோன்றும்.

அவள் பின்னே சிவன் நிற்பது தோன்றும்.

காற்றே பந்தற் கயிறுகளை அசைக்கின்றான். அவற்றில்
உயிர் பெய்கிறான்.

காற்றே நீரில் சூறாவளி காட்டி, வானத்தில் மின்னேற்றி,
நீரை நெருப்பாக்கி, நெருப்பை நீராக்கி, நீரைத்
தூளாக்கித், தூளை நீராக்கிச் சண்ட மாருதம்
செய்கின்றான்.

காற்றே யுகமுடிவு செய்கின்றான்.

காற்றே காக்கின்றான்.

அவன் நம்மைக் காத்திடுக.

"நமஸ்தே வாயோ, த்வமேவ ப்ரத்யக்ஷம் ப்ரஹ்மாஸி."

## 3

காற்றுக்குக் காது நிலை.

சிவனுடைய காதிலே காற்று நிற்கிறான்.
காற்றில்லாவிட்டால் சிவனுக்குக் காது கேட்காது.
காற்றுக்குக் காதில்லை.
அவன் செவிடன்.
காதுடையவன் இப்படி இரைச்சலிடுவானா?
காதுடையவன் மேகங்களை ஒன்றோடொன்று மோதவிட்டு,
இடி யிடிக்கச் சொல்லி வேடிக்கை பார்ப்பானா?
காதுடையவன் கடலைக் கலக்கி விளையாடுவானா?
காற்றை, ஒலியை, வலிமையை வணங்குகின்றோம்.

## 4

பாலைவனம்.
மணல், மணல், மணல். பல யோஜனை தூரம் ஒரே மட்ட மாக நான்கு திசையிலும் மணல்.
மாலை நேரம்.
அவ்வனத்தின் வழியே ஒட்டைகளின் மீதேறி ஒரு வியாபாரக் கூட்டத்தார் போகிறார்கள்.
வாயு சண்டனாகி வந்துவிட்டான்.
பாலைவனத்து மணல்களெல்லாம் இடை வானத்திலே சுழல்கின்றன.
ஒரு க்ஷணம், யம வாதனை. வியாபாரக் கூட்ட முழுதும் மணலிலே அழிந்து போகிறது.
வாயு கொடியோன். அவன் ருத்ரன். அவனுடைய ஓசை அச்சந் தருவது.
அவனுடைய செயல்கள் கொடியன.
காற்றை வாழ்த்துகின்றோம்.

5

வீமனும் அனுமானும் காற்றின் மக்கள் என்று
புராணங்கள் கூறும்.
உயிருடையன வெல்லாம் காற்றின் மக்களே என்பது வேதம்.
உயிர் தான் காற்று.
உயிர் பொருள். காற்று அதன் செய்கை.
பூமித்தாய் உயிரோ டிருக்கிறாள்.
அவளுடைய மூச்சே பூமியிலுள்ள காற்று.
காற்றே உயிர். அவன் உயிர்களை அழிப்பவன்.
காற்றே உயிர். எனவே, உயிர்கள் அழிவதில்லை.
சிற்றுயிர் பேருயிரோடு சேர்கிறது.
மரண மில்லை.
அகில வுலகமும் உயிர் நிலையே.
தோன்றுதல், வளர்தல், மாறுதல், மறைதல் - எல்லாம்
உயிர்ச் செயல்.
உயிரை வாழ்த்துகின்றோம்.

6

காற்றே, வா.
மகரந்தத் தூளைச் சுமந்துகொண்டு, மனத்தை மயலுறுத்து
கின்ற இனிய வாசனையுடன் வா.
இலைகளின் மீதும், நீரலைகளின் மீதும் உராய்ந்து, மிகுந்த
ப்ராண-ரஸத்தை எங்களுக்குக் கொண்டு கொடு.
காற்றே, வா.
எமது உயிர்-நெருப்பை நீடித்து நின்று நல்லொளி தருமாறு
நன்றாக வீசு.
சக்தி குறைந்து போய், அதனை அவித்துவிடாதே.
பேய்போல வீசி, அதனை மடித்து விடாதே.

மெதுவாக, நல்ல லயத்துடன், நெடுங்காலம் நின்று வீசிக்
கொண்டிரு.

உனக்குப் பாட்டுக்கள் பாடுகிறோம்.

உனக்குப் புகழ்ச்சிகள் கூறுகிறோம்.

உன்னை வழிபடுகின்றோம்.

7

சிற்றெறும்பைப் பார்.

எத்தனை சிறியது!

அதற்குள்ளே கை, கால், வாய், வயிறு எல்லா அவய
வங்களும் கணக்காக வைத்திருக்கிறது.

யார் வைத்தனர்? மஹா சக்தி.

அந்த உறுப்புக்களெல்லாம் நேராகவே தொழில் செய்கின்றன.

எறும்பு உண்ணுகின்றது. உறங்குகின்றது. மணம் செய்து
கொள்கின்றது. குழந்தை பெறுகிறது. ஓடுகிறது.
தேடுகிறது. போர் செய்கிறது. நாடு காக்கிறது.

இதற்கெல்லாம் காற்றுத்தான் ஆதாரம்.

மஹா சக்தி காற்றைக் கொண்டு தான் உயிர் விளையாட்டு
விளையாடுகின்றாள்.

காற்றைப் பாடுகிறோம்.

அஃது அறிவிலே துணிவாக நிற்பது.

உள்ளத்திலே விருப்பு வெறுப்புக்களாவது.

உயிரிலே உயிர் தானாக நிற்பது.

உடம்பிலே வலிமையாக நிற்பது.

வெளி யுலகத்திலே அதன் செய்கையை நாம் அறிவோம்
நாம் அறிவதில்லை.

காற்றுத் தேவன் வாழ்க.

## 8

மழைக் காலம்.

மாலை நேரம்.

குளிர்ந்த காற்று வருகிறது.

நோயாளி உடம்பை மூடிக்கொள்ளுகிறான்.

பயனில்லை.

காற்றுக் கஞ்சி உலகத்திலே இன்பத்துடன் வாழ முடியாது.

பிராணன் காற்றாயின், அதற்கஞ்சி வாழ்வதுண்டோ?

காற்று நம்மீது வீசுக.

அது நம்மை நோயின்றிக் காத்திடுக.

மலைக்காற்று நல்லது.

கடற்காற்று மருந்து.

வான் காற்று நன்று.

ஊர்க்காற்றை மனிதர் பகைவனாக்கி விடுகின்றனர்.

அவர்கள் காற்றுத் தெய்வத்தை நேரே வழிபடுவதில்லை.

அதனால் காற்றுத்தேவன் சினமெய்தி அவர்களை
அழிக்கின்றான்.

காற்றுத் தேவனை வணங்குவோம்.

அவன் வரும் வழியிலே சேறு தங்கலாகாது. நாற்றம்
இருக்கலாகாது. அழுகின பண்டங்கள் போடலாகாது,
புழுதி படிந்திருக்கலாகாது. எவ்விதமான அசுத்தமும்
கூடாது.

காற்று வருகின்றான்.

அவன் வரும் வழியை நன்றாகத் துடைத்து நல்ல நீர்
தெளித்து வைத்திடுவோம்.

அவன் வரும் வழியிலே சோலைகளும், பூந்தோட்டங்களும்
செய்து வைப்போம்.

அவன் வரும் வழியிலே கற்பூரம் முதலிய நறும் பொருள்
களைக் கொளுத்தி வைப்போம்.

அவன் நல்ல மருந்தாக வருக.

அவன் நமக்கு உயிராகி வருக.

அமுதமாகி வருக.

காற்றை வழிபடுகின்றோம்.

அவன் சக்தி குமாரன். மஹாராணியின் மைந்தன்.

அவனுக்கு நல்வரவு கூறுகின்றோம்.

அவன் வாழ்க.

## 9

காற்றே, வா. மெதுவாக வா.

ஜன்னல் கதவை அடித்து உடைத்து விடாதே.

காயிதங்களை யெல்லாம் எடுத்து விசிறி எறியாதே.

அலமாரிப் புஸ்தகங்களைக் கீழே தள்ளி விடாதே.

பார்த்தையா? இதோ, தள்ளிவிட்டாய்.

புஸ்தகத்தின் ஏடுகளைக் கிழித்து விட்டாய்.

மறுபடி மழையைக் கொண்டுவந்து சேர்த்தாய்.

வலி யிழந்தவற்றைத் தொல்லைப்படுத்தி வேடிக்கை பார்ப்பதிலே நீ மஹா ஸமர்த்தன்.

நொய்ந்த வீடு, நொய்ந்த கதவு, நொய்ந்த கூரை,

நொய்ந்த மரம், நொய்ந்த உடல், நொய்ந்த உயிர்,

நொய்ந்த உள்ளம் - இவற்றைக் காற்றுத் தேவன் புடைத்து நொறுக்கி விடுவான்.

சொன்னாலும் கேட்கமாட்டான்.

ஆதலால், மானிடரே வாருங்கள்.

வீடுகளைத் திண்மையுறக் கட்டுவோம்.

கதவுகளை வலிமையுறச் சேர்ப்போம்.

உடலை உறுதி கொள்ளப் பழகுவோம்.

உயிரை வலிமையுற நிறுத்துவோம்.

உள்ளத்தை உறுதி செய்வோம்.
இங்ஙனம் செய்தால், காற்று நமக்குத்
தோழனாகிவிடுவான்.
காற்று மெலிய தீயை அவித்துவிடுவான்;
வலிய தீயை வளர்ப்பான்.
அவன் தோழமை நன்று.
அவனை நித்தமும் வாழ்த்துகின்றோம்.

## 10

மழை பெய்கிறது,
ஊர் முழுதும் ஈரமாகிவிட்டது.
தமிழ் மக்கள், எருமைகளைப்போல, எப்போதும் ஈரத்திலேயே
நிற்கிறார்கள், ஈரத்திலேயே உட்காருகிறார்கள்,
ஈரத்திலேயே நடக்கிறார்கள், ஈரத்திலேயே படுக்கிறார்
கள். ஈரத்திலேயே சமையல், ஈரத்திலேயே உணவு.
உலர்ந்த தமிழன் மருந்துக்குக் கூட அகப்படமாட்டான்
ஓயாமல் குளிர்ந்த காற்று வீசுகிறது.
தமிழ் மக்களிலே பலருக்கு ஜவரம் உண்டாகிறது.
நாள்தோறும் சிலர் இறந்து போகிறார்கள். மிஞ்சி
யிருக்கும் மூடர் 'விதிவசம்' என்கிறார்கள்.
ஆமடா, விதிவசந்தான்.
அறிவில்லாதவர்களுக்கு இன்பமில்லை என்பது
ஈசனுடையவிதி
சாஸ்த்ர மில்லாத தேசத்திலே நோய்கள் விளைவது விதி.
தமிழ் நாட்டிலே சாஸ்த்ரங்க ளில்லை. உண்மையான
சாஸ்த்ரங்களை வளர்க்காமல், இருப்பனவற்றையும்
மறந்துவிட்டுத் தமிழ் நாட்டுப் பார்ப்பார் பொய்க்

கதைகளை மூடரிடம் காட்டி வயிறு பிழைத்து
வருகிறார்கள்
குளிர்ந்த காற்றையா விஷமென்று நினைக்கிறாய்?
அது அமிழ்தம்: நீ ஈரமில்லாத வீடுகளில் நல்ல
உடைகளுடன் குடியிருப்பா யானால்.
காற்று நன்று.
அதனை வழிபடுகின்றோம்

## 11

காற்றென்று சக்தியைக் கூறுகின்றோம்.
எற்றுகிற சக்தி, புடைக்கிற சக்தி, மோதுகிற சக்தி,
சுழற்றுவது, ஊதுவது.
சக்தியின் பல வடிவங்களிலே காற்றும் ஒன்று.
எல்லாத் தெய்வங்களும் சக்தியின் கலைகளேயாம்.
சக்தியின் கலைகளையே தெய்வங்க ளென்கிறோம்.
காற்று சக்தி குமாரன்.
அவனை வழிபடுகின்றோம்.

## 12

காக்கை பறந்து செல்லுகிறது.
காற்றின் அலைகளின்மீது நீந்திக்கொண்டு போகிறது.
அலைகள் போலிருந்து, மேலே காக்கை நீந்திச் செல்வதற்கு
இடமாகும் பொருள் யாது? காற்று.
அன்று, அஃதன்று காற்று.
அது காற்றின் இடம், வாயு நிலயம்.
கண்ணுக்குத் தெரியாதபடி அத்தனை நுட்பமாகிய பூதத்

தூள்களே (காற்றடிக்கும் போது) நம்மீது வந்து
மோதுகின்றன.
அத்தூள்களைக் காற்றென்பது உலக வழக்கு.
அவை வாயு வல்ல. வாயு ஏறிவரும் தேர்.
பனிக்கட்டியிலே சூடேற்றினால் நீராக மாறிவிடுகிறது.
நீரிலே சூடேற்றினால் 'வாயு' வாகி விடுகிறது.
தங்கத்திலே சூடேற்றினால் திரவமாக உருகிவிடுகிறது.
அத்திரவத்திலே சூடேற்றினால், 'வாயு' வாகின்றது.
இங்ஙனமே, உலகத்துப் பொருள்க ளனைத்தையும் 'வாயு'
நிலைக்குக் கொண்டுவந்து விடலாம்.
இந்த 'வாயு' பவுதிகத் தூள்.
இதனை ஊர்ந்துவரும் சக்தியையே நாம் காற்றுத் தேவ
னென்று வணங்குகிறோம்.
காக்கை பறந்து செல்லும் வழி காற்றன்று.
அந்த வழியை இயக்குபவன் காற்று.
அதனை அவ்வழியிலே தூண்டிச் செல்பவன் காற்று.
அவனை வணங்குகின்றோம்.
உயிரைச் சரணடைகின்றோம்.

## 13

அசைகின்ற இலையிலே உயிர் நிற்கிறதா? ஆம்.
இரைகின்ற கடல்-நீர் உயிரால் அசைகின்றதா - ஆம்.
கூரையிலிருந்து போடும் கல் தரையிலே விழுகின்றது.
அதன்
சலனம் எதனால் நிகழ்வது? உயிருடைமையால்.
ஓடுகின்ற வாய்க்கால் எந்த நிலையில் உளது?
உயிர்நிலையில்.
ஊமையாக இருந்த காற்று ஊதத் தொடங்கிவிட்டதே!

அதற்கு என்ன நேரிட்டிருக்கிறது? உயிர் நேரிட்டிருக்கிறது.

வண்டியை மாடிழுத்துச் செல்கிறது. அங்கு மாட்டின் உயிர் வண்டியிலும் ஏறுகிறது. வண்டி செல்லும்போது உயிருடனே தான் செல்லுகிறது.

காற்றாடி? உயிருள்ளது.

நீராவி – வண்டி? உயிருள்ளது; பெரிய உயிர்.

யந்திரங்களெல்லாம் உயிருடையன.

பூமிப்பந்து இடைவிடாமல் மிக்க விசையுடன் சுழல்கின்றது.

அவள் தீராத உயிருடையவள், பூமித்தாய்.

எனவே, அவள் திருமேனியிலுள்ள ஒவ்வொன்றும் உயிர் கொண்டதேயாம்.

அகில முழுதும் சுழலுகிறது.

சந்திரன் சுழல்கின்றது. ஞாயிறு சுழல்கின்றது.

கோடி கோடி கோடி கோடி யோஜனை தூரத்துக் கப்பாலும், அதற்கப்பாலும், அதற்கப்பாலும் சிதறிக் கிடக்கும் வானத்து மீன்களெல்லாம் ஓயாது சுழன்றுகொண்டே தானிருக்கின்றன.

எனவே, இவ் வையகம் உயிருடையது.

வையகத்தின் 'உயிரை'யே காற்றென்கிறோம்.

அதனை முப்போதும் போற்றி வாழ்த்துதல் செய்கின்றோம்

## 14

காற்றைப் புகழ நம்மால் முடியாது.

அவன் புகழ் தீராதது.

அவனை ரிஷிகள் "ப்ரத்யக்ஷம் ப்ரஹ்ம" என்று போற்றுகிறார்கள்.

ப்ராண வாயுவைத் தொழுகின்றோம். அவன் நம்மைக் காத்திடுக.
அபாநனைத் தொழுகின்றோம், அவன் நம்மைக் காக்க.
வ்யாநனைத் தொழுகின்றோம். அவன் நம்மைக் காக்க.
உதாநனைத் தொழுகின்றோம். அவன் நம்மைக் காக்க.
ஸமாநனைத் தொழுகின்றோம். அவன் நம்மைக் காக்க.
காற்றின் செயல்களை யெல்லாம் பரவுகின்றோம்.
உயிரை வணங்குகின்றோம்.
உயிர் வாழ்க.

## 15

உயிரே, நினது பெருமை யாருக்குத் தெரியும்?
நீ கண் கண்ட தெய்வம்.
எல்லா விதிகளும் நின்னால் அமைவன'
எல்லா விதிகளும் நின்னால் அழிவன.
உயிரே,
நீ காற்று, நீ தீ, நீ நிலம், நீ நீர், நீ வானம்.
தோன்றும் பொருள்களின் தோற்ற நெறி நீ,
மாறுவனவற்றை மாற்றுவிப்பது நின் தொழில்.
பறக்கின்ற பூச்சி,கொல்லுகின்ற புலி, ஊர்கின்ற புழு,இந்தப் பூமியிலுள்ள எண்ணற்ற உயிர்கள், எண்ணற்ற உலகங்களிலுள்ள எண்ணேயில்லாத உயிர்த் தொகைகள் - இவை யெல்லாம் நினது விளக்கம்.
மண்ணிலும், நீரிலும், காற்றிலும் நிரம்பிக் கிடக்கும் உயிர்களைக் கருதுகின்றோம்.
காற்றிலே ஒரு சதுர-அடி வரம்பில் லக்ஷக்கணக்கான ஜந்துக்கள் நமது கண்ணுக்குத் தெரியாமல் வாழ்கின்றன

ஒரு பெரிய ஜந்து; அதன் உடலுக்குள் பல சிறிய ஜந்துக் கள்அவற்றுள் அவற்றிலுஞ் சிறிய பல ஜந்துக்கள்; அவற்றுள் இன்னுஞ் சிறியவை - இங்ஙனம் இவ்வையக முழுதிலும் உயிர்களைப் பொதிந்து வைத்திருக்கிறது.

மஹத் - அதனிலும் பெரிய மஹத் - அதனிலும் பெரிது - அதனிலும் பெரிது .........

அணு – அதனிலும் சிறிய அணு – அதனிலும் சிறிது – அதனிலும் சிறிது ............

இரு வழியிலும் முடிவில்லை. இருபுறத்திலும் அநந்தம்.

புலவர்களே, காலையில் எழுந்தவுடன் உயிர்களை யெல்லாம் போற்றுவோம்.

"நமஸ்தே வாயோ த்வமேவ ப்ரத்யக்ஷம் ப்ரஹ்மாஸி."

# 4. கடல்

## 1

கடலே காற்றைப் பரப்புகின்றது.

விரைந்து சுழலும் பூமிப்பந்தின் பள்ளங்களிலே தேங்கியிருக்
கும் கடல் - நீர் அந்தச் சுழற்சியிலே தலைகீழாகக்
கவிழ்ந்து திசைவெளியில் ஏன் சிதறிப்போய் விடவில்லை

பராசக்தியின் ஆணை.

அவள் நமது தலைமீது கடல் கவிழ்ந்து விடாதபடி
ஆதரிக்கிறாள்.

அவள் திருநாமம் வாழ்க

கடல் பெரிய ஏரி, விசாலமான குளம். பெருங் கிணறு.
கிணறு நம் தலையிலே கவிழ்கிறதா?

அது பற்றியே கடலும் கவிழவில்லை.

பராசக்தியின் ஆணை.

அவள் மண்ணிலே ஆகர்ஷணத் திறமையை நிறுத்தினாள்

அது பொருள்களை நிலைப்படுத்துகின்றது.

மலை நமது தலைமேலே புரளவில்லை.

கடல் நமது தலைமேலே கவிழவில்லை.

ஊர்கள் கலைந்து போகவில்லை.

உலகம் எல்லா வகையிலும் இயல்பெறுகின்றது.

இஃதெல்லாம் அவனுடைய திருவருள்.
அவன் திருவருளை வாழ்த்துகின்றோம்.

## 2

வெம்மை மிகுந்த பிரதேசங்களிலிருந்து வெம்மை குன்றிய பிரதேசங்களுக்குக் காற்று ஓடிவருகிறது.

அங்ஙனம் ஓடிவரும்போது காற்று மேகங்களையும் ஓட்டிக் கொண்டு வருகிறது.

இவ்வண்ணம் நமக்கு வரும் மழை கடற் பரிசங்களி லிருந்தே வருகின்றது.

காற்றே, உயிர்க்கடலிலிருந்து எங்களுக்கு நிறைய உயிர் மழை கொண்டு வா.

உனக்கு தூப தீபங்க ளேற்றி வைக்கிறோம்.

வருணா, இந்திரா, நீவிர் வாழ்க.

இப்போது நல்ல மழை பெய்யும்படி அருள் புரியவேண்டும்

எங்களுடைய புலங்க ளெல்லாம் காய்ந்து போய் விட்டன.

சூட்டின் மிகுதியால் எங்கள் குழந்தைகளுக்கும் கன்று காலிகளுக்கும் நோய் வருகிறது. அதனை மாற்றியருள வேண்டும்.

பகல் நேரங்களிலே அனல் பொறுக்க முடியவில்லை

மனம் 'ஹா ஹா' வென்று பறக்கிறது.

பறவைக ளெல்லாம் வாட்ட மெய்தி நிழலுக்காகப் பொந்து களில் மறைந்து கிடக்கின்றன.

பல தினங்களாக, மாலைதோறும் மேகங்கள் வந்து கூடுகின்றன.

மேக மூட்டத்தால் காற்று நின்றுபோய், ஓரிலை கூட அசையாமல், புழுக்கம் கொடிதாக இருக்கிறது.

சிறிது பொழுது கழிந்தவுடன் பெரிய காற்றுக்கள் வந்து

மேகங்களை அடித்துத் துரத்திக்கொண்டு போகின்றன.
இப்படிப் பல நாட்களாக ஏமாந்து போகிறோம்.

இந்திரா, வருணா, அர்யமா. பகா, மித்திரா, உங்கள்
கருணையைப் பாடுகிறேன்.

எங்கள் தாபமெல்லாந் தீர்ந்து உலகம் தழைக்குமாறு
இன்ப மழை பெய்தல் வேண்டும்.

## 5. ஜகத் சித்திரம்

### (சிறு நாடகம்)

### முதல் காட்சி

*இடம்—மலையடி வாரத்தில் ஒரு காளி கோயில்.*

நேரம்—*நடுப்பகல்.*

**காக்கை யரசன்**—(*கோயிலை எதிர்த்த தடாகத்தின் இடையிலிருந்த தெப்பமண்டபத்தின் உச்சியில் ஏறியுட்கார்ந்து கொண்டு ஸூர்யனை நோக்கிச் சொல்லுகிறான்:—*)

''எங்கோ வாழ்!
நீல மலர்கள் நிரம்ப அழகியன.
வான மழகியது; வான்வெளி இனிது.
வான வெளியை மருவிய நின்னொளி
இனிய வற்று னெல்லாம் இனிது.
'எங்கே', 'எங்கோ,' எனவும்; அன்றி
'கிலுகிலு கிலுகி' லெனவும்; கிக்கீ;
கிக்கீ' யென்றும்; 'கேக்க', 'கேக்க'
'கேட்க, கேட்க' எனவும்; 'கெக்கெக்கே' —
'குக்குக் குக்குக் குக்குக் குக்குக்
குக்கூவே!' என்றும்; 'கீச்கீச், கீச்கீச்,'
'கிசு, கிசு, கிசுகீச்' என்றும்; 'ரங்க, ரங்க' —

**என்றும் பல்லாயிர வகையினில் இசைக்கும்**
**குயில்களும், கிளிகளும், குலவுபல ஜாதிப்**
**புட்களும் இனிய பூங்குர லுடையன.**
**எனினும்,**
**இத்தனையின்பத் திடையே, உயிர்க் குலத்தின்**
**உளத்தே மாத்திரம் இன்ப முறவில்லை.**
**இஃதென்னே! - காக்கா! காக்கா; எங்கோவாழ்!"**

இதைக் கேட்டு, மற்றப் பக்ஷிகளெல்லாம் கத்துகின்றன:—

"ஆம், ஆம், ஆமாம், ஆமாம். ஆமாமடா! ஆமாமடா! ஆமாம். எங்கோ வாழ். எங்கோ வாழ். நன்றாக உரைத்தாய். மனந்தான் சத்துரு. வேறு நமக்குப் பகையே கிடையாது. மனந்தான் நமக்குள்ளே உட்பகையாக இருந்துகொண்டு, நம்மை வேரறுக்கிறது. அடுத்துக் கெடுக்கிறது.

மனந்தான் பகை.

அதைக் கொத்துவோம் வாருங்கள். அதைக் கிழிப்போம் வாருங்கள். அதை வேட்டையாடுவோம் வாருங்கள்."

## இரண்டாம் காட்சி

### வானுலகம்—இந்திர ஸபை

தேவேந்திரன் கொலுவீற்றிருக்கிறான்.

**தேவ ஸேவகன்:** — தேவ தேவா!

**இந்திரன்:**—சொல்.

**தேவ ஸேவகன்:**—வெளியே நாரதர் வந்து காத்திருக்கிறார். தங்களைத் தரிசிக்க வேண்டுமென்று சொல்லுகிறார்

இந்திரன்:—வருக.

(நாரதர் பாடிக்கொண்டு வருகிறார்)

"நாராயண, நாராயண, நாராயண, ஹரி, ஹரி, நாரா யண, நாராயண"

இந்திரன்:—நாரதரே! நாராயணன் எங்கிருக்கிறான்?

நாரதர்:—நீ அவனைப் பார்த்தது கிடையாதோ?

இந்திரன்:—கிடையாது.

நாரதர்:—ஸர்வ பூதங்களிலும் இருக்கிறான்.

இந்திரன்:—நரகத்தி லிருக்கிறானா?

நாரதர்:—ஆம்.

இந்திரன்:—துன்பத்தி லிருக்கிறானா?

நாரதர்:—ஆம்.

இந்திரன்:—மரணத்தி லிருக்கிறானா?

நாரதர்:—ஆம்.

இந்திரன்:—உங்களுடைய ஸர்வ நாராயண ஸித்தாந்தத் தின் துணிவு யாது?

நாரதர்:—எல்லா வஸ்துக்களும், எல்லா லோகங்களும், எல்லா நிலைமைகளும், எல்லாத் தன்மைகளும், எல்லா சக்தி களும், எல்லா ரூபங்களும், எல்லாம் ஒன்றுக்கொன்று ஸமானம்.

இந்திரன்:—நீரும் கழுதையும் ஸமானந்தானா?

நாரதர்:—ஆம்.

இந்திரன்:—அம்ருத பானமும், விஷபானமும் ஸமானமா?

நாரதர்:—ஆம்.

இந்திரன்:—ஸாதுவும், துஷ்டனும் ஸமானமா?

நாரதர்:—ஆம்.

இந்திரன்:—அசுரர்களும், தேவர்களும் ஸமானமா?

நாரதர்:—ஆம்.

இந்திரன்:—ஞானமும், அஞ்ஞானமும் ஸமானமா?

நாரதர்:—ஆம்.

இந்திரன்:—ஸுகமும் துக்கமும் ஸமானமா?

நாரதர்:—ஆம்.

இந்திரன்:—அதெப்படி?

நாரதர்:—ஸர்வம் விஷ்ணுமயம் ஜகத்-

(பாடுகிறார்) நாராயண, நாராயண, நாராயண, நாராயண.

## மூன்றாம் காட்சி

இடம்:—மண்ணுலகத்தில் ஒரு மலையடிவாரத்தில் ஒரு காளி கோயிலுக்கெதிரே சோலையில்.

கிளி பாடுகிறது:-தைர்யா, தைர்யா, தைர்யா-

தன்மனப் பகையைக் கொன்று
தமோ குணத்தை வென்று
உள்ளக் கவலை யறுத்து
ஊக்கந் தோளிற் பொறுத்து
மனதில் மகிழ்ச்சி கொண்டு
மயக்க மெலாம்விண்டு
ஸந்தோஷத்தைப் பூண்டு
தைர்யா, ஹுக்கும், ஹுக்கும்!
ஹுக்கும், ஹுக்கும்!
ஆமடா, தோழா!
'ஆமாமடா'
எங்கோவா, எங்கோவா!
தைர்யா, தைர்யா, தைர்யா!

குயில்கள்:—சபாஷ்! சபாஷ்! சபாஷ்!

குருவிகள்;—'டிர்ர்ர்ர்ர்ர்ர்', 'டிர்ர்ர்'

நாகணவாய:—ஜீவ, ஜீவ, ஜீவ, ஜீவ, ஜீவ, ஜீவ.

குருவிகள்:—சிவ, சிவ, சிவ, சிவ, சிவ, சிவ, சிவ, சிவா.

காக்கை:—எங்கோ வாழ்! எங்கோ வாழ்!

கிளி:—கேளீர், தோழர்களே! இவ்வுலகத்தில் தற்கொலை யைக் காட்டிலும் பெரிய குற்றம் வேறில்லை. தன்னைத்தான் மனத்தால் துன்புறுத்திக் கொள்வதைக் காட்டிலும் பெரிய பேதைமை வேறில்லை.

காக்கை:—அக்கா! அக்கா! காவு! காவு!

குருவி:—கொட்டடா! கொட்டடா! கொட்டடா!

கிளி:-ஹூக்குக்கூ!

கிளி:—காதலைக் காட்டிலும் பெரிய இன்பம் வேறில்லை.

அணிற்பிள்ளை:—ஹூக்கும், ஹூக்கும், ஹூக்கும், ஹூக்கும்.

பசுமாடு:—வெயிலைப்போல்அழகான பதார்த்தம்வேறில்லை.

அணில்:—பசுவே, இந்த மிக அழகிய வெயிலில் என் கண்ணுக்குப் புலப்படும் வஸ்துக்களுக்குள்ளே உன் கண்ணைப் போல் அழகிய பொருள் பிறிதொன்றில்லை.

நாகணவாய்:—டுபுக்! பாட்டைக் காட்டிலும் ரஸமான தொழில் வேறில்லை.

எருமை மாடு:—பக்ஷி ஜாதிகளுக்குள்ள ஸந்தோஷமும், ஜீவ ஆரவாரமும், ஆட்ட ஓட்டமும், இனிய குரலும் மிருக ஜாதியாருக்கும் மனுஷ்ய ஜாதியாருக்கு மில்லையே? இதன் காரணம் யாது?

நாகணவாய்:—டுபுக்! வெயில், காற்று, ஒளி இவற்றின் தீண்டு ல் மிருக மனிதர்களைக்காட்டிலும் எங்களுக் கதிகம், எங்க ்கு உடம்பு சிறிது. ஆதலால் தீனி சொற்பம்: அதைச்

சிறிதுசிறிதாக நெடுநேரம் தின்கிறோம். ஆதலால் எங்களுக்கு உணவின்பம் அதிகம். மிருக மனிதஜாதியார்களுக்குள் இருப்பதைக்காட்டிலும் எங்களுக்குள்ளே காதலின்பம் அதிகம். ஆதலால் நாங்கள் அதிக ஸந்தோஷமும், பாட்டும், நகைப்பும் கொஞ்சு மொழிகளுமாகக் காலங்கழிக்கிறோம். இருந்தாலும் கிளியரசு சொல்லியதுபோல், காலனுக்குத் தூதனாகிய மனக்குறையென்னும் பேய் எங்கள் குலத்தையும் அழித்துவிடத்தான் செய்கிறது. அதற்கு நிவாரணம் தேடவேண்டும். சுவலையைக் கொல்வோம் வாருங்கள். அதிருப்தியைக் கொத்துவோம், கொல்லுவோம்.

**மற்றப் பக்ஷிகள்:**—வாருங்கள், வாருங்கள், வாருங்கள், துயரத்தை அழிப்போம். கவலையைப் பழிப்போம், மகிழ்வோம் மகிழ்வோம், மகிழ்வோம்.

## நான்காம் காட்சி

இடம்:—கடற்கரை

நேரம்:—நள்ளிரா; முழுநிலாப் பொழுது.

இரண்டு பாம்புகள் ஒரு பாலத்தடியே இருட் புதரினின்றும் வெளிப்பட்டு நிலா வீசி ஒளிதரும் மணல்மீது வருகின்றன.

**ஆண் பாம்பு:**— உன்னுடன் கூடிவாழ்வதில் எனக்கின்பமில்லை. உன்னால் எனது வாழ்நாள் விஷமமாகிறது. உன்னாலே தான் என் மனம் எப்போதும் அனலில்பட்ட புழுவைப்போலே துடித்துக் கொண்டிருக்கிறது.

**பெண் பாம்பு:**—உன்னுடன் கூடிவாழ்வதில் எனக்கின்பமில்லை. உன்னால் எனது வாழ்நாள் நரகமாகிறது. உன்னால் என்மனம் தழலிற்பட்ட புழுவைப்போல் இடையறாது துடிக்கிறது.

ஆண் பாம்பு:—நான் உன்னைப் பகைக்கிறேன்.

பெண் பாம்பு;—நான் உன்னை விரோதிக்கிறேன்.

ஆண் பாம்பு:—நான் உன்னைக் கொல்லப்போகிறேன்.

பெண் பாம்பு:—நான் உன்னைக் கொல்லப்போகிறேன்.

ஒன்றையொன்று கடித்து இரண்டு பாம்புகளும் மடிகின்றன.

## ஐந்தாம் காட்சி

### கடற்கரை

தேவதத்தன் என்ற மனித இளைஞன்:—நிலா இனியது நீல வான் இனியது. தெண்டிரைக் கடலின் சீர், ஒலி இனிய; உலகம் நல்லது. கடவுள் ஒளிப்பொருள். அறிவு கடவுள்; அதனிலை மோக்ஷம்.

விடுதலைப் பட்டேன், அசுரரை வென்றேன்.
நானே கடவுள். கடவுளே நான்.
காத லின்பத்தாற் கடவுள் நிலை பெற்றேன்,

ஓம்

# 6. விடுதலை

(நாடகம்)

## அங்கம் 1

### காட்சி 1

இடம்:—வானுலகம்.

காலம்:—கலிமுடிவு.

பாத்திரங்கள்:—இந்திரன், வாயு, அக்நி, ஒளி (சூரியன்), ஸோமன், இரட்டையர் (அசுவிநி தேவர்). மருத்துக்கள், வசுக்கள், த்வஷ்டா, விசுவேதேவர் முதலாயினோர்.

இந்திரன்:—உமக்கு நன்று, தோழரே.

மற்றவர்:—தோழா, உனக்கு நன்று.

இந்தி:—பிரமதேவன் நமக்கோர் பணியிட்டான்.

மற்றோர்:—யாங்ஙனம்?

இந்தி:—'மண்ணுலகத்து மானுடன் தன்னைக் கட்டிய தளையெலாம் சிதறுக' என்று.

அக்நி:—வாழ்க தந்தை: மானுடர் வாழ்க.

மற்றோர்:—தந்தை வாழ்க, தனிமுதல் வாழ்க. உண்மை வாழ்க உலக மோங்குக. தீது கெடுக, திறமை வளர்க.

ஒளி:— உண்மையும் அறிவும் இன்பமுமாகி
பலவெனத் தோன்றிப் பல்வினை செய்து
பல்பயன் உண்ணும் பரமநற் பொருளை
உயிர்க்கெலாந் தந்தையை, உயிர்க்கெலாந் தாயை
உயிர்க்கெலாந் தலைவனை, உயிர்க்கெலாந் துணைவனை
உயிர்க்கெலாம் உயிரை, உயிர்க்கெலாம் உணர்வை
அறிவிலே கண்டு போற்றி
நெறியினிலவன்பணி நேர்படச் செய்வோம்

இந்தி:—நன்று தோழரே, அமிழ்த முண்போம்.
மற்றோர்:—அமிழ்த நன்றே. ஆம். அஃதுண்போம்.
(எல்லாரும் அமிர்தபானம் செய்கிறார்கள்.)

இந்தி:—நித்தமும் வலிது
வாயு:— நித்தமும் புதிது.
அக்நி:— தீரா விரைவு,
இரட்:— மாறா இன்பம்
மருத்:—என்றும் இளமை
ஒளி:— என்றுந் தெளிவு
அக்நி:—மண்ணுலகத்து மானிடர் வடிக்கும் ஸோமப் பாலு
மில் வமிழ்தமு மோர்சுவை.

இந்தி:— மண்ணுல கத்து மக்களே, நீவிர்
இன்பங் கேட்பீர், எண்ணிய மறப்பீர்.
செயல்பல செய்வீர், செய்கையில் இளைப்பீர்.
எண்ணள வதனால் ஏழுல கினையும்
விழுங்குதல் வேண்டுவீர், மீளவு மறப்பீர்,
தோழரென் றெம்மை நித்தமும் சார்ந்தீர்,
ஸோமப் பாலொடு சொல்லமு தூட்டுவீர்,
நும்மையே அவுணர் நோவுறச் செய்தார்?

ஆஅஅ! மறவுக் குறும்பா, அரக்கா,
விருத்திரா. ஒளியினை மறைத்திடும் வேடா,
நமுசிப் புழுவே, வலனே, கலிசெயுந்
துன்பமே, அச்சமே, இருளே, தொழும்பர்காள்,
பெயர்பல காட்டும் ஒருகொடும் பேயே,
உருப்பல காட்டும் ஒருபுலைப்பாம்பே,
படைபல கொணர்ந்து மயக்கிடும் பாழே,
ஏடா, வீழ்ந்தனை, யாவரும் வீழ்ந்தீர்.
அரக்கரே, மனித அறிவெனுங் கோயிலை
விட்டுநீ ரொழிந்தால் மேவிடும் பொன்னுகம்
முந்தைநாள் தொடங்கி மானுடர் தமக்குச்
சீர்தர நினைந்துநாம் செய்ததை யெல்லாம்
மேகக் கரும்புலை விருத்திரன் கெடுத்தான்.
'வலியிலார் தேவர்; வலியவர் அரக்கர்.
அறமே நொய்யது; மறமே வலியது.
மெய்யே செத்தை; பொய்யே குன்றம்.
இன்பமே சோர்வது; துன்பமே வெல்வது'
என்றோர் வார்த்தையும் பிறந்தது மண்மேல்.
மானுடர் திகைத்தார்; மந்திரத் தோழராம்
விசுவா மித்திரன், வசிட்டன், காசிபன்
முதலியோர் செய்த முதனூல் மறைந்தது;
பொய்ந்நூல் பெருகின; பூமியின் கண்ணே
வேதங் கெட்டு வெறுங்கதை மலிந்தது.
போதச் சுடரைப் புகையிருள் சூழ்ந்தது.
தவமெலாங் குறைந்து சதிபல வளர்ந்தன.
எல்லாப் பொழுதினும் ஏழை மானுடர்
இன்பங் கருதி யிளைத்தனர், மடிந்தார்;
கங்கைநீர் விரும்பிக் கானனீர் கண்டார்;

அமுதம் வேண்டி விடத்தினை யுண்டார்.
ஏன!
வலியரே போலுமிவ் வஞ்சக அரக்கர்!

விதியின் பணிதான் விரைக.
மதியின் வலிமையால் மானுடன் ஓங்குக.

ஒளி:— ஒருவனைக் கொண்டு சிறுமை நீக்கி
நித்திய வாழ்விலே நிலைபெறச் செய்தால்
மானுடச் சாதி முழுநல் வழிப்படும்;
மானுடச் சாதி யொன்று; மனத்திலும்
உயிரிலுந் தொழிலிலும் ஒன்றே யாகும்.

தீ:— பரத கண்டத்திற் பாண்டிய நாட்டிலே
விரதந் தவறிய வேதியர் குலத்தில்
வசுபதி யென்றோ ரிளைஞன்வாழ் கின்றான்.
தோளிலே மெலிந்தான், துயரிலே யமிழ்ந்தான்,
நாளும் வறுமை நாயொடு பொருவான்,
செய்வினை யறியான், தெய்வமுந் துணியான்,
ஐய வலையி லகப்பட லாயினன்.
இவனைக் காண்போம், இவன் புவி காப்பான்.

காற்று:—உயிர்வனங் கொடுத்தேன்; உயிரால் வெல்க.
இந்தி:—மதிவலி கொடுத்தேன். வசுபதி வாழ்க.
சூரியன்:—அறிவிலே யொளியை அமைத்தேன்; வாழ்க.
தேவர்:—மந்திரங் கூறுவோம். உண்மையே தெய்வம்,
கவலையற் றிருத்தலே வீடு. களியே
அமிழ்தம். பயன்வருஞ் செய்கையே யறமாம்
அச்சமே நரகம்; அதனைச் சுட்டு
நல்லதை நம்பி நல்லதே செய்க.

மகனே, வசுபதி, மயக்கந் தெளிந்து,
தவத்தொழில் செய்து தரணியைக் காப்பாய்.

## காட்சி 2

பாண்டி நாட்டில் வேதபுரம்; கடற்கரை; வசுபதி தனியே நிலவைப் பார்த்துக் கொண்டிருக்கிறான்.

வசுபதி பாடுகிறான்:-

### நிலவுப் பாட்டு

வாராய் நிலவே வையத் திருவே,
வெள்ளைத் தீவில் விளையுங் கடலே,
வானப் பெண்ணின் மதமே, ஒளியே,
வாராய், நிலவே, வா.

மண்ணுக் குள்ளே யமுதைக் கூட்டிக்
கண்ணுக் குள்ளே களியைக் காட்டி
எண்ணுக் குள்ளே யின்பத் தெளிவாய்
வாராய், நிலவே, வா.

இன்பம் வேண்டில் வானைக் காண்பீர்,
வானொளி தன்னை மண்ணிற் காண்பீர்,
துன்பந் தானோர் பேதைமை யன்றே!
வாராய், நிலவே, வா.

அச்சப் பேயைக் கொல்லும் படையாம்
வித்தைத் தேனில் விளையுங் களியாய்
வாராய், நிலவே, வா.

## 7. தந்தையும் மகனும் கடவுளும்*

### (மூவர் நாடகம்)

உன்னைக் கொன்றால், என் செய்வாய்? என்
 றுறுமினான் ஹிரண்யன்.
"ஓம் நமோ நாராயணாய" - என்றான் சிறுவன்.

ஒலி செய் கடலில் கல்லைக் கட்டி
 யுனை யெறிவே னென்றான்
ஓம் நமோ (முதலி)

தின்னும் புலிவாய்க் குன்னை யிடுவேன்
 என்றான் தீயோன்.
"ஓம் நமோ நாராயணாய" என்றான் சிறுவன்.

தீயி லுன்னைச் சுட்டு வெண் சாம்பராச்
 செய்திடுவேன் என்றான்
ஓம் நமோ (முதலி)

உந்நத மலைமுடி மீதினி லிருந்து நான்
 உருட்டிடுவேன் என்றான்.
ஓம் நமோ

---

* *இது பாட்டும் இல்லாமல், உரைநடையாகவும் இல்லாமல் கையெழுத்துப் படியாகவே உள்ளது.*

*— பதிப்பாசிரியர்*

மின், இடி கோடி நின் நெஞ்சிடைப் பாய்ந்திட
வீசிடு வேன் என்றான்.
ஓம் நமோ நாராயணாய என்றான் வீரன்.

உடலைப் பிசைந்துனை நாய்களுக் கிடுவேன்
என் றுரைத்தான் ஈன்றோன்
ஓம் நமோ நாராயணாய என்றான் மைந்தன்.

குடரை யறுத் ததில் விடத்தைத் தணிப்பேன்
என்றான் கொடியோன்,
ஓம் நமோ நாரா .......... குமரன்.

இடமெல்லாம் பொருள் நிறைந்தது கண்டோம்
இவற்றுள் விஷ்ணுவைக் கண்டவ ரில்லை.
கடவுளை யிவற்றில் காண்ப தெப்படி நான்?
என்றான் கடியோன்.
ஓம் நமோ .........

நடுப் பனிக் கடலில் திமிங்கில வாய்க்குனை
நான் கொண்டு திணிப்பேன் என்றான்.
நமோ நாராயணாய, ஓம் நமோ நாராயணாய
என்றான் நல்லோன்.

இடுப்பினை யொடிப்பேன் இங்குனை நான் தின்பேன்
என்றான் அப்பன்.
''ஓம் நமோ நாராயணாய, ...
என்றான் இளைஞன்.
தூணில் ஒரு நாதம் உண்டாகிறது.

ப்ரஹ்: கேள்

விஷ்ணு: தேடுகிறாயா? மகனே என்னைத்
தேடுகிறாயா?

ஹிரண்ய: ஆம்.

விஷ்ணு: சரண் புகுவாயா? மகனே
சரண் புகுவாயா?
அன்பு செய்வாயா? மகனே
அன்பு செய்வாயா?

ஹிரண்: மாட்டேன்

தூண் பாடுகிறது:

உடலினைப் பிசைந்துனைப் பேய்களுக் கிடுவேன்
குடரினை யறுத் தென்றன் நக மதிற் பதிப்பேன்
விடுதலை நினக்குந் தருவேன்

ஹிரண்: போ! தூணை ......

# பின்னிணைப்பு - 1

## குறிப்புகள் விளக்கங்கள் முதலியன

### 1. வெங்கடேசுரெட்ட மன்னருக்கு எழுதிய விண்ணப்பம் [பக் - 1]

இக்கவிதையின் இறுதியில் 'இங்ஙனம் ஊழியன் இளசைச் சுப்பிரமணியன்' என்று கையொப்பம் இட்டுள்ளார். பாரதியார் இப்பாடலை எழுதிய தேதி 24.1.1897.

'பாரதி' பட்டத்தைத் தம் பதினோராம் வயதிலேயே பெற்றுவிட்ட கவிஞர் சி. சுப்பிரமணிய பாரதியாருக்கு இக் கவிதை எழுதியபோது வயது ஆண்டு 14, மாதம் 1, நாள் 14 என்றாகிறது; அதாவது, பதினைந்து வயது தொடங்கிய சமயத்தில் எழுதியுள்ளார். அப்போது திருநெல்வேலி இந்துக் கல்லூரியைச் சார்ந்த உயர்நிலைப் பள்ளியில் ஐந்தாம் படிவத்தில் பயின்றுகொண்டிருந்தார்.

இளசை என்பது எட்டையபுரத்தைக் குறிக்கும் மறு பெயராகும். தம் ஊராகிய எட்டையபுரத்திற்குப் பாரதி வந்திருந்த பொழுது, அப்போதைய மன்னர் வெங்கடேசு ரெட்டப்பருக்கு இந்த ''விண்ணப்பக் கவிதை''யை வரைந்தார்.

எட்டையபுர மன்னரிடம் பண உதவி கோரியே பாரதி பாடல் வடிவில் எழுதிக் கொடுத்த விண்ணப்பம் என்பதால்தான் பாடலின் இறுதியில் தம்மை ஊழியன் என்றே குறிப்பிட்டுக்

கொள்கிறார். பாரதி தம் பள்ளிக் கல்வியைத் தொடர்வதற் கேதான் மன்னரின் உதவியை நாடியிருக்கிறார்.

இந்தப் பாடலோடு, 1919ஆம் வருடத்திலே பாரதியார் எட்டையபுரத்தில் இருந்தபோது எழுதிய சீட்டுக் கவிகளையும் ஒப்பு நோக்க வேண்டும். (இந்நூல் பக். 516,521)

மகாகவி பாரதியாரின் தம்பி திரு. சி. விசுவநாத ஐயர் அவர்கள் இந்த முதல் பாடலுடன், 1919 ஆம் வருடத்திய சீட்டுக் கவிகளை ஒப்புநோக்கும் பாங்கு வருமாறு:

"முதல் பாடல் பாரதியாரின் தமிழ்ப் புலமையையும் பற்றையும் காட்டுவதாக அமைந்துள்ளது. எட்டயபுர ஜமீன் தாருக்கு அகவல் நடையில் விடுத்த 'விண்ணப்பம்'தான் இது இந்தப் பாடல் எழுந்த சந்தர்ப்பத்தையும் நாம் கவனிக்க வேண்டும். அந்தச் சமயத்தில் எங்கள் தந்தை தேடிவைத்த 'ஓங்கி நின்ற செல்வம்' யாவும் இழந்து, 'பெருந்துயர் எய்தி நின்றனன், தீய வறுமையான்.' பாரதியின் எட்டயபுரப் படிப்பு முடிந்து, திருநெல்வேலிக்கு அவர் போக வேளை வந்துவிட்டது (1895-1898). எப்படியோ சமாளித்துப் பாரதியை நெல்லைக்கு அனுப்பிவிட்டார். ஆனால், எங்கள் தந்தைக்கோ பணம் அனுப்புவது சிரமமாக இருந்தது. ஜமீன்தாரை நேரில் சந்தித்து உதவி கேட்கத் தயங்கினார். ஏனெனில், பங்கொன்று ரூ. 100/- வீதம் 200 பங்குகள் சேகரித்து நடத்தி வந்த எட்டயபுரம் ஜின்னிங் பாக்டரியில் 50 பங்குகள் ஜமீன்தார் வாங்கியிருந்தார், அதைப் பூராவும் இழக்க நேரிட்டது. இந்த நிலையில், எங்கள் தந்தை எப்படி ஜமீன்தாரைப் போய் உதவி கேட்பார்? ஆதலால், பாரதியே தன் கவித் திறமையை வெளியிட்டு, அந்த விண்ணப்பத்தைப் பாட்டாகவே எழுதி அனுப்பினார்.

"இந்தப் பாட்டில் எப்படி எங்கள் தகப்பனார் ஜமீன் தாரையே ஜீவனோபாயத்துக்கு நம்பியிருந்தார் என்பதையும். ஜமீன்தார் பெரிய வள்ளல் என்பதால், பாரதி போன்றவனுக்கு உதவினால், அவர் கீர்த்தி பெருகும் என்பதையும், உலக மொழி

களிலெல்லாம் தமிழ் மிகச் சிறந்த மொழியாக இலங்கினாலும், ஆங்கிலம் பயின்றால்தான் வேலை வாய்ப்பு முதலியன கிடைப்பதாக ஆகிவிட்டது என்பதையும் பாரதி குறித்திருக்கிறார்.

"ஆனால், எட்டயபுரத்தில் 1919-இல் இருந்த பொழுது, ஜமீன்தாருக்குச் சீட்டுக் கவிகள் எழுதியனுப்பிய பொழுது பாரதியின் நிலைமை வேறு. அப்பொழுதும் வறுமைக்குக் குறைவில்லை. ஆனாலும், சோழர்கள் - பாண்டியர்கள் நாடாண்டு வந்த காலத்தில், மகாகவிகள் வந்த செய்தி கேட்டு, அரசர்கள் அம்மகாகவிகளை ஊர் எல்லையிலிருந்தே எல்லாவித மரியாதைகளுடன் பல்லக்கில் ஏற்றி அழைத்துப் போவதுபோல, சீட்டுக் கவியைப் பார்த்தவுடன், தம் ஆட்களை அனுப்பி அரசன் தம்மையும் அழைத்துப் போகவேண்டும் என்று எதிர் பார்த்தார்.

"நாங்கள் பலதடவை கேட்டுக்கொண்டதன் பேரில்தான் இந்தச் சீட்டுக்கவிகளை எழுதியனுப்பினார். பாரதியாரின் ஸ்வபாவம் தெரிந்ததே! எவ்வளவோ கஷ்டப்பட்டாலும் பிறரிடம் கையேந்தி எவ்வித உதவியையும் பெற்றதில்லை.

"சீட்டுக் கவிகளின் த்வனியையும், அமைப்பையும் கவனிக்க. ஒவ்வொரு அடியிலும், ஒருபகுதி அரசின் பிரதாபங்கள், சாதனைகள் – ஆகியன அமைந்திருக்கக் காணலாம். மற்றொரு பகுதியில், தம்முடைய பெருமை சாதனை - ஆகியன இலங்கக் காணலாம்,

"ஆனால், முதல் பாடலாகக் கருதப்படும் விண்ணப்பப் பாடலின் த்வனியும் அமைப்பும் வேறு. இந்தப் பின்னணி' அடிப்படையில்தான் இப்பாடல்களை ஒப்புநோக்க வேண்டும்.',

## 2. காந்திமதிநாத பிள்ளை அவர்கள் பேரில் ...(பக். 4)

ஒருசமயம், தமிழில் சிறந்த புலமை வாய்ந்த சோணாசலம் பிள்ளை அவர்களின் மைந்தர் திரு. காந்திமதிநாத பிள்ளை அவர்கள், வயதில் இளையவரான பாரதியை மடக்கக்

கருதி, "பாரதி சின்னப் பயல்" என்ற ஈற்றடியைக் கொடுத்து, கவியொன்று பாடும்படி சொன்னார்.

காந்திமதிநாத பிள்ளையவர்கள் நாணித் தலைகுனியும் படி பாடிய பாடலே முதல்பகுதியில் உள்ளது.

சிறிது நேரத்தில், வயதில் பெரியவரான பிள்ளை அவர்களின் மனத்தைப் புண்படுத்தியதற்காக வருந்திய பாரதி யார், "ஐயா, என்ன இருந்தாலும் தாங்கள் எனக்கு வயதில் மூத்தவர், நான் உண்மையில் சின்னப்பயல் தானே? தங்கள் மனம் நோகும்படி செய்ததற்கு மன்னிக்க வேண்டுகின்றேன்'' என்று கூறி, பாட்டை அடியோடு மாற்றி யமைத்துப் பாடினார். அப்படி மாற்றியமைத்துப் பாடிய பாடல் இரண்டாம் பகுதியில் உள்ளது.

1897க்கு மேல் 1898க்குள் இந்த நிகழ்ச்சி நடந்திருக்க வேண்டும். பாடல்களுக்கு இதுநாள்வரை எவரும் தலைப்புக் கொடுக்கவில்லை. இங்குள்ள தலைப்பு நாம் அமைத்துக் கொண்டது.

### 3. இளசை ஒருபா வொருபஃது [பக். 5]

'ஒருபா ஒருபது: அகவலும் வெண்பாவும் கலித்துறையு மாய் இவற்றுள் ஒன்றனால் அந்தாதித் தொடையால் பத்துப் பாடுவது.

- அபிதான சிந்தாமணி (பக். 1125)

பாரதியாரின் இளசை ஒருபா ஒருபஃது, காப்புச் செய்யுள் ஒன்றும் பிரபந்தச் செய்யுள் பத்தும் ஆகப் பதினொரு வெண்பாக்களால் அந்தாதித் தொடை கொண்டதாகப் பாடப் பட்டுள்ளது.

இளசை என்பது எட்டயபுரத்தின் இன்னொரு பெயர். அங்கு எழுந்தருளியுள்ள அட்டமூர்த்தீசுவரரைத் தலைவராகக்

கொண்டு இந்தப் பிரபந்தம் பாரதியாரின் இளமைப் பருவத்தில் பாடப்பட்டது.

தமிழகம் அறிய இதனை முதலில் தம் 'சாந்தி' இதழில் 1955 அக்டோபரில் வெளியிட்ட பெருமை திரு. தொ. மு. சி. ரகுநாதனுக்கு உரியது. இந்தப் பிரபந்தத்துக்குச் சிறப்புப் பாயிரம் வழங்கிய திரு. காந்திமதிநாத பிள்ளையவர்களின் மகன் இசைமணி திரு. கா. சங்கரன் அவர்கள் இதன் மூலப்படியைக் கண்டெடுத்துத் திரு. ரகுநாதனிடம் கொடுத்திருக்கிறார்.

இதன்கண் தளை தட்டுவதைக் காணலாம். (எ-டு) எட்டாவது பாடல் முதல் வரி 'பொருளாள ரீய வேற்பாரிளசை' என்றுள்ளது; இரண்டாம் சீரும் மூன்றாம் சீரும் மாமுன் நிரையாக அமைந்து தளை தட்டுகிறது.

"சாந்தி" இதழில் வெளிவந்தவாறு பாடல் இங்கே பதிப்பிக்கப்பட்டுள்ளது.

இப்பாடல் 1898ஆம் ஆண்டில் இயற்றப்பட்டது என்று பாரதியாரின் இளவல் திரு சி. விசுவநாத ஐயர் அவர்களும் உறுதிசெய்தார்.

எட்டயபுரம் சமஸ்தான வித்துவான்களில் ஒருவராகிய மகா-ரா-ரா-ஸ்ரீ எட்டீசக் குருக்கள் அவர்கள் இயற்றிய

சிறப்புப் பாயிரம்

திருமலியும் பொழிலிளசை செல்வவெங்க
டேசுரெட்ட தீரன் போற்றும்
குருமலியும் மதிவேணிக் கொன்றையந்தா
ரெட்டீசக் கோமான் மீதே
யுருவமதிற் சிறியனறி வினின்முதிய
னொருபா வுரைத்தல் செய்தான்
மருமலிதா ரணிபுயச்சுப் பிரமணிய
பாரதியா மறைவல்லோனே.

திரு சோ. காந்திமதிநாத பிள்ளை இயற்றிய சிறப்புப் பாயிரம்

பாலாகற் கண்டா பழம்பொருந்து மின்னமு
தாலாகும் பாகா தமிழுருவா - ஏலாதி
இட்ட சருக்கரையா ஏரிளசைப் பாரதியார்
தொட்ட வொருவொருபஃது

இந்தப் பிரபந்தத்தைக் கொண்டு மகாகவி பாரதியாரை எடையிட்டுக் கணிக்கவேண்டா. கவிதைச் சாலையிலே மழவிளங் குழவி தளர்நடை இடுவதை ஓட்டப் பந்தயக் கணக்கில் சேர்த்தலாகாது.

## 5. வருணசிந்தாமணி ... சாற்றுக்கவிகள் [பக். 10]

'வருணசிந்தாமணி'க்கு எழுதிய இந்தச் சாற்றுக்கவிகள் எழுதியபோது பாரதியார் 'சுதேசமித்திரன்' இதழில் பணியாற் றியுள்ளார். அந்த நூலில் இச் சாற்றுக்கவிகளின் முன், 'பிர்மஸ்ரீ -சின்னசாமி ஐயர் அவர்கள் குமாரரும் எட்டயபுரம் வித்வானும் சுதேசமித்திரன் சப் எடிட்டருமாகிய பிர்மஸ்ரீ - சுப்பிரமணிய பாரதியவர்கள் இயற்றியது' என்ற செய்திக் குறிப்பு உள்ளது. எனவே, பாரதியார் 'சுதேசமித்திர'னில் பணியாற்றிய 1904 நவம்பருக்குமேல் 1905க்குள் சாற்றுக்கவிகளை எழுதியிருக்க வேண்டும்.

ஆனால், 'வருணசிந்தாமணி' சார்வரி ஆண்டு தை மாதம (1901 சனவரி) வெளிவந்திருக்கிறது. நூல் அச்சானபின் சான் றோர்களின் சாற்றுக்கவிகள் பெற்றுத் திரு. கனகசபைப் பிள்ளை நூலிலே இணைத்திருக்க வேண்டும்.

இந்நூலின் இரண்டாம் பதிப்பு வெளிவந்திருப்பதாகத் தெரிவித்து, 22-10-1906 'இந்தியா' இதழில் மதிப்புரை வெளி யிட்டிருக்கிறது.

சிலர் இந்தச் சாற்றுக்கவிகள் 1908இல் இயற்றப்பட்டன என்று கருதுவது தவறு என்பதை இச்செய்திகள் புலப்படுத்தும்.

## 8. ஜாதீய கீதம் [பக். 18]

பாரதியார் 'வந்தேமாதர' கீதம் எழுதிய பங்கிம் சந்திர சட்டோபாத்தியாயர்பால் அளவுகடந்த அன்புபூண்டவர். அதனால் அவரை 'நமது மகரிஷி கணங்களிலே சேர்த்துப் பூஜை புரியத் தகுந்தவர்' என்று பாரதியார் எழுதியுள்ளார். மற்றும், பங்கிம் சந்திரர் இயற்றிய கீதமானது, "பாரதநாடு முழுமைக்கும் பொதுவாகி விட்டது" என்றும் நம்பியவர்.

எனவே, முதன்முதலாக அக்கீதத்தைத் தமிழ்ப் படுத்திச் 'சக்ரவர்த்தினி' (நவம்பர் 1905) இதழிலே வெளியிட்டார். திரும்பவும் 28-12-1905ஆம் தேதிய 'சுதேசமித்திரன்' இதழில்,

'திருவல்லிக்கேணியில் பிரசுரமாகும் "சக்ரவர்த்தினி" என்ற மாதாந்தரப் பத்திரிகையில் அதன் ஆசிரியர் மிஸ்டர் சி. சுப்பிரமணிய பாரதியால் வரையப் பட்டிருப்பது'

என்ற குறிப்புடன் அப்பாடல் மீண்டும் வெளியிடப்பட்டிருக்கிறது. பாடல்பற்றிய விளக்கக் கட்டுரையொன்றும் காணப் படுகிறது.

"இப்போது பெங்காள மாகாணத்திலிருக்கும் ஒவ்வொரு ஹிந்துவாலும் ஸாம கீதத்தைப் போல அத்தனை பக்தியுடன் பாடப்பட்டு வருகின்ற 'வந்தேமாதரம்' என்ற திவ்ய கீதத்தை நான் மொழிபெயர்க்கத் துணிந்தமை, கர்வங்கொண்ட செய்கையென்று பலர் கருதக்கூடும். ஷை கீதமெழுதிய பெங்காளி வித்வானாகிய பங்கிம் சந்திர பாபுவின் தைவிகச் சொற்களைத் தமிழ்ப்படுத்த எனக்குப் போதிய வன்மை யில்லாவிடினும் தமிழ்நாட்டாருக்கு அச்செய்யுளின் பொருளுணர்த்த வேண்டுமென்ற ஆசைப் பெருக்காலேயே யான் இதனைத் துணிந்திருக்

கிறேன். இவ் 'வந்தேமாதரம்' என்ற கீதம் பங்கிம் சந்திர சாடர்ஜியின் நூல்களிலே மிகச் சிறப்புக் கொண்டதாகிய ஆனந்த மடம் என்ற நாவல் கதையினிடையே அமைக்கப்பட்டிருக்கின்றது.

"ஆனந்த மடம் என்ற கதையானது உண்மையாகவே நடந்த சரித்திரத்தைத் தழுவியது. வாரன் ஹேஸ்டிங்ஸ் கவர்னர் ஜெனரலாயிருந்த காலத்தில் சந்நியாசிகள் சேர்ந்து நடத்திய ஓர் பெருங் கலகத்தைப் பற்றியே மேஷ்டி நூல் விரித்துக் கூறுகின்றது. பெங்காளத்தில் 1774-5 வருஷத்தில் பெரும் பஞ்சம் உண்டாயிற்று. அதற்கப்பால் அனேக ஆயிரம் சந்நியாசிகள் ஒன்றாய்க் கூடி அந்நியர்களைத் தமது தாய்ப் பூமியிலிருந்து ஒழித்துவிடவேண்டுமென்னும் ஒரே நோக்கத்துடன் கலகஞ் செய்யத் தொடங்கினார்கள்.

"இவர்கள் ரகசியமாகச் சந்திக்கும் பொருட்டு ஆள் நுழையக்கூடாத கருங்காட்டில் ஆனந்த மடம் என்பதோர் இடம் வைத்திருந்தார்கள் இவர்கள் மகமதியப் படைகளைப் பல இடங்களில் தோல்வியுறச் செய்ததுமன்றி ஓர் ஆங்கிலேயப் பட்டாளத்தையும் முறியடித்தார்கள். எனினும், பிரிட்டிஷார் விடாமல் தாக்கியதன்பேரில் இந்த வீர சந்நியாசிக் கூட்டத்தார் கடைசியாகப் பிரிந்து போயினர். இந்த வீரத் துறவிகளில் ஒருவராகிய பவாநந்தர் வந்தேமாதரம் என்ற ஆரம்பங் கொண்ட அரிய கீதத்தைப் பாடியதாகப் பங்கிம் புலவர் தமது நூலில் அமைத்திருக்கிறார்.

"25 வருஷங்களுக்குமுன் இவர் இந்தப் பெரு நூலைப் பிரசுரித்தபோது அந்தக் கீதத்தின்கண்ணே பெரும் பகுதி சம்ஸ்கிருதமாகவே யிருந்தபடியால், அவருடைய நேயர்கள் பலர் அதைக் குறை கூறினார்கள். ஆனால், அம்மகான் அவர்களுடைய அபிப்பிராயத்தைப் பொருட்டாக்கவில்லை. எழுதி 25 வருஷங்களுக்குள்ளாக மேற்படி திவ்ய கீதம் பெங்காளத்து ஜனங்கள் எல்லோருடைய நாவிலுமிருக்கு மென்பதை அந்தக் கவியரசர் அறிந்திருந்தார் போலும். அதிலிருக்கும் சம்ஸ்கிருதம்

வெகு எளிதாயிருப்பதால் எந்தப் பெங்காளிக்கும் வெகு சுலபமாகப் பொருள் விளங்கி விடும். அதுவுமின்றி அந்தக் கீதமானது பழமையில் முன்னோர்களால் வழங்கப்பட்டு வந்ததும் ஒப்பற்றதுமான சம்ஸ்கிருத பாஷையோடு தற்காலப் பாஷை கலப்புற்று அமைக்கப் பெற்றிருப்பதால் பூர்வ காலத்துடன் தற்காலத்தை இணைப்பதாக இருக்கின்றது. தாய்த் தேசத்தை அந்தப் பாடலில் தாயென்று வழங்கியிருப்பது மிகவும் பொருத்தமுடைத்தே.

பலரால் இக்கீதத்திற்கு எழுதப்பட்டிருக்கும் இங்கிலீஷ் மொழிபெயர்ப்பானது பெங்காளி கீதத்திலிருந்து சில இடங்களில் மாறுபடுகின்றது. அவ்வாறு மாறுபட்ட இடங்களில் என்னால் கூடிய அளவு பெங்காளிச் சொற்களை அநுசரித்தே தமிழ் மொழிபெயர்ப் பெழுதி யிருக்கிறேன். எனது தமிழ் எத்தனை குறைவு பட்டிருந்த போதிலும் தெய்வப் புலவராகிய பங்கிம்பாபுவின் மதிப்பைக் கருதித் தமிழுலகத்தார் இதனை நன்கு ஆதரிப்பார்களென்று நம்புகிறேன.

வந்தே மாதரம்,

இதைத்தவிர, ''இந்தியா'' பத்திரிகையோடு பாரதி தொடர்பு கொண்டபோதும், ''வந்தேமாதர'' கீதம் 20-10-1906ஆம் தேதிய இதழில் வெளியிடப்பட்டிருக்கின்றது.

பாடலை வெளியிட்டுப் பின்கண்ட குறிப்பு ஒன்றையும் 'இந்தியா' இதழ் தந்துள்ளது:

'இந்த வருஷம் தீபாவளியின்போது சென்னையில் பல இடங்களிலும் வந்தேமாதர கீதம் பாடப்பெறுவது கேட்டு மிகவும் ஆனந்த மடைந்தோம். அந்தக் கீத முழுதை கீழே தமிழ் லிபியில் பதிப்பித்திருப்பது நேயர்களுக்கு மகிழ்ச்சி தருமென்று நம்புகிறோம். ஸ்ரீ ஸி. சுப்பரமணிய பாரதியார் எழுதியிருக்கும் மொழிபெயர்ப்புச் செய்யுளையும் அத்துடன் சேர்த்திருக்கிறோம்'.

ஜன்மபூமி, நாட்டுப்பாட்டு - ஆகிய நூல் தொகுதிகளி லும் இப்பாடல் இடம் பெற்றுள்ளது.

**10. வேல்ஸ் இளவரசருக்கு .... நல்வரவு (பக். 21)**

பின்னர் ஐந்தாம் ஜார்ஜ் சக்கரவர்த்தியாகப் பட்டம் சூட்டிக்கொண்டவர்தான் இந்த வேல்ஸ் இளவரசர். அவரை வரவேற்றே பாரதியார் "வருக செல்வ" என்று தொடங்கும் பாடலைப் புனைந்தார்.

"சுதேசமித்திரன்" இதழில் துணையாசிரியராகப் பணியாற் றிக் கொண்டே, பாரதியார் "சக்கரவர்த்தினி" என்ற மாத இதழின் ஆசிரியர் பொறுப்பையும் ஏற்றிருந்தார். இந்தப் பத்திரிகையிலும் வேல்ஸ் இளவரசரும் இளவரசியும் சென்னை வந்தபோது செய்திகள் வெளியிட்டுத் தலையங்கமும் எழுதினார்

மற்றும், "பாடல்கள்" என்று தலைப்பிட்டு எழுதியுள்ள பகுதி வருமாறு:-

"இளவரசர் வரவைப்பற்றி அநேகர்களால் இனிய பாடல் கள் பாடப்பட்டுள்ளன. பூவை. ஸ்ரீ கலியாண சுந்தர முதலியார், பண்டித வெங்கட்டராமையங்கார், இப் பத்திரிகை ஆசிரியர் முதலிய அநேகர் செய்யுளெழுதியிருக்கிறார்கள்."

இவ்வாறு குறிப்புத் தந்த பாரதியார், "இவை யனைத் தினும் பண்டிதை அசலாம்பிகை எழுதியிருக்கும் பாடல் எளி தாயும் சுவையுடைத்தாயு மிருப்பது பற்றியும், பெண்மணி எழுதியிருக்கும் சிறப்புப் பற்றியும் அதனைப் பதிப்பிக் கின்றோம்" என்றெழுதி, பண்டிதை அசலாம்பிகையம்மை இயற்றிய பாடலைத் தனியே வெளியிட்டுள்ளார்.

வேல்ஸ் இளவரசர் வந்ததன் அறிகுறியாகத்தான் சென்னை "பிளாக் டவுன்" என்று பெயர்கொண்ட பகுதிக்கு "ஜார்ஜ் டவுன்" என்ற பெயர் சூட்டப்பட்டது. இப்பெயர் மாற்றத் தையும் பாரதியார் வரவேற்று," 'பிளாக் டவுன்' என்பது 'கரும் பட்டணம்' என்ற பொருள் கொண்டது. இந்தியரின்

நிறத்தைக் குறிப்பிட்டு ஆங்கிலேயர் முற்காலத்தில் இவ்விழி சொல்லை வழங்கிவந்தனர். "ஜார்ஜ்" என்ற இளவரசர் பெயரையொட்டி ஏற்பட்டிருக்கும் இப்புதுப்பெயர் எல்லோருக்கும் மகிழ்ச்சி விளைக்கத்தக்கது" என்றும், 'பொதுவர்த்தமானங்கள்' பகுதியில் குறிப்பிட்டுள்ளார்.

1906 ஜனவரி மாத இதழில் எழுதிய தலையங்கத்தின் ஒரு பகுதியை இங்கே காணலாம்:

**சென்னையில் ராஜதம்பதிகள் வரவு**

வேல்ஸ் இளவரசரும் இளவரசியாரும் ஜனவரி 24உ சென்னையில் வந்திறங்கினர். சென்னை நகரமும் அவர்கள் பார்வையிட்டு வந்த மற்றெல்லா இந்திய நகரங்களையு மொப்ப ராஜதம்பதிகளை மிகவும் மகிழ்ச்சியுடன் வரவேற்றுச் சிறப்புச் செய்தது. நவம்பர் மாதம் நாம் ராஜதம்பதிகளைப்பற்றி* எழுதிய காலத்தில் வேல்ஸ் இளவரசியாரின் ஞாபகச் சின்னமாக இந்நகரத்திற் கோர் மாதர் ஹைஸ்கூல் ஏற்படுதல் தகுமென்று அறிவித்திருந்தோம். அவ்விருப்பம் நிறைவேறாமற் போய்விட்டது. என்றாலும் ராஜா ஸர். ஸவலை ராமசாமி முதலியார் சில வருஷங்களின் முன்பு மகாராணியாரின் ஞாபகச் சின்னமாக ஓர் மாதர் ஹைஸ்கூல் ஸ்தாபிக்கப் போவதாக வாக்களித்திருந்ததை சமீபத்தில் நிறைவேற்றப் போவதாக இரண்டு வாரங்களின் முன்பு பத்திரிகைகளில் உறுதி கூறினது நமது மனதிற்கு மிகவும் இன்பமளிக்கின்றது.

ராஜதம்பதிகளின் வரவு பற்றிய விசேஷங்களனைத்தும் மற்றோரிடத்தில் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இங்கு வேல்ஸ் இளவரசியாரைப் பற்றி மட்டிலும் சுருக்கமாக ஓரிரண்டு விஷயங்கள் எழுதிவிட்டு இக் குறிப்பை முடித்து விடுகின்றோம். இளவரசியார் பூமண்டலத்தில் ஐந்திலொரு பகுதிக்குக்

.....................................

*நவம்பர் மாத இதழ் எவ்வளவு முயன்று தேடியும் கிடைக்கவில்லை. அதனால், அவ்விதழில் ராஜதம்பதிகளைக் குறித்து எழுதிய செய்தியை அறிய இயலவில்லை.

கர்த்தருடைய பட்டத்து குமாரன் மனைவியாயிருந்த போதிலும், அவர் ஆடையிலும், தோற்றத்திலும் சிறிதேனும் ஆடம்பரமின்றி விளங்கியதை நமது நாட்டு மாதர் நன்கு கவனிக்க வேண்டும். சொற்பத் திரவியமுள்ள குடும்பத்தில் பிறந்தோருங்கூட இத் தேசத்தில் நகைப் பைத்தியங் கொண்டலைகிறார்கள். வயிற்றிலே சோறில்லா விட்டாலும் நமது ஸ்திரீகளுக்குக் காதிலே வயிரக்கம்மல் வெகு அவசிய மென்று தோன்றுகிறது அப்படி யிருக்கச் சக்ரேசுரனுடைய மருமகளாகிய இளவரசி விசேஷ ஆபரணங்களெவையு மின்றி வெகு சாதாரணமாகத் திகழ்ந்தமை பார்ப்பதற்கு வெகு ஆச்சரியமாக இருந்தது.

## 11. மஹாமஹோபாத்தியாய சாமிநாதய்யர் [பக். 23]

*1906* ஆம் ஆண்டில் புத்தாண்டு விருதாகத் "தமிழ்த் தாத்தா" என்று எல்லோராலும் பாராட்டப்பெறும் உ. வே. சாமிநாத ஐயர் அவர்களுக்கு மஹாமஹோபாத்தியாயப் பட்டம் அளித்துப் பிரிட்டிஷ் அரசு பெருமைப்படுத்தியது. அப்பொழுது பாரதியார் ஐயரின தமிழ்த் தொண்டைப் பெரிதும் பாராட்டிப் பாடல் ஒன்றை இயற்றினார். அதுவும், தம்முடைய இளமைக்கால நண்பர் நாவலர் திரு. சோமசுந்தர பாரதியாரின் வேண்டுகோட்கிணங்கிப் பாடினார், பாரதி. இச் செய்தியை நாவலர் ச. சோமசுந்தர பாரதியார் அவர்கள் *1922*இல் வெளியான 'சுதேசகீதங்கள் - முதற்பாகம்' நூலில் குறிப்பிட்டுள்ளார்:

"மகா மகோபாத்தியாய சாமிநாத ஐயரவர்களுக்கு அப் பட்டம் கிடைத்ததற்காக விழவெடுத்த சென்னைச் சபையொன்றில் என் வேண்டுகோளுக்காக, இவர் உடன் பாடிப் படித்த மறக்கொணாக் கவிகளின் கருத்துக்களைக் கொண்டே இவரைத் தமிழகம் அநாதரவு செய்தது இவர்க்குக குறையுமில்லை, தமிழர்க்குப் புதுமையுமில்லை யென்று சமாதானப் படுத்திக் கொள்கிறேன்." ஐயரவர்கள் பணியாற்றிய மாநிலக் கல்லூரி

யில் அவரைப் பாராட்டிப் பாரதியார் பேசினார். அதனைப் பாரதியாரே வெளியிட்டுள்ளார்.

பலவகைத் தானங்களிலே நல்லறிவுத் தானமே விசேஷ முடையதென்று மேலோர் சொல்வார்கள். அழிந்துபோன ஆலயங்களை மறுபடி புதுக்கிக் கட்டிப் பிரதிஷ்டை புரிந்தோர், நெடுங்காலமாக நின்றுபோன அன்னசத்திரங்களுக்கு மறுபடியும் உயிரளிப்போர், வறண்டு மண்ணேறிப் போய்க்கிடக்கும் தடாகங்களை மறுபடி வெட்டி நலம்புரிவோர் என்னும் பல வகையாரினும், மங்கி மறைந்துபோய்க் கிடக்கும் புராதனப் பெருங் காவியங்களைப் பெரு முயற்சிசெய்து திரும்ப உலகத்துக்கு அளிக்கும் பெரியோர்கள் புண்ணியத்திற் குறைந்தவர்களல்லர். மேலும், புகழ் நிலைக்குந் தன்மையில் மற்றெல்லோரைக் காட்டிலும், இவரே சிறந்தவராவர்.

பிரமஸ்ரீ உ. வே. சாமிநாத ஐயர் மேற்கூறப்பட்ட பெருந் தருமத்தை நன்கு புரிந்தவர். சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை முதலிய பழந்தமிழ் நூல்களை இன்று நம்மவர் கற்றுக் களிப்பது சாமிநாத ஐயருடைய கருணை மிகுதியாலல்லவோ? இவருக்கு கவர்ன்மெண்டார் "மஹா மஹோபாத்தியாய"ப் பட்டம் கொடுத்துப் பெருமைப்படுத்தியது மிகவும் பொருத்தமுடைய விஷயமே. இன்னும் நெடுங்காலம் இம் மஹா மஹோபாத்தியாயர் சீரும் சிறப்பும் பெற்று, தமிழுலகத்தாருக்கு இனியன புரிந்து வாழவேண்டு மென்பதே எமது விருப்பம்.

## 15. அபேதாநந்த ஸ்வாமிகள்மீது ஸ்தோத்திரக் கவிகள் [பக். 30]

ஸ்வாமி அபேதாநந்தரைப் பற்றிய கட்டுரையொன்று

27-7-1906 "இந்தியா" இதழில் வெளிவந்தது. அதிலிருந்து ஒருசில பகுதிகள் இங்கே தரப்பெறுகின்றன.

பரதநாட்டு மகரிஷிகளில் ஒருவரும் ஜகத் பிரஸித்தருமாகிய ஸ்வாமி விவேகாநந்த பரமஹம்ஸரது ஸஹபாடியும், ஸ்ரீமத் ராமகிருஷ்ண பரப்ரஹ்மத்தின் சிஷ்யருமான அபேதாநந்தர் பல வருஷ காலமாக ஐரோப்பா, அமெரிக்கா முதலிய இடங்களில் மண்ணாசையிலும், பொன்னாசையிலும் அமிழ்ந்திக் கிடக்கும் மனிதர்களிடம் "வேதாந்த" மார்க்கம் உபதேசித்து அவர்களுடைய இரும்பு நெஞ்சுகூட ஞானத்தீயில் இளகுமாறு செய்வித்துப் பெருங்கீர்த்தி பெற்று விட்டு, இப்போது தமது தாய் நாட்டிற்கு மீண்டும் வந்திருக்கிறார்.

...இவரும் இவரது கூட்டாளிகளும் கடல்மீது எத்தனையோ ஆயிரம் காதம் கடந்துபோய் இத்தேசத்தின் பெயர் கேட்டவுடனே அன்னியர்கள் முடிவணங்குமாறு செய்யும் நன்மைக்கு நம்மவர்களால் என்ன கைம்மாறு செய்யமுடியும்? இந்த மஹான்கள்தாம் என்ன கைம்மாறை எதிர் பார்க்கிறார்கள்? யாதொரு பற்றுமில்லாமல், இரந்து உண்பவர்களாய் உலகத்தாரின் ஞான விழிக்கேற்பட்டிருக்கும் மாயையாகிய, குருட்டுத்தன்மையை நீக்கி, ஒளியளிக்க வேண்டுவதே கடமையாகக் கொண்டு நாள் கழித்து வரும் இப்பெரியோர்களுக் உலகம் அளக்கத் தகாதவாறு கடமைப்பட்டிருக்கிறது. ஆத்மாவே உண்மையென்றும் அதனை மறைத்து நிற்கும் மற்றத் தோற்றங்களெல்லாம் வெறும் மயக்கமேயென்றும் போதனை செய்யத் தலைப்பட்டிருக்கும் அபேதாநந்த ஸ்வாமிகள், அந்தப் பாரமார்த்திக நிலைமை அறியாமல் வியாவஹாரிக நிலையிலே உழலும் நம்மவர்களுக்குக்கூட மிகவும் பயன்படத்தக்க சில ஹிதோபதேசங்கள் தந்திருக்கின்றார்....

அபேதாநந்தருக்கும் அவர் போன்ற ஞானிகளுக்கும் நாம் பெரிய உபசரணைகள் நடத்துவதால் மட்டும் அவர்களது பிரீதிக்குள்ளாய் விடமாட்டோம். பல்லக்குகள், புஷ்பஹாரங்கள்

என்பவற்றைக் கொண்டு ஒரு ஞானியின் கிருபையைச் சம்பாத்தியம் செய்து விடுவதென்றால், அது எளிதான காரியமா? அவர்களது உபதேசத்தின் உண்மையைக் கிரகித்து, நம்மால் இயன்ற மட்டும் அதன்படி நடக்க முயல்வதே நாம் அவர்களுக்குச் செய்யக்கூடிய கடமையாகும்.

...இத்தகைய மஹான்கள் இந்நாட்டிலே தோன்றி வருவார்களானால், ஆரிய பூமியானது மறுபடியும் புராதன காலத்துப் பெருமையைக் காட்டிலும் மேற்பட்ட பெருமைக்கு வந்துவிடும்

## 18. ரவிவர்மா ............ [பக். 34]

ஓவியக் கலைஞர் ரவிவர்மா அவர்கள் 2-10-1906இல் மரணமடைந்தபோது, மகாகவி பாரதியார் தமது இந்தியா 6-10-1906 இதழில் 'Topics of the week' (வார வர்த்தமானச் செய்திகள்) என்ற தலைப்பில் எழுதிய பகுதி வருமாறு:-

### A Genius Dead
### ஓர் வரப்பிரசாதியின் மரணம்

"இந்த வாரம் செவ்வாய்க்கிழமை மாலை திருவாங்கூரில் உள்ள கிளியனூர் என்ற விடத்தில் ராஜா ரவிவர்மா இறந்து போய்விட்டார்.

இந்தியா முழுமையிலு முள்ள ராஜ மாளிகைகளிலும், ஏழைக் குடில்களிலும் தமது இனிய சித்திரங்களை அனைவரும் கண்டு தமது பேரை எந்நாளும் நினைத்திருக்குமாறு புரிந்து விட்டு, இம்மஹான் நம்மைப் பிரிந்து போயினர். திருவாங்கூர் ராணிகளின் பாட்டனாராகிய ரவிவர்மா தமக்கு ராஜகுல சம்பந்தத்தா லேற்படக்கூடிய மதிப்பைச் சிறிதேனும் கணியாமல், எந்நாளும் அழியாத புகழ் தேடுதற்குரிய முயற்சி புரிய வேண்டுமென்று இளமை முதலாகவே ஆசை கொள்வராயினார். அநேக சித்திரக் காக்ஷிகளில் பரிசுபெற்றும் கவர்னர்கள் முதலிய

பெரிய உத்தியோகஸ்தர்களாலும், ராஜாக்களாலும் நன்கு மதிக்கப்பட்டும் வயதேற வயதேற, இவரது புகழ் வளர்ச்சி பெற்றுக் கொண்டு வந்தது. அவர் இந்தியா முழுதும் யாத்திரை புரியத் தொடங்கிய, பல வேறிடங்களிலுள்ள ஆண் - பெண்களின் உருவ வேறுபாடுகளையும், ஆடை வேறுபாடுகள் முதலியவற்றையும் நன்கு பயின்று வந்து இப்பொழுது உலகத்தாரெல்லாம் வந்து பெருமூச்செறியும் தன்மையவாகிய பௌராணிகச் சித்திரங்களெழுதத் தொடங்கினார். நமது தேசத்தின் அரிய கலைகள் நன்கு பராமரிப்பாரின்றி ஒளிகுன்றி யிருந்த இக்காலத்தில் ரவிவர்மா தோன்றி, தமது நிகரற்ற சித்திர லேகனத் திறமையால் நமது நாட்டிற்கே ஓர் பூஷணமாக விளங்கினார்.

இங்கிலாந்து, பிரான்ஸ் முதலிய சுயாதீன தேசங்களிலே இவர் வாழ்ந்திருப்பாராயின், ராஜாங்கத்தார் இவருக்கு உயர்ந்த பேரும், பட்டமும், காணியாட்சியும் கொடுத்து பக்ஷித்திருப்பார்கள். இந்தியா கவர்ன்மெண்டார் இவருக்கு எவ்விதமான உயர்ந்த மதிப்புகளும் செய்யத் தவறி விட்டார்கள். ஆனால், அரசர்களால் கொடுக்கப்படும் டம்பப் பட்டங்களும் சன்மானங்களும் இவர் போன்ற மஹானுக் கவசியமா? சூரியனுக்கு வர்ணம் பூச வேண்டுமா? அரசர்களின் கீர்த்தியெல்லாம் - புகழெல்லாம் இன்றிருந்து நாளை மங்கிப்போய் விடும். இவரோ உடல் மறைந்து விட்ட போதிலும், இறத்தலில்லாத அமரர்களின் கூட்டத்தைச் சேர்ந்தவர். இறக்கும் பொழுது இம்மஹானுக்கு வயது 61.

இவரது குமாரருக்கும் மற்றுமுள்ள பந்து மித்திரர்களுக்கும் நாம் மிகுந்த அனுதாப மறிவிக்கிறோம். இவரது குமாரரும் இவர் குடும்பத்தைச் சேர்ந்த வேறுசில வாலிபர்களும் சித்திரமெழுதும் தொழிலிலே திறமை காண்பித்து வருகிறார்கள் என்று கேட்க ஒருவாறு திருப்தி யெய்துகின்றோம்."

இவ்வாறாகத் தம் எண்ணங்களை எழுத்தில் தீட்டிய பின்னர்க் கவிதையிலும் வடிக்கிறார், பாரதி.

## 19. சத்ரபதி சிவாஜி ............ [பக். 36]

### சிவாஜியின் படையழைப்பு

சத்திரபதி சிவாஜி மகாராஜாவின் விழாவைக் கொண்டாடுவதன் மூலம், மகாராஷ்டிர மக்கள் மத்தியில் தேசியத்தைப் பரப்பும் திருப்பணியை மேற்கொண்டார் பாலகங்காதர திலகர். மகாகவி பாரதியும் திலகரையே தம் அரசியல் குருவாக ஏற்றுக் கொண்டிருந்த காரணத்தால், நாடெங்கும் சிவாஜி விழாக் கொண்டாடப்படவேண்டும் என்று எழுதினார்; சிவாஜி திருநாள் கொண்டாட்டங்களில் கலந்து கொண்டும் உரையாற்றினார்.

23-6-1906ஆம் தேதிய இந்தியா இதழில் 'சிவாஜி மகோத்ஸவத்தால் நாம் அறிவது என்ன?' என்ற கட்டுரை வெளிவந்துள்ளது. அதில் ''சிவாஜியும் ராஜதந்திரத்தை உத்தேசித்தோ அல்லது ராஜாங்கக் கொடுமையைத் தீர்க்க வேண்டுமென்ற எண்ணத்தாலோ மகம்மதிய ராஜாங்கத்தை விரோதித் தெழுந்து அவர்களைக் கண்டனஞ் செய்தது யாவரும் ஒத்துக்கொள்ளத் தக்கதே. மகம்மதியர்களும் இந்நாட்டில் கால் வைத்தது முதல் கோவிலிடித்ததும், ஜனங்களைத் துன்பப்படுத்தினதும் சரித்திரமே கூறுகிறது. ஆகையால், ஏதோ சமயம் வாய்த்தபடி இருபுறத்தாரும் தப்பிதம் செய்திருக்கலாம். ஆனால் மகம்மதியர்கள் தங்கள் நாட்டை விட்டு இதையே சுயநாடாக எப்போது அடைந்தார்களோ அதுமுதல், அவர்களுக்கும் நமக்கும் ஒருவித சம்பந்தம் ஏற்பட்டு விட்டது. நாமும் அவர்கள் பேரில் பூர்விக குற்றங்களை எடுத்துரைத்தல் தப்பிதம். அவர்களும் நம்மை உடன் பிறந்தவரெனப் பாவித்து நடக்க வேண்டும். நமக்குள்ளே எவ்வளவு சச்சரவுகள் நேர்ந்தபோதிலும், நம்மைப் பிரித்து அரசாள எண்ணங் கொண்டுள்ள ஐரோப்பியரின் எண்ணத்தைக் குலைப்பதே நமது முதல் கடமை'' என்று எழுதப்பட்டுள்ள திருவாசகங்கள் நினைவுகூரத்தக்கன.

இந்து - மகமதிய என்ற இந்த இரண்டு ஜாதியாருக்குள்ளே சிநேக உணர்ச்சியும், சகோதரப்பான்மையும் நிலவ வேண்டும்

என்பதையே பாரதியார் கொண்டிருந்தார். இந்தக் கருத்தைத் தாம் புனைந்த "சிவாஜி தனது சைநியத்தாரிடம் கூறியது" என்ற பாடல் குறிப்பிலும் வலியுறுத்தியுள்ளார். அப்பகுதி வருமாறு:

"மற்றொரு பக்கத்தில் சிவாஜி மகாராஜா தமது படைகளை நோக்கிக் கூறியதாகக் கற்பனை புரிந்து ஒரு செய்யுள் பிரசுரமடைந்திருக்கிறது. சரித்திர சம்பந்தமான செய்யுட்கள் புனைவதில் இக்காலத்துத் தமிழர்கள் சாதாரணமாகப் பிரவேசிப்பதில்லை. எனினும், சுதேசப்பற்று மிகுதிப்படுவதற்கு மேற் கூறிய விதமான செய்யுட்கள் மிகவும் அவசியமானவை. இந்த செய்யுளிலே நமது மகமதிய சகோதரர்களுக்கு விரோதமாகச் சில வசனங்கள் பிரயோகிக்க நேர்ந்திருப்பது பற்றி விசனமடைகிறோம். இக்காலத்து மகமதியர்கள் பாரத பூமியின சொந்தப் புத்திரர்கள் என்பதையும், ஹிந்துக்களும் மகமதியர்களும் ஒரு தாய் வயிற்றுக் குழந்தைகள் போல நடந்துகொள்ள வேண்டுமென்பதையும் பலமுறை வற்புறுத்தியிருக்கிறோம். என்ற போதிலும், சிவாஜி மகாராஜா காலத்தில், ஹிந்துக்களுக்கும் மகமதியர்களுக்கும் விரோதமிருந்தபடியால் அவர்களைப்பற்றி, மஹாராஜா சிவாஜி சில கோபமான வார்த்தைகள் சொல்லியிருப்பது வியப்பாக மாட்டாது. ஷை செய்யுளிலே மகமதியர்களைப்பற்றி வந்திருக்கும் பிரஸ்தாபங்களில் வீரரஸத்தை மட்டும் கவனிக்கவேண்டுமே யல்லாமல், மகமதிய நண்பர்கள் தமது விஷயத்தில் உதாஸீனம் இருப்பதாக நினைக்கக் கூடாதென்று கேட்டுக் கொள்கிறோம். இந்தச் செய்யுள் முடிந்தவுடன் புஸ்தக ரூபமாய் வெளியிடக் கருதியிருக்கின்றோம்".

இவ்வாறான குறிப்பொன்றை ஆறாம் பக்கத்தில் வெளியிடச்செய்த பாரதி, சிவாஜியின் திருவுருவப் படத்தையும் வெளியிட்டு, ஏழாம் பக்கத்தில் **Shivajee's address to his Army** என்ற ஆங்கிலத் தலைப்பின் கீழே "சிவாஜி தனது சைநியத்தா

ருக்குக் கூறியது' என்று தமிழிலேதந்து, கவிதையை ஆரம்பிக் கிறார்.

இந்தச் செய்புள் இந்தியா இதழில் 17-11-1906இல் தொடங்கி, 8-12-190 இல் முற்றுப் பெறாமல் முடிக்கப் பட் டுள்ளது நான்காவது வாரத்தில், அதாவது 8-12-1906 தேதி யிட்ட இதழில், ஏழாம்பக்கத்தில்

## Shivaji's address
## சிவாஜியின் படையழைப்பு

என்ற சிறு தலைப்பில் பின்கண்ட செய்தி காணப்படுகிறது

"சிவாஜி தனது சைநியத்தாருக்குக் கூறியது' என்ற தலைப் பின் கீழ் சென்ற 4 வாரங்களாக இப்பத்திரிகையிலே எழுதிவரப் பட்ட அகவற்பாவின் தொடர்ச்சி அடுத்தமுறை பிரசுரிக்கப்பட மாட்டாது. ஆசிரியரின் நண்பர்கள் சிலர் அதனை ஓர் புத்தக ரூபமாக வெளியிட வேண்டுமென்று விரும்பிக் கொண்டபடி யால், அதற்கிணங்க - இன்னும் பின்னுள்ள தொடர்ச்சியையும் சேர்த்து முழுப் புத்தகமாகப் பிரசுரம் செய்யப்படும். இதிலே அரும்பதவுரை, முகவுரை, சிவாஜி மகாராஜாவின் சரித்திரம் சிவாஜியின் சித்திரம் என்ற பல புதுமைகள் சேர்த்து மிகவும் உயர்ந்த கிளேஸ் (பளபளப்புக்) காகிதத்திலே அமெரிகா தேசத் துக் கவிப் புத்தகங்களின் மாதிரியாக அச்சிடப்பெற்று வரு கின்றது. இம்மாதக் கடைசிக்குள் வெளியாகிவிடும்.

இதன் விலை அணா 6. 'இந்தியா' பத்திரிகையின் சந்தா தாரர்களுக்கு மாத்திரம் குறைந்த விலையாக 4 அணாவுக்குக் கொடுக்கப்படும். குறைந்த தொகையுள்ள பிரதிகளே அச்சிடப் பெறுவதால், வேண்டுவோர் 'இந்தியா' பத்திரிகை மானேஜ ருக்கு எழுதித் தெரிவித்துக் கொள்ள வேண்டும்."

இந்தச் செய்திக் குறிப்பில் கண்டுள்ளபடி, புத்தகம் டிசம்பர் மாத இறுதிக்குள் வெளிவரவில்லை. ஆனால், 9-2-1907 தேதி யிட்ட இதழில், மீளவும் விளம்பரம் ஒன்று வெளியாகிறது:

## Shivajee's Address to his Army
## By
## Mr.C. Subramania Bharati

### சிவாஜியின் படையழைப்பு

**To be published by the 15th February**

பெப்ருவரி மாதம் 15ஆம் தேதிக்குள் வெளியாகிவிடும்.

ஸ்ரீ C. சுப்பிரமணிய பாரதியால் இயற்றப்பட்டது.

(1) இந்து சிவாஜி மகாராஜா தனது விரோதிகளைப் போர்செய் தழிக்கும்படி தனது படைகளைத் தூண்டுமாறு கூறியதாக வரையப்பட்டுளது.

(2) மிகுந்த வீரரஸம் பொருந்தியது.

(3) தக்க பண்டிதர்களால் வியந்து கூறப்பட்டுள்ளது.

(4) பாரத நாட்டின் புராதன மாண்பையும், வீரத் தன்மையையும் மதிப்போர் அனைவராலும் அவசியம் படிக்கத்தக்கது.

(சிவாஜியின் சித்திரம், சரித்திரம், முகவுரை, அரும்பதவுரை முதலியவை சகிதமாகப் பிரசுரிக்கப்படும்) விலை அணா 8.

'இந்தியா' என்னும் வாராந்தர தமிழ்ப் பத்திரிகையின் சந்தாதாரர்களுக்கு மாத்திரம் விலை அணா 6.

வேண்டியவர்கள் உடனே சென்னை ஜார்ஜ்டவுன் ப்ராட்வே இந்தியா ஆபீசு மானேஜருக்கு எழுதிக்கொள்ள வேண்டும்.

இந்த விளம்பரத்தில் அறிவித்ததுபோல் நூல் வெளிவந்ததாகச் செய்தி இல்லை. எனவே, மிகவும் வீரரசம் பொருந்திய, பண்டிதர்களால் வியந்து கூறப்பட்ட, பாரத நாட்டின் புராதன

மாண்பை விளக்கிய சிவாஜி பாடல் முற்றுப் பெறாமல் குறை நிலையிலேயே கிடைத்துள்ளது. ஆயினும், நூல் அச்சாகி வந்த நிலையில் இடையே முயற்சி நின்றிருக்க வேண்டும்.

இச்செய்யுளை 1937ஆம் வருடப் பதிப்பு 'காவியங்கள்' என்ற நூலில் சேர்த்துள்ள பாரதி பிரசுராலயத்தார் "இது அச்சுப்பிரதி ஒன்றிலிருந்து பதிப்பிக்கப் பட்டிருக்கிறது; நூலின் போக்கைப் பார்க்குமிடத்து, இது பூர்த்தியாகவில்லை யென்றும், கடைசியில் இன்னும் சில வரிகள் இருந்திருக்கலாமோ என்றும் சந்தேகப்பட வேண்டியிருக்கிறது" என்றும் அடிக்குறிப்புத் தந்துள்ளனர்.

நூலாக வெளிவாராமைக்கு நண்பர்களின் தடையே காரணம் என்று பாரதியாரின் நண்பர் திரு. எஸ். ஜி. இராமானுசலு நாயுடுவின் கட்டுரையிலிருந்து உய்த்துணர முடிகிறது. 1928இல் அவர் எழுதிய ஒரு தொடர்கட்டுரையில் பாரதியைக் குறிக்குமிடத்தில், "சிவாஜி தன் சைன்யத்தாருக்குக் கூறியது என்று அகவல் ரூபமாய் 'பாஞ்சாலி சபதம்' போல் பெருங் காவியமாகத் தொடர்ச்சியாய் பத்திரிகையில் எழுதி வந்தார். அது முற்றும் வீரரஸமாய் இருந்தது. அதனைத் தனிப் புஸ்தக உருவமாய் வெளியிடுவதற்குப் பாரதியார் விரும்பினார். அது ஆபத்தென இவரது நண்பர்களால் தடுக்கப்பட்டது" என்று குறிப்பிட்டுள்ளார்.

## 20. ஸ்ரீ சுப்பராம தீக்ஷிதர் .... [பக். 45]

இளசையின் கலைவிளக்காகத் திகழ்ந்த இசைவாணர் சுப்பராம தீக்ஷிதர் மறைவை ஒட்டி 1-12-1906 'இந்தியா' பத்திரிகையில் கையறுநிலைப் பாடல் வரைந்த பாரதியார், 24-11-1906இல் சிறப்புச் செய்திகளையும் வெளியிட்டுள்ளார். அதன் முழு வடிவம் வருமாறு:

"நெடுங்காலம் அன்னிய ஆட்சி, வறுமை மிகுதி முதலிய

காரணங்களால் நமது தேசத்திலே சங்கீதம், சிற்பம், கவிதை முதலிய அருங்கலைகள் மிகவும் மலினமாய்விட்டன. பாலை வனத்திடையே இருக்கும் நீர்ச்சுனை போல இக்காலத்திலே எட்டயபுரம் சுப்பராம தீக்ஷிதர் ஒருவர் இருந்தார். இவர் மரணமடைந்த விஷயம் கேள்விப்பட்டவுடனே எமது நெஞ்சம் ஆறாத்துயரடைந்தது. இவரது மரணம் தேசப் பொதுமைக்கு ஒரு பெரு நஷ்டமாகப் பாராட்டத்தக்க தாகும். இவர் வாழ்ந்த இடமாகிய எட்டயபுரத்திலிருந்து நமக்கு ஒருவர் பின்வருமாறு எழுதுகின்றார்:

சென்ற நூற்றாண்டின் துவக்கத்தில் சங்கீத வித்தையில் தேவாம்சம் பெற்று விளங்கிய முத்துசாமி தீக்ஷிதர் அவர்களின் சகோதரர் பாலசாமி தீக்ஷிதர் அவர்களது குமாரரான பிரமஸ்ரீ சுப்பராம தீக்ஷிதர் தமது இளம் பிராயத்திலேயே சங்கீத வித்தையிலும், ஆந்திரபாஷையிலும் மிக்க தேர்ச்சி யடைந்து தமது சங்கீத சாஹித்திய வன்மையால் உலகத்தைப் பிரமிக்கும்படி செய்தனர். அக்காலத்திலுள்ள அறிவிற் சிறந்த முதியோர்க ளெல்லாம் முத்துசாமி தீக்ஷிதர் அவர்களது அவதார புருஷ ரென்று இவரைக் கொண்டாடுவ துண்டு. முதிர்ச்சி யடைந்த பின்னர் இவரால் செய்யப்பட் டிருக்கும் ராகமாலிகை தான வர்ணம் முதலிய எண்ணிறந்த சங்கீத சாஹித்யங்கள் இவரது பாண்டித்தியத்தையும் சங்கீதத்தின் மர்மங்களையும் நன்கு பகர் கின்றன. சங்கீத சாஹித்ய வன்மையில் இவருக்கு சமான மானவர் எக்காலத்திலு மொருவரு மிருந்திலரென வறிந்த காலஞ்சென்ற மிஸ்டர் ஏ. எம். சின்னஸ்வாமி முதலியார் எம். ஏ., அவர்கள், அக்காலத்தில் தன்னாற் (ஆங்கிலத்தில்) பிரசுரஞ் செய்யப்பட்ட "பிராசீன" கான விஷயமாக உதவி செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொண்ட பிரகாரம் சென்னைக்குச் சென்று அரிய உதவியும் செய்தனர். பண உதவியும் ஆதரிப்போரு மில்லாது ஷெ பிரசுரம் நின்றுபோகவே, எவ்விதத்திலும் சங்கீத மர்மங்களை வெளியிட வேண்டுமென்ப் பிரதிக்ஞை செய்துகொண்டு மேற்கண்ட இருவர்களும் மிக்க ஊக்கமெடுத்தனர். கடைசியாக எட்டயபுரம் ஜமீந்தார் அவர்

களது ஔதாரியத்தால் ஷை தீக்ஷிதர் அவர்கள் "சங்கீத சம்பிர தாய பிரதர்சினி' என ஓர் சங்கீத மர்மங்களடங்கிய அரிய புஸ்தகத்தை மூன்று வருஷங்களுக்கு முன்னர் வெளியிட்டனர். இப்புத்தகத்தின் முகவுரை ராய்பஹதூர் ஸி. நாகோஜிராயர் அவர்களால் எழுதப்பெற்றுள்ளது. ஆனரபில் ராய்பஹதூர் பி. அனந்தாசார்லு இப்புத்தகத்தை வித்யாநிதி யென்றும், ஹிஸ்ஹைனஸ் திருவாங்கூர் கேரளவர்மா அவர்கள் சங்கீத ரகஸ்ய கலாநிதி யென்றும், பம்பாய் மிஸ்டர் விஷ்ணு நாராயண பத்கண்டே அவர்கள் சங்கீத வித்யா சம்பூரணதையின் அழிவில்லாப் பொருளென்றும், சங்கீத மர்மங்களின் புதையல் (நிக்ஷேபம்) என்றும், காலஞ்சென்ற மைசூர் ஹைகோர்ட் ஜட்ஜி மீனாட்சியய்யர் அவர்கள் இதுசமயத்தில் இப்புத்தகம் வெளிக்கு வராவிடில் கர்நாடக சங்கீதமழிந்து விடுமென்றுங் கூறுகின்றனர். தங்களது பரம்பரையிலுள்ள மர்மங்களை ஜனோபகாரமாக வெளியிட்டதுபோல் தியாகராஜ அய்யர் அவர்கள், சாமா சாஸ் திரிகள் முதலியவர்களின் கிருதிகளையும் அச்சிட்டு வெளிப்படுத்த வேண்டிய முயற்சிகள் செய்துகொண்டிருக்கும்போது திடீரென ஹிருதய (Heart) நோயால் பீடிக்கப்பட்டு, தமது 68ஆவது பிராயத்தில் காலஞ்சென்றாரெனக் கேட்டு வருத்தமடைகிறோம். இவருக்கு ஒரு குமாரரும், ஒரு பெண்ணு மிருக்கின்றனர். அவர் கட்கு நமது அனுதாபத்தைத் தெரிவிக்கின்றோம்."

## 22. புது வருஷம் [பக். 50]

ஸ்வதேச கீதங்கள் முதற்பாகம் வெளியிட்டபோது (1908 இப்பாடல் அதில் இடம் பெற்றது. அதில் இதனை 'ஆசிரியப்பா' என யாப்பியல் வகைமையைப் பாரதி குறித் திருக்கிறார்.

புதுச்சேரியி லிருந்து வெளிவந்த தமது 'இந்தியா' இதழின் இரண்டாம் ஆண்டுத் துவக்கத்தில் 'நமது இரண்டா வது வருஷம்' என்ற தலையங்கத்தின் இறுதியில் இப்பாடல் மீண்டும் (16-10-1909) வெளிவந்தது.

## 23. வந்தே மாதரம் [பக். 31]

*18-5-1907 'இந்தியா' இதழில் வெளிவந்தபோது இராக, தாளக் குறிப்புகள் தரப்பெறவில்லை; பல்லவி, சரணங் களும் குறிக்கப் படவில்லை. 1907இலேயே தனிச் சிறு வெளி யீடாக இப்பாடல் வெளிவந்தபோது இராக, தாள, பல்லவி, சரணக் குறிப்புகளைப் பாரதி தந்திருக்கிறார்.*

மேலும், 'புல்லடிமைத் தொழில்' என்ற சரணத்தின் இடத்தில்,

> தேவிநம் பாரத பூமி - எங்கள்
> தீமைகள் யாவையும் தீர்த்தருள் செய்வாள்
> ஆவி யுடல்பொருள் மூன்றும் - அந்த
> அன்னைபொற் றாளினுக் கர்ப்பித மாக்கி'

என்ற சரணம் 1907இல் வெளிவந்த சிறுவெளியீட்டில் காணப் படுகிறது.

1908இல் வெளிவந்த ஸ்வதேச கீதங்கள (முதற்பாகம்) நூலில் 'இந்தியா'வில் வெளிவந்த வடிவமே காணப்படுகிறது. 1919இல் வெளியான 'நாட்டுப் பாட்டு'த் தொகுதியில் 1, 4, 5 ஆகிய சரணங்கள் மட்டுமே இடம்பெற்றுள்ளன.

## 24. நடிப்புச் சுதேசிகள் [பக். 53]

1-6-1907ஆம் தேதியிட்ட 'இந்தியா' இதழில் 10 கண்ணிகளும். 15-6-1907ஆம் தேதியிட்ட இதழில் 11 முதல் 18 வரையுமுள்ள கண்ணிகளும் வெளிவந்துள்ளன. 'இன்னும் வரும்' என்று பாரதியார் குறிப்புத் தந்திருந்தாலும், "ஸ்வதேச கீதங்கள்" (முதற்பாகம்-1908) நூலில் பதினெட்டுக் கண்ணி களே இடம்பெற்றுள்ளன.

1-6-1907ஆம் தேதியிட்ட இதழ் எம் பார்வைக்குக்

கிட்டவில்லை. எனவே, முதல் பத்துக் கண்ணிகளுக்கு நூலே அடிப்படை.

8-6-1907ஆம் தேதியிட்ட இதழில், 'கிளிக்கண்ணிகள்' என்று தலைப்பிட்ட செய்திக்குறிப்பில்,

"சென்ற தடவை ஸ்ரீ. ஸி. சுப்பிரமணிய பாரதியால் இயற்றப்பட்ட கிளிப்பாட்டிலே 10 கண்ணிகள் பிரசுரம் செய்து அவற்றை இவ்வாரம் தொடர்வதாகச் சொல்லியிருந்தோம். இந்தத் தடவை இடமில்லாமையால் மேற்படி கண்ணிகள் அடுத்த வாரம் பிரசுரமாகும்"

என்று காணப்படுகிறது. இதிலிருந்தும் மொத்தம் 18 கண்ணிகளே வெளிவந்தன என உறுதி செய்துகொள்ளலாம்.

பாரதி ஆச்ரமப் பதிப்பில் இப்பாடலின் தலைப்பு "நடிப்புச் சுதேசிகள்" என்றே மாற்றப்பட, பிற பதிப்புகளும் மாற்றப்பட்ட தலைப்பையே பின்பற்றின.

## 29. லாஜபத்ராய் பிரலாபம் [பக். 65]

1907ஆம் ஆண்டு மே மாதம் 9ஆம் தேதியன்று லாலா லஜ்பத்ராய் கைது செய்யப்பட்டுப் பர்மாவுக்கு நாடு கடத்தப் பட்டார். 'இந்தியா' இதழில் லாஜ்பத்ராய் கைது தொடர்பான செய்திகள் நிறையக் காணப்படுகின்றன. பாரதியும் இரு பாடல் கள் இயற்றியுள்ளார். இரு பாடல்களில் ஒரு பாடல் 'இந்தியா' இதழில் வெளிவந்ததாகத் திரு. எஸ். ஜி. இராமாநுஜலு நாயுடு 'அமிர்தகுணபோதினி'யில் 1928–29ஆம் ஆண்டுகளில் "சென்று போன நாட்கள்" என்ற தொடரில் பாரதியார்பற்றி எழுதிய கட்டுரையில் குறிப்பிட்டுள்ளார்.

"1907ஆம் வருஷத்தில் ஸ்ரீ லஜபதிராயைத் தேசப் பிரஷ்டம் செய்தகாலையில், அவர்தம்மைப்பற்றி இரங்கிப் பிரலாபிப்பதாகப் பாரதியார் 'இந்தியா' பத்திரிகையில் அரிய

பாடல்களை வரைந்து, அதற்குத் தெளிபொருள் விளக்கமும குறிப்பிட்டார். அந்த விளக்கம் இப்போழுது வெளிவந்துள்ள அவரது நூல்களில் இல்லை. பாடல்கள் மட்டுமேயுள்ளன''

என்று தந்துள்ள விவரக் குறிப்பை ஆதாரமாகக் கொண்டு, 'இந்தியா' இதழ்களை ஆராய்ந்தோம். 11-5-1907 ஆம் தேதிய 'இந்தியா' இதழின் முதல்பக்கம் வெள்ளையாகவே காணபபடுகிறது. மற்ற இதழ்களிலும் பாடலோ தெளிபொருள் விளக்கமோ காணப்படவில்லை.

18-5-1907 ஆம் தேதிய இதழில் ''லஜபத்ராயின் சுதேசத் தொண்டு'' என்ற தலையங்கப் பகுதியில்,

'லஜபத்ராயரை தீபாந்தரத்துக்கு அனுப்பிவிட்டார்கள். இனி இவர் தமது பிறப்பு நாடாகிய பஞ்சாப் மாகாணத்தைப் பார்ப்பது நிச்சயமில்லை. பஞ்சாப் என்ற பாஞ்சால நாடு ஆதியிலே வேதரிஷிகளால் வாசம் செய்யப்பெற்றது. ஸிந்து நதி பெருகும் வளமுடையது. மஹா பாரத யுத்தம் நடத்த குருக்ஷேத்திரம் பஞ்சாபிலேதான் இருக்கின்றது. யுத்தமுகத்திலே நின்றால் சிங்கங்களைப்போலப் போர் செய்யும் தன்மையினால் சிங்கர் (Singh) என்று கூறப்படும் ஜாதியார் வசிக்கும் நாடு. இந்த ஜாதியாரின் பராக்கிரமச் செயல்களைச் சரித்திர பூர்வகமாக எடுத்துக் கூறவேண்டுமென்றால், அது ஓர் பெரிய புஸ்தகமாகிவிடும். இத்தன்மை கொண்ட வீர பூமியிலே பிறந்து, கல்வியிலேயும் செல்வத்திலேயும், கீர்த்தியிலேயும், மதிப்பிலேயும் நிகரற்றவராக விளங்கி வந்தவர் நமது லாலா லாஜ்பத்ராய். பரோபகாரி என்றால் இவரையே கூறவேண்டும்'' என்று மிகவும் விரிவாக எழுதப்பட்டிருக்கிறது.

1908- ஸ்வதேசகீதங்கள் (முதற்பாகம்) என்ற நூலில் பாரதியார் வெளியிட்டவாறே பாடல்கள் இப்பதிப்பில் தரப் பெற்றுள்ளன. திரு. இராமாநுஜலு நாயுடு குறிப்பிட்டபடி, பாடல்களுக்குத் தெளிபொருள் விளக்கம் தரப்படவில்லை. பாரதியார் காலத்திலேயே அவர் பதிப்பித்து வெளியிட்ட நூல் தொகுதியிலேயே தெளிபொருள் விளக்கமின்றியே பாடல்கள் வெளிவந்துள்ளன என்பதும் குறிக்கத்தக்கது.

## 35. மாஜினி என்ற.......... [பக். 81]

கப்பலோட்டிய தமிழர் வ.உ.சி. அவர்களும் பாரதியும் அவ்வப்போது இந்திய அரசியல் குறித்தும், பிற தேசங்களின் அரசியல் குறித்தும் பேசுவது வழக்கம். பிரான்ஸ், இத்தாலி, - இவை போன்ற பிற தேசங்களின் சரிதத்தைப் பாரதியார் மிக விளக்கமாக ஆவேசத்துடன் வ.உ.சி. அவர்களிடம் சொல்லுவாராம். இம்மாதிரியான உரையாடலின் போது வ.உ.சி. அவர்கள் கேட்டுக்கொண்டதற் கிணங்க இயற்றியதுதான் "பேரருட் கடவுள் திருவடியாணை" எனத் தொடங்கும் பாடலாகும்.

"வி.ஓ.சி. கண்ட பாரதி" (பக்: 10-11) என்ற நூலில் வ.உ.சி. தரும் தகவல்:

"ஒருநாள் இத்தாலிநாட்டுத் தேசாபிமானி மாஜினியின் தேச ஊழிய யௌவன இத்தாலி சங்கத்தின் அங்கத்தினராகச் சேர்ந்தோர் செய்துவந்த விசுவாசப் பிரமாணச் செய்யுளை ஆங்கில பாஷையில் மாமா* எனக்குப் படித்துக் காட்டினார். அதனைக் கேட்டதும் நான் சொக்கிப் போனேன்: அச்செய்யுளைத் தமிழ்ப்பாட்டாக மொழிபெயர்த்துத்தர மாமாவை வேண்டினேன். அவர் அன்றே அந்த இடத்திலேயே அதைத் தமிழில் கவிதையாக மொழிபெயர்த்துத் தந்தார். அதுதான் 'பேரருட்கடவுள் திருவடியாணை' எனத் தொடங்கும் பாட்டு.

## 36,37. கலெக்டர் விஞ்ச்.......... [பக். 87,90]

**சிறப்புக் குறிப்பு:**

இந்தப் பாடலும், இதன் முன்பாடலும் 4-4-1908ஆம் தேதிய "இந்தியா" இதழில் வெளியிடப்பட்டுள்ளதாக அக்காலத்தில் அரசு வெளியிட்ட "Native Paper Reports" (பக்.

---

* பாரதியை மாமா என்று வ.உ.சி. அழைப்பது வழக்கம்.

245)இல் காணப்படுகிறது. இந்த இரு பாடல்கள் முழுதையும் வரிபிசகாமல் ஆங்கில மொழியாக்கம் செய்தும் வெளியிட்டுள்ளது.

மற்றும், இவ்விரு பாடல்களும் நீதிமன்ற நடவடிக்கைகளுக்காக ஆஷ் கொலை வழக்கின்போதும் மொழிபெயர்ப்புச் செய்யப்பட்டிருக்கின்றன.

சுதந்திர உணர்ச்சியைத் தூண்டும் பாடல்கள் எனக் கருதியதால், இப்பாடல்கள் மொழியாக்கம் பெற்றன என்பது குறிப்பிடத்தக்கது.

பாரதியாரின் இளமைக்கால நண்பரும், பிற்காலத்தில் நாவலர் என்று போற்றப்பெற்றவருமாகிய திரு எஸ். சோமசுந்தர பாரதியார்

"... தமிழ் நாட்டில், தேச உணர்ச்சியையும் ஒரு புது ஆதர்சத்தையும் முதன்முதல் உண்டுபண்ணித் தேசபக்தராய் விளங்கியதும், அதியற்புதமான தேசப் பாட்டுகளை இயற்றி வெளியிட்டுப் புகழ் நிரப்பியதும் யாவரும் அறிந்த விஷயம்' ஸ்ரீ சிதம்பரம் பிள்ளையவர்கள் சிறையிடப்பட்டபோது அவர்களுக்கும் கலெக்டருக்கும் நடந்த சம்வாதமாகச் சில புதிய கருத்துக்களுடன் கீர்த்தனைகள் இயற்றித் தமிழ் மக்கள் மனதில் தூங்கிய ஒற்றுமையுணர்ச்சியையும், தேசநேசத்தையும் உயிர்ப்பித்தெழுப்பி உலவச் செய்தது உலகம் அறியும்"

(சுதேச கீதங்கள் - முதற் பாகம் பக். xxiii–xxiv) என்று குறிப்பிட்டுள்ளதும் இங்கு நினைவுகூரத் தக்கது.

## 38. ஸ்ரீ கிருஷ்ண ஸ்தோத்திரம் [பக். 92]

உரிமைப் போராட்ட வரலாற்றிலே இப்பாடல் மிகவும் சிறப்பான இடம் பெறுவதாகும்.

7-3-1908 நாளிட்ட 'இந்தியா' இதழில் வெளியிடப்பட்டுள்ள தாக அக்கால அரசு வெளியிட்ட Native Paper Reports (பக். 178)இல் காணப்படுகிறது. Exhortation to Sree Krishna என்ற தலைப்பில், இப்பாடலின் முதல் எட்டு வரிகளின் ஆங்கில மொழிபெயர்ப்பும் அந்த அறிக்கையில் காணப்படுகிறது.

9-3-1908இல் திருவல்லிக்கேணிக் கடற்கரையில் நடைபெற்ற விபின சந்திர பாலர் விடுதலைக் கொண்டாட்டக் கூட்டத்தில் பாரதியார் இதே பாடலைப் பாடியிருக்கிறார். இரகசியக் காவல் (போலீஸ்) படையினர் குறிப்பெடுத்து அரசுக்கு அறிக்கை செய்துள்ளனர்.

ஆஷ் கொலை வழக்கின்போதும் இந்தப் பாடலின் ஆங்கில மொழிபெயர்ப்பு நீதிமன்றத்தில் மேற்கோளாகக் காட்டப் பட்டிருக்கிறது.

## 40. பாரத தேவியின் திருத்தசாங்கம் [பக். 95]

"தசாங்கம் என்னும் பிரபந்தம்பற்றி, வெண்பாப் பாட்டியல்,

புல்லு மலையாறு நாடூர் புனைதார்மா
கொல்லுங் களிறு கொடிமுரசம் - வல்லகோல்
என்றிவை நஞ்செழுத்தோ டேலா வகையுரைப்ப
நின்ற தசாங்கமென நேர் (செய்யுள் 19)

என்று கூறுகிறது, இங்கே பாட்டுடைத் தலைவரது சின்னங்க ளாகிய மலை, ஆறு, நாடு, ஊர், மாலை, குதிரை, யானை, கொடி, முரசம், செங்கோல் என்பனவற்றைக் குறித்து நேரிசை வெண்பாவால் பாடப்பெறும் பிரபந்தம் தசாங்கம் எனக் குறிக்கப்படுகிறது. பிற பாட்டியல்களும் இங்ஙனமே கூறு கின்றன. ஆனால், பாரதியாரின் திருத்தசாங்கம் இவ்விலக் கணத்திற்குச் சற்று மாறுபட்டுள்ளது. பாட்டியலில் கூறும்

'செங்கோல்' பற்றி அவர் குறிப்பிடவில்லை; யானை, குதிரை என்பன அவர் கூறிய ஊர்தி என்பதனுள் அடங்கும். பாரதியாரின் தசாங்கத்தில் வரும் 'பெயர்' 'படை' (ஆயுதம்) என்பவைபற்றிப் பாட்டியலில் யாதும் குறிப்பிடப்பெறவில்லை. திருவாசகத்தில் மாணிக்கவாசகர் நாமம், நாடு, நகர், ஆறு, மலை, ஊர்தி, படை, முரசு, தார், கொடி என்ற பத்து அங்கங்களையும் முறையே நேரிசை வெண்பாக்களில் கிளியை முன்னிலைப்படுத்தித் தமது திருத்தசாங்கத்தை அருளிச் செய்துள்ளார். அவரைப் பின்பற்றியே பாரதியாரும் திருத்தசாங்கம் பாடியிருக்கிறார் என்பது நன்கு புலனாகிறது."

- அரசாங்கப் பதிப்பு (1954)

விளக்கக் குறிப்புக்கள் பக். X–XI

இந்திய விடுதலைப் போர் நடைபெற்ற காலத்தில், அக் கிளர்ச்சியே ஒரு சமயம் எனக் கருதுமளவிற்கு வீறு பெற்றதுண்டு. அந்தப் புதிய சமயத்திற்குத் தெய்வமாகப் பாரத மாதா உருவாயினள். அத் தெய்வத்திற்குத் திருக்கோயில் எழுப்பி, தேவிக்கு உருவம் படைத்து நாட்டிய செய்திகளும் உண்டு. சமயவாதிகள் தங்கள் தெய்வங்களுக்குத் தசாங்கம், திருப்பள்ளியெழுச்சி முதலியன பாடினர். தேசிய விடுதலைச் சமய அடியவர்களும் இந்த நாட்டுப் பண்பாட்டு மரபினை யொட்டிப் பாடிப் போற்றினர்; பாரதியார் அத்தகைய புதிய சமய அடியவராக அமைந்து படைத்தவையே பாரதமாதா நவரத்ந மாலை, பாரத தேவியின் திருத்தசாங்கம், பாரத மாதா திருப்பள்ளியெழுச்சி ஆகியவை.

இந்தப் புதிய சமயம், தெய்வம் பற்றிய சில வரலாற்றுச் செய்திகளை உணர்வது இலக்கிய அறிஞர்க்கும் தேவையே.

"இந்திய விடுதலைப் போரில் வன்முறையிலான புரட்சி இயக்கம் வங்க மாநிலத்தில்தான் வலுத்திருந்தது. ஆயுள் தண்டனை தந்து அந்தமானிலுள்ள சிறைச்சாலைக்குப் பிரிட்டிஷாரால் அனுப்பப்பட்ட தேசபக்தர்களிலே 100-க்கு 80 சத

விகிதம் பேர் வங்காளியரே யாவர். இதற்கு, வங்காள இந்துக்கள் காளிமா தேவியை வழிபடு தெய்வமாகக் கொண்டிருப்பதும் ஒரு காரணமாக இருக்கலாம்.

"அப்போது வங்கப் புரட்சியாளர் வெளியிட்டுள்ள சில பிரசுரங்களிலே, 'காளி மாதா வெள்ளை ஆடுகளைப் பலி கொடுக்குமாறு கேட்கிறாள்' என்று பொறித்திருந்ததாக ரௌலட் கமிட்டியின் அறிக்கை கூறுகிறது.

"கலெக்டர் ஆஷ் கொலை காரணமாக நடந்த திருநெல்வேலிச் சதிவழக்கிலே, புரட்சியாளர்கள் இரகசியத்தில் காளி தேவியை வழிபட்டதாகவும், அப்போது காளி சிலைக்கு அவர்கள் ரத்தாபிஷேகம் நடத்தியதாகவும் அரசாங்கத் தரப்பில் கூறப்பட்டது.

"சுப்பிரமணிய சிவா பாப்பாரப்பட்டியில் பாரத மாதாவுக்குக் கோயில் எழுப்பத் தேசபந்து தாசரைக் கொண்டு அவ்வூரில் அடிக்கல் நாட்டினார். அந்தக் கோயிலில் அவர் நிறுத்தவிருந்த பாரதமாதா சிலையின் அமைப்பை அவரே வருணிக்கிறார். இதோ படிக்கிறேன் கேளுங்கள்.

"திரிசூலத்தைக் கையில் ஏந்திக்கொண்டு பாரத அன்னை மேற்குத் திசையைப் பார்த்து நிற்க வேண்டும். மேற்கு முகமான பார்வையினால் மூர்த்திகரமும் உக்கிரமும் அதிகமாகும் என்பது ஐதிகம்.

"எதிரே திலகரின் உருவச்சிலை தாங்கிய துவஜஸ்தம்பமும் கோயில் பிரகாரங்களிலே அன்னை பராசக்தியின் லீலைகளைக் குறிப்பிடும் சித்திரங்களும் மகாபாரதத்துக் கதைகளும், ஹர்ஷன், சிவாஜி, விக்கிரமாதித்தன் போன்ற வீரர்களின் சரித்திரங்களும் எழுதப்படல் வேண்டும்...

"...பாரதியாரும் பராசக்தியைப் பாரத மாதா கோலத்தில் வழிபட்டு அடிமைப்பட்ட நாடுகளுக்கெல்லாம் விடுதலை யருள வேண்டுமென்று வேண்டுகிறார்...

"பாரத மாதாவுக்குக் கோயில் அமைக்கவும், அந்தக் கோயிலிலே பராசக்தியின் வடிவத்தில் தேசமாதேவியின் சிலையை நிறுத்தவும் சிவா விரும்பியது, மகாகவி பாரதியைப் பின்பற்றித்தான். - அவரே சொல்லுகிறார்."

- டாக்டர் ம. பொ. சிவஞானம்: பாரதியார் பற்றி ம. பொ. சி. பேருரை (1983) பக். 439-445)

## 42. சுதந்திரம் [பக். 102]

'முதற் பிரயத்தனம்' என்ற கட்டுரையில் இப்பாடல்பற்றிப் பாரதி தரும் குறிப்பு: "ஓர் ஜாதியார் ஸ்வதந்திரத்தின் பொருட்டுத் தலைமுறை தலைமுறையாகக் கஷ்டமடைவது இறுதிவரையில் வெற்றிகொண்டே முடியுமென்ற கருத்தை 'பைரன்' என்ற ஆங்கிலேய மஹாகவி அழகிய மொழிகளிலே புனைந்திருக்கின்றார். அவரது மொழிகளை ஒருவாறு தமிழில் பெயர்த்துத் தருகின்றோம்.

## 46. கோகலே சாமியார் பாடல் [பக். 110]

லிபரல் கட்சியைச் சார்ந்த லார்டுமார்லி இந்தியர்களுக்குச் சில சலுகைகள் செய்வதாக வாக்குறுதி அளித்தார். லார்டு மார்லி ஏதோ சீர்திருத்தங்கள் செய்துவிட்டதாக இந்தியத் தலைவர்களில் பலர் - குறிப்பாக நிதானக் கட்சியைச் சார்ந் தவர்கள் - களிக் கூத்தாடினார்கள்.

பாரதி தீவிரக் கட்சியின் பக்கம் நின்ற காரணத்தால், நிதானக் கட்சியைச் சார்ந்த கோகலே போன்ற தலைவர்களைக் கண்டித்தார். மார்லி சீர்திருத்தங்கள் வெறும் கண்துடைப்பு என்பது தீவிரவாதிகளின் கருத்து. எனவே, இந்தியாவில் மார்லி சீர்திருத்தங்கள் சட்டமாக்கப் பட்ட பிறகுங்கூட நடைமுறைக்கு வருமா என்று ஐயப்பாடு கொண்டனர். சிவில் சர்விஸ் போட்

டிப் பரிட்சைகள் இந்தியாவில் நடத்தலாம் என்பது பிரிட்டிஷ் பார்லிமெண்டில் அங்கீகரித்துச் சட்டமாகியிருந்தது. அதை இந்தியாவில் சரியான முறையில் அப்போது நடைமுறையில் கொண்டு வருவதற்கு யாதொரு வழியையும் காணவில்லை. அதுபோலவே, மார்லி அறிவிக்கும் சீர்திருத்தங்களும் சட்ட மானாலும், நடைமுறைக்கு வராமல் போய்விடலாம் என்பது காங்கிரஸ் தீவிரவாதிகளின் கருத்து.

இதைக் கருத்தில் கொண்டே பாரதியார் கோகலே சாமியார் என்ற பாடலை இயற்றினார்.

## 47. கவிதா தேவி அருள் வேண்டல் [பக். 112]

'இந்தியா' இதழில் 16,23-1-1909 ஆகிய தேதிகளில் இப் பாடல் வெளிவந்தது. 'பாரதி நூல்கள் – காவியங்கள்' என்ற தொகுப்பில் (1937) பாரதி பிரசுராலயம் 'ஸ்வசரிதையும் பிற பாடல்களும்' என்ற பகுதியில் சேர்த்தது. அத்தொகுதியில் ஒரு பகுதியே இடம் பெற்றிருந்தது. முதன்முதலாகப் பாடலின் முழு வடிவமும் இப்பதிப்பில்தான் வெளியாகிறது. My Journal of Thoughts and Deeds என்னும் பாரதியாரின் குறிப்பில் (பக். 94) இப்பாடலின் தலைப்பைக் 'கவிதா தேவிக்கு வேண்டுகோள்' எனக் குறித்திருக்கிறார். இப்பாடலைத் தாம் வெளியிட நினைத்த கவிதைத் தொகுதியில் சேர்க்கத் திட்டமிட்டிருந்தார் என்பது அக் குறிப்பிலிருந்து தெரிகிறது.

## 48. குருகோவிந்தஸிம்ஹ விஜயம் [பக். 120]

இதன் பொருள். *('குருகோவிந்தஸிம்ஹ விஜய'த்தின் பொருள்)

விக்கிரமாதித்த சகம் 1756–ஆம் ஆண்டில், வீரருக்கு அமிர்த மெனப்படும் ஆநந்தபுரத்தில் சிங்கத்தைப் போன்ற பராக்கி

---

* பாரதியார் தந்தது.

ரமம் பொருந்தியவராதலின் சீக்கியரெனப் பெயர்பெற்ற குலத்தினருக்கு குருவாகிய குருகோவிந்தர் வதிந்துவந்தனர். இவரோ, ஞானப் பெருங்கடல், நாலு திக்கிலும் புகழ்பெற்ற கவிஞர், வானமே ஒருமுறை இவர்மீது விழுந்து, நசுக்க வேண்டுமென் றெண்ணினும், மனம் கலங்காது தமது வாள் கொண்டு தடுக்கும் வீரர் திலகம், உலகமெல்லாம் உய்யும் பொருட்டு அவதரித்த ஒப்பிலாப் பெருமான். இத்துணைப் பெருமைவாய்ந்த இக்கோ மகன், நானா திக்கினும் ஓலைகள் போக்கித் தானிருக்கும் பதியினை நாடிக் குறித்த நாளில் பாஞ்சால நாட்டாரெவரும் வந்து சேருமாறு ஆணையிட்டருளினன். அவனது ஆணையைச் சிர மேற்கொண்டு வீரர்கள் யாவரும் வந்துகூடினர். குறித்தநேரமும் வந்தது. யாவரும் கூடி நிற்கின்றனர். குரவனது வாக்கினின்றும் யாது வருமோ, என்ன பணி நமக்கிடப் போகின்றனனோ, எங்ஙனம் நம்மை அருளுகின்றானோ என்றெண்ணி ஒவ்வொருவரும் மிக்க பக்தி விநயத்துடன், கருணைக் கடலாகிய எம் பெருமான் முனர்த் தேவர்கள் எங்ஙனம் நிற்பரோ அங்ஙனம் ஆவலாய்க் காத்துநின்றனர்.

அப்பொழுது, இளமையும், பலமும், கண்டெவரெவரும் வாய்பேசாது வணங்கச் செய்யும் வீரமும் உடைய ஓர் உருவம், கணப்பொழுதில் சட்டெனப் பீடத்தில் ஏறி நின்றது. அதனது விழிகளில் அற்புதத் தீப்பொறி பறந்தது. அழகிய முடியைச் சுற்றி ஓர் ஒப்பில்லாத ஜோதி திகழ்ந்தது. கை தூக்கி நின்றது. அக் கையில் ஒளிபொருந்திய ஓர் வாளிருந்தது. அவ்வாளினது பெருமையைச் சொல்ல நாவும் நடுங்கும். இத்தகைய போர்க் கோலங் கொண்டு நின்ற சுந்தரமூர்த்தியைப் பார்த்த வீரர் யாவரும் மெய்மறந்து விட்டனர். வானத்தினின்று திடீரென்றிறங்கிய மாந்திரிகனைக் கண்ட சிங்கக்கூட்டம் திகைத்து நிற்பதையொப்ப மௌனமுற்று, தலைதாழ்த்து நின்றனர். இச்சமயத்தில், அத் தெய்வக் குரவன், தான் கைப்பிடித்திருந்த வாள் நுனி காட்டி, எரிமலை உருமியதுபோல, 'பக்தர்களே'! தரும தேவதைக்குத் தீராத தாகமுண்டாய் விட்டது, மிகவும் தவிக்கிறாள், அவளது தாகத்தை வீரர் பலரது மார்பினிலிருந்து வரும்

இரத்தமே தீர்க்கவல்லது, ஆதலின் தமது நெஞ்சினை இவ்வாளால் கிழித்து உதிரமூட்ட எவர் முன் வருகின்றீர், எழுக'' எனலும் சீஷர்கள் நடுங்கி ஒருகணம்வரை ஒன்றும் பேசாது ஊமை போலிருந்தனர்.

இங்ஙனம் ஒருகணம் கம்மெனக் கழிந்தது. பின்பு அக்கூட்டத்தினின்றும் ஒரு வீரன் முன்வந்து, 'குரு சிரேஷ்டரே' எனது நெஞ்சினில் அவ்வாளைப் பதித்து, அதினின்று பெருகும் இரத்தத்தினால் தரும தேவதை கொண்டிருக்கும் தாகத்தைத் தணியும்' என்றான். குருவும் முகமலர்ந்து அவனை அழைத்துக் கோயிலுள் செல்லவும், அங்கிருந்து இரத்தம் சில்லென்று பாயக் கண்டார் கூடிநின்றோர். உடனே அப்பெருமான் சட்டென வெளிவந்து 'முதற்பலி முடிந்தது. இரண்டாவதொன்றும் அவ்வம்மை கேட்கின்றாள். எவர் வருகின்றீர்'! என்றனர், எனலும் இன்னுமோர் வீரன் கூட்டத்தினின்று முன்பாய்ந்து 'என்னைப் பலியிடும்' என்று சொல்ல அவனையும் குரவன் கோயிலுள் அன்புடன் அழைத்துச் சென்று இரண்டாம் பலி கொடுத்து வெளியேறி, மறுமுறையும் 'பலிக்கு எவர் வருகின்றீர்?' என்றார். பின்னுமொருவன் வந்தனன், பலியுண்டனன். இவ்வாறே மீண்டும் மீண்டும் ஐந்து பலிகள் கொடுக்கப்பட்டன.

தருமமின்னதெனத் தமதறிவால் யூகித்தறிந்து கொண்ட மாத்திரத்தாலேயே மானிடர் பெருமையுடையவரல்லர். அதுதழைக்கத் தமதுயிரையும் கொடுப்பவரே பெரியோர், அவரே மெய்மையாளர், அவரே ஞானி. தொண்டர்களுக்குள்ளே இத்தகையோரைக் காண வேண்டுமென்றே அருட்கடலாகிய குரவன் இந்தப் பயங்கரமான சோதனை செய்தனன். தான் எண்ணியபடி தர்மஸ்தாபனத்தில் அளவு கடந்துள்ள அன்புடையார் ஐவரைக் கண்டதும், அத்தன்மையர் எண்ணற்றவர் ஆங்கு உளரென ஐயன் மனத்தினிற் கொண்டனன். பின்னரே போதுமெனப் பலியை நிறுத்தியது.

உடனே, பலியுண்டு, இறந்தனரெனக் கூடி நின்றவரெண்

ணியிருந்த ஐவரையும சபைமுனர்க் கொணர்ந்தான். இது கண்டதும், தொண்டர்கள் ஆர்ப்பரிக்கத் தொடங்கினர். யாது மாயமெனப் பெரும் ஆச்சரியமெய்தினர். தமது கண்கள் தம்மை ஏமாற்றுகின்றனவோ வென்று ஐயங் கொண்டு, கண்களை நன்றாய்த் துடைத்துப் பார்த்தனர். குருவாழ்க, குருவுக்கு வெற்றியுண்டாகுக என்று ஆசிகள் கூறி ஆடி, ஓடிக் குதித்தனர். அவ்வமையத்தில், அருளுருக் கொண்ட குரவனும் புன்னகை புரிந்து, அவ்வைவரையும் மார்புறத் தழுவி ஆசிகள் கூறி, சபையினை நோக்கி இது கூறுவான்:- "காளியும் நமது பாரத தேவியும் ஒன்றெனக் கண்ட அன்பர்காள், நீவிர் பயங்கொள்ளுமாறு யான் ஐந்து தடவையும் பலியிடச் சென்றது உண்மையன்று, பாவனையேயாம். எனது கரத்தாலேயோ உம்மைக் கொல்லுவன்? அவ்வைந்து தடவையும், பலிக் கெனத் துணிந்து வந்தஅன்பரை மறைத்து உமது நெஞ்சத் திடத்தைச் சோதனை செய்தேன். உமது மனோதிடத்திலின்றும் நீவிர் தாய் நாட்டிற்கு உண்மைப் புத்திரரென உணர்ந்தேன். என் கரத்திலுள்ள இவ்வாளால், அறுத்தது ஐந்து ஆடுகளையே, நீவிர் வீரரெனக் கண்டேன். அளவிலா மகிழ்ச்சியும் கொண்டேன். இனி நமது கவலைகள் ஒழிந்தன".

குருகோவிந்தஸிம்ஹருடைய மதத்திற்கு சிக்க (சீடர்களின் மதம். என்று பெயர். இன்றைக்கும், அந்த மதஸ்தர்கள் "காலசா" அல்லது "முக்தர் சங்கம்" என்ற பெயர் வைத்துக் கொண்டிருக்கிறார்கள். குருகோவிந்தர் முன்பு சொல்லப்பட்டபடி தெரிந்தெடுக்கப்பட்ட தனது பிரதம சீடர்கள் ஐவரையும் சேர்த்து, முதலாம் "காலசா" அமைத்தார். பாரத ஜாதியார் ஜீவசக்தியிலேயும், ஆண்மையிலேயும் குறைந்து போய்விடவில்லை, அவர்களின் வீரியமும் சிரத்தையும் நாசமடைந்து விடவில்லையென்பதை குருகோவிந்தர் உலகத்தோரறிய அன்று பிரதிஷ்டை செய்தார். முன்னாளில் ஸ்ரீகிருஷ்ணன் தோன்றியது போல, மறுபடியும் தெய்வீக சக்தியுடைய ஓர் நேதா (வழி காட்டுவோன்) தோன்றி, மண்ணழுக்கில்லாத பரிசுத்த வசனங்கள் கூறி எழுப்புவானானால், அப்போது பாரதமாதா

செவியிலே கொள்ளாமல் இறந்து கிடக்க மாட்டாள். இளமையும் துணிவுங் கொண்டவளாகித் தனது ஜாதீய மானத்தைக் காத்துக்கொள்ள முற்படுவாளென்பதைக் குருகோவிந்தர் உலகத்தாருக்கு அறிவுறுத்தினர். பஞ்ச பூதங்களாலே பூத ஜகத்தை உண்டாக்கிய ஸர்வேசனைப் போலவே, குருகோவிந்தர் தமது ஐந்து சீடர்களைப் பரிசுத்தமாக்கி, அவர்களின் மூலமாகப் பாரத ஜாதி முழுதையுமே புனர் நிர்மாணம் செய்தனர். தர்மம் தழைப்பதாயிற்று. கொடுங்கோல் பிடித்த இழிதன்மை கொண்ட அரசர்களெல்லாம் தத்தம் சிங்காதனத்திலேயே நடுங்கத் தொடங்கினார்கள். "ஸ்வதந்திரதேவி புன்சிரிப்புச் சிரித்தாள்.'

விக்கிரம சகம் 1756–ஆம் ஆண்டில் குருகோவிந்தர் தமது சீடர்களை ஒன்று சேர்த்துத் தாம் ஒரு 'தர்பார்' நடத்தினர். இக்கொலுவோ சாதாரணமாக மானிடர் பார்க்கத்தக்க காட்சியன்று! அழகிய சிங்காதனத்தின்மீது குரு வீற்றிருந்தார். அவரைச் சுற்றிலும் அவர் உயிர்த் தொண்டர்களாகிய ஐவருக்கும் ஆஸனங்களமைக்கப்பட்டன. அவருடைய கையால் அந்தச் சீடர்களுக்கு ஆடைகள் சார்த்தி, பூ மாலைகள் சூட்டி மதிப்புடன் உட்கார வைத்து ஆசீர்வாதம் செய்துவிட்டு, பிறகு சபையோரை நோக்கி, "பாருங்கள், இவ்வைந்து பேருமே முதலாவது காலஸா, தேசத்தையும் தர்மத்தையும் ரக்ஷணை செய்யும் பொருட்டாகவே இந்தச் சங்கம் அமைக்கப்பட்டிருக்கிறது" என்றார். பிறகு குருகோவிந்தர் பக்கத்திலே ஓடிய ஓர் நதியிலிருந்து ஜலம் கொண்டுவந்து அதை ஓர் இரும்புப் பாத்திரத்தில் விட்டு தனது வாள் முனையைக் கொண்டு அதை அடித்துக் கொண்டே மந்திரம் சொல்லத் தொடங்கினார். இந்திரியங்களை யடக்கி, சித்தத்தை ஈசனிடத்திலே நிறுத்தி ஜபம் செய்வாராயினார், விஜயலக்ஷ்மி அந்தச்சபையிலே வந்து நர்த்தனம் செய்யத் தொடங்கினாள். அப்பொழுது குருமூர்த்தி தம்முடைய வாள் முனையால் அடித்தது ஆற்று ஜலத்தையா? பாரத ஜாதியின் அயர்ந்த சக்திகளை யெல்லாம் கலக்கிவிட்டு அவற்றிற்கு மறுபடி ஜீவனளித்தார் என்றே சொல்ல வேண்டும். அவர்

வாள்முனையிலே ஜலம் சுழலும்போது தேசத்தாரின் ஹிருத யங்களெல்லாம் சுழலத் தொடங்கின. அப்பால் பெருந்தவம் புரிந்தவர்களாகிய தமது முக்கிய சிஷ்யர்கள் ஐந்து பேரையும் முன்னே நிறுத்தி ஜபிக்கப்பட்ட ஜலத்தை எடுத்து அவர்களு டைய கண்ணிலே தெளித்து, தமது விரல்களால் அவர்களின் கண்களைத் தீண்டினார். குருபகவான் அவர்களுடைய கண் களைத் தொட்ட அந்த க்ஷணத்திலேயே பாரத ஜாதி முழுமைக் கும் விழி திறந்துவிட்டது.

பிறகு சிஷ்யர்கள் எல்லோருக்கும் இவ்விதமான தீக்ஷை கொடுக்கப்பட்டது. பின்பு குருகோவிந்தர் சபையாரை நோக்கி, "அன்பர்களே, உங்களுக்கு இப்பொழுது செய்து வைக்கப்பட்ட தீக்ஷைக்கு அமிருத தீக்ஷை என்று பெயர். துர்லபமாகிய இந்த தீக்ஷை பெற்றதனால் நீங்கள் ஈசனது பரிபூரண அருளைப் பெற்றவர்களானீர்கள். இனி இத்தீக்ஷைக்கடுத்த நமது தர் மத்தை உங்களுக்குச் சொல்லுகிறேன், கேளுங்கள். கடவுள் ஒன்றே உண்டு. உலகத்திலே தோன்றிய மனிதர்களெல்லாம் அவருடைய அம்சமாகையாலே சகோதரராவார்கள். மனிதர் களெல்லோரும் சமானர்கள். பரிபூரண சுதந்திரமுடையவர்கள். சிஷ்ய ஜனங்களே, இந்த க்ஷணந்தொட்டு நீங்களெல்லோரும் குலத்திலேயும் செய்கையிலேயும் எல்லா விஷயங்களிலேயும் ஒன்றேயாவீர்கள். உங்களுக்குள்ளிருக்கும் பிரிவுகளையெல்லாம் துடைத்து விடுங்கள். ஏனென்றால், பிரிவைக் கைக்கொண்ட வர்கள் மரணத்தைக் கைக்கொண்டவராவார்கள். ஆரிய மகா ஜாதியிலே ஆயிரம் வகுப்புச் செய்ய விரும்புவோர் தமது விருப் பப்படியே செய்து நசித்துப் போகட்டும். அது உங்களுக்கு வேண்டாம். நீங்களெல்லாரும் தர்மம், தெய்வம், சத்தியம், ஸ்வதந்திரம் - என்ற நான்கையும் ஆராதனை புரியும் வீர ஜாதியைச் சேர்ந்தோராவீர்கள். அநீதியையும் கொடுமையை யும் அழிக்கின்ற ஜாதி; க்ஷவரம் செய்து கொள்ளாத சிங்க முகத்தையுடைய ஜாதி; இரும்பு முத்திரையும், அரையிலே இறுகக் கட்டின கச்சையும், கையிலே வாளும் நீங்காமல் தரித் திருக்கின்ற ஜாதி; பரஸ்பரம் மாறாத சகோதரத் தன்மை

பாராட்டுகின்ற ஜாதி; ராஜாவில்லாமல் தெய்வமே அரச னாகவும், மனிதர்களெல்லோரும் துணைவராகவும், அதர்ம மொன்றே பகையாகவும் கொண்டு குடியரசு நடத்துவதே மேன்மையென்று தெரிந்த ஜாதி; இந்த ஒரு ஜாதியையே நீங்களெல்லோரும் சேர்ந்தவர்களாவீர்கள். தர்மத்தை யெதிர்க் காதேயுங்கள்; அதர்மத்தை யெப்பொழுதும் பொறுத்திராதே யுங்கள். தாய்நாட்டை எக்காலமும் வழிபாடு செய்து கீர்த்தி யோடு வாழுங்கள்! கீர்த்தியோடு வாழுங்கள்!!'' என்று குரு கோவிந்த பகவான் உபதேசம் செய்தருளினார்.

சீடர்களெல்லாம் அவரைத் தொழுது ஆரவாரம் செய் தார்கள். அந்த சமயத்திலே குருகோவிந்த பகவானாலே ஸ்தாபனம் செய்யப்பட்ட ஸ்வதந்திரக்கொடி பெரிதுயர்ந்து வானத்திலே அசைய உலகத்தாரெல்லாம் புகழ்ச்சி கூறினார் கள்.

அக்கொடி நிறுத்தியவுடனேயே அவுரங்கசீப் சக்ரவர்த்தி யின் கொடுங்கோல் ராஜாங்கம் அடியற்று மாய்ந்து போய் விட்டது.

## 49. வெய்ய இடி [பக். 129]

**பாரதியார் தந்த பொருள்:** 'மேகத்தி லிருந்து வெய்ய இடி பக்கத்திலே விழ உடல் வெந்துபோனவன் ஒன்றும் சொல் லாது சும்மா இருக்க, ஆலங்கட்டி தலையிலே விழப்பெற்ற மற் றொருவன் மேகத்தின் மீது சினங் கொண்டு நிந்தை வார்த்தை கள் பேசுவது போல, வாசனை பொருந்திய ரோஜாப் பந்தைக் கொண்டு தன்மேலெறிந்துவிட்டாளென்று இன்ப வடிவத்த ளாகிய ரஸிகையைக் கோபிக்கின்ற இந்தக் கிரீடாரமன் அவள் வடியுற்ற வேல்களை எறிவதுபோல விழிகளை என்மீது மோதிக்கொண்டே யிருப்பதால் என்னுயிர் வருந்துவதைக் காண்கிறானில்லை.''

## 54. கலியுக முடிவு [பக். 140]

ஆங்கிலக் கவியொன்றின் மொழிபெயர்ப்பு. மிஸ்டர் லாய்டு ஜார்ஜ் என்ற அரசிறை மந்திரி தயார் செய்திருந்த வரவு-செலவுத் திட்டத்தைக் கேலி செய்து மிஸஸ் **F.A.** ஸ்டீல் **(Flora Annio Steel)** என்பவர் புராணத்திலிருந்து மேற்கோள் காட்டிய பகுதியாகும் இது.'

இந்தப் பாடலோடு 'ஹிந்துப் புராணங்களில் கலியுக முடிவு காலத்தைப் பற்றிச் சொல்லியிருக்கும் விசேஷங்களை யெல்லாம் லாய்டு ஜார்ஜின் திட்டத்திலே பார்க்கலாமென்று வேடிக்கை செய்திருக்கிறாள்' என்ற செய்திக் குறிப்பையும் பாரதி வெளி யிட்டுள்ளார்.

## 55. கடல் [பக். 141]

### (பாரதியார் குறிப்பு)

ஸ்ரீமான் அரவிந்த கோஷ் ''கடலுக்கு'' என்ற தலைப்பின் கீழ் ஆங்கில பாஷையில் சில கண்ணிகள் புனைந்து, அவற்றை ''மாடர்ன் ரெவ்யூ'' (நவீன பரிசோதகம்) என்ற கல்கத்தா மாதப்பத்திரிகையில் பிரசுரம் செய்திருக்கிறார். அக்கண்ணி களின் மொழிபெயர்ப்பைக் கீழே தருகிறேன். தாய் நல்லுணவு சமைப்பதைப் பின்பற்றிக் குழந்தை மணற்சோறாக்கி விளை யாட்டுச் சமையல் செய்வதைப்போல், அந்த மஹானுடைய செய்யுளை நான் அன்பினால் மொழிபெயர்க்க நேர்ந்தது. இதில் எனக்குத் தெரிந்தே பல வழுக்க ளிருக்கின்றன. பாஷை வேறுபாடு முதலிய சில காரணங்களால் அவ் வழுக்களை நிவி ருத்தி செய்வது மிகக் கஷ்டமாயிருக்கிறது. இவற்றையும் எனக்குத் தெரியாமல் வீழ்ந்திருக்கும் பிழைகளையும் கற்றோர் பொறுத்தருளுமாறு வேண்டுகின்றேன்.

(குறிப்பு:- இச் சரிதையில் ஸ்ரீ அரவிந்தர் கடல் என்று எதைக் கூறுகின்றார்? மானிட வாழ்க்கையை, சங்கடங்களும்,

துன்பங்களும், விரோதங்களும், எதிர்ப்புக்களும் நிறைந்த ஸம்ஸாரத்தையே கடலென்கிறார். ஆத்மா இவற்றினிடையே விழுந்து, இவற்றால் மோதுண்டு, தான் இவற்றை மோதி தனக்குக் கீழ்ப்படுத்தி வெற்றி கொண்டால் ஆத்மசுத்தியும், ஞானமும் ஏற்படும். அபாயங்களைக் கண்டு விலகி நிற்பவன் மூடன். அவற்றை யெதிர்த்து, அமுக்கி, கீழ்ப்படுத்தி வெற்றி கொள். மானிடா, இதன் பொருட்டாகவே உன்னை ஈசன் இங்கனுப்பி யிருக்கிறான்.

இக்கொள்கை பாட்டின் முதல்வரி முதலாகவே உள்ளே பொதிந்து கூடார்த்தமாகக் காணப்படுகின்றது. இடையே ஓரிடத்தில் அரவிந்தர் அதை வெளிப்படையாகவும் சொல்லி யிருக்கிறார். இக் கருத்தை மனதில் வைத்துக்கொண்டு பாட்டை வாசித்துப் பார்த்தால்தான் உண்மைப் பொருள் விளங்கும். இம் மொழிபெயர்ப்பை ஸகல ஜனங்களுக்கும் தெளிவாகும்படி மிக எளிய நடையிலே அமைக்க வேண்டுமென்று சிரமப்பட்டிருக்கிறேன். என்னை யறியாமல் அகராதிப் பண்டிதர்களுடைய சில "கற கற" மொழிகள் விழுந்திருக்கின்றன. செய்யுளமைதி நாடி அம்மொழிகளுக்கு எளிய பிரதிபதங்கள் போடாமலிருந்து விட்டேன். இதன் பொருட்டும் படிப்போர்கள் க்ஷமிக்குமாறு பிரார்த்தனை செய்கிறேன்.)

## 62. ஸ்வதந்திரப் பள்ளு [பக். 158]

"பள் என்ற சொல், உழவரில் ஒரு பிரிவாரைக் குறிப்பிடும் சாதிப்பெயரா யிருப்பதோடு, ஒரு பண்ணுக்கும பெயராகும். காளி முதலான தெய்வங்களுக்குப் பூசையிட்டுப் பலி போடும்போது பாடப்படும் பண்வகை பள்ளு எனப் பெயர் பெறும்.

- மு. அருணாசலம் : முக்கூடற் பள்ளு
(பதி. 1949) – நூல்ஆராய்ச்சி பக். 23

"முக்கூடற் பள்ளி லமைந்த செய்யுள் வகைகள் கலிப்பா, சிந்து என்னும் இரண்டே".

– ஷை பக். 42

மேற்குறித்த இரண்டு குறிப்புகளையும் இணைத்து நோக்கின் பாரதியாரின் ஸ்வதந்திரப் பள்ளு, பண்ணோடு பாடுதற் குரிய சிந்து எனக் கொள்ளல் தகும்.

"நம் காலத்துக்கு இன்னும் நெருங்கிவந்து பார்த்தால் சுப்பிரமணிய பாரதியார், 'ஆடுவோமே பள்ளுப் பாடுவோமே-ஆனந்த சுதந்திரம் அடைந்துவிட்டோ மென்று ஆடுவோமே' என்று சுதந்திரப் பள்ளு பாடுவதற்கும், முந்திய பள்ளுப் பிரபந்தம் தந்த சுதந்திர வுணர்ச்சியும் இன்ப வுணர்ச்சியுமே யாகும்."

– ஷை நூல் பக். 25

## 66. பாரத மாதா திருப்பள்ளியெழுச்சி [பக். 165]

பாட்டுடைத் தலைவர்களைத் துயிலிலிருந்து எழுப்புவதாக – எழுப்புதற்காகப் பாடும் நூல்வகை 'பள்ளியெழுச்சி' எனப் படும். துயிலெடை நிலையாகத் தொல்காப்பியம் முதலியன கூறிய நிலையில் உலகியல் சார்ந்ததாக இருந்த இந்தப் பிரபந்தம் சமய இயக்கப் பின்னணியில் 'திருப்பள்ளியெழுச்சி' யாய்த் தெய்வச் சார்பு பெற்றது. தேசிய இயக்கத்தில் 'பாரத மாதா'வைத் தெய்வமாகக் கொண்ட பாரதி பாரத மாதா திருப்பள்ளியெழுச்சி பாடுகின்றார்.

டாக்டர் மகாவித்துவான் ச. தண்டபாணி தேசிகர் திருப்பள்ளியெழுச்சி பற்றிக் கூறியன வருமாறு:

"பள்ளி எழுச்சி பழந்தமிழ் நூல்களில் 'துயிலெடைநிலை' என்று வழங்கப்பெறுகின்றது. தொல்காப்பியத்துப் பொருளதிகாரப் புறத்திணையியலுள் பாடாண்டிணையின் பகுதியாக,

'தாவில் நல்லிசை கருதிய கிடந்தோர்க்குச் சூதர் ஏத்திய துயி லெடை நிலையும்' எனக் கூறப்பட்டுள்ளது.

"துயிலெடை நிலையாவது பகைமேற் சென்ற மன்னன் பகைவரை வென்று, பாசறைக்கண் மனக்கவற்சி சிறிதுமின்றித் துயிலுகின்ற காலத்து நல்ல புகழைக் கொடுத்தலைக் கருதிய சூதர் - நின்றேத்துவார் - சூரியன் உதிக்க ஐந்து நாழிகைக்கு முந்திய காலம் வைகறை - அப்போது அரசனை எழுப்புவர். அரசன் எழும்புங் காலத்தே தன் வீரமும் வெற்றியும் வழிவழி வரும் குலப் பெருமையும் கேட்டு எழுவானாயின் அன்று முழுதும் பெருங்கிளர்ச்சியுடன் விளங்குவன். அதற்காக அரண் மனையில் வாழுகின்ற அமைதியான காலத்தும் வைகறையில் எழுப்பப் பாடும் பாணர்களை அமைத்திருந்தனர் எனச் சங்க நூல்கள் தெரிவிக்கின்றன.

"புறப்பொருள் வெண்பா மாலையிலும் சூதர் துயிலுணர்த் துதல் சொல்லப் பெற்றுள்ளது. ஆகவே, பாசறைக்கண் துயி லெடுத்தலும் அரண்மனைக்கண் துயிலெடுத்தலும் நிகழும் என் பது பெற்றாம். மனையின்கண் துயிலெழுப்புவர் பரிவாரத்தின் மகளிர்; மனைக்கண் மகளிர் எடுப்பது அகத்திணை, - பாசறைக் கண் சூதர் ஏத்துவது புறத்திணை என்பர் சிலர். பாடாண் அகத்தொடு பிணைந்து புறமாயும், புறத்தொடு பொருந்திப் புறமாயும் விளங்குதல் வெள்ளிடை யாதலின் துயிலெடையை இரண்டாகப் பகுத்து உணர்தல் விரும்பற்பாற்றன்று என்க."

- திருவாசகம்: குருவருள் விளக்கம் என்னும் உரை
(1964) - பக். 775

"...இத்துயிலெடை நிலை உறங்கலும் விழித்தலும் உடைய ராய் உணர்த்த உணரும் இயல்பினராகிய அரசர் முதலிய மாந்தர்க்கே உண்மையாக உரியதாகும். உறங்கலும் விழித் தலும் இன்றி இமையா முக்கண்ணினனாய், தானே முழுதுணரும் இயற்கையுணர்வினனாய், நள்ளிருளில் நட்டம் பயின்றாடும்

இறைவனைத் துயிலெழுப்புவ தென்பது உண்மை நிகழ்ச்சியாத லின்றி வெறும் உபசாரமே யாகும். ஆயினும், 'துஞ்சும் பொழு தாடுஞ் சோதி' ஆகிய அம்முதல்வனை உறங்கி விழிக்கும் இயல் பினராகிய மாந்தர் தாம் துயிலெழுங் காலத்துத் தொழுது கொண்டு எழுதல் இன்றியமையாத தாதலின், அவனருளாலே அவன்தாள் வணங்கித் துயிலெழும் வழிபாட்டு நெறிமுறை யினை மாந்தர்க்கு அறிவுறுத்தும் நோக்கத்துடன் திருவாத வூரடிகளால் திருவாய்மலர்ந்து அருளப்பெற்றது 'திருப்பள்ளி யெழுச்சி' என்னும் இப்பனுவலாகும். தூங்கி விழிக்கும் இயல் பினராகிய வேந்தர் முதலாயினாரை எழுப்பும் துயிலெடை நிலை என்னும் துறையினும் இது வேறுபட்டது என்பது புலனாகச் சான்றோர் இதனைத் துயிலெடைநிலை யென்னாது திருப்பள்ளியெழுச்சி யெனத் தொன்றுதொட்டு வழங்கிவருவா ராயினர். இந்நுட்பம்,

> நீறணிந்தார் அகத்திருளும் நிறைகங்குற் புறத்திருளும்
> மாறவருந் திருப்பள்ளி யெழுச்சியினில்
>
> (பெரிய. நாவுக். 68)

என வரும் சேக்கிழாரடிகள் வாய்மொழியில் இனிது புலனாதல் காணலாம்.

— பேரா. க. வெள்ளைவாரணர்:
பன்னிருதிருமுறை வரலாறு
இரண்டாம் பகுதி (1969) - பக். 171-172

மேற்குறித்த இரண்டு மேற்கோள்களின் பின்னணியில் பாரதி பாடிய திருப்பள்ளியெழுச்சியின் இலக்கிய மரபுப் பின்னணி வரலாறும் சிறப்பும் உய்த்துணரலாம்; நுனித்து உணரத் தக்க பல கூறுகள் உண்டு.

## 70. கனவு (பக். 173)

மகாகவி பாரதியார் புதுச்சேரியினின்றும் பிரசுரம் செய்த

நூல் என்ற போதிலும், 1911ஆம் ஆண்டு செப்டம்பர் 8ஆந்தேதி யன்று, "கனவு" நூல் பிரதியுடன், ஆங்கில மொழிபெயர்ப் பையும் இணைத்து, 1910ஆம் ஆண்டின் இந்திய அச்சுச் சட்டத் தின் 12ஆம் பிரிவின் கீழ் நடவடிக்கை எடுக்கலாமா என்பது பற்றிக் கருத்தறிய அட்வகேட் ஜெனரலுக்கு அரசாங்கக் கீழ்ச் செயலாளர் அனுப்பிவைத்தார். அப்போது சென்னையில் அட் வகேட் ஜெனரலாக இருந்த சர் பி. எஸ். சிவசாமி ஐயர், கடிதத் தைப் பரிசீலனை செய்து, "கனவு" நூலின் மீது நடவடிக்கை யெடுக்கலாம் என்று கருத்துத் தெரிவித்தார். அதையடுத்து, 1911ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 11ஆம் தேதியன்று கீழ்க்கண்ட ஆணை செயின்ட் ஜார்ஜ் கோட்டை கெஜட்டில் பிரசுரிக்கப்பட்டது.

"Whereas the two Tamil Pamphlets specified below, Printed and Published at Pondicherry, contain matter which, in the opinion of the Governor in Council, has a tendency to excite disaffection towards the Government and is therefore of the nature described in section 4, sub-section (1), of the Indian Press Act, 1910, the Governor in Council, in exercise of the powers conferred by section 12, sub-section (1), of the said Act, declares that all copies of the Publications are forfeited to His Majesty:-

"KANAVU" a poem and other songs
by C. Subramanya Bharati

"ARILORU PANGU" a short story
by C. Subramanya Bharati

ஆக, அன்றைய பிரிட்டிஷ் அரசுக்கு எதிராக அதிருப்தியைத் தூண்டிவிடக்கூடிய (ராஜத்துவேஷத்தை மூட்டும்) தன்மை கொண்ட நூல் என்ற காரணத்தால், கனவு நூல் தடை செய்யப்படுகிறது. நூல் பிரதிகளைப் பறிமுதல் செய்யவும் ஆணை பிறப்பிக்கப்படுகின்றது.

வெளிப்படையாகவே ராஜத்துவேஷத்தை உண்டுபண்ணும் தன்மைகொண்ட கனவு நூலில் அரசினர் ஆங்கில மொழி பெயர்ப்புச் செய்த பகுதிகள் விவரம்:

| | | | |
|---|---|---|---|
| பாடல் எண்: | 21 - நெல்லையூர் | ... | அருவருப்பாவதை |
| | 22 - நரியுயிர் | ... | பொருந்துமோ |
| | 23 - கணிதம் | ... | கண்டிலார் |
| | 24 - கம்பன் | ... | ஏற்றமும் |
| | 25 - சேரன் | ... | வெற்றியும் |
| | 26 - அன்ன | ... | எரிவதே |
| | 27 - சூதிலாத | ... | வழங்கினன் |
| | 28 - அய்யரென்று | ... | அலைந்ததால் |
| | 29 - செலவு | ... | பிழைத்ததே |
| | 33 - (வரிகள் 2-4) | | |
| | வீழ்ச்சி | ... | இளையர்தாம் |
| | 39 - (வரிகள் 3-4) | | |
| | ஓங்கிநின்ற | ... | இழந்தனன் |
| | 46 (கடைசி 4 வரிகள்) | | |
| | மந்தர்பாற் | ... | நாட்டிலே |

'கனவு' நூல் தடையுத்திரவை நீக்குவதற்குப் பாரதியார் அரசுடன் கடிதத் தொடர்புகொண்டும், தம் உரிமையை நிலை நாட்டப் பத்திரிகைகள் வாயிலாகப் போராடியும் பயன் விளைய வில்லை "My Journal of Thoughts and Deeds" என்ற தமது குறிப்பில் பாரதியார், "கனவு· The Govt. has got to be made to amend its order of proscription - The songs attached to the "கனவு" book" என்று குறித்துள்ளார்.

இதே "கனவு" நூல் ஸ்வசரிதை என்ற தலைப்புடன் "பாரதி நூல்கள் - காவியங்கள்" - 1937ஆம் வருடப் பதிப்பில் இடம்பெற்றுள்ளது.

பின்னாளில் "கனவு" என்னும் தலைப்பு "ஸ்வசரிதை"

யாக மாற்றப்பட்டு விட்டது. தற்காலப் பதிப்புக்களில் இது 'சுயசரிதை' எனவும் காணப்படுகிறது.

தலைப்பு மாற்றப்பட்டதற்குக் காரணம், திரும்பவும் அரசு நடவடிக்கை மேற்கொள்ளும் என்று பதிப்பாளர்கள் கருதியதேயாகும்.

## 71. பாஞ்சாலி சபதம் [பக். 193]

### பொருள் விளக்கமும் குறிப்புகளும்

(பாரதியாரே எழுதியன)

முதற்பாட்டி லிருந்து 18-ஆம் பாட்டு வரையில் நொண்டிச் சிந்து.

"லாலல லாலல லா - லல
லாலல லாலல லாலலலா

என்ற மெட்டில் நடப்பது.

புஸ்தகத்தில், இந்த ஓரிடத்தில் மாத்திரமே பாட்டின் வகைப் பெயர் காட்டி யிருக்கிறது. பின்னுள்ள பாட்டுக்களின் விவரம் இப் பொருள் விளக்கத்திலே கூறப்படும்.

**பாட்டு 1 - வரி 7**

"ஆமெனும் பொருளனைத்தாய்" - 'உள்ள வஸ்துக்கள் யாவுமாகி' என்பது பொருள். 'ஆம்' எனுஞ் சொல் சம்மதியைக் குறிப்பது மட்டுமேயன்றி உண்மையையும் குறிக்கும். வடமொழியில் 'ஓம்' எனுஞ் சொல்லுக்கு ஆம் என்றே பொருள். எவ்விடத்தும் 'இல்லை' யாதலின்றி 'ஆம்' எனவிருத்தல் பற்றியே வேதத்தில் பிரமத்துக்கு 'ஓம்' எனும் பெயர் கொடுக்கப்பட்டிருப்ப தறிக.

**பாட்டு 4 - வரி 2**

"மிக்கபல் லுரையெனுங் கருமையிட்டாள்" - வேதமாகிய கண்ணில் (ஞான நூல்களாகிய கண்ணில்) பலவித "வியாக்கி யானங்கள், பாஷ்யங்கள்" எனும் கரிய மையைப் பூசியவள். மை கண்ணுக்கு நல்லது. அழகுங்கூட. ஆனால், அளவுக்கு மிஞ்சிப் பூசினால் விகாரமாகத் தோன்றுவதுடன் கண்ணே போனாலும் போய்விடும்.

நமது தேசத்தில் ஒரு வேளை இப்படி நடந்திருக்குமோ?[1]

ஸரஸ்வதி அறிவுத் தெய்வமாதலால், அவளுக்கு ஆத்ம ஞானமே (வேதம்) விழியெனப்பட்டது.

**பாட்டு 4 - வரி 3**

'சீதக் கதிர்மதியா (ம்) நுதல் - குளிர்ந்த' ஒளியுடைய மதியே ஸரஸ்வதி தேவிக்கு நெற்றியாக வர்ணிக்கப் பட்டிருக்கிறது. "ஊகம்"[2] என்பது அவளுடைய கூந்தல்.

**பாட்டு 8 – வரி 7**

**"சிந்தையி லறமுமுண்டாம் - எனிற்,**
**சேர்ந்திடுங் கலிசெயு மறமு முண்டாம்."**

ஒரு சங்கத்தின்-ஒரு ஜாதியின் - ஒரு தேசத்தின், அறிவு மழுங்காதிருக்கும் வரை அதற்கு நாச மேற்படாது. பாரத தேசத்தில் முற்காலத்திலே பாரத ஜாதி முழுமையின் அறிவுக்குப் பொறுப்பாளியாகப் பிராமணர் என்னும் பெயருடைய ஒரு வகுப்பினர் இருந்ததாகப் பழைய நூல்களிலே காணப்படுகிறது. அந்தப் பிராமணர் தமது கடமைகளைத் தவறாது நடத்தியிருப் பார்களானால், மற்றக் குலத்தவரும் நெறி தவறியிருக்க

---

1 நமது......நடந்திருக்குமோ - என்றுள்ள வரிகள் முதற் பதிப்பின் அச்சுப் பிரதியில் பாரதியாரால் அடிக்கப்பட்டுள்ளன.

2 பாடலில் "ஊகம்" என்பது முதற்பதிப்பில் உள்ள பாடம். இதனைச் 'சிந்தனை' எனப் பாரதியாரே அச்சுப்படியில் திருத்திவைத்திருந்தார்.

மாட்டார்கள். மஹா பாரதப்போர் நடந்திராது. பாரத தேசத்தில் பெரிதோர் க்ஷத்திரிய நாசமும் கலியும் வந்திருக்க மாட்டா. ஒரு தேசத்திற்கு ஏற்படும் உயர்வு தாழ்வுகளுக்கு அத்தேசத்திலுள்ள பிராமணர்களே பொறுப்பாளியென[1] மேலே குறித்திருப்பதை விளக்கும்பொருட்டு மஹா பாரதப்போர் நடக்கு முன்பாகவே முதற்படப் பாவம் பிராமணருக்குள் புகுந்த தென்பதை நூல் தெரிவிக்கின்றது.

**பாட்டு 11 – வரி 1**

"ஆரிய வேன்மறவர்" - 'மறம்' என்பது வீரம். மறவர், க்ஷத்திரியர். பொதுப்படையாக இக்குலத்தாரைக் குறிப்பிடு வதற்குத் தமிழில் அரசர், மன்னர் எனும் சொற்களை வழங்கு வதுமுண்டு

அதாவது, க்ஷத்திரியர்களுடைய தலைவனொருவனுக்கு மாத்திர மன்றி, அக்குல முழுமைக்குமே தமிழில் மன்னர் முதலிய பெயர்களுண்டு. நமது நாட்டில் இப்போது 'மறவர் என வழங்கும் கூட்டத்தார் க்ஷத்திரிய வமிசத்தவராத லுணர்க

**பாட்டு 13 - வரி 4**

"மலர் விழிக் காந்தங்கள்" - காந்தத்திற்குரிய கவர்ச்சித் தொழில் செய்து கொண்டிருக்கும் (மாதர்) விழிகள்.

**பாட்டு 14 - வரி 6**

"பல தரனுடைத் தொழில்செயு மாசனமும்" - மகாசனம், மஹா ஜனங்கள்; பொதுப்படையான குடிகள். இவர்களே தேசத்திற்கு உயிராவர். இவர்களை(ச்) 'சூத்திரர்' என்பது தற்கால வழக்கு. 'சூத்திரர்' எனும் பெயரைச் சில மூடர் இழிவான பொருள்பட வழங்குவது பற்றி நூலில் அப்பெயர் தரவில்லை.[2]

---

1 பொறுப்பாளிகளென - என்பது பாரதியார் திருத்தம்.

2 'சூத்திரர்' எனும் பெயரை ...... தரவில்லை என்ற வாக்கியம் பாரதியாரால் நீக்கப்பட்டுள்ளது.

**பாட்டு 16 - வரி 7**

"உரியோர்" - பந்துக்கள்

**பாட்டு 17 - வரி 8**

"மறைக்குல மறவர்களிருவர்" - வேத மோதும் குலத்திலே பிறந்தவராயினும் மறவர் தொழிலைக் கைக்கொண்ட துரோணன், கிருபன், எனும் மஹான்கள்.

**பாட்டு 19**

இஃ தெண் சீர். ஈற்றது மா. அடுத்த 20 முதல் 37 ஆம் பாட்டு வரை மறுபடியும் நொண்டிச் சிந்து.

**பாட்டு 24 – வரி 7**

"பால் வகை மன்னவர்" – பால் = பகுதி. பல பகுதிகளாக வகுக்கப்பட்ட அரசர் (க்ஷத்திரியர்) கூட்டங்கள்.

**பாட்டு 25 – வரி 5**

'வழவழத் தருமன்' (உலக வழக்கு), உக்கிரத்தன்மை முதலிய மறவர் குணங்களில்லாத தருமன்.

**பாட்டு 27 - வரி 2**

"வளமைகள்" - (உலக வழக்கு) பெருமைகளென்பது பொருள்.

**பாட்டு 29 - வரி 2**

"கதலியின் தோல்" – கதலி யென்பது ஒருவகை மான்.

**பாட்டு 33 - வரி 8**

'அரபிய ரொட்டைகள்' - வியாசமுனிவர் அரபி தேசமென்று பெயர் குறிப்பிடாவிடினும், அவரது வர்ணனைகளைப் பார்க்குமிடத்துத் தருமபுத்திரன் யாகத்துக்குக் காணிக்கையாக வந்த

ஒட்டைகள் அரபி தேசத்தனவென்று தெளிவாகத் தோன்று கிறது. இன்னும்* அரபிதேசத்திலேதான் ஒட்டைகள் அதிகமாக வழங்குதலறிக.

**பாட்டு 34 - வரி 3**

"நின்றிடும் புகழ்ச்சீனம்" - மிகப் புராதனமான காலந் தொட்டுக் கீர்த்தியழியாது நிற்கும் சீன தேசம். இஃது சீன தேசத்தில் குடியரசு நாட்டிப் புகழ் மிகுதி யடையு முன்னதாகவே எழுதப்பட்டது. சில தேசங்களின் பெருமை காலத்திலே மாறியும், சிதைந்தும், அழிந்தும் போகிறது. காலச் செய்கையை எதிர்த்துச் சில தேசங்கள் எப்போதும் அழிவற்ற பெருமையுடன் விளங்குகின்றன. பிந்தியவற்றுள் சீன தேசமொன்று.

**பாட்டு 38**

இது முதல் 41 வரை எண்சீர்ப் பாட்டு,

**பாட்டு 42**

லாலல லாலல லாலல லாலல லாலலா - லல
லாலல லாலல லாலல லாலல லாலலா - லல

என்று படிக்கவும்.

**பாட்டு 45 - வரி 5**

"வீரர்தம் போரினரிய நற் சாத்திர வாதங்கள்" ஆயுதங்களுடன் செய்யப்படும் உடற்போரைக் காட்டிலும், பண்டிதர் செய்யும் சாஸ்திர வாதங்கள் அருமை யுடையன வென்பது கருத்து. அதாவது, உண்மையுடன் இவ்வாதங்கள் நடைபெறுமிடத்தென்க. உண்மையறியாதார் - உண்மை வேண்டாதார்

---

* 'இன்னும்' என்னும் சொல்லை 'இன்று' என்று திருத்தியுள்ளது அரசாங்கப் பதிப்பு.

செய்யும் வாதங்கள் சந்தையில் மீன்விற்கும் ஸ்திரீகளின் போராட்டத்துக்கு[1] நேராகும்.

பாட்டு 53

இது முதல் 83-ஆம் பாட்டு வரை நாலடி - எண் சீர்ச் சிந்து

லாலல லாலல லாலலா - லல
லாலல லாலல லாலலா[2]

என்ற மெட்டு.

சம்பாஷணைகள் முதலியவற்றைத் திறனுடனும் உண்மையுடனும் காட்டுவதற்கு இப்பாட்டின் நடை மிகவும் சவுகரியமாதலைப்[3] பாடிப் பார்த்துணர்ந்து கொள்க.

69 – 70 இப்பாட்டுக்களின் கருத்து:

சகுனி சொல்லுகிறான்:– "நமக்கு ஏற்கெனவே அளவிறந்த செல்வ மிருக்கும்போது இன்னும் அதிகச் செல்வத்தை ஏன் விரும்ப வேண்டும்? இருப்பதை வைத்துப் பாதுகாத்தால் போதாதா?" என்று ஒரு வேளை நீ நினைக்கின்றாய் போலும் ஆனால் இவ்வித நினைப்பு நின்போன்ற ஆரிய மன்னர்களுக்குத் தகாது. ஏனென்றால், நித்தம் ஏராளமான செல்வத்தைத் தான முதலியவற்றால் ஒரு பக்கத்திலே செலவிட்டு, மற்றொரு பக்கத்திலே போர் முதலியவற்றால் மிக்க பொருள் சேகரித்துக் கொண்டிருப்பதாகிய இரட்டைத் தொழில் ஆரிய மன்னர்களால் அனுசரிக்கப்படுவது. இருப்பதை மூடிவைக்க விரும்புவோன் அரசனல்லன், கிழச் செட்டி.[4] எதுபோலெனில், கங்கை நதி நாள்தோறும் அளவில்லாத ஜலத்தைக் கடலிலே கொண்டு

---

1 'போராட்டத்திற்கு' (பா.பி., அர.)

2 'லாலல லாலல லாலலா - லல
லாலல லாலல லாலலா - லல' என்றிருத்தல் வேண்டும்.
இன்றேல் எழுசீர்ச் சிந்தாகும். — பதிப்பாசிரியர்

3 'ஸௌகர்யமாதலை' – (பா.பி., அர.)

4 'மூடச் செட்டி' என்பது பாரதியாரே செய்துள்ள திருத்தம்.

கொட்டுகிறது. என்ன வீண் செலவு! இந்த 'வீண்செலவு' செய்யாவிட்டால் ஜீவனின்றி அழுகிப் போய் விடும். மலை மீதிருந்து அதற்கு ஓயாத ஊற்று வர விருக்கின்றது. அதனை உலகிற்கெல்லாம் வழங்குவதுமன்றிக் கடலிலும் கொண்டு பொழிகிறது. ஆம்! 'மேலே' செல்வரிடமுள்ள பொருளைக் கவர்ந்து 'கீழே' ஸாமான்ய ஜனங்களுக்குப் பலவகைகளிலே பயன்படுத்தவேண்டும். அப்போதுதான் ராஜா கங்கை நதியைப்போல் "ஜீவநதி"யாக இருக்கலாம். கங்கை நதியைப் போல, ஆரியர்களும்.[1]

"செல்வம் வளர்தற்கே - தொழில்,
ஆயிர நித்தம் புதியன - கண்டு
வாரிப் பழம்பொரு ளெற்றுவார் - அந்த
வண்மையு நீயறி யாததோ?"

இங்ஙன மில்லாது, சத்தமற்ற நெடுங்காட்டில், மலையடிக் கீழ்ப்பட்ட இருட்குகையில் நீரை வைத்துப் பாசியால் மூடிக் காக்கும் சுனைகளைப் போன்ற ஒழுக்கம் ஆரியர்களால் வெறுத்தற்குரியது.

### பாட்டு 81

ஒருவனைப் பரமாத்மாவின் அவதாரம் என்று கூறுவதன் பொருள் 81,82,83 இம்மூன்று பாட்டுக்களிலும் விளக்கப்பட்டிருக்கிறது.

### பாட்டு 104 – வரி 8

"நீதித் தர்மனுஞ் சூதிலன்புள்ளோன்" தர்மன் சூதாட்டத்திலே பிரியமுடையவனென்றும், அழைத்தால் எளிதல் இணங்கி விடுவானென்றும் சகுனி கருதுவதாக முதனூலிலேயே காணப்படுகிறது.

---

1 கங்கை நதியைப் போல, ஆரியர்களும் - இச் சொற்கள் முதற்பதிப்பின் அச்சுப் படியில் பாரதியாரால் அடிக்கப்பட்டுள்ளன.

**பாட்டு 109**

இதுமுதல் *115* வரை —

"லாலல லாலல லாலல லாலா
லாலல லாலல லாலல லாலா"

என்று பாடுக.

**பாட்டு 124 - வரி 7**

"கேள்விக்கொருமிதி லாதிப னொத்தோன்".

கேள்வியில் மிதிலையரசனாகிய ஜனகனுக்கு நிகரானவன். இப்பாட்டின் மொத்தக் கருத்து; "நாங்கள் உமது யாகத்திற்கு வந்து திரும்பிச் சென்ற பிறகு உங்களைப் பாஞ்சாலி ஸஹித மாக அழைத்து அத்தினாபுரத்தில் மறுவிருந்து கொண்டாட வேண்டியது மரபு. ஆனால் இதுவரை சோதிடர்கள் நல்ல நாளில்லை யென்று சொன்னார்கள். இந்த மாதந்தான் அவர் கள் நல்லமாத மென்றனர்".[1]

**பாட்டு 138 - வரி 7**

**"செப்பிடு வித்தையைப் போலவே - புவிச்
செய்திகள் தோன்றிடு மாயினும்"**

இவ்வுலகத்துச் செய்திகள் மேலளவாகப் பார்க்கும்போது முன்பின் தொடர்பில்லாதனவாகித் திடும் திடுமென்று புறப் படுவன போலத் தோன்றுகின்றன. ஆனால் ஆழ்ந்து நோக்கு மிடத்து இவை "காரண காரியத்தொடர்" என்பதோர் தவிர்க்க முடியாத விதியால் கட்டுண்டிருக்கின்றன.

**பாட்டு 148 - வரி 7**

"சீரடியாற் பழவேத முனிவர் போற்றுஞ் செழுஞ்சோதி"-

---

1 "என்பது" என்ற சொல் பாரதி பிரசுராலய, அரசாங்கப் பதிப்புக் களில் வாக்கிய இறுதிக்காகச் சேர்க்கப்பட்டுள்ளது.

சீர்களும் அடிகளும் இயைந்த மந்திரங்களால் முன்னைய வேத ரிஷிகள் போற்றிய ஞாயிறு. இங்கு சூரியாஸ்தமய வர்ணனை கூறப்படுகின்றது. இப்பாடல்களின் கருத்து நன்கு விளங்கும் பொருட்டு நமது "கர்மயோகிப்" பத்திரிகையிலே இவ்விஷயத்தைப் பற்றி எழுதியுள்ள உபந்யாஸ மொன்றை இங்கு[1] தருகின்றோம்:-

**சூரியாஸ்தமயம்[2]**

உலகத்தில் எங்கு[3] பார்த்தாலும் நிறைந்து கிடைக்கும்[4] லாவண்யங்களைத் தமிழர்கள் கவனிப்பது கிடையாது. சனிக்கிழமை சாயங்காலந்தோறும் குளக்கரைகளிற் போய்க் கருடன் பார்ப்பதற்கென்றால் நம்மவர்கள் கூட்டம் கூட்டமாக ஓடுகிறார்கள். சூரியாஸ்தமய காலத்தில் வானத்திலே தோன்றும் அதிசயங்களைப் பார்க்க ஒருவன்கூடப் போகிறதில்லை.[5] அப்போது வானத்திலே இந்திரஜால மஹேந்திர ஜாலங்களெல்லாம் நடக்கின்றன. இந்த க்ஷணமிருந்த தோற்றம் அடுத்த க்ஷணமிருப்பதில்லை. உலகத்திலுள்ள திரவிய முழுதையும்[6] செலவிட்டு வர்ணக் காட்சிகள் ஏற்படுத்திப் பார்ப்போமானால்[7],, அது சூரியாஸ்தமய காலத்தில் வானத்திலே நாம் பொருட் செலவில்லாமல் பார்க்கக்கூடிய காட்சிகளிலே கோடியி லொரு பங்கில்[8] கோடியிலொருபங்குகூடக் காணாது. வாணவேடிக்கைகள் பார்க்க ஒரு செல்வன் பதினாயிரக் கணக்கான திரவியம் செலவிடுகிறான். அவனது செல்வத்தினாலன்றோ இந்தக் காட்சி சுலபமாகிறதென்று அதைப் பார்த்து ஆயிரம் ஏழைகள்.

1 'இங்குத் தருகின்றோம்' என்றிருத்தல் வேண்டும் - பதிப்பாசிரியர்
2 "ஸூர்யாஸ்தமயம்" (பாரதியார் திருத்தம்)
3 'எங்குப் பார்த்தாலும்' – என்றிருக்க வேண்டும் - பதிப்பாசிரியர்
4 "கிடக்கும்" - (பா.பி., அர)
5 "போவதில்லை" - (அர.)
6 "முழுவதையும்" – (பா.பி., அர.)
7 "பார்ப்போமானாலும்" - (பா.பி., அர.)
8 "கோடியிலொரு பங்கில்" என்பது அனைத்து வெளியீடுகளிலும் விடப்பட்டுள்ளது.

பெருமூச்செறிகிறார்கள். சகோதரா,[1] சூரியாஸ்தமனத்தின் விநோதங்களைச் சென்றுபார். சூரியனைப் பார்த்தால் கண்ணுக்குக் கெடுதியென்ற குருடர் நம்பிக்கையைப் பொருட்டாக்காதே. சூரியனைப் பார்ப்பது பாவமென்று சொல்லும் மூடர் சாஸ்திரத்தைக் கண்கொண்டு பார்க்காதே.

நமது நாட்டில் வேதகாலத்து ரிஷிகள் பிரகிருதியின் சௌந்தர்யங்களைக் கண்டு மோஹித்துப் பரமாநந்த[2] மெய்தியவர்களாய்ப் பல அதிசயமான பாடல்கள் பாடியிருக்கிறார்கள், பிரகிருதியின் அழகைக் கண்டு பரவசமெய்திக் காளிதாசன் முதலிய பெருங் கவிகள் அற்புதக் கவிதைகள் செய்திருக்கின்றனர் இக்காலத்திலேதான் இந்த[3] துரதிஷ்ட நிலைகொண்ட நாட்டில் வானம்பார்த் தறியாத குருடர்களெல்லாரும்[4] கவிகளென்று சொல்லி வெளிவருகிறார்கள்.

சூரியாஸ்தமனத்தின் அற்புத சௌந்தர்யங்களை[5] எழுதிப் பிறர் மனதில் படும்படி செய்வது சாத்தியமில்லை. நேரிலே கொண்டு காட்டினாலும் பலருக்கு ஆரம்பத்திலே கண் கூசுவது தான் அர்த்தமாகுமே யல்லாமல், விஷயந் தெரியாது.[6] சஹோதரா[7], நீயாகவே போய்ப் பலதினம் அடுத்துப் பார்க்க வேண்டும். பிறகு தான் உனக்கு அந்த[8] தெய்வக் காட்சி சிறிது சிறிதாக விளங்கும். சூரியோதயத்திலேயும் சூரியாஸ்தமனத்திலும்[9] வானத்தில் நடக்கும் இந்திர ஜாலக் காட்சிகளில்

1 "ஸகோதரா" என்பது பாரதியார் திருத்தம்.
2 'பரமானந்த' - (பா.பி., அர.)
3 'இந்தத்' ... - (அர.)
4 குருடர்களெல்லோரும் - (அர.)
5 "ஸௌர்யாஸ்தமயத்தின் அற்புத ஸௌந்தர்யங்களை" என்பது பாரதியார் திருத்தம்
6 'நேரிலே கொண்டு காட்டினாலும் ... தெரியாது" - இந்த வாக்கியம் பாரதியால் அடிக்கப்பட்டுள்ளது.
7 'ஸஹோதரா' – (பா.பி., அர.)
8 அந்தத் - (அர.)
9 ஸௌர்யோதயத்திலேயும் ஸௌர்யாஸ்தமயத்திலும் - (பா.பி.அர.)

க்ஷணந்தோறும் புதிய புதிய விநோதங்கள் மாத்திரமேயன்றி இன்னுமொரு விசேஷமுண்டு. நேற்றிருந்தது போல, இன்றைக் கிராது. இன்றிருப்பது போல நாளை யிராது. தினந்தோறும் வெவ்வேறு வியப்புக்கள், வெவ்வே றுலகங்கள், வெவ்வேறு மஹிமைகள், வெவ்வேறு கனவுகள், வெவ்வேறு ஆநந்தங்கள், வெவ்வேறு அநிர்வசனீயங்கள்.

சில தினங்களின் முன்பு ஓர் மாலைப் பொழுதில் நான் கண்ட அதிசயங்களை ஒருவாறு இங்கு[1] குறிப்பிடுகிறேன். அடிவானத்தில் சூரிய கோளம்[2] தகதகவென்று சுழன்று கொண்டிருந்தது. இருபது கோடி மின்னல்களை எடுத்து ஒரு சக்கரமாக வார்த்துச் சுழற்றுவது போலிருந்தது. ஆரம்பத்திலேதான் கண் கூசும். சிறிது நேரம் உற்று நோக்கிக்கொண்டிருந்தால் பிறகு கண்கூச்சம் தீர்ந்து போய்விடும். இரண்டு வட்டத் தகடுகள் ஒன்றின் மேலொன்று சுழலும். கீழேயிருப்பது சுத்தமான மின் வட்டம். மேலே மரகத வட்டம். பச்சை வர்ணம்! அற்புதமான பசுமை!

பச்சைத்தகடு. பின்புறத்திலிருக்கும் மின் தகட்டை முழுதும் மறைத்துக் கொண்டிருக்கும். ஆயினும் இடை யிடையே பின் னுள்ள வட்டத்தின் வயிரக்கிரணங்கள் கண்மீது பாயும்.

பார்! சூரியனைச்[3] சுற்றி மேகங்களெல்லாம் தீப்பட்டெரிவதுபோலத் தோன்றுகிறது! ஆஹா! என்ன வர்ணங்கள்! எத்தனை வித வடிவங்கள்! எத்தனையாயிர விதமான கலப்புகள்![4] அக்கினிக் குழம்பு! தங்கம் காய்ச்சிவிட்ட ஓடைகள்! எரிகின்ற தங்கத் தீவுகள்! நீல ஏரிகள்! கரும்பூதங்கள்! எத்தனைவகை நீலம்! எத்தனை விதச் செம்மை! எத்தனைவகைப் பசுமை! எத்தனை வகைக் கருமை! நீல ஏரியின் மீது மிதக்கும் தங்கத்

---

1 இங்குக் - (பா.பி., அர.)
2 ஸூர்யகோளம் - (பா.பி., அர.)
3 ஸூர்யனைச் - (பா.பி., அர.)
4 கலப்புக்கள் - (அர.)

தோணிகள்! எரிகின்ற தங்க ஜரிகைக் கரைபோட்ட கரிய சிகரங்கள்! தங்கத் திமிங்கிலங்கள் மிதக்கும் கருங்கடல்! எங்கு பார்த்தாலும் ஒளித்திரள். வர்ணக்களஞ்சியம். போ, போ, என்னால் அதை வர்ணிக்க முடியாது.

**பாட்டு 153**

> "செங்கதிர்த் தேவன் சிறந்த ஒளியினைத்
> தேர்கின்றோம் - அவன்
> எங்க ளறிவினைத் தூண்டி நடத்துக"

இது 'தத் ஸவிதுர்வரேண்யம்' என்று தொடங்கும் காயத்ரி மந்திரத்தின் தமிழ் மொழிபெயர்ப்பு.

## பொருள் விளக்கமும் குறிப்புகளும்

## இரண்டாவது சூதாட்டச்சருக்கம்

**பாட்டு 155 - வரி 6**

'இத்தனை மக்களும் ......' - இந்நாள்வரை இத்தனை ஜனங்களும் எங்கே யிருந்தனர்! என்று (காண்போர்) வியப்பெய்தும் வண்ணமாக,

**பாட்டு 157 - வரி 7**

"தோரணங் கொஞ்ச" - தோரணங்கள் அழகுடன் குழைந்திருப்ப.

**பாட்டு 158 - வரி 3**

'பொன்னரங்கினி லிருந்தான் - கண்ணில் புலவனை' - ராஜ மண்டபத்திலே வீற்றிருந்தவன் (ஆகிய) திருதராஷ்டிரனை.

**பாட்டு 158 - வரி 7**

"வின்னயம்" - வில்வித்தை, யுத்த சாஸ்திரம்.

**பாட்டு 159 - வரி 3**

"பணிக் கொடியோன்" - பாம்பைக் கொடிச் சின்னமாக வுடைய துரியோதனன்.

**பாட்டு 160 - வரி 1**

"இளங்கொடி" - பாஞ்சாலி.

**பாட்டு 160 - வரி 6**

'உடல் வலித்தொழில்' - கஸ்ரத், சரீரபலத்துக்காகச் செய் யப்படும் (அப்பியாசங்கள்) இதனை வடமொழியில் "வ்யா யாமம்" என்பர்.

**பாட்டு 161 - வரி 5**

"வந்ததோர் துன்பத்தினை ......................"

துன்பம் நேரிடுங்கால், அதனை அவ்விடத்தே அப்பொழுதே மாய்த்துவிட வழி செய்வார்கள். அவ்வாறன்றிப் பின்வரப் போகும் துன்பங்களை நினைந்து[1] நெஞ்சமுடைந்து போய், யாதொரு செய்கையும் ஓடாமல் சலிப்படைந் திருத்தல் ஆரியர் களுடைய மரபன்று.

**பாட்டு 162 - வரி 3**

'தோணலம்' - தோள்வலி, வலிமை.

**பாட்டு 164 வரி 5**

"வென்றிகொள் பெருஞ்சூதர்" - துரியோதனன் சபையில் வந்திருந்த சூதர்களின் பெயர்:- விவிம்சதி, சித்ரஸேனன், புரு மித்ரன், ஜயன்; சகுனி இருக்கவே செய்கிறான்.

---

1 நினைத்து - (அர.)

**பாட்டு 165 - வரி 7**

"ஆலமுற்றிடத்தழுவி" – (ஆலம் - மார்பு) மார்புறத் தழுவி.

**பாட்டு 166 - வரி 1**

"அறத்தோன்றல்" - தரும புத்திரனே என்னும் விளி.

**பாட்டு 167 - வரி 6**

'இருமையுங் கெடுப்பதுவாம் – இந்த இழி தொழில்' - இஹ லோகம், பரலோகம் எனு மிரண்டின் வாழ்வையும் கெடுப்ப தாகிய சூதுத்தொழில்.

**பாட்டு 168 - வரி 1**

"பழிக் கவற்றை யொர் சாத்திர மெனப் பயின்றோன்"- பிறர் ஸங்கீதம், கணிதம், வியாகரணம், யுத்ததந்திரம் முதலிய சாஸ்திரங்கள் படிப்பதுபோலச் சூதாட்டத்தை ஒரு சாஸ்திர மாகப் பயிற்சி செய்து எதிர்க்க முடியாத நிபுணத்தன்மை வாய்ந் திருந்த சகுனி.

**பாட்டு 168 – வரி 8**

"செலவினுக் கழிகலை" - செலவுக்கு நெஞ்சழிய மாட்டாய். விளையாட்டில் கொஞ்சம் திரவியம் செலவிடுவதற்கு அஞ்ச மாட்டாய்.

**பாட்டு 169 – வரி 2**

"பிசுனன்" - உலோபி.

**பாட்டு 171 – வரி 1**

"தோல் விலைக்குப் பசுவினைக் கொல்லும்" - தோல் விலையாகக் கிடைக்கும் பொருளை விரும்பிப் பசுவைக் கொல்லு தல் போலப் பொருளாசையால் யுதிட்டிரனைக் கெடுத்துத் தரும நாசம் செய்யத் துணிந்தவனாகிய (சகுனி).

### பாட்டு 171 – வரி 3

"நூல்விலக்கிய செய்கைகளஞ்சும் நோன்பினோன்" - தரும ராஜன்; அறநூல் விதிகளைத் தவறாதவன்.

### பாட்டு 171 – வரி 8

"கவறை நஞ்செனக் கூறினர்" - சூதாட்டத்தை விஷமாகக் கருதவேண்டு மென்றார்கள். 'கவற்றை' என்றிருத்தல் நேர்.

### பாட்டு 175 – வரி 6

'நம்ம்வர் காத்திடும் பழவழக்கை மாத்திர மறந்துவிட்டாய்'- க்ஷத்தியர்களுக்குள்ளே யிருக்கும் புராதன சம்பிரதாய மொன்றை மாத்திரம் நீ மறந்துவிட்டா யென்று சகுனி சொல்லு கிறான். வழக்கு – வழக்கம், பூர்வசாரம்[1], 'மாமூல்'. அந்தப் பூர்வசாரம்[2] இன்ன தென்பது பின்னே எட்டாம் வரியிற் கூறப்படுகிறது. 'மன்னர் வல்லினுக் கழைத்திடில் மறுப்ப துண்டோ'?[3]

ஒரு அரசனை மற்றொருவன் - 'என்னுடன் சூதாட வா' என வலிந் தழைக்கும்போது மாட்டேனென்று சொல்லலாகா தென்பது கருத்து. க்ஷத்திரியன் நஷ்டங்களுக்குத் துணிந்திருக்க வேண்டுமென்ற நல்ல கொள்கையால் விளைந்த கெட்ட வழக் கங்களில் இதுவொன்று. அறிவுடையவர்கள் கூடப் 'பூர்வசார'[4] மென்ற காரணத்தால் தீய வழக்கங்களை, அனுசரித்தல் பாரத தேசத்திற்கேற்பட்ட சாபம். இப்போது தான் நீங்கி வருகிறது.[5] வல் - சூது.

### பாட்டு 177 - வரி 5

"வல்லமர்" - சூதுப் போர்.

---

1,2,4, - 'பூர்வாசாரம்' என்று அரசாங்க வெளியீட்டில் திருத்தம் காணப்படுகிறது.

3 துண்டோ? - என்றதில் 'என' என்ற சொல் இணைப்பு.

5 'இப்போது ...... வருகிறது' - இவ்வாக்கியம் பாரதியால் நீக்கப் பட்டுள்ளது.

இப்பாட்டின் பின் 179, 180, 181, 182 பாட்டுக்களிலே, ஆராய்ச்சியில்லாது "பூர்வசாரங்களில்'[1] பக்தி செலுத்துவோரின் மடமை காட்டப்படுகின்றது. பழமையிலே பெரும்பகுதி உயர்வு சான்றது தான். அதிலும் பாரத தேசத்தினராகிய நம்மவரின் நடைகள் அறிவும் அறனும் பொதிந்தனவாகும். ஆயினும் இழிந்த அமானுஷீக[2] நடைகள் சில இவற்றோடு கலந்துள்ளன.

"எனது தந்தை க்ஷயநோயால் இறந்து போனான். எனக்கும் க்ஷயநோய் வந்திருக்கிறது. எங்கள் பாட்டனுக்கும் இந்த நோயுண்டு; ஆதலால் இந்த நோய் தீர்ப்பதற்கு நான் மருந்து தின்ன மாட்டேன்" என்று ஒரு மனிதன் சொல்வானானால் அவன் எவ்வளவு பெரிய மூடன்? லோக க்ஷேமத்துக்கும் லோகாபிவிருத்திக்கும் இந்த 'மாமூல்' பக்தி எத்தனை பெரிய இடையூறென்பதை நம்மவர் இன்னும் நன்றாகத் தெரிந்து கொள்ளவில்லை.

### பாட்டு 182 - வரி 4

"மேலை நாஞ்செயுங் கர்ம மல்லாதே ......

நமது செய்கையின் விளைவுகளுக்கு மாத்திரமேயன்றி, நம்மைச் சேர்ந்தவர்களின் கர்மப்பயன்களுக்கும் நாம் ஆளாகி றோமென்பதை இச்செய்யுள் விளக்குகின்றது.

### பாட்டு 183 முதல் 195 ஆம் பாட்டு வரை

"லால லாலலா லா - லாலா
லால லாலலா லா"

என்ற மெட்டுள்ள சிந்துகள். தெருவில் ஊசிகளும், பாசி மணிகளும் கொண்டு விற்பதோடு பிச்சை யெடுக்கவும் செய்கிற

---

1 'பூர்வாசாரம்' என்று அரசாங்க வெளியீட்டில் திருத்தம் காணப்படுகிறது.
2 அமானுஷிக - (அர.)

பெண்கள் 'மாயக்காரனம்மா - கிருஷ்ணன் மகிடிக்காரனம்மா'[1] என்று பாடும் நடை.

சூதாட்ட வர்ணனைக்கும்,[2] அதில் ஏற்படும் பரபரத்த வார்த்தைகளையும் செய்கைகளையும் விளக்குதற்கும், இந்நடை மிகவும் பொருந்திய தென்பது எளிதிலே காணப்படும்.

**பாட்டு 185 – வரி 8**

'பின்னடக்குக' - மேலே விளையாட்டு நடக்குக.

**பாட்டு 186 – வரி 1**

'ஒருவனாடப்பணையம்'[3] - இஃது தருமன் சொல்வது.

**பாட்டு 186 – வரி 5**

"வருமமில்லையையா" - துரியோதனன் சொல்வது.

**பாட்டு 187 – வரி 1**

"பொழுது போக்குதற்கே" – இஃது கர்ணன் வசனம்.

(அங்கர்கோன் – கர்ணன்)

**பாட்டு 187 – வரி 5**

"பழுதிருப்பதெல்லாம்" - இஃது தருமன் வசனம்.

**பாட்டு 189 - வரி 6**

'பாரமான பொற்றேர்' - இங்குத் தேர் பணையமாக[4] வைக்கப்பட்டது என்பது கொள்ளக் கிடக்கின்றது.

---

1 'மகுடிக்காரனம்மா' - (பா.பி., அர.)

2 வருணனைக்கும் – (அர.)

3,4 பாரதியார் அச்சுப்பிரதியில் திருத்தியதால் திருத்தப்பட்டன.

**பாட்டு 191 - வரி 2**

'அடிமை செய்து வாழ்வோம்' - மாதர்கள், பணையமாக* வைக்கப்பட்டனரென்பது தொக்கு நிற்கின்றது.

**பாட்டு 196 - வரி 6**

'பழிமக்காள்' - பழிப்பிள்ளைகளே ('பழிக்கிடமாகிய' என்க)

**பாட்டு 199 - வரி 1**

'கெலித்திடல்' வெல்லுதல் - திசைச் சொல்; கிராமியம்.

**பாட்டு 201 - வரி 8**

"கேட்குங்காது மிழந்துவிட்டாயோ?" கோப மிகுதியால் தன்னை மறந்து அரசனுக்குக் கண்ணில்லாமையைக் குறிக்க நேரிட்டது.

**பாட்டு 203 - வரி 6**

"மந்திரம்" - சூழ்ச்சி

**பாட்டு 203 - வரி 8**

"வெற்பிடைப் போக்குதி" - (காந்தாரத்து மலைநாட்டிலிருந்து வந்தவனாதலால், சகுனியை மீட்டும் அவனது மலை நாட்டுக்கு அனுப்பிவிடுக) என்று சொல்லியது.

'பாஞ்சாலி சபதம்' எழுதப்பட்டபோது நாட்டில் நிலவிய சூழ்நிலையும் அந்தச் சூழ்நிலையின் தாக்கம் காவியத்தில் இடம் பெற்றிருப்பதும் டாக்டர் ம. பொ. சி. அவர்களால் பின்வருமாறு விளக்கப்படுகிறது.

"பாஞ்சாலி சபதம் வெளியான நேரத்திலே தேசத்தில் திலகர், வ. உ. சி. போன்ற தீவிரவாதிகள் எல்லாம் சிறையில்

---

* பாரதியார் அச்சுப்பிரதியில் திருத்தியபடி

அடைக்கப்பட்டிருக்கிறார்கள். ஆம்; ஆங்கிலேய அரசு தேச பக்தர்களை யெல்லாம் வெறிபிடித்து வேட்டையாடிக் கொண் டிருக்கிறது.

"காங்கிரசை ஆக்கிரமித்துக்கொண்டிருந்த மிதவாதக் கூட் டமோ அதை ஆட்சேபிக்கவும் துணிவு பெறவில்லை. உதைத்த காலுக்கு முத்தமிடுவதுபோல, ஆண்டுதோறும் கூடும் மகாசபை யிலே பிரிட்டிஷ் அரசருக்கு ராஜவாழ்த்துப் பாடுவதும், அவருக்கு நன்றி தெரிவித்துத் தீர்மானம் போடுவதுமாக இருந்து கொண்டிருக்கிறது.விடுதலை வீரர்கள்வேட்டையாடப்படுவதைப் பொதுமக்களும் வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்.

"இவற்றை யெல்லாம் நினைத்து நினைத்துத் தமது நெஞ் சம் புண்ணாகியிருந்த நேரத்திலே பாரதியார் 'பாஞ்சாலி சபதம் படைக்கிறார். அதனாற்றான், அந்தக் குறுங்காப்பியத்திலே ஆங்காங்குப் பாரதிக்கு இருந்த விடுதலை ஆவேசம் வெளிப்படு கிறது. அந்த மகாகவியால் பாரத தேவியின் வடிவமாகவே பாஞ்சாலியைக் காணமுடிகிறது.

"துச்சாதனக் கொடியோன், பாஞ்சாலியின் கூந்தலைப் பிடித்து இழுத்தவண்ணம் அஸ்தினாபுரத்து வீதிவழியே அவ ளைக் கொண்டு செல்கிறான்.

"நகர மக்களெல்லாம் அந்தக் கொடுமையைப் பார்த்து மனம் நொந்தவர்களாகி, 'என்ன கொடுமையிது' வென்று கூறி முணுமுணுக்கிறார்கள். ஆம்; அதையும் உரத்துச் சொல்ல உள்ளத்திலே அச்சம்! பாஞ்சாலியை இழுத்துச் செல்பவன் அஸ்தினாபுரத்தின் இளவரசன் அல்லவா! அந்த அவல நிலை யைக் கூறுமிடத்திலே, பாரதி தன்னை மறந்து கதையில் தானே ஒரு பாத்திரமாகிப் பாடுகின்றான். ஆம்; காவியக் கவிஞனாகிய அவன் விடுதலை வீரனாகப் பேசுகின்றான், ..."

டாக்டர் ம.பொ.சி. : பாரதியார் பற்றி
ம.பொ.சி. பேருரை., பக். 112-113

'பாஞ்சாலி சபதம்' என்ற தலைப்புப் பற்றி டாக்டர் ம.பொ.சி. யின் விளக்கம்.

பாரதியார் தாம் படைத்த குறுங்காப்பியத்திற்குப் "பாஞ் சாலி சபதம்" என்று பெயரிடக் காரணம் அவர் ஒரு ஏகாதி பத்திய எதிர்ப்புப் போரிலே ஈடுபட்டிருந்ததுதான்.

"வியாசர், துரியோதனன் அவையில் நின்று பாஞ்சாலி வாதிடும் கட்டத்திற்கு, எழுச்சி தரும் வகையில் பெயர் தர வில்லை, 'திரௌபதியின் துயரம்" என்றுதான் சொல்லுகிறார்.

வில்லிபுத்தூரார் 'சூதுபோர்ச் சருக்கம்' என்று பெயர் தந்தார். வைணவப் பௌராணிகர்கள் 'திரௌபதி மான சம்ரட்சணம்' என்று பெயர் தந்துள்ளனர். நாடகக்காரர்கள், 'சூது-துகிலுரிதல்' எனப் பெயர் தந்துள்ளனர்.

"இவர்களிடமிருந்தெல்லாம் வேறுபட்டு நின்று, 'பாஞ்சாலி சபதம்' என்கிறார் பாரதியார். காரணம், அவர் பாஞ்சாலியைப் பாரத தேவியாகக் கண்டதுதான்."

— ஷை நூல் பக். 263–264

பாஞ்சாலி சபதம் உருவாகிய சூழலையும், விடுதலைப் போராட்ட உணர்வு கவிஞர் உள்ளத்திலே பாஞ்சாலி சபத மாக உருவானதையும் விரிவாக விளக்கமாகவும் டாக்டர் ம.பொ.சி. புலப்படுத்தியுள்ளார்.

## 75. யோக சித்தி [பக். 321]

'தேசாபிமானி' என்ற புனைபெயரில் எழுதியிருப்பவர் பாரதியாரே. 'ஞானபானு'வில் வெளிவந்த வடிவம் மட்டு மன்றிப் பாரதியாரின் கையெழுத்திலும் சில மாற்றங்கள் திருத் தங்களுடன் ஒரு படி இருக்கிறது. எனவே பிரதிபேதத்துக்கு இப்பாடலில் இடமுண்டு. கையெழுத்துப் படியில் உள்ள தலைப்பு "வரங் கேட்டல்" என்பதாகும்.

பாரதி ஆச்ரமப் பதிப்பில் இரு தலைப்புகளும் இடம் பெற்றன. பிற பதிப்புகளும் அவ்வாறே இரு தலைப்புகளையும் கொண்டன.

'ஞானபானு'வில் 'தேடிச் சோறு நிதம் தின்று' என்ற பாடல் (4) கையெழுத்துப் படியில் இல்லை; ஒன்பது பாடல்களே கையெழுத்துப் படியில் உள்ளன. அப்பிரதியில் "காளி, சக்தி, மாரி முதலியன உலகத்தின் மூல சக்தியைக் குறிக்கும் பெயர்களாம்" என்னும் குறிப்பைப் பாரதியார் வரைந்துள்ளார்.

## 122. விநாயகர் நான்மணி மாலை [பக். 493]

"நான்மணிமாலை-வெண்பாவும் கலித்துறையும் விருத்தமும் அகவலும் அந்தாதித் தொடையாக நாற்பது கூறுவது."

அபிதான சிந்தாமணி - பக். 1123

## 125. ஸ்ரீ எட்டயபுரம் மஹாராஜா....[பக். 519]

ஓலைப் பாசுரம், ஓலைத் தூக்கு எனவும், தமிழ் இலக்கியத்தில் சீட்டுக் கவிகளுக்கு வேறு பெயர் வழங்கும். 'தான்தற் புகழ்தலும் தகும் புலவோர்க்கே' என்பது புலவர்களுக்குத் தமிழ்மரபு வழங்கிய பெருமையாகும்.

சீட்டுக்கவிகள் குறித்துப் பாரதிபிரசுராலயப்
பதிப்பில் காணப்படும்-

குறிப்பு:- ஸ்ரீ பாரதியார் புதுவையிலிருந்து வெளியேறிய பிறகு, எட்டயபுரத்தில் சிறிது காலம் வசித்துவந்தார். ஜீவனத்திற்கு மிகவும் கஷ்டப்பட்டுக்கொண்டிருந்த காலம். இருந்தாலும், ஜமீந்தாரை நேரில் கண்டு, அவரது ஆதரவைப் பெறுவதற்கு விரும்பவில்லை, ஏனெனில், ஏற்கெனவே இந்த

சமஸ்தானச் சேவகத்தை உதறிவிட்டு வெளியேறியவர். மேலும், துரைத்தனத்தாரால் பாரதிக்கு ஏற்பட்டிருந்த தடைகளெல்லாம் அப்பொழுது நீக்கப்பட்டிருந்தபோதிலும், பாரதியாருக்கு உதவி செய்தால் தனக்கு ஏதேனும் பாதக மேற்படுமோவென்று ஜமீந்தார் பயங்கொண்டிருந்தார். ஆதலின், பாரதியார் தமக்கு இச்சமயம் சரியான ஆதரவும் மரியாதையும் கிடைக்காது என்று கருதி, வறுமையின் கொடுமையைப் பொறுத்துக்கொண்டிருந் தாரே யொழிய, ஜமீந்தாரின் உதவியை நாடவில்லை, ஆனால் இவர் படும் கஷ்டத்தைச் சகிக்காமல் இவரது நண்பர்களும் பந்துக்களும் இவரை மிகவும் நிர்பந்திக்கவே, ஜமீந்தாருக்கு இவ்விரண்டு சீட்டுக்கவிகளையும் எழுதியனுப்பினார்.

பன்னிரண்டு ரூபாய்க்குச் சேவகஞ் செய்துவந்த பழைய 'சுப்பையா' வாகத் தன்னைக் கருதாமல் கவியரசனைப் புவி யரசன் தக்கபடி ஆதரிக்க வேண்டுமென்பதை இந்தப் பாக்கள் நன்கு விளக்குகின்றன.

## 135. பாரத ஸமுதாயம் [பக். 544.]

'பாரத ஸமுதாயம்' என்ற பாடலைப் பாரதியார் சென்னைத் திருவல்லிக்கேணி திலகர் கட்டத்தில் பாடியதைத் தாம் கேட்ட தாகத் தமிழ் அறிஞர் வெ. சாமிநாத சர்மா அவர்களும் குறிப் பிட்டுள்ளார். இப்பாடல் 1920-ஆம் வருடம் இயற்றப்பட்டது என்பதற்கும் இவர் கூற்றுச் சான்றாக உள்ளது.

வரலாற்று நூலாசிரியர் வெ. சாமிநாத சர்மா அவர்களின் கூற்றை ஆசிரியர் அணுக்கச் சான்றாகக் கொள்ளலாம்.

**ஆசிரியர் அணுக்கச் சான்று:**

"1920-ஆம் வருஷம் பாரதியார் சென்னை போந்த காலத் தில், சத்தியாக்கிரக இயக்கமும் கிலாபத் கிளர்ச்சியும் மும்முர மாக இருந்தன. முஸ்லிம்கள் காங்கிரஸில் அதிக பங்கெடுத்துக்

கொண்டிருந்தார்கள். காந்தியடிகளின் செல்வாக்கு உச்சத்திற்கு வந்து கொண்டிருந்தது. இந்தக் காலத்தில் அரசியல் சம்பந்த மான பொதுக் கூட்டங்கள் பெரும்பாலும் திலகர் கட்டத் திலேயே நடைபெறுவது வழக்கம். இந்தக் கூட்டங்களில் நாட்டுப்பற்றும் தியாக உணர்ச்சியும் மேலிட்டிருக்கும். கூட்டங் கள் மாலையிலேயே நடைபெறும் என்பதைச் சொல்லத் தேவை யில்லை.

...... அந்தச் சமயத்தில் உணர்ச்சியூட்டக் கூடிய தேசியப் பாடல்கள் பாடப்பெறும். இவற்றுள் பாரதியாரின் தேசியப் பாடல்தான் அதிகமாக இருக்கும். பாரதியாரே சில சமயங் களில் பாடுவார். ஒருசமயம் 'அல்லா, அல்லா, அல்லா' என்ற தொடக்கத்துப் பாடலைப் பாடினார். அஃது இன்னும் என் செவிகளில் ஒலித்துக் கொண்டிருக்கிறது. இன்னொரு சமயம் 'பாரத சமுதாயம் வாழ்க வாழ்கவே' என்று ஆரம்பிக்கும் பாடலைப் பாடினார். அதுவும் என் உள்ளத்தில் உறுதியாக நிலைத்திருக்கிறது.

நூல்: நான் கண்ட நால்வர்
கட்டுரை: கவிகுலக்கோன் - (பக். 227)

## 170. வேலன் பாட்டு [பக். 648]

வேலனென்றது யாக மூர்த்தியாகிய அக்நி தேவனை; இவன் ருத்ர குமாரன், தேவஸேனாபதி; ப்ரஹ்மத்தைக் காப் பவன், ஸுப்ரஹ்மண்யன்.

மேலே எழுதின பாட்டையும் புன்னாகவராளி ராகத்தில் பாடலாம்.

முதற் பாட்டு

வெற்பென்பது கிரௌஞ்ச மலையை. அஞ்ஞானமாகிற

'மலையை உடைத் தெறிந்து அதிலுள்ள அமிர்த நதிகளை உடைத்து வெளியேற்ற வேண்டு மென்று பாடுபடும் தேவர் களுக்கு ஸேனாபதியாகையால், அவனுடைய புருவம் கோபத் தினால் வளைந்த மாத்திரத்திலே மலை நொறுங்கிப் பொடிப் பொடியானதாகச் சொல்லப்படுகிறது வேதத்தில்.

கல்லினைப் போல வலிய மனங்கொண்ட பாதகனாவது சிங்க முகாசுரன். அவனுக்கு ஆயிரந் தலையாதலால் அவனு டைய இரண்டாயிரம் கண்களையும் காக்கைக்கு இரை போட்ட தாகச் சொல்லப்படுகிறது.

வள்ளி ஆக்நேய சக்தியில் வீர சக்தி. தேவயானை போக சக்தி. வள்ளி மஹாலக்ஷ்மியின் மகள்; மான் வயிற்றில் பிறந்து வேடர் குடியிலே வளர்ந்தாள். (வேதத்தில் இந்த இரண்டு சக்திகளுமே ஸ்வாஹா என்றும், ஸ்வதா என்றும் சொல்லப்படு கின்றனபோலும்).

**இரண்டாம் பாட்டு**

கடலை வேல் வெருட்டியடித்தது. வேதத்தில் மருத்துத் தேவர்கள் கையில் வேல் கொண்டுவருவதாகச் சொல்லப்படு கிறது. வேல் என்ற தமிழ்ச் சொல் வெல் என்னும் பகுதியடி யாகப் பிறந்தது. வெற்றி யென்றர்த்தம்; சிவகுமாரனாகிய யாகநாதன் கையில் வெற்றிக் குறி நிற்கிறது. அதற்குக் குமாரன் ஆதாரம். மஹாசக்தி முருகனைப் போருக்குப் போகச் சொல்லுகையில் அந்த வேலைத் தன் பெயரால் சக்தி வேலென்று சொல்லி, மகன் கையிலே கொடுத்தாள்.

'கொள்ளை கொண்டே யமராவதி வாழ்வு குலைத்தவன்' பானு கோபன். இவன் என்ன செய்தா னென்றால் தொட்டிலில் குழந்தையாகப் படுத்திருக்கும்போதே ஸூர்யனிடத் தில் சண்டைக்குப் போய், ஸூர்யனைச் சிறைப்படுத்தினான். இருளே உருவாகப்பட்டவன், ஞான ஸூர்யனிடம் பகைமை செலுத்தின இவன் தலையைக் குமார தேவன் துண்டு படுத் தினான்.

வள்ளி திணைத் தோட்டத்தில் மான்போலே சுற்றிக் கொண்டு வருகிறாள். மஹாலக்ஷ்மியின் சித்திரங்களி லொன்று. லக்ஷ்மி குமாரியை வனத்தில் தனியிடத்திலே கண்டு தான் இன்னானென்று தெரியாதபடி கிழப் பிராமண வேஷந்தரித்துக் கொண்டுபோய் அண்ணனை யானையாக வரச் சொல்லி அண்ணனுதவியால் அவளை மணம் புரிந்துகொண்டான்.

மூன்றாம் பாட்டு

மாறுபடப் பலவேறு வடிவோடு தோன்றுவாள் பராசக்தி; ப்ரபஞ்ச முழுதும் அவளுடைய சரீரமாகையினாலே, அந்த மஹாசக்தி அஸுர தண்டனையின் பொருட்டாகவும் ஸர்வ லோக ஸம்ரக்ஷணையின் பொருட்டாகவும அக்நி குமாரனைப் பெறுகிறாள். யோக சாஸ்திரத்தில் மூலாதாரத்தி லிருந்து அக்நி புறப்படுகிறது. ஹ்ருதயமாகிற குகைக்குள்ளே அக்நி வளர்வதனாலே அவனுக்குக் 'குஹன்' என்ற பெயருண்டாயிற்று. சக்தியி லிருந்து வீர்யம் ஜனிக்கிறது. ஞான ரூபியாகவும் வீர்ய ரூபியாகவும் ஜய ரூபியாகவும் இருந்து வேள்வியைப் பாதுகாத்து வேள்வியில் விருந்துண்ணும்படி தேவர்களை அழைத்துக் கொண்டு வந்து அவர்களுக்கு ஸோமரஸத்தைக் கொடுத்து யஜமானனை அமிர்தனாகச் செய்து ஜீவன் முக்தி நிலைமையிலே சேர்ப்பவன். "ஜீவன் முக்தி" என்ற மற்றொரு பாட்டில் இந்த விஷயம் விஸ்தரிக்கப்படும்.

## 178. கற்பனையூர் [பக். 663]

'The Herald of the Star' என்ற பத்திரிகையில் (Vol. 7, no. 1) 1918, ஜூன் மீ' வெளியான 'The Town Let's Pretend' என்னும் கவிதையின் தமிழாக்கம். மூலக் கவிதை எழுதியவர்: ஜான் ஸ்கர் (John Scurr).

"இதன் பொருள்: கற்பனை நகரமென்பது சித்தத்தில் குழந்தை நிலை பெறுவதை இங்குக் குறிப்பிடுகிறது. 'யோவான்'

என்பது குமார தேவனுடைய பெயர். 'அக்கடவுள் மனிதனுக்குள்ளே நிலைபெற்று, மனிதன் மோக்ஷமடைவதற்கு முன்னர்க் குழந்தைப் பருவத்தை அடையவேண்டும்' என்று யேசுகிறிஸ்து சொல்லியிருக்கும் பொருளை இப்பாடல் குறிப்பிடுகிறது. கவலைகளை முற்றும் துறந்துவிட்டு உலகத்தை வெறுமே லீலையாகக் கருதினாலன்றி மோக்ஷம் எய்தப்படாது" - இது பாரதியார் எழுதிய குறிப்பு.

மூலப் பாடல்:

Now this is the town of 'Let's Pretend'
Where the fairies live and play;
'Tis the gorgeous land of 'Make Believe'
Where everyone is gay.

This chair has become a pirate ship
That sails the Spanish Main —
Full many a man must walk the plank
Ere we come home again.

Tis here the young prince will welcome us
With kiss that awoke his wife;
For happy they are, for ever and aye,
Free from all care and strife.

We'll drink our tea from dolly's cup,
Sweet nectar it will be.
We must hide away from the giant ogre
Till Jack can set us free

The children dwell in this pleasant town
Where the toys all pure with life;
Each doll is a queen in a golden brown
Or else's a prince's wife.

Each firewood stick is a dagger ormate
To destroy the Red Skin chief,
And with cards or bricks we build a house
Which never shall shelter a thief.

O would that we of the elder breed
Whose youth has passed away
Could dream again as we dreant of you
As the children dream at their play.

But the deer sweet Land of 'Make Believe'
We never can enter again;
We have grown too old and cannot pretend
Nor castle build in Spain.

## 190. வள்ளிப் பாட்டு

இந்தப் பாடல் முதன்முதலாக 1920-ஆம் வருடத்திய "சுதேசமித்திரன்" ஆண்டு மலரில் வெளிவந்ததாகத் தகவல் தந்துள்ளார், 'சென்றுபோன நாட்கள் – சுப்பிரமணிய பாரதியார்' என்ற தொடர் கட்டுரையில், எஸ். ஜி. ராமாநுஜலு நாயுடு.

"காதல் முறையில் நவீனமாகக் கவிதைகள் இயற்ற வேண்டுமென்றும், 'பச்சை பச்சை'யாக எழுதும் வழக்கம் தவிர்க்கப்பட வேண்டுமென்றும் தெரிவித்து, அதற்கு உதாரணமாக "வள்ளிப்பாட்டு" என்ற சிங்கார ரஸ கீர்த்தனையை 1920-ஆம் வருஷ "மித்திர"னின் அநுபந்தத்தில் வெளியிட்டார். இன்னும் அநேக பாடல்கள் இயற்றி வைத்து இருப்பதாகவும் அதன் முகவுரையில் கூறியிருந்தார். இனியும் இயற்றலாம் என்று எவ்வளவோ கருதியிருக்கலாம்"

என்றும் அவர் தமது கட்டுரையில் குறிப்பிட்டுள்ளார்.

எவ்வளவு முயன்று தேடியும் இவ் ஆண்டு மலரில் பாடல் வெளிவந்த பகுதி பார்வையில் படவில்லை. திரு. இராமானுஜலு நாயுடுவின் செய்தி தவறாக இருக்கமுடியாது; அவர் குறித்துள்ள ஆதாரம் வேறாக இருக்கவேண்டும்.

## 215. பாரத மாதா நவரத்ந மாலை [பக். 736]

'நவமணி மாலை' என்ற பிரபந்த வகையினையே 'நவ ரத்தின மாலை' எனப் பாரதி குறிப்பிடுகிறார்.

"நவமணி மாலை - வெண்பா முதலாக வேறுபட்ட பாவும பாவினமுமாக ஒன்பது செய்யுள் அந்தாதித்துப் பாடுவது"
– அபிதானசிந்தாமணி.

"நவமணிமாலை தமிழில் வழங்கும் விருத்தத்தால் ஒவ்வொரு செய்யுளிலும் தேவர்கள் காக்கவென அமைத்து, ஒன்பது செய்யுட்கள் பாடுவது என்று வெண்பாப் பாட்டியல் கூறும் (24). வெண்பா முதலாக வெவ்வேறு பாவாலும் பாவினத்தாலும் ஒன்பது பாட்டு அந்தாதியாகப் பாடுவது என்று இலக்கண விளக்கப் பாட்டியல் கூறும் (77). பன்னிரு பாட்டியலும் பாவாலும் பாவினத்தாலும் கலந்து ஒன்பது பாட்டுக்கள் அமைப்பது என்று கூறும். அந்தாதியாக இருக்கவேண்டுமென்று கூறவில்லை (183)" – கலைக் களஞ்சியம், தொகுதி ஆறு- பக்: 311-2 பாரதியார் இலக்கண விளக்க விதியைப் பின்பற்றி யுள்ளார்.

ஏழாவது பாடல் கலிப்பா என்று பாரதி குறிப்பிட்டிருக் கிறார். அரசாங்கப் பதிப்பினைத் தவிர வேறு எந்தப் பதிப் பிலும் கலிப்பாவுக்கு உரிய வகையில் சீர் பிரிக்கப்பெறவில்லை.

**'கட்டளைக் கலிப்பா'** என்னும் வகையைச் சேர்ந்தது இப் பாடல். ஒவ்வோரடியிலும் எட்டுச் சீர்கள் கொண்ட நான்கு அடிகளால் ஆனது, இப்பா; மேலும், எழுத்து எண்ணிக்கையில் ஒரு கட்டுப்பாடு உடையது. ஒவ்வோர் அரையடியிலும் பன்னி ரண்டு பதினொன்று என்ற எழுத்துக் கணக்குப் பிழையாமல் இருக்கவேண்டும். நிரையசையில் தொடங்கினால் பன்னிரண்டு எழுத்தும், நேரசையில் தொடங்கினால் பதினோரெழுத்தும் இருக்கவேண்டும். எண்ணும்போது மெய்யெழுத்துகள் கணக்கில் சேரமாட்டா. எழுத்துச் சீரமைப்பில் இந்தக் கட்டுப்பாடு

இல்லாவிட்டால், எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தமாகி விடும், மூன்றாவது பாடல் எண்சீர் விருத்த மாதலின், மீண்டும் அதே பாவினம் இடம் பெறுதற்கில்லை என்பதை நினைவிற் கொள்ள வேண்டும்.

கட்டளைக் கலிப்பாவுக்குப் பெரியவர்கள் கூறியுள்ள பதினொன்று, பன்னிரண்டு என்ற எழுத்துக் கணக்கு இப் பாடலில் இல்லை. ஆயினும், நேரசையில் தொடங்கும் அரை யடிக்குப் பத்து எழுத்தும் நிரையசையில் தொடங்கும் அரை யடிக்குப் பதினோர் எழுத்தும் என்ற கட்டளை செம்மையாக அமைந்துள்ளது. பாரதி பாடல்களில் இவ்வகையான கட்டளைக் கலிப்பாக்கள் மேலும் பல உள.

## 218. தமிழ் மொழி வாழ்த்து [பக். 745]

வாழ்க தமிழ்மொழி வாழ்க தமிழ்மொழி
வாழிய வாழியவே

எங்கள் தமிழ்மொழி எங்கள் தமிழ்மொழி
என்றென்றும் வாழியவே

வான மளந்த தனைத்து மளந்திடு
வண்மொழி வாழியவே

என்ற பகுதிகளைத் தனித்தனிப் பாடல்கள் போலப் பாரதி ஆச்ரமம் 'சுதேசகீதங்கள்' முதற்பதிப்பில் வெளியிட்டது. அது முழுப்பாடலின் வடிவம் அன்று. இரண்டு வகையான தவறு களால் இப்படி நிகழ்ந்திருக்கக் கூடும். ஒன்று; பாரதியாரின் கையெழுத்திலே தனித்தாளில் அந்த வரிகள் இருந்திருக்கலாம் மனத்தில் தோன்றிய தொடர்களை அவர் எழுதிவைத்திருக்கக் கூடும். இரண்டு; அந்த வரிகள் ஒரு முழுப்பாடலின் சிறு சிறு பகுதிகளே என்பது பதிப்பித்தவர்களுக்குத் தெரியாம லிருந்திருக்க வேண்டும். முழுமையான வடிவத்தையும் சிறு பகுதிகளாகிய தொடர்களையும் ஒப்பிட்டு நோக்காமையாலும்,

யாப்பியற் கண்ணோட்டம் பெறாமையாலும் தவறு நிகழ்ந் திருக்கிறது. மேலே குறித்த தொடர்களைத் தனித்தனிப் பாட்டு கள்போல எண்ணி 1, 2, 3 என எண்கள் இட்டுமே 'சுதேச கீதங்கள் முதற் பகுதி'யில் அச்சிட்டுள்ளனர். பாடலின் முழுவடி வத்தைச் 'சுதேச கீதங்கள் இரண்டாம் பகுதி'யில் வெளியிட்ட போதும் எட்டுப் பாடல்கள் என்று கணக்கிட்டு அச்சிட்டுள்ளனர்.

## 230. நந்த லாலா [பக். 769]

சுதேச கீதங்கள் இரண்டாம் பதிப்பு (1922) வெளிவந்த போது 'காக்கைச் சிறகினிலே', 'பார்க்கு மரங்களெலாம்', கேட்கு மொலியிலெல்லாம்' என்று தொடங்கும் அடிகளைத் தனித்தனிப் பாடல்களாகக் கருதி, 3 பாடல்கள் கொண்ட கவிதையாக வெளியிட்டனர்.

பாரதி பிரசுராலயத்தார் வெளியிட்ட தொகுதியில் 'தீக்குள் விரலை வைத்தால்' என்று தொடங்கும் வரியையும் சேர்த்தனர். அந்தப் பதிப்பிலும் ஒரே பாடல் என்ற எண்ணம் தோன்றாமல் நான்கு பாடல்களாகவே பதிப்பித்தனர். இது ஒரே எழுசீர் விருத்தமாகும். 'சந்திரிகையின் கதை'யில் சந்திரிகை பாடுவதா கப் பாரதியார் முதல் மூன்று வரிகளை இணைத்திருக்கிறார்.' அங்குள்ள பாடல்:

பார்க்கு மரத்தி லெல்லாம் நந்த லாலா - நின்றன்
பச்சைநிறந் தோன்றுதடா நந்த லாலா
காக்கைச் சிறகினிலே நந்த லாலா - நின்றன்
கரியவிழி தோன்றுதடா நந்த லாலா
கேட்கு மொலியி லெல்லாம் நந்த லாலா - நின்றன்
கீத மிசைக்குதடா நந்த லாலா
தீக்குள் விரலை வைத்தால் நந்த லாலா - நின்னைத்
தீண்டு மின்பந் தோன்றுதடா நந்த லாலா

அங்கே 'நந்தலால் பாட்டு' என்ற தலைப்பைப் பாரதியார் தந்திருக்கி றார். கதையிலே இதற்கு அவர் தந்துள்ள ஸ்வர வரிசை:

ஸஸ்ஸாஸா - ஸம்மாபதா - பததபபமபா - பாபா
பநீஸதபா - மாகா - ஸரிமகரீ - கெகரிரிஸஸா

என்பதாகும்.

காக்கைச் சிறகினிலே நந்தலாலா - நின்றன்
கரியநிறந் தோன்றுதையே நந்தலாலா
பார்க்கு மரங்களெல்லாம் நந்தலாலா - நின்றன்
பச்சைநிறந் தோன்றுதையே நந்தலாலா
கேட்கு மொலியிலெல்லாம் நந்தலாலா - நின்றன்
கீதமி சைக்குதடா நந்தலாலா
தீக்குள் விரலைவைத்தால் நந்தலாலா - நின்னைத்
தீண்டுமின்பந் தோன்றுதடா நந்தலாலா

என்பதே முழுப்பாடலின் வடிவாக இருக்கவேண்டும். கையெழுத்துப் படியில் எப்படியோ கடைசியடி விடுபட்டிருக்கக் கூடும். பா. பி. தக்க ஆதாரம் கொண்டே நான்காம் அடியைச் சேர்த்து அச்சிட்டிருப்பர். ஆனால், ஒவ்வோர் அடியையும் ஒவ்வொரு பாடலாக எண் இட்டது தவறு. இரண்டு அடியாக அச்சிட்டுள்ள ஒவ்வோர் அடியும் கண்ணியாகவும் கொள்ள முடியாமை உணரத் தக்கது. இஃது எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தமாகும்; ஒன்பது சீராகவும் எட்டுச் சீராகவும் பிரிக்க இடமுண்டு; எப்படியும் இந்த வரிகள் யாவும் ஓரே பாடலின் வரிகளே; இதுவரை அச்சிட்டுள்ளது போல நான்கு வெவ்வேறு பாடல்களல்ல.

## 231. மறவன் பாட்டு [பக். 770]

(முழுவடிவம்)

(ஆதாரம்: பாரதி புதையல் III - பக். 8-9)

மண்வெட்டிக் கூலிதின்ன லாச்சே! – எங்கள்
வாள்வலியும் தோள்வலியும் போச்சே
விண்முட்டிச் சென்றபுகழ் போச்சே - இந்த
மேதினியில் கெட்டபெய ராச்சே 1

நாணிலகு வில்லினொடு தூணி - நல்ல
நாதமிகு சங்கொலியும் பேணி

பூணிலகு திண்கதையும் கொண்டு - நாங்கள்
போர்செய்த காலமெல்லாம் பண்டு 2

### தற்கால ஜீவனம்

கன்னங் கரியவிருள் நேரம் – அதில்
காற்றும் பெருமழையும் சேரும்
சின்னக் கரியதுணி யாலே - இந்தத்
தீயவுடல் மூடிநரி போலே 3

மெல்லப் பயந்து மிகப்பதுங்கி - ஒரு
வேற்றுருவம் கண்டபொழு தொதுங்கி
சொல்லக் கொதிக்குதடா நெஞ்சம் - வெறும்
சோற்றுக்கோ வந்ததிந்தப் பஞ்சம் 4

ஏழை எளியவர்கள் வீட்டில் - இந்த
ஈன வயிறுபடும் பாட்டில்
கோழை யெலிகளென்னச் சென்றே - பொருள்
கொண்டிழிவின் வருகிறோம் இன்றே[1] 5

### அதில் கஷ்டங்கள்

நாயும் பிழைக்குமிந்தப் பிழைப்பு[2] - ஐயோ
நாளெல்லாம் சுற்றிதிலே உழைப்பு[3]
பாயும் கடிநாய்ப்போ லீசுக் - காரப்
பார்ப்பானுக் குண்டதிலே பிழைப்பு[4] 6

பேராசைக் காரனடா பார்ப்பான் - ஆனால்
பெரியதுரை என்னிலுடல் வேர்ப்பான்
யாரானா லுங்கொடுமை இழைப்பான்[5] - துரை
இம்மென்றால் நாய்போலே உழைப்பான்[6] 7

---

1 தனிச் சொல்லை விடுத்து நோக்கின் நெடுகிலும் வரும் வெண்டளை இங்கே பிழைபடுகிறது. காய்முன் நிரை வெண்டளையில் வாராது.

2, 3, 4, 5, 6, - வெண்டளை பிழைக்கும் இடங்கள்

– பதிப்பாசிரியர்

முன்னாளில் ஐயரெல்லாம் வேதம் - சொல்வார்
　　மூன்றுமழை பெய்யுமடா மாதம்
இந்நாளில் பொய்மைப்[1]* பார்ப்பார் - இவர்
　　ஏதுசெய்தும் காசுபெறப் பார்ப்பார் 8

பிள்ளைக்குப் பூணூலாம் என்பான் - நம்மைப்
　　பிய்த்துப் பணம்கொடெனத் தின்பான்
கொள்ளைக்கே சென்றொருபொய் மூட்டி - நம்மைக்
　　கொண்டதிலே தொல்லைசெய்வான் மாட்டி 9

சோரந் தொழிலாக்கொள் வோமோ — முந்தை[2]
　　சூரர் பெயரைஅழிப் போமோ
வீர மறவர்நாம் அன்றோ - இந்த
　　வீண்வாழ்க்கை வாழ்வதினி நன்றோ? 10

## 242. புதிய கோணங்கி [பக். 815]

பாரதியார் எழுதிய 'புதிய கோணங்கி' என்ற கதையினிடையே இந்தப் பாடல் இடம் பெற்றிருக்கிறது.

## 243. பெண் விடுதலை [பக். 817]

'சியூசின்' என்பான் சீன மொழியில் இயற்றிய பாடலின் தமிழாக்கம் இப்பாடல். 'சியூசின் செய்த பிரசங்கம்' என்ற பாரதியின் கட்டுரையில் இடம்பெறுகிறது இப்பாடல்.

---

*வெண்டளை பிழைக்கும் இடம் - பதிப்பாசிரியர்

1 பொய்ம்மை என்றிருத்தல் வேண்டும், (இந்நாளிலே பொய்ம்மைப் பார்ப்பார்' என்பது சரியான பாடம்) — பதிப்பாசிரியர்

2 'முந்தைச்' என்றிருத்தல் வேண்டும். - பதிப்பாசிரியர்

## 244. எங்கள் மதம் [பக். 819]

இப்பாடலை முதன்முதலாகப் பரலி சு. நெல்லையப்பர் தம்முடைய 'லோகோபகாரி' 20-11-1938 நாளிட்ட இதழில் வெளியிட்டார். இந்த இதழ் எமக்குக் கிடைக்கவில்லை. மீண்டும் அதே இதழில் 1947 தீபாவளி மலரில் வெளிவந்தது. அந்த மலரில் வெளிவந்தவாறு இப்பதிப்பில் பாடல் வாசகம் அமைந்துள்ளது; ஆனால் வடிவம் மாற்றப்பட்டுள்ளது. 1954-இல் கரூர், பாரதி கழகம் இப்பாடலை இலவச வெளியீடாக வெளி யிட்டது, 1957-இல் சக்தி காரியாலயம் வெளியிட்ட பாரதியார் கவிதைத் தொகுதியில் இணைக்கப்பட்டது."

பாரதியார் இப்பாடலுக்குத் தந்த தலைப்பு: 'எங்கள் மதம்' என்பதே யாகும். "My Journal of Thoughts and Deeds" என்ற குறிப்பில் List of Works என்ற பகுதியில் 'எங்கள் மதம்' என்ற வரி (பக். 90) காணப்படுகின்றது.

## 245. வ.உ.சி.க்கு வாழ்த்து [பக். 824]

ஸ்ரீமான் சிதம்பரம் பிள்ளையவர்கள் கோயமுத்தூர்ச் சிறைக் கோட்டத்தில் இருந்த பொழுது, புதுவையிலிருந்து அவரைக் காணச் சென்ற பரலி சு. நெல்லையப்பரிடம் ஸ்ரீமான் சுப்ரமணிய பாரதியார் மூன்று அழகிய பாடல்களை எழுதி அனுப்பினார். மூன்றில் ஒன்று மட்டுமே கிடைத்திருக்கிறது. இது பாரதியாரின் அக்கால மனப்பான்மையை விளக்குவ தாகும்.

திருவாளர் சிதம்பரனார் சிறைக் கோட்டத்திலிருந்து திரும்பி வந்தபொழுது, அவரை வரவேற்கும் முறையில் ஸ்ரீ ராமபிரான் வன வாசத்திலிருந்து திரும்பி வந்த பொழுது

அயோத்தி நகர மக்கள் அவரை வரவேற்ற முறையில் கம்பர் பாடிய மூன்று அழகிய பாடல்களை ஸ்ரீமான் பாரதியார் எழுதி அனுப்பினார்.

"வீரச்சிதம்பரம்" பற்றிய கட்டுரையில்
சுத்தானந்தபாரதியார்.

(பரலி சு. நெல்லையப்பர் எழுதிய "வ. உ. சிதம்பரம்பிள்ளை சரித்திரம்" என்னும் நூலில் இச்செய்தி தரப்பெற்றுள்ளது.)

## 248. மயில் வீரன் [பக். 830]

'அண்ணாமலை ரெட்டியாரைப் போல யாரேனும் காவடிச் சிந்து பாடமுடியுமா' என்று எட்டயபுரம் சமஸ்தானப் புலவர்கள் கேள்வி எழுப்பியபோது, பாரதியார் முருகன் மீது காவடிச்சிந்து பாடியதாக ஒரு செய்தி உண்டு. நாவலர் ச.சோ. பாரதியார் அவர்களும் இச்செய்தியைக் குறிப்பிடுகிறார். (சுதேச கீதங்கள் - முதற்பாகம் பக். XXII - XXIII). அவர் பாடலைத் தரவில்லை. ஆயினும், பலர் ஒரே ஒரு சரணத்தை மட்டும் குறிப்பிட்டுச் சொல்கின்றனர். பாரதியாரின் தம்பி திரு. விசுவநாத ஐயர் எழுதிய நூலில் இப்பாடற் பகுதி காணப்படுகிறது.

## 251. காதலும் துறவும் [பக். 833]

இப்பாடலை முழுவடிவில் வெளியிட்டவர் பாரதியாரின் இளவல் திரு. சி. விசுவநாத ஐயர் ஆவார். 1966 'கலைமகள்' தீபாவளி மலரில் இது வெளியாயிற்று.

'பாரதி நினைவுகள் - புதுவையில் பாரதியார்' என்ற தொடர்கட்டுரையில் திரு. வி. எஸ். குஞ்சிதபாதம் இப் பாடலின்

ஆறு வரிகளை முன்பின்னாக மாற்றி எடுத்துக்காட்டி எழுதியுள்ளார்.

பாரதி பாடல்களை அவருடைய மனைவியார் திருமதி செல்லம்மா அவர்கள் 1922இல் வெளியிடும் முயற்சியைத் தொடங்கிச் செய்தார்; இரு தொகுதிகளை வெளியீடவும் செய்தார். அவருடைய முயற்சிக்குப் பயன்படும் வகையில் சென்னையில் இருந்த திரு. ந. சே. வரதன் என்பவர் இப் பாடலை அனுப்பித் திருமதி செல்லம்மாவுக்கு ஒரு கடிதமும் எழுதியிருக்கிறார். அந்தக் கடிதத்தில் இப்பாடல் எழுந்த பின்னணி வரலாறு புலப்படுத்தப்படுகிறது. அந்தக் கடிதம் வருமாறு.

39, புதுத்தெரு,
மயிலாப்பூர், சென்னை
1- சித்திரை -துந்துபி௵

அம்மணி,

இத்துடன் ஸ்ரீமான் சுப்பிரமணிய பாரதியாரின் அருமையான பாடல் ஒன்று அனுப்பியிருக்கிறேன். அவர் புதுச்சேரியில் இருந்தபோது. 'காதலும் கன்னியா விரதமும்' என்ற சிறு கதைக்கு முகவுரையாக எழுதிக்கொடுத்த பாடல் அது. சில காரணங்களால் அப்புஸ்தகம் பிரசுரிக்கப்படாமல், அப்பாடல் என்னிடம் தங்கி விட்டது. அப்பாடல் என் மனத்தை மிகவும் கவர்ந்துவிட்டமையால் அதைப் பொதுஜனங்களும் படித்து ஆனந்திக்க வேண்டித் தங்களுக்கு அனுப்புகிறேன். தாங்கள் ஸ்ரீமான் பாரதியாரின் அருமைப் பாட்டுக்களைப் புஸ்தக ரூபமாய் வெளியிடும் அரிய கைங்கரியத்தை மேற்கொண்டதற்காகத் தமிழ் மக்கள் தங்களுக்கு மிகவும் கடமைப்பட்டிருக்

கிறார்கள். கவி வந்துசேர்ந்ததைத் தெரிவித்தால் வந்தனமுள்ள வனா யிருப்பேன்.

தங்கள் உண்மையுள்ள,
ந. சே. வரதன்

கடிதத்தின் சொற்களை நோக்கினால், 'காதலும் கன்னியா விரதமும்' என்ற கதை நூலை எழுதியவரே இந்த வரதனாக இருக்கலாமென்று எண்ண இடம் இருக்கிறது. இவர் யார் என்ற விவரம் எதுவும் தெரியவில்லை.

ஆனால், இந்தக் கடிதத்தைத் திரு. விசுவநாத ஐயர் பாது காப்பாகப் பேணி வைத்திருக்கிறார்.

## 252. அபிமன்யு இறந்தபோது ...... [பக். 834]

இங்கே வெளியாகி யிருப்பது நான்கு கண்ணிகளே. 'கர்ம யோகி' பத்திரிகையில் முழுவதும் வெளிவந்ததாகப் பரலி சு. நெல்லையப்பர் திரு. ரா. அ. பத்மநாபனிடம் தெரிவித்திருக் கிறார். நெல்லையப்பரின் நினைவிலிருந்து சொல்லிய இந்த நான்கு கண்ணிகள் மட்டுமே 'பாரதி புதைய'லின் மூன்றாம் தொகுதியில் வெளிவந்தன. இதுவரை 'கர்மயோகி' யின் ஒரே இதழ்தான் கிடைத்துள்ளது; அதில் இந்தப் பாடல் இல்லை இந்தத் தகவலைப் 'பாரதி புதையல்' ஆசிரியர் குறிப் பிட்டுள்ளார்.

'பாரதி புதைய'லுக்குப் பின் 'பெருந்திரட்'டிலும் இது வெளியாகி யிருக்கிறது.

## 254. பெரியோர் பெருமை [பக். 836]

15-9-1968 'கல்கி' இதழில் திரு. கு. அழகிரிசாமி இப் பாடலை வெளியிட்டார். திரு. இராமானுசலு நாயுடு ஆசிரிய

ராக இருந்த 'ஆனந்தகுண போதினி' என்ற மாதப் பத்திரிகை யின் முதல் இதழில் (ஏப்ரல் 1926) பாரதியின் பெயரால் இப் பாடல் வெளிவந்திருப்பதாகத் திரு. கு. அழகிரிசாமி தெரிவித் துள்ளார்.

## 256. விஷ்ணு சரணம் [பக். 839]

பாரதியாரின் மூத்த மகள் திருமதி தங்கம்மாளின் நூல் (கட்டுரை மணி மாலை - பக். 19) இப்பாடலைத் தருகிறது ஆனந்த விகடன் தீபாவளி மலரிலும் (1937) வெளிவந்தது.

இந்தப் பாடல் எழுந்த சூழல்பற்றித் தங்கம்மாள் தரும் தகவல்: "எங்காவது முஸ்லிம் நண்பர்களைக் கண்டால்,ஹிந்துஸ் தானியில்தான் அவர்களோடு ஸம்பாஷிப்பார். திருநெல்வேலி ஜில்லா கடையத்தில் இருக்கும்போது அடுத்த சிற்றூரான பொட்ல புதூரிலிருந்து கூட்டங் கூட்டமாக முஸ்லிம் சகோ தரர்கள் வந்து பேசிவிட்டுச் செல்வார்கள். குரானைத் தமிழில் மொழிபெயர்க்கும்படி ஒரு நண்பர் கேட்டுக்கொண்டார். அச் சமயம் பாரதி,

'பிஸ்மில்லா இர்ரஹமானிர் ரஹீம்
அல் அம்துலல்லா லப்துலா ரஹீம்'

என்னும் குரான் வார்த்தைகளின் சந்தத்திற்கு இணங்க ஒரு ஸம்ஸ்கிருதப் பாட்டு எழுதினார்" - இச்செய்தியைத் தொடர்ந்து இப்பாடலைத் திருமதி தங்கம்மாள் தருகிறார்.

## 257. கிருஷ்ண, ராதே [பக். 840]

பாரதியாரின் இளைய மகள் சகுந்தலா அம்மையார் தரும் தகவல்: "மேற்கண்ட இரண்டு சிறிய சமஸ்கிருதப் பாட்டுக் களும் ஸ்ரீ கிருஷ்ண ஜயந்தியன்று இயற்றினார். அவைகள் அவர் எழுதிவைத்திருந்த கையெழுத்துப் பிரதிகளுடன் வைக்கப்

படவில்லை. எங்கோ காணாமற் போய்விட்டன போலும்'' 'என் தந்தை' (பக். 81)

## 258. தலைவர்கள் வாழ்க [பக். 841]

மேற்குறித்த நூலிலேயே திருமதி சகுந்தலா அம்மையார் இது பற்றி எழுதியுள்ள வரிகள்: 'ரஷ்யாவின் முன்னேற்றத்திற் காக அரும்பாடுபட்ட தலைவர்கள் லெனின், ட்ராட்ஸ்கீ, நம் தேசத்துப் பெரியார்கள், தலைவர்கள் மீது வாழ்த்துப் பாடல் ஒன்று எழுதினார்' (பக். 82). மேலும் அவர் தரும் தகவல் குறிப்பிடத் தக்கது: 'இவர் இறந்தவுடன், காணாமற் போன கடிதங்கள் புஸ்தகங்களுடன் மறைந்துவிட்டன.

## 259. பிறந்தேன் [பக். 842]

பாரதியின் மாப்பிள்ளை திரு. நடராஜன் நினைவுபடுத்தித் திரு. ரா. அ. பத்மநாபன் அவர்களிடம் கூறிய பாடல் இது. எட்டயபுரத்தில் மனம் நொந்து வாழ்ந்திருந்த சமயத்தில் பாடப் பட்டதாக நடராஜனின் தகவல்.

## 260. பிரெஞ்சு நாட்டுப் பாடல் [பக். 843]

திருமதி ரங்கநாயகி என்பவர் எழுதிய 'பாரதியார் இல்லற நாடகம்' என்ற நூலில் (பக். 35) இப்பாடல் காணப்படு கின்றது. 'லாமார்ஸெலேஸ' என்ற பாடலைப் பாரதியார் மொழிபெயர்த்து இயற்றியதாக அம்மையார் தெரிவித்திருக்கி றார். மண்டலம் குடும்பத்தைச் சேர்ந்த அந்த அம்மையார் வைத்திருந்த பழம்பிரதி ஒன்றிலிருந்து இப்பாடல் கிடைத்தது

மொழிபெயர்த்த இந்த வரிகளைத் தமிழ் யாப்பு வகையில் கணித்திட இயலாது.

## 261. குருவிப் பாட்டு [பக். 845]

புதுவையில் பாரதியை ஆதரித்தவருள் ஒருவர் திரு. பொன்னு முருகேசம்பிள்ளை; அவருடைய மகன் திரு. இராசமாணிக்கம் பிள்ளையின் வேண்டுகோளின்படி இது பாடப் பட்டதாம். திரு. இராசமாணிக்கம் பிள்ளை எழுதிவைத்ததிலிருந்து, 1957இல் தம்மிடம் தந்ததாகத் திரு. ரா. அ. பத்மநாபன் குறிப்பிட்டிருக்கிறார். 'தமிழ் அன்பன்' என்ற இதழில் 1946இல் இது வெளிவந்ததாகவும் திரு. ரா. அ. ப. குறித்துள்ளார். திரு. பரலி சு. நெல்லையப்பர் வெளியிட்ட 'நெல்லைத் தென்றல்' என்ற நூலிலும் (பக். 92-95) இப்பாடல் காணப்படுகிறது.

## 264. ஸ்ரீ கபிலர் அகவல் [பக். 853]

கபிலரகவலின் சொல்லும் பொருளும் மணிமேகலையின் சொல்லும் பொருளும் நிரம்ப இடம் பெற்றுள்ளன. பாரதியார் பாடல் என்பதற்த்ரிய பெருமை இதற்கு இருப்பதாகச் சொல்ல முடியவில்லை. கையெழுத்துப் பிரதியாக வானவில் பதிப்பகம் திரு. சீனி. விசுவநாதனிடம் உள்ளது.

## பாட்டு 265 – 268 [பக். 858]

இந்த நான்கு பாடல்கள் பாரதியின் பாடல்களாகப் பாரதி புதையல் II (பக். 127 - 130) தெரிவிக்கிறது. அம்பாசமுத்திரம் திரு. அ. ரா. கிருஷ்ணன் என்பவர் இப்பாடல்களைத் திரு. ரா. அ. பத்மநாதன் அவர்களிடம் வழங்க, அவர் 'பாரதி புதைய'லில் சேர்த்திருக்கிறார்.

முதல் மூன்று பாடல்களுக்கும் 'பாரதி திருப்புகழ்' எனவும், நான்காவது பாடலுக்குப் 'பாரதி தேவாரம்' என்றும் திரு. கிருஷ்ணனே தலைப்பிட்டு வைத்திருக்கிறார். திருப்புகழ்போன்ற சந்தம் கருதித் 'திருப்புகழ்' எனப் பெயரிட்டார் போலும்;

ஆயின் இரண்டாவது பாடலின் சந்தமே நான்காவது ப்ாட லுக்கும் பொருந்தும்; ஆனால், சிவபெருமானைக் குறித்த பாட லாதலின் 'பாரதி தேவாரம்' எனப் பெயரிட்டார் போலும். முதற்பாடல் முருகனைக் குறித்தது அன்று; இரண்டாவ்து பாடல் முருகனைக் குறித்தும் மூன்றாவது பாடல் கண்ணனைக் குறித் தும் எழுதப்பட்டுள்ளன.

ஆசிரியரால் இடப்பட்ட தலைப்புக் கிடைக்காத நிலையில், பாடல் தொடர்களைக் கொண்டே தலைப்பு அமைப்பது பொருந்தும் என்ற கருத்தில் இப்பதிப்பில் நான்கு பாடல் களுக்கும் வேறு தலைப்புகள் தரப்பட்டுள்ளன.

பாரதியே இவற்றை எழுதியதாகக் கொள்வதற்கு வலிய சான்று எதுவும் இல்லை; எழுதப்பட்ட காலமோ சூழலோ எதுவும் அறிய இயலவில்லை.

# பின்னிணைப்பு - 2

## (முன்னுரைகள், பதிப்புரைகள் முதலியன)

### ஸ்வதேச கீதங்கள்

**(1907)**

மகாகவி பாரதியின் பாடல்கள் தனிச்சிறு நூலாக 1907ஆம் ஆண்டில்தான் முதன்முறையாக வெளியானது.

பாரதியார் பாடல்களை வெளியிடுமாறு தூண்டி, மிகுந்த ஆவல் காட்டி, அவருக்கு உதவிகள் புரிய நண்பர்கள் பலர் முன் வந்தனர். அவர்களில் குறிப்பிடத்தக்கவர் காலஞ் சென்ற திரு. வி. கிருஷ்ணசாமி ஐயர் ஆவார்.

அரசியல் கருத்துக்களில் பாரதியாரும் கிருஷ்ணசாமி ஐயரும் இருவேறு துருவங்களைப் போலும் ஒட்டாது நின்றவர்கள். பாரதியார் அரசியலில் மிகத் தீவிரவாதியாகவும், கிருஷ்ணசாமி ஐயர் மிதவாதியாகவும் திகழ்ந்தவர்கள். என்றாலும், பாரதியார் பாடல்களிலே கிருஷ்ணசாமி ஐயர் மனத்தைப் பறி கொடுத்து, மூன்று பாடல்களை மட்டும் தெரிந்தெடுத்து, நான்கு பக்க அளவிலான சிறு பிரசுரமாக வெளியிட்டார்.

'பாரதியாரது கவிதையின் உருக்கந்தான் ஓர் ராஜீய எதிரியிடமும் இந்தப் புகழ்ச்சியை வெளியாக்கியது' என்பார் சக்கரை செட்டியார்.

முதன்முதலாக வெளியான சிறுநூலில் (1) வந்தே மாதரம் (2) நாட்டு வணக்கம் (3) எங்கள்நாடுஆகிய மூன்று பாடல்கள் இடம் பெற்றுள்ளன. இதில் முதல் பாடலான 'வந்தேமாதரம்' என்னும் பாடல் 'இந்தியா' இதழில் 18-5-1907 இல் வெளி வந்தது. எனவே, மற்ற இரு பாக்கள் மட்டும் 'நூல்வரிசை'யில் தரப்பெற்றுள்ளது.

இந்தச் சிறுபிரசுரத்தில் இடம் பெற்ற பாடல்கள் தொடர்ந்து அடுத்தடுத்த பதிப்புக்களிலும் வெளியிடப்பட்டன.

பாரதியார் பாடல்களைத் திரு. வி. கிருஷ்ணசாமி ஐயர் வெளியிட்ட சூழலை அவருடைய மகன் திரு. கே. பால சுப்பிரமணிய அய்யர் தம் நினைவுக் குறிப்பிலிருந்து 1936ஆம் வருட ஆனந்த விகடன் தீபாவளி மலரில் 'நம் கவிச் சக்கரவர்த்தி' என்ற கட்டுரையில் மிக அழகாக எடுத்துரைத்துள்ளார்.

"இருபத்தொன்பது வருஷங்களுக்கு முன் ஒருநாள் வெள்ளிக்கிழமை - மாலை என் தகப்பனார், தம்மைப் பார்க்க வந்த சிலரோடு வீட்டு வெளிவாசலில் பேசிக்கொண்டிருந்தார். அச்சமயம் அவருடைய நண்பரான ஸ்ரீமான் ஜி. ஏ. நடேச அய்யர் இளமைப் பருவத்தினரான ஒருவரை அழைத்துக் கொண்டு அவ்விடம் வந்தார். என் தந்தையாரிடம், "இவர் நல்ல தமிழ்ப்பாட்டுப் பாடக் கூடியவர்; தாமே சில தமிழ்க் கவிகள் செய்திருக்கிறார். தங்களுக்குத் தற்சமயம் ஸௌகரிய மானால் அவரைப் பாடச் சொல்கிறேன்" என்று சொன்னார். கச்சேரியில் வாதம் செய்து களைத்து வீட்டிற்குத் திரும்பி வந்ததும் தமிழ்ப்பாடல்களைக் கேட்டு மகிழும் வழக்கம் என் தகப்பனாருக்கு உண்டு. ஆகையால், அவருடைய வேண்டு கோளுக்கு இணங்கி, 'அப்படியே ஆகட்டு' மென்றார். ஸ்ரீமான் நடேச அய்யர் கெட்டிக்கார ரானதால், அவ்விளைஞரின் பெயர் இன்னதென்று சொல்லவில்லை; என் தந்தையாரும் அவர் பெயரைக் கேட்கவில்லை. அநுமதி கொடுத்தவுடனே அந்த இளைஞர் கம்பீரமான சக்திவாய்ந்த குரலில் இன்னிசை

யுடன் சொற்களைக் கேட்போருக்குப் பொருள் விளங்கும்படி நன்குரைத்துத் தாம் இயற்றிய கீதங்களுள் இப்பொழுது பிரஸித்தமாய் விளங்கும் ''வந்தே மாதரம் என்போம்'' என்னும் பாடலைப் பாடினார். ஒன்றிரண்டு பாட்டுகள் முடிந்த வுடனேயே அந்த கீதத்தின் சுவையினாலும் தேசத்தின் அன்பை ஊட்டும் இனிய தமிழ்மொழிகளாலும் என் தந்தை மனங் களித்து அவர் இயற்றியுள்ள மற்றுமுள்ள தேசீய கீதங்கள் எல்லாவற்றையும் பாடவேண்டு மென்று உற்சாகத்துடன் அவரைத் தூண்டலானார். வீடு முழுவதும் இவர் கீதங்களின் ஒலிபரவ, ஆங்காங்கே விளையாடிக்கொண் டிருந்த நானும் என்போன்ற சிறுவர்களும் அதைக் கேட்க ஆவலுடன் அங்கு வந்தோம். அப்பொழுது நடந்த யாவும் நன்கு என் மனத்தில் பதிந்தன. எத்தனையோ காலத்துக்குப்பிறகு இப்பொழுது நினைத்தாலும் அப்பாடல்களின் ஒலியும் பாடினோரின் உருவமும் நன்கு நினைவிற்கு வருகின்றன.

'நாட்டு வணக்கம், 'எங்கள் நாடு' என்ற இரண்டு கீதங் களையும் அப்பொழுது அவர் பாடினார். இதற்குள் அப்பாடல் களைக் கேட்டு மனமுருகி அவருடைய கல்விச் சிறப்பில் ஆச்சரிய மடைந்த என் தகப்பனார் நடேச அய்யரிடம், ''இவர் யார்? இவர் பெயரென்ன? இவருக்கு எந்த ஊர்? இவர் எந்த வேலையில் இருக்கிறார்?'' என்று வேகமாகக் கேட்கத் தொடங்கினார் அந்தச் சமயம் சிறிது பயந்து மெல்ல மெல்ல ஸ்ரீமான் நடேச அய்யரவர்கள்,'' இவர்தான் சுப்பிரமணிய பாரதி என்பவர். சூரத்தில் நடந்த காங்கிரஸ் மஹாசபையில் சென்னையி லிருந்து வந்த மிதவாதிகளை எதிர்த்துப் பேசினவர்களில் முக்கிய மானவர் இவர். கீர்த்தி வாய்ந்த ஜி. சுப்பிரமண்ய அய்யரவர் களுக்கு மிகவும் வேண்டியவர். தங்களைச் சிலசமயம் ஏசி எழுதியிருக்கிறார். அதனால், கொஞ்சம் பயத்துடனேதான் அவரை இங்கே அழைத்துவந்தேன்'' என்று நகைப்புடனும் வெட்கத்துடனும் பதிலளித்தார். அப்பொழுது, என் தந்தை ''அது எப்படி யிருந்தாலு மிருக்கட்டும். இவரைப் போன்ற தமிழ்க் கவியை நான் கண்டதில்லை. இக்காலத்திற்குத் தக்கவர்

இவர்தான். இவர் பாடல்களை அச்சிட வேண்டும். தேச முழுவதும் பரவச் செய்ய வேண்டும். பள்ளிக்கூடத்தில் ஒவ்வொரு மாணவனும் நன்குணர்ந்து பாடும்படி செய்து தேசபக்தி உண்டாக்க வேண்டும்'' என்று சொல்லிக்கொண்டே'' என்ன செலவாகும்? அதற்குத் தக்க உதவியை இப்பொழுதே நான் செய்கிறேன்'' என்று வாக்களித்தார்.

அவர் விரும்பியபடியே அம்மூன்று கீதங்களும் சீக்கிரம் ஒரு சிறு புத்தகமாக அச்சிடப்பட்டன. அதன் பல பிரதிகளை அநேகம் பள்ளிக்கூடங்களுக்கு அனுப்பிவைத்தார்'.

## ஸ்வதேச கீதங்கள்

### (முதற்பாகம்)

### (1908)

மகாகவி பாரதியாரே பதிப்பித்த முதல் நூல் இதுவாகும்.

இத்தொகுதியில் மொத்தம் 16 பாடல்கள் இடம் பெற்றுள்ளன. அவையாவன.

1. வந்தே மாதரம்
2. வந்தே மாதரம்
3. நாட்டு வணக்கம்
4. எங்கள் நாடு
5. புது வருஷம்
6. லாஜபத்ராய் துதி
7. பூபேந்திர விஜயம்
8. கிளிக் கண்ணிகள் - நடிப்புச் சுதேசிகள்

9. லாஜ்பத்ராய் பிரலாபம்

10. ஸ்வராஜ்யம் வேண்டுமென்ற பாரதவாஸிக்கு ஆங்கிலேய உத்தியோகஸ்தன் கூறுவது

11. மாயையைப் பழித்தல்

12. ஆரியதரிசனம் - ஓர் கனவு

13. சுதந்திரப் பெருமை

14. தாதாபாய் நவுரோஜி

15. மேத்தா திலகருக்குச் சொல்வது

16. மாஜினி என்ற இத்தாலி தேசத்து தேசாபிமானி தம்மால் ஸ்தாபிக்கப்பட்ட ''யௌவன இத்தாலி'' என்ற சங்கத்திலே செய்துகொண்ட பிரதிக்கினை.

ஒருசில பாடல்கள் அடுத்தடுத்த பிரசுரங்களிலும் மீண்டும் பிரசுரிக்கப்பட்டுள்ளன.

இத்தொகுதியில் காணப்படும் குறிப்பால் இந்நூல் 1908 ஜனவரி மாதத்தில் வெளியாகியுள்ளது எனத் தெரிகிறது. எனவே, இத்தொகுதியுள் கால அடைவில் சாராத பாடல்களையும் 1907ஆம் ஆண்டிலும் அதற்கு முன்னரும் பாரதியார் புனைந்திருக்கிறார் எனக் கொள்ளலாம். உரிய ஆதாரங்கள் - இதழ் விவரங்கள் எமக்குக் கிட்டவில்லை. இதழ்களில் வெளிவராமல், தனிப்பாடல்களாக இயற்றி நூலில் இணைத்திருக்கலாம் எனக் கருதவும் இடம் உண்டு.

இத்தொகுதியில் மதுரை முத்து குமாரப்பிள்ளை அவர்கள் இயற்றியுள்ள 'என் மகன்' என்ற பாடலை அவரது அநுமதி பெற்றுத் தாம் பிரசுரித்துள்ளதாக ஒரு குறிப்பையும் பாரதி தந்துள்ளார். இப்பாடலைப் பின் இணைப்பில் காணலாம்.

# DEDICATION

## ஸமர்ப்பணம்

ஸ்ரீ கிருஷ்ணன் அர்ஜுனனுக்கு விசுவரூபம் காட்டி ஆத்தும நிலை விளக்கியதொப்ப, எனக்குப் பாரததேவியின் ஸம்பூர்ண ரூபத்தைக்காட்டி, ஸ்வதேசபக்தி யுபதேசம் புரிந்தருளிய குருவின் சரணமலர்களில் இச்சிறு நூலை ஸமர்ப்பிக்கின்றேன்.

ஆசிரியன்

## முகவுரை

ஒருமையும் யௌவனத் தன்மையும் பெற்று விளங்கும் பாரத தேவியின் சரணங்களிலே யான் பின்வரும் மலர்கள் கொண்டு சூட்டத்துணிந்தது எனக்குப் பிழையென்று தோன்ற வில்லை. யான் சூட்டியிருக்கும் மலர்கள் மணமற்றன வென் பதை நன்கறியேன். தேவலோகத்துப் பாரிஜாத மலர்கள் சூடத் தகுதி கொண்ட திருவடிகளுக்கு எனது மணமற்ற முருக்கம் பூக்கள் அணிக்குறைவை விளைக்கு மென்பதையும் நான் தெரிந் துள்ளேன். ஆயினும் உள்ளன்பு மிகுதியால் இச்செய்கையிலே துணிவுகொண்டு விட்டேன். சாக்கியன் எறிந்த கற்களையும் சிவபிரான் மலர்களாகக் கருதி அங்கீகரிக்கவில்லையா? அதனை யொப்ப, எனது குணமற்ற பூக்களையும் பாரதமாதா கருணை யுடன் ஏற்றருளுக!

C. சுப்பிரமணியபாரதி

**விளம்பரம்:**

## சுதேச கீதங்கள்

சி. சுப்பிரமணிய பாரதி யவர்களால் பாடப்பட்டன.

.....................................

குறிப்பு: இந்தப் பாடல்களைப் பிரசுரிக்குமாறு என்னைத் தூண்டி, இவை வெளிப்படுவதில் மிகுந்த ஆவல் காட்டி உதவிகளியற்றிய மித்திரர் களிடம் மிக்க நன்றி பாராட்டுகின்றேன்.

ஜனவரி மீ 10 உ 1908
மைலாப்பூர்.

இவை மிகவும் அருமையான பாடல்கள். அதி சீக்கிரத்தில் விலையாய் வருகின்றன. வேண்டுவோர் காலதாமதமின்றி எழுதிப் பெற்றுக் கொள்ளவேண்டும்.
0.2.0 — இந்தியா: 24-10-1908

**மதிப்புரை**

## சுவதேச கீதங்கள்

இப்பெயர் கொண்ட பாடற்றிரட்டொன்று சென்னையி னின்று சிறக்க வெளிவரும் 'இந்தியா' பத்திராதிபர் ஸ்ரீ சுப்பிர மணிய பாரதியவர்களால் இயற்றி வெளியிடப்பட்டுளது. இதன் பெயரைக் கேட்கும்போதே, இத்திரட்டு நம்மவர்க்கு ஒரு புதுவழியைக் கற்பிக்க வந்ததென்பது விளங்கும்.

நம் தமிழ்மொழியில், ஈசுவர சம்பந்தமான பாடல்களும், காவியங்களும், புராணங்களும், பிறவும் நிரம்ப உண்டாயினும், நம்மவர்க்குத் தற்காலம் இன்றியமையாது வேண்டத் தக்கன வும், தேசாபிமானத்தை உண்டாக்க வல்லனவுமான உயர்கவி கள் கிடைத்தில.

வங்காள நாட்டார், இந்திய மக்கள் ஏனையரினும் விசேட மான தேசாபிமானமும் உள்ளக் கிளர்ச்சியும் பெற்றிருப்பதற் குரிய முக்கிய ஏதுக்களில் ஒன்று, அந்நாட்டில் சமீபத்திற் றோன்றிய கவிஞர் சிகாமணிகளது அருமை பெருமை வாய்ந்த தேசீய கீதங்கள் அந்நாடெங்கும் பரவிப் பேரெழுச்சியை உண் டாக்கி வருதலாம்.

மேனாட்டார்களெல்லாம் தம் நாட்டுக் கவிஞர்கள் இயற் றிய தேச கீதங்களைப் பாராட்டிப் போற்றி வருதலை இயற் கையாக வுடையராய் விளங்குதலுங் காணலாம். அத்தகைய பாடல்களும் கீதங்களும் தமிழ் மக்கட்கும் இன்றியமையாத னவா யிருத்தலோடு, அவை நாடெங்கும் பரவி ஊக்கத்தை விளைக்கக் கூடியனவாகவுமிருத்தல் வேண்டும்.

சிற்சிலர் "சுதேசமித்திரன்", "இந்தியா" முதலிய பத்திரிகைகளில் அவ்வப்போது வெளியிடப்பட்ட சுதேசியப் பாடல்கள் மிக வுயர்ந்தனவாயிருந்தமை கண்டு, அவை யாவருமறியத் திரட்டித் தொகுக்கப்படின் பெரிதும் உபயோகமாம் என்று கருதியதுண்டு.

இப்போது, பாரதியார் தாமியற்றிய தேச கீதங்களைத் திரட்டிச் சிறு புத்தகமாக வெளியிட்டிருப்பது எமக்குப் பெருமகிழ்ச்சி விளைத்தது. இவர்கள் வந்தே மாதரம், நாட்டு வணக்கம், எங்கள் நாடு, பூபேந்திர விஜயம், கிளிக் கண்ணிகள் முதலாக அநேக விஷயங்களைப் பற்றிப் பாடியிருக்கும் செய்யுள்களும் கீதங்களும் சொன்னயம், பொருணயங்களுடையனவாயிருத்தலோடு, படிப்போர் மனதில் மகிழ்ச்சியை உண்டாக்கவல்லனவாகவும் விளங்குகின்றன.

இயற்கையில் இனிய கவிகள் பாடவல்ல பாரதியார் தம் சக்தியை இத்தகைய புதுவழியில் திருப்பி உபயோகப்படுத்தியிருப்பது, நம்மவர்க்கு ஒரு நல்ல வழியைக் கற்பிக்கின்றது. இத்தகைய கீதங்களை, தேசாபிமானிகளான நந்தமிழ் நாட்டாரெல்லாம் படித்து மகிழ்வதுடன், முக்கியமாகத் தம் மக்கட்கு இவற்றை மனப்பாடம் பண்ணும்படி செய்வித்தல் மிகவும் வேண்டப்படுவது என்போம்.

இதுபோலவே, நந்நாட்டுப் பெண் பாலாரெல்லாம் விரும்பி மனப்பாடம் பண்ணிக் கொள்வதற் கேற்றபடி, கும்மி முதலான கீதங்களை அமைத்து வெளியிடுதல் மிக்க பயனளிக்கக் கூடியது. பெண்பாலாரிடம் அத்தகைய பாடல்கள் பரவுதல் எளிதாயிருப்பதோடு, அதனால் உண்டாகும் நன்மைகளும் அனந்தமாம்.

பாரதியாரவர்களும், அவர்களையொத்த தேசாபிமானிகளும் இது விஷயமான முயற்சியைச் செய்து புகழும் புண்ணியமும் அடையத் தவறார்களென்றே நம்புகிறோம்.

ஆதாரம்: செந்தமிழ் — 1908
ஆசிரியர்: மு. ராகவையங்கார்.
(தொகுதி 6; பக்: 105 - 106)

## என் மகன்

**(மதுரை ஸ்ரீ முத்துகுமாரப்பிள்ளை இயற்றியது)**

**(அவரது அனுமதியின்பேரில் பிரசுரிக்கப்பட்டது)***

**(பாரதமாதா சொல்லுதல்)**

**கண்ணிகள்**

சந்தோஷம்! இன்றேனுந் தன்னுரிமை வேண்டினையே
வந்தேமா தரந்தனையே வழுத்துவா யென்மகனே! 1

என்றாயே! யென்றாயே! யென்றழுதென் சந்நிதிமுன்
நின்றாயென் னாற்குறைக ணேர்ந்ததுண்டோ என்
மகனே. 2

என்மேற் குறைகூறி யின்றுபயனில்லை யென்றாய்
உன்மேற் குறையிருப்ப தோர்ந்திலையே என்மகனே 3

நான்பெற்ற பிள்ளையொன்றை நாலுகூறா யொருவன்
தான்பிரிக்க நீயுமேன் சம்மதித்தா யென்மகனே! 4

நாலைநா னூறாக்கி நான்கு சகஸ்திரமாய்
மேலுங்கீ ழான வினைக்கழுவ தார்மகனே! 5

பாஷையொன்றே சாதியதிற் பத்தா யிரங்கோடி
நீசர்செய்த வஞ்சனையை நினைத்தழுவா யென்
மகனே! 6

ஒருசாதி யாமதிலு முட்பிரிவோ ராயிரமாம்
தரிசைவெட்டா தென்னிடம்நீ தானியங் கேட்டாய்
மகனே! 7

---

* இது பாரதியார் பாட்டு அன்று. ஆயினும், அவரால் மதிக்கப்பட்டு ஸ்வதேச கீதங்கள் (முதற்பாகம்) வெளியிட்டபோது, பாரதி பாடல்களோடு வெளியிடப்பட்டிருக்கிறது. பாரதியால் மதிக்கப்பட்டு அவராலேயே தம் பாடல்களோடு வெளியிடப்பட்டதால் இப்பதிப்பிலும் இடம் பெறுகிறது.

எம்மதமு மென்பதிக்கே யெத்தனை பேரிட்டழைத்தும்
சம்மதித்தோம் நீபிரிந்து சண்டையிட்ட தேன்மகனே 8

கோடிபிரி வாகிக் குலைந்துபோய் நீங்களிந்த
நாடு தனைக்கெடுத்தால் நான்பழியோ என்மகனே 9

அப்பாஜப் பானியரை யனுசரித்தா னாலுமினித்
தப்பான சாதிமதந் தள்ளியொன்று சேர்மகனே 10

சாதிக்கு ளுட்பிரிவு தானனந்த முண்டதனை
மோதிக் களையும்வகை முதலிலறி யென்மகனே! 11

பாஷைகளை யொன்றாக்கப் பார்த்தக் கிளைகளையும்
நேசப் படுத்திடப்பின் நீநினைப்பா யென்மகனே! 12

உள்ளபடி நீவிரொத்தா லுடைமை திருடவந்த
கள்ளர் நடுங்கிக் கலங்குவா ரென்மகனே. 13

எல்லாம் பிரமமய மென்பதுவே முத்தியென்றால்
அல்லா கிறிஸ்து அரியரனா ரென்மகனே? 14

ஆவினிறம் வேறாம் அதன்பா லொருநிறம்போல்
தேவனொன்றே, பன்னாமம் செப்புவார் என்மகனே 15

பன்னாம மிட்ட பணிகளெலாம் பொன்னேபோல்
எந்நாமஞ் சூட்டினுமவ் 'வீசனுக்காம் என்மகனே. 16

ஆடையுரு வேறாம், அதன்மூலம் பஞ்சேபோல்
பாடுபல நாமம் பரமனையே என்மகனே 17

மண்டு பசிதீர வகைவகையா யுண்டிடல்போல்
அண்டர்பிரான் சேவைக் கநேகவழி யென்மகனே 18

ஒத்தே பலநதியும் ஓர்கடலைச் சேர்வதுபோல்
எத்தேவர் வந்தனையும் ஈசனுக்காம் என்மகனே. 19

அன்னையான் தாதை அமலன்மக்கள் நீரவருக்
கென்னபெய ரிட்டாலு மின்பமதே என்மகனே. 20

ஐயையோ எம்மதமு மந்நியமோ ஈசனுக்கு?
வையகத்தோ ரேன்பிரிந்து வம்புறுவ தென்மகனே? 21

வீணா மதபேத வேற்றுமையி னாற்பிரிந்து
நீணா ளுரிமைகுன்றி நீயலைந்தா யென்மகனே. 22

இந்தவிதந் தெய்வநிலை யீதறியா தும்பிரிவால்
வந்தவினை சொல்லவெனில் வாய்கூசும் என்மகனே. 23

ஐயோ பிரிவா லருமைத் தொழிலிழிந்து
கையேந்தும் பிச்சை கருதுகின்றா யென்மகனே. 24

இத்தருண மேனு மிழந்ததொழில் கொள்ளாயேல்
நித்தந் தரித்திரனாய் நீயுழல்வா யென்மகனே. 25

எல்லாரும் பிச்சைபுகி னியாரிடுவார் நீங்களென்ன
கல்லா மரமா கருத்திலையா என்மகனே? 26

ஒத்திருந்தா லெத்தனைபே ருன்னடிமை வேலை
செய்வார்
இத்தைமறந் தேயன்றோ யேங்குகின்றா
யென்மகனே 27

எத்தொழிலுஞ் செய்வா ரெவர்க்குமா ளாய்ப்புகுவார்
அத்தனையும் பொன்றேடற் காகவன்றோ
யென்மகனே. 28

கற்றவரே யெத்தனையோ கைத்தொழில்பா
ழாய்க்கிடக்க
விற்றவரைப் போலடிமை வேலைசெய்வ தேன்
மகனே 29

படித்த முதல்வரெல்லாம் பாழடிமை யாய்ப்போனால்
விடுத்ததொழில் சீர்தூக்க வேறெவருண் டென்
மகனே 30

கடல்போற் றொழிலிருக்கக் கற்றறிந்தோர்
விட்டுவிட்டே
உடல்விற் றடிமையுற்றா லுய்வதெவ்வா
றென்மகனே 31

வித்தைகற்றோர் தம்முடலை விற்றடிமை
யாய்ப்போனால்
எத்தொழிலை மற்றோ ரியற்றமுயல் வார்மகனே. 32

அந்நியனுக் காளடிமை யானவனைத் தான் கொண்ட
பன்னி மதிப்பாளோ படித்தவனென் றென்மகனே? 33

என்னபடிப் பென்னபட்ட மென்னபணந்
தேடிவிட்டார்
தன்னைவிற்று வாழ்வதினும் சாதல்நல
மென்மகனே. 34

கோடியள வாய்ப்பொருளைக் கூட்டுந் தொழிலிருக்க
ஓடியலைந் தாளா யுழைக்கின்றா யென்மகனே. 35

கற்றவரே மற்றவரைக் கைத்தொழிலுக் காளாக்கிக்
கொற்றவராய் நின்றாற் குவியும்நிதி என்மகனே. 36

தேடரிய வித்தைஅயல் தீவேகிக் கற்றுவந்தும்
கோடரிக்காம் பன்ன குணம்படைத்தீ ரென்மகனே. 37

நூலறிந்த நீதான் நுகத்திற் பிணித்துழவர்
கோலறை கொண் டோடுகின்ற கோவானா
யென்மகனே. 38

ஒன்றையொன்று தின்றே யொடுங்குங் கிருமி
யொத்தாய்
அன்றிநீர் கற்ற அறிவெங்கே என்மகனே? 39

காட்டிற் றிரியினத்தைக் கண்ணியுளே சிக்கவைக்கும்
கூட்டுற்ற காடைக் குணம்படைத்தா யென்மகனே. 40

மேனீண்ட வித்தைகற்று விட்டொருவர் தொண்டாகித்
தானீன்றகுட்டியுணுஞ் சர்ப்பமொத்தா
யென்மகனே. 41

வித்தைகற்றோ ரென்சொல் விரும்பித் திரும்புவரேல்
எத்தொழிற்குஞ் சாதனங்க ளீவேனா னென்மகனே. 42

என்னிடத்தி லில்லா இயற்கைப் பொருளெவர்கள்
தன்னிடத்தி லுண்டதனைச் சாற்றுவா யென்மகனே. 43

## ஜன்ம பூமி

### (ஸ்வதேச கீதங்கள் – இரண்டாம் பாகம்)

'செந்தமிழ்த் தென்புதுவை யென்னும் திருநகரின்' கண்ணே பாரதியார் தஞ்சம் புகுந்தபின்னர், வெளியிட்ட முதல் நூல் இதுவாகும். இந்நூலில் பதினேழு பாடல்கள் உள்ளன. அவற்றின் விவரம் வருமாறு:

1. வந்தேமாதரம் - ஜாதீயத் திருப்பாடல்
   வந்தே மாதரம் - மொழிபெயர்ப்பு
2. சுதந்திர தேவியின் துதி
3. எங்கள் தாய்
4. பாரததேவியின் திருத்தசாங்கம்
5. ஜய பாரத

6. ஸ்ரீ கிருஷ்ண ஸ்தோத்திரம்
7. மாதாவின் துவஜம்
8. ஸ்வதந்திர தாகம்
9. நிதானக்கட்சியார் கூட்டம்
10. பாரத தேவியின் அடிமை
11. கலெக்டர் வின்ச் - ஸ்ரீ சிதம்பரம் பிள்ளைக்குச் சொல்லுதல்
12. கலெக்டர் வின்சுக்கு ஸ்ரீ சிதம்பரம்பிள்ளை சொல்லிய மறுமொழி
13. சுதந்திரப் பெருமை
14. ஸ்வராஜ்யம் வேண்டுமென்ற பாரதவாஸிக்கு ஆங்கிலேய உத்தியோகஸ்தன் கூறுவது
15. அபேதாநந்த ஸ்வாமிகளின் மீது ஸ்தோத்திரக் கவிகள்
16. ஸ்வதந்திரப் பள்ளு
17. (ஓவியர் மணி) ஸ்ரீ ரவிவர்மா

'முதற்பகுதியிலே யிருந்த ஓரிரண்டு பாடல்கள், இதனிடையே பொருத்த நோக்கிச் சேர்க்கப்பட்டிருக்கின்றன' என எழுதிய பாரதியார், இந்த நூலில் தேசபக்திப் பாடல்களோடு, அபேதாநந்தர், ரவிவர்மா போன்றோர்மீது சில வாழ்த்துக் கவிகள் புனைந்ததையும் இணைத்துள்ளார். இவை கால அடைவுப் பகுதியில் இணைக்கப்பட்டுள்ளன. 'சுதந்திரப் பெருமை', 'ஸ்வராஜ்யம் வேண்டுமென்ற பாரதவாஸிக்கு ஆங்கிலேய உத்தியோகஸ்தன் கூறுவது' ஆகிய இரு பாடல்களே இப்பதிப்பில் பொருத்தம் நோக்கிச் சேர்க்கப்பட்டனவாம்.

கால அடைவில் இடம்பெற்றுவிட்ட பாடல்கள் தவிர, ஏனைய பாடல்கள் இங்குத் தரப்பட்டுள்ளன.

இந்நூலில் காணப்படும் பாடல்களில் பல "நாட்டுப் பாட்டு"த் தொகுதியிலும் இடம் பெற்றுள்ளன.

இவற்றுள், பின்வரும் ஒன்பது பாடல்களும் காலநிரலில் இடம்பெற்றுள்ளன.

1. வந்தேமாதரம் — ஜாதீயத் திருப்பாடல்
   வந்தேமாதரம் — மொழிபெயர்ப்பு

3. எங்கள் தாய்

4. பாரததேவியின் திருத்தசாங்கம்

5. ஜயபாரத

8. ஸ்வதந்திர தாகம்

13. சுதந்திரப் பெருமை

14. ஸ்வராஜ்யம் வேண்டுமென்ற பாரதவாஸிக்கு ஆங்கிலேய உத்தியோகஸ்தன் கூறுவது

15. அபேதாநந்த ஸ்வாமிகளின் மீது ஸ்தோத்திரக் கவிகள்

17. (ஓவியர் மணி) ஸ்ரீ ரவிவர்மா

## முகவுரை

இனிய நிலவின் ஒளியால் விழுங்கப்பட்டு, உலகம் அவாங்மன கோசரமாகிய ஸௌந்தர்யத்தைப் பெற்றிருக்கும் சமயத்தில், ஒவ்வொரு கவிஞனுடைய உள்ளமும் தன்னை யறியாது குதூ

ஹல மடைகின்றது. சூரியன் உதித்தவுடனே சேதனப் பிரகிருதி மட்டுமே யன்றி அசேதனப் பிரகிருதியும், புதிய ஜீவனையும், உற்சாகத்தையும் பெற்றுத் திகழ்கின்றது. இவற்றினை யொப் பவே, நாட்டில் ஓர் புதிய ஆதர்சம் - ஓர் கிளர்ச்சி - ஓர் தர்மம் - ஓர் மார்க்கம் - தோன்றுமே யானால், மேன்மக்களின் நெஞ்சமனைத்தும், இரவியை நோக்கித் திரும்பும் சூரிய காந்த மலர் போல, அவ்வாதர்சத்தை நோக்கித் திரும்புகின்றன. சென்ற சுபகிருது வருஷத்திலே பாரத நாட்டில், ஸர்வ சுபங்களுக்கும் மூலாதாரமாகிய "தேசபக்தி" என்ற நவீன மார்க்கம் தோன்றியது. நல்லோர்களின் சிந்தையெல்லாம் உடனே புளகிதமாயின. நல்லோருடைய குணங்களிலே குறைவுடையவனாகிய யானும் தேவியினது கிருபையால் அப்புதிய சுடரினிடத்து அன்பு பூண்டேன். அவ்வன்பு காரணமாகச் சென்ற வருஷம் சில கவிதை மலர் புனைந்து மாதாவின் திருவடிக்குப் புனைந்தேன்.

நான் எதிர்பார்த்திராத வண்ணமாக மெய்த் தொண்டர்கள் பலர் "இம்மலர்கள் மிக நல்லன" என்று பாராட்டி மகிழ்ச்சி யறிவித்தார்கள். மாதாவும் அதனை அங்கீகாரம் செய்துகொண்டாள். இதனால் துணிவு மிகுதியுறப் பெற்றோனாகி, மறுபடியும் தாயின் பதமலர்க்குச் சில புதிய மலர்கள் கொணர்ந்திருக்கின்றேன். இவை மாதாவின் திருவுள்ளத்திற்கு மகிழ்ச்சி யளிக்குமென்றே நினைக்கின்றேன்; "குழலினிது யாழினி தென்ப தம்மக்கள் மழலைச் சொற் கேளாதவர்" என்பது வேதமாதலின்.

இங்ஙனம்

ஸி. சுப்பிரமணிய பாரதி

---

குறிப்பு: முதற் பகுதியிலே யிருந்த ஓரிரண்டு பாடல்கள், இதனிடையே பொருத்த நோக்கிச் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

## ஸமர்ப்பணம்

எனக்கு ஒரு கடிகையிலே, மாதாவினது மெய்த் தொண்டின் தன்மையையும், துறவுப் பெருமையையும், சொல்லாமலுணர்த்திய குருமணியும், பகவான் விவேகாநந்தருடைய தர்ம புத்திரியும் ஆகிய ஸ்ரீமதி நிவேதிதா தேவிக்கு இந்நூலை ஸமர்ப்பிக்கின்றேன்.

**ஸி. சுப்பிரமணிய பாரதி**

**விளம்பரம்:**

## ஜன்மபூமி

**(ஸ்வதேச கீதங்கள் - இரண்டாம் பாகம்)**

*"ஸ்வதேச கீதங்கள்" என்ற நூல் வெளியேறிய பிறகு ஸ்ரீ சுப்பிரமணிய பாரதியால் எழுதப்பட்ட பாக்களும், கீர்த்தனங்கள் முதலியனவும் அடங்கியது. முதற்பாகத்தைவிட மாதுரியத்திலும் சுதேச பக்தியிலும் சிறப்பு வாய்ந்தது. அச்சடித்துத் தயாராய் விட்டது. வேண்டியவர்கள் புதுச்சேரி 'இந்தியா' ஆபீசில் ஸ்ரீ ஸ்ரீனிவாஸாசாரியாருக்கு எழுதிப் பெற்றுக் கொள்க. இதன் விலை அணா 3.*

*(இப்புத்தகத்தில் எங்கள் தாய், சிதம்பரம் பிள்ளை பாடல்கள், ஸ்வதந்திரப் பள்ளு, ரவிவர்மா மீது பாடல், அபேதாநந்தர் துதி, ஸ்வதந்திர தாகம், திருத்தசாங்கம், நந்தனார் சரித்திரத்தினின்றும் அனுகரணப் பாடல்கள் முதலிய பல புதிய கீதங்கள் நிறைந்திருக்கின்றன)*

*- இந்தியா: 6-2-1909*

மதிப்புரை

## ஜன்மபூமி

*இது, ஸ்ரீ சுப்பிரமணிய பாரதியவர்களால், ஸ்ரீபாரததேவி விஷயமாகவும், பிறவினிய விஷயமாகவும் பலவிதமான கவிதைகளால் பாடப்பெற்ற ஒரு செய்யுட்டிரட்டு. இவர் வாக்குத்*

தமிழ் நாட்டார் பலரும் பலமுறை அறிந்து சுவைத்ததேயாதலின், நாம் பலபடப் புனைதல் மிகையாம். முன்பு இவர் வெளியிட்ட செய்யுட்டிரட்டினும் அதிகமாகச் சில பகுதிகள் இதனிடைக் காணப்படுகின்றன. இந்நூலை நம்மவர் மகிழ்வுடன் எதிர் கொள்வார்களென்பதில் ஐயமில்லை. இதன் சில பகுதிகளை, எம் நண்பர்கள் முன் படித்து வரும்போது, உள்ளபடியே அவை, உரோமஞ் சிலிர்க்க எம்மைப் பெரிதும் உருக்கிவிட்டன.

ஆதாரம்: செந்தமிழ் - 1909
ஆசிரியர்: மு. ராகவையங்கார்
(தொகுதி 7; பக்: 114)

## மாதா மணிவாசகம்

**பதிப்பாசிரியர் குறிப்புரை:**

இந்நூல் தென்னாப்பிரிக்காவிலுள்ள டர்பன சரஸ்வதி விலாச அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப் பெற்றதாகும்.

இத்தொகுதியில் 14 பாடல்கள் இடம்பெற்றுள்ளன. இந் நூலில் காணப்பெறும் பாடல்களாவன.

1. வெற்றி
2. அச்சமில்லை
3. ஹே, காளீ!
4. சங்கு
5. ஸூர்ய தர்சனம்
6. வெண்ணிலா
7. அறிவே தெய்வம்
8. மஹாசக்தி பஞ்சகம்
9. மஹா காளியின் புகழ்

10. மஹா சக்தி வாழ்த்து

11. சரஸ்வதி தேவியின் புகழ்

12. பரசிவ வெள்ளம்

13. பாரதமாதா திருப்பள்ளி எழுச்சி.

14. ஜாதீய கீதம் (புதிய தமிழ் மொழிபெயர்ப்பு)

முதல் பன்னிரண்டு பாடல்கள் எந்தெந்த இதழ்களில் வெளிவந்தன என்ற செய்தியை அறிய இயலவில்லை. காரணம் புதுச்சேரியினின்றும் பாரதியார் வெளியிட்ட இதழ்களில் பல கிடைக்காமையேயாகும்.

13-ஆம் பாடலாக உள்ள பாரதமாதா திருப்பள்ளி எழுச்சிப் பாடல் மட்டும் கர்மயோகி 1910 பிப்ரவரி மாத இதழில் வெளியானதாகும்.

14-ஆம் பாடலாக உள்ள ஜாதியகீதம் (புதிய மொழி பெயர்ப்பு) என்ற பாடலானது பொருத்தம் கருதி இந்நூலிலும் வெளியிடப்பட்டதாகக் கொள்ளலாம். இப்பாடல் 'இந்தியா' இதழில் 13 மார்ச் 1909 இலும், 'கர்மயோகி' இதழில் பிப்ரவரி 1910இலும் வெளிவந்துள்ளது.

## முகவுரை

இச் சிறிய செய்யுள் நூல் விநோதார்த்தமாக எழுதப்பட்டது. ஒருசில பாட்டுகள் இன்பமளிக்கக் கூடியன. பதர் மிகுதியாகக் கலந்திருக்கக்கூடும். இதன் இயல் தலைவன் கூற்றெனப் படும் – அதாவது கதாநாயகன் தனது சரிதையைத் தான் நேராகவே சொல்லும் நடை. அச்சு நேர்த்தியாக விழாதிருப்பது எனது பிழையன்று. நமது நாட்டுச் செல்வர்களின் பிழை. இப் புதிய வழி தமிழறிந்த மேலோர்கள் அங்கீகரிக்கத்தக்கது தானா என்று பார்வையிடும் பொருட்டுச் சிறிய நூலொன்றை முதலில் வெளியிடுகிறேன். இதனைப் பதம்பார்த்து மேலோர் நன்றென்பாராயின், இவ்வழியிலே வேறு பல வெளியாக்கு

வேன். அனுபவக் குறைவினாலும், ஆற்றற் குறைவினாலும் நேரும் பிழைகளைப் புலவர் பொறுத்தருள் செய்க.

- ஆசிரியன்

*சாதாரண (1910) வருஷம்*

*ஆவணி மாதம், புதுச்சேரி.*

## பாஞ்சாலி சபதம்

பாஞ்சாலி சபதம் (முதற்பாகம்) நூல் 1912 ஆம் ஆண்டில் புதுச்சேரியிலிருந்து பாரதியார் வெளியிட்டார். முதற்பாக நூலைப் பாரதியார் மறு அச்சு செய்யக் கருதி, அதில் திருத் தங்களும் செய்துவைத்திருந்தார்.

தற்காலப் பதிப்புகள் அனைத்தும் திருத்தப் பகுதிகளைக் கொண்ட நூலையே ஆதாரமாகக் கொண்டுள்ளன. காரணம், பாரதி பிரசுராலயத்தார் இந்தப் பாஞ்சாலி சபத முதற் பாகத்தை மறு அச்சுச் செய்தபோது, பாரதியார் செய்திருந்த திருத்தங்களைச் செய்தே வெளியிட்டமைதான்.

ஆனால், இப்பதிப்பில் பாரதியார் முதலில் வெளியிட்ட 1912 ஆம் வருடத்திய நூலில் கண்டவாறே பாடல்கள் அனைத் தும் தரப்பட்டிருக்கின்றன. பாரதியார் செய்துள்ள திருத்தங் கள் அடிக்குறிப்பில் வெளியிடப்பட்டிருக்கின்றன.

பா' சபதம் இரண்டாம் பகுதி 1924இல் தான் வெளியா யிற்று. ஆயினும், தொடர்பு கருதி இரண்டாம் பாகமும் சேர்த்தே இங்கு வெளியிடப்பட்டுள்ளது.

1919 நவம்பர் 15ஆம் தேதி கானாடுகாத்தான் வயி. சு. ஷண்முகம் செட்டியார் அவர்களுக்குப் பாரதியார் எழுதிய கடிதத்தில்,

"இந்தப் "பாஞ்சாலி சபதம்" இரண்டாம் பாகம் கையெழுத்துப் பிரதி அனுப்பியிருப்பதைச்

சோம்பலின்றி தயைசெய்து ஒருமுறை முற்றிலும்
படித்துப் பாருங்கள்"

என்று குறிப்பிட்டுள்ளார்.

இந்தக் கடிதத்தைச் சான்றாகக் கொண்டு, இரண்டாம் பாகம் பாரதியாரால் 1919ஆம் ஆண்டு எழுதப்பட்டிருப்பதாகத் தெளியலாம்.

இரண்டாம் பாகம் கையெழுத்துப் பிரதியில் கண்டவாறே இங்குப் பதிப்பிக்கப் பெற்றுள்ளது.

முதற்பாகத்துக்கு எழுதியதுபோல இரண்டாம் பாகத்திற்குப் பாரதியார் முகவுரையோ, பொருள் விளக்கமோ ஏதும் எழுதவில்லை.

**பாஞ்சாலி சபதம் முதற்பாகம் வெளிவந்தபோது**
**பாரதியார் எழுதிய படையல்'.**

## ஸமர்ப்பணம்

தமிழ் மொழிக்கு அழியாத உயிரும் ஒளியும்
இயலுமாறு, இனிப்பிறந்து காவியங்கள்
செய்யப்போகிற வரகவிகளுக்கும்,
அவர்களுக்குத் தக்கவாறு கைங்கரியங்கள்
செய்யப்போகிற பிரபுக்களுக்கும், இந்நூலைப்
பாதகாணிக்கையாகச் செலுத்துகின்றேன்.

- ஆசிரியன்

ஓம்

## முகவுரை

எளிய பதங்கள், எளிய நடை, எளிதில் அறிந்துகொள்ளக் கூடிய சந்தம், பொதுஜனங்கள் விரும்பும் மெட்டு - இவற்றினை

யுடைய காவிய மொன்று தற்காலத்திலே செய்துதருவோன் நமது தாய்மொழிக்குப் புதிய உயிர் தருவோ னாகின்றான். ஓரிரண்டு வருஷத்து நூற்பழக்க முள்ள தமிழ்மக்க ளெல்லோருக்கும் நன்கு பொருள் விளங்கும்படி எழுதுவதுடன், காவியத்துக்குள்ள நயங்கள் குறைவுபடாமலும் நடத்துதல் வேண்டும்.

காரியம் மிகப் பெரிது. எனது திறமை சிறிது. ஆகையால் இதனை எழுதி வெளியிடுகின்றேன், பிறருக்கு ஆதர்சமாக வன்று, வழிகாட்டியாக.

இந்நூலிடையே திருதராஷ்டிரனை உயர்ந்த குணங்க ளுடையவ னாகவும், சூதில் விருப்ப மில்லாதவ னாகவும், துரியோதனனிடம் வெறுப்புள்ளவ னாகவும் காட்டியிருக் கின்றேன். அவனும் மகனைப்போலவே துர்க்குணங்க ளுடையவ னென்று கருதுவோரு முளர். எனது சித்திரம் வியாசர் பாரதக் கருத்தைத் தழுவியது.

பெரும்பான்மையாக, இந்நூலை வியாசர் பாரதத்தின் மொழிபெயர்ப் பென்றே கருதிவிடலாம். அதாவது கற்பனை, திருஷ்டாந்தங்களில் எனது 'சொந்தச் சரக்கு' அதிக மில்லை. தமிழ்நடைக்குமாத்திரமே நான் பொறுப்பாளி.

தமிழ் ஜாதிக்குப் புதிய வாழ்வுதர வேண்டு மென்று கங்கணங் கட்டிநிற்கும் பராசக்தியே என்னை இத்தொழிலிலே தூண்டினாளாதலின், இதன் நடை நம்மவர்க்குப் பிரியந்தரு வதாகு மென்றே நம்புகிறேன். ஓம். வந்தேமாதரம்.

– சுப்பிரமண்ய பாரதி.

## பாஞ்சாலி சபதம்

### பாரதி பிரசுராலயத்தார் எழுதிய முன்னுரை

### ஓர் பிரார்த்தனை

பாஞ்சாலி சபதத்தின் முதல் பாகம் ஸ்ரீமான் பாரதியாரிருக்

கும் போதே 1912இல் வெளியாயிருந்தது. பொருள் விளக்கமும் குறிப்புகளும் பாரதியாரே எழுதியிருந்தார். இரண்டாம் பாகம் இப்போதுதான் முதல் தடவை வெளிவந்திருக்கிறது. இதற்குப் பாரதியார் பொருள் விளக்கமோ அல்லது குறிப்போ யாதும் எழுதவில்லை. ஆகையால் நாங்கள் இரண்டாம் பாகத்தை அப்படியே வெளியிட்டிருக்கிறோம்.

இதன் ஸமர்ப்பணம் மிகவும் கவனிக்கத் தக்கது. பாரதியார் தமிழ் மொழிக்கு அழியாத உயிரும் ஒளியும் இயலுமாறு இனிப் பிறந்து காவியங்கள் செய்யப்போகிற 'வரகவிகளுக்கும்' அவர் களுக்குத் தக்கவாறு கைங்கரியங்கள் செய்யப் போகின்ற 'பிரபுக்களுக்கும்' இந்நூலைப் பாத காணிக்கையாகச் செலுத் தியிருக்கின்றார். பாரதியாருக்குப் பின்பு இன்னும் வரகவிகள் தமிழ்நாட்டில் யாரும் தோன்றவில்லையா? இதுவரை தோன்றி யிருந்தால் பாரதியார் நூல்கள் இன்னும் இந்த ஸ்திதியில் அதிக காலம் கதியில்லாமலிருக்காது என்று எண்ணுகின்றோம். எங்கு பார்த்தாலும் மேல்நாட்டின் வழியாக விளம்பரமும் வியாபாரமுமே அதிகமாகத் தோன்றுகின்றதே யொழிய உண்மையான விழிப்பு இன்னும் தமிழ்நாட்டில் காணோம். எவனுக்குத் தாய் பாஷையில் உண்மையான அன்பு ஏற்பட வில்லையோ அவனிடமிருந்து தேச கைங்கரியம் எதிர்பார்ப்பது வீணே. ஸஹோதர, ஸஹோதரிகளே! சீக்கிரம் விழியுங்கள். தாய் பாஷையைக் கவனியுங்கள். அதன் முன்னேற்றத்திற்கு வேண்டிய வழியைத் தேடுங்கள்.

செந்தமிழ்த் தேவியே! பாரதியார் எதிர்பார்த்த வரகவிகளும், பிரபுக்களும் தோன்றியிருந்தால் அவர்களுக்கு மெய்ஞ்ஞானம் புகட்டி அவர்கள் கடமையைக் கற்பி. இன்னும் அவர்கள் தோன்றியிராவிடில் காலதாமதமின்றித் தோற்றுவிப்பாயாக!

– பாரதி பிரசுராலயத்தார்

ருதிரோத்காரி
தைப்பூசம்

## குயில்

குயில் பாட்டு – கண்ணன் பாட்டு – பாரதி அறுபத்தாறு – என்ற மூன்று பாடல் தொகுதிகளும் ஒருசேரக் கொண்ட நூல் பாரதி பிரசுராலயத்தாரால் 1923இல் வெளியிடப்பட்டது.

பாரதியால் 'குயில்' என்றே தலைப்புக் கொண்ட இக் குறுங் காப்பியம் எழுதப்பட்ட காலம் 1914-1915 என்று ஓரிடத்தில்* குறிப்புக் காண்கிறது.

தவிர, "My Journal of Thoughts and Deeds" என்று பாரதியால் 1913-க்கும் 1915-க்கும் இடைப்பட்ட காலத்தில் எழுதப்பட்ட குறிப்பொன்றில் (பக். 94) 'குயில் - to be finished' என்றும் காண்கிறது.

பாரதியாரே ஒருமுறை எழுதிவிட்டுப் பின்னர், மறுமுறை ஒருசில இடங்களில் திருத்தமும் செய்துள்ளார்; ஒருசில வரிகளை நீக்கியும் உள்ளார்.

கையெழுத்துப் பிரதியைப் பரிசோதித்து, அதில் உள்ளவாறு பதிப்பிக்கப்பட்டுள்ளது.

## குயில் பாட்டு

**பாரதி பிரசுராலய முன்னுரை**

'பட்டப்பகலிலே பாவலர்க்குத் தோன்றும் நெட்டைக் கனவின் நிகழ்ச்சி' என்ற பெயரில் ஒரு ஆச்சரியமான கற்பனைக் காவியத்தை பாரதி இயற்றியுள்ளார். அதுதான் 'குயில்'. வெளித் தோற்றத்திற்கு ஒரு காதற் கதை. கவியே கதாநாயகன். 'குயிலி' என்ற லக்ஷியக காதலி கதாநாயகி. இவர்களிடையே தெய்விகக் காதல்: 'காதல் வழிதான் கரடு

.......................................

* பாரதியார் காசியில் வாங்கிய நோட்டுப் புத்தகத்தில் இக்காவியத்தை எழுதியுள்ளார். அதில் முகப்புப் பக்கத்தில் 1914–15 என்று குறித்துள்ளார்.

முரடாமென்பர்' என்ற பழமொழிக்கேற்ப, இவர்கள் கதையிலும் போட்டி, பொறாமை, கடைசியில் கொலையும் காண்கிறோம். ஆனால் கதை அத்துடன் முடியவில்லை. இவர்கள் கொண்ட காதல் 'இவ்வுலகத்து வாழ்க்கை மாறிய போதிலும் அது மாறாது ஸாவித்திரியும் ஸத்யவானும், லைலாவும் மஜ்நூனும், ரோமியோவும் ஜூலியத்தும் கொண்டிருந்தார்களே அத்தகைய காதல். எனவே மறு ஜன்மத்திலும் இருவரும் சந்திக்கின்றனர். ஆனால், கவி தன் லக்ஷியக் காதலியைக் கண்டு மயங்கி. 'இவளழகை எற்றே தமிழில் இசைத்திடுவேன்?' என்று திணறும் தறுவாயில் கனவும் திடீரென முடிவடைகின்றது. 'காதல், சோலை, சொன்ன கதை, அத்தனையும் மாலை யழகின் மயக்கத்தில் தோன்றியவை' என்று கவியுணருகின்றார். வாசகர்களும் இன்பக்கனவொன்று காணும்பொழுது அக்கனவு திடீரெனக் கலைந்த உணர்ச்சி யடைகின்றனர். 'பண்டைச்சுவடி, எழுதுகோல், பத்திரிகைக் கூட்டம்' இவற்றால் சூழப்பெற்ற உண்மைப் பாரதி காட்சியொன்றையும் சித்திரித்துக் கதையை முடிக்கின்றார்.

இக்கதைக்கு வேதாந்தப் பொருள் கூறுவதற்கும் இடமிருக்கின்ற தென்பதைக் கடைசி வரிகள் குறிப்பிடுகின்றன. காவிய ரஸனையுள்ளவர்களுக்கு நல்விருந்தளிப்பதுடன், அவர் தம் சிந்தனைக்கும் கவி வேலை கொடுக்கின்றார் போலும்! அத்தகைய வேதாந்தப் பொருள் என்னவென்பதைக் கவியே வேண்டிக்கொள்ளும் 'ஆன்ற தமிழ்ப் புலவர்கள்' தாம் எடுத்துரைக்க வேண்டும்.

நூல் மிகவும் சிறியதே, ஆயினும் இதில் ஒரு சிறந்த கற்பனைக் காவியத்தின் பண்புகள் பல மிளிர்வதைக் காண்கிறோம். முற்றிலும் இன்பவளம் பெற்ற காட்சிகள்; கதை சொல்வதற்கென்றே அமைந்துள்ள அகவல் நடை;* இணை

* அகவல் நடை என்று குறித்திருப்பது தவறு, 'குயில்' முழுவதிலும் ஓரிடத்தும் அகவல் நடை சிறிதும் இல்லை. 'காதல் காதல்' என்பது இசைப் பாடல்; மற்று, இக் குறுங்காவியம் முழுவதும் வெண்டளையே கொண்ட கண்ணிகளா லாகியது:- - பதிப்பாசிரியர்

யற்ற வேகம், கவர்ச்சி, கதை சொல்லும் அழகு; ஒப்பற்ற வருணனை, உவமை, சொற் சித்திரங்கள்; கதை துவங்கும் சோலை, குரங்கு, மாடு, சூரியோதயம், சங்கீதம், எல்லாவற்றிற்கும் சிகரமாகக் குயிலின் தோற்றம் - இவற்றின் வருணனைகள் தமிழ் மொழிக்கே வெற்றியளிக்கின்றன.

– சி. விசுவநாதன்

பாரதி பிரசுராலயம்,
திருவல்லிக்கேணி.

## பாரதி பிரசுராலயத்தார் எழுதிய

## முகவுரை

பாப்பாப் பாட்டைக் காட்டிலும் இனி மேலான உபதேசம் குழந்தைகளுக்குக் கொடுக்க முடியுமோ என்பது சந்தேகந்தான. ஜீவகாருணியம், பெற்றோரைப் பேணல், தெய்வபக்தி, தேச பக்தி, தாய்மொழி வாழ்த்து போன்ற உத்தம குணங்களை உணர்த்துகிறார். கடைசியாக, பாப்பாவுக்கு வாழும் முறைமையைச் சுருக்கமாகச் சொல்லுகிறார்:

உயிர்களிடத்தில் அன்பு வேணும் – தெய்வம்
உண்மையென்று தானறிதல் வேணும்;
வயிரமுடைய நெஞ்சு வேணும் - இது
வாழும் முறைமையடி பாப்பா.

## கண்ணன் பாட்டு

கண்ணன்பாட்டு நூலில் 1917ஆம் வருடம் பரலி சு. நெல்லையப்பர் பதிப்பித்தபோது 22 பாடல்களே இடம் பெற்றன. 1919 ஆம் ஆண்டு மறுபதிப்பு வெளியிட்டபோது கண்ணன் என் அரசன் என்ற தலைப்பிட்ட புதிய பாடலொன்றைச் சேர்த்திருக்கிறார்.

இரண்டாம் பதிப்புக்குத்தான் மகரிஷி வ. வெ. ஸு. ஐயர் முன்னுரை வழங்கியுள்ளார்.

'கண்ணன் என் தாய்' என்ற பாடல் ஞானபாநு இதழில் 1913 அக்டோபர் இதழில் வெளிவந்துள்ளது.

கண்ணம்மா—என்காதலி, கண்ணன்-என் காதலன்-என்னும் இரு பாடல்களும் கையெழுத்து வடிவில் 'பாடல்திரட்டு'த் தொகுதியுள் காணப்படுகின்றன.

கண்ணனைப்பற்றிய தனித் தனிப் பாடல்கள் இயற்றிய பின்னர் தான் நூலாக்கும் எண்ணத்தில் மேலும் சில பாடல் களை இயற்றினார் எனவும் கொள்ளலாம்.

## முன்னுரை*

நம் காலத்துத் தமிழ்க் கவிகளுள் பிரதம ஸ்தானத்தை வகிக்கும் ஸ்ரீமான் ஸுப்ரஹ்மண்ய பாரதியின் நூல்களுக்கு முன்னுரை வேண்டுவதே யில்லை. இருப்பினும் பாயிர மல்லது பனுவ லன்றே என்னும் முதுமொழியை நினைத்தோ அல்லது வேறு என்ன எண்ணியோ, பதிப்பாசிரியர் இக் கண்ணன் பாட்டின் இரண்டாம் பதிப்புக்கு என்னை ஓர் முன்னுரை எழுதித் தரவேண்டுமெனக் கேட்டார். சிறிதளவேனும் சாத்திய மாயிருக்கிற ஓர் காரியத்தை நட்புரிமை பூண்டோர் செய்யும் படி வேண்டினால் மறுத்தல் அழகன்று என நினைத்துச் சம்மதித்தேன்.

பாரத நாட்டின் குலதெய்வ மாகிவிட்ட கண்ணனுக்குப் பாமாலை சூட்டாத கவிகள் அருமை. தன்னை நெடுநாள்களாக மறந்திருந்த பாரத நாடு திடீரென விழித்துக் கொண்டதும், அதன் எதிரே முதலில் தோன்றிய ஒளி, கீதா சாஸ்திரத்தைக் கூறிப் பார்த்தனுடைய ரதத்தை வெற்றிபெற ஓட்டிய கண்ண பிரானுடைய உருவமே. அந்த உருவமானது நமது கவியின் இருதயத்திலும் எழுந்து அவருடைய கவிதைக்கு ஓர் சோபை யைக் கொடுத்தது.

---

* 1919இல் இரண்டாம் பதிப்பு வெளிவந்தபோது இடம்பெற்றது இந்த முன்னுரை. — பதிப்பாசிரியர்

பத்து வருஷங்களுக்கு முன் அவர் பதிப்பித்த ஜன்ம பூமியி லேயே ஸ்ரீ கிருஷ்ண ஸ்தோத்திரம் என்று இரண்டு செய்யுள்கள் காணப்படுகின்றன. ஆனால் பிற்பட்டுத்தான் கண்ண னுடைய செயல்களும் திருவிளையாடல்களும் அவர் மனதைப் பூரணமாக ஆகருஷித்தன. இவ் ஆகருஷணத்திற்கு நாலாயிரப் பிரபந்தத்துள் பெரியாழ்வார் அருளிச்செய்த திருப்பாசுரங்களின் அனுஸந்தானம் முக்கிய காரணமாக இருந்திருக்கிறது. இக் கண்ணன் பாட்டானது பாவ விஷயத்தில் அப் பாசுரங்களின் வழியையே தழுவியதாக இருக்கிறது.

இஷ்ட தெய்வத்தைப் பல பாவங்களால் வழிபடலாகும் என்று நமது பக்தி சாஸ்திரங்கள் கூறுகின்றன. நமது ஆசிரி யரும் அதை அனுசரித்துக் கண்ணனைத் தாயாகவும், தந்தை யாகவும், எஜமானாகவும், குருவாகவும், தோழனாகவும் நாயகி யாகவும், நாயகனாகவும் பாவித்துப் பாடுகிறார்.

இவற்றுள் நாயக நாயகி பாவத்தைப் பற்றி இங்குச் சில மொழிகள் கூறாது விட முடியவில்லை. இப் பாவத்தால் பக வானை வழிபடும் முறை, தொன்று தொட்டு, பக்தர்களாலும், கவிகளாலும், அனுசரிக்கப்பட்டு வருகிறது. ரோமன் கத்தோலிக் மதத்தில் கூட அடியார் வர்க்கத்தை நாயகியாகவும் கிறிஸ்துவை நாயகனாகவும் பாவித்து எழுதிய ஸ்தோத்திரங்கள் பல உள. நமது பாகவதத்தில் கோபிகளின் உபாக்கியானங்களெல்லாம் இப் பாவத்தை ஒட்டி எழுதப்பட்டுள்ளனவே. மகா பக்திமதி யான மீராபாயி உலகத்திலுள்ள ஜீவ கோடிகள் அனைத்தும் ஸ்திரீப்பிராயம் என்றும், பகவான் ஒருவனே புருஷன் என்றும் பாவித்துப் பக்தி செய்திருக்கிறார். பரமஹம்ஸ ராமகிருஷ்ண தேவரும் தம்முடைய அனுபவங்களுள் நாயகி அனுபவத்தையும் அனுபவிக்க எண்ணி, சேலை தரித்துக்கொண்டு ராதை என்கிற பாவத்தால் கண்ணனை வழிபட்டார் என்று சொல்லப்படு கிறது. திருக்கோவையாரையும், ராமலிங்க சுவாமிகளின் திரு வருட் பாவையும் அனுபவித்த தமிழருக்கு இவ்விதம் வழிபடும் முறை புதிதாகப்படாது.

ஆனால், இந்தப் பாவத்தை ஆளுவது கத்தியின் கூர்ப்பக் கத்தின்மீது நடப்பதைப் போன்ற கஷ்டமான காரியம். ஓர் வரம்பு இருக்கிறது; அதற்கு இப்புறம் அப்புறம் போய்விட்டால் அசந்தர்ப்பமாகிவிடும். ஸ்ரீபாகவதத்திலும்கூட, கோபிகா உபாக் கியானங்களில் சுக பகவான் இவ்வரம்பை அங்கங்கே கடந்து விட்டிருக்கிறார் என்பது எனது தாழ்ந்த அபிப்பிராயம்.

கடல் ஞாலம் செய்தேனும் யானே என்னும்,
கடல் ஞாலம் ஆவேனும் யானே என்னும்

என்று தொடங்கும் திருவாய் மொழிகளையும்,

கருப்பூரம் நாறுமோ, கமலப்பூ நாறுமோ?
திருப்பவளச் செவ்வாய்தான். தித்தித் திருக்குமோ?

என்று தொடங்கும் ஆண்டாளுடைய பாசுரங்களையும் போலச் செயிரின்றி இப் பாவத்தைப் பாடுவது அனேகமாய் அசாத் தியம்.

நமது கவியும் இப் பாவத்தை விரிக்கையில் பர பக்தியை விடச் சாரீரகமான காதலையே அதிகமாக வர்ணித்திருக்கிறார். ஆனால், சுகப்பிரம்மமே நிறுத்த முடியாததான தர்ாக முனையை நம் ஆசிரியர் நிறுத்தவில்லை என்று நாம் குறை கூறலாமா?

இந்தக் கீர்த்தனங்களைப் பரபக்திக்குப் பேரிலக்கியமாகக் கொள்ள வேண்டுவதில்லை. ஆசிரியர் இந் நூலில் கவி என்கிற ஹோதாவில் தான் நம்மிடம் வருகிறார் என நினைக்கவேண் டும். கவிதா ரீதியாகப் பார்க்கும் போது இக் கீர்த்தனங்களுள் பெரும்பாலவையினுள்ள சுவை தேனினும் இனிதாயிருக்கிறது.

இன்னொன்று. கவிதை யழகை மாத்திரம் அனுபவித்து விட்டு இந் நூலின் பண்ணழகை மறந்துவிடக் கூடாது. இதி லுள்ள பாட்டுக்களிற் பெரும்பாலவை தாளத்தோடு பாடு வதற்காகவே எழுதப்பட்டவையாயிருக்கின்றன. கடற்கரையில் சாந்திமயமான சாயங்கால வேளையில், உலகனைத்தையும்

மோஹ வயப்படுத்தி நீலக் கடலையும் பாற்கடலாக்கும் நில வொளியில், புதிதாகப் புனைந்த கீர்த்தனங்களைக் கற்பனா கர்வத்தோடும் சிருஷ்டி உற்சாகத்தோடும் ஆசிரியன் தன்னு டைய கம்பீரமான குரலில் பாடினதைக் கேட்ட ஒவ்வொரு வரும் இந்நூலிலுள்ள பாட்டுக்களை மாணிக்கங்களாக மதிப்பர்.

இந் நூலைத் தமிழுலகம் ஆதரித்துத்தான் இரண்டாவது பதிப்பு வெளிவருகிறது. ஆனால் ஹரீந்திர நாத சட்டோ பாத்தியாயர் எழுதிய ஆங்கிலக் கீர்த்தனங்களின் விலை மூன்று ரூபாயாக இருக்க, அளவில் அந்நூலில் குறையாததும், சுவை யில் அதற்கு இணையாக இருப்பதுமான இந்நூலின் முதற் பதிப்புக்கு, காகிதம் ஏறிவிற்ற காலத்தில், பதிப்பாசிரியர் விலை கால் ரூபாயாகக் குறிக்கவேண்டியிருந்தது என நினைக்கும் போது, நாட்டில் தமிழபிமானம் வெளிப்படையாக விளங்க வில்லை என்றாவது ஒப்புக் கொள்ளவேண்டும். முன் காலத் தில் ஆசிரியர்களுக்கு அரசர்கள் ஏராளமான பொருள் உதவி செய்து, அவர்கள் மனதைச் சிறிய விசாரங்கள் பீடிக்காமல் காத்து வந்து, அவர்களுடைய ஆற்றல் நாளுக்கு நாள் அதிகரிக்கும்படி செய்து வந்தார்கள். தற்காலத்தில் கல்வியபி மானமுள்ள பொது ஜனங்கள்தாம் அக்காலத்து அரசரின ஸ்தானத்தை வகிக்கிறார்கள். இவர்கள் தங்கள் அபிமானத்தை விலையைப் பொருட்படுத்தாமல் நூல்களின் யோக்கியதையைக் கருதி ஆதரித்துத்தான் காட்ட முடியும். நமது ஆசிரியரின் நூல்களை நம் நாட்டவர் சரிவர ஆதரிக்காததனாலே

சுற்றி நில்லாதே போ, பகையே;—
துள்ளி வருகுது வேல்!

என்றும்

கைதனில் வில்லும் உண்டு
காண்டீவம் அதன் பேர்! என்றான்*

---

* கையெழுத்துப் பிரதியாயிருக்கிற பாஞ்சாலி சபதத்தின் இரண்டாம் பாகத்தில் அருச்சுனன் தன்னுடைய பராக்கிரமத்தைக் கூறும் செய்யுளில் வருகிறது.

என்றும் உள்ள அக்ஷரலக்ஷம் பெறுமான பாக்களை எழுதியிருக்கும் அவருடைய உற்சாகம் குன்றிப்போயிருக்கிறது. தமிழபிமானிகள் இப்பதிப்பை ஆதரித்து வாங்கி ஆசிரியனுடைய உற்சாகத்தை உயர்த்தி அவரால் தமிழில் புதிய இலக்கியங்கள் பிறக்கும்படி செய்வார்கள் என நம்புகிறேன்.

புதுச்சேரி, சித்தார்த்தி ஆவணி 22உ } வ.வெ. ஸுப்ரஹ்மண்ய ஐயர்

## முதற் பதிப்பின்

## முகவுரை

இந்தச் சிறிய நூலுக்கு ஒரு பெரிய முகவுரையெழுத யான் விரும்பவில்லை. சில வார்த்தைகள் மட்டும் கூறுகின்றேன்.

இதன் ஆசிரியர் ஸ்ரீமான். சி. சுப்ரமணிய பாரதியாரைத் தமிழ் நாட்டார் அறிவார்கள். ஆனால் அவர் பெருமையை உள்ளபடி அறிந்தவர்கள் மிக மிகச் சிலரேயாவர். ஸ்ரீமான் பாரதியார் ஒரு பெரிய மேதாவி; மகா பண்டிதர்; தெய்விகப் புலவர்; ஜீவன் முக்தர். இவர் தமிழ் நாட்டு 'ரவீந்திர நாதர்'. இவர் எனது தமிழ் நாட்டின் தவப்பயன்.

இவ்வாறு கூறுவதால் யான் எனது நண்பரை மிகுந்த உச்ச ஸ்தானத்தில் ஏற்றி வைப்பதாக எவரும் கருதவேண்டாம். அவருக்கு யான் கொடுக்கும் உச்சஸ்தானம் நிச்சயமானது. இதனைத் தற்காலத்தில் அறியாதவர்கள், பிற்காலத்தில் அறிவார்கள்.

பாரதியாருக்குக் கண்ணபிரான் மீதுள்ள அதிதீவிர பக்தி காரணமாக இந்நூலிலுள்ள பாடல்கள் வெளியாயின. இவை தமிழர்களுக்கு நல் விருந்தாகும்.

பாரதியாரது பாடல்களின் பெருமையைப் பற்றி யான் விரித்துக் கூறுவதென்றால் இந்த முகவுரை அளவு கடந்து

பெரிதாய்விடும். ஒரு வார்த்தை மட்டும் கூறுகின்றேன். இந்த ஆசிரியர் காலத்திற்குப் பின் - - எத்தனையோ நூற்றாண்டு களுக்குப் பின் - - இவர் பாடல்களைத் தமிழ் நாட்டு மாதர் களும் புருஷர்களும் மிகுந்த இன்பத்துடன் படித்துக் களிப் படையும் காட்சியை யான் இப்பொழுதே காண்கின்றேன்.

இந்நூல் வாழ்க! என்னவர் வாழ்க! எந்தாய் வாழ்க!

சிந்தாதிரிப்பேட்டை சென்னை.<br>பிங்கள, ஆவணி க. } நெல்லையப்ப பிள்ளை

'முரசு', 'பாப்பாப் பாட்டு' இரண்டையும் தனிநூலாக 1917-18-ல் வெளியிட்டபோது எழுதிய முகவுரை

இச்சிறிய நூலின் ஆசிரியர் ஒரு பெரியவர். அவர் ஓர் அவதார புருஷர். இச்சிறிய நூலைத் தமிழர்கள் வேதமெனக் கொள்வார்களாக.

இந்த நூலுக்கு யான் இப்பொழுது கொடுத்துள்ள உருவத்தை நோக்கி இதன் மகிமையை யாரும் குறைத்துவிட வேண்டாம். இதிலுள்ள பாடல்கள் தங்க ஏடுகளில் நவரத்ன எழுத்துக்களால் பொறித்தற்குரியன.

சிந்தாதிரிப்பேட்டை, சென்னை<br>பிங்கள, ஐப்பசி - க. } நெல்லையப்பன்

## பாரதி பிரசுராலயத்தார் எழுதிய முன்னுரை

முரசு என்பது ஒற்றுமை, சமத்துவம், அன்பு முதலிய உத்தம தர்மங்களை எடுத்துக் கூறுகிறது. உயிர்களனைத்தையும் ஒன்றெனக் கருதாததால் அனாவசியமான ஜாதி மத பேதங்கள் ஏற்படுகின்றன என்றும், எல்லோரிடத்தும் அன்பு பாராட்டு வதால் இவ்வையம் செழிக்குமென்றும் பலமுறை போதிக்கிறார்:

அன்பென்று கொட்டு முரசே - மக்கள்<br>அத்தனை பேரும் நிகராம்

இன்பங்கள் யாவும் பெருகும் - இங்கு
யாவரும் ஒன்றென்று கொண்டால்.

## விநாயகர் ஸ்தோத்ரம்

(அல்லது)

## விநாயகர் நான்மணிமாலை

கையெழுத்து வடிவில் இருந்ததை முதன்முதலாகப் பாரதி பிரசுராலயத்தார் 1929இல் நூல் வடிவாக்கினர்.

நாற்பது செய்யுட்கள் கொண்டது இந்த நூல். கையெழுத்துப்பிரதி சிதிலமான நிலையிலும், பலவிடங்களில் அடிக்கப் பட்டும் இருந்த காரணத்தால் முதற்பதிப்பில் 38 செய்யுட்களே தரப்பெற்றிருந்தன. பின்னர் வெளிவந்த பதிப்புக்களில் பிரதியைச் சோதித்து, 40 செய்யுட்களாக நிறைவு செய்யப் பட்டது.

முதற்பதிப்பு எமக்குக் கிடைக்காத காரணத்தால், 1930இல் வெளிவந்த மறுபதிப்பை யொட்டி, இங்குச் செய்யுட்கள் தரப்பட் டுள்ளன. 1936இல் வெளியான பதிப்பில் காணப்பட்ட பாடபேதங்கள் அடிக்குறிப்பில் இடம் பெற்றுள்ளன.

### முன்னுரை

இந்நூல் புதுவை மணக்குளப் பிள்ளையாரை உத்தேசித்துச் செய்திருப்பினும், ஷண் மதங்களுக்குள் காணாபத்ய (அதாவது பரம் பொருளை கணபதியாகத் தொழும்) முறையைத் தழுவி யிருக்கிறது.

இவர் புனைந்துள்ள மற்ற நூல்களிற் காணப்படும் தெளிவுறக் கூறுதல், பக்தி பயக்குதல் (பயத்தல்) என்ற லக்ஷணங்கள் இதிலும் விசேஷமாகக் காணலாமாதலால், இந்நூலின் சிறப்பை இங்கு எடுத்தெழுத வேண்டியது அவசியமில்லை, ஆனால்,

விநாயகக் கடவுள்மீது இயற்றியுள்ள மற்ற நூல்களுக்கும் பாரதியார் கையாளும் திறமைக்கும் உள்ள வித்யாசங்களை இதைப் படிக்கும் ஒவ்வொருவரும் நன்குணர்வார்.

– பாரதி பிரசுராலயத்தார்

## நாட்டுப் பாட்டு

பரலி சு. நெல்லையப்பர் வெளியிட்ட இரண்டாம் நூல் இதுவாகும். முன்னம் வெளியான மகாகவியின் ஸ்வதேசப் பக்திப் பாடல்களில் சிலவற்றைத் தொகுத்து நாட்டுப் பாட்டு என்று தலைப்பெயரிட்டு வெளியிட்டார்.

தேசிய கீதங்கள் அல்லது தேசபக்திப் பாடல்கள் என்று பெயரிட்டு நூலைப் பிரசுரித்தால் அரசினர் பறிமுதல் செய்து விடுவார்கள் என்று அஞ்சியே நெல்லையப்பர் நாட்டுப் பாட்டு எனத் தலைப்பிட்டு வெளியீடு செய்தார்.

எவ்வளவு முயன்று தேடியும் முதற்பதிப்பு எமக்குக் கிட்ட வில்லை. அதன் காரணமாக, இரண்டாம் பதிப்பை ஆதார மாகக் கொண்டது இப்பதிப்பு.

'நாட்டுப் பாட்டு'த் தொகுதியுள் இடம்பெற்றிருந்த பாடல் கள் வருமாறு:

1. வந்தேமாதரம்
2. வந்தேமாதரம்
3. செந்தமிழ் நாடு
4. பாரத தேசம்
5. நாட்டு வணக்கம்

6. எங்கள் நாடு
7. ஜாதீய கீதம் (மொழிபெயர்ப்புகள்)
8. எங்கள் தாய்
9. மாதாவின் துவஜம்
10. பாரததேவியின் திருத்தசாங்கம்
11. ஜய பாரத!
12. சுதந்தரதேவியின் துதி
13. சுதந்தர தாகம்
14. பாரதமாதா திருப்பள்ளியெழுச்சி
15. தமிழ்
16. தமிழ்த்தாய்
17. புது வருஷம்
18. தொழில்

மேற்கண்ட பதினெட்டுக் கவிதைகளில் (3) செந்தமிழ் நாடு; (4) பாரததேசம் (15) தமிழ் (16) தமிழ்த்தாய் (18) தொழில் ஆகிய ஐந்து பாடல்கள் தவிர, மற்றப் பாடல்கள் 1907, 1908, 1914 ஆம் ஆண்டுகளில் பதிப்பிக்கப பெற்ற நூல்களில் இடம் பெற்றுள்ளன.

'நாட்டுப்பாடல்' இரண்டாம் பதிப்புக்குப்
பரலி சு. நெல்லையப்பர் எழுதிய

## முகவுரை

இது, முன்னர் யான் வெளியிட்ட 'நாட்டுப் பாட்'டின் இரண்டாம் பதிப்பு. இதில் பல புதிய பாடல்கள் சேர்க்கப் பட்டிருக்கின்றன.

பாரதியாரின் பாடல்களைப் பற்றி ஒரு சிறிய ஆராய்ச்சி எழுதுவதென்றாலும் அது பெரிதாக விரியும். எனவே, அந்தக் கடமையை இங்கு நான் செய்யவில்லை.

பாரதியாரின் பாடல்கள் தமிழர்களுக்குப் புதிய உயிர் அளிப்பன. அவரது பாடல்களெல்லாம் மேலான தேசபக்தியையும், தெய்வபக்தியையும், உண்மையான கவிகள் விளைக்கும் ஒப்பற்ற இன்பத்தையும் விளைக்கின்றன. அவர் பாடல்களைப் படித்த காசிவாசியான எனது நண்பர் ஒருவர் "அவரது அரிய கவிகளைப் படித்து உடம்பு சிலிர்த்தேன். இத்தகைய சிறந்த கவிவல்லோர்கள் இன்னும் இருந்து பாரத நாட்டைச் சிறப்பித்து வருவதால்தான் தமிழ்மாது விருத்தாப்பிய தசை அடையவில்லை; அடையமாட்டாள் என மகிழ்ந்தேன்" என்று எழுதினார். ஆயினும், இத்தகைய புலவர்களின் பெருமையை அறிந்து, அவர்களை ஆதரித்து, அவர்கள் அறிவும் திறமையும் தமிழ் நாட்டாருக்கு மிகவும் பயன்படும்வண்ணம் செய்யக் கூடிய தமிழர்கள் மிகச் சிலர்கூட இல்லாதிருப்பதை நோக்கும் பொழுது எனக்கு அளவற்ற விசனம் உண்டாகிறது.

இந்த 'நாட்டுப்பாட்'டின் பெருமையைத் தமிழர்கள் நன்றாய் அறிவார்கள். எனது தாய்த் திருநாட்டைப் புகழும் இத்தகைய பாடல்களைப் பாடி மகிழுமாறு, யான் இந்த நாட்டிலே கோடி கோடி பிறப்பு பிறக்க வேண்டுமென்று விரும்புகிறேன். அண்ட சராசரங்கள் அனைத்தையும் ஆக்கியும் காத்தும், மாய்த்தும் வரும் பரம்பொருளின் பெரும்புகழை ஒருவன் எவ்வளவு காலந்தான் புகழ்ந்து போற்றினும் ஆவல் தீருமா? அதுபோல, இந்தத் தெய்விகத் திருநாட்டின் பெருமைகளை ஒருவன் எவ்வளவு காலந்தான் புகழ்ந்து பாடினும் ஆவல் தீராது.

எந்தாய் வாழ்க! வந்தே மாதரம்!

சென்னை, சிந்தாதிரிப்பேட்டை<br>சித்தார்த்தி: ஆனி } நெல்லையப்பர்

## பாடல் திரட்டு

தமது கவிதைத் தொகுதிக்குப் பாரதியார் சூட்டிய 'பாடல் திரட்டு' நூலில் 29 பாடல்கள் இடம் பெற்றுள்ளன. பாரதி மரணத்தைக் கடந்த பின்னர், அவரின் பாடல் தொகுதிகளைப் பதிப்பித்த பாரதி ஆச்ரம நிறுவனத்தார் 'பாடல் திரட்டு' என்ற தலைப் பெயரால் வெளியிடாமல், சுதேச கீதங்கள் என்ற பெயரால் வெளியிட்ட நூல் தொகுதிகளில் இதில் இடம் பெற்றிருந்த பாடல்களை இணைத்தனர்.

29 பாடல்களிலும், கண்ணம்மா என் காதலி, கண்ணன் என் காதலன் ஆகிய இரு பாடல்கள் கண்ணன் பாட்டு நூலில் உள்ளன. தொழில் என்ற பாடல் நாட்டுப் பாட்டு நூலுள் உள்ளது. பிழைத்த தென்னந்தோப்பு, புயற் காற்று ஆகிய இரு பாடல்களும் காலவரிசைப்படி தொகுக்கப்பெற்ற முறையில் உரிய இடங்களில் தரப் பெற்றுள்ளன. ஆக, இப்பகுதியில் 24 பாடல்கள் இடம் பெற்றுள்ளன.

பாரதியாரின் கையெழுத்துப் பிரதியில் கண்டுள்ளபடி பாடல்கள் பதிப்பிக்கப்பட்டுள்ளன.

பாரதியார் கைப்பட எழுதாத சிட்டுக் குருவி என்ற பாடலும் இத்தொகுதியில் காணப்படுகின்றது. இங்கே அப்பாடல் பதிப்பிக்கப்படவில்லை. வேறு இடத்தில் (வரிசை எண் 22) அப்பாடலைக் காணலாம்.

மற்றும், பெண்மை, கேட்பன, சொல், அழகுத் தெய்வம், மூன்று காதல், விடுதலை, வேண்டும் (வேண்டுவன) பக்தி (பக்தியினாலே) ஆகிய பாடல்கள் 'பாட்டுக்கொத்து' என்ற தொகுதியிலும் காணப்படுகின்றன.

இப்பகுதியில் இடம் பெற்றுள்ள பாடல்கள்:

1. தீ - அக்நி ஸ்தோமம்
2. லக்ஷ்மீ ப்ரார்த்தனை – திருவேட்கை

3. திருக்காதல்

4. திருமகள்

5. காணி நிலம்

6. புதுமைப் பெண்

7. பகைவனுக்கருள்வாய்

8. லக்ஷ்மிதேவி - சரண்புகுதல்

9. பெண்மை

10. கேட்பன

11. சக்திக்கூத்து

12. விடுதலை

13. சொல்

14. நிலாவும் வான்மீனும் காற்றும் (மனத்தை வாழ்த்துதல்)

15. பராசக்தி

16. அழகுத் தெய்வம்

17. ஆத்ம ஜயம்

18. மூன்று காதல்

19. பொய்யோ? மெய்யோ?

20. உப்பளம் கோயிலில் எழுந்தருளியிருக்கும் தேசமுத்துமாரி

21. வேண்டும்

22. பக்தி

23. முருகன் பாட்டு

24. நெஞ்சொடு சொல்வது

## சக்திப் பாட்டு

இத் தொகுதியுள் எட்டுப் பாடல்கள் காணப்படுகின்றன. பாரதியாரின் கையெழுத்துப் பிரதியில் கண்டுள்ளபடி பாடல்கள் பதிப்பிக்கப்பட்டுள்ளன.

இத்தொகுதியுள் இடம் பெற்றுள்ள 'வையமுழுதும்' என்ற பாடல் மட்டும் 'பாட்டுக் கொத்து' என்ற தொகுதியிலும் காணப்படுகின்றது.

இத் தொகுதியில் காணப்பெறும் பாடல்கள் வருமாறு:

1. சிவசக்தி புகழ்
2. சக்தி திருப்புகழ்
3. சக்திக்கு ஆத்ம ஸமர்ப்பணம்
4. வைய முழுதும்
5. மஹாசக்தி வெண்பா
6. சக்தி விளக்கம்
7. வேள்விப் பாட்டு
8. போற்றி யகவல்

## பாட்டுக் கொத்து

பதிப்பாசிரியர் குறிப்புரை:-

இத்தொகுதியுள் பாரதியார் முப்பத்தொரு பாடல்களைப் பதிப்பிக்கத் திட்டமிட்டிருந்தார். பாடல்கள் பலவற்றுக்கு ஸ்வர வரிசையும் அமைத்தே வெளியிடவும் கருதியிருந்தார்.

முப்பத்தொரு பாடல்களில் 18, 20, 22, 23, 27, 28 ஆகிய எண்கள் கொண்ட ஆறு பாடல்கள் எவையெனத் தெளிய

இயலவில்லை. இந்த எண்களைக் கொண்ட பாடல்கள் இக் கொத்தில் காணப்படவில்லை.

மற்றும், (5) வரங்கேட்டல், (12) அழகுத் தெய்வம், (13) பெண்மை, (14) சொல், (15) விடுதலை, (16) பக்தியினாலே,(21) மூன்று காதல், (25) கேட்பன, (26) வேண்டுவன (26) வேள்விப் பாட்டு, (30)வையமுழுதும்-ஆகிய பதினொரு பாடல்களில் 'வரங் கேட்டல்' என்ற பாடல் 'யோகசித்தி' என்ற தலைப்பில் 'ஞான பாநு' இதழில் வெளி வந்ததால், இப்பாடல் காலவரிசையில் உரிய இடத்தில் 'இடம் பெற்றுள்ளது. அழகுத்தெய்வம், பெண்மை, சொல், விடுதலை, பக்தியினாலே, மூன்று காதல், கேட்பன, வேண்டுவன - ஆகிய எட்டுப் பாடல்களும் "பாடல் திரட்டு"த் தொகுதியுள் இடம்பெற்றுள்ளன. வேள்விப் பாட்டு, வைய முழுதும் - ஆகிய இரு பாடல்களும் 'சக்திப் பாட்டு'த் தொகுதி யில் சேர்க்கப்பட்டுள்ளன.

ஆக, இத்தொகுதியுள் இடம்பெற்றுள்ள பாடல்களின் எண்ணிக்கை பதினான்கு மட்டுமேயாகும்.

பாடல்கள் விவரம் வருமாறு;

1. சந்திரமதிப் பாட்டு
2. வேலன் பாட்டு
3. அந்திப் பொழுது (காதற்பாட்டு)
4. காற்று வெளி (காதற்பாட்டு)
5. முத்துமாரி
6. ஜயமுண்டு
7. ஜய பேரிகை
8. கிளித் தூது
9. வண்டிக்காரன் பாட்டு

10. கற்பனை யூர்

11. காளிப் பாட்டு

12. ஓம் சக்தி

13. ஊழிக் கூத்து

14. ஸோமதேவன் புகழ்

## பாட்டுக் கொத்து

(முற்குறிப்பு: ஹார்மோனியம், வீணை முதலிய வாத்யங்களில் சுற்றுக்கொள்ள விரும்பும் ஜனங்களுக்கு உதவியாக இந்நூலில் கொடுக்கப்படும் ஸ்வர வரிசைகள் முதலியனவற்றை மாதிரியாகக் கொண்டு பாட வேண்டும். பாட்டின் சந்த மாறுதல்களுக்குத் தக்கபடி ஸ்வரங்களை மாற்றிக் கொள்க).

**பதிப்பாசிரியர் குறிப்பு:**

கீழே குறித்துள்ள பதினான்கு பாடல்கள் "பாட்டுக் கொத்து" என்ற தொகுதியில் காணப்பட்டாலும், பாடல்களின் எண்களும் பக்க எண்களும் தொடர்ச்சியாகத் தரப்படாமல், வெவ்வேறாகத் தரப்பட்டிருப்பதால், இப்பாடல்களை இப் பதிப்பில் தனியே தந்துள்ளோம்.

தனித்த பாடல்களின் விவரம் வருமாறு:

1. ஞாயிறு — ஸூர்ய ஸ்துதி

2. கிளிப் பாட்டு

3. கோவிந்தன் பாட்டு

4. விடுதலைப் பாட்டுக்கள்

5. அம்மாக்கண்ணு பாட்டு

6. கண்ணம்மா — அங்க வர்ணனை

7. விடுதலை விடுதலை விடுதலை
8. வள்ளிப் பாட்டு
9. சாகா வரம்
10. செல்லம்மா பாட்டு
11. பூலோக குமாரி
12. வாழ்க திலகன் நாமம்
13. எந்த நேரமும்
14. செல்லம்மா பாட்டு

## பாரதியார் மறைவுக்குப்பின் வெளியீட்டு முயற்சிகள் சில விவரங்கள்

மகாகவி பாரதியார் மறைந்தபோது, தமிழ் நாடெங்கும் அஞ்சலி செலுத்திக் கூட்டங்கள் பல நடைபெற்றன. நாவலர் எஸ். சத்தியமூர்த்தி அவர்கள் விடுத்த இரங்கற் செய்தியில், "அவருடைய கவிகளை அச்சிட்டு விற்றுப் பெரியநிதி சேர்த்து, அவருடைய மனைவி மக்களைக் காப்பாற்ற நாம் கடமைப் பட்டிருக்கிறோம்" என்று குறிப்பிட்டிருந்தார், கொடியாலம் கே.வி. ரங்கசாமி ஐயங்கார் அவர்கள் "அவரது கவிதைகள் நீடு வாழட்டும். அவரது உறவினர்கள் யாராவது, அன்னார் கவிதைகளை ஒன்றுதிரட்டிப் பதிப்பிப்பார்களா?" என்று வினாத்தொடுத்து, தம் ஆவலினைத் தெரிவித்திருந்தார். மற்றும், பாரதியாரின் மிக நெருங்கிய நண்பர்கள் அனைவரும் பாரதி நூல்கள் வெளிப்பட வேண்டியதை வற்புறுத்தினர்.

மகாகவியின் மனைவி செல்லம்மாள் நூல் வெளியீட்டு முயற்சியில் ஈடுபட்டார். பாரதியாரின் மறைவிற்கு இரங்கற் செய்தி யனுப்பியவர்க்கெல்லாம் நன்றி தெரிவித்ததோடு பாரதி நூல்கள் வெளியீட்டு முயற்சிக்கு ஆதரவும் கோரினார் அம்மையார் தம் வெளியீட்டு முயற்சியைக் குறித்துப் பத்திரிகை

களுக்கும் அறிக்கை விடுத்தார். தமிழ்த்தென்றல் திரு. வி. க. அவர்கள் தமது 'நவசக்தி' இதழில் செல்லம்மாவின் அறிக்கையை வெளியிட்டதோடு, 'நூல்கள் நல்ல முறையில் வெளிவருவதற்கேனும் போதிய துணை புரிய வேண்டும்' என்று ஆவல் கொண்டு, "காலஞ்சென்ற பாரதியாரின் நூல்கள்" என்று துணைத் தலையங்கம் ஒன்றையும் எழுதி வெளியிட்டார்.

சத்தியமூர்த்தி, ரெங்கசாமி ஐயங்கார், திரு. வி. க. மற்றும் நண்பர்கள் விடுத்த வேண்டுகோள் வீண்போகவில்லை, அதே, 1921 ஆம் வருடத்தில், நண்பர்கள் அளித்த உதவித் தொகை, திலகர் ஸ்வராஜ்யநிதி உதவி, ரங்கூன் பொதுமக்கள் அளித்த நன்கொடைகள் — ஆகிய இவைபோன்ற நிதியுதவிகளைப் பயன்படுத்திக்கொண்டு, செல்லம்மா அவர்கள் தம்முடைய சகோதரர் அப்பாதுரை அவர்களின் துணையோடு சென்னைத் திருவல்லிக்கேணியில் 'பாரதி ஆச்ரமம்' என்ற பெயரால் பிரசுர நிலையத்தைத் தொடங்கி, பாரதி நூல் வரிசையில் பன்னிரண்டு புத்தகங்களை வெளியிடப்போவதாகத் தெரிவித்தார்.

முதல் கட்டமாக, 1922 ஜனவரியில் "சுதேச கீதங்கள்" முதலிரு தொகுதிகள் வெளியிடப்பட்டன. இத்தொகுதிகளில் முன்னம் வெளியான பாடல்களோடு, அதுவரை அச்சேறாத நிலையில் இருந்த பாடல்களும் வெளியாயின.

**சுதேச கீதங்கள் (முதற்பாகம்)**
**வெளியீடு பற்றி**

## சுதேச கீதங்கள்

## (முதற் பாகம்)

பாரதி நூல்கள் - பகுதி 1 என்ற தொடர் வரிசையில் வெளியிடப்பட்ட இந்த நூலில் 90 பாடல்கள் இடம் பெற்றுள்ளன. முன்னம் வெளிவந்த ஸ்வதேச கீதங்கள், ஜன்மபூமி, நாட்டுப்பாட்டு, மாதா மணிவாசகம் - ஆகிய நூல்களில் பதிப்பிக்கப்பட்ட பாடல்கள் இடம் பெற்றிருந்ததுடன் பாரதியின் கையெழுத்து வடிவில் இருந்து அதுவரை அச்சேறாத நிலையில்

இருந்த புதிய பாடல்கள் பலவும் இத்தொகுதியில் சேர்க்கப் பட்டிருந்தன. செல்லம்மா பாரதி, இந்நூலுக்கென எழுதியுள்ள முகவுரை கல் நெஞ்சையும் கரைக்க வல்லது. முதன் முதலாக இந்த நூல் தொகுதியில்தான் நாவலர் சோமசுந்தர பாரதியார் எழுதிய 'சுப்பிரமணிய பாரதியார் சரித்திரச் சுருக்கம் வெளியாகியது.

இத்தொகுதியில் இடம் பெற்றிருந்த 90 பாடல்களில் 74 பாடல்கள் கால வரிசைப்படி உரிய இடங்களில் இப்பதிப்பில் இடம் பெற்றுள்ளன. காலவரிசை காண இயலாத பதினாறு பாடல்கள் இப்பதிப்பில் 199 – 213 எண்ணிட்டனவாய் இடம் பெற்றுள்ளன.

பாரதி நூல்கள் – பகுதி 1 - என்ற தலைப்பில் சுதேச கீதங்கள் (முதற்பாகம்) நூலில் இடம் பெற்றிருந்த பாடல்களின் எண்ணிக்கை 90 ஆகும். அப்பாடல்களின் விவரம் வருமாறு:

1. வந்தேமாதரம்.
2. வந்தேமாதரம்.
3. பாரத நாடு
4. நாட்டு வணக்கம்
5. புது வருஷம்
6. பாரத தேசம்
7. ஜயபாரத!
8. செந்தமிழ்நாடு
9. எங்கள் நாடு
10. ஜாதீய கீதம் (வங்காளி)
11. ஜாதீய கீதம் (மொழிபெயர்ப்பு)

34. பாரத ஸமுதாயம்

35. தொழில்

36. வெறி கொண்ட தாய்

37. அல்லா

38. யேசுகிறிஸ்து

39. வேண்டும்

40. நடிப்புச் சுதேசிகள் (கிளிக்கண்ணி)

41. தொண்டு செய்யும் அடிமை

42. மேத்தா திலகருக்குச் சொல்வது

43. நிதான கட்சியார் - சுதேசியத்தைப் பழித்தல்

44. பாரத தேவியின் அடிமை

45. ஆங்கிலேயன் ஒரு தேச பக்தனுக்குக் கூறுவது

46. தேசபக்தன் ஆங்கிலேயனுக்குக் கூறும் மறுமொழி

47. லாஜபத்ராய் துதி

48. லாஜ்பத்ராய் பிரலாபம்

49. தாதாபாய் நவுரோஜி

50. பூபேந்திர விஜயம்

51. அபேதாநந்த ஸ்வாமிகளின்மீது ஸ்தோத்திரக் கவிகள்

52. (ஓவியர் மணி) ஸ்ரீரவிவர்மா

53. மாஜினி

54. ஆரியதரிசனம் – ஓர்கனவு

55. மாயையைப் பழித்தல்

**சுதேச கீதங்கள் (முதற்பாகம்)**
**வெளியீட்டில்......**

**முகவுரை**

## வந்தே மாதரம்

*தமிழ்நாட்டு மக்களே!*

நான் படித்தவளல்ல. இந்த நூலுக்கு முகவுரை எழுத நான் முன்வரவில்லை. அதற்கு எனக்கு சக்தியுமில்லை. என்னைப்போல் இந்தத் தமிழ்நாட்டில் லக்ஷக்கணக்காக ஆணும் பெண்ணும் இருக்கிறார்கள். அவர்களுக்கு ஒரு வார்த்தை சொல்ல விரும்புகிறேன்.

எனது புருஷன் ஸ்ரீமான் சுப்பிரமணிய பாரதி இந்த

நாட்டில் பிறந்தார்; வளர்ந்தார்; வாழ்ந்தார்; இறந்தார். அவருடைய ஸ்தூல தேகத்திற்கு முடிவு நேரிட்டு, ஆத்மா விண்ணுலகம் சென்றுவிட்டது. கடவுளின் திருவிளையாடலில் இப்படி ஒரு ஆத்மா இவ்வுலகத்தில் ஜனித்து, சொற்ப காலந் தங்கி, சிற்சில காரியங்களைச் செய்துவிட்டு, திரும்பப் போய்விட வேண்டுமென்ற கட்டளையின்படி என் புருஷனும் ஜனித்து, செய்ய வேண்டிய காரியங்களை அவசரம் அவசரமாகச் செய்து விட்டு, காலம் சமீபித்தவுடன், இறப்பதுவும் ஒரு அவசரமான கடமையாகக் கொண்டு, அதனையும் செய்துமுடித்தார். 1904 ஆம் வருஷத்தில் சுதேசமித்திரன் பத்திரிகையில் உபபத்திராதி பராக அமரு முன்பே, நம் நாட்டைப் பற்றிய கவலை அவருக்கு அதிகம் ஏற்பட்டுவிட்டது. எட்டையபுரம் சமஸ்தானாதிபதியின் கீழ் தான் ஏற்றுக்கொண்ட வேலையைத் திரணமாக நினைத்துத் தள்ளினார்; மதுரை ஸேதுபதி வித்யாசாலையில் தமிழ்ப் பண்டிதர் வேலையையும் அற்பமாக எண்ணித் தள்ளினார். சுதேச மித்திரன் பத்திரிகைக்கு உழைக்க ஆரம்பித்தவுடன் அவரது உள்ளம் மலர்ச்சியடைய ஆரம்பித்தது. சுமார் இரண்டு வருஷம் கழிந்தபின் ‘இந்தியா’ என்னும் வாராந்தரப் பத்திரிகையை ஆரம்பித்தார். உடல், பொருள், ஆவி மூன்றையும் தேச கைங் கர்யத்திற்கு முழுமனதுடன் அர்ப்பணம் செய்தார். ஸரஸ்வதி தேவி அவர் வாக்கில் நிர்த்தனஞ் செய்ய ஆரம்பித்தாள். "வந்தே மாதரம்" என்ற சப்தம் அவரது ஹிருதயத்திலிருந்து முழுத் தொனியுடன் கிளம்பிற்று; தமிழ்நாடெங்கும் பரவிற்று. வீடு வாசல், மனைவி, பிள்ளை, குட்டி, ஜாதி வித்தியாசம், அகந்தை முதலியவை முற்றும் மனதினின்று விட்டு அகன்றன. தேசப் பிரஷ்டமானார். புதுவையில் தேசபக்தி விரதத்தைப் பலவித மாக அநுஷ்டித்தார். திரும்பவந்து தந்நாட்டை ஒருமுறை பார்க்க வேண்டுமென்ற அவா அதிகரித்தது. அதற்காகச் சில நிபந்தனைகளை ஒப்புக்கொண்டார். மறுபடியும் சுதேசமித் திரனில் ஒரு வருஷம் உழைத்தார். தான் வந்த காரியம் முடிவடையவே, விண்ணுலகஞ் சென்ற தேசபக்தர் கூட்டத்தில் தானும் போய்ச் சேர்ந்துகொண்டார்.

நமது நாடு இன்னது; நமது ஜனங்கள் யாவர்: நமது பூர்வோத்திரம் எத்தகையது; இன்று நமது நிலைமையென்ன; நமது சக்தி எம்மட்டு; நமது உணர்ச்சி எத்தன்மையது; – இவைகளைப் பற்றிய விவகாரங்களும் சண்டைகளும், தீர்மானங்களும் அவருடைய ஜீவனுக்கு ஆதாரமாக விருந்தன. எதுவும் யோசித்தாக வேண்டியதில்லை. திடீர் திடீர் என்று எண்ணங்கள் - புதிய புதிய கொள்கைகள் – புதிய புதிய பாட்டுக்கள் – அப்பாட்டுக்களுக்குப் புதிய புதிய மெட்டுக்கள் - எனது இருகாதுகளும் மனமும் ஹிருதயமும் நிரம்பித் ததும்பும் - இந்த ஒரு பாக்கியம் நான் பெற்றேன். இம்மாதிரி பாக்கியம் பெற, எத்தனை கோடி ஜன்மம் வேண்டுமானாலும், திரும்பத் திரும்பப் பெறத் தயாராக இருக்கிறேன். அவரது தேகத்தின் ஜீவன் போய்விட்டது. அவரது ஜீவனுக்காதாரமாக விருந்த பாரதமாதாவின் ஜீவசக்தி என்றென்றும் அழியாதது. தமிழ்நாடு உள்ளளவும், தமிழ்நாட்டில் ஒரு மனிதனோ அல்லது ஒரு சிறு குழந்தையோ, தமிழ் பேசிக்கொண்டிருக்குமளவும் பாரதியின் மூலமாக நமக்குக் கிடைத்த ஜீவசக்தி நிலைத்திருக்குமென்று என் ஹிருதயம் சொல்லுகிறது. இதனை நீங்களும் உணர்ந்திருக்கிறீர்கள். இஃதொன்றுதான் நான் உங்களுக்குச் சொல்ல முன்வந்தேன். நீங்கள் நீடுழி வாழ்க!

பாரதியாரின் நூல்கள் முழுமையும் அச்சிட்டு வெளியிடும் பொறுப்பை என் ஜீவன் இருக்கும்வரை நான் வகித்து, பிற்பாடு தமிழ்நாட்டிற்குத் தத்தம் செய்துவிட்டுப் போகத் தீர்மானித்திருக்கிறேன்.

வந்தே மாதரம்.

பாரதி ஆச்ரமம்
திருவல்லிக்கேணி,
சென்னை.

துன்மதி - மார்கழி

செல்லம்மா.

சுதேச கீதங்கள் (முதற்பாகம்) வெளியீட்டில்
நாவலர் சோமசுந்தர பாரதியார்

## ஸ்ரீ சி. சுப்பிரமணிய பாரதியார் சரித்திரச் சுருக்கம்

சமீபத்தில் காலஞ்சென்ற புலவர் திலகர் ஸ்ரீ சுப்பிரமணிய பாரதியாரைத் தமிழகமே யன்றிப் பிறிதுலகும் சிறிதறியும். இவர் புகழ் எம்மனோர் போற்றப் பெருகுஞ் சிறுமை யுடைத் தன்று. புகழிற்போலவே வயதிலும் இவர் நண்பக லெய்தாக் காலை ஞாயிறே யாவர். நாடு மூடிய கால மேகங்களிலும், நடுநிலை யிறந்த ஓா வுணர்ச்சி யிருளிலும் மறைந்து மாசற்ற விண்பெறாத் தற்காலத் தமிழ் நாட்டில் வெயில் செய வெள்கி இவர் பெரிதும் ஒளிந்தொளிர்ந்தார்.

ஸ்ரீ சுப்பிரமணிய பாரதியார் மதித்தற் குரியவும் அரிய வுமாம் குணம் பல வுடையார். இவரை நயப்பார் பலர்; வெறுப் பவர் சிலர்; இவர்மாட்டு இவ்விரு திறத்தாரும் வியக்குங் குண மும் பலவாம். இவரைத் தமிழ்நாடு செய்த தவமென்பார் உளர்; வாணாளை வீணாக்கி, பலகற்றும் உலகத்தோ டொட்ட வொழு கும் நலங் கல்லாராகக் கருதும் பிறரும் உளர். பலர் இவரைத் தமிழகத்தே தலைநின்ற தேசபக்தராக வந்திப்பர்; தன்னலம் பேணாதார், பிறர் நலமும் அறிய வொண்ணாரென்று இவரை நிந்திப்பாரு முண்டு. அறிவை அடிமைப் படுத்தி; உணர்வைக் கொள்ளை கொண்டு, 'நெஞ்சை அள்ளும்' அருங்கவி விரைந் தியற்ற வல்ல அமுதவாய்ப் புலவர் இவரெனப் பலர் பாராட் டுவர்.

இப் பெரியார், ஜீவியத்தில் ஒரு பகுதி எழுதுவதற்கு நான் உரியனென்று இவர் மனைவியார் விரும்பியது ஒருவாறு பொருந் துவ தாகும். உற்ற சுற்றத்தின் புறம்பே, இளமைப் பருவத்து இவரோடு நெருங்கிப் பழகிய பலருள்ளும், விரும்பத்தகும் இவர் இனிய குணங்கள் பலவற்றை அறிதற்குதவுங் காலத்தானும் அணிமையானும் நான் சிறிது அதிக உரிமை பாராட்டற் கிட முண்டு. சென்ற பதினைந்தாண்டுகளாகச் சிறிதுஞ் சல்லா

பத்திற் கிடமின்றி அறப்பிரிந்தே மார்யினும், அதற்குமுன் இளமையில் தொடர்ந்த நெருக்கமும், சிறிதிடைப் பிரிந்து பின்னிடையறாதுடன் பயின்று சோராது வளர்ந்த நேசமும் எனக்கு இவரிடத்துண்டு இவர் சென்னையில் வசிக்கச்சென்ற காலமுதற்றான் இவர் வாழ்க்கை அத்துணையாக நான் நேரில் அறியாததாம். இவ்வாறு பிரிந்த இப் பின் காலத்தும், வெளிவந்த இவர் பாடல்களும் பத்திரிகை வியாசங்களும் பெரும் பாலும் நான் படியாதன இரா. இவர் சமுதாய வாழ்வை (Public life)யும் இயன்ற வரைக் கவனித்து வந்துளேன். உழுவலன்பு காரணமாக இவர்தம் விழுமிய நூல்கள் பற்றி இடையிடையே எனக்கெழுதுவதும் உண்டு. இவைகளிலிருந்து முன் இவர்பால் நான் நேரிலறிந்த பெருங்குணங்களொன்றேனும் மாறுபட்ட சான்று கிடைத்ததில்லை. ஒருவர்க்குரிய குணங்கள் மாறாது வேறான்றும் பருவங் கழிந்த பின்னரே, இவர் நம் முரையும் உற்றோரையும் விட்டுச் சென்னை சென்றார். ஆகவே இவைகொண்டு ஒருவாறு இப்புலவர் திலகர் ஜீவியத்தில் பிறரறிய விரும்புவனவும் தகுவனவுமாய சிலவற்றை யீண்டு விளக்கி விடை கொள்வேன்.

இவர் தந்தையாரை யான் அறிவேன். முயற்சி திருவினை யாக்கும் என்ற முதுமொழிக்கு இலக்கியமானவர். எட்டையபுரம் சமஸ்தானத்தில் உத்தியோகஸ்தரும் வித்வானுமாயிருந்து சிறந்த ஸ்ரீ சின்னசாமி அய்யரவர்களை அவர் காலத்தில் திருநெல்வேலி ஜில்லாவில் அறியாதவ ரில்லை. இவர் பிரகசரண பிராமணோத்தமர். அக்காலத்திலேயே இவர் கலாசாலை யுதவி யின்றி ஆங்கிலத்தில் தேர்ச்சி பெற்றிருந்தார். தமிழில் அதி பண்டிதர். மேல் நாட்டுக் கணித முறைகளில் கைகண்ட நிபுணர். தருக்கத்தில் தன்னிக ரற்றவர். இவரது கூரிய மதிநுட்பமும், நாவன்மையும் இவரன்பை விரும்பாப் பண்டிதர் யாவருக்கும் அச்சம் விளைத்ததுபோலவே, இவரது பெருங் குணமும் விரிந்த உள்ளமும் இவர்பால் அழுக்காறு கொள்ளாத யாவருடைய மதிப்பையும், நேசத்தையும் உரிமையாக்கின. முப்பது வருடங் களுக்கு முன்னரே, ஏழைகள்மீது இரக்கத்தாலும் நம்மவர்

நலங்கருதியும் இவர் எட்டையபுரத்தில யந்திர மணைச்சாலை யேற்படுத்த முன்னின்று முயன்று முடித்தார். இந்தப் பிரதேசத்தில் பருத்தி யந்திர மணைச்சாலை முதலில் ஏற்படுத்தத் துணிந்தவர் இவரே. தற்காலம் எட்டையபுரம் சமஸ்தானாதிபதியா யிருக்கும் பண்டித அரசருக்கு இவர் ஆப்த நட்பாளர். தனிகரும் பொதுநலப் பிரியரும் அருகிய வூரில் இவர் முயன்று ஸ்தாபித்த பருத்தி யறவைச்சாலை தற்காலம் பராதீனப்பட்டு நடப்பதன் சரிதமும், தொழிலபிவிருத்தி முதலிய நம்மவர் முன்னேற்ற முயற்சிகளால் இவர் கைப்பண மிழந்து வறுமையுற்று வருந்திய விருத்தாந்தங்களும் இக் கதைக்கு அவசியமற்றவை. இத்தகைய அருள் அறிவு ஆற்றல் நிறைந்திருந்த ஸ்ரீ சின்னசாமி அய்யர் அவர்களுக்கு அவர்களின் முதன் மனைவியார் வயிற்றுதித்த ஔரச புத்திரரே நம் வர கவி. பாரதியாரின் அன்னையாரை நான் நேரில் அறியேன். அந்த அம்மையாரை அறிந்த அனைவரும் அவர் அழகிலும் அருளிலும் அவர் இயற்பெய ரொப்ப லக்ஷ்மியே யென்பர். இந்த தம்பதிகளின் தவப்பயனாய் பாரதியார் 1882-ஆவது வருஷம் கார்த்திகை மாதத்தில், சுபதினத்தில், நல்லவேளையில், எட்டைய புரத்தில் அவதரித்தார். பெற்று மகிழ்ந்த தாயார் இவர் புகழ் கேட்டுப் பின்னும் மகிழப் பெறு முன்னே, நமது கவியின் ஐந் தாவதாண்டிலேயே பரமபதம் எய்தினர். அதுமுதல் இவர் தந்தையாரே தாயுமாயிருந்து பாந்திப் பரிந்து பராமரிக்க, பாரதியார் அறிவிலும், உருவிலும் ஒப்புயர்வற்று வளர்ந்து ஊர் உவமை சொல்ல யாவரும் அதிசயிக்கத் திகழ்வ தானார்.

நமது மகாகவியின் தந்தையார் தமது குலாசாரத்தை அநுஷ்டித்து, சௌளம், உபநயனமாதி ஸம்ஸ்காராதிகளைக் காலக் கிரமத்தில் செய்து வைத்து, ஐந்தாவதாண்டில் அக்ஷராப்பியாசமும் செய்து வைத்தார். பள்ளிக்கூடங்களில் சென்று பயின்ற தன் பிரயோஜனத்தை இக் காலப் பள்ளிக்கூடங்களின் அநுபவமுள்ளவர்கள் அறிந்துகொள்ளலாம். பாரதியார் தமது ஏழாவது பிராய முதலே அருமையான தமிழ்க் கவிகளை விளையாட்டாக விரைந்து கவனஞ் செய்வதைக் கண்ட வித்வான்கள்

நமது கவியின் தந்தையாரைப் புகழ்ந்திருப்பதை நான் நேரில் அறிவேன். எட்டு, ஒன்பதாவது ஆண்டுகளில் சர்வ சாதாரண மாய், கொடுத்த ஸமஸ்துக்களை வைத்து அற்புதமான கவி களைப் பூர்த்தி செய்து பெரிய புலவர் கூட்டங்களைப் பிரமிக் கச் செய்த பல காலங்களிலும் நான் கூட இருந்திருக்கிறேன். காளிதாசன், கம்பன் முதலிய வரகவிகளுக்குக் காளி வாக்கில் எழுதிய கால முதல், அநாயாசமாய்க் கவிசொல்ல வாய்ந்த தென்று நாம் கேட்கும் கதைகளையும், குமரகுருபரர் ஐந்தாவ தாண்டில் அரும்பாக்கள் இயற்றினர் என்ற கதையினையும், அபூர்வ கற்பனைகளென்று புறக்கணித்த நான் பாரதியார் ஏழாவது வயது முதல் எளிதில் பாடலியற்றித் தமிழ் வாணர் கள் மெச்சும்படி காட்டிய திறமையை நேரில் கண்ட பொழுது தான் கேவலம் படிப்பினால் பாவன்மை வராது, கவிகள் பிறப் பிலேயே அமைய வேண்டுமென்று அறிந்தேன். பாரதியார் பதினோராவது ஆண்டில், புலவர்கள் கூடியதோர் பெருஞ் சபையில், புதிது புதிதாகக் கொடுத்த அடிகளைக் கொண்டே பூர்ண கவிகளை விரைந்தியற்றிச் சபையோரை வியப்பித்த போது, அவருடைய கவித் திறமையையும். அமிர்த வாக்கையும் கண்டு சந்தோஷப்பட்ட புலவர்களால் முதல் முதல் "பாரதி யார்" என்ற பட்டமும் கொடுக்கப் பெற்றார். அன்று முதல், இவரை யாவரும் பாரதியாரென்றே அழைக்க ஆரம்பித்தார்கள். தற்கால முறைப்படி இவர் ஆரம்ப முதல் ஆங்கில கலா சாலைகளிலேயே படிப்பிக்கப் பெற்றாரே யன்றித் தனித்தமிழ் ஆசிரியர்களிடத்தில் தமிழ்ப்பாடம் கேட்கவில்லை. இவர் தந்தையார் இவருடைய கல்வியில் விசேஷ கவனஞ் செலுத்திய துண்டு. இளம் பருவத்திலேயே பாஷையிலும் கணித முதலிய சாஸ்திர பாடங்களிலும், சமமாகச் சிறந்து விளங்கினார். அதிக மாகப் பேசுகிறதில்லை. குழந்தைகள் எல்லோரோடும் சேர்ந்து விளையாடுவதிலும் பிரியப்படார். தனக்குற்ற தோழராகிய இரண்டொரு சகபாடிகளோடு மட்டும் பூராக் காலத்தையும் போக்கி வருவார். தேகப் பயிற்சியில் இவர் குழந்தை முதலே லக்ஷியமில்லாதவர். ஒழிந்த நேரமெல்லாம், ஜனப்பழக்கங் குறைந்த கோவில் மூலைகளிலும் தோட்டங்களிலும் குளக்கரை

களிலுமே, தனித்தும், தம் உற்ற தோழரோடும் கழித்து வந்தார். ராமாயணம், பாரதம் முதலிய இதிகாசக் கதைகளில் அதிகப் பிரேமை யுள்ளவர். இவ்விதம், பதினைந்தா மாண்டளவில் இவர் காலம் எட்டையபுரத்தில் கழிந்தது.

1897-ஆம் வருஷம்ஆனி பதினைந்தில் பாரதியாருக்குக் கடையத்தில் ஸ்ரீ செல்லப்பா ஐயரவர்கள் குமாரத்தி ஸ்ரீமதி செல்லம்மாளுடன் விவாகம் நடந்தது. அங்கு வந்திருந்த அரிகேசவ நல்லூர் முதலிய பலவூர்த் தமிழ் வித்துவான்களும் இவர் புலமை கண்டு, அளவற்ற சந்தோஷமடைந்தார்கள். விவாக மான மறுவருஷமே இவர் தந்தையார் தேகவியோக மானார். அதன் பயனாக, பாரதியார் 1898-ஆம் வருஷம் காசிவாசியாக நேர்ந்தது. இடையில், திருநெல்வேலியில் ஹிந்து கலாசாலையில் சுமார் மூன்று வருஷம் மாணாக்கராக இருந்தார். அப்பொழுது ஏற்பட்டிருந்த வகுப்பு முறைப்படி மூன்று முதல் ஐந்து பாரம் வரையும் அக்கலாசாலையில் படித்தார். அக்காலத்தில் கலா சாலைத் தமிழாசிரியருடனும், காலஞ்சென்ற ஸ்ரீ நெல்லையப்பன் கவிராயரவர்கள் வீட்டில் ஓயாது கூடும் வித்வான்களுடனும் இவர் இட்ட தமிழ்ப் போர்களின் தொகைக்கு அளவில்லை. இவர் சல்லாபத்தை மிகவும் விரும்பிய கவிராயரவர்கள் இவரை மிகவும் பரிவாக ஆதரித்து வந்தார்கள. அந்தக் காலங்களில் இவருடைய அருமையான கவிதா சக்தியையும், மாற்றலரை வாயடக்கும் புத்திக் கூர்மையையும், பேச்சு வன்மையையும் காட்டக் கூடிய கதைகள் பல உண்டு. அவற்றை யெல்லாம் விரிக்கில் பெருகு மென்றஞ்சி விடுக்கின்றேன். இரண்டு சந்தர்ப் பங்களில், எதிர்பாராத வண்ணம் இவர் தன்னை ஏளனம் பண்ணிய வயது முதிர்ந்த இரண்டு தமிழ் வாணர்களைத் தலைகுனியச் செய்தார். அப்போது யப். ஏ. பிரதம (ஸீனியர்) வகுப்பில் படித்துக் கொண்டிருந்தவரும், தமிழ்ப் பழக்கமுள்ள சோணாசலம் பிள்ளையவர்களின் குமாரருமாகிய காந்திமதி நாத பிள்ளை யென்றவர்கள் முருகதாச சுவாமிகளின் பழக்க முள்ளவர்களும், விசேஷமாகத் தமிழ்ப்பயிற்சி யுள்ளவர்களுமா யிருந்தார்கள், அது பற்றி அடிக்கடி, பாரதியாரும் நானும்,

அவர்கள் வீட்டிற்குப் போவதுண்டு. ஒருசமயம் பலர் கூடியிருக்கும்பொழுது, கூடியவர்கள் எல்லாருள்ளும் இளைஞரான பாரதியாரை அடக்க நினைத்துக் காந்திமதி நாத பிள்ளையவர்கள், "பாரதி சின்னப் பயல்" என்ற கடை யடியைக் கொடுத்து, அதை வைத்து ஒரு வெண்பாவைப் பூர்த்தி செய்யும்படி நமது புலவரைக் கேட்டார். அவர் சொல்லி வாய் மூடுமுன், கேட்பவர் வியக்க, காந்திமதி நாத பிள்ளை தலை குனிய, அங்குள்ள யாவரும் இவர் என்ன சொல்லப் போகிறாரென்று யோசித்துக் கொண்டிருக்கும் போதே தனக்குக் கொடுத்த அடியைக் கடையடியாக வைத்து வெண்பாவைப் பூர்த்தி பண்ணினார். அதன் மூன்றாமடியின் இறுதி "காந்திமதி நாதனை" என்று வைத்து,

"...... காந்திமதி நாதனைப்
பா ரதி சின்னப் பயல்"

என்று பாட்டை முடித்தார். அனைவரும் அதிக ஆச்சரியமடைந்தார்கள். மற்றொரு நாள் கலாசாலையில் இவர்பால் அசூயை கொண்ட தமிழ்ப் பண்டிதர் வகுப்பில், "காலரியில் உயர்ந்த இடத்தில் உட்கார்ந்திருந்த நமது பாரதியார் தம் கேள்விக்கு விடை சொல்லாததற்காக, "மேகம்போல் கவிகள் பொழிவதாக, ஊரிலே புகழப் படுகிறீர். நேரான இடத்திலும் இருக்கின்றீர். காளமேகம் போல் பொழியாமல் சும்மா இருப்பதேன்?" என்று கேலி பண்ணினார். உடனே நமது கவி, உட்கார்ந்தபடியே, "பண்டிதரவர்களுக்கு மேகத்தின் சாமான்ய குணம்கூடத் தெரியாமல் இருக்கிறதே? காளமேகம் தனக்குத் தோன்றியபொழுது மழை பொழிவதன்றிப் பண்டிதர் உத்திரவுக்குப் பயந்து பெய்வதில்லையே. இஃதறியாமல், தன்னைப் பேசும்படி கட்டாயப்படுத்தும் பண்டிதரிடத்தில் பரிவு காட்டுவதெப்படி" என்று விடை கூறினார். அதுகேட்ட வகுப்பு மாணாக்கர் அனைவரும் கைகொட்டி நகைக்கப் பண்டிதர் வெட்க மடைந்தார். இப்படியே பல சமயங்களிலும் தன்னோடெதிர்த்த புலவர்களை இவர் அதிசமர்த்தாய் அடக்கிய சந்தர்ப்

பங்களெல்லாம் இவருடைய ஆச்சரிய புத்தியையும், தமிழ்த் திறத்தையும் நன்கு விளக்கக் கூடியவை.

தந்தையார் இறந்த பிறகு தனக்கு ஆதரவும் துணையும் இல்லாமல் தன் தகப்பனுடன் பிறந்த அத்தையார் அழைக்க 1901-ஆம் வருஷம் காசிக்குப் போனார். அங்கே ஒரே வருஷம் இருந்தார். அலகாபாத் சர்வகலாசாலையில் தமிழ்ப் பாடம் இல்லாமை பற்றி அங்கே இவர் ஸம்ஸ்கிருதம் புதிதாக எடுத்துப் படிக்க நேர்ந்தும், அந்த ஒரு வருஷத்திலேயே மேற்படி சர்வகலாசாலையில் பிரவேசப் பரீக்ஷைக்கு ஆஜராய், முதல் வகுப்பில் தேறினார். சில அசௌகரியங்களால், அங்கிருந்து மேற்படிக்க முடியாமல், திரும்ப எட்டையபுரத்திற்கு வரநேர்ந் தது. வந்தபிறகு 1904 ஆம் வருஷம் வரை, கலாசாலையில் சென்று படிக்க மார்க்கமன்னியில், அப்பொழுது எட்டைய புரத்தில், யுவராஜாவாயிருந்த அரச வித்வானிடம் தமிழ்ச் சல்லாபம் செய்தும், அரண்மனையில் அபிமானித்துக் கொடுத்துவந்த சொற்பப் பணத்தைக் கொண்டு காலங் கழித்தும் வந்தார். அக் காலங்களில் எட்டையபுரம் சமஸ் தானாதிபதியின் மேலும் அவர்கள் முற்கூடும் புலவர் சபைகளில் எழும் போட்டி காரணமாகப் பல்வேறு விஷயங் களைப் பற்றியும், பாரதியார் பாடிய பாடல்களுக்கு அளவில்லை. முக்கியமாக ஒரு சந்தர்ப்பத்தை நான் மறக்க முடிய வில்லை. ஒருநாள் காலையில், சில புலவர்கள் "பாரதியார் விழுமிய கருத்துக்களடங்கிய தமிழ்க்கவிகளைப் புலவர் மெச்ச விரைவாக இயற்றினாலும் அண்ணாமலை ரெட்டியாரைப் போலப் பாமரரும் ரசிக்கும்படியாக சங்கீத அமைப்புடன், சிந்துகள் முதலிய இசைத் தமிழ்ப் பாக்களை இயற்ற முடியா" தென்று சொன்னார்கள். அப்போது அரசரும் அதை ஆமோதித்து, தமிழுலகத்திலேயே அண்ணாமலை ரெட்டி யாரைப்போல இனி யாரும் கவி சொல்ல முடியாது என்று கூறினார்கள். அதைக் கேட்ட நமது வரகவி சிரித்தார். உடனே அந்தச் சபையார் இவர் ரெட்டியாரைப்போலக் கவிசொல்ல முடியுமானால், செய்து காட்ட வேண்டுவதன்றி, வீணாகச்

சிரிப்பது பெருமையில்லை யென்று ஏளனம் பண்ணினார்கள். பாரதியார் அன்றே ஒரு சிந்தியற்றிக் கொண்டு வருவதாகச் சொல்லி விடை யேற்று வீடு சென்றார். அன்று மாலை அரண் மனைக்கு பாரதியார் போனபொழுது, வித்வான்கள் ஒருவரும் வரவில்லை. ஆனால், இவர் தான் பாடிக்கொண்டு வந்த பாடலை அரசர்முன் சமர்ப்பித்தார். உடனே ஆளனுப்பிப் புலவர்கள் அழைக்கப்பட்டார்கள். வந்தவர்கள், பாரதியார் காலையில் சொன்னபோது விளையாட்டுப் பேச்சாக நினைத்த துமன்றி, குறைந்தது ஒரு வாரத்திற்குள் யாராலும் எவ்வித நூலும் செய்ய இயலாதென்று நினைத்ததனால் திரும்பத தாங்கள் வரவில்லையென்று சொன்னார்கள். அப்போது நமது பாரதியாரின் சிந்து படிக்கப்பட்டது. அது அச்சாகாததால், அநேகர் அதனைக் கேட்டிருக்கமாட்டார்கள். அந்தச் சிந்தைப் படிக்கக் கேட்டவர்கள் ஒரே அபிப்பிராயந்தான் சொன்னார்கள். ரெட்டியார் காவடிச்சிந்து பாமரர் பாட்டுத்தான். ஆனால், பாரதியார் சிந்தோ அதன் சுவைகள் ஒன்றும் குறையாமல், மிக மேன்மையான ஒரு தமிழ்ப் புலவரின் பாட்டு என்று எல்லோரும் நமது பாரதியாரை மெச்சி வாயாரப் புகழ்ந்தார்கள்.

1904 ஆம் வருஷத்தில் பாரதியார் எட்டையபுரம் அரசருடன் சிறிது ஒற்றுமை குறைந்து, ஊரையும் உற்றாரையும் விட்டு வெளியேறக் கருதி மதுரைக்குச் சென்றார். அங்கே சுமார் மூன்று மாதகாலம் சேதுபதி உயர்தர வித்யாசாலையில் தமிழ்ப் பண்டிதரா யிருந்தார். பின் சென்னைக்குச் சென்றார். அங்கே 'சுதேசமித்திரன்' உதவிப் பத்திராசிரியராயிருந்ததும், 'பால பாரதம்' 'இந்தியா' முதலிய தேசீயப் பத்திரிகைகளுக்குத தானே அதிபரும் ஆசிரியருமாயிருந்து மிகவும் செவ்வைபெற நடத்தித் தமிழ் நாட்டில், தேச உணர்ச்சியையும் ஒரு புது ஆதர்சத்தையும் முதன்முதல் உண்டுபண்ணித் தேசபக்தராய் விளங்கியதும், அதியற்புதமான தேசப் பாட்டுகளை இயற்றி வெளியிட்டுப் புகழ் நிரப்பியதும் யாவரும் அறிந்த விஷயம். ஸ்ரீ சிதம்பரம் பிள்ளையவர்கள் சிறையிடப் பட்டபோது அவர் களுக்கும் கலெக்டருக்கும் நடந்த சம்வாதமாகச் சில புதிய

கருத்துக்களுடன் கீர்த்தனைகள் இயற்றித் தமிழ் மக்கள் மனதில் தூங்கிய ஒற்றுமை யுணர்ச்சியையும், தேசநேசத்தையும் உயிர்ப்பித் தெழுப்பி உலவச் செய்தது உலகம் அறியும்.

''ஜன்ம பூமி'' முதலிய சில வெளியில் வந்த பாட்டுக்களே யன்றி, அச்சேறாமல், இவர் பாடிப் பயின்று பரவப்பெற்ற பல தேசப் பாட்டுகளும், தமிழில் ஒரு புது நடையும், புதிய ஆவே சமும் உருவெடுக்கச் செய்தன. ஆயிரக்கணக்கான இளைஞரும், மாணாக்கரும் இவர் பாட்டுக்களையே பாடத் தலைப்பட்டனர். இவரது தேசாவேச ஓசை தமிழ்நாட்டில் பரவ ஆரம்பித்தபோது, தேசபக்தி தமிழ் மக்களாலேயே அவமதிக்கப்பட்டதா யிருந்தது. 19 8-ஆம் வருஷம், பிறந்த அரசாங்கத்தாரின் வெறியாட்டின் பயனாக, அநேகர் சிறைப்பட நேர்ந்ததுகண்டு பாரதியார் தனக்கும் சிறைவாசம் நேருமென்றஞ்சிப் புதுச்சேரிக்குப் போயினர். அங்கே பத்து வருஷம், அரணில்லாது தானே சுமத்திக் கொண்ட சிறையில், விலங்கற்ற கைதியாய், வறுமை, நோய் முதலிய துன்பங்களுக்காளாய் வெளியில் புகழ்பவரன்றி, நெஞ்சில் நேசிப்பாரும் ஆதரத்துடன் ஆதரிப்பாரும் இன்றிப் பலவாறு வருந்தினர். துன்பம் நிறைந்த இக் காலத்தில்தான் இவர் அளவற்ற நூல்களை இயற்றிக் குவித்துவைத்தார். அவைக ளெல்லாம் கையெழுத்துப் பிரதியாகவே யிருந்து வருகின்றன. அவைகளே யன்றி, அழகிய வசன நூல்களும், சிறுகதைகளும் பல செய்துள்ளார். இவர் வசனநடை எளிதில் யாரும் உணர ஒழுகுவதுடன் இனிய, எளிய நடையாயும், வடித்த சுவை நிறைந் தும், யாப்பற்ற கவிகளென்று சொல்லும்படி அதிமாதுர்யமாயி ருக்கும். ரவீந்திர நாதரின் சிறுகதைகளுக்கு இவர் செய்துள்ள தமிழ் மொழிபெயர்ப்பு படிக்கும்போது, மொழிபெயர்ப்பாய்க் காணாமல், தானே முதனூலும், ரவீந்திரர் ஆங்கிலமே மொழி பெயர்ப்பாயும் தோற்றும்படி அத்துணை அழகுபெற்று அமைந் துள்ளது. இவரது ''ஞானரத''த்தைப் படித்தவர்களுக்குத் தமிழ் நடையில் இவருக்குள்ள ஆதிக்கமும், நடைச் சிறப்பத் திறமும் இனிது விளங்கும். கடைசியாக, 1918-ஆம் வருஷம், இவர் தாமாகப் புதுச்சேரிக்குப் போனது போலவே, அங்கி

ருந்தும் தாமே வெளியேறினார். எல்லை கடந்ததும், இவரைப் போலீஸார் கடலூரில் பிடித்துக் கைதியாக்கினர். ஆனால், யாதொரு குற்றமும், இவர்மேல் வெளியாகாத நிலையில் விரை வில் விடுதலை செய்யப்பட்டு மனைவி மக்களுடன் கடையம் சென்றார். கடையத்திற்கு வந்தது முதலே இவரது உடல் நிலை இவரது நண்பர்களுக்கு மிகுந்த வருத்தத்தை விளைத்தது. இவர் மிக மெலிந்து, வலி குறைந்து, நைந்த உருவத்தோடு மனவலியும் எய்த்து வருவது நாள்தோறும் சிநேகிதர்களுக்குக் கவலை தந்தது.

இறுதியாக, மறுபடியும், இவர் 1920-ஆம் வருஷத்தில் சென்னைக்குச் சென்று, 'சுதேசமித்திரன்' பத்திரிகைக்கு மீண்டும் துணையாசிரியராய் அமர்ந்தார். பத்திரிகைகளில் இவர் பாககளும், தேசீய வியாசங்களும் அடிக்கடி வெளி வந்ததை அனைவரும் அறிவர். ஆனால், நாள்தோறும் இவர் தேகபலம் குறைந்துகொண்டே வந்து, கடைசியாக, 1921-ஆம் வருஷம் செப்டம்பர் மாதம் 11உ சென்னை திருவல்லிக்கேணி யில் இவர் உயிர்துறந்தார். இனி, எவ்விதத்திலும், இவர் உதவி வேண்டாதா ராயினவுடன் அவர் இருக்கும் வரை, அவரை அலக்ஷியஞ் செய்த தமிழுலகம் திடீரென்று அவர் புகழில் மோகமுற்று மூழ்கியிருக்கிறது.

பாரதியாரின் கவித்திறமும், நடைநலனும், நான் எடுத்து விரிப்பது அநாவசியம். இத்தோடு வெளியாகும் அவரது இனிய பாக்களே அவர் திறமைக்கு இறவாத சான்றாகும். இவருடன் நெருங்கிப் பழகாதவர்கள் இவர் இயற்பெருமையை அறிவது அருமை. இவர் இயற்கையழகிலும், பௌதிக அமைப்புகளிலும் மிகவும் ஈடுபட்ட மனமுடையவர். சிவந்து மலர்ந்த பொன்பொதிந்த மாலை ஞாயிற்றைக் கண்டு மகிழ் வதிலும், அழகிய மனோகரமான மலைத் தோற்றங்களிலும் நெடிது நேரம் தமது மனசை இழந்து அவசமாகி அநுபவித்து நிற்பதைக் கண்டிருக்கிறேன். எல்லா உயிர்களிடத்திலும் ஒப்ப நிரம்பிய இரக்க முடையவர். சர்வ ஜந்துக்களுக்கும் சிநேகிதர்.

சமீபத்தில், சென்னையில் யானைக்குப் பழமருத்தப் போய், மிதியுண்டு, பலநாள் வருந்தியது பத்திரிகை படிக்கும் பல ருக்கும் தெரியும். இவர் தமக்கு சர்வ ஜீவராசிகளோடும் பகையற்ற நேசமுண்டென்று வற்புறுத்தி வாதிக்கக் கேட்டி ருக்கிறேன். பாம்பும், புலியும், தன்னொத்த விரிந்த மனசுடன் நேசிப்பவரைப் பகையா தென்றும், எல்லோரும் இறவாதிருக்க முடியுமென்றும், தேசகால வர்த்தமானங்களால், வேறுபாடு கிடையாதென்றும், உலக முழுவதும், ஒரு குலமே யென்றும். இக் கருத்துக்கள் கேவலம் விவகார திசையில் விசாரிக்கப் படுவது பிரயோஜனமில்லை யென்றும், தற்போதத்தால் அவை களின் உண்மையை அறிந்து அநுபவிப்பதே அறிவுடைமைக்கு அழகென்றும் தன் உற்ற தோழருக்கு ஓயாது உபதேசிப்பார். நமது உபநிடதங்களில் ஒப்பற்ற நம்பிக்கையும், வியப்பும் கொண்ட இவர் உலகத்திலுள்ள சகல மதங்களிலும், சம திருஷ்டியும் ஒத்த மதிப்பும் உடையவராயு மிருந்தார். ஜாதி மத பேதங்கள் இவர் அகராதியில் அர்த்தமற்ற சொற்கள், மற்றவர்களைப்போல், ஆசார சீர்திருத்தங்கள் சம்பந்தமாய். கேவலம் புகழுக்காகப் பிரசங்கம் பண்ணித் திரிகிறவரல்ல. எப்போதும் எந்த விஷயத்தையும் ஆழச் சிந்திப்பார். சிந்தித் துக் கண்ட முடிவில் துணிவு கொள்வார். துணிந்தவழி என் றும், யாண்டும், ஒழுக முயல்வார். இதுவே இவரது இயல்பு. சாந்தமும், மோனமும் பெரும்பாலும், இவர் விரும்பிக் கையாண்ட குணங்கள்.

சங்கீதத்திலும் நல்ல ஞானமுள்ளவர். அதனால் இவர் கவிகள் இனிய இசையில் பாட அமைக்கப்பட்டன. இவரது குணங்களில் பலமுறை இவர் அன்பர்களை அலமறச் செய்தது இவர் தன்னல மறதி. பிறர்க்கன்றித் தனக்குழையாத் துறவி இவர். பத்துநாள் பட்டினிக்குப் பின் பத்து ரூபாய் கிடைத் தாலும், பணம் கையில் இருக்கும்பொழுது, குறைசொல்லி இரப்பாரைக் கண்டால், உள்ளதை அப்படியே கொடுத்து விட்டு, பழம் பட்டினி விரதத்தைச் சிரமமின்றி மேற்கொள்வர். பெரியோர் - சிறியோா என்ற வேறுபாடின்றி வருத்தமுறும்

யாரிடத்தும், அளவற்ற அநுதாபம் காட்டுவர். கடன் வாங்கியும் பிறர் நோயகற்ற விரைவார். உள்ள உடைகளையும் கொடுத்துவிட்டு, உடுத்த வழியின்றிப் பல்காலும் இடர்ப் படுவார். பைசாக்கள் முயற்கொம்பா யிருக்கும்பொழுது நூற்றுக்கணக்காகப் பிறர்க் களிக்கப் பரபரப்பார். தன் மனைவி மக்கள், மற்றவர்களைவிடத் தன் ஆதரவுக்கு அதிக உரிமை யுடையவர்களென்பது இவர் அறியாத பாடம். இந்தக் குண மேலீட்டால் பல அவசரங்களில் இவர் பட்ட பாடுகளை அறிநத பலரும் இவரைப் பித்தனென்று கூசாமல் கூறக் கேட்டிருக்கிறேன். ஆனால் இவர் தனக்கு மிக அவசியமான சமயத்தில், இவருக்கு உதவக் கடமைப்பட்ட சிலரும், இவர் உதவியால் நலமடைந்த சிலரும் இவரைப் புறக்கணித்து இவர் வருத்தமுற்றபோதும்கூட இவர் தன் ஔதாரியத்தையும், தன்னல மறுப்பையும் ஒருகாலும் வெறுத்ததில்லை.

தமிழர் மறந்தாலும், தமிழ் மறவாத இப் புலவர் பெருமான் பாக்கள் என்றும் இறவாது நின்று நிலவும். இவர் மூட்டிய தேசநேச நெருப்பு அவியாது வளர்ந்து, தமிழக முழுதும், இருளகற்றி, ஒளிரச்செய்து நிற்கும் ஜோதியாய் விட்டது. மகாமகோபாத்தியாய சாமிநாத ஐயரவர்களுக்கு அப்பட்டம் கிடைத்ததற்காக விழவெடுத்த சென்னைச் சபையொன்றில் என் வேண்டுகோளுக்காக, இவர் உடன் பாடிப் படித்த மறக் கொணாக் கவிகளின் கருத்துக்களைக் கொண்டே இவரைத் தமிழகம் அநாதரவு செய்தது இவர்க்குக் குறையுமில்லை; தமிழர்க்குப் புதுமையுமில்லை யென்று சமாதானப்படுத்திக் கொள்கிறேன். புதுச் சிறு விளக்குகளைக் கண்டு அதிசயிக்கும் மாந்தர் செம்பரிதி யொளி கண்டு புகழ்வதில்லை. சிற்றுண்டிச் சுவைக்கு மகிழ்பவர் அமிர்தம் சிறந்த ருசி யுடையதென்று அதிசயிப்பதில்லை. வெயிலிடுவது பரிதிக்கும், சுவையினால் உயர்வது அமிர்தத்துக்கும் இயற்கையாகி, அவைகள் அந்தந்தக் குணத்தில் ஒப்பற்றுயர்ந் திருப்பதால் ஒருவரும் அது கண்டு வியப்பதில்லை. சிறிது குறைந்த உயர்வளவில் மட்டே மாந்தர் கண்டு வியந்து, நயப்பது வழக்கம். சாமானியமாக, பரிசுக்குப்

பாடாமலும், பணமுடையோர் குற்றங்களை மறைத்துப் பொய்யாகப் புகழாமலும் உண்மையில் வாழ்ந்த இவ்வுயர் புலவரை, அளப்பரிய அவர் தலைமைப் புலமைப் பெருமிதமிகுதியால் மட்டுமே நமதுலகம் அறிய முடியாதாயிற்று போலும்.

பாரதியார் ஏனைப்புலவர் போலாது, புதுமுறைகளையே சிருட்டித்தார். தமிழ் மொழியில் பாக்களும் பாவினங்களும் மலிந்து கிடந்தும், அவைகளை விட்டுப் புதுக்கருத்துக்களும் புதிய உணர்ச்சிகளும், மலிந்து விளங்க, அவைகளுக்குப் பொருத்தமான புதிய நடைகளையும் புதிய யாப்புக்களையும், உண்டு பண்ணி யிருக்கிறார். அநாயாசமாய், இயற்கை யியல்புகளிலிருந்து, உருவகங்கள், உண்டுபண்ணிக் கையாளுவதும், எளிய உவமைகளால், பெரிய விஷயங்களை விளக்கத்துணியும் தனித் திறலும், முன்னைய புலவரிடத்தில்லாத இவரது அரிய குணங்கள். வாய்மை, வீரம், பெண்களைப் பேணல், எளியாரை ஏற்றல், ஓரமில்லா ஒற்றுமை யுணர்ச்சி, சுதந்திரம் முதலிய இவர் பாராட்டிப் பாடிய பல குணங்களும் இவர்க்கு இயல்பானவை. இவையெல்லாம் இவர் பாக்களில் இனிது காணலாம். இவரது "கண்ணன் பாட்"டையும், "பாஞ்சாலி சபத"த்தையும் படித்தவர்களுக்கு, இவரது குணங்களும் திறமையும் விசதமாகும். இவரை உள்ளபடி அறிய விரும்புவோர்க்கு இவர் கவிகளை விடச் சிறந்த கருவி கிடையாது. ஆதலால், இவர் நூல்களைப் படித்து, நடுநிலையில் சிந்திப்பார்க்கு உள்ளத்தனைய திவர் உயர்வு என்பது தெளிவாகும்.

தூத்துக்குடி,<br>
துன்மதி - மார்கழி.

ச. சோமசுந்தரபாரதி,<br>
எம்.ஏ., பி.எல்.

## முருகன் பாட்டு எழுந்த வரலாறு

ரௌலட் மசோதா - விசாரணையின்றி மக்களைத் தண்டனைபுரியும் நாகரிகமற்றதும் மனித உரிமையைப் பறிப்பதுமான கொடுஞ் சட்டம் - இந்தியச் சட்டசபையில் 1919ஆம்

ஆண்டில் நிறைவேறியது. அக்கொடியசட்டத்தைக் காந்தியடிகள் எதிர்த்தார்; 'மசோதா சட்டமாதல் கூடாது' என்று அப்பொழுது இராசப் பிரதிநிதியா யிருந்த செம்ஸ்பர்டு பிரபுவுக்கு மகாத்மா காந்தி விண்ணப்பம் செய்தார்; எச்சரிக்கையும் விடுத்தார். ஆனால், காந்தியடிகளின் எச்சரிக்கையை ஆட்சியாளர் ஏற்றுக்கொள்ளவில்லை. அதனால், காந்தியடிகளார் 'ராசப் பிரதிநிதியின் சம்மதம் பெற்று வெளியாகும் அச்சட்டம் வெளியாகும் நாளைச் சத்தியாக்கிரக நோன்பு நாளாக நாட்டார் கொள்ளல் வேண்டும்' என்று அறிக்கை விடுத்தார். 1919ஆம் ஆண்டு ஏப்ரல் ஆறாம் நாள் ஞாயிற்றுக்கிழமையன்று சத்தியாக்கிரக நோன்பு நாளாகக் கொள்ள வேண்டும் என்று காந்தியடிகள் நாளையும் உறுதி செய்தார். அத்திரு நாளைச் செம்மையாகக் கொண்டாடச் சென்னையில் தக்க முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன.

பணிகள் பகிர்ந்தளிக்கப்பட்ட வகையில், இராயப்பேட்டை வட்டப்பொறுப்பை ஏற்றுக்கொண்டவர்களில் குறிப்பிடத் தக்கவர் தமிழ்த் தென்றல் திரு வி. க. அவர்கள் ஆவர்.

குறிப்பிட்ட 1919 ஏப்ரல் ஆறாம் நாளன்று - பாரதியார் நோன்புகளில் எதிர்பாராத முறையில் கலந்துகொண்டு முருகன் பாட்டுப் பாடியதாகக் குறித்துள்ளார். இதே நிகழ்ச்சியை வரலாற்று நூலாசிரியர் - திரு வெ. சாமிநாத சர்மா அவர்களும் குறிப்பிட்டுள்ளார். இவ்விரு சான்றோர்களின் கூற்றுக்களை ஆசிரிய அணுக்கச் சான்றுகளாகக் கொள்ளலாம்.

ஆசிரிய அணுக்கச் சான்றுகள்:

**பாரதியார் பாட்டு**

"ஏப்ரல் ஆறாம் நாள் மலர்ந்தது. அடிகளின் ஆத்மசக்தி மணங் கமழ்ந்தது. முன் ஏற்பாட்டின்படி காலையில் இராயப் பேட்டையிலுள்ள பஜனை கோஷ்டிகளும், மற்றவர்களும் 'தேசபக்தன்' நிலையம் போந்தார்கள். அவர்களுடன் சுப்பராய காமத்தும் யானும் ஊர்வலம் வந்தோம்; பிற்பகல் ஸ்ரீ பால

சுப்பிரமணிய பக்தஜன சபையின் 'குகானந்த நிலையத்'தை அடைந்தோம். சுப்பிரமணிய பாரதியார் பஜனை கோஷ்டியில் எங்கேயோ எப்படியோ கலந்து வந்தார். அவரைக் கண்டதும் செவி அவரது பாட்டை விரும்பியது. பாரதியாரைப் பாடுமாறு கேட்டேன். தமிழ்ப் பெருமான், 'முருகா முருகா' என்று பாடத் தொடங்கினார். பாட்டு - தமிழ்ப் பாட்டு - தேனினும் இனிய முருகன் பாட்டு - படத்திலுள்ள ஓவிய முருகனை நகரச் செய்தது. ஓவிய உருவம் வீறுடன் வெளி வருவது போன்ற தோற்றம் உண்டாயிற்று. அன்பர் மெய்கள் அரும்பின; விதிர் விதிர்த்தன; சிலர் மயங்கினர்; சிலர் விழுந்தனர்; சிலர் கண்ணீர் உகுத்துத் தம்மை மறந்தனர்; எல்லாரும் ஆனந்தப் பரவசரா யினர்; பாரதியார் சித்திரப் பதுமை ஆனார். பாட்டுக்கும் ஓவியத்துக்கும் உள்ள ஒருமைப்பாட்டை யான் கண்ணாரக் கருத்தாரக் கண்டேன். சிறிது நேரங் கழித்துப் பாரதியார் விடைபெற்றுச் சென்றார்."

நூல்: திரு. வி. க. வாழ்க்கை குறிப்புக்கள்
(பக்: 307-08)

தமிழ்த்தென்றல் திரு. வி. க. அவர்கள் பாரதியார் பாடல் பாடிய சூழலைத் தமது குறிப்பில் எழுதியுள்ளதைப்போன்றே, வெ. சாமிநாத சர்மா அவர்களும் 'முருகன் பாட்'டைக்கேட்டு மெய்ம்மறந்ததாகக் குறிப்பிட்டுள்ளார்:

"........ பாரதியார் ஒருசமயம் சென்னை ராயப் பேட்டை மோபரீஸ் ரோடிலுள்ள குகானந்த நிலையத்திற்கு வந்திருந்தார். அப்பொழுது கலியாணசுந்தர முதலியாரும் நானும் வேறுசில நண்பர்களும் அங்கிருந்தோம். மாலை நேரம். நிலையத்து மண்டபத்தில் குமரக் கடவுளின் திருவுருவப் படம் வைக்கப்பட்டிருந்தது. அந்த உருவம் பாரதியாரின் உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்துவிட்டது. 'முருகா, முருகா, முருகா', என்று தொடங்கும் பாடலை உணர்ச்சி ததும்பப் பாடினார். மாலை நேரத்து மஞ்சள் வெயில் அந்தப் படத்தின்மீது லேசாகப் படிந்து, முருகனுடைய திருவுருவத்திற்குத் தனிச் சோபை

கொடுத்தது. "வருவாய் மயில் மீதினிலே வடிவேலுடனே வருவாய்" என்ற சரணத்தை அவர்பாடி, அதையே திரும்பத் திரும்பச் சொன்னபோது, அந்தக் குமர வடிவம் அவரை நோக்கி மெதுவாக வருவது போலவே இருந்தது. நாங்கள் அனைவரும் பரவசர்களானோம். அந்தக் காட்சி என் நெஞ்சைவிட்டு அகலவே அகலாது. முதலியார் இந்த நிகழ்ச்சியைப் பற்றி அடிக்கடி கூறி ஆனந்தப்பட்டிருக்கிறார்."

நூல்: நான் கண்ட நால்வர்
கட்டுரை: கவிகுலக் கோன் (பக்;229)

**சுதேச கீதங்கள் (இரண்டாம் பாகம்)**
**வெளியீடு பற்றி**

## சுதேச கீதங்கள்
## (இரண்டாம் பாகம்)

சுதேச கீதங்கள் - இரண்டாம் பாகத்தில் 80 பாடல்கள் இடம் பெற்றுள்ளன. இத்தொகுதியிலும் பல புதிய பாடல்கள் காணப்படுகின்றன. மற்றும், முதல். தொகுதியைப் போலவே இத்தொகுதியிலும் முன்னைய பதிப்புகளில் இடம் பெற்றிருந்த முரசு, பாப்பா பாட்டு - போன்றவையும் இடம் பெற்றுள்ளன.

இப்பதிப்பில், திரு. எஸ். ஸ்ரீனிவாச ஐயங்கார் அவர்கள் பாரதி பாடல் குறித்து எழுதிய ஆங்கில முகவுரையும், அதன் தமிழாக்கமும் இடம் பெற்றுள்ளதுடன், பாரதியின் இளமைக் கால நண்பரான திரு. சக்கரைச் செட்டியார் அவர்கள் பாரதியின் அரசியல் கொள்கை குறித்தும், தேசிய ஈடுபாடு குறித்தும் ஆங்கிலத்தில் எழுதிய 'The Political life of Sri Subramania Bharati' என்ற கட்டுரையும் சேர்க்கப்பட்டுள்ளது. இந்த நூல் தொகுதியில் 72 ஆம் பாடலாக உள்ள 'புடைபெயர்பாட்டு'

பாரதி பாடியதன்று என்ற குறிப்பு ஒன்று பாரதி பிரசுராலயத் தாரின் 1937ஆம் வருடப் பதிப்பில் தரப் பெற்றுளளது.

இத்தொகுதியில் இடம் பெற்றிருந்த 80 பாடல்களில் 58 பாடல்கள் கால வரிசைப்படி தந்துள்ள வகையிலும், கையெழுத்து வடிவில் பார்த்துப் பரிசோதித்த வகையிலும் உரிய இடங்களில் இடம் பெற்றுள்ளன. காலவரிசை காண இயலாத எஞ்சிய 21 பாடல்கள் இப்பதிப்பில் 214 - 234 எண்ணிட்ட பாடல்களாக இடம் பெற்றிருக்கின்றன.

**சுதேச கீதங்கள் (இரண்டாம் பாகம்)**
**வெளியீட்டில் இடம் பெற்ற எண்பது பாடல்கள்**

**அட்டவணை**

பாரத மாதா
பாரத மாதா நவரத்ந மாலை
வாழ்க திலகன் நாமம்
மஹாத்மா காந்தி பஞ்சகம்
நாட்டுக் கல்வி
தமிழ் மொழி வாழ்த்து
பிஜித்தீவிலே ஹிந்து ஸ்திரீகள்
புதுமைப் பெண்
பெண்மை
முரசு
பாப்பா பாட்டு
காதற் பாட்டு: காலைப்பொழுது
,, அந்திப் பொழுது
,, கண்ணம்மா
,, திருக்காதல்
,, வள்ளிப்பாட்டு
,, ஷை
,, கண்ணம்மா

மழை
கோமதி மஹிமை

சுதேச கீதங்கள் (இரண்டாம் பாகம்)
வெளியீட்டில்

## PREFACE

The new spirit of Indian Nationalism that is effecting such a wonderful transformation of Indian life and character finds in Tamil land its aptest expression in the late C. Subramania Bharathi. That gifted Poet has gathered with loving hands the sweetest and most radiant flowers of India's truest mind, heart and soul, and made of them a garland of imperishable song to be laid at the feet of Bharata Mata. Seldom has the Muse's inspiration been as authentic and pure and passionate as in his case. The brief biographical notice written by my friend Sriman Somasundara Bharati gives one an idea of the ease and spontaneity of the poet's genius. But for the irresistable impulse to burst into song, Subramania Bharati's checkered life and straitened means might have damped the ardour of his soul. His verse has the singular quality of being clear as a mountain stream; withal it is mystic as the sea or a mountain summit of an evening. It is beautiful as a bird, swift of wing, exquisite in poise, picturesque in plumage and soul-stirring in its cadence. His songs of patriotism which are and should be on every one's lips-and particularly on the lips of every woman and child, are his greatest service to his country. Patriotism becomes real and potent only when it is linked to the witchery of liquid song, and the late Subramania Bharati's work in this direction is both unique in quality and varied and rich in quantity. The humble folk in a far away village in Tinnevelly or Madura, the busy labourers in a crowded city, the strenuous middle

classes and the ease-loving aristocracy, have, all alike, in his poems, a golden key to the still locked chamber of their and their country's happiness.

No education can be considered to be National which does not give the first place to the training of our emotions, to the rousing of our imagination to the strengthening of our will and to the purifying of our soul. Nor can he be held to be an able or wise man, who is indifferent to National songs and who does not realise that a passionate love of his country and of his countrymen is his most elementary duty. We have boasted enough of our ability and intelligence - ability and intelligence that move one to deep pity. We have been fond of displaying our ability to divide ourselves or to differ from one another, than of our ability to stand firm and united. We have been prouder of our ability to speak or write correct and even ornate English than of our ability to speak or write ordinary Tamil. We have been for more enamoured of the English Muse, of Shakespeare and Wordsworth, than of the Indian Muse, of Kalidasa or Kamban. It is only right that at this season, an authorised and complete edition of Subramania Bharati's works should be undertaken. It is not only the best monument to the memory of a great Taimil Poet, but is the most stimulating contribution to the formation of Indian mind and character. And I fervently hope that the entire youth of Tamil land, that is being "educated" to-day in westernized schools and colleges, will make it their religious duty to learn and recite the National songs of Subramania Bharati.

Mylapore, }
20—2—22 }

S. SRINIVASA IYENGAR

**திரு.எஸ். சீனிவாச ஐயங்கார் அவர்களின்**
**முன்னுரை (தமிழ்வடிவம்)**

### முகவுரை

நம் மிந்தியரின் குணங்களையும் சுபாவங்களையும் யாவரும் பார்த்து அதிசயிக்கும்படி முற்றிலும் மாற்றிவருகிற ஒரு நவீன ஆதர்சம் - தேசபக்தி - நம் தமிழ் நாட்டில் காலஞ்சென்ற ஸ்ரீ சி. சுப்பிரமணிய பாரதியாரிடம் உருப்பெற்று சாக்ஷாத் காரமாக விளங்கிற்று. இவ் வரகவி தமது அன்பு நிறைந்த கரங்களால் அழிவற்றதும் மிகுந்த அழகும் வாசனையும் பொருந் தியதுமான மலர்களால் நம்மவர்களின் உண்மைகளையும் தத்து வங்களையும் ஒருங்கே சேர்த்துத் தொடுக்கப்பட்ட பாமாலை ஒன்றை இயற்றி நமது பாரத தேவியின் பாதார விந்தத்தில் ஸமர்ப்பித்திருக்கிறார். தமிழ் மொழியில் இவரைப்போல அவ்வளவு இனிமையாகவும், சுத்தமாகவும் மிகச் சிலரே பாடி யிருக்கின்றனரென்பதை நோக்கும்போது இவருடைய கவித் திறம் ஸரஸ்வதி தேவியாருடைய பிரஸாதமென்றே சொல்ல வேண்டும். நமது கவியைப்பற்றி எனது நண்பர் ஸ்ரீமான் ஸோமசுந்தர பாரதியார் சுருக்கமாய் எழுதியுள்ள சரிதையி லிருந்து இவருக்குக் கவிபாடும் திறமை எவ்வளவு அழகாயும் சுலப மாயும் அமைந்திருக்கிறதென்பது எளிதிற் றெரியும். இவருக்குக் கவிபாடுவதில் அடக்கமுடியாத உற்சாகமும் ஊக்கமும் இருந்திரா விட்டால் இவரைத் தொடர்ந்து பற்றியிருந்த தாரித்ரியமும் வாழ்க்கைக் கஷ்டங்களும் இவருடைய மனோபாவங்களை அடியோடே கெடுத்திருக்கும். இவருடைய பாட்டுகள் மலை யருவி போல நேர்மையுடையதாயும், கடல்போலவும் மாலையில் காணும் மலையின் உச்சியைப்போலவும் ஆழமும் அற்புதமு முடையன வாகவுமிருக்கின்றன. வானத்தில் அதிவேகமாய்ப் பறக்கும் பறவை யொன்று சற்று நேரம் உலகைப் பார்த்து நின்று தனது வனப்புமிகுந்த சிறகை விரித்து, கேட்டோர் மன முருகப் பாடினாற் போலிருக்கின்றன கவியினுடைய ஒப்புவமை யில்லாத கானங்கள்.

நமது தமிழ் நாட்டில் ஒவ்வொருவரும் பாடிக் கொண்டிருக்கிறதும், முக்கியமாக ஸ்திரீகளும் குழந்தைகளும் எப்போதும் வாய்விடாது பாடிக்கொண்டிருக்கவேண்டியதுமான இவருடைய கனிந்த பாட்டுகள்தான் நமது நாட்டிற்கு இவர் செய்துள்ள மிகப்பெரிய கைங்கர்யமாகும். தேசபக்தி யென்னும் வெறி பிடித்தபோது எல்லா பக்தர்களும் (எத்தேசத்தவர்களாயிருந்த போதிலும்) பாட்டின் மூலமாகவே தாங்கள் நுகரும் ஆனந்தத்தை மற்றவர்களுக்குக் காட்டி யிருக்கிறார்க ளென்பதற்கேற்ப நமது பாரதியாரும் தம்முடைய இனிய ஒப்புவமையில்லாத பாக்களால், தமது தேசபக்தியின் முதிர்ச்சியை அவர் தேசத்தவர்களாகிய நமக்கும் காட்டியிருக்கிறார். இந்த விஷயத்தில் அவருடைய அனந்த அபூர்வ பாட்டுக்கள் மிகவும் சிலாகிக்கத்தக்கன. திருநெல்வேலியிலேயோ, மதுரையிலேயோ உள்ள ஒரு தூர குக்கிராமத்து ஏழை ஜனங்களும், ஜனம் நிறைந்த பட்டணங்களில் வசித்து ஒழிவில்லாத வேலைகளில் ஆழ்ந்துகிடக்கும் உழைப்பாளிகளும், அதிக வேலையுள்ள சாதாரண ஜனங்களும், மற்றும் எப்பொழுதும் சுகத்தையே விரும்பும் தனவந்தர்களும் நமது கவியின் பாட்டைப் பாடுவதாலே இதுவரை அடைபட்டிருந்த தங்களுடையவும் தங்கள் நாட்டினுடையவும் ஆனந்த இன்ப சாகரத்தின் கதவுகளைத் திறக்கும் ஒரு பொன் திறவு கோலெனக் காண்பார்கள்.

நமது நற்குணங்களை விருத்தியடையச் செய்து மனோ பாவங்களை எழுப்பி, மனோநிலையை உறுதி பெறச்செய்து, ஆத்ம சுத்தத்தை யடையச் செய்யும் வித்தையே தேசீயக் கல்வி. இதன் ஸ்தானம் முதன்மையது. இவைகளல்லாதன தேசீயக் கல்வியாக மாட்டா.

''இது நம்முடைய தேசம்'' என்று நினைக்கும் போதெல்லாம் நமது மனதில் அடங்காது கிளர்ந்துவரும் ஆனந்தத்தையும் ஆத்திரத்தையும் பாட்டாகப் பாடி நம்முடைய தாபத்தை அறிவுறுத்தும் கீதங்களும் கானங்களும் இருந்தும் அவைகளைப் பாட வேண்டியது ஒவ்வொருவரின் முக்கிய கடமை யென்று

எண்ணாமல் அவைகளைப் புறக்கணித்திருப்பவனை வல்லவனென்றாவது மதிவாணனென்றாவது கொள்வது தகாது.

நாம் இதுவரைக்கும், யாரும் பார்த்துப் பரிதபிக்கும் படியாக கெட்டிக்காரர்களென்றும், புத்திசாலிகளென்றும் பெருமை பாராட்டி வந்தோம். ஒற்றுமையாயிருப்பதைவிட்டு, நமக்குள் நாமே விரோதப்படுவதில், நமக்கிருக்கும் சாமர்த்தியத்தைப் பற்றி இதுவரையும் சந்தோஷித்து வந்தோம். ஆங்கிலம் முதலிய அன்னிய பாஷைகளை எவ்வித பிழையுமில்லாமல் பேசுவதிலும் எழுதுவதிலும் நமக்குள்ள வன்மையைப்பற்றி நாமே நம்மைச் சிலாகித்துக் கொண்டோம். அந்தோ! 'என்ன பரிதாபமான நிலை! அமிழ்தினும் இனிய தமிழன்னையின் மேல் நமக்கிருக்கவேண்டிய பற்றையும் அன்பையும் விட்டு, அந்த தேவிக்கு நாம் செய்யவேண்டிய கடமையையும் ஒழித்து, அன்னிய மொழிகளில் ஆசை வைத்து அநியாயமாகப் போனவர்கள் நம்மைப்போல் யாருளர்? கம்பன் காளிதாஸன் முதலிய மகா கவிகளுடைய பாட்டுக்களைக்கேட்டு சிரவணஞ் செய்த காதுகள் ஷேக்ஸ்பியர், ஓர்ட்ஸ்வர்த் என்னும் மேனாட்டுப் பாவலர்கள் பாட்டைக் கேட்ட மாத்திரம் ஆனந்திக்கவேண்டியதாயின. இவ்விதமாக, தமிழுக்குக் கலிபிடித்த காலத்தில் நமது சுப்பிரமணிய பாரதியினுடைய கர்ணானந்த கரமான பாட்டுக்களை எல்லோரும் வாசித்து ஸந்தோஷமடையக் கூடிய சிறு புஸ்தகங்களாக அச்சுவாகனமேற்ற இயல்வது ஒரு பெரிய புண்ணியமான காரியமாகும். இப் பிரசுரங்கள் ஒரு பெரிய தமிழ்க் கவியினுடைய அழியாப் புகழுக்கு அறிகுறியாயிருப்பதுமல்லாமல் பாரதச் செல்வர்களுடைய மனதை அப் பாரத தேவியின் பொற்பாத கமலங்களுக்கு ஆற்றுப்படுக்கும் ஒரு மார்க்கமுமாகும். இப்போது ஆங்கில பள்ளிக்கூடங்களில் 'கற்றுவரும்' நமது தமிழ் நாட்டுச் சிறுவர்களனைவர்களும் இந்த கீதங்களை நாள்தோறும் பாராயணம்செய்து பாடுவது தங்களுடைய பிரதான தர்மமாகக் கைக்கொள்வார்களென்று நான் மிகவும் எதிர்பார்த்திருக்கிறேன்.

மயிலாப்பூர்<br>20—2—22 } சே. ஸ்ரீனிவாஸய்யங்கார்

சுதேச கீதங்கள் (இரண்டாம் பாகம்)
வெளியீட்டில் பாரதியாரின் அரசியல் வரலாற்றை
விளக்கி வெளிவந்த கட்டுரை:

## THE POLITICAL LIFE OF SRI SUBRAMANIA BHARATI

**He died, but by his faith he is speaking to us still. - The Bible.**

Sriman Subramania Bharati, the harbinger of the Tamil Renaissance, the inspired bard of Nationalism is dead; but like the heroes of the Unseen, he yet speaketh to us through the flute-voice of his songs. It is his title to enduring fame, not that he made political speeches though he delivered many at one time of his life and not that he figured at Conferences and in Committees in alliance with and in subordination to the bureaucracy, but his wonted fires still live in the glowing lyrics with which he has endowed the Tamil Nadu. Not being a Tamil scholar like Mr. Somasundara Bharati who has contributed a preface to the first volume, my competence to write a literary estimate of his poetry is questionable. But as I have been called upon by his dear partner in life, left to mourn his untimely loss, to give out of my recollections concerning his political career in Madras, I deem it not only a high privilege, but a sacred duty to the memory of my friend to lay on his grave what flowers of friendship I can gather from my past intimacy.

The English Poet, William Wordsworth says that at the dawn of the French Revolution 'it was heaven to be young' And so we felt, the young men who had caught the rays of the morning sun of Indian freedom, which is now broadening more and more into the effulgence of the noonday. But we were like

worshippers who stand on the banks of some holy stream with faces upturned in rapture to the rising sun. The darkness was densest darkness that could be felt at the time Lord Curzon of Keddleston partitioned Bengal and constitutional protests from Mr (Sir) Surendranath Banerjee delivered in his finely modulated voice fell on deaf ears. The degradation of subjection, the futility of constitutionalism, fell like a death knell on our young ears, but roused new hopes. The battle was joined first at the Benares Congress in 1905 and later on at Calcutta under the presidency of Dadhabhai in 1906. Out of the conflict rose the New Party with the late Lok. Bala Gangadhar Tilak as its most conspicuous exponent. Of the young men in Madras who definitely ranged themselves under the banner of Indian emancipation, Sriman Bharati was the poetic soul. My impressions of him are still as vivid today after fifteen years. Nervous in speech, with flashing eyes, and careless gestures, he would fling out his sentences with careless audacity. Though living in the world, he was not of the would; for if he had cared for the uncertain riches of this world, his lot would have been cast in pleasanter places and the misfortunes of his later years would not have befallen his. He took no thought for the morrow, nor for the appalause of men. Essentially he was a lyrical poet; and at other times he would have won fame and fortune in the courts of Kings like the bards of Purananuru. But he happened to live in an iron age, and he sang of the fall of his land and the rising hopes and fears of the New Party.

In 1904, he arrived in Madras and served his political apprenticeship in the Swadesamitran office as Sub-Editor under that distinguished publicist and veteran patriot, the late Mr G. Subramania Iyer. Alas! when the New Party arose, he was the one faithful old politician, who like Milton's angel, remained

faithful among the faithless. Unto him gathered the fiery and impetuous spirits as unto a father. He led us on, though the cleverest Vakil in Madras frowned and the Madras Moderates who still remained true to the lost cause swept aside their garments, lest they should be politically polluted. My friendship with Mr. Bharati began in the early months of 1907, when, after the stormy session of the Congress, Srijut Bepin Chandra Pal came to Madras and delivered those splendid lectures on the Madras sands to many thousands, explaining the philosophy of the New creed. At that time, some of the young men formed themselves into a political association, the Chennai Jana Sangam, some of the members of which are still in Madras, Messers, S Duraisami Iyer, S. Srinivasa Chariar, Surrendranath Arya, P. Thirumala Chariar, and myself, though Mr. Bharati is not with us in the flesh. It was this band of young men inspired by Mr. G. Subramania Iyer and also by that enthusiastic soul, Dr. Nanjunda Row, who invited Bepin Babu. Mr. Bharati was sent by us to Bezwada, at which place Bepin Babu was lecturing, to invite him to Madras in the name of young Nationalists. His visit was an epoch-making one and laid the foundations of the Nationalism of to-day. Even the notorious Rowlatt Committee recognised it and traced the anarchical outrages of this Presidency to Bepin Babu's alleged incendiary speeches.

It was a time of high expectations, but the bolt from the blue soon fell when Bepin Babu was here. Lala Lajpat Rai and Ajit Singh were deported from the Punjab. It was the beginning of the first campaign of organised repression of the Government. Bepin Babu was sent to Jail for refusing to give evidence and when the fateful Congress met at Surat in December, the anarchists had fired the first shot in Bengal. A band of young men from Madras including M. Bharati and Mr. V.O

Chidambaram Pillai went to Surat. The Congress broke up in confusion, but Mr. Bharati sang his songs to solace our grief and cracked his jokes. The ascendancy of the Moderates in the Congress was the signal for a fresh orgy of repression, arrest and imprisonments. In 1908, the Tinnevelly riots took place and Mr. Chidambaram Pillai and poor Mr. Subramania Siva (alas! now broken in health, but still retaining the fire of his soul) were arrested. Mr. Bharati went to give evidence in the Tinnevelly Court. Soon after, Mr. Surendranath Arya was arrested for delivering so-called seditious lectures in the Moore Market, was tried in the Session's Court and was convicted.

To go back a couple of years in 1906 the India Printing Works were started by Mr. Thirumala Chariar of Triplicane and Mr. Bharati became the Editor of a new Tamil Weekly, called 'India' which sounded the note of New Nationalism in his inimitable vigorous style. In his case, the style was the man and the man was a high strung musical instrument.

In 1908, the publisher of India was prosecuted for sedition and 'India' ceased, thus terminating a short lived and yet a meteoric career of exceptional brilliance under the inspiration of Mr. Bharati. Pondicherry opened wide its arms and he sought its hospitality. It is not for me to describe his prolonged stay in the French settlement, which, as the novelty wore off became a prison-house to him. In his yearning to come back to his old haunts and associates, he made some attempts to move the obduracy of the bureaucracy. Mr. B.V. Narasimha Iyer of Salem, now living secluded in the gloom of his domestic sorrows, sought by a question in the Legislative Council to learn the inscrutable mind of the Government which met its usual fate at the hands of expert evasion. In 1918, he returned to Madras, but a new world

he saw around him. The enthusiasm of the old Nationalism still flamed in Lok. Tilak, and Mrs. Besant's influence as the leader of the Home Rule Movement and the President of the Calcutta Congress of 1917 had begun to wane. The apple of discord had been thrown into the Congress camp by the visit of Mr. Montague and later on by the Curtesian Scheme hatched by him in the Montford Report. Soon after his return, I sawBharati once, when he proposed that he would undertake a new translation of the Bible for which task along with other Tamil Scholars like Mr. T.V. Kalyanasundara Mudaliar, he was eminently fit. If he had lived longer, some such task would have been laid on him by the Nationalistic Indian Christians and I am confident that he would have given a translation worthy of the beauty of the Tamil tongue and his own scholarship. The last appearance of Mr. Bharati was at a Non-Co-operation meeting on the beach, where he was requested to sing one of his songs, when he sang 'பாரத ஸமுதாயம்' printed on page 60 of Vol.I. It is a song of bold thought and lofty sentiments and the following stanza moved me immensely:—

இனியொரு விதிசெய்வோம் - அதை
எந்தநாளும் காப்போம்
தனியொருவனுக் குணவிலை யெனில்
ஜகத்தினை யழித்திடுவோம் - வாழ்க பாரத
ஸமுதாயம்.

Then he fell ill and passed away on the 11th Sept. 1921, from this world of shadows to a truer and brighter sphere where I believe his genius will receive its splendid fruition. In the cremation ground I saw his body, emaciated to a mere skeleton, burning; but it was once the vehicle of his

vibrant soul. But this tenement of the flesh goes but the soul remains immortal, beyond the reach of the slings of fortune and the contumely of the proud.

I can recall even now the many occasions, when in those days, he stood before beach audiences and sang his songs. There was a meeting on the beach, I forget now the exact date, attended by many thousands and presided by Mr. G. Subramania Iyer. Mr. Nevinson, the English publicist was present there. And Mr. Bharati sang and the Englishman describes him in his book 'The New spirit in India' as follows:—

The Tamil poet of Madras recited a lament he had written for Lajpat Rai at the time of his deportation. It was the common lament of exiles the fond memory of home, the deep attachment to the land of childhood, the loneliness of life among strangers and unknown tongues - all very quietly and simply told. Then by a sudden change the poet turned to satire and described a dialogue between Mr. John Morley and India, on the subject of the Swaraj or Home Rule.

* * *

To which India makes firm and dignified reply. She has tasted freedom, she has learnt from England herself what freedom is; even John Morley has been her teacher, and she will not cease to labour for Swaraj. She claims the rights of other nations, the rights For which England herself has fought; she claims the same freedom of person and of speech, and she will not cease to labour for Swaraj. From north to south her people are becoming united, from east to west the cry of 'Bande Mataram' goes up, and slowly the sun of freedom is arising; it may rise slowly, but India will not cease to labour for Swaraj.

Even the late Mr. V. Krishnaswamy Iyer though far removed from us in political opinions like the antipodes, was enchanted with his songs and printed a small booklet in thousands for free circulation containing some of his most popular songs. His poetic fervour extorted this tribute even from a political opponent.

On two special occasions, Mr. Bharati, myself and others played parts which have been always condemned by rational moderates as mere rowdyism, but which in my opinion have always characterised youthful zeal. At a meeting held in the open ground near the Victoria Hall, to protest against the deportation of Lala Lajput Rai, with the late Sir V.C. Desikachariar in the chair (then a Vakil) we organised the confusion and howling down of moderates who rose to speak. I am letting the public into this open secret for the first time. But for Mr. G. Subramania Iyer whose voice we always listened to the meeting would have ended in a fiasco. On another occasion the meeting was held to condemn the policy of racial descrimination in South Africa with the late Mr. Ananta Charlu on the chair. As we did not believe in sending a protest, I moved an amendment that retaliation should be resorted to in case the protest failed. There was consternation and dismay among the moderates. But the audience would not hear of anything else, and so I moved it and Mr. Bharati seconded it and it was of course carried by an over whelming majority.

It now remains the duty of the Tamil Nadu, ever loving a good song, to make his songs sung in every nook and corner like the hymns of the Tamil Saints. The Tamil reading public ought to buy these volumes as they are issued in thousands. Nothing would give more complete satisfaction to his soul

than to hear his songs sung by men, women and children, in the homes of the rich as well as the poor, on political platforms, and in the peaceful atmosphere of the home by the tender voices of children. Countrymen, lovers of India and the Tamil language, I have placed this poor garland of mine on his memory. Will you do your duty as I know you will certainly do?

Egmore,
1—3—22 V. CHAKKARAI

## சுதேச கீதங்கள் தடை பற்றி ஒரு குறிப்பு

பாரதியார் வாழ்ந்த காலத்திலேயே அவருடைய நூல்களான "கனவு", "ஆறில் ஒரு பங்கு" ஆகியவற்றுக்குத் தடையுத்திரவு பிறப்பிக்கப்பட்டது, அப்போதைய பிரிட்டிஷ் ஆட்சியாளர்களால். இந்தத் தடையுத்திரவுகளை நீக்கக்கோரி, அப்போது பாரதியார் மட்டுமே போராடினார்.

1911ஆம் ஆண்டுக்குப்பின், பாரதியார் மரணத்தைக் கடந்த பின்னரும் 1928ஆம் ஆண்டில் மீண்டும் பாரதியார் பாடல்களில் ராஜத்துவேஷமான கருத்துக்கள் இருப்பதாகக் கூறி, அப்போது பிரிட்டிஷ் இந்தியாவின் ஒரு மாநிலமாக இருந்த பர்மா அரசு 1928ஆம் ஆண்டு ஆகஸ்ட் 7ஆம் தேதியன்று பாரதி ஆச்ரமம் வெளியிட்டிருந்த "சுதேச கீதங்கள்" பாடல் தொகுதிகள் பர்மா மாகாண எல்லைக்குள் நுழையக் கூடாதெனத் தடை விதித்தது. இதன் தொடர்பாக, பாரதியின் நினைவு நாளான 1928 செப்டம்பர் 11ஆம் தேதியன்று பர்மா அரசாங்கத்தின் உத்திரவைக் கெஜட்டில் வெளியிட்டு, சென்னை மாகாணத்திலும் நூல்கள் பறிமுதல் செய்ய ஆணை பிறப்பிக்கப்பட்டது.

அரசின் இந்தச் செயலைப் பத்திரிகை உலகமும், அறிஞர் உலகமும் கண்டனம் செய்தன. சத்திய மூர்த்தி அவர்கள்

சென்னை மேல்சபையில் அக்டோபர் 8ஆம் தேதி, பாரதியார் பாடல்கள் சட்ட விரோதமானவையாகக் கருதி, பாடல் பிரதி களைப் போலீசார் மூலம் பறிமுதல் செய்ததைப் பற்றி விவா திக்க வேண்டுமென்று தள்ளிவைப்பு மசோதா ஒன்று கொணர்ந் தார். 1928 அக்டோபர் 9ஆம் தேதி தள்ளிவைப்புப் பிரேரணை விவாதத்திற்குச் சட்டசபையில் எடுத்துக் கொள்ளப் பட்டது. சத்தியமூர்த்தி, துளசிராம் – போன்றோர் பாரதி யாரின் பாடல்களைப் பாடிக் காட்டினர். தீர்மானத்திற்கு ஆதரவாக 76 வாக்குகளும் எதிராக 12 வாக்குகளும் கிடைத் தன. 15 பேர் நடுநிலை வகித்தனர். பேராதரவு பெற்று தீர் மானம் நிறைவேறியது.

சென்னைச்சட்டசபை விவாதத்திற்குப் பின், நீதிமன்றத்தில் அப்பீல் விசாரணை நடந்தது. இதன் பின்னர்ப்பாரதியார் பாடல்களில் அரசு விரோதக் கருத்துக்கள் ஏதுமில்லை என்று நீதிமன்றம் தீர்ப்பளித்தது. இதனால், பறிமுதல் செய்த நூல்கள் 1929 பிப்ரவரியில் உரியவர்களிடம் ஒப்படைக்கப்பட்டன.

இதனால், பாரதி நூல்கள் விற்பனைக்கு நல்ல விளம்பரம் கிடைத்தது. ‘இந்நூல் அரசினரால் பறிமுதல் செய்யப்பட்டுத் திருப்பித் தரப்பட்டது’ என்று பொருள்பட, ஆங்கில ரப்பர் ஸ்டாம்ப்முத்திரை குத்தப்பட்டு, நூல்கள் விற்பனை செய்யப் படலாயின.

## பாரதி அறுபத்தாறு

### பாரதி பிரசுராலயத்தார் எழுதிய முன்னுரை

“பாரதி அறுபத்தாறு” என்னும் சிறந்த நூலில் ‘சினத்தின் கேடு’, ‘தேம்பாமை’, ‘பொறுமையின் பெருமை’, ‘கடவுள் எங்கே யிருக்கிறார்?’, ‘தாய் மாண்பு’ முதலிய அநேக விஷயங்களைப் பற்றித் தமதபிப்பிராயத்தை வெளியிட்டிருக்கிறார். “ஸர்வமத ஸமரஸம்” என்ற பகுதி பாரதியாரின் மதக் கொள்கைகளையும் வேதாந்தத்தையும் நன்கு விளக்குகிறது.

இப்புத்தகத்தைப் படிக்கும் ஒவ்வொருவரும் பாரதியாரின் உபதேசங்களை ஆவலுடன் ஏற்றுக் கொள்வதுடன் அவர் வெளியிட்டிருக்கும் அபிப்பிராயங்களை பிரியமுடன் அங்கீகரிப் பார்களென்று பூர்ணமாக நம்புகிறோம்.

- பாரதி பிரசுராலயத்தார்

## பாரதி நூல்களின் பிரதிகள்*

### சென்னை அரசாங்கப் பொருட்காட்சிச் சாலையிலுள்ளவை

| எண் 226 | நூல் | குறிப்பு | பக்கம் |
|---|---|---|---|
| 1 | காட்சி | | 35 |
| 2 | பாடல் திரட்டு | 29 கவிதைகள் உள்ளன | 53 |
| 3 | குயில் | | 39 |
| 4 | சக்திப் பாடல்கள் | | 26 |
| 5 | ஜகத் சித்திரம் | | 7 |
| 6 | பகவத் கீதை முன்னுரை | 20ஆம் பக்கம் இல்லை | 58 |
| 7 | பகவத் கீதை - உரை | | 71 |
| 8 | பாஞ்சாலி சபதம் | | |
| | (a) முதற்பாகம்–அச்சுப்பிரதி | பாரதியார் திருத்தங்களுடன் கூடியது. 11, 12, 41 – 48 ஆக 10 பக்கம் இல்லை | 68 |

* இங்குக் குறிப்பிடப்பெற்ற பிரதிகள் 6-8-1949 முதல் பொருட்காட்சிச் சாலையில் இருந்துவருகின்றன. இவற்றுள் 'பாஞ்சாலி சபதம்' முதற் பாகம் தவிர ஏனைய யாவும் பாரதியாரின் கைப்பட எழுதிய காகிதப் பிரதிகள். இவற்றை அரசாங்கத்தாரிடம் கொடுத்தவர் பாரதியாரின் சகோதரர் ஸ்ரீ விசுவ நாத ஐயர்.

- சென்னை அரசாங்கப் பதிப்பு
(பின்னிணைப்பில் உள்ளது)

| எண் 226 | நூல் | குறிப்பு | பக்கம் |
|---|---|---|---|
| | (b) இரண்டாம் பாகம் | பாரதியார் திருத்தங்களுடன் 6, 23 பக்கங்கள் இல்லை | 39 |
| | (c) முதற்பாகம்: குறிப்புரை | அச்சுப்பிரதி: பாரதியார் திருத்தங்களுடன் | 20 |
| 9 | பாடல் திரட்டு | இதில் 'புதிய ஆத்திசூடி' 4 பக்கம், 'ஏசு கிறிஸ்து' 1 பக்கம் ஆக 5 பக்கம் – அச்சுப் பிரதி | 32 |
| 10 | பதஞ்சலி யோக சூத்திரம் | 22, 23, 24 பக்கங்கள் இல்லை | 25 |
| 11 (a) | சந்திரிகையின் கதை | 12, 13 என்ற எண்கள் மீண்டும் ஒரு முறை எழுதப்பட்டுள்ளன | 28 |
| (b) | சந்திரிகையின் கதை | | 46 |
| 12 | விடுதலை | | 7 |

# பின்னிணைப்பு - 3

## பாரதியார் பாடாத பாரதி பாடல்கள்

இலக்கிய அரங்கிலே போலிக் கவிகள் இடைச் செருகல் செய்வது தொன்றுதொட்டு உள்ள வழக்கமே. தமிழ் இலக்கியத்திலும் இந்த வழக்கம் இருந்துவந்தது; இன்றைய இலக்கியத்திலும் உண்டு என்பதற்குப் பாரதி இலக்கியத்திலேயே சான்று உண்டு.

கம்பர் பாடாதன அவர் பாடியனவாக - சேக்கிழார் அருளாதன அவர் இயற்றியனவாகக் காப்பியங்களில் இடம் பெற்று இன்றுவரை இருந்து வருவதைப் புலவருலகு நன்கு அறியும். வெள்ளியம்பலவாணத் தம்பிரான் என்ற வல்லாளர் இயற்றிச் செருகிய பாடல்கள் 'வெள்ளிப் பாட்டு' என்று பெரும்புலவர்களால் அடையாளம் சுட்டப்படுவது தக்கார்க்குத் தெரியும். சங்க நூலாகிய பரிபாடலிலேகூட இப்படி நடந்திருக்கிறது என்பதை அந்நூலின் உரையிலே பரிமேலழகர் குறித்துள்ளார். 'திருமந்திரம் மூவாயிரம்' என்று சைவ மரபு தெரிவித்தும், அந்நூலுள் மூவாயிரத்தின் மேலும் பாடல்கள் உள என்பதை யாவரும் அறிவர்.

ஓலைச் சுவடிகள் பயன்பட்ட காலத்து இத்தகைய பிழைகள் நடைபெற மிகுந்த வாய்ப்பு உண்டு. அச்சுக் கலை வளர்ந்த பின்னும் இத்தகைய 'திருவிளையாடல்கள்' நடத்துவோர் வாய்ப்புகளைப் படைத்துக்கொள்ளுவது வியப்பாகத்தான் உள்ளது.

பாரதியார் பாடல்களிலும் அவர் பாடாதனவும் இடம் பெற்றிருக்கின்றன. எடுத்துக்காட்டாகப் பின்வரும் பாடலைக் காணலாம்.

### புடைபெயர் பாட்டு

பந்தமுற் றெத்தனைநாள் - இந்தப்
பாரினில் ஈடழிதல்?
தொந்தமில் லாதசுக - வாழ்வைத்
தோற்றுவிப் போம்வாராய்!
இந்த வுடல்சதமோ? - இஃ
தென்று மிறப்பதுவே;
தந்தை மரிப்பவனே - பெற்ற
தாயு மிறப்பவளே. 1

மக்கள் மனைவிபொருள் - யாவும்
மாயன் வினைப்பொருளே;
துக்கந் தரும்இவற்றை - உடன்
தூவென்று தள்ளிவிடு;
மிக்கவெம் புல்லடிமை - நீங்கி
மேதகு வாழ்வுபெற
சத்தியப் போர்செய்குவாய், - அட
இந்திய னேயெழுவாய்! 2

கத்திவில் வாள்கதைகள் – எறி
கற்கள்சூ லாயுதங்கள்
பித்தர்கள் தங்களுக்கே – வெகு
பெட்புடை ஆயுதங்கள்;
சத்திய மீகையருள் – பக்தி
சான்ற மனப்பெரியோர்
நித்திய மானவுயர் - ஆத்ம
நேர்படை யேகொள்ளுவார். 3

அவ்விதம் செய்வதுவே – குல
ஆரிய! நின் தருமம்:

தெவ்வர் செருக்கொழிய - அன்னை
தேச வளம்பெருக
எவ்வந் தரும்அடிமை - இனி
யென்றுமில் லாதழிய
ஒவ்விய வேலதுவே - அதை
ஓங்குக, இந்தியனே! 4

வெற்றி அடைந்து விட்டால் - இங்கு
வேண சுகங்களைநீ
பெற்றர சாண்டிடுவாய் - புவி
பேணி வளரீசன்
பற்று மிகுந்ததன்மேல் - ஈன
பந்த மொழிந்திடுவாய்
பிற்றை யுறும்பெருமை - தன்னைப்
பேசவும் நாவுளதோ! 5

மேற்கண்ட பாடல் பாரதியாரின் 'சுதேச கீதங்கள் இரண்
.ாம் பாகம்' (1922இல்) வெளிவந்தபோது அவர் பாடியதாகவே
ாலில் இடம் பெற்றுவிட்டது. (பக். 134-135). இதனைப்
ாரதியார் பாடலாகக் கருதி அவருடைய வாழ்க்கைத் துணைவி
ாரின் முயற்சியிலே உருவான 'பாரதி ஆச்ரமம்' என்ற வெளி
ட்டகத்தின் பதிப்பிலே அவர் சேர்த்துவிட்டார். 1937இல்
ாரதி பிரசுராலயத்தார் 'பாரதி நூல்கள் - காவியங்கள்'
ன்ற கவிதைத் தொகுப்பினை அச்சிட்டபோதும் இதனையும்
க். 92) அச்சிட்டனர். நூல் முழுவதும் அச்சிட்டு முடியுமுன்
து பாரதியார் பாடல் அன்று என்ற தகவலை அறிந்திருக்
றார்கள். அறிந்தபின், 'பாரதி நூல்கள் - காவியங்கள்'
திப்பின் பின்னிணைப்பிலே

> "இது 'சுதேச கீதங்கள்' இரண்டாம் பாகத்திலுள்ளது இப் பதிப்பிலே புதிதாகச் சேர்க்கப்பட்டது. இது ஸ்ரீ பாரதியார் பாடியதல்ல என்று பின்னால் தெரிந்தது"

று தெளிவாகக் குறித்துள்ளனர். எவ்வாறேோ உண்மை

தெரிந்து, ஒரு போலிப் பாடலை - பாரதி பாடாததை - நீக்க வழிசெய்தனர்.

'மேலும சில' என்ற பகுதியிலே இப் பதிப்பில் இடம் பெற்றுள்ள சில பாடல்கள் ஐயத்திற்கு உரியனவே. பாரதியாரொடு தொடர்பு கொண்டிருந்தவர்களின் பெயர்களோடு இணைந்திருப்பதால் 'இது போலி' என்று இனம் சுட்டுவது தக்கதன்று என்று தயங்கியதால் அவற்றையும் இப் பதிப்பிலே சேர்க்க நேரிட்டது.

ஆனால், ஆய்வாளர் பணி செய்ய வேண்டிய களம் இது என்பதைச் சுட்டிக் காட்ட விழைகிறோம்.

பாரதி பாடாமல், அவர் பாடியதாகப் பதிப்புகளில் இடம் பெற்ற பாடல்களில் இன்னொரு வகையும் உண்டு.

பாரதியார் பல வகை நூல்களையும் பயின்ற புலவர். மேற்கோளாகக் கட்டுரைகள் இடையிலும், கதைகள் இடையிலும் தாம் பயின்ற நூல்களிலிருந்து பாடல்களையோ வரிகளையோ எடுத்துக்காட்டுவது உண்டு. அவருடைய நூல்களைப் படித்தவர்கள் இதனை உணர்வர்.

அப்படி எடுத்தாண்டவற்றுள் பின் வரும் வரிகளும் இடம் பெற்றன:

> தோகைமேல் உலவும் கந்தன்
>     சுடர்க்கரத் திருக்கும் வெற்றி
> வாகையே சுமக்கும் வேலை
>     வணங்குவ தெமக்கு வேலை.

இவ்வரிகள் பாரதியார் எழுதிய 'செய்கை' என்ற கதையில் எடுத்தாளப்பெற்றுள்ளன. ''அந்தக் காயிதத்தின் மகுடத்தில் ஒரு விருத்தம் எழுதியிருந்தது. அவ்விருத்தத்தின் பின்னிரண்டடிகள் வருமாறு'' என்று எழுதியே மேற்காணும் வரிகளைப்

பாரதியார் கொடுத்துள்ளார். அந்த விருத்தத்தின் முழு வடிவத்தைக் கீழே காணலாம்:

ஓகையால் திரைமுன் னாளில்
உழக்கும்மா வினையும் வாட்டும்
வேகவெவ் வரையி னெல்லை
பிடித்திடும் இமையோர் போற்றத்
தோகைமேல் உலவும் கந்தன்
சுடர்க்கரத் திருக்கும் வெற்றி
வாகையே சுமக்கும் வேலை
வணங்குவ தெமக்கு வேலை

இப் பாடல் செவ்வந்திப் புராணத்துள் முருகன் வணக்கப் பாடலாகச் சைவ எல்லப்ப நாவலரால் இயற்றப்பட்டது.*

புராணம் என்பதனாலேயே பாரதியார் புறக்கணித்து விடுவதில்லை. மேற்குறித்த பாடல் அவர் மனத்தை மிகவும் ஈர்த்தமையால் ஒரு கதையில் எடுத்துக்காட்டியுள்ளார்.

---

* இச் செய்தி முதன்முதலாக இப் பதிப்பாசிரியரால் 1948 ஜனவரியில் 'காலச் சக்கரம்' (கோவை) பொங்கல் மலரில் வெளிப்படுத்தப்பட்டது. பின்னர் 'வித்தகர் வாழ்க்கை' (1961) என்ற தம் கட்டுரைத் தொகுதியுள் இச் செய்தி அடங்கிய கட்டுரை (தமிழ் தந்த பாரதி)யினைச் சேர்த்து வெளியிட்டார்.

- பதிப்பாசிரியர்

# பின்னிணைப்பு - 4

## பாடல்களும் மூல ஆதாரங்களும்

| பதிப்பிலுள்ள வரிசை எண் | பாடல் தலைப்பு | இப்பதிப்புக்கு ஆதாரம் |
|---|---|---|
| 1. | எட்டயபுரம் மன்னருக்கு விண்ணப்பம் | கையெழுத்துப் படி ஜன. 1897 |
| 2. | காந்திமதிநாத பிள்ளை | சி. விசுவநாதையர் கட்டுரை: கலைமகள், டிசம். 1981 |
| 3. | இளசை ஒருபா ஒருபஃது | 'சாந்தி' - அக். 1955 |
| 4. | தனிமை யிரக்கம் | 'விவேகபாநு' - ஜூலை 1904 |
| 5. | சாற்றுக் கவிகள் | வருண சிந்தாமணி 1901 |
| 6. | தாதாபாய் நவுரோஜி | 'சக்ரவர்த்தினி' – செப். 1905 |
| 7. | வங்கமே வாழிய | 'சுதேசமித்திரன்' - 15. 9. 1905 |
| 8. | ஜாதீய கீதம் (மொ.பெ.) | 'சக்ரவர்த்தினி' - நவம். 1905 |
| 9. | மேலோர் புகழ் | ,, - டிசம். 1905 |
| 10. | வேல்ஸ் இளவரசருக்கு...... | 'சுதேசமித்திரன்' - 29 1. 1906 |
| 11. | மஹாமஹோபாத்தியாய...... | 'சக்ரவர்த்தினி' - பிப். 1906 |
| 12. | வந்தே மாதரம் (ஆரியமென்ற) | ,, - ஷை |

| ப.வ. எண் | பாடல் தலைப்பு | இப்பதிப்புக்கு ஆதாரம் | |
|---|---|---|---|
| 13. | என்னே கொடுமை | 'சுதேசமித்திரன்' | - 4. 4. 1906 |
| 14. | எனது தாய்நாட்டின்...... | ,, | - 11. 4. 1906 |
| 15. | அபேதாநந்த சுவாமிகள்மீது... | 'இந்தியா' - 4. 8. 1906 | |
| 16. | யான் | 'சுதேசமித்திரன்' | - 17. 9. 1906 |
| 17. | சந்திரிகை | ,, | - 25. 9. 1906 |
| 18. | ரவிவர்மா மீது.. ... | 'இந்தியா' - 6. 10. 1906 | |
| 19. | சிவாஜி தனது சைனியத்திற்கு... | 'இந்தியா' 17. 11. 1906, 25.11. 1906, 1. 12. 1906, 8. 12. 1906 | |
| 20. | ஸ்ரீசுப்பராம தீக்ஷிதர்... | 'இந்தியா' | 1. 12. 1906 |
| 21. | வந்தே மாதரம் (வந்தே மாதரம்–ஜய) | ,, | 19. 1. 1907 |
| 22. | புதுவருஷம் | ,, | 20. 4. 1907 |
| 23. | வந்தே மாதரம் (வந்தே மாதரம் என்போம்) | ,, | 18. 5. 1907 |
| 24. | நடிப்புச் சுதேசிகள் | ,, | 15. 6. 1907 |
| 25. | நாட்டு வணக்கம் | ஸ்வதேச கீதங்கள் (நூல்) 1907 | |
| 26. | எங்கள் நாடு | ,, | |
| 27. | லாஜபத்ராய் துதி | ,, | |
| 28. | பூபேந்திர விஜயம் | ,, | |
| 29. | லாஜபத்ராய் பிரலாபம் | ,, | |
| 30. | ஸ்வராஜ்யம் வேண்டுமென்ற . ... | ,, | |
| 31. | மாயையைப் பழித்தல் | ,, | |
| 32. | ஆரிய தரிசனம் – ஓர் கனவு | ,, | |

| ப.வ. எண் | பாடல் தலைப்பு | இப்பதிப்புக்கு ஆதாரம் | |
|---|---|---|---|
| 33. | சுதந்திரப் பெருமை | ஸ்வதேச கீதங்கள் (நூல் 1907) | |
| 34. | மேத்தா திலகருக்கு...... | ,, | |
| 35. | மாஜினி...பிரதிக்கினை | ,, | |
| 36. | கலெக்டர் வின்ச் ஸ்ரீ சிதம்பரம்... | ஜன்ம பூமி (நூல்) 1909 | |
| 37. | கலெக்டர் வின்ச்சுக்கு... | ,, | |
| 38. | ஸ்ரீ கிருஷ்ண ஸ்தோத்திரம் | ,, | |
| 39. | குணம் பலவே | 'இந்தியா' 2. 5. 1908 (பாரதி புதையல் II) | |
| 40. | பாரத தேவியின் திருத்தசாங்கம் | 'இந்தியா' | 10. 10. 1908 |
| 41. | எங்கள் தாய் | ,, | 7. 11. 1908 |
| 42. | சுதந்திரம் | ,, | 21. 11. 1908 |
| 43. | ஜய பாரத | ,, | 5. 12. 1908 |
| 44. | ஸ்வதந்திர தாகம் | ,, | 19. 12. 1908 |
| 45. | பாலகங்காதர திலகர் | பாலகங்காதர திலகர் ஜீவிய சரிதம் 1908 | |
| 46. | கோகலே சாமியார் பாடல் | 'இந்தியா' | 2. 1. 1909 |
| 47. | கவிதா தேவி அருள்வேண்டல் | ,, | 16. 1. 1909, 23.1. 1909 |
| 48. | குருகோவிந்த ஸிம்ஹ விஜயம் | ,, | 30. 1. 1909 முதல் 20. 2. 1909 வரை |
| 49. | வெய்ய இடி | ,, | 27. 2. 1909 ஞானரதம் |
| 50. | ஜாதீய கீதம் (புதிய மொ. பெ) | ,, | 13. 3. 1909 |
| 51. | துடிக்கின்ற நெஞ்சம் | ,, | 13. 3. 1909 |
| 52. | திசை | ,, | 3. 4. 1909 |

| ப.வ. எண் | பாடல் தலைப்பு | இப்பதிப்புக்கு ஆதாரம் | |
|---|---|---|---|
| 53. | உனைக் கூறப் பிழை இல்லை | இந்தியா | 8. 5. 1909 |
| 54. | கலியுக முடிவு | ,, | 5. 6. 1909 |
| 55. | கடல் | ,, | 12. 6. 1909 |
| 56. | வெறி கொண்ட தாய் | ,, | 4. 9. 1909 |
| 57. | வந்திலரேல் | ,, | 11. 9. 1909 |
| 58. | சுதந்திர தேவியின் துதி | ஜன்ம பூமி (நூல்) | 1909 |
| 59. | மாதாவின் துவஜம் | ,, | |
| 60. | நிதானக் கட்சியார் கூட்டம் | ,, | |
| 61. | பாரத தேவியின் அடிமை | ,, | |
| 62. | ஸ்வதந்திரப் பள்ளு | ,, | |
| 63. | மஹாசக்திக்கு விண்ணப்பம் (எண்ணிய முடிதல்) | 'கர்ம யோகி' - பிப் | - 1910 |
| 64. | மஹாசக்தி | ,, | |
| 65. | மஹாசக்திக்கு விண்ணப்பம் | ,, | |
| 66. | பாரத மாதா திருப்பள்ளியெழுச்சி | ,, | |
| 67. | தெளிவு | ,, | |
| 68. | மஹாசக்திக்கு விண்ணப் பம் (அறிவிலே தெளிவு) | ,, மார்ச்சு | - 1910 |
| 69. | சாதாரண வருஷத்துத் தூமகேது | ,, | |
| 70. | கனவு | — நூல் (முதற் பதிப்பு: முதற் பாகம்) ஆக. செப். | 1910 |

| ப.வ. எண் | பாடல் தலைப்பு | இப்பதிப்புக்கு ஆதாரம் |
|---|---|---|
| 71. | பாஞ்சாலி சபதம் | நூல் — முதற் பதிப்பு. முதற் பாகம் 1912 இரண்டாம் பாகம் 1919/1924 |
| 72. | ஒளியும் இருளும் | 'ஞானபாநு' - ஜூலை 1913 |
| 73. | மது | ,, ஆக. 1913 |
| 74. | கண்ணன் — என் தாய் | ,, அக். 1913 |
| 75. | யோக சித்தி | ,, டிசம். 1913 |
| 76. | புதிய ஆத்திசூடி | நூல் — (முதற் பதிப்பு 1913.) |
| 77. | வேய்ங்குழல் | 'ஞானபாநு' — ஜன. 1914 |
| 78. | இறவாமை — தாயுமானவர் வாழ்த்து | ,, பிப். 1914 |
| 79. | வெற்றி | மாதா மணிவாசகம் (நூல்) 1914 |
| 80. | அச்சமில்லை | ,, |
| 81. | ஹே, காளி | ,, |
| 82. | சங்கு | ,, |
| 83. | ஸூர்ய தர்சனம் | ,, |
| 84. | வெண்ணிலா | ,, |
| 85. | அறிவே தெய்வம் | ,, |
| 86. | மஹாசக்தி பஞ்சகம் | ,, |
| 87. | மஹாகாளியின் புகழ் | ,, |
| 88. | மஹாசக்தி வாழ்த்து | ,, |
| 89. | சரஸ்வதி தேவியின் புகழ் | ,, |
| 90. | பரசிவ வெள்ளம் | ,, |
| 91. | குயில் | கையெழுத்துப் படி 1914 - 1915 |

| ப.வ. எண் | பாடல் தலைப்பு | இப்பதிப்புக்கு ஆதாரம் | |
|---|---|---|---|
| 92. | பாப்பாப் பாட்டு | 'ஞானபாநு' மார்ச்சு 1915 | |
| 93. | ஞானபாநு - ஸூர்ய ஸ்தோமம் | ,, | ஏப்ரல் 1915 |
| 94. | புயற் காற்று | கையெழுத்துப் படி | 22. 11. 1916 (கதையிலும்) |
| 95. | பிழைத்த தென்னந்தோப்பு | ,, | 22. 11. 1916 |
| 96. | மழை | ,, | 12. 7. 1917 (கதையிலும்) |
| 97. | கண்ணன் - என் தோழன் | நூல் முதற் பதிப்பு 1917 மறு பதிப்பு 1919 | |
| 98. | கண்ணன் - என் தாய் | ,, | |
| 99. | கண்ணன் - என் தந்தை | ,, | |
| 100. | கண்ணன் - என் சேவகன் | ,, | |
| 101. | கண்ணன் - என் அரசன் | ,, | |
| 102. | கண்ணன் - என் சீடன் | ,, | |
| 103. | கண்ணன் - என் சற்குரு | ,, | |
| 104. | கண்ணம்மா - என்குழந்தை | ,, | |
| 105. | கண்ணன் - என் விளையாட்டுப் பிள்ளை | ,, | |
| 106. | கண்ணன் - என் காதலன் | ,, | |
| 107. | கண்ணன் - என் காதலன் (உறக்கமும் விழிப்பும்) | ,, | |
| 108. | கண்ணன் - என் காதலன் (காட்டிலே தேடுதல்) | ,, | |
| 109. | கண்ணன் - என் காதலன் (பாங்கியைத் தூது விடுத்தல்) | ,, | |

| ப.வ. எண் | பாடல் தலைப்பு | இப்பதிப்புக்கு ஆதாரம் |
|---|---|---|
| 110. | கண்ணன் - என் காதலன் (பிரிவாற்றாமை) | நூல் முதற் பதிப்பு 1917 மறுபதிப்பு 1919 |
| 111. | கண்ணன் - என் காந்தன் | ,, |
| 112. | கண்ணம்மா - என் காதலி (காட்சி வியப்பு) | ,, |
| 113. | கண்ணம்மா - என் காதலி (பின்னே வந்து நின்று கண்மறைத்தல்) | ,, |
| 114 | கண்ணம்மா - என் காதலி (முகத்திரை களைதல்) | ,, |
| 115. | கண்ணம்மா - என் காதலி (நாணிக் கண் புதைத்தல்) | ,, |
| 116. | கண்ணம்மா - என் காதலி (குறிப்பிடம் தவறியது) | ,, ,, |
| 117. | கண்ணம்மா - என் காதலி (யோகம்) | ,, |
| 118. | கண்ணன் - என் ஆண்டான் | ,, |
| 119. | கண்ணன் - எனது குல தெய்வம் | ,, |
| 120. | முரசு | நூல் முதற் பதிப்பு 1917 |
| 121. | புதிய ருஷ்யா | பாட்டுக் கொத்து - கையெழுத்துப் படி |
| 122. | விநாயகர் ஸ்தோத்ரம் (விநாயகர் நான் மணி மாலை) | நூல் - மறு பதிப்பு 1930 (பி. இ. 1 காண்க) |

| ப.வ. எண் | பாடல் தலைப்பு | இப்பதிப்புக்கு ஆதாரம் |
|---|---|---|
| 123. | முருகன் டாட்டு (முருகா முருகா) | சுதேச கீதங்கள் (நூல்) முதற் பதிப்பு 1922 |
| 124. | ஸ்ரீ எட்டயபுரம் மகராஜா...சீட்டுக்கவிகள் I - | கையெழுத்துப் படி 2. 5. 1919 |
| 125. | எட்டயபுரம் மகராஜா மீது சீட்டுக்கவிகள் II - | ,, 3. 5. 1919 |
| 126. | செந்தமிழ் நாடு | நாட்டுப் பாட்டு (நூல்) ஜூன் 1919 |
| 127. | பாரத தேசம் | ,, |
| 128. | தமிழ் | ,, |
| 129. | தமிழ்த்தாய் | ,, |
| 130. | தொழில் | ,, |
| 131. | செட்டி மக்கள் குலவிளக்கு | திரு. வை. சு. ச. கடிதம் 31. 10. 1919 |
| 132. | காரைக்குடி ஹிந்து மதாபிமான...... | கையெழுத்துப் படி 9.11.1919 |
| 133. | காலனுக்குரைத்தல் | 'சுதேசமித்திரன்' ஆண்டுமலர் டிசம். 1919 |
| 134. | அல்லா | ,, 20.6.1920 |
| 135. | பாரத ஸமுதாயம் | கையெழுத்துப் படி 1920 |
| 136. | இந்தியாவின் அழைப்பு | 'சுதேசமித்திரன்' 19.7.1921 |
| 137. | தீ-அக்நிஸ்தோமம் | பாடல் திரட்டு - கையெழுத்துப் படி |

| ப.வ. எண் | பாடல் தலைப்பு | இப்பதிப்புக்கு ஆதாரம் |
|---|---|---|
| 138. | லக்ஷ்மீ பிரார்த்தனை - திருவேட்கை | பாடல் திரட்டு - கைஎழுத்துப் படி. |
| 139. | திருக் காதல் | ,, |
| 140. | திருமகள் | ,, |
| 141. | காணிநிலம் | ,, |
| 142. | புதுமைப் பெண் | ,, |
| 143. | பகைவனுக் கருள்வாய் | ,, |
| 144. | லக்ஷ்மிதேவி - சரண்புகுதல் | ,, |
| 145. | பெண்மை | ,, |
| 146. | கேட்பன | ,, |
| 147. | சக்திக் கூத்து | ,, |
| 148. | விடுதலை | ,, |
| 149. | சொல் | ,, |
| 150. | நிலாவும் வான்மீனும் காற்றும் | ,, |
| 151. | பராசக்தி | ,, |
| 152. | அழகுத், தெய்வம் | ,, |
| 153. | ஆத்ம ஜயம் | ,, |
| 154. | மூன்று காதல் | ,, |
| 155. | பொய்யோ மெய்யோ | ,, |
| 156. | உப்பளம் கோயிலில்... முத்து மாரி | ,, |
| 157. | வேண்டும் | ,, |
| 158. | பக்தி | ,, |

| ப.வ. எண் | பாடல் தலைப்பு | இப்பதிப்புக்கு ஆதாரம் |
|---|---|---|
| 159. | முருகன் பாட்டு (வீரத் திருவிழி) | பாடல் திரட்டு - கையெழுத்துப் படி |
| 160. | நெஞ்சொடு சொல்வது | ,, |
| 161. | சிவசக்தி புகழ் | சக்திப் பாட்டு - கையெழுத்துப் படி |
| 162. | சக்தி திருப்புகழ் | ,, |
| 163. | சக்திக்கு ஆத்ம ஸமர்ப் பணம் | ,, |
| 164. | வையமுழுதும் | ,, |
| 165. | மகாசக்தி வெண்பா | ,, |
| 166. | சக்தி விளக்கம் | ,, |
| 167. | வேள்விப் பாட்டு | ,, |
| 168. | போற்றியகவல் | ,, |
| 169. | சந்திரமதிப் பாட்டு | பாட்டுக் கொத்து - கையெழுத்துப் படி |
| 170. | வேலன் பாட்டு | ,, |
| 171. | அந்திப் பொழுது (காதற் பாட்டு) | ,, |
| 172. | காற்று வெளி (காதற் பாட்டு) | ,, |
| 173. | முத்துமாரி | ,, |
| 174. | ஜயமுண்டு | ,, |
| 175. | ஜயபேரிகை | ,, |
| 176. | கிளித் தூது | ,, |
| 177. | வண்டிக்காரன் பாட்டு | ,, |

| ப.வ. எண் | பாடல் தலைப்பு | இப்பதிப்புக்கு ஆதாரம் |
|---|---|---|
| 178. | கற்பனையூர் | பாட்டுக் கொத்து - கையெழுத்துப் படி |
| 179. | காளிப்பாட்டு | ,, |
| 180. | ஓம் சக்தி | ,, |
| 181. | ஊழிக் கூத்து | ,, |
| 182. | ஸோம தேவன் புகழ் | ,, |
| 183. | ஞாயிறு - ஸூர்ய ஸ்துதி | ,, |
| 184. | கிளிப் பாட்டு | ,, |
| 185. | கோவிந்தன் பாட்டு | ,, |
| 186. | விடுதலைப் பாட்டுக்கள் | ,, |
| 187. | அம்மாக்கண்ணு பாட்டு | ,, |
| 188. | கண்ணம்மா - அங்க வர்ணனை | ,, |
| 189. | விடுதலை விடுதலை விடுதலை | ,, |
| 190. | வள்ளிப் பாட்டு | ,, |
| 191. | சாகாவரம் | ,, |
| 192. | செல்லம்மா பாட்டு | ,, |
| 193. | பூலோக குமாரி | ,, |
| 194. | வாழ்க திலகன் நாமம் | ,, |
| 195. | எந்த நேரமும் | ,, |
| 196. | ஸ்ரீ செல்லம்மா பாட்டு | ,, |
| 197. | காளிப் பாட்டு | ,, |
| 198. | காலைப் பொழுது | ,, |

| ப.வ. எண் | பாடல் தலைப்பு | இப்பதிப்புக்கு ஆதாரம் |
|---|---|---|
| 199. | பாரத நாடு | சுதேச கீதங்கள் – முதற்பாகம் (நூல்) 1922 |
| 200. | நவராத்திரிப்பாட்டு (உஜ்ஜயினீ) | ,, |
| 201. | நவராத்திரிப் பாட்டு (மாதா பராசக்தி) | ,, |
| 202. | ஸரஸ்வதி ஸ்தோத்திரம் | ,, |
| 203. | ஸ்ரீ கிருஷ்ணன்மீது ஸ்துதி | ,, |
| 204. | யேசு கிறிஸ்து | ,, |
| 205. | பெல்ஜியம் நாட்டிற்கு வாழ்த்து | ,, |
| 206. | இறைவனை வேண்டுதல் | ,, |
| 207. | மனைத்தலைவிக்கு வாழ்த்து | ,, |
| 208. | கடமை | ,, |
| 209. | மனப்பெண் | ,, |
| 210. | மனமே | ,, |
| 211. | விடுதலை வெண்பா | ,, |
| 212. | விடுதலை - சிட்டுக்குருவி | ,, |
| 213. | பெண்கள் விடுதலைக்கும்மி | ,, |
| 214. | பாரத மாதா | சுதேச கீதங்கள் - இரண்டாம் பாகம் (நூல்) 1922 |
| 215. | பாரத மாதா நவரத்ந மாலை | ,, |
| 216. | மகாத்மா காந்தி பஞ்சகம் | ,, |

| ப.வ. எண் | பாடல் தலைப்பு | இப்பதிப்புக்கு ஆதாரம் |
|---|---|---|
| 217. | நாட்டுக் கல்வி | சுதேச கீதங்கள் - இரண்டாம் பாகம் (நூல்) 1922 |
| 218. | தமிழ்மொழி வாழ்த்து | ,, |
| 219. | பிஜித்தீவிலே ஹிந்து ஸ்திரீகள் | ,, |
| 220. | சித்தாந்தசாமி கோயில் | ,, |
| 221. | கண்ணன் பிறப்பு | ,, |
| 222. | கண்ணன் வரவு | ,, |
| 223. | கண்ணன் துதி | ,, |
| 224. | ஆறு துணை | ,, |
| 225. | மனத்திற்கு | ,, |
| 226. | நிகழ்கின்ற ஹிந்துஸ் தானமும்..... | ,, |
| 227. | அக்னி பகவான் - யாகப்பாட்டு | ,, |
| 228. | சக்தி | ,, |
| 229. | சமர்ப்பணம் | ,, |
| 230. | நந்தலாலா | ,, |
| 231. | மறவன் பாட்டு | ,, |
| 232. | மனத்திற்குக் கட்டளை | ,, |
| 233. | அக்கினிக் குஞ்சு | ,, |
| 234. | கோமதி மஹிமை | ,, |
| 235. | பாரதி அறுபத்தாறு | நூல் - முதற் பதிப்பு 1923 |
| 236. | அகவிழியிற் காண்பது | கதாமாலிகா - நூல் - முதற்பதிப்பு 1920 (பாரதி புதையல் I) |

| ப.வ. எண் | பாடல் தலைப்பு | இப்பதிப்புக்கு ஆதாரம் |
|---|---|---|
| 237. | ஆனந்தம் | நவதந்திரக் கதைகள்– நூல் 1926 |
| 238. | பண்டாரப் பாட்டு | கதைக்கொத்து - நூல் 1937 |
| 239. | நிவேதிதா தேவி | ஸ்வசரிதையும் பிற பாடல் களும் – நூல் 1937 |
| 240. | நான் | பாரதி நூல்கள். காவியங்கள் – நூல் – 1937 |
| 241. | இருதலைக் கொள்ளி யினிடையே | ,, |
| 242. | புதிய கோணங்கி | ,, |
| 243. | பெண் விடுதலை | ,, |
| 244. | எங்கள் மதம் | லோகோபகாரி – தீபாவளி மலர் 1947 |
| 245. | வ.உ.சிக்கு வாழ்த்து | வ. உ. சிதம்பரம் பிள்ளை சரித்திரம் (பரலி) |
| 246. | ராதைப் பாட்டு | பாரதிநூல்கள் - காவியங்கள் |
| 247. | சொன்னசொல் | |
| 248. | மயில்வீரன் | சி. விசுவநாதையர் (ஆங்கில) நூல் |
| 249. | செல்வத்துட் பிறந் தனமா | ,, |
| 250. | உலகை நோக்கி ஒரு வினா | ,, |
| 251. | காதலும் துறவும் | 'கலைமகள்' - தீபாவளி மலர் 1966 |
| 252. | அபிமன்யு இறந்தபோது | பாரதி புதையல் - 3 |

| ப.வ. எண் | பாடல் தலைப்பு | இப்பதிப்புக்கு ஆதாரம் |
|---|---|---|
| 253. | அரவிந்தப் பாம்பு | கவிக்குயில் பாரதியார் : சுத்தானந்த பாரதியார் |
| 254. | பெரியோர் பெருமை | 'கல்கி' 15.9.1968 (கு. அழகிரிசாமி) |
| 255. | இந்தத் தெய்வம் | பாரதி நினைவுகள் - யதுகிரியம்மாள் |
| 256. | விஷ்ணு சரணம் | ஆனந்த விகடன் - தீபாவளி மலர் 1937 |
| 257. | கிருஷ்ண, ராதே | சகுந்தலா பாரதி: 'என் தந்தை' |
| 258. | தலைவர்கள் வாழ்க | ,, |
| 259. | பிறந்தேன் | பாரதி புதையல் பெருந்திரட்டு |
| 260. | பிரெஞ்சு நாட்டுப் பாடல் | பாரதி புதையல் I |
| 261. | குருவிப் பாட்டு | ,, |
| 262. | மணிமுத்து நாவலர் | ,, |
| 263. | தொழில் முறை | 'தாமரை' செப்., 1973 (ரகுநாதன்) |
| 264. | ஸ்ரீகபிலர் அகவல் | பாரதி கையெழுத்துப் படி |
| 265. | யாவரும் வருவீரே | பாரதி புதையல் II |
| 266. | மெலிவாகி நிற்றல் அழகாமோ | ,, |
| 267. | செந்திரு தழுவிய பெருமாளே | ,, |
| 268. | நீசர் ஓட வருவாய் | ,, |

## ஒருவிளக்கம்

*கவிதைகள் தோன்றிய கால அடிப்படையில் இதுகாறும் ஒரு பதிப்பும் இன்மையால், அந்த முறையில் பதிப்பிக்கத் தமிழ்ப் பல்கலைக் கழகம் விரும்பியது. இவ் விருப்பம் முழு வெற்றி பெற்றதாகக் கூற இயலாது. ஆயினும், கையெழுத்துப் படிகள், முதற் பதிப்புகள், ஆதாரம் தரக்கூடிய பிற செய்திகள் போன்ற ஆவணங்களைக் கொண்டு இயன்றவரையில் பாடல்கள் வரிசைப்படுத்தப்பட்டன. இத்துறையில் நெடிய ஆராய்ச்சி இனிமேலும் செய்யவேண்டியுள்ளது. அத்தகைய ஆராய்ச்சி போதிய தரவுகள் கிடைப்பதின்மையால் கடுமையானது; ஆயினும், பயன் தருவது. இப்பதிப்பு அம்முயற்சிக்கு ஒரு முன்னோடி.

*அந்தந்தப் பாடல்கள் பற்றிய விவரங்கள், கிடைத்தவரையில், அடிக்குறிப்பிலும் பின்னிணைப்புகளிலும் தரப்பட்டுள்ளன. இப்பட்டியலுக்கு அங்கங்குள்ள விவரங்களும் தேவை.

# பின்னிணைப்பு - 5

## இதழ்களில் வெளியான பாரதி பாடல்கள் விவரம்:

**விவேகபாநு**

*தனிமை யிரக்கம் ஜூலை - 1904*

**சக்ரவர்த்தினி**

1. தாதாபாய் நவுரோஜி (1905)
2. வந்தேமாதரம் (ஜாதீய கீதம் - மூலமும் மொழிபெயர்ப்பும்) (நவம் - 1905)
3. மஹா மஹோபாத்தியாய சாமிநாதய்யர். (பிப். 1906)
4. வந்தேமாதரம். (பிப். 1906)

குறிப்பு:

ஜாதீய கீதம் - மூலமும் மொழிபெயர்ப்பும் சுதேசமித்திரன், இந்தியா – எனும் இதழ்களில் மறுபிரசுரம் ஆகியுள்ளது. ‘வந்தேமாதரம்’ பாடலானது சுதேசமித்திரன் இதழில் மறுபிரசுரம் ஆகியுள்ளது.

**சுதேசமித்திரன்**

1. வங்கமே வாழிய (15-9-1905)

2. வேல்ஸ் இளவரசருக்குப் பரத கண்டத்தாய் நல்வரவு கூறுதல் (29. 1. 1906)

3. என்னே கொடுமை (4. 4. 1906)

4. எனது தாய்நாட்டின் முன்னாட் பெருமையும் இந்நாட் சிறுமையும் (11. 4. 1906)

5. யான் (17. 9. 1906)

6. சந்திரிகை (25. 9. 1906)

7. ஸ்ரீசுப்பராம தீக்ஷிதர் காலஞ்சென்றதைப் பற்றிய இரங்கற் பாக்கள் (26. 11. 1906)

8. புயற்காற்று

9. மழை

10. காலனுக் குரைத்தல் (டிசம். 1919)

11. இஸ்லாம் மார்க்கத்தின் மஹிமை (20. 6. 1920)

12. இந்தியாவின் அழைப்பு (19. 7. 1921)

குறிப்பு:- "ஸ்ரீசுப்பராமதீக்ஷிதர் காலஞ்சென்றதைப் பற்றிய இரங்கற் பாக்கள்" என்ற பாடல் இந்தியா இதழில் மறுபிரசுரம் ஆகியுள்ளது.

## இந்தியா

1. அபேதாநந்த ஸ்வாமிகளின்மீது ஸ்தோத்திரக் கவிகள் (4—9—1906)

2. ரவிவர்மா மீது செய்யுள் (6—10—1906)

3. சிவாஜி தனது சைநியத்தாருக்குக் கூறியது 17, 25—11—1906 1, 8—12—1906

4. ஸ்ரீ சுப்பராம தீக்ஷிதர் காலஞ்சென்றதைப் பற்றிய இரங்கற்பாக்கள் – † (1—12—1906) - (மறுவெளியீடு)
5. வந்தே மாதரம் (19—1-1907)
6. புது வருஷம் (20—4—1907)
7. வந்தே மாதரம் (18—5—1907)
8. கிளிக்கண்ணிகள் - நடிப்புச் சுதேசிகள் (15—6—1907
9. குணம் பலவே* (2—5—1908)
10. பாரததேவியின் திருத்தசாங்கம் (10—10—1908)
11. எங்கள் தாய் (7—11—1908)
12. சுதந்திரம்* (21—11—1908)
13. ஜயபாரத (5—12—1908)
14. ஸ்வதந்திர தாகம் (19—12—1908)
15. கோகலே சாமியார் பாடல் (2—1—1909)
16. கவிதாதேவி - அருள்வேண்டல் (16, 23—1—1909)
17. குரு கோவிந்த ஸிம்ஹ விஜயம் (30—1—1909 முதல் 20—2—1909 வரை)
18. வெய்யஇடி* (27—2—1909)
19. ஜாதீயகீதம் - புதியமொழி பெயர்ப்பு † (13—3—1909)
20. துடிக்கின்ற நெஞ்சம் (13—3—1909)

---

குறிப்பு:– * இக்குறியிட்ட பாடல் தலைப்புகள் இப்பதிப்பில் தரப்பட்டவையாகும்.

† (அ) ஸ்ரீ சுப்பராமதீக்ஷிதர் காலம் சென்றதைப் பற்றிய இரங்கற்பாக்கள் 'சுதேசமித்திரன்' இதழில் 1-12-1906 இல் வெளிவந்துள்ளன.

(ஆ) ஜாதீய கீதம் - புதிய மொழிபெயர்ப்பு "கர்மயோகி" மாத இதழில் பிப்ரவரி 1910இல் வெளிவந்துள்ளது.

21. திசை (3—4—1909)

22. அன்னாய் நீ செய்வதென்னே? * (8—5—1909)

23. கலியுக முடிவு (5—6—1909)

24. கடல் (12—6—1909)

25. வெறி கொண்ட தாய் (4—9—1909)

26. வந்திலரேல் * (11—9—1909)

**கர்மயோகி**

1. மஹாசக்திக்கு விண்ணப்பம் (பிப். 1910)

2. மஹாசக்தி (பிப். 1910)

3. மஹாசக்திக்கு விண்ணப்பம் (பிப். 1910)

4. பாரதமாதா திருப்பள்ளி யெழுச்சி (பிப். 1910)

5. தெளிவு (பிப் 1910)

6. மஹாசக்திக்கு விண்ணப்பம் (மார்ச், 1910)

7. சாதாரண வருஷத்து தூமகேது (மார்ச், 1910)

குறிப்பு:- ''மஹாசக்திக்கு விண்ணப்பம்'' என்ற தலைப்பில் இதழின் முதல் பக்கத்தில் பாடல்கள் தொடர்ந்து இடம் பெற்றுள்ளன.

1910 பிப்ரவரி இதழில் செய்யுட்பகுதி என்ற தொகுப்பில் மஹாசக்தி, மஹாசக்திக்கு விண்ணப் பம், பாரதமாதா திருப்பள்ளி யெழுச்சி தெளிவு ஆகிய பாடல்கள் இடம் பெற்றுள்ளன.

---

* இக்குறியிட்ட பாடல் தலைப்புகள் இப்பதிப்பில் தரப்பட்டவையாகும்.

**ஞானபாநு**

1. ஒளியும் இருளும் (ஜூலை 1913)
2. மது (ஆக. 1913)
3. கண்ணன் - என் தாய் (அக். 1913)
4. யோகசித்தி (டிசம். 1913)
5. வேய்ங் குழல் (ஜன. 1914)
6. இறவாமை - தாயுமானவர் வாழ்த்து (பிப். 1914)
7. பாப்பா பாட்டு (மார்ச். 1915)
8. ஞானபாநு - ஸூர்ய ஸ்தோமம் (ஏப். 1915)

## பின்னிணைப்பு - 6 - அ

### பாரதியார் காலத்தில் இரு முறைகள் வெளியிடப்பட்ட பாடல்கள் விவரம்

(நூல்களில் மட்டும்)

| வரிசை எண். (1) | கவிதைப் பெயர் தலைப்பு (2) | நூல் தொகுதிகளின் பெயர் (3) |
|---|---|---|
| 1. | வந்தேமாதரம் (வந்தேமாதர மென்போம்-எங்கள்) | ஸ்வதேச கீதங்கள் 1907; 1908, நாட்டுப்பாட்டு 1919. |
| 2. | நாட்டு வணக்கம் | ஸ்வதேச கீதங்கள் 1907; 1908 நாட்டுப்பாட்டு 1919. |
| 3. | எங்கள் நாடு | ஸ்வதேச கீதங்கள் 1907; 1908, நாட்டுப்பாட்டு 1919. |
| 4. | புதுவருஷம் | ஸ்வதேச கீதங்கள் 1908; நாட்டுப்பாட்டு 1919. |
| 5. | ஸ்வராஜ்யம் வேண்டுமென்ற பாரதவாஸிக்கு ஆங்கில உத்தியோகஸ்தன் கூறுவது | ஸ்வதேச கீதங்கள் 1908, ஜன்மபூமி 1909. |
| 6. | சுதந்திரப் பெருமை | ஸ்வதேச கீதங்கள் 1908; ஜன்மபூமி 1909. |

| (1) | (2) | (3) |
|---|---|---|
| 7. | வந்தேமாதரம் (வந்தேமாதரம்-ஜய-(வந்தேமாதரம்) | ஸ்வதேச கீதங்கள் 1908; நாட்டுப்பாட்டு 1919. |
| 8. | ஜாதீய கீதம்-வந்தேமாதரம் (மொழிபெயர்ப்பு) | ஜன்மபூமி 1909; நாட்டுப் பாட்டு 1919 |
| 9. | சுதந்திரதேவியின் துதி | ஜன்மபூமி 1909; நாட்டுப் பாட்டு 1919. |
| 10. | எங்கள் தாய் | ஜன்மபூமி 1909; நாட்டுப் பாட்டு 1919. |
| 11. | பாரததேவியின் திருத்தசாங்கம் | ஜன்மபூமி 1909; நாட்டுப்பாட்டு 1919 |
| 12. | ஜய பாரத | ஜன்மபூமி 1909; நாட்டுப்பாட்டு 1919. |
| 13. | ஸ்வதந்திர தாகம் (சுதந்திர தாகம்) | ஜன்மபூமி 1909; நாட்டுப்பாட்டு 1919. |
| 14. | மாதாவின் துவஜம் | ஜன்மபூமி 1909; நாட்டுப் பாட்டு 1919. |
| 15. | பாரதமாதா திருப்பள்ளி யெழுச்சி | மாதாமணிவாசகம் 1914, நாட்டுப் பாட்டு 1919. |
| 16. | ஜாதீய கீதம்–வந்தேமாதரம் (புதிய மொழிபெயர்ப்பு) | மாதாமணிவாசகம் 1914; நாட்டுப்பாட்டு 1919. |

# பின்னிணைப்பு - 6 - ஆ

## புனைபெயர்களில் எழுதிய பாடல்கள்

| பாடல் தலைப்பு | புனைபெயர் |
| --- | --- |
| அபேதாநந்த ஸ்வாமி களின்மீது ஸ்தோத்திரக் கவிகள் ('இந்தியா' 4-9-1906) | 'ஓர் வேதாந்தி' |
| மது (ஞானபாநு - ஆக. 1913) | 'நித்திய தீரர் என்னும் நமது நேயர்' |
| யோக சித்தி (ஞானபாநு- டிசம்பர் 1913) | 'ஓர் உத்தம தேசாபிமானி' |

# பின்னிணைப்பு - 6 - இ

## பாரதியார் மொழிபெயர்த்த பாடல்கள்

| பாடல் தலைப்பு | | மூல ஆசிரியர் |
|---|---|---|
| 1. மேலோர் புகழ் | ..., | லாங்ஃபெலோ |
| 2. வந்தே மாதரம் | ... | பங்கிம் சந்திரபாபு |
| 3. சுதந்திரம் | ... | பைரன் |
| 4. கலியுக முடிவு | ... | மிஸஸ் ஃப்ளோரா அன்னி ஸ்டீல் |
| 5. கடல் | ... | அரவிந்தர் |
| 6. இந்தியாவின் அழைப்பு | ... | ஸ்ரீமதி மாட் ரால்ஸ்டன் ஷர்மன் |
| 7. நாட்டுக் கல்வி | ... | ரவீந்திரநாத தாகூர் |
| 8. கற்பனையூர் | ... | ஜான் ஸ்கார் |
| 9. பெண் விடுதலை | ... | சியூ சின் |

# பின்னிணைப்பு - 6 - ஈ

## பாரதியார் தம் கவிதைத் தொகுதிகளுக்குச் சூட்டிய பெயர்கள்

1. ஸ்வதேச கீதங்கள்
2. ஜன்ம பூமி
3. கனவு
4. பாஞ்சாலி சபதம்
5. மாதா மணிவாசகம்
6. புதிய ஆத்திசூடி
7. கண்ணன் பாட்டு
8. நாட்டுப் பாட்டு
9. பாப்பா பாட்டு
10. முரசு
11. குயில்
12. பாடல் திரட்டு
13. சக்திப் பாட்டு
14. பாட்டுக் கொத்து

15. ஸ்தோத்ரப் பாட்டுக்கள்

16. விநாயகர் ஸ்தோத்ரம்

குறிப்பு:

முதல் பத்துக் கவிதைத்தொகுதிகளும் பாரதியார் வாழ்ந்த காலத்திலேயே பிரசுரமாகியுள்ளன. பாரதியார் மறைந்த பின்னர், மகாகவியின் நூல்களை வெளியிடும் பெரும் பணியில் ஈடுபட்ட "பாரதி ஆச்ரமம்" 1922இல் 'சுதேச கீதங்கள்' என்னும் தலைப்பில் ஸ்வதேச கீதங்கள், ஜன்ம பூமி, மாதா மணிவாசகம், நாட்டுப் பாட்டு, பாடல் திரட்டு, சக்திப் பாட்டு, பாட்டுக்கொத்து, ஸ்தோத்ரப் பாட்டுக்கள் - ஆகிய இவை போன்ற பிற கவிதைத் தொகுதிகளில் இடம் பெற்றிருந்த பாடல்களை வெளியிட்டது. தவிர, சுதேசகீதங்கள் - முதலிரு தொகுதிகளாக மட்டுமே வெளிவந்தன. 1923க்குப் பின் பாரதி ஆச்ரமம் செயல்படவில்லை.

இதன் பின்னர்ப் பாரதியின் படைப்புகளை அச்சேற்றி வெளியிடுவதற் கென்றே "பாரதி பிரசுராலயம்" 1924இல் தோன்றியது. பாரதியின் நூல்களை வெளியிடும் பொறுப்பைப் பாரதி பிரசுராலயம் ஏற்றுக்கொண்டது முதல், முறையாகப் பாரதியின் படைப்புகள் வெளிவரத் தொடங்கின.

1911ஆம் வருடத்தில் "கனவு" நூல் அன்றைய பிரிட்டிஷ் அரசால் தடைசெய்யப் பெற்றதையொட்டி, "ஸ்வசரிதை" என்ற தலைப்பிட்டு, வேறு சில கவிதைகளையும் சேர்த்து 1937இல் பாரதி பிரசுராலயம் வெளியிட்டது. மற்றும், பரலி சு. நெல்லையப்பர் அவர்கள் பதிப்பித்த கண்ணன் பாட்டு, பாப்பாப் பாட்டு, முரசு ஆகிய நூல்களைப் பெயர் மாற்றம் செய்யாமல் வெளியிட்டது. அதேபோல், பாரதியாரே புதுச்சேரியில் பதிப்பித்து வெளியிட்ட பாஞ்சாலி சபதம் (முதல் பாகம்) நூலுடன், இரண்டாம் பாகத்தையும் சேர்த்துப் பிரசுரித்தது; புதிய ஆத்தி சூடி நூல் தலைப்பையும் மாற்றவில்லை.

குயில் என்பது குயில்பாட்டு என்ற பெயருடன் 1923இல் பதிப்பிக்கப்பெற்றது. மறு அச்சுக்களில் 'குயில்' என்றே தலைப் பிடப்பட்டது. விநாயகர் ஸ்தோத்ரம் என்பது விநாயகர் நான் மணி மாலை என்ற தலைப்புடன் 1929இல் பிரசுரமாகியது.

அதேபோல், ஸ்வதேச கீதங்கள், ஜன்மபூமி, மாதா மணி வாசகம், நாட்டுப் பாட்டு, பாடல் திரட்டு, சக்திப் பாட்டு, பாட்டுக் கொத்து, ஸ்தோத்ரப் பாட்டுக்கள், சுதேசகீதங்கள்- ஆகிய இவை போன்ற முதல் பதிப்பு நூல்களும், கவிதைத் தொகுதிகளும் வகைப்படுத்தப்பட்ட வரிசைகளில் தேசீய கீதங் கள, தோத்திரப் பாடல்கள், வேதாந்தப் பாடல்கள் - என்பன போன்ற பல்வேறு தலைப்புப் பெயர்களால் பிரசுரமாயின.

1930இல் முதன்முதலாகச் சிறு சிறு நூல்களாக வெளியிடப் பெற்றிருந்த கவிதைத் தொகுதிகளை ஒன்றாக இணைத்து 'பாரதி நூல்கள் -காவியங்கள்' என்ற தலைப்பெயரால் பாரதி பிரசுராலயம் வெளியிட்டது. 1937இல் இதன் மறுபதிப்பில் அந் நாள்வரை நூல்வடிவம் பெறாமல் இருந்த பாடல்கள் பலவும் சேர்க்கப்பட்டிருந்தன.

1949இல் பாரதி நூல்களின் பதிப்புரிமையைப் பாரதி பிர சுராலயத்திடமிருந்து பெற்றுக் கொண்ட சென்னை அரசினர் 1954இல் கவிதைத் தொகுப்பைப் 'பாரதி நூல்கள், கவிதை' என்ற பெயரில் வெளியிட்டனர்.

## பின்னிணைப்பு - 6 - உ

### கையெழுத்து வடிவில் இரு படிகள் உள்ள பாடல்கள் விவரம்

| வ. எண். | கவிதைப் பெயர் தலைப்பு | கவிதைத் தொகுதி | கவிதைத் தொகுதி |
|---|---|---|---|
| 1. | பெண்மை | பாடல் திரட்டு | பாட்டுக் கொத்து |
| 2. | கேட்பன | பாடல் திரட்டு | பாட்டுக் கொத்து |
| 3. | விடுதலை (வேண்டுமடி யெப்போதும் விடுதலை) | பாடல் திரட்டு | பாட்டுக் கொத்து |
| 4. | சொல் | பாடல் திரட்டு | பாட்டுக் கொத்து |
| 5. | அழகுத் தெய்வம் | பாடல் திரட்டு | பாட்டுக் கொத்து |
| 6. | மூன்று காதல் | பாடல் திரட்டு | பாட்டுக் கொத்து |

| வ. எண். | கவிதைப் பெயர் தலைப்பு | கவிதைத் தொகுதி | கவிதைத் தொகுதி |
|---|---|---|---|
| 7. | வேண்டும் - வேண்டுவன | பாடல் திரட்டு | பாட்டுக் கொத்து |
| 8. | பக்தி - பக்தியினாலே | பாடல் திரட்டு | பாட்டுக் கொத்து |
| 9. | வையமுழுதும்* | சக்திப் பாட்டு | பாட்டுக் கொத்து |
| 10. | வேள்விப் பாட்டு | சக்திப் பாட்டு | பாட்டுக் கொத்து |
| 11. | அந்திப் பொழுது | பாட்டுக் கொத்து | ...... |
| 12. | கற்பனையூர் | பாட்டுக் கொத்து | ...... |

..............................................

பாடல் திரட்டு, பாட்டுக் கொத்து இரண்டும் பாரதியாரே தொகுத்தெழுதி வைத்திருந்த தொகுதிகளின் பெயர்; பெயர்களும் அவர் தந்தனவே.

"வையமுழுதும்" என்னும் தலைப்புப் பெயர்கொண்ட கவிதையின் 5, 6, 7 - ஆகிய மூன்று கண்ணிகள் 'சக்திப்பாட்டு'த் தொகுதியிலும், முதல் ஆறு கண்ணிகள் 'பாட்டுக் கொத்து'த் தொகுதியிலும் காணப்படுகின்றன.

......இவ்வாறு புள்ளியிட்டதற்கு விவரம் தர இயலவில்லை. நூல் தலைப்பிடப்படாத தனிப்பிரதியில் பாடல்கள் எழுதப்பட்டுள்ளன.

"வேண்டும்" என்பது "பாடல் திரட்டு"த் தொகுதியில் எழுதப்பட்டுள்ள பாடல் தலைப்பு; "வேண்டுவன" என்பது "பாட்டுக் கொத்து"த் தொகுதியில் எழுதப்பட்டுள்ள தலைப்பு. "பக்தி" என்று 'பாடல் திரட்'டிலும் "பக்தியினாலே" என்று 'பாட்டுக் கொத்'திலும் பாடல் தலைப்புக் காணப்படுகிறது.

# பின்னிணைப்பு - 7

## சேர்க்கத் தக்கவையே.......?

பாரதியார் கவிஞர்மட்டு மல்லர்; கட்டுரைகளும் கதைகளும் எழுதியிருக்கிறார் என்பது யாவரும் அறிந்ததே.

அவர் எழுதிய கட்டுரைகளிலும் கதைகளிலும் பல பாடல்கள் காணப்படுகின்றன. அவற்றுள் பெரும்பாலானவை பிறருடைய படைப்புகளாம். இடத்துக்கு ஏற்றவாறு பாரதியாரும் தாமே சில பாடல்களைப் படைத்துக் கட்டுரைகளிலும் கதைகளிலும் இடம் பெறச் செய்துள்ளார். அத்தகைய பாடல்கள் பல இந்தப் பதிப்பில் உரிய இடங்களில் இருப்பதைக் காணலாம். அவற்றுக்கு உரிய கட்டுரை கதைகளைப் பற்றிய விளக்கக் குறிப்புகளும் ஆங்காங்கே தரப்பெற்றுள்ளன.

சில காரணங்களால் உள்ளே இடம் பெறாமல் எஞ்சிவிட்ட சிலவற்றை இங்கே குறிப்பிட விரும்புகிறோம்.

'இஸ்லாம் மார்க்கத்தின் மஹிமை' என்பது பாரதியின் கட்டுரைகளில் ஒன்று. 'அல்லா அல்லா அல்லா' என்ற பாரதி இயற்றிய இசைப்பாடல், தாயுமானவரின் ஒரு கண்ணி ஆகியவற்றோடு பின்வரும் பாடல் வரிகளும் (ஒரு கண்ணிபோல) அந்தக் கட்டுரையில் காணப்படுகின்றன.

எடுத்த காரியம் யாவினும் வெற்றி
எங்கும் வெற்றி எதனிலும் வெற்றி

விடுத்த வாய்மொழிக் கெங்கணும் வெற்றி
வேண்டு முன்னர் அருளினர் அல்லா

இந்த வரிகளைப் பார்த்தவுடனே, பாரதியாரின் வேறொரு பாடல் நினைவில் எழுவது இயற்கை.

எடுத்த காரியம் யாவினும் வெற்றி
எங்கு நோக்கினும் வெற்றிமற் றாங்கே
விடுத்த வாய்மொழிக் கெங்கணும் வெற்றி
வேண்டி னேனுக் கருளினள் காளி

இது 'வெற்றி' என்ற தலைப்பில் பாரதி பாடியுள்ள இரண்டு கட்டளைக் கலிப்பாக்களில் முதலாவதில் முதலிரு வரிகளாகும். இஸ்லாம் பற்றி எழுதிய கட்டுரையில் 'அருளினர் அல்லா' என்று எழுதியிருக்கிறார். வேறு சில பாட வேறுபாடுகளும் உள்ளன. 1920 ஜூன் மாதம் பாரதியார் ஆற்றிய சொற் பொழிவைத் தொடர்ந்து வந்த செய்திக் கட்டுரையே 'இஸ்லாம் மார்க்கத்தின் மஹிமை'. 1914இல் வெளிவந்த 'மாதா மணி வாசகம்' என்ற கவிதைத் தொகுப்பிலே இடம் பெற்றிருப்பது 'வெற்றி! தாமே எழுதிய பாடலை நினைப்பிலே யிருந்து, 'அல்லா'வுக்கு ஏற்பப் பின்னே எடுத்துரைத்திருக்கிறார்; பாட வேறுபாடு நினைவுக் கோளாறால்தான் ஏற்பட்டிருக்கும் என்று சொல்லிவிட முடியாது. பின் வந்த பாடம் சிறப்பெனவும் அவர் கருதியிருக்கக் கூடும்.

'தேவ விகடம்' என்பது பாரதியாரின் வேடிக்கைக் கதை களிலே ஒன்று. நாரதர் கூற்றாகக்,

கடலைப் போலே கற்றோ மென்றே
கருவங் கொண்டாயே
கல்லா ரென்றே நல்லார் தம்மைக்
கடுமை செய்தாயே

என்ற வரி வருகிறது. பன்னிருசீர் ஆசிரிய விருத்தத்துக்குப்

பொருத்தமான ஓர் அடியாக இது அமைந்துள்ளது. ஆனால், பாடல் இவ்வளவுதான். பாரதியாரின் படைப்பாகவே இஃது இருக்கவேண்டும் என்பது பதிப்பாசிரியர் கருத்து.

பாரதியாரின் கதைகளிலே 'சின்னச் சங்கரன் கதை' சிறப்பானவற்றுள் ஒன்று; தன்வரலாற்றுக் கூறு நிரம்பிய கதை; மென்மையான நகைச்சுவை இழையோடும் நல்ல கற்பனை நெசவு. முழுமையான வடிவம் ஒற்றர் கையகப்பட்டு அழிந்து போயிற்று. நண்பர்கள் வற்புறுத்தலால் மீண்டும் எழுதத் தொடங்கி, ஆறு இயல்கள் அளவில் அரைகுறையாக நிறுத்தி விட்டார்.

ஒரு சமீன்தாரின் அவைக்களம் இந்தக் கதையில் இடம் பெறுவதால் இலக்கியப் பாங்கு மிகுதியாக உள்ளது.

கவுண்டனூரர்ப் புலவர்கள் அவைக்கள நாயகனைக் கருதிச் சிற்றின்ப வயமான 'புலமை'யையே போற்றிவந்தனர். அந்த அவைக்களத்துக்குப் பொருத்தமாக வளர்ந்துவந்த சின்னச் சங்கரனை நமக்கு அறிமுகப்படுத்துகிறார். "இவனுக்கு எப்போதும் ஒரே சாஸ்திரம். ஒரே கணக்கு, ஒரே வழிதானுண்டு.

சாற்றுவதும் காமகலை சாதிப்பதும்
போற்றுவதும் காமனடிப் போது

கவுண்டனூர்ப் 'புலவர்' கூட்டத்திலே சங்கரன் ஒருவனாகிவிட்டான். இப்பாடல் வரிகள் அதிவீரராம பாண்டியன் இயற்றிய 'கொக்கோக'த்தில் வருவன.

வடிவமைப்பால் அற்புதமான குறள்வெண்பாதான்! ஆனால் முதலடியில் நான்காம் சீரைக் காணவில்லை.[1] "இவன் பாட்டுக்களில் சிலசில பிழைகள் இருந்தபோதிலும் இவனுடைய சிறுவயதைக் கருதி அப்பிழைகளை யாரும் கணிப்பதில்லை" என்று பாரதியார்

தம் கதைத்தலைவனுக்குச் சார்பாக ஓர் அமைதி கூறுகிறார். பாத்திரத்தினுக்கு அமைத்த சூழலுக்கு இப்படி ஒரு குறைக் குறள் தேவை எனவும் கவிஞர் கருதியிருக்கக் கூடும்.

ஜமீன்தாரையும் ஒரு படைப்புக் கலைஞராகவே சின்னச் சங்கரன் கதையில் காட்டுகிறார். அந்தச் சமீன்தாரின் புகழாரம் முழுவதையும் அங்கதமும் நகைச்சுவையும் ஒன்றையொன்று விஞ்சப் பார்க்கும் வகையில் சாற்றி யிருப்பதை மூலத்தில்தான் படித்துச் சுவைக்கவேண்டும். இங்கே சமீன்தாரின் படைப்பிலே உருவான இசைப்பாடலைமட்டும் காணுக:

ராகம் - அடாணா — தாளம் ரூபகம்

(மானே யங்கே போனவகை யென்னடி
என்ற வர்ண மெட்டு)

பல்லவி

மானே கையில் தானே தரித்தானே - ஒரு
மாதைத் தரித்தானே மழுவைத் தரித்தானே (மானே)

அனுபல்லவி

கோனே சிவனே குருவே யருவே மெய்ஞ்
ஞான பான மோன மான நாதா தாமரைப் பாதா
(மானே)

சரணம்

எந்தனை மோக்ஷ கதியினில் சேர்த்திட
இன்னமு மாகாதா? - உன்னைச்
சொந்தக்குல தெய்வ மென்றுநித் தந்துதி
சொன்னது போதாதா
விந்தையுட னிங்குவந் தென்னை யாளவும்
மெத்த மெத்த வாதா
வந்தனை தந்துனைப் போற்றிடும் ராமசா
மிக்கவுண்டராஜ-போஜ னுக்கருள்செய்யும் பாதா
(மானே)

கதையைப் படித்துப் பார்த்தால், சமீன்தாரின் ஆளுமையைத் தெறிப்பாகக் காட்டுவதற்கு இந்த இசைப்பாடல் எவ்வளவு இசைவாக அமைகிறது என்பது விளங்கும். பாத்திரப் படைப்புடன இசையும் பாத்திறமும் பொருந்திட, இயல் இசைப் படைப்பிலே நாடகமும் இணைந்திட, முத்தமிழ்த் திறம் காட்டும் இப்பாடல், பாரதியாரின் படைப்பாகவே கொள்ளவேண்டும்.

சின்ன சங்கரன் அவைக்களப் புலவனாக ஆவதற்கு உதவியது ஓர் யமகப் பாடல்:

"மகாராஜ ராஜஸ்ரீ ராஜகுலதீப ராமசாமிக் கவுண்டர் மீது சங்கரய்யர் பாடிய

யமக அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்

கவுண்டவுண்ட தெனமாரன் கணைபொழிய
மிகச்சோர்ந்து கண்ணீ ராற்றிற்
கவுண்டவுண்ட மார்பினளாய் மகளுன்னை
நினைந்துமனங் கரையா நின்றாள்
கவுண்டவுண்ட சீதையினை மாலையிட்ட
பெருமானே கவுண்ட னூரிற்
கவுண்டவுண்ட ராமசாமித் துரையே
விரைவிற் கலவி செய்யே

யமகம் என்றவுடனேயே செத்துமடியும் கற்பனைக் கவித் திறமும் செயற்கைச் சொற்சிலம்ப வீச்சுகளும் 'வந்தோம்' என்று வலியப் புகுந்துகொள்ளும்; இந்த விபத்துத் தவிர்க்க முடியாதது. சொல்லாற்றல் பெருக்க இவ்வுத்தி பயன்படலாம்: மருட்சி யூட்டும் புலமைக்கும் தேவைப்படலாம். ஆனால், சொல்லும் பொருளும் பருந்தும் நிழலுமென - ஆற்றொழுக்கென நடையிட்டுப் பொருள் புலப்படுத்த யமகம் ஆகவே ஆகாது. ஆனால், புலவருலகை மருளச் செய்தற்கு யமகம் திரிபுகள் நல்ல வல(ள)மான கருவிகள் என்பதில் ஐயமில்லை.

இச் செய்யுளுக்கு என்ன பொருளோ? "புலவர்களுக்கெல்லாம் அடிவயிறு குழப்பமாயிற்று. ஒவ்வொருவனுக்கும் இந்தப் பாட்டுக்குத் தன்னிடம் பொருள் கேட்டுவிடுவார்களோ என்ற பயமுண்டாயிற்று" என்று பாரதியாரே நிலைமையைச் சுட்டிக் காட்டியிருக்கிறார். நல்ல வேளை! பொருளையும் கதையிலேயே தந்துவிட்டார். (நாம் பிழைத்தோம்!) பொருளைக் கட்டாயம் தெரிந்துகொள்ள விரும்புவோர் 'சின்னச் சங்கரன் கதை' படித்தறிக.

"புலவர்களுக்கெல்லாம் அடிவயிறு குழப்பமா" குமளவுக்கு இந்த யமகம் பாடியவரும் பாரதியாரே.

பாரதியாரின் பாடல்களை ஆராய்வோர் இங்கே குறித்த பாடல்களையும் குறிக்கொள்ள வேண்டும்.

- பதிப்பாசிரியர்

# பின்னிணைப்பு - 8

## பாரதி வாழ்வு: சில காலக் குறிப்புகள்

*1882*

டிசம்பர் - 11 சுப்பிரமணிய பாரதியார் பிறந்த நாள் (கார்த்திகைத் திங்கள்; மூல நட்சத்திரம்). தந்தை: திரு. சின்ன சாமி ஐயர், அன்னை: திருமதி. இலட்சுமி அம்மாள். 'சுப்பையா' இது வீட்டிலே வழங்கிய பெயர்.

*1887*

அன்னையார் மறைவு.

*1889*

தந்தையார் மறுமணம். 'மாற்றாந்தாய்' திருமதி. வள்ளி யம்மாள், பாரதியை அன்புடன் பேணிய வளர்ப்புத் தாய்: தந்தையார் மறுமணத்தின்போதே பாரதிக்குப் பூணூல் அணியும் சடங்கு. தந்தையாரிடம் தொடக்கக் கல்வி.

*1893*

கவிதைத் திறமை கண்டு புலவர்கள் 'பாரதி' பட்டம் சூட்டினர்.

*1894-97*

நெல்லை, இந்துக் கல்லூரிப் பள்ளியில் (ஐந்தாம் பாரம் வரை) கல்வி.

**1897**

ஜூன் 15 திருமணம். கடையம் திரு. செல்லப்பா ஐயரின் மகளார் செல்லம்மாள் பாரதியின் வாழ்க்கைத் துணைவியார்.

**1898**

ஜூன்: தந்தையார் மறைவு. பாரதி, காசிப் பயணம். அத்தை திருமதி குப்பம்மாள் ஆதரவு. காசி இந்துப் பல்கலைக் கழகத்தில் கல்வி. வடமொழி, இந்துஸ்தானி மொழிகளில் பயிற்சி. அலகாபாத் பல்கலைக் கழக நுழைவுத் தேர்வில் முதல்வர்.

**1902**

எட்டயபுரம் மன்னர் அழைப்பை ஏற்று எட்டயபுரம் திரும்பினார். சமஸ்தானத்தில் பணி.

**1903**

சமஸ்தானப் பணி விடுத்து, மதுரை சேதுபதி உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியப் பணி. மூன்று திங்களே இப்பணியில் இருந்தார். சோழவந்தான் அரசஞ் சண்முகனார் விட்டுச்சென்ற இடத்தில் பாரதி பணியாற்றினார் என்பது இதுவரை பலர் அறியாத செய்தி.

**1904**

'சுதேச மித்திரன்' உதவியாசிரியப் பணி. சென்னையில் பாரதியார்க்கு அறிமுகமானவர்களில் குறிக்கத்தக்கவர்கள்: ஜி. சுப்பிரமணிய ஐயர், சர்க்கரைச் செட்டியார், மண்டையம் எஸ். என். திருமலாச்சாரியார், டாக்டர் எம். சி. நஞ்சுண்டராவ், ஜி. ஏ. நடேசன், வி. கிருஷ்ணசாமி ஐயர், திரு. வி. க. மூத்த மகள் தங்கம்மாள் பிறப்பு.

**1905**

வங்கப் பிரிவினையால் நாடு முழுவதிலும் தேசியக்கிளர்ச்சியில் பேரெழுச்சி.

**1906**

கல்கத்தாக் காங்கிரஸ் மாநாடு, தாதாபாய் நவுரோஜி தலைமையில் - சுதேசிப் பொருளே பயன்படுத்த வேண்டும்,

அயல்நாட்டுப் பொருள் புறக்கணிக்க (பகிஷ்கரிக்க)ப் பட வேண்டும், தேசியக் கல்வித் திட்டம் வேண்டும் முதலிய கருத் துகளைத தாங்கிய தீர்மானங்கள் கல்கத்தாக் காங்கிரசில்தான் நிறைவேறின. 'சுயராஜ்யம்' என்ற சொல்லும் அதன் வழிப் பட்ட கருத்தும் வேர் பாய்ச்சிய காலம் இது.

கல்கத்தாவிலிருந்து திரும்பும் போதுதான் சகோதரி நிவேதி தாவைச் சந்தித்து, ஞானாசிரியராகக் கொண்டார். ஆன்மிகம் தேசியம் ஆகிய துறைகளிலே ஏற்கனவே ஈடுபாடு கொண்டி டிருந்த பாரதிக்கு இந்தச் சந்திப்பு மிகவும் வேகத்தையும் ஆழ்ந்த ஈடுபாட்டையும் ஏற்படுத்திற்று. அவருடைய ஆளுமை யின் தீவிர வளர்ச்சிக்கு நிவேதிதையார் தொடர்பு பெருங் காரணம் என்பது மிகையாகாது.

*1907*

ஏப்ரல் 'இந்தியா' ஆசிரியப் பொறுப்பு - விபின சந்திர பாலர் சென்னை வருகை; பாரதியின் பெரும்பங்கு. 'பால பாரத' என்ற ஆங்கிலப் பத்திரிகையையும் பாரதி நடத்தினார்.

சூரத் காங்கிரஸ் - இயக்கத்தில் பிளவு - தமிழ்நாட்டுப் பிரதி நிதிகளில் பாரதி ஒருவர்; மற்றவர்கள் வ. உ. சிதம்பரம் பிள்ளை, சுரேந்திரநாத் ஆர்யா, வி. சர்க்கரைச் செட்டியார், வி. துரைசாமி ஐயர் - இவர்கள் திலகர் தலைமையில் இயங்கிய தீவிரவாதிகளாவர் - இந்தத் தீவிரவாதிகளில் லாஜபதிராய் குறிக்கத்தக்கவர்.

*1098*

ஜி. ஏ. நடேசன் வாயிலாகப் பாரதியாரை அறிமுகம் செய்துகொண்ட திரு. வி. கிருஷ்ணசாமி ஐயர் பாரதியாரின் சில பாடல்களை அச்சிட்டு வெளியிட உதவினார் - அப்போது அச்சானவற்றுள் 'எந்தையும் தாயும்', 'ஜய பாரத' என்பவை சில. பாரதியாரே அவர் பாடல்களைப் பாடக் கேட்டுக் கிருஷ் ணசாமி ஐயர்' உவகையுற்றுப் பாடல்களை வெளியிட முன் வந்தார். கிருஷ்ணசாமி ஐயருக்குப் பாரதியின் தீவிரவாதம்

உடன்பாடு இல்லை; அவர் மிதவாதி ஆயினும், பாரதியின் கவிதைகளிலே நாட்டம் கொண்டார்.

பாரதியாரே தம் கவிதைத் தொகுப்பை (ஸ்வதேச கீதங்கள்) இந்த ஆண்டில்தான் வெளியீட்டார்.

வ. உ. சி. சுப்பிரமணிய சிவா வழக்கில் பாரதி சாட்சியம்.

'இந்தியா' பத்திரிகை உரிமையாளர் கைது.

புதுச்சேரி சேர்தல் - குவளைக் கிருஷ்ணமாச்சாரியார் (குவளைக் கண்ணன்) சந்திப்பு - பிரிட்டிஷ் இந்தியாவில் இடர்ப்பாட்டுக்கு உள்ளான 'இந்தியா' புதுச்சேரியிலிருந்து மீண்டும் வெளிவரத் தொடங்கியது - 'விஜயா', 'சூர்யோதயம்' என்ற இதழ்களும் புதியனவாகத் தொடங்கப்பட்டன பாரதியாரைத தலைவராகக் கொண்ட 'பால பாரத சங்கம்' தோன்றியது.

இரண்டாவது மகள் சகுந்தலை பிறப்பு —திருமதி செல்லம்மாளும் புதுவை வந்து சேர்தல்

*1909*

ஸ்வதேச கீதங்கள் இரண்டாம் பாகம் 'ஜன்ம பூமி' என்ற பெயரில் வெளிவந்தது.

'இந்தியா' 'விஜயா' இரண்டு இதழ்களுக்கும் பிரிட்டிஷ் இந்தியாவில் தடை

*1910*

ஏப்ரல் தொடக்கத்தில் அரவிந்தர் புதுவை வருகை- பாரதி - அரவிந்தர் தொடர்பு - இருவரும் வேத ஆய்வில் ஈடுபட்டனர் - அரவிந்தர் நடத்திய ஆர்யா (ARYA) இதழில் பாரதியார் எழுதினார்.

இதே ஆண்டு நவம்பரில் ஒரு கவிதைத் தொகுதியைப் பாரதி வெளியிட்டார். 'இதன் இயல்பு தன் கூற்றெனப்படும். அதாவது, கதாநாயகன் தன் சரிதையைத் தான் நேராகவே சொல்லும் நடை'' என்ற முகவுரைக் குறிப்போடு 'கனவு' என்ற

பெயரில் வெளிவந்தது அந்த நூல்; பின்னே 'ஸ்வசரிதை'யாக வந்ததும் அதுவே.

'கர்மயோகி' இதழ் வெளிவரத் தொடங்கியது. (இரண்டாண்டுகளே இந்தப் பத்திரிகை நடந்தது.)

வ.வே.சு. ஐயர் புதுவை சேர்தல்.

*1911*

"ஆஷ் துரையின் கொலையால் ஒற்றர்களின் அட்டகாசம் அதிகரித்தது. தேசபக்தர்களைப் புதுவையிலிருந்து வெளியேற்றுவதற்கு அவர்கள் செய்த சதி பலிக்கவில்லை" (அரசாங்க வெளியீடு)

பாரதிக்கு மெய்க்காப்பாளர்போலத் தொண்டுபுரிந்த அம்மாகண்ணு அம்மாளும் அவளுடைய புதல்வர்களான வேணு கோபால், தேவசிகாமணி ஆகியோரும் பாரதிக்குக் கிடைத்தற்கரிய உயிர்த் தொண்டர்கள் - புதுவையில் பாரதிக்கு நெருக்கமானவர்கள் கனக சுப்புரத்தினம் என்ற பாரதிதாசன், வ. ரா (வசாமி ஐயங்கார்), சங்கர கிருஷ்ணன், தோத்தாத்திரி, ஹரிஹர சர்மா, குவளைக்கண்ணன் போன்ற சீடர்கள்; மற்றும், அரவிந்தர், வ. வே. சு. ஐயர், பரலி சு. நெல்லையப்பர், சிவக்கொழுந்து நாயக்கர், வாத்தியார் சுப்பிரமணிய ஐயர், சங்கரச் செட்டியார், பொன்னி முருகேசம் பிள்ளை, கிருஷ்ணசாமிப் பிள்ளை, கிருஷ்ணசாமிச்செட்டியார், மேலும் பல பெரியோர்கள்.

*1912*

கீதையின் தமிழ் மொழிபெயர்ப்பு – கண்ணன் பாட்டு, குயில், பாஞ்சாலி சபதம் முதலியவற்றின் தோற்றம்-பாஞ்சாலி சபதம் முதற்பகுதி வெளியீடு –

*1913*

பூணூல் அணியாத பிராமணராகிய பாரதியார், அரிஜன இனத்தவரான கனகலிங்கத்திற்குக் காயத்திரி உபதேசித்துப் பூணூல் இட்டுப் பிராமணராக்கினார்.

'சின்னச் சங்கரன் கதை'யும் மற்றும் சில கையெழுத்துப் படிகளும் ஒற்றர்களிடம் சிக்கி அழிந்துபோயின. நண்பர்களின் தூண்டுதலால் 'சின்னச் சங்கரன் கதை'யை மட்டும் புதிதாக எழுதினார்; ஆனால், ஆறு இயல்கள் மட்டுமே உருவாயின. அந்த அளவில் 'ஞானபாநு' (சுப்பிரமணிய சிவா நடத்திய இதழ்) வெளியிட்டது.

*1914*

நேடாலில் பாரதியின் 'மாதா மணிவாசகம்' வெளியாயிற்று

*1917*

கண்ணன் பாட்டு (முதற் பதிப்பு); பரலி சு. நெல்லையப்பர் வெளியிட்டார்.

*1918*

பரலி நெல்லையப்பர் பாரதியின் 'நாட்டுப் பாட்டு' (முதற் பதிப்பு) வெளியிட்டார்.

நவம்பரில் புதுவையை விட்டுப் புறப்பட்ட பாரதியைக் கடலூரில் கைது செய்தனர். சென்னை வழக்கறிஞர் திரு. துரைசாமி ஐயர், 'சுதேசமித்திரன்' ஆசிரியர் திரு. ஏ. ரங்கசாமி ஐயங்கார் சி. பி. இராமசாமி ஐயர் ஆகியோர் முயற்சியால் விடுதலை பெற்றார்.

*1919*

கடையம் (திருமதி செல்லம்மாள் ஊர்), எட்டயபுரம் - இரண்டு ஊர்களிலும் தங்கி வந்தார். இடையில், திருவனந்த புரத்தில் நடந்த ஒரு திருமணத்துக்குப் போனபோது திரு. கே. ஜி. சேஷையரின் பழக்கம் ஏற்பட்டது.

*1920.*

மீண்டும் 'சுதேசமித்திரன்' உதவியாசிரியரானார். புதுவை யிலிருந்து வ. வே. சு. ஐயரும் பல நண்பர்களும் சென்னை வந்து சேர்ந்தனர்.

காந்தியடிகளைக் கண்டு, சில மணித்துளிகள் பேசும்

வாய்ப்பினைப் பாரதியார் பெற்றார். நேரம் சிறிதளவே யாயினும் இரு பெருமக்களும் ஒருவரை யொருவர் இனங்கண்டு கொண்ட அற்புதமான சந்திப்பு.

*1921*

திருவல்லிக்கேணி, பார்த்தசாரதி கோயில் யானை பாரதி யைத் தூக்கி எறிந்தது. செப்டம்பர் மீ 11ஆம் நாள் பாரதி மறைவு.

## பாரதி மறைவுக்குப் பின்

*1922*

திருமதி செல்லம்மா பாரதியின் முயற்சியால் பாரதி ஆச்ரமம் உருவாகி, 'ஸ்வதேச கீதங்கள்' இரண்டு பாகங்கள வெளியாயின.

*1929*

'தேசிய கீதங்கள்', 'விநாயகர் நான்மணி மாலை' வெளியீடு.

*1930*

'தோத்திரப் பாடல்கள்', 'வேதாந்தப் பாடல்கள்', 'பாரதி நூல்கள்: வசனங்கள்', 'பாரதி நூல்கள். கட்டுரைகள்' வெளியீடு.

பாரதி பாடல்களின் ஒலிப்பதிவு உரிமையைத் திரு. ஏ. வி. மெய்யப்பச் செட்டியார் பெற்றார்.

*1948*

எட்டயபுரத்தில் பாரதியார் நினைவு மண்டபம் - வங்காளத்து ஆளுநராய் அப்போது பணியாற்றிய இராஜகோபாலாச் சாரியார் திறந்துவைத்தார்.

*1949*

பாரதி நூல்களின் பதிப்புரிமையைப் பாரதியாரின் தம்பி திரு. சி. விசுவநாத ஐயரிடமிருந்து சென்னை அரசாங்கம் வாங்கியது; பாடல்களின் ஒலிப்பதிவு உரிமையைத் திரு. ஏ. வி.

மெய்யப்பச் செட்டியார் விட்டுக்கொடுத்தார். அப்போது திரு. ஓமந்தூர் இராமசாமி ரெட்டியார் முதலமைச்சர்.

இதே ஆண்டு ஆகஸ்டுத் திங்கள் ஆறாம் நாளில் பாரதியாரின் எழுத்தோவியங்களின் கையெழுத்துப் படிகள் பல அரசாங்க அருங்காட்சியகத்தில் இடம் பெற்றன.

**1950–52**

சென்னை அரசாங்கத்தால் 'பாரதி நூல்களின் பதிப்புக் குழு' உருவாக்கப்பட்டு: நூல்கள் வெளியாயின - திரு. எம். பக்தவச்சலம் முதலமைச்சர்.

**1981-82**

1981 டிசம்பர் முதல் 1982 டிசம்பர் முடிய ஓராண்டுக் காலம் பாரதி நூற்றாண்டு விழாவைத் தனியாணை பிறப்பித்துத் தமிழக அரசு 'ஒருமைப்பாடு ஆண்டு' என்ற பெயரால் நாடெங்கிலும் கொண்டாட ஏற்பாடு செய்தது. புரட்சித் தலைவர் டாக்டர் எம். ஜி. இராமச்சந்திரன் முதலமைச்சர். டாக்டர் ம.பொ. சிவஞானம் நூற்றாண்டுக் குழுவின் தலைவர்.

# பின்னிணைப்பு - 9

## பாடல் தலைப்பு அகரநிரல்

(எண்: வரிசை எண்)

**ஒரு விளக்கம்:**

* 'கண்ணன் - என்தாய்' என்ற தலைப்பில் இரண்டு இடங்களில் இப்பதிப்பில் இடம் பெறுவது ஒரே பாடலே, கால அடிப்படையில் முதலில் (74) இடம் பெற்றது. 'கண்ணன் பாட்டு' என்ற தொடர்பு கருதி மீண்டும் (98) இடம் பெற்றுள்ளது.

* 'காளிப் பாட்டு' – இரண்டு இடங்களில் (179, 197) ஒரே தலைப்பு; செய்யுள் முதற்குறிப்பினைப் பார்த்தால் ஒரே பாடலோ என எண்ணம் எழும்.

'யாது மாகி நின்றாய் - காளீ
எங்குநீ நிறைந்தாய்
தீது நன்மை யெல்லாம்'

என்ற தொடர்கள் மட்டுமே இரண்டிடத்தும் முதற்செய்யுளில் மீண்டும் வருகின்றன. யாப்பு வகையும் ஈரிடத்தும் ஒன்றே. ஆனால், செய்யுட்கள் வெவ்வேறு.

* 'முருகன் பாட்டு' என்ற தலைப்பு மட்டுமே ஈரிடத்து (123, 159) உள்ளது; செய்யுட்கள் வெவ்வேறு.

* 'வந்தே மாதரம்' தலைப்பு மூன்று இடங்களில் (12, 21, 23); செய்யுட்கள் வெவ்வேறு.

கண்ணன் பாட்டிலும் பல தலைப்புகள் மீண்டும் மீண்டும் வந்தாலும் செய்யுட்கள் வெவ்வேறு. – பதிப்பாசிரியர்

# பின்னிணைப்பு - 10

## பாரதியார் பாடல்களின் யாப்பியற் பாகுபாடு

| தொடர் எண் | பாடல் தலைப்பு | | யாப்பியற் பாகுபாடு |
|---|---|---|---|
| 1. | எட்டயபுரமன்னருக்கு விண்ணப்பம் | 1 | நிலைமண்டில ஆசிரியப்பா |
| 2. | காந்திமதிநாத பிள்ளை | 2 | நேரிசை வெண்பா |
| 3. | இளசை ஒருபா ஒருபஃது | 12 | நேரிசை வெண்பா |
| 4. | தனிமையிரக்கம் | 1 | நேரிசை ஆசிரியப்பா |
| 5. | சாற்றுக் கவிகள் | 3 | அறுசீர் விருத்தம் |
| 6. | தாதாபாய் நவுரோஜி | 5 | அறுசீர் விருத்தம் |
| 7. | வங்கமே வாழிய | 3 | கட்டளைக் கலிப்பா |
| 8. | ஜாதிய கீதம் | 1 | நிலைமண்டில ஆசிரியப்பா |
| 9. | மேலோர் புகழ் | 1 | இன்னிசை வெண்பா |
| 10. | வேல்ஸ் இளவரசருக்கு... | 1 | நிலைமண்டில ஆசிரியப்பா |
| 11. | மஹாமஹோபாத்தியாய... | 3 | அறுசீர் விருத்தம் |
| 12. | வந்தே மாதரம் | 2 | பன்னிருசீர் விருத்தம் |
| 13. | என்னே கொடுமை | 2 | அறுசீர் விருத்தம் |

| எண் | பாடல் | வகை | எண்ணிக்கை | யாப்பு |
|---|---|---|---|---|
| 14. | எனது தாய்நாட்டின்... | | 9 | குறள்வெண்செந்துறை |
| 15. | அபேதாநந்த சுவாமிகள்மீது... | | 1 | எழுசீர் விருத்தம் (1) |
| | | | 2 | அறுசீர் விருத்தம் (2,4) |
| | | | 1 | கட்டளைக் கலிப்பா (3) |
| 16. | யான் | | 1 | நிலைமண்டில ஆசிரியப்பா |
| 17. | சந்திரிகை | | 1 | நிலைமண்டில ஆசிரியப்பா |
| 18. | ரவிவர்மா மீது... | | 5 | அறுசீர் விருத்தம் |
| 19. | சிவாஜி தனது... | | 1 | ஆசிரியப்பா (நிறைவுறாதது) |
| 20. | ஸ்ரீ சுப்பராம தீக்ஷிதர்... | | 1 | நிலைமண்டில ஆசிரியப்பா (1) |
| | | | 3 | அறுசீர் விருத்தம் (2-4) |
| 21. | வந்தே மாதரம் | இசைப்பாடல் | 4 | வஞ்சித்துறை (பல்லவி தனி) |
| 22. | புது வருஷம் | | 1 | நிலைமண்டில ஆசிரியப்பா |
| 23. | வந்தே மாதரம் | இசைப்பாடல் | 6 | கண்ணிகள் |
| 24. | நடிப்புச் சுதேசிகள் | | 18 | கண்ணிகள் |
| 25. | நாட்டுப் பாடல் | இசைப்பாடல் | 3 | சிந்து |
| 26. | எங்கள் நாடு | இசைப்பாடல் (பூபாளம்) | 3 | எண்சீர் விருத்தம் |
| 27. | லாஜபத்ராய் துதி | | 3 | அறுசீர் விருத்தம் |
| 28. | பூபேந்திர விஜயம் | | 4 | அறுசீர் விருத்தம் |
| 29. | லாஜபத்ராய் பிரலாபம் | | 20 | குறள்வெண்செந்துறை |

| தொடர் எண் | பாடல் தலைப்பு | | யாப்பியற் பாகுபாடு |
|---|---|---|---|
| 30. | ஸ்வராஜ்யம் வேண்டு மென்ற... | இசைப்பாடல் | |
| 31. | மாயையைப் பழித்தல் | இசைப்பாடல் | 8 சிந்து |
| 32. | ஆரிய தரிசனம் - ஓர் கனவு | இசைப்பாடல் | |
| 33. | சுதந்திரப் பெருமை | இசைப்பாடல் (கீர்த்தனை) | |
| 34. | மேத்தா திலகருக்கு... | இசைப்பாடல் (கீர்த்தனை) | |
| 35. | மாஜினி என்ற...... | | 14 எழுசீர் விருத்தம் (1-14)<br>1 கலிவிருத்தம் (15) |
| 36. | கலெக்டர் வின்ச் ஸ்ரீ சிதம்பரம் பிள்ளைக்கு... | | 7 கண்ணிகள் |
| 37. | கலெக்டர் வின்ச்சுக்கு... | | 7 கண்ணிகள் |
| 38. | ஸ்ரீ கிருஷ்ண ஸ்தோத்திரம் | இசைப்பாடல் (கீர்த்தனை) | |
| 39. | குணம் பலவே | | 1 நிலைமண்டில ஆசிரியப்பா |
| 40. | பாரத தேவியின் திருத்தசாங்கம் | | 10 நேரிசை வெண்பா |
| 41. | எங்கள் தாய் | இசைப்பாடல் | 10 சிந்து (காவடிச்...) |
| 42. | சுதந்திரம் | | 1 நிலைமண்டில ஆசிரியப்பா |

| எண் | பாடல் | | |
|---|---|---|---|
| 43. | ஜயபாரத | 5 | எழுசீர் விருத்தம் |
| 44. | ஸ்வதந்திர தாகம் | 15 | கண்ணிகள் |
| 45. | பால கங்காதர திலகர் | 3 | எண்சீர் விருத்தம் |
| 46. | கோகலே சாமியார் பாடல் | 1 | எண்சீர் விருத்தம் |
| 47. | கவிதாதேவி அருள்வேண்டல் | 1 | நிலைமண்டில ஆசிரியப்பா |
| 48. | குருகோவிந்த ஸிம்ஹ விஜயம் | 1 | நிலைமண்டில ஆசிரியப்பா |
| 49. | வெய்ய இடி | 1 | அறுசீர் விருத்தம் |
| 50. | ஜாதீய கீதம் (புதிய மொ. பெ) | 4 | நிலைமண்டில ஆசிரியப்பா (1,2,3,5,6) |
| | இசைப்பாடல் | 1 | கலிவிருத்தம் (3) |
| | | 1 | கண்ணி (4) |
| | | 1 | எண்சீர் விருத்தம் (7) |
| 51. | துடிக்கின்ற நெஞ்சம் | 7 | சிந்து (நொண்டிச்...) |
| 52. | திசை | 5 | அறுசீர் விருத்தம் |
| 53. | உனைக்கூறப் பிழை இல்லை | 5 | அறுசீர் விருத்தம் |
| 54. | கலியுக முடிவு | 1 | நிலைமண்டில ஆசிரியப்பா |
| 55. | கடல் | 23 | கண்ணிகள் |
| 56. | வெறிகொண்டதாய் இசைப்பாடல் | 5 | சிந்து |
| 57. | வந்திலரேல் | 1 | நேரிசைவெண்பா |
| 58. | சுதந்திர தேவியின் துதி | 4 | அறுசீர்விருத்தம் (1-4) |
| | | 5 | கலிவிருத்தம் (5–9) |

| தொடர் எண் | பாடல் தலைப்பு | | யாப்பியற் பாகுபாடு |
|---|---|---|---|
| 59. | மாதாவின் துவஜம் | | 10 கண்ணிகள் (பல்லவி தனி) |
| 60. | நிதானக் கட்சியார் கூட்டம் | இசைப்பாடல் (கீர்த்தனை) | |
| 61. | பாரத தேவியின் அடிமை | இசைப்பாடல் (கீர்த்தனை) | |
| 62. | ஸ்வதந்திரப் பள்ளு | இசைப்பாடல் (கீர்த்தனை) | |
| 63. | மஹாசக்திக்கு விண்ணப்பம் | | 1 அறுசீர் விருத்தம் |
| 64. | மஹாசக்தி | இசைப்பாடல் | 3 கண்ணிகள் |
| 65. | மஹாசக்திக்கு விண்ணப்பம் | | 3 கலித்துறை |
| 66. | பாரதமாதா திருப்பள்ளியெழுச்சி | | 5 எண்சீர் விருத்தம் |
| 67. | தெளிவு | | 5 சிந்து |
| 68. | மஹாசக்திக்கு விண்ணப்பம் | | 1 எழுசீர் விருத்தம் |
| 69. | சாதாரண வருஷத்துத் தூமகேது | | 1 நிலைமண்டில ஆசிரியப்பா |
| 70. | கனவு | | 48 எண்சீர் விருத்தம் (1-48)<br>1 எழுசீர் விருத்தம் (49) |
| 71. | பாஞ்சாலி சபதம் | | 18 சிந்து (நொண்டிச்) (1-18) |

| | | | |
|---|---|---|---|
| | † * | 1 | கட்டளைக் கலிப்பா (19) |
| ‡ | | 18 | சிந்து (நொண்டிச்) (20–37) |
| ‡ | † * | 4 | கட்டளைக் கலிப்பா (38–41) |
| (ஈரடி பதினொரு சீர்) | | 8 | சிந்து (42–49) |
| (நாலடி 18 சீர்) | | 3 | சிந்து (50-52) |
| (நாலடி எண்சீர்) | | 11 | சிந்து (53-83) |
| ‡ | † * | 2 | கட்டளைக் கலிப்பா (84-85) |
| (நாலடி 8 சீர்) | | 6 | சிந்து (86-91) |
| (நாலடி 6 சீர்) | | 5 | சிந்து (92–96) |
| ‡ | * | 4 | கட்டளைக் கலிப்பா (97–100) |
| (நாலடி 6 சீர்) | | 1 | சிந்து (101) |
| ‡ | * | 5 | கட்டளைக் கலிப்பா (102-106) |
| (நாலடி 6 சீர்) | | 2 | சிந்து (107-108) |
| ‡ | □ | 6 | கட்டளைக் கலிப்பா (109-114) |
| | | 4 | எண்சீர் விருத்தம் (115–118) |
| ‡ | □ | 9 | கட்டளைக் கலிப்பா (119-127) |
| | | 8 | சிந்து (128-135) |
| (நாலடி 8 சீர்) | | 7 | சிந்து (136-142) |

‡ இக்குறியிடப்பட்டவற்றைப் பாரதியார் எண்சீர் விருத்தம் எனக் குறித்துள்ளார்.

| தொடர் எண் | பாடல் தலைப்பு | யாப்பியற் பாகுபாடு |
|---|---|---|
| | | 9 எண்சீர் விருத்தம் (143-151) |
| | | 1 நிலைமண்டில ஆ' பா (152) |
| | (நாலடி 12 சீர்) | 1 சிந்து (153) |
| | | 1 அறுசீர் விருத்தம் (154) |
| | | 3 எண்சீர் விருத்தம் (155-157) |
| | (நாலடி சீர்) | 13 சிந்து (158-170) |
| | ‡ | * 4 கட்டளைக் கலிப்பா (171-174) |
| | (நாலடி 6 சீர்) | 3 சிந்து (175-177) |
| | ‡ | * 5 கட்டளைக் கலிப்பா (178-182) |
| | (நாலடி 8 சீர்) | 13 சிந்து (183-195) |
| | ‡ | * 9 கட்டளைக் கலிப்பா (196-204) |
| | பாஞ்சாலி சபதம் இரண்டாம் பாகம் | |
| | | 1 எழுசீர் விருத்தம் (1) |
| | | 1 அறுசீர் விருத்தம் (2) |
| | | 1 எண்சீர் விருத்தம் (3) |
| | (நாலடி 7 சீர்) | 5 சிந்து (4-8) |
| | | 5 எண்சீர் விருத்தம் (9-13) |
| | (நாலடி 7 சீர்) | 4 சிந்து (14-17) |

| | | | |
|---|---|---|---|
| | | (நாலடி 6 சீர்) | 2 சிந்து (18-19) |
| | | (நாலடி 7 சீர்) | 5 சிந்து (20-24) |
| | | (நாலடி 8 சீர்) | 14 சிந்து (25-38) |
| | | (நாலடி 6 சீர்) | 2 சிந்து (39-40) |
| | | (நாலடி 5 சீர்) | 7 சிந்து (41 47) |
| | | | 61 கண்ணிகள். (48-108) |
| | | (நாலடி 8 சீர்) | 18 சிந்து (109-126) |
| | | | 36 கண்ணிகள் (127-172) |
| | | (நாலடி 8 சீர்) | 1 சிந்து (173) |
| | | (ஈரடி 5 சீர்) | 9 சிந்து (174-182) |
| | | | 6 எண்சீர் விருத்தம் (183-188) |
| | | | 4 அறுசீர் விருத்தம் (189-192) |
| | | (நாலடி 6 சீர்) | 11 சிந்து (193-203) |
| | | (நாலடி 8 சீர் | 6 சிந்து (204-209) |
| 72. | ஒளியும் இருளும் | | 4 எண்சீர் விருத்தம் |
| 73. | மது | | 11 எண்சீர் விருத்தம் (1-11) |
| | | | 1 எண்சீர் விருத்தம் (12) 'வேறு' |
| 74. | கண்ணன் - என் தாய் | (நாலடி 6 சீர்) | 10 சிந்து |
| 75. | யோக சித்தி | (நாலடி 8 சீர்) | 10 சிந்து |

‡ இக்குறியிடப்பட்டவற்றைப் பாரதியார் எண்சீர் விருத்தம் எனக் குறித்துள்ளார்.

| தொடர் எண் | பாடல் தலைப்பு | | | யாப்பியற் பாகுபாடு |
|---|---|---|---|---|
| 76. | புதிய ஆத்தி சூடி | | 1 | நிலைமண்டில ஆசிரியப்பா (காப்பு) |
| | | | 110 | இரு சீர் நூற்பா (நூல் 1-110) |
| 77. | வேய்ங்குழல் | இசைப்பாடல் | | |
| 78. | இறவாமை - தாயுமானவர் வாழ்த்து | | 1 | அறுசீர் விருத்தம் |
| 79. | வெற்றி | | * 2 | கட்டளைக் கலிப்பா |
| 80. | அச்சமில்லை | | 2 | எண்சீர் விருத்தம் |
| 81. | ஹே, காளீ‡ | | * 2 | கட்டளைக் கலிப்பா |
| 82. | சங்கு | | 4 | குறள்வெண்செந்துறை |
| 83. | ஸூர்ய தர்சனம்§ | | * 2 | கட்டளைக் கலிப்பா |
| 84. | வெண்ணிலா | | 5 | சிந்து |
| 85. | அறிவே தெய்வம் | | 10 | கண்ணிகள் |
| 86. | மஹாசக்தி பஞ்சகம் | | 5 | எழுசீர் விருத்தம் |
| 87. | மஹாகாளியின் புகழ் | இசைப்பாடல் | 3 | சிந்து (காவடிச்.) |
| 88. | மஹாசக்தி வாழ்த்து | | □ 6 | கட்டளைக் கலிப்பா |
| 89. | சரஸ்வதி தேவியின் புகழ் | | * 10 | கட்டளைக் கலிப்பா |
| 90. | பரசிவ வெள்ளம் | | 24 | குறள்வெண்செந்துறை |
| 91. | குயில் | | 18 | குறள்வெண்செந்துறை(1-18) |
| | | இசைப்பாடல்° | 1 | இசைப்பாடல் (19) |

| | | | |
|---|---|---|---|
| | | 79 | குறள்வெண்செந்துறை (20-98) |
| | | 1 | இசைப்பாடல் (99) |
| | | 71 | குறள்வெண்செந்துறை (100-170) |
| | | 1 | இசைப்பாடல் (171) |
| | | 291 | குறள்வெண்செந்துறை (172-362) |
| 92. | பாப்பாப் பாட்டு | 16 | சிந்து |
| 93. | ஞானபாநு - ஸூர்யஸ்தோமம் | 4 | அறுசீர் விருத்தம் |
| 94. | புயற் காற்று | 3 | கண்ணிகள் |
| 95. | பிழைத்த தென்னந்தோப்பு | 8 | சிந்து |
| 96. | மழை | 3 | சிந்து |
| 97. | கண்ணன் – என் தோழன் | 10 | சிந்து |
| 98. | கண்ணன் - என் தாய் | 10 | சிந்து (நொண்டிச்.) |
| 99. | கண்ணன் - என் தந்தை | 10 | சிந்து (நொண்டிச்.) |
| 100. | கண்ணன் - என் சேவகன் | 32 | குறள்வெண்செந்துறை |
| 101. | கண்ணன - என் அரசன் | 14 | கண்ணிகள் |
| 102. | கண்ணன் – என் சீடன் | 1 | நிலைமண்டில ஆசிரியப்பா |
| 103. | கண்ணன் - என் சற்குரு இசைப்பாடல் | 12 | சிந்து |

‡ முதற் பாட்டின் இரண்டாமடியில் அரையடிக்கு ஓரெழுத்து மிக்குள்ளது.
§ முதற்பாட்டு மூன்றாமடியின் முதல் அரையில் ஓரெழுத்து மிக்குள்ளது.
° 19, 99, 171 மூன்று இடங்களிலும் ஓரே இசைப்பாடல்தான்.

| தொடர் எண் | பாடல் தலைப்பு | யாப்பியற் பாகுபாடு | |
|---|---|---|---|
| 104. | கண்ணன் - என் குழந்தை | இசைப்பாடல் | 10 சிந்து |
| 105. | கண்ணன் - என் விளையாட்டுப் பிள்ளை | இசைப்பாடல் | 9 சிந்து |
| 106. | கண்ணன் - என் காதலன் | இசைப்பாடல் | 7 சிந்து |
| 107. | கண்ணன் - என் காதலன் (உறக்கமும் விழிப்பும்) | இசைப்பாடல் | 5 சிந்து |
| 108. | கண்ணன் - என் காதலன் (காட்டிலே தேடுதல்) | இசைப்பாடல் | 12 சிந்து |
| 109. | கண்ணன் - என் காதலன் (பாங்கியைத் தூதுவிடுத்தல்) | | 8 சிந்து |
| 110. | கண்ணன் - என் காதலன் (பிரிவாற்றாமை) | இசைப்பாடல் | 6 சிந்து |
| 111. | கண்ணன் - என் காந்தன் | இசைப்பாடல் | 3 சிந்து |
| 112. | கண்ணம்மா - என் காதலி (காட்சி வியப்பு) | இசைப்பாடல் | 3 சிந்து |
| 113. | கண்ணம்மா - என் காதலி (பின்னே வந்து நின்று கண் மறைத்தல்) | இசைப்பாடல் | 4 கட்டளைக் கலிப்பா° |

| | | | | |
|---|---|---|---|---|
| 114. | கண்ணம்மா - என் காதலி (முகத்திரை களைதல்) | இசைப்பாடல் | 2 | சிந்து |
| 115. | கண்ணம்மா - என் காதலி (நாணிக் கண் புதைத்தல்) | இசைப்பாடல் | 5 | சிந்து |
| 116. | கண்ணம்மா - என் காதலி (குறிப்பிடம் தவறியது) | இசைப்பாடல் | 4 | சிந்து |
| 117. | கண்ணம்மா - என் காதலி (யோகம்) | | 8 | தரவு கொச்சகக் கலிப்பா |
| 118. | கண்ணன் - என் ஆண்டான் | இசைப்பாடல் | 10 | சிந்து |
| 119. | கண்ணம்மா - எனது குலதெய்வம் | இசைப்பாடல் | | |
| 120. | முரசு | | 1 | கண்ணி (பல்லவிபோல) |
| | | | 31 | சிந்து (2–32) |
| 121. | புதிய ருஷ்யா | | 6 | அறுசீர் விருத்தம் |
| 122. | விநாயகர் ஸ்தோத்ரம் | | 10 | நேரிசை வெண்பா |
| | (விநாயகர் நான்மணிமாலை) | | 10 | கட்டளைக் கலித்துறை |

° நேரசையில் தொடங்கும் அரையடிக்குப் பதினோரெழுத்தும், நிரையசையில் தொடங்கும் அரையடிக்குப் பன்னிரண்டெழுத்தும்- என்பது பொதுநிலை. பாரதியாரில் வேறு வகையான கட்டளைக் கலிப்பாக்களையும் காணுகிறோம். இந்தப் பாடலில் நேரசையில் தொடங்கும் அரையடிக்குப் பன்னிரண்டெழுத்தும் நிரையசையில் தொடங்கும் அரையடிக்குப் பதின்மூன்றெழுத்தும் அமைந்திருக்கக் காணுகின்றோம்.

| தொடர் எண் | பாடல் தலைப்பு | | | யாப்பியற் பாகுபாடு |
|---|---|---|---|---|
| | - அந்தாதித் தொடை - | | 10 | அறுசீர் விருத்தம் |
| | | | 10 | நேரிசை ஆசிரியப்பா |
| 123. | முருகன் பாட்டு | இசைப்பாடல் | | |
| 124. | ஸ்ரீமான் எட்டயபுரம் மஹாராஜா அவர்கள்மீது சீட்டுக்கவிகள் - I | | 5 | அறுசீர் விருத்தம் |
| 125. | எட்டயபுரம் மஹாராஜாவின்மீது சீட்டுக் கவிகள் - II | | 3 | அறுசீர் விருத்தம் |
| 126. | செந்தமிழ் நாடு | | 10 | சிந்து |
| 127. | பாரத தேசம் | இசைப்பாடல் | 13 | சிந்து (பல்லவி தனி) |
| 128. | தமிழ் | | 4 | அறுசீர் விருத்தம் |
| 129. | தமிழ்த் தாய் | | 12 | சிந்து (ஆனந்தக்...) |
| 130. | தொழில் | | □ 3 | கட்டளைக் கலிப்பா |
| 131. | செட்டிமக்கள் குலவிளக்கு | | 7 | அறுசீர் விருத்தம் |
| 132. | காரைக்குடி ஹிந்து மதாபிமான சங்கத்தின்மீது வாழ்த்துப் பாட்டுகள் | | 7 | அறுசீர் விருத்கம் |
| 133. | காலனுக்குரைத்தல் | இசைப்பாடல் | | |
| 134. | அல்லா | இசைப்பாடல் | 2 | கலித்துறை (1-2) |
| | | | 1 | கலிவிருத்தம் (3) பல்லவி தனி |

| | | | | |
|---|---|---|---|---|
| 135. | பாரத ஸமுதாயம் | இசைப்பாடல் | | |
| 136. | இந்தியாவின் அழைப்பு | | 1 | நிலைமண்டில ஆசிரியப்பா |
| 137. | தீ–அக்நிஸ்தோமம் | இசைப்பாடல் | 20 | சிந்து |
| 138. | லக்ஷ்மீ ப்ரார்த்தனை - திருவேட்கை | இசைப்பாடல் | 5 | சிந்து |
| 139. | திருக்காதல் | இசைப்பாடல் | 1 | சிந்து |
| 140. | திருமகள் | இசைப்பாடல் | 3 | ஆறடித் தரவு கொச்சகம் |
| | (1,4ஆம் அடிகள் 8 சீர்கள்; 2,3ஆம் அடிகளில் 4 சீர்கள்) | | | |
| 141. | காணிநிலம் | இசைப்பாடல் | 3 | சிந்து |
| 142. | புதுமைப்பெண் | | □10 | கட்டளைக் கலிப்பா |
| 143. | பகைவனுக்கருள்வாய் | இசைப்பாடல் | | |
| 144. | லக்ஷ்மீதேவி - சரண்புகுதல் | | 7 | சிந்து |
| 145. | பெண்மை | | 9 | கண்ணிகள் |
| 146. | கேட்பன | | 2 | சிந்து (நொண்டிச்) |
| 147. | சக்திக் கூத்து | இசைப்பாடல் | 4 | சிந்து |
| 148. | விடுதலை | இசைப்பாடல் | | |
| 149. | சொல் | | 10 | சிந்து |
| 150. | நிலாவும் வான்மீனும் காற்றும் (மனத்தை வாழ்த்துதல்) | | 6 | அறுசீர் விருத்தம் |
| 151. | பராசக்தி | | □5 | கட்டளைக் கலிப்பா |
| 152. | அழகுத்தெய்வம் | | 3 | எண்சீர் விருத்தம் |

| தொடர் எண் | பாடல் தலைப்பு | | | யாப்பியற் பாகுபாடு |
|---|---|---|---|---|
| 153. | ஆத்மஜயம் | | 2 | அறுசீர் விருத்தம் |
| 154. | மூன்று காதல் | | 9 | சிந்து |
| 155. | பொய்யோ மெய்யோ | | 4 | சிந்து |
| 156. | உப்பளம் கோயிலில் எழுந்தருளியிருக்கும் தேசமுத்து மாரி | | 7 | சிந்து |
| 157. | வேண்டும் | | 2 | அறுசீர் விருத்தம்‡ |
| 158. | பக்தி | இசைப்பாடல் | | |
| 159. | முருகன் பாட்டு | | 4 | சிந்து |
| 160. | நெஞ்சொடு சொல்வது | | 5 | எண்சீர் விருத்தம் |
| 161. | சிவசக்தி புகழ் | இசைப்பாடல் | 10 | சிந்து |
| 162. | சக்தி திருப்புகழ் | இசைப்பாடல் | 9 | கண்ணிகள் |
| 163. | சக்திக்கு ஆத்ம ஸமர்ப்பணம் | இசைப்பாடல் | 46 | சிந்து |
| 164. | வையமுழுதும் | | 7 | கண்ணிகள் |
| 165. | மகாசக்தி வெண்பா | | 4 | நேரிசைவெண்பா |
| 166. | சக்தி விளக்கம் | இசைப்பாடல் | 7 | சிந்து |
| 167. | வேள்விப்பாட்டு | | 8 | சிந்து |
| 168. | போற்றியகவல் | | 1 | நிலைமண்டில ஆசிரியப்பா |
| 169. | சந்திரமதிப் பாட்டு | இசைப்பாடல் | 3 | சிந்து |

| | | | | |
|---|---|---|---|---|
| 170. | வேலன் பாட்டு | இசைப்பாடல் | 3 | சிந்து |
| 171. | அந்திப்பொழுது (காதற்பாட்டு) | | 4 | சிந்து |
| 172. | காற்று வெளி (காதற் பாட்டு) | | 2 | சிந்து |
| 173. | முத்து மாரி | | 2 | பதினாறுசீர் விருத்தம் |
| 174. | ஜயமுண்டு | இசைப்பாடல் | | |
| 175. | ஜயபேரிகை | இசைப்பாடல் | | |
| 176. | கிளித்தூது | இசைப்பாடல் | | |
| 177. | வண்டிக்காரன் பாட்டு | | 2 | சிந்து |
| 178. | கற்பனையூர் | | 9 | சிந்து |
| 179. | காளிப் பாட்டு | | 2 | அறுசீர் விருத்தம் |
| 180. | ஓம் சக்தி | | 5 | அறுசீர் விருத்தம் |
| 181. | ஊழிக் கூத்து | | 5 | சிந்து (பல்லவி தனி) |
| 182. | ஸோமதேவன் புகழ் | இசைப்பாடல் | | |
| 183. | ஞாயிறு – ஸெளர்யஸ்துதி | | *3 | கட்டளைக் கலிப்பா |
| 184. | கிளிப் பாட்டு | | 5 | கண்ணிகள் (கிளிக்.) |
| 185. | கோவிந்தன் பாட்டு | | 3 | அறுசீர் விருத்தம் |
| 186. | விடுதலைப் பாட்டுக்கள் | | 2 | எண்சீர் விருத்தம் |
| 187. | அம்மாக்கண்ணு பாட்டு | | 3 | சிந்து |

‡ இரண்டாம் பாடல் இறுதியடி மூன்று சீர்கள் ஓசையால் நிரப்பத் தக்கவை.

| தொடர் எண் | பாடல் தலைப்பு | | யாப்பியற் பாகுபாடு | |
|---|---|---|---|---|
| 188. | கண்ணம்மா - அங்கவர்ணனை* | இசைப்பாடல் | | |
| 189. | விடுதலை விடுதலை விடுதலை | இசைப்பாடல் | 3 | எழுசீர் விருத்தம் |
| 190. | வள்ளிப்பாட்டு | இசைப்பாடல் | | |
| 191. | சாகா வரம் | இசைப்பாடல் | | |
| 192. | செல்லம்மா பாட்டு | இசைப்பாடல் | | |
| 193. | பூலோக குமாரி | இசைப்பாடல் | | |
| 194. | வாழ்க திலகன் நாமம் | இசைப்பாடல் | | |
| 195. | எந்த நேரமும் | இசைப்பாடல் | | |
| 196. | ஸ்ரீ செல்லம்மா பாட்டு | இசைப்பாடல் | | |
| 197. | காளிப்பாட்டு | | 7 | அறுசீர் விருத்தம் |
| 198. | காலைப்பொழுது | | 28 | கு.வெ.செந்துறை |
| 199. | பாரத நாடு | இசைப்பாடல் | | |
| 200. | நவராத்திரிப் பாட்டு | இசைப்பாடல் | | |
| 201. | நவராத்திரிப் பாட்டு | | 4 | தரவு கொச்சகக் கலிப்பா |
| 202. | ஸரஸ்வதி ஸ்தோத்திரம் | | 5 | சிந்து |
| 203. | ஸ்ரீ கிருஷ்ணன்மீது ஸ்துதி | | 9 | கலிவிருத்தம் |
| 204. | யேசு கிறிஸ்து | | 3 | எண்சீர் விருத்தம் |

| | | | |
|---|---|---|---|
| 205. | பெல்ஜியம் நாட்டிற்கு வாழ்த்து | 9 | அறுசீர் விருத்தம் |
| 206. | இறைவனை வேண்டுதல் | | இசைப்பாடல் |
| 207. | மனைத் தலைவிக்கு வாழ்த்து | 1 | நிலைமண்டில ஆசிரியப்பா |
| 208. | கடமை | 1 | அறுசீர் விருத்தம் |
| 209. | மனப் பெண் | 1 | நிலைமண்டில ஆசிரியப்பா |
| 210. | மனமே | 8 | வஞ்சித்துறை |
| 211. | விடுதலை வெண்பா | 5 | நேரிசை வெண்பா |
| 212. | விடுதலை - சிட்டுக்குருவி | | இசைப்பாடல் |
| 213. | பெண்கள் விடுதலைக் கும்மி | 9 | சிந்து (காப்பு உட்பட) |
| 214 | பாரத மாதா | 2 | சிந்து |
| 215. | பாரத மாதா நவரத்ந மாலை | 2 | நேரிசைவெண்பா (காப்பு உட்பட) |
| | | 1 | கட்டளைக் கலித்துறை |
| | | 1 | எண்சீர் விருத்தம் |
| | | 1 | நிலைமண்டில ஆசிரியப்பா |
| | | 1 | தரவு கொச்சகக் கலிப்பா |
| | | 1 | வஞ்சிவிருத்தம் |
| | | *1 | கட்டளைக் கலிப்பா |
| | | 1 | அறுசீர் விருத்தம் |
| | | 1 | எழுசீர் விருத்தம் |
| 216. | மகாத்மா காந்தி பஞ்சகம் | 2 | அறுசீர் விருத்தம் (1-2) |
| | | 3 | எழுசீர் விருத்தம் (3-5) |

| தொடர் எண் | பாடல் தலைப்பு | யாப்பியற் பாகுபாடு |
|---|---|---|
| 217. | நாட்டுக் கல்வி | □ 4 கட்டளைக் கலிப்பா |
| 218. | தமிழ் மொழி வாழ்த்து | 1 பன்னிருசீர் விருத்தம் |
| 219. | பிஜித்தீவிலே ஹிந்துஸ்திரீகள் …… இசைப்பாடல் | |
| 220. | சித்தாந்தசாமி கோயில் | 4 சிந்து |
| 221. | கண்ணன் பிறப்பு | 6 சிந்து |
| 222. | கண்ணன் வரவு இசைப்பாடல் | |
| 223. | கண்ணன் துதி | 4 சிந்து (4 ஆவது அரை) |
| 224. | ஆறு துணை | 6 சிந்து (பல்லவி தனி) |
| 225. | மனத்திற்கு | 1 எண்சீர் விருத்தம் |
| 226. | நிகழ்கின்ற ஹிந்துஸ்தானமும் வருகின்ற ஹிந்துஸ்தானமும் 4+4 | 8 எண்சீர் விருத்தம் |
| 227. | அக்னி பகவான்-யாகப் பாட்டு இசைப்பாடல் | 8 சிந்து (பல்லவி உட்பட) |
| 228. | சக்தி | *3 கட்டளைக் கலிப்பா |
| 229. | சமர்ப்பணம் | □ 1 கட்டளைக் கலிப்பா |
| 230. | நந்தலாலா | 1 எழுசீர் விருத்தம் |
| 231. | மறவன் பாட்டு | 10 சிந்து |

| | | | |
|---|---|---|---|
| 232. | மனத்திற்குக் கட்டளை | 1 | அறுசீர் விருத்தம் |
| 233. | அக்கினிக் குஞ்சு | 1 | சிந்து |
| 234. | கோமதி மஹிமை | 7 | சிந்து + 1 குறைச்சிந்து |
| 235. | பாரதி அறுபத்தாறு | 66 | எண்சீர் விருத்தம் |
| 236. | அகவிழியிற் காண்பது | 1 | சிந்து |
| 237. | ஆனந்தம் | 1 | நேரிசை வெண்பா |
| 238. | பண்டாரப் பாட்டு | 6 | கண்ணிகள் |
| 239. | நிவேதிதா தேவி | 1 | அறுசீர் விருத்தம் |
| 240. | நான் | 7 | (இரட்டைக்) கு. வெ. செந்துறை |
| 241. | இருதலைக் கொள்ளியி னிடையே | 1 | ஆசிரியப்பா (முடிவுறாதது) |
| 242. | புதிய கோணங்கி | 1 | நிலைமண்டில ஆசிரியப்பா |
| 243. | பெண்விடுதலை | * 3 | கட்டளைக் கலிப்பா |
| 244. | எங்கள் மதம் | 24 | சிந்து |
| 245. | வ. உ. சி. க்கு வாழ்த்து | 1 | அறுசீர் விருத்தம் |
| 246. | ராதைப் பாட்டு இசைப்பாடல் | | |
| 247. | சொன்ன சொல் | 1 | சிந்து |
| 248. | மயில் வீரன் | 1 | சிந்து |
| 249. | செல்வத்துட் பிறந்தனமா | 1 | அறுசீர் விருத்தம் |
| 250. | உலகை நோக்கி ஒரு வினா | 1 | கட்டளைக் கலித்துறை |
| 251. | காதலும் துறவும் | 1 | நிலைமண்டில ஆசிரியப்பா |

| தொடர் எண் | பாடல் தலைப்பு | யாப்பியற் பாகுபாடு |
| --- | --- | --- |
| 252. | அபிமன்யு இறந்தபோது அர்ஜுனன் சொன்னது | 4 கண்ணிகள் |
| 253. | அரவிந்தப் பாம்பு | 2 கண்ணிகள் |
| 254. | பெரியோர் பெருமை | 3 கு. வெ. செந்துறை |
| 255. | இந்தத் தெய்வம் | 6 கண்ணிகள் (பல்லவி தனி) |
| 256. | விஷ்ணு சரணம் இசைப்பாடல் (வடமொழி) | |
| 257. | கிருஷ்ணா, ராதே (வடமொழி) | |
| 258. | தலைவர்கள் வாழ்க (யாப்பியலில் அடங்காது) | |
| 259. | பிறந்தேன் (யாப்பியலில் அடங்காது) | |
| 260. | பிரெஞ்சு நாட்டுப் பாடல் (யாப்பியலில் அடங்காது) | |
| 261. | குருவிப் பாட்டு | 24 சிந்து |
| 262. | மணிமுத்து நாவலர் | 1 இன்னிசை வெண்பா |
| 263. | தொழில் முறை | 4 சிந்து |
| 264. | ஸ்ரீ கபிலர் அகவல் | 13 சிந்து |

| | | | |
|---|---|---|---|
| 265. | யாவரும் வருவீரே | 1 | பதின்மூன்று சீர் விருத்தம் |
| 266. | மெலிவாகி நிற்றல் அழகோ | 1 | பதினான்குசீர் விருத்தம் |
| 267. | செந்திரு மேவிய பெருமாளே | 1 | இருபத்தறுசீர் விருத்தம் |
| 268. | நீசர் ஓட வருவாய் | 1 | எழுசீர் விருத்தம் |

(265-268: நான்கும் திருப்புகழ் போன்ற சந்த விருத்தங்கள்)

## நினைவிற் கொள்ளத் தக்க சில குறிப்புகள்

‡ பாடல்கள் பெரிதும் இசையொடு பாடுதற்கு ஏற்ப அமையவேண்டும் என்பது பாரதி நாட்டம். யாப்பியல் நெறியில் இயற்றப்பெற்ற பல செய்யுட்களுக்குப் பண்ணும் தாளமும் அவரே குறித்துள்ளார். மேலும், யாப்பியலமைதி குறியாத இசைப்பாடல்களே பல இருப்பதையும் காணலாம். பண்ணும் தாளமும் குறிக்கப்பெறாத இயற்றமிழ்ப் பாடல்களையும் பண்ணமைதி கண்டு பாடுவது பாரதி நாட்டத்துக்கு முற்றிலும் பொருந்துவதாகும்.

° எண்சீர் கொண்ட நாலடிப் பாடல்களில் இரண்டுவகை உண்டு. ஒன்று எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்; மற்றொன்று, கட்டளைக் கலிப்பாவாகும். இக் கட்டளைக் கலிப்பாவினை இனங்காணும் முறை: நேரசையில் தொடங்கும் அரையடியில் ஒற்று நீக்கி எண்ணுமிடத்துப் பதினோரெழுத்து இருக்கும்; நிரையசையில் தொடங்கும் அரையடியில் ஒற்று நீக்கிப் பன்னிரண்டு எழுத்து இருக்கும். காப்பியங்களில் இவ்வகைக் கட்டளைக் கலிப்பாக்களைக் காணலாம். பாரதியாரிலும் இப் பாடல்கள் பல. இப் பட்டியலில் □ என்ற குறியிடப்பட்டவை காண்க. மரபுவழிப்பட்ட இவையே யன்றி நேரசையில் தொடங்கும் அரையடிக்குப் பத்து எழுத்தும், நிரையசையில் தொடங்கும் அரையடிக்குப் பதினோரெழுத்தும் கொண்ட புதுவகையான கட்டளைக் கலிப்பாக்களும் பாரதியாரில் உள்ளன. †* என்ற குறியிட்டு அவை இப் பட்டியலில் காட்டப்பட்டுள்ளன. கட்டளைக் கலிப்பாக்களைப் பாரதியார் எண்சீர் விருத்தம் எனக் குறித்திருப்பதையும் காணுகிறோம். (பாஞ்சாலி சபதம் முதற் பாகத்துக்குப் பாரதியார் எழுதியுள்ள குறிப்புரை காண்க) 11-12, 10–11 என்ற எழுத்துக் கணக்குமட்டு மன்றி, 12-13 என்ற எழுத்து எண்ணிக்கையுடைய பாவினையும் பாரதியார் பாடலில் காணுகின்றோம். (வரிசை எண் 113 'கண்ணம்மா - என் காதலி' காண்க.) எண்சீர் விருத்தத்தில் கட்டளை அளவீடு அமைவதாயின் கட்டளைக் கலிப்பா

என இனம்பிரித்த தொன்மரபு இப்பதிப்பாசிரியரால் போற்றப் பட்டுள்ளது.

‡ ஆசிரியப் பாக்கள் நெட்டுயிர் கொண்டு முடியவேண்டும் என்ற இலக்கண வரையறையினைப் பாரதியார் மிகப் பல இடங்களில் பேணவில்லை.

° சந்தி விதிகளில் பண்டை நெறியினைப் பாரதி அடியோடு புறக்கணிக்கவில்லை. வருமொழி முதலில் நகரம் வரின் நிலை மொழி ஈற்று மகரம் கெடும் என்ற விதி, எளிமை நாடுவோ ருக்குச் சற்றுக் கடினம்; எனினும், பாரதியார் இந்த விதியினை நெடுகிலும் பேணிப் போற்றுகிறார். ஆயினும், வேறு பல சந்தி விதிகளை அவர் புறக்கணித்திருப்பதையும் காணுகிறோம். கவிதை மரபினைப் புறக்கணிப்பதே புரட்சி என்றும் அவர் கருத வில்லை; தொன்மரபுகளை இறுகப் பற்றுவதே புலமை என்றும் அவர் கருதவில்லை. யாப்பியல் நெறியிலும் சந்தி விதிகளிலும், சொல்லாட்சி முறையிலும் பாரதியாரின் கொள்கைகளை விரி வாக ஆராய வளமாக இடம் இருக்கிறது. குறிப்பாக, பாட வேறுபாடுகள் குறித்துள்ள இடங்களைத் தொகுத்துப் பார்த்துக் கணிப்பது இவ்வாராய்ச்சிக்கு உதவும்; மேலும், பல தொகுப்பு முயற்சிகள் கொண்டும் பாரதி பாடற் கொள்கைகளை ஆராய லாம். இத்தகைய ஆராய்ச்சிக்கு இப் பதிப்பு மிகவும் பயன்படும். என்பது பதிப்பாசிரியரின் நம்பிக்கை. இப்பட்டியலும் அதற்கு உதவும்.

## பாரதியார் படைப்பில் யாப்பு வகைப்பாடு

| | |
|---|---|
| நிலைமண்டில ஆசிரியப்பா | 97 |
| நேரிசை ஆசிரியப்பா | 11 |
| நிறைவுறாத ஆசிரியப்பா | 2 |
| இன்னிசை வெண்பா | 2 |
| நேரிசை வெண்பா | 47 |
| குறள் வெண் செந்துறை | 557 |

| | |
|---|---|
| கட்டளைக் கலிப்பா | 112 |
| கட்டளைக் கலித்துறை | 12 |
| கலி விருத்தம் | 17 |
| தரவு கொச்சகம் | 13 |
| கலித்துறை | 5 |
| வஞ்சித்துறை | 12 |
| வஞ்சி விருத்தம் | 1 |
| அறுசீர் விருத்தம் | 143 |
| எழுசீர் விருத்தம் | 37 |
| எண்சீர் விருத்தம் | 196 |
| பன்னிருசீர் விருத்தம் | 3 |
| பதின்மூன்று சீர் விருத்தம் | 1 |
| பதினாற் சீர் விருத்தம் | 1 |
| பதினாறு சீர் விருத்தம் | |
| இருபத்தறு சீர் விருத்தம் | 1 |
| சிந்து | 804 |
| கண்ணிகள் | 263 |

'இசைப்பாடல்கள்' எனக் குறிக்கப்பட்டவை 76. இவற்றுள் பண்ணிசை தழுவிய இயற்றமிழ்ப் பாடல்களும் இசைத் தமிழுக்கே உரிய பாடல்களும் கலந்துள. பாரதியாரே பல யாப்பியற் பாடல்களுக்குப் பண் வகுத்ததோடு பண்ணிசைப் பாடல்களைத் தனியாகவும் இயற்றியுள்ளார்.

..............................

° சிந்துப் பாடல்களில் இயற்றப்பட்ட 'கண்ணன்-என்தாய்' இப்பதிப்பில் இரண்டு இடங்களில் அச்சிடப்பட்டுள்ளன; விளக்கம் உரிய இடத்திற் காண்க. இரண்டு இடங்களில் அச்சிடப்பட்டிருப்பதால், சிந்துப் பாடல்களின் எண்ணிக்கையில் 10 குறையும் (மொத்தம் 794 சிந்துப் பாடல்களாகும்).

பண்ணொடு இசைத்துப் பாடுதற்கேற்ற சிந்துப் பாடல்கள் பலவற்றை யாப்பியல் வகையில் ஆசிரிய விருத்தங்களாகக் கொள்ளுமாறு அமைதலும் உண்டு. 'கண்ணன் பிறப்பு' (வரிசை எண் 221) அடிக்குறிப்பினைக் காண்க. 'கண்ணன்-என்தாய்' என்ற பாடலும் இத்தகையதே.

# பின்னிணைப்பு. 11

## உதவிய பதிப்புகள்

| | நூல்பிரதி | பதிப்பு விவரம் | பதிப்பாண்டு |
|---|---|---|---|
| 1. | ஸ்வதேச கீதங்கள் | வி. கிருஷ்ணசாமி ஐயர் | 1907 |
| 2. | ஸ்வதேச கீதங்கள் (முதற்பாகம்) | பாரதியார் | 1908 |
| 3. | ஜன்மபூமி | பாரதியார் | 1909 |
| 4. | கனவு | பாரதியார் | 1910 |
| 5. | பாஞ்சாலி சபதம் (முதற்பாகம் - மட்டும்) | பாரதியார் | 1912 |
| 6. | புதிய ஆத்திசூடி | பாரதியார் | 1913 |
| 7. | மாதா மணிவாசகம் | | 1914 |
| 8. | கண்ணன் பாட்டு | பரலி. சு. நெல்லையப்பர் | 1917, 1919 |
| 9. | நாட்டுப் பாட்டு (இரண்டாம் பதிப்பு) | பரலி. சு. நெல்லையப்பர் | 1919 |

| | நூல்பிரதி | பதிப்பு விவரம் | பதிப்பாண்டு |
|---|---|---|---|
| 10. | பாப்பா பாட்டு | பரலி. சு. நெல்லையப்பர் | 1917 |
| 11. | முரசு | பரலி. சு. நெல்லையப்பர் | 1917 |
| 12. | சுதேச கீதங்கள் முதற்பாகம் | பாரதி ஆச்ரமம் | 1922 |
| 13. | சுதேச கீதங்கள் இரண்டாம் பாகம் | பாரதி ஆச்ரமம் | 1922 |
| 14. | குயில்பாட்டு - கண்ணன்பாட்டு பாரதி அறுபத்தாறு | பாரதி பிரசுராலயம் | 1923 |
| 15. | விநாயகர் நான்மணிமாலையும் கண்ணன் பாட்டும் | பாரதி பிரசுராலயம் | 1930 |
| 16. | விநாயகர் நான்மணி மாலை (இரண்டாம் பதிப்பு) | பாரதி பிரசுராலயம் | 1936 |
| 17. | பாரதி நூல்கள் - காவியங்கள் (இரண்டாம் பதிப்பு) | பாரதி பிரசுராலயம் | 1932 |
| 18. | பாரதி நூல்கள் - காவியங்கள் (மூன்றாம் பதிப்பு) | பாரதி பிரசுராலயம் | 1937 |
| 19. | ஸ்வசரிதையும் பிற பாடல்களும் | பாரதி பிரசுராலயம் | 1937 |
| 20. | பாரதி நூல்கள் - கவிதை | அரசாங்க வெளியீடு | 1954 |

# பின்னிணைப்பு - 12

## இப்பதிப்பிற்கு உரிய இதழ்களும் நூல்களும் கொடுத்து உதவியவர்கள்

திருவாளர்கள்

1. திரு. சி. விசுவநாத ஐயர் ... மானாமதுரை
2. திருமதி இளமுருகு பொற்செல்வி ... குழித்தலை
3. திரு. பி. கிருஷ்ணமூர்த்தி ... புதுக்கோட்டை
4. திரு. ரோஜா முத்தையா ... கோட்டையூர்
5. பிரம்மஞான சபைக் கிளை ... மதுரை
6. ஆவணக் காப்பகம் ... சென்னை
7. அருங்காட்சியகம் ... சென்னை
8. தொல்பொருள் ஆய்வுத் துறை ... சென்னை
9. தேசிய நூலகம் ... கல்கத்தா
10. தேசிய ஆவணக் காப்பகம் ... புதுத் தில்லி
11. நேரு நினைவு நூலகம் ... புதுத் தில்லி

# செய்யுள் முதற்குறிப்பு அகரநிரல்

(எண்கள் : பக்க எண்கள்)

## அ



---

* இக் குறியிட்டவை தொடக்கச் செய்யுள்கள்.

## ஆ

## ஈ

## ஊ



## எ

## ஏ

## ஐ



## ஒ

## ஓ



## ஔ



## க

## கா

## கி



## கீ



## கு



## கூ

## கெ



## கே



## கொ



## கோ

## கௌ



## ச

## சா



## சி

## சீ



## சு



## சூ

## செ

## சே



## சொ



## சோ

ஞ



த

## தா



## தி

## தீ



## து

## தூ



## தெ



## தே

## தை



## தொ



## தோ



## ந

## நி

## நீ



## நு



## நூ



## நெ

## நே



## ப

## பா

## பி

## போ



## ம

## மி



## மீ



## மு

## மூ



## மெ



## மே

## மை



## மொ



## மோ



## மௌ



## ய



## யா



## யோ

## வ



## வா

## வி

## வீ

## வெ

## வே



## வை

## வௌ



## ஜ



## ஜா



## ஜி



## ஸ



## ஸா



## ஸு



## ஸோ



## ஹ

